# அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு

(பட்டப்படிப்பிற்குரியது)

[திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது]

ஆசிரியர்

**கு. நம்பி ஆரூரன்**, எம்.ஏ., எம்.லிட்.,
இணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.

திருத்தி அமைத்தவர்

**மா. ந. வேதாந்தம்**, எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த.பா.நி. (க. வெ.) வரிசை எண்—332

# அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு

(பட்டப்படிப்பிற்குரியது)

[திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது]

ஆசிரியர்

**கு. நம்பி ஆரூரன்**, எம்.ஏ., எம்.லிட்.,
இணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.

திருத்தி அமைத்தவர்

**மா. ந. வேதாந்தம்**, எம்.ஏ.,
துணைப் பேராசிரியர், வரலாற்றுத்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — June, 1972
Revised Edition — July, 1975

T.N.T.B.S. (C.P.) No. 332



**History of the United States of America**

K. Nambi Arooran
Revised by M. N. Vedantham

**Price Rs. 9-20**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally sopnsored scheme of production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
Asian Printers
Madras — 600 014.

# அணிந்துரை

**திரு. இரா. நெடுஞ்செழியன்**
*(தமிழகக் கல்வி அமைச்சர்)*

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந்தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்பு வரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், மெய்ப்பொருளியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய பல துறைகளில் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான **'அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு'** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் வெளியான **332** ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டவர்களின் நல்லூக்கத்தினாலும், இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின் இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங்களையும் அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும், பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ், எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# முன்னுரை

**'பெரும்பொருளாற் பெட்டக்க தாகி அருங்கேட்டால்**
**ஆற்ற விளைவது நாடு'**

என்ற திருக்குறளுக்குச் சிறந்தவோர் எடுத்துக்காட்டாக அமெரிக்க ஐக்கிய நாடு இன்று விளங்குகிறது! மிகுந்த பொருள் வளம் உள்ளதால் பிற நாட்டவரும் விரும்பத்தக்கதாகவும், என்றும் குறை வில்லாத நிலவளம் உடையதாகவும் அமெரிக்கா அமைந்துள்ளது. இருப்பினும், அந் நாட்டின் வரலாறு ஏறத்தாழ நானூறு ஆண்டு களுக்கு முன்னிருந்துதான் தொடங்குகிறது. அமெரிக்கா மிகப் புதுமையான நாடு; ஆனால், உலக வல்லரசுகளில் முன்னிலை நாடு என்கிற பெருமை அதற்கு உண்டு. அதேபோல் இன்றைக்கு மக்க ளாட்சி முறையை மேற்கொண்டுள்ள நாடுகளில் மிகவும் பழைமை யான நாடாகவும், எழுதப் பெற்ற அரசியல் அமைப்பைப் பெற்ற நாடுகளிலும் மிகப் பழைமையான நாடாகவும் அமெரிக்கா விளங்கு கிறது.

ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு 'புதிய உலகம்' என்று கருதப்பட்ட அமெரிக்க நாட்டில் ஆங்கிலேயர்கள் குடியேற்றங்களை நிறுவினர். நாளடைவில் ஃபிரான்சு, ஜெர்மனி, ஸ்வீடன் முதலிய ஐரோப்பிய நாடுகளிலிருந்தும் மக்கள் வந்து குடியேறினர். புது வாழ்வு நாடி வந்த ஐரோப்பிய மக்கள் உழைப்பாலும், உறுதியாலும், ஊக்கத்தாலும் புதிய நாட்டினைப் பொலிவுறச் செய்தனர். இந்தப் பல நாட்டு மக்களின் கூட்டு வாழ்விலே கனிந்து பிறந்தது அமெரிக்கச் சமுதாயம். இனக் கலப்பு, சமயப் பொறை, சமூகச் சமத்துவம், பொருளாதார வாய்ப்பு, மக்கள் நலனுக்கான அரசு ஆகியவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு, சிறப்பு மிக்க மக்களாட்சியை நிறுவுவதில் அமெரிக்கர் மாபெரும் வெற்றி அடைந்துள்ளனர்.

மக்களாட்சி முறையை மேற்கொண்டுள்ள மற்றொரு முக்கிய நாடாக இந்தியா உலக அரங்கில் திகழ்கிறது. அரசியல், பொரு ளாதாரம், சமூகம் ஆகியவற்றின் அடிப்படையில் இந்தியாவுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் இடையே பல ஒற்றுமைகள் உள்ளன. இந்திய அரசியலமைப்பின்படி நமது நாடு பல மாநிலங்களைத் தன்னகத்தே கொண்ட கூட்டாட்சி அமைப்பு (Federal) நாடாக

இருந்துவருகின்றது. இதைப் போன்றே அமெரிக்க ஐக்கிய நாடு, அதன் வரலாறு தொடங்கும் காலம் முதற்கொண்டு சிறப்பு மிக்க கூட்டாட்சிமுறை நாடாக விளங்கி வருகின்றது. இக் கூட்டாட்சி முறை அமைப்பில் இரு நாடுகளுக்குமிடையே மிக நெருக்கமான தொடர்பும், ஒற்றுமைப் பண்புகளும் இருந்து வருகின்றன. இவற்றைப் புரிந்துகொள்ள, அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றின் மாண்பினை அறிந்துகொள்வது இன்றியமையாததாகும். அதன் அடிப்படையில்தான், சென்னைப் பல்கலைக்கழகத்தின் புதிய பாடத் திட்டத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு, சிறப்புப் பாடமாக இணைக்கப்பட்டுள்ளது. அப் பாடத் திட்டத்திற்கேற்றவண்ணம் இந் நூல் எழுதப்பட்டுள்ளது. அமெரிக்காவின் வரலாற்றை 'விரிப்பின் அகலும் ; தொகுப்பின் எஞ்சும்!' எனவே, சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் அதன் வரலாறு கூறப்பட்டுள்ளது.

இப்புத்தகத்தில் அச்சிடுவதற்காகச் சிறந்த புகைப் படங்களைத் தந்துதவிய அமெரிக்கச் செய்தி நிறுவனத்திற்கு (U.S.I.S. Madras) மிக்க நன்றி.

**கு. நம்பி ஆரூரன்**

# பொருளடக்கம்

**பிற்சேர்க்கை**



**நிலப்படங்கள்**

# 1. புதிய உலகு கண்டுபிடித்தல்

உலக அரங்கில் மிகச் சிறந்த இடத்தைப் பெற்று விளங்கும் அமெரிக்க ஐக்கிய நாடு மிகவும் புதுமையான நாடாகும். ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் வடஅமெரிக்காவில் செவ்விந்தியர்கள் காடுகளிலும், சிற்றூர்களிலும் வேட்டையாடி வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு எழுதவோ படிக்கவோ தெரியாது. அவர்கள் தங்கள் அன்றாடத் தேவைக்கான எளிமையான சில கருவிகளை மட்டும் செய்து கொண்டனர். நகரங்களே கிடையா. வடஅமெரிக்காவில் வெள்ளையர்களே இலர்.

ஐரோப்பாவில் வாழ்ந்த வெள்ளையர்களுக்கு அமெரிக்கக் கண்டம் இருப்பதாகவே தெரியாது. பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பியர்கள் உலகின் எல்லாப் பாகங்களுக்கும் சென்று குடியேறலாயினர். அவர்கள் தங்களுடன் ஐரோப்பிய நாகரிகத்தையும் கொண்டு சென்றனர். அக் குடியேற்றத்தின் ஒரு விளைவாகவே அமெரிக்க ஐக்கியநாடு உருவாயிற்று எனலாம்.

கி.பி. ஒன்பது, பத்தாம் நூற்றாண்டுகளிலே ஸ்காண்டிநேவியாவைச் சார்ந்த வைக்கிங்ஸ் (Vikings) என்றழைக்கப்படும் கடற்கொள்ளைக்காரர்கள் ஐஸ்லாந்து (Iceland), கிரீன்லாந்து (Greenland) ஆகிய தீவுகளைப்பற்றி அறிந்திருந்தனர்; அங்குக் குடியேற்றங்களையும் நாளாவட்டத்தில் உண்டாக்கினர். நார்வே நாட்டைச் சேர்ந்த நார்ஸ் (Norse) எனப்படும் வகுப்பினரும் வடஅமெரிக்காவின் வடபகுதிகளைப்பற்றி அறிந்திருந்தனர். அவர்கள் அப் பகுதிகளுக்குப் போய்வந்த செய்திகளெல்லாம் ஐரோப்பிய மக்களிடையே பரவியிருந்தபோதிலும் ஐரோப்பியர்கள் அப் பகுதிகளுக்குச் சென்று பெருமளவில் குடியேறுவதில் நாட்டங்கொள்ளவில்லை. ஐரோப்பியர்களுடைய கவனமெல்லாம் மத்தியதரைக் கடல் நாடுகளைச் சார்ந்தே இருந்தது. காரணம், மத்தியதரைக் கடல் நாடுகளே ஐரோப்பியர்களின் அங்காடிகளாக விளங்கின.

இத்தாலியிலுள்ள ஜெனேவா (Genoa), வெனீஸ் (Venice) ஆகிய நாட்டின் வணிகர்கள், கான்ஸ்டாண்டிநோபிள், கிரிமியா, நைல் நதிப் பிரதேசங்களுடன் தொடர்புகொண்டு நெய்ப்பொருள், தாதுப் பொருள், தார், பொன், வெள்ளி நாணயங்கள் ஆகியவற்றைக் கீழை நாட்டு நறுமணப் பொருள்கள், பீங்கான் கலங்கள், விரிப்புகள், மருந்துகள், நறுமணத் தைலங்கள், விலையுயர் கற்கள் முதலிய வற்றிற்காகக் கொடுத்துப் பண்டம் மாற்றிக்கொண்டனர். இக் கீழை நாட்டுப் பொருள்களைச் சேமித்துவைக்க வணிகர்கள் மத்தியதரைக் கடலையொட்டிய இத்தாலிய நகரங்களில் கிடங்குகளைக் கட்டி வைத்திருந்தனர். அங்கிருந்து ஐரோப்பாவின் எல்லாப் பகுதி களுக்கும் அவை அனுப்பப்பட்டன.

கிறித்துவின் புனிதத் தலங்களை முஸ்லீம்களிடமிருந்து கைப் பற்றுவதற்காக நிகழ்ந்த சிலுவைப் போர்களில் (Crusades) போரிட்டு மீண்ட ஐரோப்பியப் படைவீரர்கள் கீழைநாடுகளின் செல்வச் செழிப்பைப் புகழ்ந்து, அதற்கு எடுத்துக்காட்டாக நுண்ணிய வேலைப்பாடுடைய பொருள்களையும் எடுத்துச்சென்று ஐரோப்பிய மக்களிடையே விளக்கிக் கூறினர். நாளடைவில் கீழை நாட்டுப் பொருள்களை ஐரோப்பியர் அதிகமாக விரும்பினர். அதனால் அவற்றின் விலை அதிகரித்துக்கொண்டே சென்றது. அதனால் இங்கிலாந்து, ஃபிரான்சு, ஸ்பெயின், முதலிய தூரநாடுகளில் வசிக்கும் மக்கள் நேரடியாகக் கீழைநாடுகளோடு வாணிகத் தொடர்பு கொள்ள விழைந்தனர்.

கீழைநாடுகளுக்கு வழி கண்டுபிடிப்பதற்கான முயற்சிகளில் நம்பிக்கையுடன் ஈடுபடுவதற்கான பல பயனுள்ள செய்திகள் ஐரோப்பியர்களுக்கு கி.பி. பதின்மூன்று, பதினான்காம் நூற்றாண்டு களில் கிடைக்கலாயிற்று. மார்க்கோபோலோ போன்ற பயணிகள் சீனவரை சென்று திரும்பி, ஆசியக் கண்டம் சீனவோடு முற்றுப் பெறுவதையும், சீனவுக்கு அப்பால் கடற் பரப்பு இருப்பதையும் உறுதிப்படுத்தினர். இதனால் நீர்வழியாகவும், கீழைநாடுகளைச் சென்றடையமுடியும் என்ற எண்ணம் ஐரோப்பிய மக்களிடையே உதிக்கலாயிற்று. மறுமலர்ச்சி இயக்கத்தின் (Renaissance) அறிஞர்கள் வானூல் (Astronomy), நில இயல் (Geography), கணிதம் ஆகிய அறிவியல் துறைகளில் எண்ணற்ற புதிய நியதிகளைக் கண்டுபிடித்தனர். உலகம் உருண்டையானது என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளப்பட்டு அதனை நிரூபிக்கும் வகையில் நீர்ப்பயணம் புரிவோர் பயணங்களைத் துணிவுடன் மேற்கொள்ளலாயினர்.

முன்பின் அறியாத பரந்த கடல் பரப்பில் பயணம் மேற்கொள் வதற்குப் பெரிய கப்பல்கள் தேவைப்பட்டன. கப்பலைச் செலுத்தும்

(Navigation) கலையும் நுணுக்கமான தரைப்படங்களும், பிற கருவிகளும் இன்றியமையாததாயின. பதினைந்தாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் இவையெல்லாம் புழக்கத்தில் வரலாயின. உறுதிமிக்கதும் பெரியதும் விரைந்து செல்லக்கூடியதுமான கப்பல் களைக் கட்டுவதில் போர்ச்சுகீசியர் கைதேர்ந்தவர்களாயிருந்தனர். கடலோரப் பகுதிகளின் அமைப்பினைத் தெளிவுறக்காட்டும் தரைப் படங்களும் தீட்டப்பட்டன. பரந்த கடலில் துணிவோடு செல்ல மாலுமிக்கு உதவத் திசைகாட்டியும் (Compass) கண்டுபிடிக்கப் பட்டது. அச்சுப்பொறியும் அதேசமயத்தில் கண்டுபிடிக்கப்பட்ட தால் பயணிகளது கட்டுரைகளும், அறிவியல் கண்டுபிடிப்புகளும் அச்சிடப்பட்டு எல்லோரும் படித்தறியும் வகையில் வெளியிடப் பட்டன.

மேற்கூறிய கண்டுபிடிப்புகள் புதிய கடல் வழிகளைக் கண்டு பிடிக்க உதவியாக இருந்தன என்பதில் ஐயமில்லை. ஆனால், தனிப் பட்ட நபர்களால் செலவுமிக்க பயணங்களை மேற்கொள்ள இயலாது. செல்வம் மிக்க வணிகர்களும் வீரப் பயணங்களை ஆதரிக்க முன் வரவில்லை. நற்பயனாகத் தேசிய உணர்வு மிகுந்திருந்த அக் காலத்தில் பல நாட்டு மன்னர்கள் தத்தம் நாட்டுக்குப் புகழைத் தேடிக்கொள்ள வும், செல்வத்தைப் பெருக்கவும், புதிய இடங்களைப் பெறவும் விரும்பி வீரப்பயணம் மேற்கொள்வோரை ஊக்குவித்து அப் பயணங் களுக்கு வேண்டிய நிதியுதவியும் அளிக்க முன்வந்தனர். போர்ச்சுகல் நாட்டு அரசர் ஹென்றி, இங்கிலாந்து நாட்டு டியூடர்கள், ஸ்பெயினில் அரகான் நாட்டு அரசர் பெர்டினண்டு, காஸ்டில் நாட்டு அரசி இசபெல்லா ஆகியோர் தந்த ஆதரவால்தான் கொலம்பஸ், வாஸ்கோடகாமா போன்ற வீரர்களால் புதிய வழிகளைக் கண்டுபிடிக்க முடிந்தது.

கிறித்துவ சமயமும் புதிய நாடுகளையும், புதிய வழிகளையுங் கண்டுபிடிப்பதற்கு ஒரு தூண்டுதலாக அமைந்தது எனலாம். கிறித்துவ சமயம் தீவிரமான சமயப் பரப்புப் பணியை மேற்கொண்ட தாகும். பதினைந்தாம் நூற்றுண்டிற்குள் கிறித்துவ சமயப பரப்பாளர்கள் ஐரோப்பா முழுவதும் கிறித்துவ சமயத்தைப் பரப்பி விட்டிருந்தனர். ஆப்பிரிக்கா, ஆசியா ஆகிய கண்டங்களில் தங்க ளுடைய பணியை மேற்கொள்ள விழைந்தனர். கிறித்துவ சமயத்தைப் பரப்பி அந் நிலங்களிலுள்ள அநாகரிகமானவர்களை யெல்லாம் நாகரிகமாக்கிவிட வேண்டுவது 'வெள்ளையரின் பொறுப்பு' (Whiteman's burden) எனச் சமயவாதிகள் நினைத்தனர் எனவே, புதிய வழிப்பயணிகளோடு சமயப் பரப்பாளர்களும் உடன்சென்று கிறித்துவ சமயத்தைப் போதிக்க முற்பட்டனர்.

கான்ஸ்டாண்டிநோபிளை (Constantinople) 1453-ல் துருக்கியர் கைப்பற்றியதன் விளைவாக ஆசியாவுக்குச் செல்வதற்கான ஒரே பாதையும் அடைபட்டது. எனவே, ஐரோப்பிய வணிகர்களுடைய வணிகம் பெரிதும் பாதிக்கப்பட்டது. ஆசிய நாடுகளோடு தொடர்பு கொள்ளக் கடல்வழியே சென்றாலொழிய வேறு வழியில்லை என்ற நிலை ஏற்படவே புதிய வழிப் பயணங்களை மேற்கொள்ளலாயினர்.

கீழைநாடுகளுக்குப் புதிய கடல் வழியினைக் கண்டுபிடிப்பதில் போர்ச்சுகீசியர் முன்னோடிகளாக விளங்கினர். பதினைந்தாம் நூற்றாண்டில் ஆப்பிரிக்காக்கண்டத்தின் வடபகுதியில் போர்ச்சுகீசியர் பல ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டனர். போர்ச்சுகீசிய இளவரசரான ஹென்றி புதிய நாடுகளைக் கண்டு ஆராய்வதில் மிகுந்த ஆர்வங் கொண்டிருந்தார். போர்ச்சுகீசிய மாலுமிகள் ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையோரமாகக் கடற்பயணங்கள் மேற்கொண்டனர். 1460-க்குள் அவர்கள் ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையோரத்தின் பாதித் தூரம்வரை சென்றிருந்தனர்: ஆப்பிரிக்காவின் வடபகுதிக்கருகே அட்லாண்டிக் பெருங்கடலில் இருந்த மடெய்ரா (Madeira), கானெரிஸ் (Canaries), அசோர்ஸ் (Azores) ஆகிய தீவுகளில் குடியேற்றங்களையும் நிறுவினர்; ஆப்பிரிக்காவிலிருந்து நீக்ரோக்களைப் பிடித்துவந்து தங்கள் நாட்டில் வேலை செய்ய வைத்தனர். இதனின்று பிறந்ததே அடிமை வாணிகமும், அடிமைத்தனமுமாகும். 1488-ல் பார்த்தலோமியோ டயஸ் (Bartholomew Diaz) ஆப்பிரிக்காவின் தெற்கு முனையை - நன்னம்பிக்கை முனையை- அடைந்தார். அவரைப் பின்தொடர்ந்த வாஸ்கோடகாமா (Vasco da Gama) நன்னம்பிக்கை முனையைக் கடந்து ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரையோரமாகப் பயணம் செய்து பிறகு இந்தியாவின் மேற்குக் கரையிலுள்ள கள்ளிக்கோட்டையை அடைந்தார். கப்ரால் (Cabral) எனப்படும் மற்றொரு போர்ச்சுகீசிய வீரர் 1500 ஆம் ஆண்டு இந்தியாவை நோக்கிப் பயணம் மேற்கொண்டார். ஆனால், அவர் கடற் புயலால் தென்அமெரிக்காவின் வடபகுதிக்கு அடித்துச் செல்லப்பட்டார். தாம் இறங்கிய பகுதிக்குக் கப்ரால், 'பிரேஸில்' (Brazil) எனப் பெயரிட்டார். அப் பெயரே இன்றும் வழக்கிலுள்ளது.

ஸ்பானியர்களும் புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிப்பதில் மிகுந்த ஆர்வங் கொண்டிருந்தனர். ஸ்பானிய அரசியின் ஆதரவில் கொலம்பஸ் கடற்பயணம் ஒன்றை மேற்கொண்டார். இவர் 1492-ல் கிழக்கு நாடுகளுக்குப் புது வழி கண்டுபிடிக்க மேற்கொண்ட பயணம் அவரை மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்றான பஹாமாத் தீவிற்குக் கொண்டு சென்றது. அவர் தாம் இறங்கிய நிலத்தை இந்தியா என்று கருதி அதனை இந்தியா (Indies) என்றும் அங்கு வாழ்ந்த

மக்களை இந்தியர் (Indians) என்றும் அழைத்தார். ஆனால், அவர் கண்டுபிடித்த இடமோ உலகின் ஒரு புதிய பகுதி என்று அவர் அறிந்தாரிலர். கொலம்பஸ், மேலும் மூன்று பயணங்களை மேற்கொண்டு நடு அமெரிக்கா, வெனிசூலா (Venezuela), கரீபியன் கடல், பிற மேற்கிந்தியத் தீவுகள் ஆகியவற்றைக் கண்டுபிடித்தார்.

கொலம்பஸால் கண்டுபிடிக்கப்பட்ட புதிய உலகு அவர் பெயரால் அழைக்கப்படவில்லை. அவரையடுத்து ஸ்பானிய அரசர் ஆதரவில் புதிய வழி கண்டுபிடிப்புப் பயணமொன்றை ஃபிளாரன்ஸ் (Florence) நாட்டைச் சார்ந்த அமெரிக்கோ வெஸ்புகி (Amerigo Vespucci) என்பவர் மேற்கொண்டார். அவர், 1498-ல் தென் அமெரிக்காவின் வடபகுதியிலிருந்து ஓரினோகோ (Orinoco) ஆற்றுப் பகுதியை அடைந்தார். வெஸ்புகி மேலும் மூன்று பயணங்களையும் மேற்கொண்டார். ஆனால், அவை உண்மையாக நிகழ்ந்தனவா என்பது பற்றி வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேறுபாடு இருந்து வருகிறது. இருப்பினும் அவர் தென்அமெரிக்காவிலுள்ள பிளாடா (Plata) ஆற்றுப்பகுதியைக் கண்டறிந்தமை அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. அப் பயணங்களால்தாம், தாம் கண்டு பிடித்த நிலப்பகுதி ஆசியாவைச் சார்ந்ததன்று, அது முற்றிலும் புதியவொரு நிலப்பகுதி என்பதனை வெஸ்புகி உறுதிப்படுத்தினார்; அப் புதிய நிலப்பகுதிக்கு முண்டஸ் நோவஸ் (Mundus Novus) என்று பெயரிட்டார்; அந் நிலப்பகுதியின் தெற்கு முனையைச் சுற்றிக் கொண்டு சென்றால் கீழைநாடுகளை அடையலாம் என்ற கருத்தையும் தெரிவித்தார். நில இயல் படம் வரையும் ஜெர்மானியர் ஒருவர் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட நிலத்திற்கு, அதனைக் கண்டுபிடித்த அமெரிகோ வெஸ்புகியைப் பாராட்டும் வகையில் 'அமெரிக்கா' என்று வழங்கப்படவேண்டுமென்றார். இதனை அறிஞர்கள் ஏற்றுக் கொண்டனர். புதிய வழிகளையும், புதிய நாடுகளையும் கண்டுபிடிப் பதில் ஸ்பானியருக்கும் போர்ச்சுகீசியருக்குமிடையே போட்டி ஏற்பட்டது. அக் காலத்தில் ஐரோப்பாவில் போப்பாண்டவர் மிக உன்னதமானவோர் இடத்தைப் பெற்றிருந்தார். அவருடைய வாக்கினை மன்னர்களும் மீறமாட்டார்கள். எனவே, ஸ்பானிய அரசர் புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் போர்ச்சுகீசியருடன் ஏற்பட்ட போட்டியினைத் தீர்த்து வைக்குமாறு வேண்டிக்கொள்ள, போப்பாண்டவரும் 1493-ல் ஒரு தீர்ப்பை வழங்கினார் (Papal Bull). அதன்படி ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையோரம் வரையப் பட்ட கற்பனைக்கோட்டுக்குக் கிழக்கே உள்ள நிலப்பகுதியெல்லாம் போர்ச்சுகீசியர் குடியேற்றத்திற்கும், மேற்கே உள்ள நிலப்பகுதி யெல்லாம் ஸ்பானியர் குடியேற்றத்திற்கும் என உலகம் இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டது. பின்னர், அக் கற்பனைக் கோடானது

கப்ராலால் கண்டுபிடிக்கப்பட்ட பிரேசிலைப் போர்ச்சுகீசியர் பெறும்படி மேற்கே தள்ளிப் போடப்பட்டது. அவரவருக்குக் கொடுக்கப்பட்ட பகுதியில் அவரவர்களுக்கு வியாபாரம் செய்யவும், குடியேற்றம் நிறுவவும் தனியுரிமை வழங்கப்பட்டது. அவ்வுரிமையை ஆதாரமாகக் கொண்டு குடியேற்றங்களை அமைப்பதில் போர்ச்சுகீசியரும், ஸ்பானியரும் தீவிரமாக முனைந்தனர் ; புதிய உலகில் சிறிது சிறிதாக ஸ்பானியர்கள் தென் அமெரிக்காவில் பெரும்பகுதி, நடு அமெரிக்கா, மெக்ஸிகோ, ஃபுளோரிடா (Florida) ஆகிய இடங்களில் தங்களின் குடியேற்ற நாடுகளை நிறுவினர். போர்ச்சுகீசியர் புதிய உலகில் பிரேசிலை மட்டும் தங்கள் ஆளுகைக்குட்படுத்தினர்கள்.

பதினாறும் நூற்றாண்டின் இறுதியில் ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகிய இருநாடுகளின் தனி உரிமைகள் இங்கிலாந்து, ஹாலந்து, ஃபிரான்சு ஆகிய நாடுகளின் தாக்குதலுக்கு இரையாயின. இங்கிலாந்தும், ஹாலந்தும் பிராடஸ்டன்டு நாடுகளாக மாறிவிட்டமையால் போப்பாண்டவரின் கட்டளைகளை ஏற்கவில்லை ; எனவே, புதிய நாடுகள் கண்டுபிடிப்பது பற்றி ஸ்பெயினுக்கும், போர்ச்சுகலுக்கும் உலகை இருபகுதிகளாகப் பிரித்துக் கொடுத்து வழங்கிய தீர்ப்பையும் ஏற்கவில்லை. எனவே ஸ்பெயினுக்கும், போர்ச்சுகலுக்கும் வழங்கப்பட்ட பகுதிகளில் இங்கிலாந்து, ஹாலந்து, ஃபிரான்சு போன்ற பிற நாடுகள் குடியேற்றங்களை நிறுவவும், அங்கு வாணிகம் செய்யவும் முற்பட்டன. மேலும் கடற்கொள்ளைக்காரர்களும், கள்ள வணிகர்களும் ஸ்பானியர், போர்ச்சுகீசியர் ஆகியோருடைய வாணிகத்தில் குறுக்கிட்டு வாணிக வளத்தைக் குறைத்தனர். இவற்றால் இந் நாடுகளிடையே பூசல்களும், போர்களும் ஏற்பட்டன.

புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிப்பதிலும், புதிய உலகில் குடியேற்றங்களை நிறுவுவதிலும் இங்கிலாந்து சிறிது காலந்தாழ்த்தியே ஈடுபட்டது. நூற்றாண்டுப் போரினாலும் (1337—1437), ரோஜா மலர் அடையாளப் போர்களாலும் (1455—1485) இங்கிலாந்து நலிவுற்று ஒற்றுமையின்றிக் கிடந்தது. டியூடர்கள் வருகைக்குப் பிறகு நாட்டில் அமைதி நிலவிற்று. மக்கள் முன்னேற்றப் பாதையில் செல்லலாயினர் ; புதிய கடல் வழிப் பயணங்களை மேற்கொள்வதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்த போதிலும் கப்பலைச் செலுத்தும் கலையில் (Navigation) போதிய பயிற்சியற்றவர்களாயிருந்தனர் ; எனவே, பிறநாட்டு வழிப் பயண வீரர்களின் துணையை நாடினர்.

டியூடர் வமிசத்தின் முதல் அரசரான ஏழாம் ஹென்றி கடல் வழிப் பயணங்களை மேற்கொள்வோருக்கு ஆதரவு தந்தார். ஜினேவா நாட்டில் பிறந்த ஜான் கேபட் (John Cabot) என்ற பயண வீரர் ஏழாம் ஹென்றியிடம் கீழைநாடுகளுக்குச் செல்வதற்கான

வழிகளைப்பற்றித் தமது திட்டங்களைப் படைத்தார். பிரிஸ்டல் நகர வணிகர்கள் பணம் தந்துதவ முன்வந்தனர். கேபட் புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கவும், அங்கு வணிக உரிமைகளை அவரும், அவருடைய சந்ததியினரும் பெறவும் ஹென்றி ஒரு சாசனத்தை 1496-ல் வழங்கினர். அடுத்த ஆண்டு கேபட் தமது பயணத்தை மேற்கொண்டு வட அமெரிக்காவின் வடபகுதிக்கருகேயுள்ள நியூஃபவுண்டுலாந்து (Newfoundland) என்னும் இடத்தைச் சென்றடைந்தார்; தாம் புதிதாக அந் நிலப் பரப்பைக் கண்டு பிடித்தமையால் அதற்கு அப் பெயரைச் சூட்டினர்; தாம் ஆசியாவின் ஒரு பகுதிக்கு வந்துவிட்டதாக நினைத்துக்கொண்டார். அடுத்த முறை மேற்கொண்ட பயணத்தில் வடஅமெரிக்கக் கரையோரமாக செஸாபீக் குடா வரை சென்ற போதிலும் கேபட் திரும்பி வருகையில் கடலில் காணுமற்போய் விட்டதாகக் கூறப்படுகிறது. அவர் மகன் செபாஸ்டியன் கேபட் (Sebastian Cabot) தந்தை விட்டுச் சென்ற பணியை மேற்கொண்டார்; இவரும் நியூஃபவுண்டுலாந்துப் பகுதியைச் சென்றடைந்து காட் மீன் (Cod fish) வகை அப் பகுதியில் ஏராளமாகக் கிடப்பதை அறிவித்து அதில் ஆங்கில வணிகர்களை ஈடுபடச் செய்தார்.

வடஅமெரிக்கக் கடலோரத்தை ஆங்கிலேயர் கண்டறிந்தும் சில அரசியல் சூழ்நிலைகளின் காரணமாக ஏழாம் ஹென்றியின் காலத்தில் அங்குக் குடியேற்றங்களை நிறுவ இயலாத நிலையிலிருந்தனர். ஏழாம் ஹென்றி தமது மகனுக்கு (பின்னர் எட்டாம் ஹென்றியானுர்) ஸ்பானிய இளவரசியை மணமுடிக்க முயன்று கொண்டிருந்தார். அதனுல், போப்பாண்டவரின் உத்திரவுப்படி ஸ்பெயினுக்கு ஒதுக்கப் பட்ட நிலப்பகுதியில் ஆங்கிலேயர் புகுவதன்மூலம் ஸ்பானிய அரசாது உறவை இழக்கக் கூடுமென ஹென்றி அஞ்சினர். எனவே, புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் ஒரு தொடக்கம் ஏற்பட்டதே ஒழிய, தீவிரமாகக் குடியேற்றங்களை நிறுவுவதில் ஆங்கிலேயர் ஈடுபடவில்லை.

எட்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் பல அரசியல் சிக்கல்கள் ஏற்பட்டமையாலும், இங்கிலாந்தில் சமயச் சீர்திருத்தம் (Reformation) மேற்கொள்ளப்பட்டமையாலும் அரசரும், மக்களும் குடியேற்றங்கள் ஏற்படுத்துவதில் அதிக நாட்டங் கொள்ளவில்லை. இருப்பினும், எட்டாம் ஹென்றி தமது ஆட்சியின் பிற்பகுதியில் இங்கிலாந்தின் முன்னேற்றத்திற்காக நாட்டின் கப்பற்படையை வலுப் படுத்துவதில் முனைந்தார். கப்பல்கட்டும் கலையின் நுணுக்கங்களை அறிந்துகொள்ளும் பொருட்டு ஒரு கப்பலையே (Great Harry) உடைத்துப் பிரித்துப் பார்த்தார். விரைந்து செல்லக்கூடிய வண்ணம் கப்பல்கள் அமைக்கப்பட்டன. கப்பல்கள் மட்டுமிருந்தால் போதாது, அவற்றை இயக்குதற்குச் சிறந்த மாலுமிகளையும் உருவாக்கவேண்டு

மென்பதை ஹென்றி உணர்ந்தார். மாலுமிகளையும், கப்பல் வலவர்களையும் பயிற்றுவிப்பதற்காக மூன்று கல்லூரிகளையும் தோற்றுவித்தார். இவற்றின் விளைவாக எட்டாம் ஹென்றி காலத்தில் செபாஸ்டியன் கேபட், வில்லியம் ஹாக்கின்ஸ் (William Hawkins) போன்ற வீரர்கள் மேற்கிந்தியத் தீவுகளுக்கும், பிரேஸிலுக்கும் சென்று வணிகத் தொடர்பு ஏற்படுத்தினர்.

எலிஸபெத் அரசியார் (1558-1603) பட்டத்திற்கு வந்ததும் குடியேற்றங்களை நிறுவுவதற்கும், வாணிகத்தைச்செழிப்புறப் பெருக்குவதற்கும் நல்லதொரு சூழ்நிலை உருவாயிற்று. ஆங்கிலக் கடற்பயண வீரர்கள் புதிய உலகுபற்றி ஓரளவு அறிந்துகொண்டனர். உள்நாட்டில் பரிபூரண அமைதி நிலவிற்று. வெளிநாட்டுறவிலும் அரசியார் பதவிக்கு வந்தது முதல் அடுத்த இருபது ஆண்டுகள் வரை அமைதியான சூழ்நிலையே இருந்தது. அரசியார், சிறப்புறக் கண்ணுங்கருத்துமாய்ப் பொருளாதார நிலைமையைக் கட்டிக்காத்தமையால் வரிச்சுமையின்றி மக்கள் வாணிகத்தில் ஆர்வங்காட்டினர்.

எலிஸபெத் அரசியார் கப்பற்படையை வலுப்படுத்துவதில் மிகுந்த அக்கறை காட்டினர். கடலால் சூழ்ந்த இங்கிலாந்திற்கு வலுமிக்க கடற்படையின் இன்றியமையாமையை அவர் நன்குணர்ந்தார் ; படைக்கலச்சாலையில் படைக்கலங்களை நிரப்பி வைத்தார் ; வலுமிக்க கப்பல்களை இங்கிலாந்திலேயே கட்டுவித்தார். அதுகாறும் கப்பல்களைப் பிற நாடுகளிலிருந்து விலைக்கு வாங்கும் வழக்கமே இருந்து வந்தது. அவ் வழக்கத்தை மாற்றுமாறு அவர் தம் குடிமக்களை ஊக்குவித்தார். ஆங்கிலப் பொறிவலர்கள் (Artificers) திறனும் பெருகிற்று. மாலுமிகளின் எண்ணிக்கையும் அதிகமாயிற்று. நாட்டின் கடற்படை குடிமக்களனைவரின் கவனத்தையும் ஈர்த்தது.

அயல் நாட்டு வாணிகத்தைச் செழிப்படையச் செய்யும் பொருட்டு வணிகர்கள் அடங்கிய தனியுரிமை நிறுவனங்களை (Corporations) நிறுவ அவர் ஊக்கமளித்தார் ; மற்றும், பாரசீகம் வழியே கீழைநாடுகளுக்குத் தரைவழியாகப் பயணங்களை மேற்கொள்ளவும் சட்ட பூர்வமாக இசைவளித்தார். பாரசீக மன்னரும் ஆங்கில வணிகர்களுக்குப் பல சலுகைகளை அளித்தார். அதனால் ஆங்கில வணிகர்கள் நிரம்ப ஊதியம் பெற்றனர்.

புதிய உலகில் ஸ்பானியருடைய வாணிக முறை சிறப்புற அமையவில்லை. குடியேற்றங்களின் தேவைகளைத் தாய்நாடான ஸ்பெயின் பூர்த்திசெய்ய முடியவில்லை. ஸ்பெயினில் வணிகர்கள் விலையினை உயர்த்தியும், தனியுரிமைகளைக் கட்டுப்படுத்தியும் வந்தனர். ஆனால், குடியேற்றங்களில் வாழும் மக்களோ குறைந்த

விலையில் அதிகப் பொருள்களை வாங்குவதற்குக் காத்திருந்தனர். எனவே, ஸ்பானியக் குடியேற்றங்களில் அதிகாரிகளின் கையில் சிக்காமல் மிகுந்த ஊதியத்தோடு வாணிகம் செய்ய நல்ல சூழ்நிலை ஏற்பட்டது. அப்படி வாணிகம் செய்த அந்நிய நாட்டவர்க்கு உரிமையற்ற வணிகர் (Interloper) என்ற பெயர் தரப்பட்டது. இதனை முதலாவதாக ஆரம்பித்தவர் இங்கிலாந்தைச் சார்ந்த சர் ஜான் ஹாக்கின்ஸ் (Sir John Hawkins) என்பவராவார். அவரே அடிமைகள் வாணிகத்தையும் தொடங்கி வைத்தார் எனலாம்.

ஹாக்கின்ஸ் முறையாக ஸ்பானிய அரசுக்கு விண்ணப்பித்து உத்தரவு பெற்று வாணிகத்தை மேற்கொள்ளாமல் நேரடியாகப் போய் ஸ்பானியக் குடியேற்றங்களில் செலுத்தவேண்டிய சுங்கவரிகளை யெல்லாம் செலுத்திவிட்டு மிகவும் நேர்மையான வணிகன்போல நடந்துகொண்டார். 1562-ல் ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரை யோர நாடுகளுக்குச் சென்று 300 நீக்கிரோக்களைப் பிடித்துக் கொண்டுபோய் மேற்கிந்தியத் தீவுகளில் விற்றுப் பெரும் ஊதியம் பெற்றார்; ஐரோப்பாவில் மிகவும் தேவைப்பட்ட சர்க்கரை, மாட்டுத் தோல் ஆகியவை எளிய விலையில் பெருமளவில் பண்டமாற்றாகப் பெற்றார். ஆனால், ஸ்பெயினில் அவருடைய வாணிகத்திற்குக் கடும் எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டது. இலண்டனிலிருந்த ஸ்பானியத் தூது வரும் கண்டனம் தெரிவித்திருந்தார். எனவே, ஹாக்கின்ஸ் மேலும் அடிமை வாணிகத்திலீடுபட இசைவுதர எலிஸபெத் அரசியார் மறுத்து விட்டார். அதையும் மீறி ஹாக்கின்ஸ் பயணங்களை மேற்கொண்டார். ஒருமுறை ஸ்பானியர்களால் தாக்கப்பட்டு நற்பயனாக உயிரோடு இங்கிலாந்து திரும்பினார்.

புதிய உலகில் ஸ்பானியர்களுடைய எதிர்ப்புக்கு அஞ்சிய ஆங்கிலேயர் பஸிபிக் பெருங்கடல் பகுதியில் நாட்டங்கொண்டனர். தென்அமெரிக்காவின் தென்கோடியிலிருந்த மெகல்லன் கடற்கால் (Straits of Magellan) வழியாகச் சென்றால் ஒரு பெரும் நிலப்பரப்பை அடையலாம் என்று கருதினர். செல்வாக்கு மிகுந்த பல ஆங்கில வணிகர்கள் ஒன்றுகூடி அப் பகுதியை ஆராய ஒரு திட்டத்தைத் தீட்டினர். ஆய்வுப் பயணத்தை மேற்கொள்ள ஃபிரான்ஸிஸ் டிரேக் (Francis Drake) என்ற கடல் வீரரைத் தேர்ந்தெடுத்தனர். பெரும் பொருளீட்டும் நோக்கத்தோடு பிரிட்டனுக்குப் பெரும் செழிப்பு மிக்க குடியேற்றம் ஒன்றைக் கண்டுபிடிக்கவேண்டும் என்ற அவாவும் டிரேக்கிற்கிருந்தது. டிரேக், மெகலன் கடற்கால் வழியே சென்று தென்அமெரிக்காவின் மேற்குப் பகுதியையும், வடஅமெரிக்காவில் கலிபோர்னியா வரையும் சென்று, பின்பு பஸிபிக் பெருங்கடல் வழியே லவங்கத் தீவுகள் (Spice Islands) சென்றடைந்து வாணிக உரிமைகள் சில பெற்றார்; பின்னர், இந்தியப் பெருங்கடல் வழியே

இங்கிலாந்து சென்றடைந்தார். டிரேக் சிறப்புற முதன்முறையாக உலகைச் சுற்றி வந்த பெருமை பெற்றார்.

இங்கிலாந்திலிருந்து வடமேற்கு வழியாகச் சென்றாலும் கீழை நாடுகளைச் சென்றடையலாம் என்ற கருத்து இருந்துவந்தது. இலண்டன் மாநகர வணிகர் ஒருவர் வடமேற்கு வழியே புதிய வழி கண்டுபிடிப்பதற்கான பயணத்தை மேற்கொள்ள நிதியளிக்க முன் வந்தார். சர் மார்டின் ஃபிராபிஷர் (Sir Martin Frobisher) என்னும் கடற்பயண வீரர் வடமேற்கு வழியாகப் பயணத்தை மேற்கொண்டு நியூஃபவுண்டுலாந்து (Newfoundland) சென்றடைந்து, அங்கிருந்த செவ்விந்தியர்களைப்பற்றிய செய்திகளறிந்து வந்தார்; ஆங்கில அரசருக்குச் சொந்தமானவை என அந் நிலப்பகுதிகளை அறிவித்தார். தாம் சென்றடைந்த பகுதி ஆசியாவின் வடகிழக்குப் பகுதியென ஃபிராபிஷர் நம்பினார்.

சர் ஹம்ஃப்ரி கில்பர்ட் (Sir Humphrey Gilbert) என்பவரும் வடமேற்கு வழியாகக் கீழைநாடுகளைச் சென்றடையலாம் என்ற கருத்தில் நம்பிக்கை கொண்டிருந்தார். அவர் அதுபற்றிய தம் கருத்துகளை ஒரு நூலாக வெளியிட்டார்; நியூஃபவுண்டுலாந்தில் ஒரு குடியேற்றத்தை நிறுவிக்கொண்டு அங்கிருந்து ஆய்வுப் பயணங்களை மேற்கொள்ளத் திட்டமிட்டார். ஆனால், அவர் குடியேற்றம் ஒன்றையும் அமைக்கவில்லை. அவரையடுத்து ஜான் டேவிஸ் என்பவர் அதே திசையில் பயணங்களை மேற்கொண்டார். அவர் கிரீன்லாந்து (Greenland) சென்றடைந்து அங்கிருந்த கடற்காலுக்கு (Danis Strait) தம் பெயரைச் சூட்டினார். அவர் பனியால் மூடப்பட்ட ஆர்க்டிக் பெருங்கடலைக் கண்டாரே ஒழிய ஆசியக் கண்டத்தைக் காணமுடிய வில்லை. பணமுடை காரணமாக டேவிஸ் தம் ஆய்வுப் பயணங்களைக் கைவிட்டார். கீழைநாடுகளுக்கு வழி காணாது போனாலும் ஆங்கிலக் கடல் வீரர்கள் இப் பயணங்களினால் எத்தகைய துன்பத்தையும், இடர்ப்பாடுகளையும் தாங்குமளவுக்கு மனஉறுதிப்பாடடைந்தனர். அவர்களே குடியேற்றங்களை நிறுவுவதற்கான முயற்சியில் நாட்டின் முதுகெலும்பெனத் திகழ்ந்தனர்.

முதல் பிரிட்டிஷ் குடியேற்றத்தை நிறுவுவதற்கான முயற்சி வடமேற்குவழிப் பயணங்களின் விளைவாகவே மேற்கொள்ளப் பட்டது. வடஅமெரிக்காவில் ஓர் அடித்தளத்தை அமைத்துக் கொண்டு அங்கிருந்து ஆய்வுப் பயணங்களை மேற்கொள்வது எளிதா யிருக்கும் எனக் கருதினர். கில்பர்ட் அத்தகையவோர் அடித் தளத்தை நியூஃபவுண்டுலாந்தில் அமைக்க விரும்பினார். ஆனால், அவர் வெற்றி பெறவில்லை. அவர் விட்டுச்சென்ற பணியைச் சர் வால்டர் ராலே (Sir Walter Raleigh) மேற்கொண்டார். ராலே வடஅமெரிக்கா

வின் தெற்குப் பகுதியில் ஒரு குடியேற்றத்தை நிறுவ முயன்றார். ஃபிலிப் அமடாஸ் (Philip Amadas), ஆர்தர் பார்லோ (Arthur Barlowe) என்ற தமது இருதளபதிகளை 1584-ல் அனுப்பிவைத்தார். அவர்கள் இன்றைய வடகரோலினா பகுதியைத் தேர்ந்தெடுத்தனர். ராலே அப் பகுதிக்கு வர்ஜீனியா எனப் பெயரிட்டார். அங்கு 1585-ல் நூறு பேர் சென்று ஒரு குடியேற்றத்தை நிறுவினர். அவர்கள் ஒரு கோட்டை கட்டினர் ; அதற்கு ராலேக் கோட்டையெனப் பெயர் சூட்டினர். ஆனால், மிகவும் இடர்ப்பாடான சூழ்நிலையே நிலவிற்று. ஜான் வொய்ட் (John White) என்பவர் ஆளுநராக அனுப்பப்பட்டார். குடியேறிய மக்கள் உழைக்காது எல்லாவற்றிற்கும் தாய்நாட்டையே நம்பியிருந்தனர் ; இந்தியப் பழங்குடியினரையும் ஏமாற்றி வாழ நினைத்தனர். இக் குறைபாடுகளால் அக் குடியேற்றம் பல இன்னல்களுக்குட்பட்டு மறைந்தது. ராலே நிலையானதொரு குடியேற்றத்தை நிறுவ மேலும் முயலவில்லை. அதற்குள் ஸ்பெயினுடன் போர் மூண்டமையால் குடியேற்றத் திட்டங்கள் அடுத்த இருபது ஆண்டுகளுக்கு ஒத்தி வைக்கப்பட்டன.

சமயச் சீர்திருத்தத்தின் விளைவாகப் போப்பாண்டவர், எலிஸபெத் அரசியாரைக் கத்தோலிக்க திருச்சபையினின்று விலக்கினர் (Excommunicated). இதன் விளைவாக இங்கிலாந்திற்கும் ஸ்பெயினுக்கு மிடையேயிருந்த உறவுநிலை மாறலாயிற்று. ஸ்பானிய அரசர் கத்தோலிக்க நாடுகளின் தலைவராகவும், இங்கிலாந்தின் அரசியார் பிராடஸ்டண்டு நாடுகளின் தலைவியாகவும் மக்களால் கொண்டாடப் பட்டனர். ஸ்பானிய அரசரான இரண்டாம் ஃபிலிப் (Philip II) போப்பாண்டவரின் ஆதரவோடு பிராடஸ்டண்டு நாடான இங்கிலாந் தைக் கைப்பற்றிடத் திட்டமிட்டார். எலிஸபெத் அரசியாரைக் கொலை செய்யவும், அதற்குப்பின் ஏற்படும் குழப்பநிலையில் ஒரு கத்தோலிக்கரை அரச பதவிக்குக் கொண்டுவரவும் சதித் திட்டம் ஒன்றும் உருவாயிற்று. இதனையறிந்த ஆங்கிலேயர் வெகுண்டெழுந் தனர். இருநாடுகளுக்குமிடையே உறவு முறிந்து போர் மூண்டது. வரலாற்றுச் சிறப்புமிக்க இப் போரில் (1585-88) ஸ்பானியக் கப்பற் படை (Spanish Armada) ஆங்கிலக் கப்பற்படையால் சின்னா பின்னமாக்கப்பட்டுத் தோற்கடிக்கப்பட்டது. அதன்விளைவாக ஸ்பெயினின் ஆதிக்கம் ஐரோப்பாவில் குன்றியதோடு, ஸ்பானியக் குடியேற்றங்களின்மீதான ஆதிக்கமும் குன்றியதெனலாம். ஸ்பெயினுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த பகுதிகளில் பிற ஐரோப்பியர் கள் எதிர்ப்பின்றிக் குடியேற்றங்களை நிறுவவும், வணிகத்திலீடுபடவும் முற்பட்டனர்.

ஆங்கிலேயர் பெற்ற வெற்றி புதிய உலகின் வரலாற்றில் ஒரு திருப்புமுனையெனக் கொள்ளலாம். ஸ்பானியக் கப்பற்படையின் புகழ் மங்கி, பிரிட்டிஷ் கப்பற்படையின் புகழ் ஓங்க ஆரம்பித்தது. ஸ்பெயினின் வலிமை குன்றியமையால் ஆங்கிலேயர் துணிவுடன் குடியேற்றங்களை நிறுவுவதில் முனைந்தனர். ஸ்பானியர் அவற்றை எதிர்த்ததால் போர் மீண்டும் மூளுமோ என்று அஞ்சி விட்டுவிட்டனர்.

# 2. பிரிட்டிஷ் குடியேற்றங்கள்

முதலாம் ஜேம்ஸ் 1603-ல் முடிசூட்டிக் கொண்டபோது பிரிட்டிஷ் பேரரசு என்ற ஒன்று இல்லை. எலிஸபெத் அரசியாரது ஆட்சிக் காலத்தின் இறுதியில் வர்ஜீனியாவில் குடியேற்றம் ஒன்று நிறுவ முயன்று கைவிடப்பட்டது. கீழைநாடுகளோடு வாணிகத் தொடர்பு கொள்வதற்காகக் கிழக்கிந்தியக் கம்பெனி 1600-ல் நிறுவப் பட்டது. ஜேம்ஸ் பட்டத்திற்கு வந்த ஆண்டுதான் அக் கம்பெனி தனது இந்தியப் பயணத்தில் வெற்றிகண்டு மீண்டது. ஸ்டுவர்ட் (Stuarts) அரசர்களின் வருகையோடு பிரிட்டிஷ் பேரரசும் உருவாயிற்று எனலாம். பேரரசை உருவாக்கும் பணியிலும், உள் நாட்டு நிகழ்ச்சிகளிலும் பிரிட்டிஷாரின் வரலாற்றில் பதினேழாம் நூற்றாண்டுக் குறிப்பிடத்தக்கது. இந் நூற்றாண்டில் அரசின் ஆதரவு சிறிதுமின்றி முழுக்கமுழுக்கத் தனியாருடைய தளராமுயற்சியினால் மட்டுமே பிரிட்டிஷ் பேரரசு உருவாயிற்று எனலாம்.

ஸ்டுவர்ட்டுகள் காலத்தில் பல குடியேற்ற நாடுகளை நிறுவு வதற்கான நல்லவொரு சூழ்நிலையை டியூடர்கள் உருவாக்கிவிட்டுச் சென்றிருந்தனர். கடல் வாணிகம் வளர்ச்சி பெற்று நாட்டின் செல்வ நிலை உயர்ந்திருந்தது. ஸ்பெயினுடன் நடந்த போரில் ஸ்பெயின் தோற்கடிக்கப்பட்டமையால் ஸ்பெயினின் அதிகாரமும், செல்வாக் கும் புதிய உலகில் குன்றின. மற்றும், ஸ்டுவர்ட்டுகள் காலத்தில் இங்கிலாந்தில் பொருளாதாரத் துறையில் நிலவிய குழப்பமும், சமயத்துறையில் மன்னர்கள் சகிப்புத்தன்மை இன்றி நடந்து கொண்டமையால் மக்களுக்கு ஏற்பட்ட துயரமும் குடியேற்றங்களின் வளர்ச்சிக்கு உதவி புரிந்தன.

**வர்ஜீனியா**

எலிஸபெத் அரசியார் காலத்து வர்ஜீனியாவிலும், நியூஃபவுண்ட் லாந்திலும் குடியேற்ற நாடுகளை நிறுவ ஆங்கிலேயர் மேற்கொண்ட

முயற்சிகள் பலனளிக்காது போயின. இருப்பினும், ஆங்கிலேயர் குடியேற்றங்களை நிறுவுவதற்கான திட்டங்களைக் கைவிட்டுவிடவில்லை. 1605ஆம் ஆண்டு ஒர் ஆய்வுப் பயணம் வட அமெரிக்காவின் கிழக்குக் கரையோரத்தில் மேற்கொள்ளப்பட்டது. அப் பயணத்தின்பின் குடியேற்றங்களை நிறுவுவதற்கான தக்க சூழ்நிலை இருப்பதாக எண்ணப் பட்டது. அதன்பயனாக அடுத்த ஆண்டு முதலாம் ஜேம்ஸ் ஒரு குழுவை நியமித்தார். அக் குழுவிற்கு அமெரிக்காவின் கடலோரத்தில் நிறுவப் படும் குடியேற்றங்களின் நடவடிக்கைகளை மேற்பார்வை பார்க்க உரிமை அளிக்கப்பட்டது. அக் குழுவின் கண்காணிப்பில் பிளைமவுத் கம்பெனி (Plymouth Company), இலண்டன் கம்பெனி (London Company) ஆகிய இரண்டு நிறுவனங்களும் இயங்க ஆரம்பித்தன. பிளைமவுத் கம்பெனியால்நிலையானபணிஎதையும்செய்யமுடியவில்லை. இலண்டன் கம்பெனி தனது பணியைச் சிறப்புறச் செய்தது. கடற்படைத் தளபதி கிறிஸ்டாஃபர் நியூபோர்ட் (Christopher Newport) என்பவரின் தலைமையில் நூறு பேர் புதிய உலகிற்குப் பயணமாயினர். அவர்கள் செசாபீக்குடாவில் 1607-ல் போய்ச் சேர்ந்தனர். நியூபோர்ட் தம்முடன் அரசு ஆணை ஒன்றினைக் கொண்டு வந்திருந்தார். அதில் குடியேற்றத்தின் ஆட்சிப் பொறுப்பைக் கவனிக்க ஏழு உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்கள், தமக்குள் ஒருவரைத் தலைவ ராகத் தேர்ந்தெடுத்துக்கொள்ளவேண்டும்.

வர்ஜீனியாக் குடியேற்றத்தினர் கோட்டை ஒன்றைக் கட்டுவித்து அதற்கு ஜேம்ஸ்டவுன் (Jamestown) என்று பெயர் சூட்டினர். குடியேறியவர்கள் தங்களது உணவுத் தேவைகளுக்கு இங்கிலாந்தையே நம்பியிருந்தனர். உணவுப் பண்டங்களைக்கொண்டு வரும் கப்பல்கள் வருவதில் ஏதேனும் தாமதமேற்பட்டால் குடியேற்றத்தினர் உணவின்றி அல்லலுற்றனர். அதனுடன் இந்தியப் பழங்குடியினரும் அதிகத் தீங்கு விளைவித்தனர். இவை காரணமாக ஒரு சமயம் இக் குடியேற்றம் அழிவுறும் நிலையிலிருந்தது. ஆனால், நற்பயனாகத் தளபதி ஜான் ஸ்மித் (John Smith) நயம்பட இந்தியர் களோடு நட்பு கொண்டு, குடியேற்றத்தினருக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப் பெற்றுக் காப்பாற்றினர். இலண்டன் கம்பெனியால் நிறுவப்பட்ட இக் குடியேற்றம் சரிவரச் செயற்படாமையைக் கேள்வி யுற்ற அரசர் வர்ஜீனியாக் கம்பெனி என்ற வேறு நிறுவனம் ஒன்றுக்கு அக் குடியேற்றத்தை நிருவகிக்கும் உரிமையை வழங்கினர். 1609-ல் ஒரு சாசனமும் அக் கம்பெனிக்கு வழங்கப்பட்டது. அதே நேரத்தில் பொதுமக்களும் ஆர்வங்காட்டலாயினர். பல பேர் நாடுவிட்டுக் குடிபெயர முன்வந்தனர்; முதலீடு செய்யவும் விரும்பினர். டெலவர் பிரபு (Lord Delaware), சர் தாமஸ் டேல் (Sir Thomas

Dale), சர் தாமஸ் கேட்ஸ் (Sir Thomas Gates) ஆகியோர் ஆளுநராக இருந்த முதல் சில ஆண்டுகளில் வர்ஜீனியாக் குடியேற்றம் நிலை பெற்று, மக்கள் தங்களுக்குத் தேவையான பொருள்களை உற்பத்தி செய்து கொள்ளுமளவுக்குத் தன்னிறைவு பெற்றது.

வர்ஜீனியாக் கம்பெனி குடியேறிய மக்களுக்குச் சொந்தமாக நிலங்களைப் பிரித்துத் தந்தது: அதனால், குடியேறிகளுக்குத் தத்தம் நிலத்தில் உழைக்க ஊக்கமேற்பட்டது. புகையிலைச் சாகுபடி அங்கு முதன்முதலாகச் செய்யப்பட்டது. அதனால், குடியேறிகள் அதிக ஊதியம் பெற்றனர். ஆஃபிரிக்காவிலிருந்து அடிமைகள் பலர் கொண்டுவரப்பட்டனர். அவர்களின் உழைப்பால் வர்ஜீனியாவின் செல்வம் கொழித்தது. விரைவில் ஆங்கிலேயர் அனுபவித்து வந்த உரிமைகளெல்லாம் குடியேறிகளுக்குப் பிரிட்டனால் வழங்கப்பட்டன. 1619ஆம் ஆண்டு வர்ஜீனிய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் கொண்ட சட்டசபையொன்று ஜேம்ஸ்டவுனில் கூடியது. இதுவே புதிய உலகில் கூடிய மக்களாட்சி அடிப் படையிலான முதல் சட்டசபையாகும்.

முதலாம் ஜேம்ஸுக்கு ஆரம்பத்திலிருந்தே வர்ஜீனியாவின் வளர்ச்சியில் பொறுமையிருந்து வந்தது. அதனால், புகையிலை வாணிகத்தின்மீது அளவுக்குமீறிய சுங்கவரி விதித்தார். இதன் விளைவாக வணிகர்கள் கள்ள வாணிகத்திலீடுபடலாயினர். வர்ஜீனியாக் கம்பெனியின் பங்குதாரர்களுக்கு ஆதாயப் பங்கு ஒழுங்காக அளிக்கப்படவில்லை. அவற்றையெல்லாம் கண்ட ஜேம்ஸ், வர்ஜீனியாக் கம்பெனிக்கு வழங்கப்பட்ட சாசனத்தை ரத்து செய்தார். 1624 முதல் வர்ஜீனியா, அரசரின் நேரடி ஆட்சிக்குக்கொண்டுவரப் பட்டு அரசருடைய குடியேற்றமாயிற்று (Crown Colony).

**புதிய இங்கிலாந்துக் குடியேற்றங்கள் (New England Colonies)**

வர்ஜீனியாவைப் போலல்லாமல் புதிய இங்கிலாந்து என்பது ஒரு தனிக் குடியேற்றமன்று; பல குடியேற்றங்கள் கொண்ட பகுதி யாகும். பிளைமவுத் (1620-Plymouth), மாசாசுசெட்ஸ் (1629 - Massachusetts), கனெக்டிகட் (1636-Connecticut), ரோடு ஐலந்து (1636-Rhode Island), நியூ ஹேவன் (1638 - New Haven) ஆகிய குடியேற்றங்கள் கொண்ட பகுதியே புதிய இங்கிலாந்து என்று வழங்கப்பட்டது. இவற்றோடு நியூ ஹாம்ப்ஷயரையும் (New Hampshire), மெயினையும் (Maine) சேர்க்கலாம். ஆனால், இவை இரண்டிலும் 1635-லேயே மக்கள் சிலர் குடியேறியபோதும் தனிக் குடியேற்றங்களெனச் சொல்வதற்குரிய அளவுக்கு வளர்ச்சியுற வில்லை.

**பிளைமவுத் - 1620**

புதிய இங்கிலாந்துக் குடியேற்றங்களில் குடியேறியவர்களெல்லாம் இங்கிலாந்திலிருந்து வந்த பியூரிடன்களேயாவர். சமயச் சீர்திருத்தத்திற்குப் பிறகு (Reformation) ஆங்கிலிக்கத் திருச்சபை (Anglicanism) நிறுவப்பட்ட திருச்சபையாக (Established Church) இங்கிலாந்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டதால், மேலும் தீவிரமான சீர்திருத்தங்கள் கொண்டுவரப்பட்டுத் தூய்மைப்படுத்தவேண்டும் என ஒரு சிலர் வாதாடினர். அவர்களே பியூரிட்டன்களாவர். பியூரிட்டன்களுடைய கொள்கைகளை, எலிஸபெத் அரசியாரும், முதலாம் ஜேம்ஸும், முதலாம் சார்லஸும் அடியோடு வெறுத்தனர். ஏனெனில், சமய அமைப்பில் அரசருக்குப் பியூரிட்டன்கள் தலைமையிடம் தர மறுத்தனர். எனவே, பியூரிட்டானியரைக் கட்டுப்படுத்தும் வகையில் பல விதிமுறைகள் கொண்டுவரப்பட்டன. அவர்கள் பலவித இன்னல்களுக்காளாக்கப்பட்டனர். எனவே, அவர்களில் சிலர் ஹாலந்து நாடு சென்று குடியேறினர். ஆனால், அங்கும் அவர்களது வாழ்க்கை நலமுற அமையவில்லை. எனவே, அவர்கள் இங்கிலாந்துக்குத் திரும்பி அங்கிருந்து புதிய உலகுக்குச் சென்று சமய உரிமையோடு வாழத் திட்டமிட்டனர். அதற்கு முதலாம் ஜேம்ஸ் பின்னர் இசைவு தந்தாரேயொழியச் சாசனம் ஏதும் தரவில்லை.

பியூரிட்டானியர் சிலர் ஒன்று கூடி வர்ஜீனியாக் கம்பெனியிடமிருந்து இசைவாணை பெற்று வர்ஜீனியாவின் வடஎல்லைப் பகுதியில் சென்று குடியேற இரண்டு கப்பல்களைத் தயார்செய்தனர். அவை 'மேஃபிளவர்' (Mayflower), 'ஸ்பீட்வெல்' (Speedwell) என்பன. இப் பயணத்திற்குத் தேவையான நிதியைச் சில இலண்டன் மாநகர வணிகர்கள் முதலீடாகக் கொடுக்க முன்வந்தனர். அக் குடியேற்றத்தை நடத்திய நிறுவனம் பிளைமவுத் வர்ஜீனியாக் கம்பெனி என்று வழங்கப்பட்டது ; பின்னர், நியூ இங்கிலாந்துக் கம்பெனி எனப்பட்டது. 'ஸ்பீட்வெல்' கப்பல் பயணத்திற்குத் தகுதியற்றதாயிற்று. அதனால் 'மேபிளவர்' கப்பலில் நூறுபேர் புதிய உலகை நோக்கிப் புறப்பட்டனர். அறுபத்தைந்து நாள் பயணத்திற்குப் பிறகு அவர்கள் காட்முனை (Cape Cod) நிலப் பகுதியில் இறங்கினர். அது அவர்கள் சென்றடைய நினைத்த இடமன்று. அவர்கள் இறங்கிய பகுதி வர்ஜீனியாவிற்கு 400 மைலுக்கு வடக்கேயிருந்தது. இருப்பினும், அவர்கள் அங்கேயே தங்குவதற்குத் திட்டமிட்டனர். தங்களை ஆண்டவன் இடரில்லாது கரை சேர்த்தமைக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு தாங்கள் இறங்கிய பகுதிக்குப் புதிய இங்கிலாந்து எனப் பெயர் சூட்டினர். அத் தீரமிக்க பியூரிட்டானியரே 'யாத்திரிகத் தந்தையர்' (Pilgrim Fathers) என்றழைக்கப்பட்டனர்.

கரை சேர்ந்ததும் குடியேறிகள் தங்களுக்குள் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். அதற்கு மேபிளவர் ஒப்பந்தம் (Mayflower Compact) என்று பெயர். அதன்படி தங்களுக்குள் ஒருவரை ஆளுநராகத் தேர்ந்தெடுக்கவும், இங்கிலாந்தின் அரசரிடத்துத் தங்களது முழு பற்றுறுதியைச் செலுத்துவதென்றும் ஒப்புக் கொண்டனர். முதல் ஆளுநராக ஜான் கார்வர் (John Carver) பணி யாற்றினர். இரண்டாவது ஆளுநராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வில்லியம் பிராட் போர்டு (William Bradford) ஒரு கர்மவீரர். அவருடைய தளரா உழைப்பினுல்தான், பிளைமவுத் குடியேற்றம் வெற்றிகரமாக வளர ஆரம்பித்தது. அதில் மேலும், பலர் அடுத்தடுத்து வந்து குடியேறினர். மீன்பிடிப்புத்தொழிலும், குறுமென் மயிர்த்தோல் (fur) தொழிலும் ஏற்றுமதியைப் பெருக்கின. அதன் விளைவாக இலண்டன் மாநகர வணிகர்கள் தந்திருந்த முதலீட்டினைத் திருப்பித்தர முடிந்தது. பிளைமவுத்தின் ஆட்சிமுறை வர்ஜீனியாவினின்று சிறிது வேறுபட்டிருந்தது. பிளைமவுத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் பதவிக் காலம் ஒரே ஓர் ஆண்டு தான். ஆனல், வில்லியம் பிராட்போர்டு போன்ற நற்பணியாளர்கள் மீண்டும் மீண்டும் பன்முறை தேர்ந்தெடுக்கப்பட்டனர். மக்கள் தொகை கூடுதலானதும் நகரங்கள் தோன்றின. தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினர்கள் கொண்ட ஒரு சட்டசபையும் அமைக்கப் பட்டது. ஆனல், வாக்குரிமை எல்லோருக்கும் தரப்படாமல் பியூரிட்டானிய திருச்சபையின் உறுப்பினர்களுக்கு மட்டுமே தரப்பட் டிருந்தது. பிளைமவுத் சில ஆண்டுகள் கழித்து மசாசூசெட்ஸோடு இணைந்தது.

## மசாசூசெட்ஸ் 1629

இங்கிலாந்தில் முதலாம் சார்லஸின் ஆட்சிக் காலத்தில் பியூரிட்டானியருக்கு இன்னல்கள் அதிகமாயின. சார்லஸுக்குச் சமயத்துறையில் ஆர்ச்பிஷப் லாடு (Laud) ஆலோசகராக விளங் கினர். லாடு, பியூரிட்டானியருக்கெதிராகக் கடுமையான கட்டுப்பாடு களைக் கொண்டு வந்தார். எனவே, பெருமளவில் பியூரிட்டானியர் புதிய உலகிற்குக் குடிபெயர்ந்து சென்றனர். அவர்களிற் சிலர் புதிய இங்கிலாந்து கம்பெனியிடமிருந்து இசைவுபெற்றுப் பிளைமவுத்தை அடுத்துள்ள நிலப்பகுதியில் குடியேறத் திட்டமிட்டனர். இவர்களால் அமைக்கப்பட்ட நிறுவனம் மசாசூசெட்ஸ் பே கம்பெனி (Massachusetts Bay Company) என்றழைக்கப்பட்டது. ஜான் என்டிகாட் (John Endicott) என்ற முயற்சியாளரின் தலைமையில் 1629-ல் வட அமெரிக்கர் சென்று பிளைமவுத்தருகில் குடியேறினர்; அவர்கள் முதலாம் சார்லஸிடமிருந்து பட்டயம் ஒன்றையும் பெற்றனர். ஓர் ஆளுநரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும் குடியேற்றத்தை

ஆளுவதற்கான சட்டங்களை இயற்றவும் உரிமை வழங்கப்பட்டது. 1630-ல் மேலும் ஓராயிரம் பேர் சேலத்தில் (Salem) ஏற்கனவே யிருந்த குடியேறிகளுடன் சேர்ந்து கொண்டனர். நற்பயனாக முதல் ஆளுநராக ஜான் வின்திராப் (John Winthrop) என்ற சிறந்த தலைவரை மசாசூசெட்ஸ் பெற்றது. அவரே ஒரு சிறந்த பியூரிடன் தலைவராவார். பிற பியூரிடன் தலைவர்களை அழைத்துப் பேசி கேம்பிரிட்ஜ் ஒப்பந்தம் என்ற ஆட்சியமைப்புப் பத்திரம் ஒன்றைக் கொண்டு வந்தார். அவரும் அவரது செல்வம் மிக்க நண்பர்களும் ஒன்றுகூடி ஏராளமான ஏழைமக்களை இங்கிலாந்திலிருந்து அழைத்து வந்து தங்களது பண்ணைகளில் வேலைக்கமர்த்தினர். எனவே, பிளைமவுத்தைக் காட்டிலும் மசாசூசெட்ஸ் வெகு வேகமாக முன்னேற்றமடைந்தது. 1642-ல் அதன் மக்கள்தொகை பதினாறு யிரமாகும். அக் குடியேற்றத்தில் இருந்த பாஸ்டன் (Boston) சுறுசுறுப்பான துறைமுகப்பட்டினமாகத் திகழ்ந்தது. ஐரோப்பிய நாடுகளுடன் வருவாய் மிக்க வாணிகம் நடைபெற்றது. மசாசூசெட்ஸ் அரசருடைய குடியேற்றமாகத் திகழ்ந்தது (Crown Colony).

## கனெக்டிக்கட் — 1636

பிளைமவுத்திலும் மசாசூசெட்ஸிலும் நிறுவப்பட்ட குடியேற்றங்களின் விளைவாக பியூரிட்டன்களுக்கு அமெரிக்காவில் உரிமையுடன் வாழ்வதற்கு நிலையானதோர் இடம் கிடைத்தது. அவர்கள் அங்கிருந்து பிற பகுதிகளுக்கும் சென்று குடியேற முற்பட்டனர். மசாசூசெட்ஸில் வாழ்ந்த பியூரிட்டன்களிடையே சில தீவிரவாதிகள் நிம்மதியற்றவர்களாயிருந்தனர். அவர்கள் மசாசூசெட்ஸுக்கு மேற்கிலிருந்த கனெக்டிக்கட் ஆற்றுப்பள்ளத்தாக்கில் சென்று வாழ முற்பட்டனர். அந் நிலப்பகுதி செழிப்பாக இருப்பதைக் கண்டு மேலும் பலர் அங்குப் போய்க் குடியேறினர். விரைவில் நகரங்கள் தோன்றின. மசாசூசெட்ஸைப்போன்று அரசரிடமிருந்து பட்டயமொன்றைக் கனெக்டிக்கட் ஆரம்பத்தில் பெறவில்லை. இங்கிலாந்தில் முன்னிலைமீட்சிக்குப் பிறகுதான் (Restoration) கனெக்டிக்கட் பட்டயம் பெற்றது; அது முதல் தனியுரிமைப் பட்டயம் பெற்றக் குடியேற்றமாகத் திகழ்ந்தது.

## ரோடு ஐலண்டு — 1636

மசாசூசெட்ஸிலிருந்து மற்றொரு பிரிவினர் சமய அடிப்படையில் கருத்து வேறுபாடு கொண்டு இடம் பெயர்ந்து போய் ரோடு ஐலண்டு என்ற புதிய குடியேற்றத்தைத் தோற்றுவித்தனர். ரோகர் வில்லியம்ஸ் (Roger Williams) என்ற பியூரிடானிய

திருச்சபை சமய குருவுக்கும், ஆளுநரான வின்திராப்பிற்கும் இடையே திருச்சபையின் உறுப்பினர்க்கான தகுதி பற்றி கருத்து வேறுபாடு உண்டாயிற்று. அரசியல் உரிமைகளைப் பெற ஒருவருடைய சமய நம்பிக்கையை அடிப்படையாகக் கொள்ளக் கூடாதென ரோகர் வில்லியம்ஸ் வாதாடினர். வில்லியம்ஸ் கருத்தை ஏனையோர் ஏற்க மறுத்தனர். அவர் ஒருவேளை தம்மை இங்கிலாந்திற்குத் திருப்பியனுப்பக்கூடும் என அஞ்சி மசாசூசெட்ஸை விட்டு வெளியேறினர். அவருடைய ஆதரவாளர்கள் சிலரும் உடன் சென்றனர்; நாரங்கன்செட் குடாவில் (Narragansett Bay) பிராவிடன்ஸ் (Providence) என்னுமிடத்தில் குடியேற்றம் ஒன்றை நிறுவினர். இரண்டாண்டுகள் கழித்து மற்றுமொரு பிரிவினர் ஆன்ஹட்சின்ஸன் (Anne Hutchinson) என்னும் பெண்மணியின் தலைமையில் வின்திராப்போடு கருத்து வேறுபாடு கொண்டு வெளியேறினர். இவர்கள் ரோடு ஐலண்டு என்றழைக்கப்படும் தீவில் குடியிருப்பு ஒன்றை அமைத்தனர். மேலும், இரண்டு வகுப்பினர் முறையே வில்லியம் காடிங்டன் (William Coddington) என்பவர் தலைமையிலும், சாமுவேல் கார்ட்டன் (Samuel Corton) என்பவர் தலைமையிலும் மசாசூசெட்ஸை விட்டு வெளியேறினர். அந் நான்கு பிரிவினரும் தனித்தனியே குடியிருப்புகளை அமைத்துக் கொண்ட போதிலும் அவர்களிடையே சமய கருத்துகளைப் பொறுத்தவரையில் ஒற்றுமையிருந்தது. எனவே, அவர்கள் ஒன்று கூடி ரோடு ஐலண்டு குடியேற்றமெனத் தங்களது பகுதிக்குப் பெயர் சூட்டிக்கொண்டனர். ரோகர் வில்லியம்ஸ், பிரிட்டிஷ் பாராளுமன்றத்திடம் விண்ணப்பித்துத் தனியே ஒரு சாசனத்தை 1663-ல் பெற்றார். மக்களுக்குச் சமய உரிமை முற்றிலும் அளிக்கப்பட்டதோடு, அரசியலிலிருந்து திருச்சபை பிரிக்கப்பட்டு, சமயச் சார்பற்ற ஆட்சிமுறை ரோடுஐலண்டில் தோற்றுவிக்கப்பட்டது ஒரு சிறப்பான நிகழ்ச்சியாகும். ஆட்சியியலில் ஒரு புதிய கருத்தை உருவாக்கிய பெருமை ரோகர் வில்லியம்ஸைச் சாரும். ரோடுஐலண்டு தனியுரிமைப் பட்டயம் பெற்றக் குடியேற்றமாகத் திகழ்ந்தது.

**நியூஹேவன் — 1638**

புதிய இங்கிலாந்து குடியேற்றங்களில் முறையாக நிறுவப்பட்டது நியூஹேவன் குடியேற்றமாகும். தியோபிலஸ் ஈட்டன் (Theophilus Eaton) என்ற இலண்டன் நகரப் பெருவணிகர் ஒருவரும், ஜான் டேவன்போர்ட் (John Davenport) என்ற சமய குருவும் சேர்ந்து இக் குடியேற்றத்தைத் தோற்றுவித்தனர். ஒரு பியூரிடானிய பொதுநலக் குடியரசை அமெரிக்காவில் நிறுவ வேண்டுமென்பது அவர்களது அவா. மசாசூசெட்ஸ் மக்கள் அவர்களை வரவேற்றனர். ஆனல், அவர்கள் தனியே வாழ்வதையே விரும்பினர். எனவே

கனெக்டிக்கட்டுக்கு மேற்கே சென்று நியூஹேவன் என்ற குடியேற்றத்தை நிறுவினர். மசாசூசெட்ஸ் அரசாங்கம் போலவே நியூஹேவன் அரசாங்கமும் அமைக்கப்பட்டது. 1662-ல் நியூஹேவன் கனக்டிக்கட் குடியேற்றத்தோடு இணைக்கப்பட்டது.

**நியூஹேம்ப்ஷயர், மெயின் குடியேற்றங்கள்**

நியூஹேம்ப்ஷயர், மெயின் குடியேற்றங்கள் எப்பொழுது நிறுவப்பட்டன என்று திட்டவட்டமாகச் சொல்வதற்கில்லை. புதிய இங்கிலாந்து (குடியேற்றங்களை மேற்பார்வை பார்த்து வந்த புதிய இங்கிலாந்து) குழு (Council for New England) 1629-ல் பெர்டினன்டோ ஜார்ஜஸ் (Ferdinando Gorges) என்பவருக்கும் ஜான்மேசன் (John Mason) என்பவருக்கும் மசாசூசெட்ஸையடுத்த நிலப்பகுதியை அளித்தது. அதே ஆண்டில்தான் மசாசூசெட்ஸுக்கும் நிலமளிக்கப்பட்டது. மசாசூசெட்ஸ் குடியேற்றம் நியூஹேம்ப்ஷயருக்கு அளித்த பகுதியைத் தன்னுடையதெனச் சொந்தம் கொண்டாடியது. ஏறத்தாழ ஐம்பதாண்டுப் போராட்டத்திற்குப் பிறகு இங்கிலாத்தின் அரச நீதிமன்றம் அவ்விரு குடியேற்றங்களுக்கிடையேயிருந்த சிக்கலைத் தீர்த்து வைத்து நியூஹேம்ப்ஷயரின் நிலப்பகுதி மீது மசாசூசெட்ஸுக்கு எவ்வித உரிமையும் கிடையாது எனக் கூறிற்று. 1679-ல் நியூஹேம்ப்ஷயர் முழுமை பெற்ற ஓர் அரசருடைய குடியேற்றமாயிற்று. புதிய இங்கிலாந்து குடியேற்றங்களில் இதுவே அரசருடைய முதல் குடியேற்றமாகும்.

மெயின் குடியேற்றமும் துவக்கத்தில் நியூஹேம்ப்ஷயரைப் போன்று மசாசூசெட்ஸால் தொல்லைக்குட்படுத்தப்பட்டது. இறுதியில் 1677-ல் பிரிவிகவுன்சில் மசாசூசெட்ஸ் குடியேற்றத்திற்கு எதிராகத் தீர்ப்பு வழங்கியது. மெயின் தனியான குடியேற்றமாக வளரலாயிற்று. ஆனால், மசாசூசெட்ஸ் அதிகாரிகள் மெயின் பகுதியை 1200 பவுனுக்கு விலைபேசி வாங்கி விட்டனர். அது முதல் மெயின் மசாசூசெட்ஸின் ஒரு பகுதியாயிற்று. 1691-ல் வில்லியம் மேரி ஆட்சிக் காலத்தில் சட்டபூர்வமாக மசாசூசெட்ஸுக்குப் பட்டயம் வழங்கப்பட்டபோது மெயினும் இணைத்தே காட்டப்பட்டது. வடக்கு எல்லை செயின்ட் சிராய் (St. Croix river) ஆறு என வரையறுக்கப்பட்டது.

நியூஹாம்ப்ஷயர் குடியேற்றமும், மெயின் குடியேற்றமும் மெதுவாக முன்னேறின. அதற்கு வளமற்ற நிலமும், நீண்ட பனிக்காலங்களும் முக்கிய காரணங்களாகும். மற்றும் மசாசூசெட்ஸுடன் நெடுநாள் இருந்து வந்த நில உரிமைத் தகராறுகளும் ஒரு காரணமாகும். அத்துடன் அவ்விரு குடியேற்றங்களும்

பிரெஞ்சுக் குடியேற்றத்தின் எல்லைப்புறத்தில் அமைந்திருந்தன. எனவே, அவற்றின் எல்லைப்புறங்களில் வாழும் மக்கள் அடிக்கடி பிரெஞ்சுக்காரர்களாலும், செவ்விந்தியர்களாலும் தாக்கப்பட்டனர். ஆகையால், அவற்றின் வளர்ச்சி தடைப்பட்டதில் வியப்பில்லை.

### புதிய இங்கிலாந்து நேசக் கூட்டமைவு (New England Confederation)

இங்கிலாந்தில் முதலாம் சார்லஸுக்கும், அவருடைய பியூரிடானிய தீவிரவாதிகளுக்குமிடையே 1642-ல் உள்நாட்டுப் போர் மூண்டது. புதிய இங்கிலாந்தில் குடியேறிய பியூரிட்டானியர்கள் உடனே பியூரிடானிய பாராளுமன்றக் கட்சியை ஆதரிப்பரென அனைவரும் எதிர்பார்த்தனர். ஆனால், எதிர்பார்த்தது போன்று நடக்கவில்லை. புதிய இங்கிலாந்து பியூரிட்டானியர் தலையிடாமலிருக்கவே விரும்பினர். அவர்கள் தாய்நாட்டோடு வாணிகம் செய்வதிலும், தங்களுக்குச் சேரவேண்டிய கடன்களைத் திரட்டுவதிலும் கண்ணுங் கருத்துமாயிருந்தனர். எனவே, அவ்வாண்டுகளிலேயே தனித்த அமெரிக்கத் தேசிய உணர்வு ஒன்று உருவாகியிருப்பதை நாம் காணலாம்.

புதிய உலகில் வளர்ந்து கொண்டே வரும் உரிமையுணர்வின் எடுத்துக்காட்டாகப் புதிய இங்கிலாந்து நேசக் கூட்டமைவு விளங்கிற்று எனலாம். அக் கூட்டமைவு பிரிட்டிஷ் அரசின் இசைவின்றி நிறுவப்பட்டதாகும். அது அமெரிக்காவில் கூட்டாட்சி முறையில் மேற்கொள்ளப்பட்ட முதல் சோதனையாகும். அதில் மசாசூசெட்ஸ், பிளைமவுத், கனெக்டிக்கட், நியூஹேவன்—ஆகிய நான்கு பியூரிடானிய குடியேற்றங்கள் அடங்கியிருந்தன. ஒரே கோட்பாட்டினடிப்படையில் அக் குடியேற்றங்கள் அமைக்கப்பட்டிருந்தன. அவர்களிடையே பொதுவான மொழி, இலக்கியம், அரசியல் பண்புகள் — ஆகியவை இருந்தன. மற்றும் அவர்களுக்கு இருந்து வந்த இன்னல்களும் ஒரே மாதிரியானவை. நியூ இங்கிலாந்து குடியேற்றங்களுக்கு வடக்கே பிரெஞ்சுக்காரரும், மேற்கே டச்சுக்காரரும், எல்லை முழுவதும் செவ்விந்தியர்களும் ஓயாது தொல்லை தந்து வந்தனர். மற்றும் குடிபுகுபவர் எண்ணிக்கையில் வீழ்ச்சி, கடினமான சூழ்நிலை, குடியேற்றங்களுக்கிடையே எல்லைத் தகராறுகள், வாணிகச் சிக்கல்கள்—முதலிய பிரச்சனைகள் அவர்களை ஒன்று சேர்த்தன எனலாம். அச் சிக்கல்களுக்குத் தீர்வு காண்பதிலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளவும் விருப்பங் கொண்டனர்.

இங்கிலாந்தில் உள்நாட்டுப்போர் ஆரம்பித்ததும் இங்கிலாந்திலிருந்து தங்களுக்கு எத்தகைய பாதுகாப்பும் கிடைக்காது என்பதனைப் புதிய இங்கிலாந்து குடியேற்றங்கள் உணர்ந்தன.

எனவே, நான்கு குடியேற்ற ஆணையர்களும் பாஸ்டனில் மே மாதம் 1643-ல் கூடிப் பேசி நேசக் கூட்டமைவின் விதிமுறைகளை வகுத்து ஏற்றுக் கொண்டனர். அவ் விதிமுறைகள்படி ஆட்சிக் குழுவில் நான்கு குடியேற்றங்களிலிருந்தும் இரண்டிரண்டு என மொத்தம் எட்டு ஆணையர்கள் இடம் பெறுவர். அவர்கள் ஆண்டுக்கொரு முறை செப்டம்பர் மாதம் கூட வேண்டும். கூட்டங்களின் முடிவுகளை குறைந்தது ஆறு உறுப்பினர்களேனும் ஒரு மனதாக ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்போதுதான் அவை செயற்படுத்தப்படும். கருத்து வேறுபாடிருந்தால் அந்தந்தக் குடியேற்ற நீதிமன்றங்களுக்கு அவற்றையெடுத்துச் செல்லலாம். ஆணையர்கள் ஒன்றுபட்டு, போர் தொடுக்கவும், அமைதி நிறுவவும், படைகளையும் நிதியினையும் பகுத்தளிக்கவும், போரில் பெற்ற ஊதியத்தைப் பகிர்ந்து கொள்ள வும், நேசக் கூட்டமைவில் மேலும் புதிய உறுப்பினர்களைச் சேர்த்துக் கொள்ளவும் உரிமை அளிக்கப்பட்டிருந்தனர். ஒரு குடியேற்றம் தாக்கு தலுக்கு இரையாகி உதவி நாடினால் உடனே நேசக் கூட்டமைவின் படை உதவிக்கனுப்பப்படும்.

அந் நேசக் கூட்டமைவு எதிர்பார்த்த அளவு சிறப்புறச் செயற்பட வில்லை. உறுப்பினர்களிடையே சமத்துவக் கொள்கை முழு மனதோடு ஏற்றுக்கொள்ளப்படவில்லை. மக்கள்தொகையிலும் செல்வத்திலும் மிகுந்திருந்த மசாசூசெட்ஸ் எல்லாவற்றிலும் ஆதிக்கம் செலுத்த முற்பட்டது. பெரும்பான்மையோரது கருத்துக் களை ஏற்கவும் பிற குடியேற்றங்களுக்குப் பிடிக்கவில்லை. இதன் விளைவாக நேசக் கூட்டமைவு 1684-ல் பிளவுண்டது. இருப்பினும் நேசக் கூட்டமைவு பல பயனுள்ள காரியங்களைச் சாதித்திருந்தது. 1645-ல் நராங்கன்செட் (Naranganset) இந்தியர்களைத் தோற் கடித்து ஒடுக்கிற்று. டச்சுக்காரர்களுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டு அவர்களைக் கனெக்டிக்கட் பள்ளத்தாக்கிலிருந்து வெளியேற்றியது; மற்றும் டெலவர் ஆற்றுக்கரையோரம் குடியேறவும் உரிமைபெற்றது; பல உள்நாட்டு எல்லைச் சிக்கல்களைத் தீர்த்து வைத்தது; குவேக்கர்களை (Quakers) குடியேறவொட்டாது தடுத்தது. திருச்சபையின் உறுப்பினர் தகுதிபற்றியும், சந்தா செலுத்தும் முறை பற்றியும் பொதுச் சட்டங்களை இயற்றுவதிலும் வெற்றி கண்டது.

இரண்டாம் சார்லஸ் பதவிக்கு வந்ததும் இங்கிலாந்தில் அமைதி நிலவிற்று. குடியேற்றங்களைப் பாதுகாக்க பிரிட்டிஷ் அரசு முன் வந்தது. எனவே, புதிய இங்கிலாந்து நேசக் கூட்டமைவு தேவை யற்றதாகி வழக்கிலிருந்து ஒழிந்தது. அக் கூட்டமைவு செயற் பட்ட காலையில் பிரிட்டிஷ் அரசைக் கலந்தாலோசிக்காமல் தானே டச்சுக்காரர்களோடு தொடர்பு கொண்டு ஒப்பந்தங்கள் செய்து

கொண்டமை குறிப்பிடத்தக்கதாகும். அரசரை மதியாது அக் கூட்டமைவு இயக்கத்தையும் பிரிட்டிஷ் அரசு எதிர்த்தது.

**மேரிலண்டு — (Maryland) 1632**

மேரிலண்டு குடியேற்றம் கால்வர்ட் (Calvert) குடும்பத்தினரால் நிறுவப்பட்டு வளர்க்கப்பட்டது. சர். ஜார்ஜ் கால்வர்ட், வர்ஜீனியா கம்பெனியின் ஓர் உறுப்பினராவார். அவர், முதலாம் ஜேம்ஸுடன் வெளிநாட்டுறவுச் செயலாளராகவும் பணியாற்றியிருந்தார். கால்வர்ட், கத்தோலிக்க சமயத்தைத் தழுவியதால் பதவியினின்று விலகினர் ; பின்பு குடியேற்றத் திட்டங்களில் நாட்டங் கொண்டார். ஜேம்ஸ், கால்வர்ட்டுக்குப் பால்டிமோர் பிரபு (LordBaltimore) என்று பட்டம் சூட்டினர். கால்வர்ட் புதிய உலகில் ஒரு குடியேற்றத்தை நிறுவ விரும்பினர்; அங்குக் கத்தோலிக்கர் உள்பட அனைவரும் சமய உரிமையோடு வாழ வேண்டுமென்று ஆசைப்பட்டார். நியூபவுண்டு லாண்டில் ஒரு குடியேற்றத்தை நிறுவினர் ; ஆனல், சில ஆண்டுகள் கழித்து அதனைக் கைவிட்டார். அங்கிருந்து தம் மக்களை வர்ஜீனியாவுக்கு அழைத்துச் செல்லத் திட்டமிட்டார். ஆனல், அங்கிருந்த பிராடஸ்டண்டுகள் கால்வர்ட்டினுடைய சமயக் கருத்துகளுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். எனவே கால்வர்ட் இறுதியில், 1632-ல் முதலாம் சார்லஸிடம் செசாபீக் குடாவிற்கு வடக்கே குடியேற்றமொன்றை நிறுவத் தனிச்சிறப்புரிமைப் பட்டயம் பெற்ருர். அதற்குள் ஜார்ஜ் கால்வர்ட் இறந்து போகவே அவருடைய மகன் செசில் (Cecil) குடியேற்ற முயற்சிகளில் முனைந்தார். முதலாம் சார்லஸின் மனைவியான ஹென்றியட்டா மரியாவைப் பெருமைப்படுத்தும் வகையில் அவர் குடியேற்றத்திற்கு மேரிலண்டு என்ற பெயர் சூட்டினர்.

மேரிலண்டுக்கு அளிக்கப்பட்ட பட்டயம் வர்ஜீனியாவுக்கு அளிக்கப்பட்டிருந்த பட்டயத்தினின்று வேறுபட்டிருந்தது. மேரிலண்டு ஓர் உடைமை உரிமை சார்ந்த (proprietary) குடியேற்றமாகத் திகழ்ந்தது. அது பால்டிமோர் குடும்பத்தாருடைய சொந்த சொத்தாகக் கொள்ளப்பட்டது. அவர் இங்கிலாந்தின் அரசருக்குப் பற்றுறுதி கொண்டவராகத் திகழ வேண்டும், அவரே குடியேற்ற மக்களை இங்கிலாந்தினின்று அழைத்துச் செல்லும் பொறுப்பை ஏற்கவும் நிலத்தினின்று வாடகை திரட்டவும் மக்கள் மீது வரிகள் விதிக்கவும், சட்டங்கள் இயற்றவும் உரிமை தரப்பட்டது. இங்கிலாந்தின் அரசருக்கு மேரிலண்டில் வரி திரட்ட உரிமையில்லை என்றும் தெளிவாகக் கூறப்பட்டது. ஆங்கிலிக்க சமயமே அக் குடியேற்றத்தின் சமயமாகும். ஆனல், உரிமையாளர் தன் விருப்பப்படி சமயப் பொறை அளிக்கலாம். பால்டிமோர் சந்ததியினர் கத்தோலிக்கர், ஆங்கிலிக்கர், பியூரிட்டானியர் — ஆகிய பல சமயப்

பிரிவினரையும் பிரிட்டிஷ் கொடியின்கீழ் வாழச்செய்து பெருமை பெற்றனர்.

செசில் கால்வெர்ட்டின் தம்பியான லியர்னுர்டு கால்வெர்ட்டின் தலைமையில் 1634ஆம் ஆண்டு முந நூறு பேர் மேரிலண்டுக்கு வந்து குடியேறினர்; வர்ஜீனியாவில் குடியேறியவர்கள் செய்த தவறுகளை யெல்லாம் களைந்து சீரிய முறையில் வாழ ஆரம்பித்தனர் ; இங்கிலாந் திலிருந்து வரும்போதே ஒரு குழுவாகக் கட்டுப்பாடுகளுடன் வந்தனர் ; தங்களுக்குத் தேவையான உணவுப்பொருள்கள், விவசாயக் கருவிகள் முதலியவற்றைக் கொண்டுவந்தனர்; வேலை செய்வதற்காக வேலைக் காரர்களையும், நிலங்களில் வேலை செய்ய தொழிலாளர்களையும் உடன் அவரவர் அழைத்து வந்திருந்தனர். எனவே, குடியேறிகள் வந்த சின்னுள்களில் உணவுப்பொருள்கள் விளைவிக்கப்பட்டன ; புகையிலை மிக்க ஊதியத்தோடு ஏற்றுமதி செய்யப்பட்டது. 1647 - ல் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு சட்டசபையும் அமைக்கப்பட்டது. 1690 முதல் 1715 வரை அரசருடைய நேரடி ஆட்சியிலிருந்த பிறகு மேரிலண்டு அமெரிக்க உரிமைப்போர்வரை கால்வர்ட் குடும்பத் தினருடைய பொறுப்பிலேயே உடமை உரிமை சார்ந்த குடியேற்ற மாகத் திகழ்ந்தது.

### கரோலினு குடியேற்றங்கள் 1663—(Founding of the Carolinas)

இங்கிலாந்தில் முன்னிலை மீட்சிக்குப் பிறகு (Restoration) புதிய உலகில் மேலும் பல குடியேற்றங்களை நிறுவுவதில் மக்கள் ஆர்வங் கொண்டனர். இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்காலம் (1660-85) அமெரிக்கக் குடியேற்ற வரலாற்றில் மிகச் சிறப்புடையதாகும். அக் காலத்தில்தான் அட்லாண்டிக் கடற்கரையோரத்தில் எஞ்சிய பகுதி களிலெல்லாம் குடியேற்றங்கள் நிறுவப்பட்டன. அக் காலத்து நிறுவப்பட்ட குடியேற்றங்கள அனைத்தும் உடைமை உரிமை சார்ந்தவையாகும் (Proprietary type).

முதலாம் சார்லஸ் 1629 - ல் சர். ராபர்ட் ஹீத் (Sir Robert Heath) என்பவருக்கு வர்ஜீனியாவுக்குத் தெற்கே ஒரு நிலப்பகுதியை (31° — 36° north latitude) குடியேற்றத்திற்காக அளித்தார். இரண்டாம் சார்லஸைப் பெருமைப்படுத்தும் வகையில் அக் குடியேற்றத்திற்குக் கரோலினு என்று பெயர் சூட்டப்பட்டது. ஆனல் சர். ராபர்ட் அந் நிலக் கொடையைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறி விட்டார். அவருக்களித்த நிலக்கொடையை இரண்டாம் சார்லஸ் தமக்கு வேண்டிய எண்மர் கொண்ட நண்பர் குழாமொன்றுக்கு 1663-ல் அளித்தார்.

அவ்வுரிமையாளர்களுக்கு முழு அதிகாரமும் அளிக்கப்பட்டது ; அலுவலர்களை அமர்த்தவும், தல ஆட்சி அமைப்புகளை நிறுவவும், நகரங்களையும் துறைமுகங்களையும் அமைக்கவும், வாடகை திரட்டவும், வரிகள் விதிக்கவும், சுங்கம் திரட்டவும், திருச்சபை நிறுவவும், படை திரட்டவும், போர் தொடுக்கவும் அவர்களுக்கு முழு உரிமை அளிக்கப் பட்டது. நற்பயனாக, கரோலினாவில் எண்ணற்ற கப்பல் செல்லத் தக்க ஆறுகள் பல இருந்தமையால் போக்குவரத்து எளிதாயிருந்தது. அக் குடியேற்றத்திற்கு வர்ஜீனியாவிலிருந்தும், புதிய இங்கிலாந்தி லிருந்தும் பலர் வந்து குடியேறினர். நெடுநாள் அப் பகுதி ஆல்பிமார்ல் (Albemarle) என்றழைக்கப்பட்டது; பின்னர் வட கரோலினா என்று வழங்கப்பட்டது.

1685-க்குப் பிறகு பிரான்ஸில் பதினான்காம் லூயி ஹியூகனேக் களை அச்சுறுத்த ஆரம்பித்தமையால் எண்ணற்ற ஹியூகனேக்கள் (Hugunenots) கரோலினாவில் குடியேறலாயினர் ; மற்றும் பிராடஸ்டண்டுகள் ஜெர்மனியிலிருந்தும், ஸ்காட்லாந்திலிருந்தும் குடியேறினர். பின்னர் அப் பகுதி தெற்குக் கரோலினா என்றழைக்கப் பட்டது. தென்கரோலினாவின் தலைநகர் அரசரின் நினைவாகச் 'சார்லஸ் டவுன்' என அழைக்கப்பட்டது. அது சிறந்த துறைமுகப்பட்டினமு மாகும். 1712-ல் வட கரோலினா தென் காரோலினாவினின்று தனியே பிரிக்கப்பட்டது. இரு குடியேற்றங்களிலும் உரிமையாளர்களின் பொறுப்பில் ஆட்சி சிறப்புற நடைபெற்றது. மக்கள் பிரதிநிதிகள் அடங்கிய சபையும், ஆலோசனைக் குழுவும், ஆளுநரும் இரண்டு கரோலினாக்களிலும் இருந்தனர். உரிமையாளர்களுடைய ஆதிக்கத் தின் வலிமை குன்றவே 1721-ல் தென் கரோலினா அரசரது குடியேற்றமாக்கப்பட்டது ; 1729-ல் வட கரோலினாவும் அரசரது குடியேற்றமாக்கப்பட்டது.

கரோலினாவில் குடியேற்றம் நிறுவப்பட்டமையால் அட்லாண்டிக் கடற்கரையோரத்தில் வர்ஜீனியாவுக்கும் ஸ்பானியரது புளோரிடா வுக்கும் இடையேயிருந்த நிலப்பகுதி பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. இவ் வகையில் தென் கரோலினா இடைத்தடுக்குக் குடியேற்றமாக (buffer colony) முக்கியத்துவம் பெற்றது. இதன் விளைவாக, பின்னர் அமெரிக்கர் புளோரிடா மீதும் தென் மிசிசிபி பள்ளத்தாக்கிலும் உரிமை கொண்டாட முடிந்தது.

**நியூயார்க், நியூஜெர்ஸி**

புதிய இங்கிலாந்துக்கும், வர்ஜீனியாவுக்கும் இடையில் பல டச்சுக்குடியேற்றநாடுகள் தோன்றின. அவற்றிற்குப் புதிய

நெதர்லாந்து (New Netherland) என்று பெயர். அக் காலத்தில் உலகத்திலேயே வணிகப் பொருள்களைக் கப்பலில் ஏற்றிச் செல்லுவதில் டச்சுக்காரர்கள் தலையாய இடத்தைப் பெற்றிருந்தனர். மிகக் குறைந்த கட்டணம் விதித்தமையே அவர்களுடைய ஆதிக்கத் திற்குக் காரணமாகும். வட அமெரிக்காவில் அவர்களது வாணிகம் செழிப்புற நடைபெற்றது. புதிய நெதர்லாந்து போர்த்திற முக்கியத் துவம் வாய்ந்த இடத்திலமைந்திருந்தது. அதனால், ஆங்கிலேயருக்குப் பெருந் தொல்லையாயிருந்தது. அதனால் புதிய இங்கிலாந்துக்கும் செசாபீக் குடாப்பகுதிக்குமிடையே தொடர்பில்லாதிருந்தது. 1660 - லும் 1663-லும் இயற்றப்பட்ட நாவாய்ச் சட்டங் களைச் (Navigation Acts) செயற்படுத்துவது கடினமாயிருந்தது. அச் சட்டங்களின்படி பிரிட்டிஷ் குடியேற்றங்களில் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படும் பொருள்களெல்லாம் பிரிட்டிஷ் கப்பல்களில் தான் ஏற்றிச்செல்லப்பட வேண்டும். பிரிட்டிஷ் கப்பல் கம்பெனிகளோ டச்சுக்காரரைக் காட்டிலும் உயர்ந்த கட்டணம் விதித்தனர். எனவே பிரிட்டிஷ் குடியேற்ற வணிகர்கள் கள்ளத்தனமாகத் தங்களது பொருள் களை டச்சுக் குடியேற்றங்களுக்குக் கடத்திச் சென்று அங்கிருந்து டச்சுக்கப்பல்களில் ஏற்றுமதி செய்தனர். வர்ஜீனியாவிலிருந்து ஏராளமான புகையிலை இவ்வழியில் ஏற்றுமதி செய்யப்பட்டது.

ஆங்கிலேயர் பலர் புதிய நெதர்லாந்தில் குடி புகுந்திருந்தனர். அவர்களுள் பலர் அப் பகுதியை ஆங்கிலேயர் கைப்பற்ற வேண்டுமென வற்புறுத்தி வந்தனர். இரண்டாம் சார்லஸின் தம்பியான யார்க் கோமகன் (Duke of York) கடல்கடந்த வாணிகத்தில் பெரு விருப்பு கொண்டு முதலீடு நிறைய செய்திருந்தார். புதிய நெதர்லாந்தின் செழிப்பைப்பற்றிக் கேள்விப்பட்ட அவருக்கும் அப் பகுதியைக் கைப் பற்ற வேண்டுமென்று விருப்பமேற்பட்டது. நிலப்பசி கொண்ட ஆங்கி லேய செல்வர்களையும் மன நிறைவுபடுத்தத் தக்க தருணம் அஃது என உணர்ந்தார். 1664 - ல் இரண்டாம் சார்லஸ் புதிய நெதர்லாந்து பகுதிகளைக் கொண்ட நிலப் பகுதியை ஒரு பட்டயம் மூலம் யார்க் கோமகனுக்கு அளித்தார். அத்தோடு மட்டுமல்லாமல் அந் நிலப்பகுதி தொன்றுதொட்டே இங்கிலாந்துக்குரியதென்றும், டச்சுக்காரர்களே ஆங்கிலேயரை விரட்டியடித்தனர் என்றும் சார்லஸ் கூறினார். அதனைக் கேள்வியுற்ற டச்சு அரசு உடனே போர் தொடுத்தது. 1665 முதல் 1667 வரை நடைபெற்ற அப் போர், வரலாற்றில் இரண்டாவது டச்சுப் போர் எனப்படும். (முதலாவது டச்சுப் போர் ஆலிவர் கிராம்வெல் ஆட்சிக் காலத்தில் நடைபெற்றது. அதன்படி டச்சு அரசு நாவாய்ச் சட்டங்களை அங்கீகரித்தது). அப் போரின் இறுதியில் கையெழுத்திடப்பட்ட பிரேடா உடன்படிக்கையின்படி (Treaty of Breda) புதிய நெதர்லாந்து முழுவதும் பிரிட்ஷார் பெற்

றனர். நியூ ஆம்ஸ்டர்டாம் (New Amsterdam), நியூ ஜெர்ஸி, டெலாவர் (Delaware) ஆகிய மூன்று பகுதிகள் கொண்டதாகப் புதிய நெதர்லாந்து விளங்கிற்று. அவற்றைப் பெற்றதன்மூலம் இங்கிலாந்தின் குடியேற்றங்கள் மெயினிலிருந்து புளோரிடா வரை தொடர்ச்சியாயிருந்தன. ஆங்கிலேய இனத்தைச் சேராத ஒரு பகுதியினர் ஆங்கிலேயரது ஆட்சிக்குட்பட்டனர்.

மூன்ருவது டச்சுப்போர் (Tnird Dutch War) (1672—74) நிகழ்ந்த சமயத்தில் டச்சுக்காரர்கள் சிறிது காலத்திற்கு நியூ ஆம்ஸ்டர்டாமைக் கைப்பற்றினர். ஆனல், இறுதியில் கையெழுத்திடப்பட்ட வெஸ்ட்மின்ஸ்டர் உடன்படிக்கையின்படி (Treaty of Westminster) நியூ ஆம்ஸ்டர்டம் ஆங்கிலேயருக்கே திருப்பித் தரப்பட்டது. அது யார்க் கோமகனைப் பெருமைப்படுத்தும் வகையில் நியூயார்க் என அழைக்கப்பட்டது. அஃது அரசருடைய குடியேற்றமாகத் (Crown Colony) திகழ்ந்தது.

நியூ ஜெர்ஸியும் புதிய நெதர்லாந்தின் ஒரு பகுதியாகவே இருந்தது; யார்க் கோமகனுக்கு அளிக்கப்பட்ட பட்டயத்திலும் ஒரு பகுதியாகவே இருந்தது.யார்க்கோமகன் நியூஜெர்ஸியைத் தமக்கு நெருங்கிய நண்பர்களாயிருந்த சர் ஜார்ஜ் கார்ட்டரட் (Sir George Carteret) என்பவருக்கும், ஜான் பெர்க்லி பிரபு (Lord John Berkeley) என்பவருக்கும் பரிசாக அளித்தார். பெர்க்லி பிரபு தமக்குச் சொந்தமான மேற்குப் பகுதியை குவேக்கர்களுக்கு (Quakers) விற்று விட்டார். கிழக்கு ஜெர்ஸி தொடர்ந்து கார்ட்டரட்டிடம் இருந்தது. 1682-ல் கிழக்கு ஜெர்ஸியும் குவேக்கர்கள் தலைவரான வில்லியம் பென்னுக்கு (William Penn) விற்கப்பட்டது. இறுதியாக 1702-ல் நியூஜெர்ஸி, அரசருடைய குடியேற்றமாக மாற்றப்பட்டது.

### குவேக்கர் குடியேற்றங்கள் - (The Quaker Colonies)

**பென்சில்வேனியா** (Pennsylvania), **டெலவர்** (Delaware) - இங்கிலாந்தில் பதிமூளம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் குவேக்கர்கள் எனப்படும் புதிய சமயப் பிரிவினர் தோன்றினர். ஆங்கிலிக்கத் திருச்சபைக்கு மாருகச் சில கருத்துகளைக் கொண்டிருந்தமையால் அவர்கள் இங்கிலாந்தில் வெறுக்கப்பட்டனர். கிராம்வெல் பல குவேக்கர்களைச் சிறையிலடைத்தார். இரண்டாம் சார்லஸ் ஆட்சிக் காலத்தில் குவேக்கர் கூட்டங்கள் தடை செய்யப்பட்டன. அவர்கள்மீது தண்டம் விதிக்கப்பட்டது. சிலர் நாடு கடத்தப்பட்டனர். மனம் வருந்திய குவேக்கர்கள் சமய உரிமையோடு வாழ புதிய உலகில் ஒரு குடியேற்றத்தை நிறுவ விரும்பினர். குவேக்கர் சமயப் பிரிவைத் தோற்றுவித்த ஜார்ஜ் பாக்ஸ் (George Fox)

ஸுக்கோ குடியேற்றத்தை நிறுவுவதற்கான பட்டயத்தை அரசரிடமிருந்து பெறுமளவுக்குச் செல்வாக்குச் கிடையாது. அந் நிலையில் நற்பயனாக குவேக்கர் சமயத்தில் ஈடுபாடு கொண்டிருந்த வில்லியம்பென்னுக்கு மேற்கு ஜெர்ஸி கிடைத்தமை கண்டு குவேக்கர்கள் மகிழ்ந்தனர். குவேக்கர்களுக்கெனவே பென்சில்வேனியா நிறுவப்பட்டது. அதனால் அவர்களது அவர் முழுமையாக நிறைவேறிற்று எனலாம்.

குவேக்கர்கள்மீது ஈடுபாடு கொண்ட வில்லியம்பென் பிரிட்டிஷ் கடற்படைத் தளபதியாகப் பணியாற்றிய வில்லியம்பென் என்பவரின் புதல்வர். தளபதி பென் இரண்டாம் சார்லஸுக்கும், யார்க் கோமனுக்கும் மிக நெருங்கிய நண்பராவார். இளைய பென்னும் அரசருடைய அன்பைப் பெற்றிருந்தார். தளபதி பென் மறைந்த பொழுது அரசரிடமிருந்து அவருக்கு ஒரு பெரிய தொகை வந்து சேராமலிருந்தது (அரசர் கடனாகப் பதினாயிரம் பவுன் பெற்றிருந்தார்). எனவே இரண்டாம் சார்லஸ் அத்தொகையை அவரது புதல்வரான பென்னுக்குத் திருப்பியளிப்பதற்குப் பதிலாகப் புதிய உலகில் ஒரு நிலப்பகுதியை அளிப்பதென முடிவு செய்தார். பென்னுக்கு இம் முடிவு மகிழ்வை ஊட்டியது; தம் குவேக்கர் நண்பர்கள் அச்சமின்றி வாழவும் தமக்குப் பிடித்த சமயக் கொள்கையோடு குடியேற்றமொன்றை நிறுவி ஆட்சி செய்யவும் அவருக்குச் சிறந்த வாய்ப்புக்கிடைத்தது.

1681ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் இரண்டாம் சார்லஸ் குடியேற்றம் ஒன்றைப் புதிய உலகில் நிறுவுவதற்கான பட்டயமொன்றை பென்னுக்கு அளித்தார். டெலவர் ஆற்றுக்கு மேற்கேயுள்ள ஒரு பெரும் நிலப்பரப்பு ஒதுக்கப்பட்டது. பென் அக் குடியேற்றத்திற்கு 'சில்வேனியா' (Sylvania = காடடர்ந்தநிலம்) எனப் பெயரிட்டார். ஆனால், அரசரோ, தளபதி பென்னை பெருமைப்படுத்தும் வகையில் 'பென்சில்வேனியா' எனப் பெயரிடும்படி பென்னை வற்புறுத்தினர். தற்புகழ்ச்சியை எதிர்க்கும் கோட்பாட்டினையுடைய குவேக்கரான பென்னுக்கு அது பிடிக்கவில்லை. எனினும், இறுதியில் அவர், அரசரது விருப்பத்திற்கிணங்கினர்.

பென்சில்வேனியா குடியேற்றம், நியூயார்க், கனெக்டிக்கட், நியூஜெர்ஸி, மேரிலண்டு, வர்ஜீனியா ஆகிய குடியேற்றங்களால் சூழப்பட்டிருந்தது. கடற்கரையோரமே இல்லாத குடியேற்றம் பென்சில்வேனியாவாகும். டெலவர் ஆற்றின் வழியேதான் கடல் தொடர்பிருந்தது. பென்சில்வேனியாவின் எல்லைகள் பிற குடியேற்றங்களுடைய எல்லைகளை ஒட்டியிருந்தமையால் ஆரம்பத்தில் எல்லை

சிக்கல்கள் பல தோன்றின. இறுதியில் அவையெல்லாம் நன்முறையில் தீர்த்துவைக்கப்பட்டன. பென் பெரு முயற்சிசெய்து, ஐரோப்பாவின் பல பகுதிகளிலிருந்து மக்களைக் குடியேறச் செய்தார்; பென்சில்வேனியாவில் குடியேறுவதால் பெறும் நன்மைகளை விவரித்து விளம்பரச் சிற்றேடுகள் அச்சிட்டு ஹாலண்டு, ஜெர்மனி, பிரான்சு, அயர்லாந்து ஆகிய நாடுகளில் வழங்கினர். குவேக்கர்களை ஒத்த கருத்துடைய பற்பல சமயப் பிரிவினர் பெருமகிழ்வுடன் பென்சில்வேனியாவில் குடிபுகுந்தனர். டெலவர் ஆற்றுக்கரையில் தலைநகர் நிறுவப்பட்டு பிலடெல்பியா என்று பெயரிடப்பட்டது ('Philadelpia' means 'brotherly love').

பென்சில்வேனியாவில் குடியேறிய குவேக்கர்களெல்லாம் கடும் உழைப்பாளிகளாக இருந்தமையால் விரைவில் செல்வச் செழிப்புற்றனர். தட்ப வெப்ப நிலையும் நன்றாக இருந்தது. நிலமும் வளமுடன் இருந்தது. மீன் பிடிப்பும் சிறப்புற நடைபெற்றது. எல்லைப்புறத்திலிருந்த செவ்விந்தியர்களும் ஆரம்பத்திலிருந்து குவேக்கர்களோடு நட்புரிமை கொண்டிருந்தனர். எனவே, அவர்களால் கேடொன்றும் விளையவில்லை.

நியூ நெதர்லாண்டின் ஒரு பகுதியாக இருந்த டெலவரும் யார்க் கோமகனால் வில்லியம் பென்னுக்கு 1682ஆம் ஆண்டு அளிக்கப்பட்டது. பென், டெலவரை பென்சில்வேனியாவோடு இணைத்து ஆட்சி புரிந்து வந்தார். 'பென்சில்வேனியா சட்டமன்றத்தில் டெலவர் உறுப்பினர்கள் சம உரிமையுடன் பதவி வகித்தனர். 1602-க்குப் பிறகு டெலவர் தனி சட்டசபையைப் பெற்றது. அதன் தலைநகர் வில்மிங்டன் (Wilmington) என்று பெயர் பெற்றது. டெலவரிலும் அனைவருக்கும் சமயப் பொறை வழங்கப்பட்டது. பென்சில்வேனியா, டெலவர் ஆகிய இரு குடியேற்றங்களும் உடைமை உரிமை சார்ந்தவையாக வளர்ந்தன. இங்ஙனம் வட அமெரிக்காவின் கிழக்குக் கரையோரத்தில் பன்னிரண்டு குடியேற்ற நாடுகள் ஸ்டுவர்ட்டுகள் காலத்தில் நிறுவப்பட்டன.

**ஜார்ஜியா (Georgia)**

வட அமெரிக்காவில் ஆங்கிலேயரால் பதிமூன்றாவது குடியேற்றம் பதினெட்டாம் நூற்றாண்டில் நிறுவப்பட்டது. அக் குடியேற்றம் நிறுவப்பட்டதற்கான காரணம் தனிச் சிறப்புடையதாகும். அக் குடியேற்றத்தை நிறுவக் காரணமாயிருந்தவரான ஜேம்ஸ் எட்வர்டு ஆக்ளிதார்ப் (James Edward Oglethorpe) என்பவர் ஆங்கில பாராளுமன்றத்தின் பொது மக்கள் மன்றத்தில் உறுப்பினராக இருந்தார். இங்கிலாந்திலுள்ள சிறைச்சாலைகளின் நிலைமையை

ஆராய்ந்து சீர்திருத்தங்கள் செய்வதற்காக நியமிக்கப்பட்ட குழவின் தலைவராக ஆக்ளிதார்ப் பணியாற்றியபோது எண்ணற்ற நல்ல குணம் வாய்ந்த மக்கள் கடன்பட்டுச் சிறையில் வாடியதைக் கண்டார்; அவர்களையெல்லாம் விடுவித்துப் புதிய உலகில் குடியேற்றிப் புது வாழ்வு அளிக்க விருப்பங்கொண்டார். மற்றும் தென் கரோலினவுக்குத் தெற்கே ஒரு குடியேற்றத்தை நிறுவுவதன் மூலம் ஆங்கிலக் குடியேற்றங்களுக்கும் ஸ்பானியக் குடியேற்றத்திற்குமிடையே ஓர் இடைத் தடுப்புக் குடியேற்றத்தை ஏற்படுத்தலாம் என ஆக்ளிதார்ப் திட்டமிட்டார்.

அருட்பண்பாளராகிய ஆக்ளிதார்ப்பின் நல்லெண்ணத்தைக் கண்ட அரசர் இரண்டாம் ஜார்ஜ், தென் கரோலினவுக்குத் தெற்கேயுள்ள பகுதியை ஆக்ளிதார்ப்பிற்கு 1732ஆம் ஆண்டு அளித்தார். [அரசரைப் பெருமைப்படுத்தும்வகையில் அக் குடியேற்றம் ஜார்ஜியா எனப் பெயர் சூட்டப்பட்டது. அதற்கு வழங்கப்பட்ட பட்டயத்தில் உடைமை உரிமை சார்ந்த குடியேற்றமாக (Chartered Colony) வருணிக்கப்பட்டது. ஆனல், இருபத்தேழு ஆண்டுகளுக்குப் பிறகு அரசருடைய குடியேற்றமாக மாற்றப்படும் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது] கத்தோலிக்கர் தவிர ஏனையோருக்குச் சமய உரிமை தரப்பட்டது. அடிமை முறை முதலில் தடை செய்யப்பட்டது. பின்னர் தடை தளர்த்தப்பட்டது. ஜார்ஜியாவுக்கு ஜெர்மனியிலிருந்தும், ஸ்காட்லாந்திலிருந்தும் எண்ணற்ற பிராடெஸ்டண்டுகள் வந்து குடியேறினர். ஆக்ளிதார்ப் அக் குடியேற்றத்தின் முன்னேற்றத்திற்காகத் தம் சொத்தின் பெரும்பகுதியைச் செலவிட்டார். அவரது நேரடிக் கண்காணிப்பினல் ஜார்ஜியா குறுகிய காலத்தில் முன்னேற்றமடைந்தது. இறுதியில் அஃது அரசருடைய ஆட்சிப் பொறுப்பின் கீழ் வந்தது. மெயின் முதல் புளோரிடா வரை அட்லாண்டிக் கரையோரம் முழுவதும் ஆங்கிலேயர் வசமாயிற்று.

## தாய்நாடு - குடியேற்ற நாட்டுத் தொடர்பு

தொடக்கத்தில் குடியேற்ற நாடுகளெல்லாம் தாய்நாட்டின் நன்மைக்காகவே நிறுவப்பட்டன. அங்கிருந்து மூலப்பொருள்களைக் கொண்டு வந்து செய்பொருளாக்கி, அவைகளை மீண்டும் குடியேற்ற நாடுகளிலும், பிறநாடுகளிலும் இங்கிலாந்து விற்று வந்தது. நாவாய்ச் சட்டங்களின்படி குடியேற்ற நாடுகள் ஒரு சில பொருள்களை பிரிட்டனுக்கு மட்டுமே அனுப்பவேண்டுமெனக் கட்டாயப்படுத்தப்பட்டன. இங்ஙனம் தாய்நாடானது தனது குடியேற்ற நாடுகளைத் தன் நன்மைக்காக வருத்துவது நியாயமானதாகக் கருதப்பட்டது. குடியேறிகளும் ஆரம்பத்தில் எண்ணிக்கையில் குறைவாக இருந்தமை


பதின்மூன்று குடியேற்றங்கள்
கனடா
நியூயார்க்
பென்சில்வேனியா
மசாசுசெட்ஸ்
கனெக்டிக்கட்
நியூஜெர்ஸி
டெலவர்
மேரிலண்டு
வர்ஜீனியா
வட கரோலினு
தென் கரோலினு
ஜார்ஜியா
மெக்ஸிகோ வளைகுடா
அட்லாண்டிக் பெருங் கடல்

யால் தாய்நாட்டையே நம்பி அதற்குக் கட்டுப்பட்டு வாழ்ந்தனர். தனிப்பட்ட நாட்டுப்பற்று அவர்களிடையே தோன்ற நெடுங்காலம் பிடித்தது.

**குடியேற்றங்களின் ஆட்சியமைப்பு**

ஒவ்வொரு குடியேற்ற நாட்டுக்கும் ஓர் ஆளுநரை நியமித்து அவர்கள் மூலம் பிரிட்டன் அக் குடியேற்ற நாடுகளை ஆண்டது. ஆளுநர், பிரிட்டிஷ் அரசரின் சின்னமாகக் கருதப்பட்டார். ஒவ்வொரு ஆளுநருக்கும் ஆட்சியை நடத்துவதில் ஆலோசனை கூற ஒரு கவுன்ஸிலையும் பிரிட்டிஷ் அரசு நியமித்தது. மேலும் சட்டங்களை இயற்ற ஒரு சட்டசபையும் இருந்தது. அச் சட்டசபைக்கு உறுப்பினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். துவக்கத்தில் அச் சபைகள் கவுன்ஸிலுக்கும் ஆளுநருக்கும் கட்டுப்பட்டிருந்தன. ஆனால், நாளடைவில் அவை ஆளுநரைக் கட்டுப்படுத்த ஆரம்பித்தன. அதனால், மோதல்கள் நிகழலாயின. ஆளுநருக்கு ஊதியமளிப்பதை நிறுத்திக் கொள்வதன்மூலம் அச் சபைகள் தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டன. ஆங்கிலேய அரசாட்சி முறையின் சிறப்பியல்புகளான முறைகள் ஆயம் (Jury), சட்ட ஆட்சி (Rule of Law) ஆகியவைகளின் பிரிட்டிஷ் குடியேற்றங்களில் காணப்பட்டன. சமயப் பொறையும் பெருமளவுக்கு அக் குடியேற்ற நாடுகளில் காணப்பட்டன. பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை, பொருளாதாரக் கொள்கை ஆகியவற்றில் மட்டுமே குடியேற்ற நாடுகள் தாய்நாட்டுக்குக் கட்டுப்பட்டிருந்தனவேயன்றி மற்றத் துறைகளில் அவை சுயாட்சி பெற்று விளங்கின.

பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் அனைத்தும் தனிப்பட்ட மனிதர்களின் முயற்சிகளால் தோன்றியவை. எனவே, ஆங்கிலக் குடியேற்ற நாடுகளில் தாய்நாட்டின் கட்டுப்பாடுகள் மிகவும் குறைவாக இருந்தன. பிற ஐரோப்பிய நாடுகளின் குடியேற்றங்களில், குறிப்பாக பிரெஞ்சு, ஸ்பானிய குடியேற்றங்களில் கட்டுப்பாடுகள் அதிகமாக இருந்தன. ஏனெனில், அவையெல்லாம் அந்தந்த அரசின் ஆதரவால் நிறுவப்பட்டவை. அவற்றில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சபையைக் காண்பதரிது. சுய ஆட்சிக்குப் பதிலாக வல்லாட்சியே நடைபெற்றது எனலாம். அதுவே ஏனைய குடியேற்றங்களுக்கும் பிரிட்டிஷ் குடியேற்றங்களுக்குமிடையே நிலவிய மாபெரும் வேற்றுமையாகும்.

வட அமெரிக்காவிலிருந்து பிரிட்டிஷ் குடியேற்றங்கள் பதின்மூன்றையும் ஆட்சியடிப்படையில் முப்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை யாவன : (1) அரசருடைய குடியேற்றங்கள் (Royal

Colonies), (2) உடைமை உரிமை சார்ந்த குடியேற்றங்கள் (Proprietary Colonies), (3) தனியுரிமைப் பட்டயம் பெற்ற குடியேற்றங்கள் (Charter Colonies).

எட்டுக் குடியேற்றங்கள் அரசருடையவை. அவை

1. வர்ஜீனியா
2. மசாசூசெட்ஸ்
3. வட கரோலினு
4. நியூயார்க்
5. நியூஜெர்ஸீ
6. தென் கரோலினு
7. நியூஹாம்ப்ஷயர்
8. ஜார்ஜியா.

மூன்று குடியேற்றங்கள் உடைமை உரிமை சார்ந்தவை. அவை

1. மேரிலாண்டு
2. பென்சில்வேனியா
3. டெலவர்.

இரண்டு குடியேற்றங்கள் தனியுரிமைப் பட்டயம் பெற்றவை. அவை

1. கனெட்டிக்கட்
2. ரோடு ஐலண்டு.

இம் மூன்று வகையான குடியேற்றங்களிலும் ஆட்சிமுறை ஒரே வகையாகத் தானிருந்தது. ஆளுநரை நியமிப்பதில் மட்டும் வேறுபாடிருந்தது. அரசருடைய குடியேற்றங்களில் ஆளுநர் அரசரால் நியமிக்கப்பட்டார். உடைமை உரிமை சார்ந்த குடியேற்றங்களில் உரிமையாளர்கள் ஆளுநர்களை நியமித்தனர். ஆனால், அந் நியமனம் அரசருடைய ஒப்புதலைப் பெற வேண்டும். தனியுரிமைப் பட்டயம் பெற்ற குடியேற்றங்களில் ஆளுநர்கள் நேர்முகமாகவோ மறைமுகமாகவோ மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நில இயல் அடிப்படையிலும், பொருளாதார அடிப்படையிலும் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளை வடக்கு, மத்திய, தெற்குக் குடியேற்றங்களென முப்பிரிவுகளாகப் பிரிக்கலாம். வடக்கே நிறுவப்

| பெயர் (பதின் மூன்று குடியேற்றங்கள் எண்ணிடப்பட்டுள்ளன) | தோற்றுவித்தவர் | ஆண்டு | பட்டயம் பெற்ற ஆண்டு | சட்ட மன்றம் பெற்ற ஆண்டு | அரசரால் மேற்கொள்ளப்பட்ட ஆண்டு | 1775-ல் தகுதி | பிற குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. வர்ஜீனியா | இலண்டன் கம்பெனி | 1607 | 1609 | 1619 | 1624 | அரசர் | —— |
| பிளைவுமத் | பியூரிட்டானியர் | 1620 | —— | 1639 | 1691 | —— | மசாசூசெட்ஸுடன் 1691-ல் இணைந்தது. |
| 2. மசாசூசெட்ஸ் | பியூரிட்டானியர் | 1629 | 1629 | 1634 | 1684 | அரசர் | —— |
| 3. மேரிலண்டு | பால்டிமோர் பெருமகன் | 1634 | 1632 | 1647 | —— | உடைமை உரிமை சார்ந்தவை | 1690 முதல் 1715 வரை அரசருடைய குடியேற்றமாக இருந்தது. |
| 4. ரோடு ஐலண்டு | ரோஜர் வில்லியம்ஸ் | 1636 | 1663 | 1647 | —— | தனியுரிமைப் பட்டயம் பெற்றவை | —— |
| 5. கனெக்டிக்கட் | மசாசூசெட்ஸிலிருந்து வெளியேறியவர்கள் | 1636 | 1662 | 1637 | —— | தனியுரிமைப் பட்டயம் பெற்றவை | —— |
| நியூஹேவன் | மசாசூசெட்ஸிலிருந்து வெளியேறியவர்கள் | 1638 | —— | 1643 | —— | —— | கனெக்டிக்கட்டுடன் 1662-ல் இணைந்தது. |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மெயின் | ஜார்ஜ்ஸ் | 1641 | 1639 | — | 1691 | — | மசாசூசெட்ஸால் வாங்கப்பட்டது. |
| 6. வடகரோலினு<br>7. தென்கரோலினு | எட்டுப் பெருமக்கள் | 1663 | 1663 | 1669 | வ. 1729<br>தெ. 1721 | அரசர்<br>அரசர் | —<br>— |
| 8. நியூயார்க் | யார்க் சோமகன் | 1664 | 1664 | 1683-1685 | 1685 | அரசர் | நியூ நெதர்லாந்து—டச்சுக் குடியேற்றம் 1622-1664 |
| 9. நியூஹேம்ப்ஷயர் | ஜான்மேஸன் | — | 1639 | 1680 | 1679 | அரசர் | — |
| 10. நியூஜெர்ஸி | பெர்க்லி, கார்ட்டரட் | 1664 | — | 1664 | 1702 | அரசர் | 1739 வரை நியூயார்க் ஆட்சியிலிருந்தது. |
| 11. பென்சில்வேனியா | வில்லியம்பென் | 1681 | 1680 | 1681 | — | உடைமை உரிமை சார்ந்தவை | 1692 முதல் 1694 வரை அரசருடைய குடியேற்றமாக இருந்தது. |
| 12. டெலவர் | ஸ்வீடிஷ் மக்கள் | 1638 | — | 1702 | — | உடைமை உரிமை சார்ந்தவை | 1655-ல் டச்சுக்காரர் கைப்பற்றினர். 1684-ல் ஆங்கிலேயர் கைப்பற்றினர். 1682-ல் பென்சில்வேனியாவோடு இணைக்கப்பட்டது. 1691-ல் பிரிக்கப்பட்டது. |
| 13. ஜார்ஜியா | ஜேம்ஸ் ஆக்ளிதார்ப் | 1732 | 1732 | 1733 | 1752 | அரசர் | — |

பட்ட நியூ இங்கிலாந்துக் குடியேற்றநாடுகள் பெரும்பாலும் பியூரிட்டன்களால் ஏற்படுத்தப்பட்டவை. அங்குக் குடியேறியவர்கள் விடுதலே வேட்கை மிக்கவர்களாதலால் அரசியலிலும், சமயத் துறையிலும் குடியாட்சியை வளர்த்தனர். கடற்கரையோரத்தில் அவர்கள் வாழ்ந்ததால் கடற்பழக்கமும், துணிவும், வலிமையும் பெற்றிருந்தனர். எனவேதான் நியூ இங்கிலாந்துக் குடியேற்றங்கள் கடல்சார்ந்த மாநிலங்கள் (Maritime Provinces) என்றழைக்கப்பட்டன. கடல் கடந்த வாணிகத்தில் ஈடுபட்டுப் பெரும் பொருளீட்டிச் சீரும் சிறப்புமாக அக்குடியேற்றங்களின் மக்கள் வாழ்ந்தனர். செல்வர்கள் முதலீடு செய்து தொழில் ஆலேகள் நிறுவினர். இதனல், சிறு கைத்தொழில்கள் வளர்ந்தன. மீன்பிடிப்பும் முக்கிய தொழிலாக விளங்கிற்று. வேளாண்மையும் சிறிய அளவில் ஹட்ஸன் பள்ளத்தாக்கில் சிறப்புற நடைபெற்றது. மத்திய குடியேற்றநாடுகளான நியூயார்க், நியூஜெர்ஸி, பென்சில்வேனியா ஆகியவற்றில் டச்சுக்காரர், சுவீடன் நாட்டவர் போன்ற பல ஐரோப்பிய இனத்தவர் இருந்தனர். பல. சமயப்பிரிவுகள் அங்குக் காணப்பட்டன; சமயப் பொறை நிலவியது. எனவே தாராளக் கொள்கை எல்லாத் துறைகளிலும் காணப்பட்டது. பொருளாதார அடிப்படையில் அவை பொருள்வழங்குமாநிலங்கள் (Provision Provinces) என்றழைக்கப்பட்டன. நியூ இங்கிலாந்துக்குத் தேவையான கச்சாப் பொருள்களே இவை உற்பத்தி செய்தன. செயற்றிறத் தொழிலாளர்களும் பேரளவில் வாழ்ந்தமையால் நெய்ப் பொருள் தொழிலும், (காகிதம், கண்ணுடி, இரும்பு உற்பத்தித் தொழிலும்,) சிறப்புற்று விளங்கிற்று. ஆரம்பத்தில் குறுமென் மயிர்த்தோல் வாணிகம் சிறப்புற்றிருந்தது. ஆனல், நாளாவட்டத்தில் குறைந்துவிட்டது. தெற்குக் குடியேற்றங்கள் பிரிவில் மேரிலாண்டு முதல் ஜார்ஜியா வரையிலான குடியேற்றங்கள் அடங்கின. அவற்றில் வேளாண்மையே சிறப்புறச் செய்யப்பட்டமையால் அவை பண்ணேமாநிலங்கள் (Plantation Provinces) என்று அழைக்கப்பட்டன; நெல், பருத்தி, அவுரிச்செடி (Indigo) ஆகியவை பேரளவில் பயிர் செய்யப்பட்டன; வெளி நாடுகளுக்கும் ஏராளமாக ஏற்றுமதி செய்யப்பட்டன; மற்றும் கப்பல் கட்டுவதற்கான மரங்கள் காடுகளில் நிறைய கிடைத்தன. பண்ணேகளில் வேலே செய்வதற்காகப் பேரளவில் நீக்ரோ அடிமைகள் இறக்குமதி செய்யப்பட்டனர் 1760-ல் மூன்று இலட்சம் நீக்ரோக்கள் தென் மாநிலங்களில் இருந்தனர். நீக்ரோ அடிமைகளின் உழைப்பால் பண்ணேயார்கள் பெருஞ்செல்வர்களாக வாழ்ந்தார்கள். இவ்வாறு நிலவியல் அடிப்படையிலும், பொருளாதார அடிப்படையிலும் பதின்மூன்று பிரிட்டிஷ் குடியேற்றங்களும் வளர்ச்சியுற்றன.

பிரெஞ்சுக் குடியேற்றங்கள்

கியூபெக்
மான்ட்ரீல்
பிரான்டெனக்
புதிய பிரான்சு
பெட்ராய்ட்
டியூகுஸ்னே
ஓகியோ ஆறு
வின்செனஸ்
மிசிசிபி ஆறு
மிசௌரி ஆறு
லூசியானா
நியூ ஆர்லியன்ஸ்
பிரிட்டிஷ் குடியேற்றங்கள்
அட்லாண்டிக் பெருங்கடல்
ஸ்பானிய புளோரிடா
மெக்ஸிகோ வளைகுடா

1 சுப்பீரியர் ஏரி
2 ஹியூரன் ஏரி
3 மிச்சிகன் ஏரி
4 ஈரி ஏரி
5 ஒன்டேரியோ ஏரி

# 3. பிரிட்டிஷ் — பிரெஞ்சுப் போட்டி

## வட அமெரிக்காவில் பிரெஞ்சுக் குடியேற்றங்கள்

பதினாரும் நூற்றாண்டில், போர்ச்சுகீசியரும், ஸ்பானியரும் புதிய உலகைக் கண்டறிந்து குடியேறினர். பதினேழாம் நூற்றாண்டில் ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரரும் சிறப்பாக வட அமெரிக்காவில் ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டு குடியேற்றங்களை நிறுவுவதில் ஆர்வங்கொண்டனர். பிரான்சில் நான்காம் ஹென்றி (1589—1610) ஆட்சி புரிந்த ஆண்டுகளில் தீவிரமாகப் பிரெஞ்சுப் பேரரசுக்கான அடித்தளம் அமைக்கப்பட்டது. ஆனால், அதற்கு முன்பே பல கடற் பயண வீரர்கள் வடஅமெரிக்காவின் வட பகுதிகளைக் கண்டறிந்தனர். கீழை நாடுகளுக்குக் கடல்வழி காணும் நோக்கத்தோடு, முதலாம் பிரான்சிஸ் ஆட்சிக் காலத்தில் வீராஸானோ (Verrazano) என்பவர் நியூபவுண்டுலண்டு வரை சென்று திரும்பினார். அடுத்து, கார்ட்டியர் (Cartier) அம் முயற்சியில் ஈடுபட்டு 1534-ல் செயின்ட் லாரன்ஸ் (St. Lawrence) வளைகுடா சென்று அவ் வளைகுடாவிற்கு அப் பெயரைச் சூட்டினார். அதேபெயர் கொண்ட ஆற்றையும் அவர் கண்டறிந்து அதில் பயணம் செய்து அப்பள்ளத்தாக்கிற்கும் லாரென்ஸ் பள்ளத்தாக்கு எனப் பெயரிட்டார்; அப் பள்ளத்தாக்கில் பிரெஞ்சுக் குடியேற்றம் நிறுவ முயன்று தோல்வியுற்றார். தென் அமெரிக்காவில் பிரேஸிலிலும், வட அமெரிக்காவில் புளோரிடாவிலும் பிரெஞ்சுக்காரர் குடியேற்றம் நிறுவி, பின்னர் அவர்கள் கைவிட்டனர்.

### நியூ பிரான்சு (New France) நிறுவப்படல்

நான்காம் ஹென்றி ஆட்சிக் காலத்தில்தான் வட அமெரிக்காவில் நிலையான குடியேற்றம் நிறுவுவதில் பிரெஞ்சுக்காரர் வெற்றி கண்டனர். 1603-ல் சாமுவெல்டி ஷாம்ப்லேயின் (Samuel de Champlain) என்பவர் செயின்ட் லாரென்ஸ் ஆற்று வழியே பயணம் மேற்கொண்டு கனடாவில் இன்றைய மான்ட்ரீல் (Montreal) வரை

சென்று வந்தார்; பின்னர், புதிய இங்கிலாந்து கடற்கரை வழியே அக்கேடியா (Acadia) வரை போய்த் திரும்பினர். இவ்வாருக, அது வரை வெள்ளேயர் எவரும் சென்றறியாத பகுதிகளுக்குச் ஷாம்ப்லேயின் சென்றிருந்தார். அவருடைய கண்டுபிடிப்புகளின் அடிப்படையிலேயே நியூபிரான்ஸ் நிறுவப்பட்டமையால் அவரை நியூபிரான்ஸின் தந்தையென அழைத்தனர்.

ஷாம்ப்லேயின் கண்டுபிடித்த பகுதிகளில், குடியேற்றமொன்றை நிறுவுவதற்கான பட்டயத்தை டிமான்ட்ஸ் (De Monts) என்பவருக்குப் பிரெஞ்சு அரசர் வழங்கினர். அவர், செயின்ட் கிராய் (St. Croix) நதி முகத்துவாரத்தில் ஒரு தீவில் முதலில் ஒரு குடியேற்றத்தை அமைத்தார். ஆனல், பனிக்காலத்தில் கடுங்குளிர் தாங்க முடியாது அவ்விடத்தை விட்டகன்று நோவாஸ்கோஷியாவில் (Nova Scotia) போர்ட் ராயல் (Port Royal) என்னுமிடத்தில் குடிபுகுந்தனர் அக்கேடியா எனப் பொதுவாக அழைக்கப்படும் அப் பகுதியைப் பிரிட்டிஷார் இருமுறை கைப்பற்றி இருமுறையும் திருப்பித் தந்து விட்டனர்.

### கியூபெக் (Quebec)

1608-ல் கியூபெக் என்னுமிடத்தில் ஷாம்ப்லேயின் குடியேற்றமொன்றை நிறுவினர். இதனின்றுதான் கனடா குடியேற்ற நாடு வளர்ச்சியுற்றது. அக் குடியேற்றத்தை வளர்க்க வேண்டுமென்பது அவரது குறிக்கோளன்று. கியூபெக்கை ஓர் அடித்தளமாக வைத்துக் கொண்டு அங்கிருந்து இந்தியாவிற்கு வழி காண ஆய்வுப் பயணங்களை மேற்கொள்ள வேண்டுமென்பதே அவரது அவா. அவரது ஓர் ஆய்வுப் பயணத்தில் இராக்குவோ (Iroquois) இந்தியப் பழங்குடியினரைச் சந்திக்க நேரிட்டது. மற்றும் பிரெஞ்சு சமயப்பரப்பாளர்களும், துணிவுமிக்க வணிகர்களும் லாரென்ஸ் நதிப் பிரதேசத்திலும், பெரும் ஏரிகளிலும் ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டனர். கியூபெக்கின் தட்பவெட்ப நிலேயும் வாழ வசதியாக அமையவில்லே; நிலமும் வளமற்றதாகவே இருந்தது. எனவே, பிரெஞ்சுக்காரர்கள் அதிக அளவில் வந்து குடியேற முன்வரவில்லே. கியூபெக் மெதுவாகவே முன்னேற்றமடைந்தது. லாரென்ஸ் நதி பள்ளத்தாக்கில் பிறகு சில குடியேற்றங்கள் நிறுவப்பெற்றன. அவற்றுள் முக்கியமானது மான்ட்ரீலாகும். அது கிறித்துவப் பாதிரிமார்களால் நிறுவப்பட்டதாகும்.

### லூசியான (Louisiana)

பதினன்காம் லுயியின் (Louis XIV) ஆட்சிக்காலத்தில் (1643-1715) குடியேற்றங்கள் நிறுவுவதில் பிரெஞ்சு மக்கள் மிக

மும்மரமாக ஈடுபட்டனர். அமைச்சர் கால்பர்ட்டும் (Colbert) அரும் பாடுபட்டு சிறப்பானதொரு குடியேற்றக் கொள்கையை உருவாக்கினர். அயல்நாடுகளில் பிரெஞ்சுக் குடியேற்றங்களை அமைப்பதற்குத் திட்டம் வகுத்து அத் திட்டத்தைச் செயல்படுத்தினர். அவர் புதிய உலகில் நிறுவப்பட்ட நியூ பிரான்ஸின் முக்கியத்துவத்தை உணர்ந்தார். லாரென்ஸ் நதிப் பள்ளத்தாக்கிலிருந்து ஐம்பெரும் ஏரிகள் வழியே இல்லினாய் (Illinois) என்ற பகுதியில் பிரெஞ்சு மக்கள் குடிபுகலாயினர். பிரான்டினக் (Frontenac), லாசேல் (La Salle) ஆகியோரது அயரா உழைப்பினால் பிரெஞ்சுக்காரர் இல்லினாய் பகுதியிலிருந்து மிசிசிபி நதி முழுவதிலும் பயணம் செய்து இருமருங்கிலுமிருந்த நிலப்பகுதிமேல் சொந்தங்கொண்டாடினர். பதினான்காம் லூயியைப் பெருமைப்படுத்தும் வகையில் அப் பகுதி லூசியானா (Louisiana) என்றழைக்கப்பட்டது. மற்றும், பிரெஞ்சு மேற்கிந்திய தீவுகளிலிருந்தும் நியூ ஆர்லியன்ஸ் (New Orleans) வழியே லூசியானாவிற்குப் பிரெஞ்சுக்காரர் சென்று குடியேறலாயினர். பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில், பிரெஞ்சுக் குடியேற்றம் ராக்கி மலைகள் (Rocky Mountains) வரையும் விரிவாக்கப்பட்டிருந்தது. பிரெஞ்சுக் குடியேற்றங்கள் பெரும்பாலும் இராணுவ ஆட்சியை அடிப்படையாகக் கொண்டிருந்தன. எனவே, அவைகளில் பிரிட்டிஷ் குடியேற்றங்களைப்போல் மக்கள்தொகை நிறைந்திருக்கவில்லை, அது, பின்னர் அக் குடியேற்றங்களின் அழிவுக்கு ஒரு காரணமாயிருந்தது. கோட்டைகொத்தளங்கள் நயாகரா (Niagara), டெட்ராய்ட் (Detroit), டியூகுஸ்னே (Duquesne), செயின்ட் லூயி (St. Louis). வின்செனஸ் (Vincennes), நியூ ஆர்லியன்ஸ் ஆகிய இடங்களில் அமைக்கப்பட்டன. அவற்றைச் சுற்றிப் பல கிராமங்கள் வளர்ந்தன; நிலமும் வளமுடையதாக அமைந்திருந்தது. கியூபெக், வட பகுதி குடியேற்றங்களின் தலைநகராகவும், நியூ ஆர்லியன்ஸ், தென் பகுதி குடியேற்றங்களின் தலைநகராகவும் விளங்கின.

**பிரெஞ்சு — பிரிட்டிஷ் போட்டி**

பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில், வட அமெரிக்காவில் கிழக்குக் கரையோரப் பகுதி முழுமையும் (புளோரிடா நீங்கலாக) ஆங்கிலேயர் வசமிருந்தது. எஞ்சிய உள்நாட்டுப் பகுதிகளெல்லாம் ராக்கி மலை வரை பிரான்சுக்குச் சொந்தமாயிருந்தன. இப்படி வட அமெரிக்காவில் ஆங்கிலேயர்களும், பிரெஞ்சுக்காரர்களும் பெரும்பாலும் அடுத்தடுத்துக் குடியேற்றங்களை அமைத்திருந்தனர். நாளாவட்டத்தில் கிழக்குக் கரையோரப் பகுதியிலிருந்த ஆங்கிலக் குடியேற்றங்களில் மக்கள்தொகை பெருகியதாலும், பன்முறை நிலம் பயன்படுத்தப்பட்டமையால் வளமிழந்ததாலும், அம் மக்கள் மேற்குப் பகுதியில் சென்று குடியேறுவதைத் தவிர வேறு வழி காணாது

திகைத்தனர். ஆனால், அவர்கள் முன்னேறவொட்டாத வகையில் பிரெஞ்சுக்காரர் தடுத்து நிறுத்தினர்; வட அமெரிக்காவின் உட்பகுதியைத் தங்களது ஆட்சியின்கீழ்க் கொண்டு வர முடிவு செய்து பல கோட்டைகளை வரிசையாக அமைத்தனர். பிரிட்டிஷாரும், பிரெஞ்சுக்காரர்களின் குடியேற்றங்களாகிய கனடாவும் லூசியானாவும் இணைக்கப்பட்டால், தங்களுடைய முன்னேற்றம் பாதிக்கப்படும் என்று கருதியமையால், அவ்விணைப்பைத் தடுக்க முற்பட்டனர். ஆகவே, அவர்கள் ஒகியோ (Ohio) நதிப்பள்ளத்தாக்கில் கோட்டைகள் கட்டலாயினர். இதன் விளைவாக ஆங்கிலக் குடியேற்றங்களுக்கும் பிரெஞ்சுக் குடியேற்றங்களுக்குமிடையே அடிக்கடி மோதல்கள் ஏற்பட்டன. வட அட்லாண்டிக் கடலில் மீன்பிடிக்கும் உரிமைமீதும், குறுமென் மயிர்த்தோல் வாணிகத்தின்மீதும், ஒகியோ மிசிசிபி பள்ளத்தாக்குகளின் உரிமைமீதும் இவ்விரு நாட்டு குடியேற்றங்களுக்கிடையே தொடக்கத்திலிருந்தே போட்டியிருந்து வந்தது. இப் போட்டிகளின் விளைவாக மட்டும் இரு நாடுகளுக்கிடையே போர் மூண்டிருக்காது. பதினேழாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்தே ஐரோப்பாவில் நிலவி வந்த அரசியல் சூழ்நிலைகளின் விளைவாகவே போர்கள் உருவாயின.

### பிரிட்டனின் வெளிநாட்டுக் கொள்கை

புகழ் பெற்ற புரட்சிக்குப் (Glorious Revolution 1688) பிறகு ஐரோப்பாவில் வல்லரசுச் சமன்நிலையைக் காப்பதில் பிரிட்டன் மிகுந்த ஆர்வங்கொண்டது; அதனால், ஐரோப்பிய நிகழ்ச்சிகளில் ஈடுபட நேரிட்டது. இப்படிப் புதிய வெளிநாட்டுக் கொள்கையை இங்கிலாந்து பின்பற்றியமையால் பிரான்ஸோடு தொடர்ந்து பல போர்களில் ஈடுபட நேரிட்டது. இப் போர்களில் வேறு பல ஐரோப்பிய நாடுகளும் ஈடுபட்டன. ஆனால், அவை இங்கிலாந்தையோ பிரான்ஸையோ சார்ந்திருந்தன. ஐரோப்பாவில் போர் மூண்டவுடன் வட அமெரிக்காவில் குடியேற்ற நாடுகளிலும் உடனே போர் தொடங்கிவிடும். இப்படி, பிரிட்டிஷ் குடியேற்றங்களுக்கும், பிரெஞ்சுக்குடியேற்றங்களுக்குமிடையே அமெரிக்க உரிமைப்போருக்கு முன்பு நான்கு போர்கள் நடைபெற்றன.

### வில்லியம் அரசரது போர் (King William's war) 1689-1697

வில்லியம் அரசரது போர் எனக் குடியேற்ற நாட்டு வரலாற்றில் அழைக்கப்படும் போர் ஐரோப்பிய வரலாற்றில் ஆக்ஸ்பர்க் நேச நாடுகளின் போர் (War of the League of Augsburg) என்றழைக்கப்படும். பிரான்ஸின் சிறந்த வல்லரசரென அழைக்கப்படும் பதினான்காம் லூயி கொண்டிருந்த நாடு பிடிக்கும் ஆசையைக் குலைப்பதற்காக ஆக்ஸ்பர்க் நாட்டுக் கூட்டிணை அமைக்கப்பட்டது.

இங்கிலாந்தில் புகழ் பெற்ற புரட்சிக்குப் பிறகு அப்போது ஹாலந்து நாட்டின் தலைவரான வில்லியம் இங்கிலாந்தின் மன்னரசனுர். அப்போது வெளியேற்றப்பட்ட இரண்டாம் ஜேம்ஸைப் பதினுன்காம் லூயி ஆதரித்தமையால் இங்கிலாந்தும் அக் கூட்டிணையில் சேர்ந்தது. எனவே, இங்கிலாந்தின் வரலாற்றில் இப் போருக்கு ஆங்கிலேய வாரிசுரிமைப் போர் (War of English Succession) என்ற பெயர் வழங்கப்பட்டது. ஆங்கிலக் குடியேற்றங்களில் வில்லியம் அரசர் காலத்தில் இப் போர் நிகழ்ந்தமையால் வில்லியம் அரசரது போர் எனப்பட்டது. அயர்லாந்திலும், நெதர்லாந்திலும், கடலிலும். இப் போர் நடைபெற்றது.

## அக்கேடியா தாக்குதல்

வட அமெரிக்காவில் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான அக்கேடியாவைக் கைப்பற்றுவதில் ஆங்கிலேயர் முனைந்தனர். அக்கேடியாவிற்கும் நியூ இங்கிலாந்திற்கும் இடையேயிருந்த எல்லைக் கோடு சரிவர வரையறுக்கப்படாமலிருந்தமையே இதற்குக் காரண மாகும். 1690-ல் சர் வில்லியம் பிப்ஸ் (Sir William Phips) என்பவரின் தலைமையில் ஆங்கிலேயப் படைகள் அக்கேடியாவிலிருந்த போர்ட் ராயல் (Port Royal) பகுதியைக் கைப்பற்றின. ஆனால் பிரெஞ்சுக்காரர் அந் நகரத்தை உடனே மீட்டுக் கொண்டனர்.

அடுத்து, கனடாமீது இருமுனை தாக்குதல் நடத்த ஆங்கிலக் குடியேற்றங்கள் திட்டமிட்டன. மசாசூசெட்ஸ், பிளைவுமத் குடியேற்றங்களிலிருந்து ஒரு கப்பல் படை கியூபெக்கைக் கைப் பற்றவும், நியூயார்க், கனெக்டிக்கட் குடியேற்றங்களிலிருந்து தரைப் படை ஒன்று மான்ட்ரீலைக் கைப்பற்றவும் புறப்பட்டது. போதிய வீரர்கள் இல்லாமையாலும், அவற்றைத் தலைமை தாங்கி நடத்திச் செல்வதில் சிக்கல் ஏற்பட்டதாலும், குடியேற்றங்களிடையே ஒற்றுமை யின்மையினுலும் இத்தாக்குதல்களில் ஆங்கிலேயருக்குத் தோல்வியே கிட்டியது.

## அரைமனதோடு போரிடல்

பிரிட்டிஷ் அரசு, 1692-ல் எல்லாக் குடியேற்றங்களுக்கும் நிதியுதவி கேட்டும், படைவீரர் கேட்கும் ஒரு வேண்டுகோளை விடுத்தது. நியூ இங்கிலாந்து, நியூயார்க் குடியேற்றங்கள் தவிரப் பிற குடியேற்றங்கள் இவ்வேண்டுகோளுக்கிணங்கவேயில்லை. இவ்வொத் துழையாமை இதற்குப் பின் நடைபெற்ற போர்களிலும் காணப் பட்டது. இதனுல், தாய்நாட்டிற்கும் குடியேற்றங்களுக்குமிடையே கசப்புணர்ச்சி ஏற்படலாயிற்று.

**ரிஸ்விக் உடன்படிக்கை (Treaty of Ryswick)**

பிரெஞ்சுக்காரர்கள், பிரான்டினக் என்பவரின் தலைமையின் கீழ் நியூபவுண்டுலாந்திலிருந்த, நியூ இங்கிலாந்து மக்களால் கட்டப்பட்ட வில்லியம்ஹென்றிகோட்டையைக் கைப்பற்றச் சென்றனர்; வெற்றிகரமாக அதனைத் தகர்த்தெறிந்தனர்; மேலும் பல ஆங்கில வாணிக நிலையங்களைக் கைப்பற்றினர். 1697-ல் இரு தரப்பினரும் களைத்துப்போன காரணத்தால் போரை நிறுத்திக் கொண்டார்கள்; அப்பொழுது செய்து கொண்ட ரிஸ்விக் உடன்படிக்கையின்படி பிரான்ஸும், இங்கிலாந்தும் போரின் போது கைப்பற்றிய இடங்களைத் திருப்பிக் கொடுக்க இசைந்தன. வட அமெரிக்காவில் இரு தரப்பினரும் ஆயத்தமேதுமின்றிப் போர் புரிந்தமையால் ரிஸ்விக் உடன்பாட்டினை வரவேற்றதில் வியப்பில்லை. எனவே, இருநாட்டுக் குடியேற்றங்களுக்குமிடையே இருந்து வந்த சிக்கல்கள் தீர்த்து வைக்காமல் விடப்பட்டன.

## (2) ஆன் அரசியாரது போர் (Queen Anne's War) 1702-1713

ரிஸ்விக் உடன்படிக்கையின் விளைவாக நிறுவப்பட்ட அமைதி சில ஆண்டுகள்தான் நீடித்தது. ஐரோப்பாவில் ஸ்பானிய வாரிசுப் போர் (War of Spanish Succession) ஆரம்பமானதும் அதன் எதிரொலி வட அமெரிக்கக் குடியேற்றங்களிலும் ஒலிக்கலாயிற்று. இப் போர் நடைபெற்றபோது ஆன் அரசி அரசாட்சி புரிந்தமையால் ஆன் அரசி யாரது போர் எனக் குடியேற்ற நாடுகளில் அழைக்கப்பட்டது,

**போருக்கான காரணம்**

இப்போரும் ஐரோப்பாவில் வல்லரசுச் சமன்நிலையைக் காப்பதற்காகவே நிகழ்ந்தது எனலாம். 1700-ல் ஸ்பானிய அரசர் வாரிசு இன்றி இறக்க, பதினான்காம் லூயி விரைந்து தமது பேரனை ஸ்பெயினின் அரசராக முடி சூட்டினார். மேலும் ஸ்பெயினுக்குச் சொந்தமான குடியேற்றங்களையும், குடியேற்ற வணிக உரிமைகளையும் லூயி பிரான்சுக்குரியதாக்கத் திட்டமிட்டார். இதனால் பிரான்சும். ஸ்பெயினும் ஒரு குடும்பத்தின் ஆட்சிக்குக்கீழ் வந்ததால் ஐரோப்பாவில் வல்லரசுச்சமன்நிலை பாதிக்கப்பட்டது. இதனை எதிர்த்து இங்கிலாந்து, ஹாலந்து, ஆஸ்த்திரியா ஆகிய நாடுகள் கூட்டணியொன்றை அமைத்து லூயிமீது போர் தொடுத்தன. ஐரோப்பாவில் போர் தொடங்கியதும் வட அமெரிக்காவிலும் குடியேற்றங்களிலும் போர் தொடங்கிற்று.

முந்திய போரினைக் காட்டிலும் இப் போர் வட அமெரிக்காவில் பல இடங்களிலும் நிகழ்ந்தது. முந்திய போரில் இராக்குவோ (Iroquois)

இந்தியப் பழங்குடியினர் ஆங்கிலேயரை ஆதரித்துப் போரிட்டனர். அதனுல், அவர்கள் பிரெஞ்சுக்காரர்களால் பெரிதும் துன்புறுத்தப் பட்டனர். எனவே, அவர்கள் 1701-ல் பிரெஞ்சுக்காரரோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டனர். அதன்படி நடுநிலைமை வகிக்க ஒப்புக் கொண்டனர்.

## நியூ இங்கிலாந்து மக்களின் முயற்சி

வட அமெரிக்காவில் வட பகுதி குடியேற்றங்களில் இப் போர் பெரும்பாலும் நியூ இங்கிலாந்து மக்களுக்கும் பிரெஞ்சுக்காரருக்கு மிடையே நிகழ்ந்தது. ஏனெனில், பிரெஞ்சுக்காரர் நியூ இங்கிலாந்துக் குடியேற்றங்களின் எல்லைப்புற மக்கள் மீது அடிக்கடி தாக்குதல் செய்து கொள்ளையடித்து வந்தனர். இத் தாக்குதல்களுக்கு ஒரு முடிவு காண அக்கேடியாவைத் தாக்கிக் கைப்பற்றுவதென நியூ இங்கிலாந்து மக்கள் திட்டமிட்டனர். 1704-லும் 1707 - லும் மேற்கொண்ட தாக்குதல்கள் பயனற்றவையாயின. எனவே, நியூ இங்கிலாந்து மக்கள் ஒரு மனதாக முன்னின்று 1710-ல் மாபெரும் தாக்குதல் ஒன்றை மேற்கொண்டு வெற்றி கண்டனர். போர்ட் ராயல் கைப்பற்றப்பட்டு, ஆன் அரசியைப் பெருமைப்படுத்தும் வகையில் ஆனபாலிஸ் (Annapolis) எனப் பெயரிடப்பட்டது. அக்கேடியாவில் பிரெஞ்சுக்காரரது ஆட்சிக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

பிரிட்டிஷ் குடியேறிகள் மான்ட்ரீலேயும், கியூபெக்கையும் கைப் பற்றத் திட்டமிட்டனர். 1709-ல் நியூயார்க்கிலிருந்து நிலவழி யாக மான்ட்ரீலேத் தாக்கவும், நீர் வழியாகக் கியூபெக்கைத் தாக்கவும் ஆயத்தங்கள் மும்முரமாகச் செய்தனர்; தங்களுடைய முயற்சிக்குப் பிரிட்டிஷ் அரசும் படை தந்து உதவும் என எதிர்பார்த்தனர். இறுதியில் பிரிட்டன் படை தந்து உதவ முடியாது என அறிவித்தது. எனவே கனடாவின்மீதான தாக்குதல் திட்டத்தைக் குடியேறிகள் அப்படியே கைவிட்டனர். 1711-ல் பிரிட்டனே கனடாவைத் தாக்கப் படைகளை அனுப்பியது. திறமையற்றவர்கள் தலைமையினுல் பிரிட்டனுக்குத் தோல்வியே ஏற்பட்டது.

## தென் கரோலிஞ மீது தாக்குதல்

தென் கரோலிஞவிலுள்ள சார்ல்ஸ்டன் பட்டினத்தைப் பிரெஞ்சுக் கப்பற்படையும், ஸ்பானிய கப்பற்படையும் இணைந்து தாக்கின. கரோலிஞ மக்கள் மஞ்சள்காய்ச்சலால் பெரிதும் அவதியுற்று வலிமை குன்றியிருந்தனர். இருப்பினும் பக்கத்துக் குடியேற்றங் களின் உதவி கொண்டு எதிரியைப் புகவெட்டாது தடுத்து நிறுத்து வதில் முதலில் வெற்றி கண்டனர்; பின்னர், சார்ல்ஸ்டன்

துறைமுகத்தினின்று பிரெஞ்சு-ஸ்பானிய கடற்படையை வெளி யேற்றுவதில் வெற்றி கண்டனர்.

இந்தப் போரின் போதும் பல்வேறு குடியேற்றங்களும் ஒத்துழைக்க முன்வரவில்லை. நியூ இங்கிலாந்து, கரோலினு ஆகிய குடியேற்றங்களில் மட்டும் எதிரித் தாக்குதலைச் சமாளிக்கப் படையில் பணிபுரிய மக்கள் முன்வந்தனர். இந்தப் போரின்போது சில குடியேற்றங்களில் கட்டாய இராணுவ சேவையும், கூலிப்படை திரட்டும் முறையும் முதன்முறையாகக் காணப்பட்டது.

## உட்ரெக்ட் உடன்படிக்கை (Treaty of Utrecht)

1711 ஆம் ஆண்டுக்குள் எல்லா நாடுகளும் போரில் சலிப்புற்றன. எனவே அமைதிக்கான பேச்சுகள் ஆரம்பிக்கப்பட்டு 1713-ல் உட்ரெக்ட் உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது. இதன்படி பிரிட்டன் ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் உன்னதமான இடத்தைப் பெற்றது. வட அமெரிக்காவில் பிரிட்டன் பிரான்சிட மிருந்து நியூபவுண்டுலாண்டு முழுவதையும், அக்கேடியாவையும், ஹட்ஸன் வளைகுடா பகுதியையும் பெற்றது. இராக்குவோ இந்தியருக்குப் பிரிட்டன் அளித்த பாதுகாப்பையும் பிரான்சு அங்கீகரித்தது. ஹட்ஸன் வளைகுடாவையும், நியூபவுண்டுலாண்டை யும் பிரிட்டன் பெற்றதன்மூலம் ஆங்கிலக் குடியேறிகள் குறுமென் மயிர்த்தோல் வாணிகத்திலும், மீன்பிடிப்புத் தொழிலிலும் மிகுந்த ஊதியம் பெறலாயினர். ஸ்பெயினுடன் பிரிட்டன் ஏற்படுத்திக் கொண்ட ஆசியெண்டோ ஒப்பந்தத்தின்படி (Treaty of Asiento) ஆங்கிலேயர் ஸ்பெயினுக்குச் சொந்தமான அமெரிக்க நாடுகளுடன் வாணிகம் செய்யவும், அந் நாடுகளில் அடிமைகளை விற்கவும் உரிமை பெற்றனர். இப்படி, இப் போரின் விளைவாக வட அமெரிக்காவினின்று முதல் கட்டமாகப் பிரெஞ்சுக்காரர் வெளியேற்றப் பட்டனர். இதனுல் பிரிட்டிஷ் குடியேற்றத்தினர் தங்களது நிலப்பரப்பைப் பெருக்கிக் கொள்ளச் சிறந்ததொரு வாய்ப்பைப் பெற்றனர். மற்றும் புதிய உலகின் அயல்நாட்டு அரசியல் தொடர்பு வரலாறும் (Diplomatic History) இப் போருடன் ஆரம்பமாயிற்று எனலாம்.

## பிரான்சு குடியேற்றங்களை உறுதிப்படுத்தல்

உட்ரெக்ட் உடன்படிக்கையின்படி பிரான்சு, குடியேற்றநாடு களில் மிகவும் தாழ்வுபடுத்தப்பட்டது. இந் நிலையை மாற்ற பிரான்சு முனைந்தது; தன்னுடைய படை வலிமையைப் பெருக்கிக்கொண்டு வட அமெரிக்காவில் தன் நிலையை நிலைநிறுத்த பிரிட்டனுடன் போட்டியிட ஆரம்பித்தது; செயின்ட் லாரென்ஸ் நதி முகத்துவாத்தில்

பாதுகாப்பிற்காகக் கேப் பிரெட்டன் தீவில் (Cape Breton Island) லூயிபர்க் (Louisburg) என்னும் கோட்டையைக் கட்டியது; ஹாம்ப் லேயின் ஏரிக்கருகே கிரௌன் பாயின்ட் (Crown Point) என்னுமிடத் தில் மற்ருெரு கோட்டையைக் கட்டியது. இதனுல், கியூபெக், மான்ட்ரீல் ஆகிய நகரங்கள் பாதுகாப்புப் பெற்றன. ஐம்பெரும் ஏரிகளைக் காப்பதற்காக நயாகரா கோட்டையும் கட்டப்பட்டது. இராக்குவோ, இந்தியர்களைத் தாக்கச் சிறந்ததோர் அடித்தளமாகவும் அது பயன்பட்டது.

மற்ருெரு வகையிலும் பிரெஞ்சுக்காரர்கள் தங்களது வலிமையைப் பெருக்கிக் கொள்ள முனைந்தனர். அக்கேடியாவில் இருந்த பல பிரெஞ்சுக் குடிமக்களுக்கு ஆங்கிலேயருடைய ஆட்சியின் மீது வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அவர்களையெல்லாம் கேப் பிரிட்டன் தீவுக்குக் குடிபெயரச் சொல்லி, பிரான்சு ஊக்குவித்தது. மற்றும், அபெனுக்கி (Abenaki) என்ற இந்தியப் பழங்குடியினரோடும், மற்றும் நியூ இங்கிலாந்திலிருந்த இந்தியர்களோடும் பிரான்சு பல உடன்பாடு களைச் செய்து கொண்டது. இவ்வுடன்பாடுகளை ஏற்படுத்துவதில் கிறித்துவப் பாதிரிமார்கள் அருந்தொண்டாற்றினர். இதற்கெல்லாம் மாருக ஆங்கிலேயர் தக்கப் பாதுகாப்பு நடவடிக்கையில் ஈடுபடாமல் வாளாயிருந்தனர்.

### ஜென்கின்ஸ் காதுப்போர் (War of Jenkins Ear)

அதேநேரத்தில் ஸ்பானியர்களும் தாங்கள் இழந்த வாணிக உரிமைகளைப் பிரிட்டனிடம் இருந்து மீட்பதில் கவனம் செலுத்தினர். தென் கரோலினுவிற்கும் ஸ்பானிய புளோரிடாவுக்குமிடையே எல்லைத் தகராறுகளும் நெடுநாள்களாக இருந்து வந்தன. ஜார்ஜிய. குடியேற்றம் நிறுவப்பட்டதும் எல்லைச்சிக்கல் தீவிரமாயிற்று அதையொட்டி ஸ்பானிய கடலோரப் படையினர் பிரிட்டிஷ் வாணிகக் கப்பல்களைக் கைப்பற்றலாயினர். பிரிட்டனின் பொருளாதார வளர்ச்சியைக் கண்ட ஸ்பெயினும், பிரான்சும் பொருமையுற்றுப் பிரிட்டனின் பொருளாதார வலிமையைச் சீர்குலைக்கத் திட்டமிட்டன. அதற்காகக் குடும்ப ஒப்பந்தம் (Family Compact 1733) எனப்படும் ஓர் உடன்பாட்டைச் செய்து கொண்டனர். அதன்படி ஒருவருக் கொருவர் நெருக்கடி காலத்தில் உதவ முன்வந்தனர். ஸ்பெயின் ஆசியெண்டோ ஒப்பந்தப்படி (Asiento Treaty) பிரிட்டனுக்கு அளித்திருந்த உரிமைகளைத் தடை செய்தது. இதையறியாத பிரிட்டிஷ் வாணிகர்கள் தொடர்ந்து வாணிகம் செய்து வந்தனர். அவர்களில் ஒருவரான ஜென்கின்ஸ் (Captain Jenkins) என்ற கப்பல் தலைவரை ஸ்பானிய காவலர்கள் கைது செய்து

துன்புறுத்தி அவரது காதினை வெட்டிவிட்டனர். ஜென்கின்ஸ் ஆற்ருமை தாங்காது அறுபட்ட காதினை ஒரு புட்டியில் எடுத்து வந்து பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் காட்டி, ஸ்பானியர் இழைக்கும் கொடுமைகளை விவரித்துச் சொன்னர். அதன்பேரில் பிரிட்டன் ஸ்பெயின்மீது போர் தொடுத்தது. இப் போருக்கு ஜென்கின்ஸ் காதுப்போர் (War of Jenkins Ear) என்று பெயர். விரைவில் இப் போர் ஐரோப்பியப் போரான ஆஸ்திரிய வாரிசுரிமைப் போருடன் இணைந்தது.

## (3) ஜார்ஜ் அரசரது போர் (King George's War) 1745 - 1748

ஆஸ்திரிய வாரிசுப்போர் குடியேற்ற நாடுகளின் வரலாற்றில் ஜார்ஜ் அரசரது போர் என்றழைக்கப்படும். ஐரோப்பாவில் ஆஸ்திரிய அரசர் ஆரும் சார்லஸ் இறந்ததும் பிற மன்னர்களது இசைவோடு அவரது மகள் மரியதெரிஸா முடிசூடினர். ஆஸ்திரியா ஒரு பெண்ணின் ஆட்சிக்குட்பட்டதால் சுற்றியிருந்த பிரஷ்யா, போன்ற நாடுகள் அப் பேரரசின் பகுதிகளைக் கைப்பற்ற முனைந்தன. பிரான்சு ஆஸ்திரியாவுக்குச் சொந்தமான நெதர்லாந்தைக் கைப்பற்றத் திட்ட மிட்டது. இதனைக் கண்ட மரியதெரிஸா பிறநாடுகளின் உதவியை நாடினர். இங்கிலாந்து அவருக்குதவ முன்வந்தது. எனவே ஐரோப்பாவில் ஒரு பக்கம் இங்கிலாந்தும் ஆஸ்திரியாவும், மற்றொரு பக்கம் பிரஷ்யா, பிரான்சு, ஸ்பெயின் ஆகிய நாடுகளும் போரிலிறங் கின. ஐரோப்பாவில் போர் மூண்டதும் வட அமெரிக்காவில் பிரிட்டிஷ் குடியேற்றங்களுக்கும் பிரெஞ்சுக் குடியேற்றங்களுக்கும் இடையே போர் மூண்டது.

### பிரிட்டிஷ் குடியேற்றங்களின் வெற்றி

கேப் பிரிட்டனிலிருந்த பிரெஞ்சு ஆளுநர் அக்கேடியாவைத் திருப்பிப் பெற வேண்டுமென்ற நோக்கத்தோடு, ஆனபாலிஸைக் (Annapolis) கைப்பற்றத் திட்டமிட்டு ஒரு படையை அனுப்பினர். ஆனல், மசாசூசெட்ஸ் ஆளுநரான ஷயர்லியும் (Shirley), ஏனைய அதிகாரிகளும் விழிப்புடனிருந்து பிரெஞ்சுக்காரரைத் தடுத்து நிறுத்தித் திருப்பியனுப்பிவிட்டனர்.

அடுத்து ஷயர்லியின் திட்டப்படி பிரெஞ்சுக்காரர்களின் வலிமை மிக்க கோட்டையான லூயிபர்க்கைக் கைப்பற்ற நியூ இங்கிலாந்து குடியேறிகள் ஆயத்தம் செய்தனர். மெயின் (Maine) மாவட்டத்தைச் சேர்ந்த வில்லியம் பெப்ரல் (William Pepperel) என்பவரின் தலைமை யில் 4300 பேர் அடங்கிய படை ஒன்று புறப்பட்டது. பிரிட்டிஷ் கடற்படைத் தலைவர் வாரன் (Warren) என்பவரும் மேற்கிந்தியத்

தீவுகளிலிருந்து மூன்று போர்க் கப்பல்களுடன் புறப்பட்டு வந்து சேர்ந்து கொண்டார். கடுந்தாக்குதலுக்குப் பிறகு பிரெஞ்சுக்காரர் சரணடைந்தனர். (ஜூன் 1745). லூயிபர்க் இழந்தமையைப் பொறுக்கமாட்டாத பிரெஞ்சுக்காரர் இரண்டு முறை திரும்பிப் பெற முயன்றும் தோல்வியே கண்டனர்.

## ஐய்லா சேப்பெல் உடன்படிக்கை (Treaty of Aiz-la-Chapelle)

கியூபெக்கையும், மான்ட்ரீலேயும் கைப்பற்ற 1747ஆம் ஆண்டுத் திட்டங்கள் வகுக்கப்பெற்றன. ஆனால், பிரிட்டிஷ் குடியேறிகளுக்குப் பிரிட்டனிலிருந்து எதிர்பார்த்த படையுதவி வராதுபோகவே தங்கள் திட்டத்தைக் கைவிட்டனர். இதனையறிந்த பிரெஞ்சுக்காரர்கள் அக்கேடியாவிலிருந்து நியூயார்க் வரையுள்ள எல்லைப்புற மக்களைத் தாக்கிக் கொள்ளையடிக்கலாயினர். இருப்பினும் எல்லைப்புற மக்கள் வீரத்தோடு அத்தாக்குதல்களைச் சமாளித்தனர். 1748ஆம் ஆண்டு ஐய்லா சேப்பெல் அமைதி உடன்படிக்கையின்படி போர் நிறுத்தப் பட்டது. அதன்படி பிரிட்டிஷாரும் பிரெஞ்சுக்காரரும் அவரவர் கைப்பற்றிய இடங்களைத் திருப்பித் தர ஒப்புக் கொண்டனர். ஆனால், இவ்வுடன்பாடு குடியேற்ற மக்களுக்குப் பெரும் ஏமாற்றத்தை யளித்தது. ஏனெனில், அவர்கள் அரும்பாடுபட்டுக் கைப்பற்றிய லூயிபர்க் கோட்டையைத் திருப்பித் தர நேரிட்டது. இருப்பினும் பிரிட்டன் ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் இவ்வுடன்படிக்கையினுல் பல நன்மைகளை அடைந்தது.

## ஏழாண்டுப்போர் (The Seven Year's War) 1756-1763

ஐய்லா சேப்பெல் உடன்படிக்கை ஐரோப்பாவிலும், குடியேற்றங் களிலும் எழுந்திருந்த சிக்கல்களைத் தீர்த்து வைக்காதிருந்தது. இச் சிக்கல்கள் நாளாவட்டத்தில் தீவிரமாகி 1756-ல் ஒரு போராய் உருவெடுத்தது. இப் போர் ஏழாண்டுகள் நடைபெற்றமையால் இஃது ஏழாண்டுப் போரென ஐரோப்பிய வரலாற்றிலும், குடியேற்றநாடு களின் வரலாற்றிலும் அழைக்கப்படுகிறது. முந்தைய போர்களெல் லாம் ஐரோப்பாவில் நிலவிய அரசியல் சூழ்நிலையின் காரணங்களால் மூண்டன. ஆனால், ஏழாண்டுப் போர் வட அமெரிக்காவில் ஆரம்பித்து பின்னர் ஐரோப்பாவிற்குப் பரவிற்று. இதுவே இப் போரின் சிறப் பாகும். ஐரோப்பாவில் இப் போரை ஆஸ்திரியா வாரிசுரிமைப் போரின் தொடர்ச்சியாகவே கருதலாம். மற்றும் ஐரோப்பிய வல்லரசுச் சமநிலை அரசியல் சூழ்நிலை மாறியமையே ஏழாண்டுப் போருக்கு அடிப்படைக் காரணமாகும்.

**போருக்கான காரணங்கள்**

வட அமெரிக்காவில் பிரிட்டிஷாரைக் கடலோரப் பகுதிகள் தவிர உட்பகுதிகளில் புகாதவாறு தடுத்து நிறுத்திவிட்டு, உட்பகுதியைத் தங்களுடைய முன்னேற்றத்துக்கே பயன்படுத்திக் கொள்ளலாம் என பிரெஞ்சுக்காரர் திட்டமிட்டனர். அலெகனி மலைத்தொடரும் பிரிட்டிஷாரை மேற்கே செல்லவொட்டாது தடுத்து நிற்கும் இயற்கை அரணாக அமைந்திருந்தது. எனவே, கடலுக்கும் மலைக்கும் இடையில் அடைபட வேண்டிய நிலையைக் கண்டு பிரிட்டிஷார் அஞ்சினர். லூசியானாப் பகுதியும் கனடாவும் ஒருங்கே இணைக்கப்பட்டுவிட்டால் தங்களுடைய முன்னேற்றத்தைத் தடைசெய்யும் வல்லரசாகப் பிரான்சு ஆகிவிடும் என்பதை உணர்ந்தனர். பிரெஞ்சுக்காரரும் தங்களுடைய திட்டங்களை வெகு வேகமாகச் செயலாக்கிக்கொண்டிருந் தனர்; ஏற்கெனவே செயின்ட் லாரென்ஸ் வளைகுடாவிலிருந்து மெக்ஸிகோ வளைகுடாவரை பல கோட்டைகளை எழுப்பியிருந்தனர். ஒகியோ (Ohio) நதிப்பள்ளத்தாக்கில் பிரிட்டிஷார் புகுவதைத் தடுக்க டியூகிஸ்னே (Duquesne) என்னுமிடத்தில் கோட்டையொன்றைக் கட்டினர். இதனை உடன் பிரிட்டிஷார் எதிர்த்தனர். வர்ஜீனியாவின் ஆளுநரான ராபர்ட் டின் விடி (Robert Din Widdie) என்பவர் ஜார்ஜ் வாஷிங்டன் என்ற இளந்தலைவரின்கீழ் பிரெஞ்சுக்காரருக்கு எச்சரிக்கை செய்யச் சொல்லி ஒரு படையை அனுப்பினர். ஆனால், அப் படை போதிய வலிமையற்றதாக இருந்தமையால் ஒன்றும் சாதிக்காது திரும்பிற்று.

**ஆல்பனி மாநாடு 1754 *(The Conference of Albany)***

ஒகியோ நதிப் பள்ளத்தாக்கின் மீதான உரிமை குறித்து ஒரு போர் நடந்தே தீரும் என்ற நிலை தெளிவாயிற்று. எனவே, பதின் மூன்று குடியேற்ற நாட்டுப் பிரதிநிதிகளும் நியூயார்க் குடியேற்றத்தி லுள்ள ஆல்பனி என்னுமிடத்தில் 1754-ல் கூடி ஒரு கூட்டமைப்பு ஏற்படுத்துவது பற்றியும், தங்களது பாதுகாப்பிற்காக ஒரு பொதுப் படை அமைப்பது பற்றியும் பேசினர். இம் மாநாட்டிற்கு மூல காரணமாக இருந்தவர் பென்சில்வேனியாவைச் சார்ந்த பெஞ்சமின் பிராங்கிளின் (Benjamin Franklin) என்பவராவார். இக்கூட்டத்திற்கு இராக்குவோ இந்தியத் தலைவர்களும் அழைக்கப்பட்டனர். குடியேற்றப் பிரதிநிதிகள் குடியேற்றக் கூட்டமைவு ஒன்றை நிறுவ முடிவு செய்தனர்.

குடியேற்றக் கூட்டமைவின் தலைவர் பிரிட்டிஷ் மன்னரது இசைவோடு நியமிக்கப்படல் வேண்டும். கூட்டமைவின் மன்றத்திற்கு டெலவர், ஜார்ஜியா நீங்கலாக ஏனைய பதினொரு குடியேற்றங்களி

லிருந்து 48 உறுப்பினர்கள் தேர்ந்தனுப்பப்படவேண்டும். இந்தியப் பழங்குடியினரைக் கட்டுப்படுத்தவும், காலாட்படை, கப்பற்படை ஆகியவை கொண்ட ஒரு கூட்டுப் படையைத் திரட்டிப் பராமரிக்கவும், பாதுகாப்பிற்காகக் கோட்டைகளைக் கட்டுவிக்கவும், வரி விதிப்பதற்கும் ஏனையவற்றிற்கும் வேண்டிய சட்டங்களை இயற்றவும் இக் கூட்டமைவுக்கு உரிமை தரப்பட்டது, கூட்டமைவின் தலைவருக்குத் தள்ளுரிமையும் தரப்பட்டது. இக் கூட்டமைவின் முடிவுகளுக்கெல்லாம் பிரிட்டிஷ் அரசர் இறுதி இசைவு தரவேண்டும்.

## குடியேற்றங்களின் ஒத்துழையாமை

குடியேற்றக் கூட்டமைவின் திட்டங்கள் பதின்மூன்று குடியேற்றங்களுக்கும் ஒப்புதலுக்காகப் படைக்கப் பெற்றது. குடியேற்றங்கள் முகமலர்ச்சியோடு இவ்வேற்பாட்டை வரவேற்காமல் காழ்ப்புணர்ச்சியோடு நோக்கின; கூட்டமைவுக்கு இசைந்தால் தங்களுடைய சுதந்திரத்துவம் பறிபோய்விடுமென்றும், அரசரது கட்டுப்பாடு அதிகரிக்குமென்றும் புதிய வரிகள் பல விதிக்கப்படுமென்றும் அஞ்சின. தாய்நாடாகிய பிரிட்டனும் அத்தகையதொரு கூட்டமைவைச் சீரிய முறையில் நிறுவ முயற்சி செய்யவில்லை.

இங்கிலாந்திலிருந்து தளபதி பிரடாக் (General Braddock) என்பவரின் தலைமையில் ஒரு படை வந்து ஓகியோ பள்ளத்தாக்கைக் கைப்பற்ற முயற்சித்தது. ஆனால், பிரெஞ்சுப் படையினர் பிரிட்டிஷாரை எளிதில் தோற்கடித்தனர். பிரடாக்கே போரில் கொல்லப்பட்டார். நியூ இங்கிலாந்தை நோக்கிப் பிரெஞ்சுக்காரர் படையெடுத்தனர். நியூ இங்கிலாந்து குடியேறிகள், பிரெஞ்சுக்காரரை ஹட்ஸன் பள்ளத்தாக்கில் நுழையவெட்டாது தடுத்து நிறுத்தினர். இருப்பினும் எல்லைப்புற மக்களுக்குப் பிரெஞ்சுக்காரரும், இந்தியர்களும் ஓயாது தொல்லை கொடுத்து வந்தனர். பிரெஞ்சுக்காரர், பிரிட்டிஷ்குடியேற்றங்களை எளிதில் கைப்பற்றி விடுவரோ என்ற நிலை ஏற்பட்டது.

## இருதரப்பாரின் வலிமை

ஏழாண்டுப் போரின் துவக்கத்தில் பிரெஞ்சுக்காரருக்குப் பல அனுகூலங்கள் இருந்தன. பிரெஞ்சுக்காரர்கள் வெறும் குடியேறிகளாக வாழவில்லை. பிரான்சு தன் குடியேற்றங்களைக் கடுமையான கட்டுப்பாட்டில் வைத்திருந்தது. இராணுவப் பயிற்சியும் சிறப்புற அளிக்கப்பட்டிருந்தது. போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்த பல இடங்களில் கோட்டைகள் கட்டியிருந்தனர். இந்தியப் பழங்குடியினரது ஆதரவும் பிரெஞ்சுக்காரருக்குக் கிட்டியது. ஆனால்

பிரெஞ்சுக் குடியேற்றங்கள் பெரும் நிலப் பகுதியில் சிதறுண்டு கிடந்தன. அவர்களது பொருளாதாரமும் குறுமென்மயிர்த்தோல் வாணிகத்தை மட்டுமே அடிப்படையாகக் கொண்டிருந்தது. தாய் நாடான பிரான்சில் வலிமை மிக்க ஆட்சி இல்லாதிருந்தது.

பிரிட்டிஷாருக்கும் பிரெஞ்சுக்காரரைக் காட்டிலும் சில அனுகூலங்களிருந்தன. பிரிட்டிஷ் குடியேற்றங்களின் மக்கள்தொகை பிரெஞ்சுக் குடியேற்ற மக்கள் தொகையைப்போல் பதினைந்து மடங்கு கூடுதலாயிருந்தது. பதின்மூன்று குடியேற்றங்களும் நன்முறையில் ஒருங்கே பிணைக்கப்பட்டிருந்தன. பிரிட்டிஷ்குடியேற்றங்கள் அட்லாண்டிக் கரையோரப் பகுதியில் இருந்தமையால் கடல் போக்குவரத்தைக் கட்டுப்படுத்த முடிந்தது. பிரிட்டிஷாரிடம் வலிமை மிக்க கப்பற்படையுமிருந்தது. மற்றும் அவர்களுக்கு இராக்குவோ இந்தியர்களுடைய ஆதரவும் ஒத்துழைப்பும் கிட்டியது. பிரிட்டிஷ் குடியேற்றங்களில் பலவகைப்பட்ட மூலப் பொருள்கள் ஏராளமாகக் கிடைத்தமையால் அவர்களுடைய பொருளாதாரம் வளம் பெற்றதாக அமைந்திருந்தது.

### ஆரம்ப ஆண்டுகள்

பிரிட்டிஷ் குடியேற்றங்கள் பிரெஞ்சுக்காரரைக் காட்டிலும் பல அனுகூலங்களைப் பெற்றிருந்தும் ஏழாண்டுப் போரின் முதலிரண்டு ஆண்டுகளில் தொடர்ந்து பல இடங்களிலும் தோல்வியே அடைந்தனர். 1756ஆம் ஆண்டு மான்ட்காம் (Montcalm) என்ற பிரெஞ்சுத் தளபதி பிரிட்டிஷ் துருப்புகளைத் தோற்கடித்து ஆஸ்விகோ (Fort Oswego) கோட்டையைக் கைப்பற்றினர். அடுத்து மான்ட்காம், வில்லியம் ஹென்றி கோட்டையை 1757ஆம் ஆண்டு கைப்பற்றினர். அதே ஆண்டு பிரெஞ்சுக்காரரும், இந்தியப் பழங்குடியினரும் சேர்ந்து நியூயார்க் குடியேற்றத்தைத் தாக்கிப் பலரை நாடு கடத்திச் சென்றனர். 1757ஆம் ஆண்டின் இறுதியில் பிரெஞ்சுக்காரர் வட பகுதியில் உச்ச நிலையிலிருந்தனர்.

### வில்லியம் பிட்டின் தலைமை

போரின்-முதலிரண்டு ஆண்டுகளில் பிரிட்டனுக்குத் தொடர்ந்து ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் தோல்விகள் பல ஏற்பட்டன. அதற்கு முக்கிய காரணம் பிரிட்டனின் திறமையற்ற தலைமை அமைச்சரான நியூகாசில் பெருமகனும் (Duke of New Castle) அவர் தேர்ந்தெடுத்த வயதான தளபதிகளுமேயாவர். 1757ஆம் ஆண்டில் பிரிட்டனில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களின் விளைவாக வில்லியம் பிட் (William Pitt) போரினை நடத்தும் பொறுப்பையேற்றார். பிட்

உடனே நன்முறையில் இராணுவத்தையும், வெளிநாட்டுக் கொள்கையையும் கட்டுப்படுத்தி செயற்படுத்த முற்பட்டார்; தமது நாட்டுப்பற்றும், கவர்ச்சிமிக்கதுமான சொற்பொழிவுகளால் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் ஆதரவையும், பிரிட்டிஷாரின் ஊக்கத்தையும், குடியேற்றங்களின் ஒத்துழைப்பையும் பேரளவில் பெற்றார்; தரம் மிக்க தளபதிகளையும் துருப்புக்களையும் குடியேற்றங்களுக்கு அனுப்பினர்; கடற்படை மூலந்தான் எதிரிநாடுகளைத் தோற்கடிக்க முடியும் என்பதையுணர்ந்து பிட் வலிமை மிக்கதொரு கடற்படையை உருவாக்கினர்; குடியேற்றங்களிலும் வீரர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு வேண்டிய படைக்கலங்கள் தந்து சிறந்ததொரு படையை அமைத்தார். பிரிட்டிஷ் பாராளுமன்றமும் பிட்டின் வேண்டுகோளுக்கிணங்க ஏராளமான நிதியுதவி மனமுவந்து அளித்தது. பிரெஞ்சுக் குடியேற்றங்களோடு நடைபெற்று வந்த கள்ளக் கடத்தல் வாணிகத்தை அடியோடு ஒழிக்க பிட், நாவாய்ச் சட்டங்களைச் சீரிய முறையில் செயற்படுத்தினர். இம் முயற்சிகளால் பிட், பிரிட்டனுக்கு வெற்றிமேல் வெற்றி தேடித்தந்தார்.

### வெற்றி ஆண்டுகள்

பிரிட்டிஷ் தளபதிகள் ஆம்ஹெர்ஸ்ட் (Amherst), உல்ப் (Wolfe) ஆகியோரின் தலைமையில் வலிமைமிக்கதொரு படை லூயிபர்க்கை 1758-ல் கைப்பற்றியது. அடுத்து ஜான் போர்ப்ஸ் (John Forbes) என்ற ஆங்கிலத் தளபதி டியூகிஸ்னே கோட்டையைக் கைப்பற்றினர். வில்லியம் பிட்டினைப் பெருமைப்படுத்தும் வகையில் அதன் பெயர் பிட்ஸ்பர்க் (Pittsburg) என மாற்றப்பட்டது. இவ்வெற்றியால் ஓகியோ பள்ளத்தாக்கு முழுவதும் ஆங்கிலேயர் வசமாயிற்று. மற்றொரு படை, தளபதி பிராட்ஸ்டிரீட் (Bradstreet) தலைமையில் ஆஸ்விகோ கோட்டையையும், பிரான்டினக் கோட்டையையும் பிரெஞ்சுக்காரரிடமிருந்து கைப்பற்றியது. இறுதியாக, கியூபெக்கைக் கைப்பற்றுவதற்கான பெரும் போரிலும் பிரிட்டிஷ் தளபதி உல்ப், பிரெஞ்சுத் தளபதி மான்ட்காமின் படைகளைத் தோற்கடித்தார். இரு தளபதிகளும் இப் போரில் உயிர் நீத்தனர். கியூபெக்கின் வீழ்ச்சிக்குப் பிறகு 1760-ல் பிரிட்டிஷார் எளிதில் மான்ட்ரீலையும் கைப்பற்றினர். இதனல் கனடா முழுவதும் ஆங்கிலேயர் வசமாயிற்று.

### பாரிஸ் உடன்படிக்கை (1763)

பிரான்சும், அதனுடன் கூடியிருந்த ஸ்பெயின், ஆஸ்திரியா ஆகிய நாடுகளும் இப் போரில் பல இடங்களிலும் தோற்கடிக்கப்பட்டன. எனவே 1762-ல் அமைதிக்கான பேச்சுகள் ஆரம்பிக்கப்பட்டு

1763-ல் ஓர் உடன்பாடு கையெழுத்திடப்பட்டது. அது பாரிஸ் உடன்படிக்கை எனப்படும். இவ்வுடன்படிக்கையின்படி பிரிட்டன் வட அமெரிக்காவில் பிரான்சிடமிருந்து கனடா முழுவதையும், மிசிசிபி நதிக்குக் கிழக்கேயிருந்த நிலப்பகுதியையும் பெற்றது. பிரான்சு எஞ்சிய பகுதிகளை ஸ்பெயினுக்கு அளித்தது. எனவே, பிரான்சு வட அமெரிக்காவில் நிறுவியிருந்த குடியேற்றங்கள் அனைத்தையும் இழந்தது. பிரிட்டிஷ் பேரரசின் நிலப்பரப்பு பன்மடங்காகப் பெருகிற்று.

**பிரிட்டிஷ் வெற்றியின் விளைவுகள்**

**பிரெஞ்சுக்காரர் அச்சம் நீங்கிற்று :** பாரிஸ் உடன் படிக்கையின்படி பிரான்சு தனது குடியேற்றங்கள் அனைத்தையும் வட அமெரிக்காவில் இழந்தது. இதனால் பிரான்சும் அதனைச் சார்ந்த இந்தியப் பழங்குடியினரும் பிரிட்டிஷ் குடியேற்றங்களுக்கு இழைத்து வந்த தீங்குகள் முற்றுப் பெற்றன. பிரிட்டிஷ் குடியேறிகள் அச்சமின்றி வாழ முற்பட்டனர். மற்றும் தாய்நாடாகிய பிரிட்டனின் பாதுகாப்பை நாடவேண்டியதில்லை என்ற எண்ணமும் குடியேறிகளிடையே ஏற்பட்டது.

**குடியேற்றங்களிடையே ஒத்துழைப்பு :** பிரான்சுடன் நிகழ்ந்த போர்களில் பல குடியேற்ற நாடுகளின் தலைவர்களும் தங்களுக்குள்ளே நிலவ வேண்டிய ஒத்துழைப்பின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்திருந்தனர்; பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பேரரசுக் கொள்கையில் இருந்த குறைபாடுகளைக் கண்டனர்; தங்களது பாதுகாப்பிற்காகவும், இந்தியர்களோடு நட்புறவு கொள்வதற்கும், வாணிகச் சிக்கல்களைத் தீர்த்துவைக்கவும் குடியேற்றங்கள் ஒத்துழைத்தால் நன்மைகள் பல பெறலாம் என்றும் உணர்ந்தனர். அதற்காக ஆல்பனி மாநாடு கூட்டப்பட்டது. ஆனால், பிரிட்டிஷ் அரசும், சில குடியேற்றங்களும், அம் மாநாடு உருவாக்கிய கூட்டமைவுத் திட்டங்களை வரவேற்கவில்லை. இருப்பினும் போரின்போதும், போருக்குப் பிறகும் ஒத்துழைத்தால் பலன் கிட்டும் என்பதை அனைவரும் அறிந்தனர்.

**வரிகள் அதிகரிப்பு:** ஏழாண்டுப் போருக்காகப் பிரிட்டன் பேரளவில் பணம் செலவிட்டது. பிரிட்டனின் தேசியக் கடன் 130 மில்லியன் பவுனுகை உயர்ந்தது. ஏற்கனவே பிரிட்டிஷ் மக்கள் வரிச் சுமை தாளாத நிலையிலிருந்தனர். இப் போரினால் வட அமெரிக்காவில் பிரிட்டன் கனடா முழுவதையும் பெற்றதால் பெரியதொரு நிலப் பரப்பைக் காக்கப் பத்தாயிரம் வீரர்களுக்கும் மேலான படையை அங்கு நிலைநிறுத்த வேண்டியதாயிற்று. அப் படையின் பராமரிப்புச்

செலவினைக் குடியேறிகளும் பகிர்ந்துக்கொள்ள வேண்டுமென ஆங்கிலேயர் நினைத்தனர். எனவே, பிரிட்டிஷ் பாராளுமன்றம் குடியேற்றங்களின் வாணிகத்தை மும்முரமாகக் கட்டுப்படுத்த ஆரம்பித்ததோடு புதிய வரிகளையும் விதிக்கலாயிற்று. இதனைக் குடியேறிகள் எதிர்க்க ஆரம்பித்தனர்.

**எல்லைக்கோடு அறிவிப்பு :** (Proclamation Line of 1763) பென்சில்வேனியா, வர்ஜீனியா, வட, தென்கரோலினாக்களிலிருந்த மக்கள் நிலப்பசி கொண்டிருந்தனர்; ஏழாண்டுப் போர் முடிவுற்றதும் மேற்கே பெருங் கூட்டமாகச் சென்று குடியேற முற்பட்டனர். சில நில விற்பனை நிறுவனங்களும் தோன்றலாயின. இதனைக் கேள்வி யுற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் கட்டுப்பாட்டுக்கும் பாதுகாப்புக்குமான ஒரு புதுக்கொள்கையை உருவாக்கியது; ஒரே நிலத்தில் பலர் உரிமை கொண்டாடும் குழப்பத்தைத் தவிர்க்கும் பொருட்டு 1763-ல் பிரிட்டிஷ் அரசு "அப்பலாச்சியன் மலைகளின் சிகர வரிக்கப்பால் எவரும் குடியேறக் கூடாது" என ஓர் அறிவிப்பு விடுத்தது; ஏற்கனவே, குடியேறியவர்களும் வெளியேற வேண்டுமெனச் சொல்லப் பட்டது. இதனை அமெரிக்கக் குடியேறிகள் கடுமையாக எதிர்த்தனர். இத்தனை நாள் பிரெஞ்சுக்காரர் மேற்கே செல்லவொட்டாது தடையாக இருந்தனர். இப்பொழுது தாய்நாடான பிரிட்டனே தடைவிதித்தது.

**குடியேற்றங்களில் உரிமைத் தாகம் :** பதின்மூன்று பிரிட்டிஷ் குடியேற்றங்களும் துவக்கத்திலிருந்தே சுயஆட்சி நிறுவனங்களைப் பெற்று உரிமையோடு தங்களைத் தங்களே ஆண்டு வந்தன; தங்களுடைய உள்நாட்டு விவகாரங்களில் பிரிட்டிஷ் பாராளுமன்றம் தலையிடுவதை விரும்பவில்லை. குடியேற்றச் சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்களுக்குப் பிரிட்டிஷ் பாராளுமன்றம் இறுதி இசைவை அளிக்கவேண்டும் என்ற நியதி இருந்து வந்தது. பெரும்பாலும் குடியேற்ற சட்டமன்றங்கள் இயற்றியச் சட்டங்கள் அனைத்தையும் பிரிட்டிஷ் பாராளுமன்றம் ஏற்றுக்கொண்டது. குடியேற்றங்களைக் கட்டுப்படுத்தும் வகையில் சில சட்டங்களைப் பாராளுமன்றம் இயற்றியது. ஆனால், அவற்றைக் குடியேற்றங்கள் பொருட்படுத்தாது, செயல்முறைக்குக் கொண்டு வரவில்லை. இதனைப் பாராளுமன்றமும் கவனியாது விட்டு வந்தது; ஆனால், ஏழாண்டுப் போரின் போதும், 1763-க்குப் பிறகு பாராளுமன்றம் குடியேற்றச் சட்டங்களைச் சீரிய முறையில் கட்டுப்படுத்த முற்பட்டது. குறிப்பாக குடியேற்ற நாடுகளின் வாணிகத்தைக் கட்டுப்படுத்திப் பல, புதிய வரிகளை விதிக்கலாயிற்று. இவற்றை யெல்லாம் குடியேறிகள் எதிர்க்கும் துணிவு பெற்றனர்.

# 4. குடியேற்றங்களில் மக்களின் எண்ணங்களும் வாழ்க்கையும்

**குடியேற்ற மக்கள் :**

பதினேழாம் நூற்றாண்டின் தொடக்க காலமுதல், உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், மக்கள் கூட்டம்கூட்டமாய் வந்து அமெரிக்காவில் குடிபுகுந்தனர். குடிபுக வருபவர்களையெல்லாம் ஏற்றுக் கொள்ளும் சிறந்ததொரு குடியேற்ற நாடாக — பெரியதொரு உருக்குக் குகையாக (Meltingpot)—அமெரிக்கா இருந்தது. இந் நிலையில் 'அமெரிக்கன்' என அழைக்கப்பட்ட முதல் மனிதனே ஒரு வந்தேறியாகும்.

ஐரோப்பிய நாடுகளிலிருந்து வந்து, அமெரிக்காவின் அட்லாண்டிக் கடலோரப் பகுதிகளில் குடிபுகுந்து, பிரிட்டிஷ் பேரரசுக்கு உட்பட்டு, அவதியுற்று, இறுதியில் அதனுடன் போரிட்டு, விடுதலை பெற்ற காலத்திற்கு முந்தைய காலமே குடியேற்றக் காலமாகும். இந்தக் குடியேற்றக் காலத்தில் வாழ்ந்த மக்களின் எண்ணங்களும், வாழ்க்கை முறைகளும், பின்னாளில், விடுதலைக்குப்பின் உருவான அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குப் பெரிதும் பயன் தந்தன. வேறு வகையில் சொல்வதானால் பிற்காலத்தில் உருவான "அமெரிக்க நாகரிகத்திற்கு" அவைகளே அடிப்படையாயின.

பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில், ஐரோப்பிய நாடுகளில் நிலவிய அரசியலில், சமூகம், பொருளாதாரம், மதம் ஆகியவைகளோடு கொண்ட முரண்பாடுகள் வெறுப்பு, சலிப்பு, விரக்தி ஆகியவைகள் காரணமாக, அவைகளை விட்டு ஒதுங்கி வாழ நினைத்தவர்கள், தங்களுடைய சுய விருப்பத்தாலும், தூண்டுதலாலும் மற்றவர்களின் துரத்துதலாலும் அமெரிக்கக் குடியேற்றங்களுக்கு

வந்தேறினர். அமெரிக்கச் சூழ்நிலேயும், வளமும், தங்கள் விரும்புகிற புதுவாழ்விற்கும், உரிமை வேட்கைக்கும் ஏற்றதாயிருக்கும் என்கிற நம்பிக்கையில் வந்தேறினர்.

பதினேழாம் நூற்றுண்டில், அமெரிக்காவில் குடியேறியவர்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் பெருகியது. அதுபோலவே குடியேறிகள் விட்டுவந்த நாடுகளின் எண்ணிக்கையும் பெருகியது. இந் நூற்றுண்டில், டச்சு, ஜெர்மன், ஸ்வீடன், பிரான்சு ஆகிய நாடுகளிலிருந்து வந்தவர்களைவிட, இங்கிலாந்திலிருந்து வந்தவர்களின் எண்ணிக்கை அதிகமாயிருந்தது. ஆனல், அடுத்த நூற்றுண்டில்—பதினெட்டாம் நூற்றுண்டில் — இங்கிலாந்திலிருந்து வந்தவர்களைவிட ஜெர்மனி, ஸ்காட்லாந்து, அயர்லாந்து ஆகிய நாடுகளிலிருந்து வந்து குடியேறியவர்களின் எண்ணிக்கை மிகுந்திருந்தது.

மதத்திணிப்பு, போர்கள் ஆகியவை காரணமாக ஜெர்மனியை விட்டு, வெளியேறியவர்கள் பென்சில்வேனியா, வர்ஜீனியா ஆகிய குடியேற்றங்களின் உள்பகுதிகளில் குடிபுகுந்தனர். ஸ்காட்லாந்தையும், அயர்லாந்தையும், பொருளாதாரச் சீர்கேடு, மதஅடக்குமுறை ஆகியவை காரணமாக வெறுத்து வெளியேறியவர்கள் பென்சில்வேனியாவிலிருந்து தென்கரோலினு வரையிலுமான எல்லைப் பகுதிகளில் பரவலாகக் குடியேறினர். பொதுவாக இவர்களின் குடியேற்றம் காரணமாக ஏற்பட்ட விளைவுகள் இரண்டாகும். முதலாவதாக, எல்லைப்புறப் பகுதிகள் செப்பனிடப்பட்டுத் திருத்தப்பட்டன. இரண்டாவதாக, 'அமெரிக்க நாகரிகம்' எனத் தனியே ஒரு நாகரிகம் உருவாவதற்கு இவர்கள் துணையாயிருந்தனர்.

நீக்ரோ அடிமைகளும், குடியேற்றங்களுக்குக் கொண்டு வரப்பட்டனர். பதினெட்டாம் நூற்றுண்டில், சுமார் ஐந்து இலட்சம் நீக்ரோ அடிமைகள் தென்பகுதி குடியேற்றங்களில் இறக்குமதி செய்யப்பட்டனர். அடிமைமுறை எல்லாக் குடியேற்றங்களிலும் நிலவி வந்த போதிலும், தென்பகுதி குடியேற்றங்களில் அடிமைமுறைக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம், வடபகுதி குடியேற்றங்களில் அளிக்கப்படவில்லை. தென்பகுதிகளில், அடிமைமுறைக்கு, அதிக அளவில் ஆதரவு, இருந்ததற்குக் காரணம், அப் பகுதியின் விவசாயத்திற்கு, குறிப்பாக பருத்தி விளைச்சலுக்கு, அடிமைகள் தேவைப்பட்டதேயாகும். வடபகுதிகளில் நிலவிய தொழில் முறைக்கு அடிமைகள் அதிகம் பயன்படவில்லை. இதன் காரணமாக வடபகுதிகளில், அடிமை ஆதரவு இல்லை ; மாருக எதிர்ப்புகள் இருந்தன.

பொதுவாக, அடிமைகள் அனைவரும் அவல நிலையில் கிடந்து அவதியுற்றனர். ஆப்பிரிக்கப் பகுதிகளில் அவர்கள் விலைக்கு வாங்கப்பட்டு, குடியேற்றங்களில் விற்பனைக்காக, கப்பல்களில்

ஏராளமான அளவில் திணிக்கப்பட்டு, ஏற்றுமதி செய்யப்பட்டு அனுப்பியபோது, போதிய உணவு, மருத்துவம், சுகாதாரம் இன்மை காரணமாக, நோயுற்றுப் பலர் கப்பல்களிலேயே மடிந்தனர். பின்னர், குடியேற்றங்களில், அவர்களை விலைக்கு வாங்கிய எஜமானர் களின் குணத்திற்கேற்ப அவர்களின் நிலையும் இருந்தது. நற்கல்வி யும், நாகரிகமும் கொண்ட எஜமானவர்கள், அடிமைகளை அன்போடும், கருணையோடும் காத்தனர். ஈரமற்ற, இரக்கமற்ற கொடிய முதலாளி களிடம் சிக்கிக் கொண்ட அடிமைகள் அல்லலுற்று மடிந்தனர். அவர்களுக்கு அளிக்கப்பட்ட உணவு தங்குவதற்கு ஒதுக்கப்பட்ட இடம், நோய்வந்தபோது கொடுக்கப்பட்ட மருத்துவ வசதி ஆகிய எல்லாமே மிக மோசமாயிருந்தன.

## குடியேற்ற சமூகம்

குடியேற்றங்களுக்கு முதன்முதலாக வந்தவர்கள், மிகச் சாதாரணமானவர்கள்; ஐரோப்பிய சமூக அமைப்பில், தாழ்த்தப் பட்டவர்கள்; பின்னுக்குத் தள்ளப்பட்டவர்கள்; ஆதரவற்ற நிலையி லிருந்தவர்கள். இவர்களில் சிலர், தங்களின் வழிச்செலவு, வாழ்க்கைச்செலவு ஆகியவைகளைப் பெறுவதற்காக, ஒப்பந்த வேலைக் காரர்களாய் அமெரிக்கக் குடியேற்றங்களுக்கு வந்தனர். வேறு சிலர், அமெரிக்கக் குடியேற்றங்களில் கிடைக்கும் வசதிகளையும் வாய்ப்பு களையும் நம்பி, தாய்நாட்டில் அவர்களுக்கு இருந்த சொற்ப சொத்துக் களையும் உடைமைகளையும் விற்று அதன்மூலம் கிடைத்த சிறிய தொகைகளுடன் வந்து சேர்ந்தனர். இன்னும் சிலர் ஐரோப்பாவில், செல்வமும், செல்வாக்கும் பெற்று நல்ல நிலையில் இருந்தும்கூட அவைகளையெல்லாம் உதறி எறிந்துவிட்டு, அமெரிக்காவில் குடியேறினர். இவர்களின் குணம், கொள்கைகள், மதிப்பீடுகள் ஆகியவைகள் அவர்கள் வாழ்ந்த சமூகத்திற்கு முரண்பட்டுப் போன தால், இவர்கள் எல்லாவற்றையும் உதறிவிட்டு, தனிமனிதர்களாய், பராரிகளாய், வந்து சேர்ந்தனர். சில பெருங்குடி மக்களும் — பென்சில்வேனியாவை நிறுவிய பென் போன்றவர்கள் — சிறிய அளவில் வந்து குடியேறினர்.

குடியேற்றங்களில், எல்லா வகையான மக்களும் மொழியும், மதமும், தொழிலும், மரபும் இன்னபிறவைபும் இருந்ததால், தொடக்ககாலமுதலே அவை தனித் தன்மையுடனும், ஒன்றி லிருந்து மற்றொன்று மாறுபட்டும் இருந்து வந்தன. அவை களில் 'ஐரோப்பியத்தனம்' வஞ்சனையின்றி பிரதிபலித்தது. மேலும் வந்தேறியவர்கள், பலவகையான பின்னணிகளைக் கொண்டிருந் ததில், ஒருவரிலிருந்து மற்றொருவர் வேறுபட்டு இருந்தபோதிலும், பாறை போன்ற தன்னம்பிக்கையையும், தனித்தன்மையையும் பெற்றிருந்ததில் அனைவரும் ஒன்றுபட்டு இருந்தனர்; அமெரிக்கச்

சூழ்நிலைகளையும் வாய்ப்புகளையும் பயன்படுத்திக் கொண்டு, புது வாழ்வு பெறுவதில் ஒன்றுபட்டிருந்தனர்.

காலப்போக்கில், சுயமுயற்சி, உழைப்பு ஆகியவைகளின் மூலமாகச் செல்வத்தையும் செல்வாக்கையும் வேகமாகச் சேர்த்தனர். கொஞ்சம் வெளிப்படையாகச் சொல்வதனால், ஐரோப்பிய சமுதாய அமைப்பில், புறக்கணிக்கப்பட்ட நிலையில், கீழ்த்தட்டில் இருந்து அல்லலுற்றவர்கள், அமெரிக்கக் குடியேற்ற சமுதாயத்தில் மேல் தட்டு மக்களாய் உயர்ந்தனர். இவ்விதமாக, தனிமனிதர்கள் பலர் வளர்ந்து நிலையில் உயர்ந்ததன் காரணமாக, அமெரிக்கச் சமூகம் ஒட்டம் உள்ளதாய், மாறும் தன்மை கொண்டதாய், நெகிழக் கூடிய தாய் ஆனது.

அமெரிக்க குடியேற்றங்களில் மேல்தட்டு மக்களாய், ஆளுநர்கள், அதிகாரிகள், நீதிபதிகள், சமய குருமார்கள், செல்வந்தர்கள், ஆலை முதலாளிகள், பெரிய பண்ணையாளர்கள், தரகர்கள் முதலானோர் இருந்தனர். இவர்கள், தங்களுடைய பழக்கவழக்கங்களை ஐரோப்பிய—குறிப்பாக இங்கிலாந்தின்—பிரபுத்துவ மரபுகளுக்கேற்ப மாற்றிக்கொண்டு சாதாரணமானவர்களிடமிருந்து விலகியும், வேறு பட்டும் இருந்தனர்.

இவர்களுக்கு அடுத்ததாக, சமூக அமைப்பில் இடம் பெற்றிருந்த வர்கள், வடபகுதி வியாபாரிகள், தென்பகுதி நிலக்கிழார்கள், மத்திய பகுதி நில உடைமையாளர்கள் ஆவர். இவர்கள் எண்ணிக்கையில் மிகுந்து இருந்ததோடன்றி அரசியலிலும், ஆட்சியிலும், நிருவாகத்திலும் செல்வாக்கும் முக்கியத்துவமும் பெற்றிருந்தனர். இவர்கள், குடியேற்ற சட்ட மன்றங்களில், எண்ணிக்கையில் பெரும்பான்மையுடன் இருந்து கொண்டு, அவைகளைக் கட்டுப்படுத்தினர். எல்லாவற்றிற்கும் மேலாக, குடியேற்றங்களின் பொருளாதார தன்மைகளையும் போக்கு களையும் பெருமளவில் தன்வயப்படுத்தி வைத்திருந்தனர். இதன் காரணமாக, இவர்கள் அந்தந்த வட்டாரத்தின் 'உள்நாட்டுப் பிரமுகர் களாய்' இருந்து வந்தனர்.

இவர்களுக்கு அடுத்த நிலையில், சமூக அமைப்பில் இருந்தவர்கள், சாதாரண குடியானவர்களும், ஆலைத் தொழிலாளிகளும் ஒப்பந்த வேலையாள்களும், அடிமைகளும் ஆவர். குடியேற்றங்களின் மக்கள் தொகையில் இவர்களின் எண்ணிக்கையே அதிகம். இவர்களின் குறைவான வருவாய் காரணமாக, வசதியில்லாத பகுதிகளில் வாழ்ந்து கொண்டும், மலிவான ஆடைகளை உடுத்துக்கொண்டும், எளிய உணவுகளை உட்கொண்டும் பாமரர்களாய் வாழ்ந்திருந்தனர். இவர்கள் அனுபவித்த அரசியல் சலுகைகளும் குறைவு. திருச்சபை களில் இவர்கள் பெற்ற கவனிப்பும் குறைவு. இவர்களின் இந்த

தாழ்ந்த நிலை நீங்கி, சமுதாயத்தில் உயர, அமெரிக்க இயற்கை வளமும், நிலமும் உதவும் என்ற நம்பிக்கையில் வாழ்ந்திருந்தனர்.

இவ்விதமாக அமெரிக்கச் சமூக அமைப்பு ஐரோப்பிய சமூக அமைப்பிற்கு ஏற்ப, அமைந்திருந்தாலும், அதைப்போல, இறுக்க மானதாகவும், கொடியதாகவும், அர்த்தமுள்ளதாகவும் இல்லை ; அதாவது, அமெரிக்கச் சமூகஅமைப்பு ஐரோப்பிய பாணியில் இருக்க நேர்ந்ததேயொழிய அதன் மறுபதிப்பாக மாறிவிடவில்லை, என்பது வலியுறுத்தப்படவேண்டிய கருத்தாகும்.

இவ்விதமாக, தனித்தனியாய் அமைந்திருந்த சமுதாயத்தட்டுகள் பின்னுளில் தோன்றிய பொதுவான அரசியல், ஆட்சி, கல்வி, இலக்கியம், செய்தித்தாள்கள், அறிவியல் கண்டுபிடிப்புகள் போன்ற வைகளால் நெருக்கமாய்ப் பிணைக்கப்பட்டு, வேற்றுமைகள் மறைந்து இணைந்தன. இவ்வாறு இணைந்து ஒன்றுபட்டதினுல் உடனடியாக ஒரு பெரிய நாடு உருவாகிவிடவில்லை ; மாருக, சிறுசிறு மாநிலங்கள் உருவாயின. ஆனுல், உரிமைப்போருக்குப் பின்னர், கடுமையான முயற்சிகளின் விளைவாக, இம் மாநிலங்கள் இணைந்து அமெரிக்க ஐக்கிய நாட்டினை ஏற்படுத்தின.

**வாழ்க்கை முறை :**

குடியேற்ற மக்களின் வாழ்க்கை முறையானது, தனிமை நிரம்பிய தாகவும், திட்டுத்திட்டாகவும், தொடர்பற்றதாகவும், வட்டாரத்தன்மை யுடையதாயும், நாட்டுப்புறத் தன்மைகள் கொண்டதாயும் இருந்தது. இதற்குக் காரணம், முதலாவதாக, அவரவர்களின் பண்பாட்டுப் பின்னணிகளும், அமெரிக்காவின் நில அமைப்புமேயாகும். இரண்டா வதாக, நல்ல சாலைகளும், வாகனங்களும், சில முக்கிய, அதிகமாக தேவைப்படுகிற நகரங்களை இணைப்பதற்கு மட்டுமே இருந்தன. கரடு முரடான சாலைகளில் குதிரைகளால் இழுக்கப்பட்ட வசதியற்ற வாகனங்களே இருந்தன. இவைகளும் எப்போதாவது ஒரு முறை மட்டுமே வந்தன. இதன் காரணமாக நீண்ட இடைவெளிகளுடன் கூடிய மிகக் குறுகிய பயணங்களும் அளவான, அவசியமான தொடர்பு களும் மட்டுமே குடியேற்ற மக்களிடம் இருந்தன. மூன்ருவதாக, செய்தித் தொடர்பு வசதிகள் வளர்ச்சியுருத நிலை. இதன் காரணமாக, குடியேற்ற மக்களிடையே இருந்த தொடர்புகள் தேசிய அளவில் விரிந்து பரந்து நட்பும் நெருக்கமும் உடையதாயில்லாமல் தனிமைப் பட்டதாயும், உதிரிகளாயுமிருந்தன. அதோடுகூட மிகக்குறுகிய அளவில் ஒருவரைஒருவர் புரிந்து கொண்டும் பழகிக் கொண்டும் நாட்டுப்புறத்தன்மைகளுடன், வட்டாரரீதியில் குடியேற்றவாசிகள் வாழ்ந்திருந்தனர்.

குடியேற்ற மக்களின் வீடுகள், பெரும்பாலும் சிறிய அளவில் கவர்ச்சியற்றுக் கட்டப்பட்டிருந்தன. ஒரேயொரு அறையைக் கொண்ட வீடுகளே எண்ணிக்கையில் மிகுந்திருந்தன. ரொட்டி, மக்காச் சோளக்கஞ்சி, பன்றியிறைச்சி ஆகியவைகள் முக்கிய உணவு ஆகும். மதுவகைகள் முக்கிய நாள்களில் அருந்தப்பட்டன. தண்ணீர்க் கிணறுகள் இருந்தன. அவைகளிலிருந்து மொள்ளப்பட்டத் தண்ணீரில் அசுத்தமும் நோய்க்கிருமிகளும் நிரம்பியிருந்தன. இவைகளே பல நோய்களுக்குக் காரணமாயிருந்தன. நோய்களைப்பற்றிய அறியாமையும், மருத்துவ வசதியின்மையும் மக்களின் அழிவிற்குக் காரணமாயிருந்தன.

குடியேற்ற மக்களிடையே விளையாட்டுகளும் கேளிக்கைகளும் அவ்வளவு முக்கியத்துவம் பெறவில்லை. இதற்குக் காரணம் நேரமின்மையும் ஓய்வின்மையுமேயாகும். புதிய இடங்களின் சூழ்நிலைகளைச் சமாளிப்பதற்கும், புதியநிலங்களைப் பண்படுத்துவதற்கும், காடுகளை அழிப்பதற்கும், இந்தியர்களின் தாக்குதல்களை முறியடிப்பதற்கும் வன விலங்குகளுடன் மல்லாடுவதற்குமே நேரமும் சக்தியும் போதுமானதாயிருந்தன. இந்நிலையில் கேளிக்கைகளிலும், மனமகிழ்வு தரும் விளையாட்டுகளிலும் அவர்கள் ஈடுபடுவதென்பது இயலாதது. இருப்பினும் அவ்வப்போது நடைபெற்ற திருமணங்கள், விருந்துகள் ஆகியவை வறட்சியான, சலிப்பைத் தருகிற அன்றாட நடப்புகளிலிருந்து மீட்சியைத்தந்தன. இதைத் தவிர, நடனங்கள், பியூரிட்டன் இங்கிலாந்து பகுதியினைத் தவிர மற்றப் பகுதிகளில் பிரபலமாயிருந்தன. பிரபுகள், செல்வந்தர்கள் முதலானோர், குதிரைப் பந்தயம் வேட்டையாடுதல் போன்ற பொழுது போக்குகளைக் கொண்டிருந்தனர். சூதாடுதல் பொதுவாக வெறுக்கப்பட்டது. ஆனால், பொதுத் தேவைகளுக்குப் பணம் திரட்டப் பரிசு சீட்டு முறைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

**எல்லைப் புற வாழ்க்கை :**

மேற்குப் பகுதியில், எல்லைப் புறங்களில் குடியேறியவர்கள் பெரும்பாலும் அடர்ந்த காடுகளை அழித்துப் பாழ் வெளிகளைப் பக்குவபடுத்துவதில் மும்முரமாய் இருந்தனர்; மூர்க்கமான மிருகங்களின் செவ்விந்தியர்களின் தாக்குதல்களிலிருந்து காத்துக் கொள்ளும் வண்ணம், மரவீடுகளை அமைத்துக் கொண்டனர். அவர்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை உற்பத்திச் செய்து சுயசார்பு உடையவர்களாய் வாழ்ந்து வந்தனர். அவர்களிடையே காணப்பட்ட தனித்தன்மையும், நாட்டுப்புறக்குணங்களும் குறிப்பிடத் தகுந்தவைகளாகும்.

**குடியேற்றங்களின் பொருளாதாரம் : தொழில்.**

உழவு அடிப்படைத் தொழிலாகும். இருப்பினும் குடியேற்றங்களின் நில அமைப்புக்கு ஏற்ப, உழவுத் தொழிலுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தின் அளவு இடத்திற்கு இடம் வேறுபட்டது.

வடகிழக்கில், நியூ இங்கிலாந்தானது, பாறைகள் மலிந்த பனிபூமி: மேடு பள்ளங்கள் நிரம்பிய, செழிப்பற்ற நிலம்; குறுகிய கோடை காலமும் நீண்ட குளிர்காலமும் கொண்டது; இந் நிலையில், தீவிர விவசாயத்திற்கு இப் பகுதிகளில் வழியில்லை. எனினும் புகையிலை, நெல், பருத்தி போன்றவைகளைப் பயிர் செய்யாவிட்டாலும், மக்காச் சோளம், கோதுமை, பார்லி, ஓட்ஸ் போன்ற தானியவகைகளையும், கால்நடைகளையும் உற்பத்தி செய்தனர். ஆனால் விவசாயத்தைவிட வேறு இலாபகரமான தொழில்களைச்சீரிய முறையில்மேற்கொண்டனர். நீரின் விசையைப் பயன்படுத்திக் கோதுமை அரைக்கவும், மரம் அறுக்கவும் ஆலைகளை அமைத்தனர். நல்ல தரமான மரங்கள் ஏராளமான அளவில் கிடைத்ததால், மரத் தொழில் — தச்சுவேலை — நன்கு வளர்ந்தது. கப்பல்கள் கட்டப்பட்டன. வடகிழக்குப் பகுதிகளில் அமைந்திருந்த துறைமுகங்கள் வணிகத்தினை வளர்க்க உதவின ; கடலில் மீன் வளம் கண்டனர்; மாசாசூசெட்ஸின் செல்வம் பெருகிய தற்கு மீன்பிடிக்கும் தொழில் ஒரு முக்கிய காரணமாகும். ஐரோப்பாவுக்கும், மேற்கு இந்தியத் தீவுகளுக்கும் ஏராளமான அளவில் மீன்களை ஏற்றுமதி செய்தனர். இதன்மூலம் கிடைத்த வருமானத்தின் மதிப்பு, ஆண்டொன்றுக்கு 12,50,000 டாலராகும். இதனை மதிக்கிற வகையில், காட் (Cod) மீனின் உருவமே அரசின் சின்னமாக ஏற்றுக் கொள்ளப் பட்டது. காலப்போக்கில், துறைமுகங்களின் வளர்ச்சியும், கப்பல்களின் போக்குவரத்தும், நியூ இங்கிலாந்து பகுதிகளை மிகவும் செழிப்புடையதாக்கின.

நியூ இங்கிலாந்தில் பலர் எளிய வாணிகத்தினையும், கைத்தொழில்களையும் மேற்கொண்டனர். சிலர், பாறைகள் மிகுந்த நிலங்களில் சாகுபடி செய்தனர். பியூரிட்டன் மதத்தில் கொண்ட ஆழ்ந்த பக்தியும் நம்பிக்கையும் காரணமாகத் திருச்சபைகளிலும், கல்வி நிலையங்களிலும் சேர்ந்து தொழில் புரிந்தனர்.

நியூ இங்கிலாந்து மக்கள், பெரும்பாலும், தங்கள் தேவைகளைத் தாங்களே நிறைவு செய்து கொண்டனர்; துணி நெய்தல், மரச் சாமான்கள் செய்தல், காலணிகளைச் செய்தல் என எல்லாவற்றையும் செய்து செய்தனர்.

நியூ இங்கிலாந்தில் நிலவிய நிலப்பங்கீடு முறையானது மற்றப் பகுதிகளில் நிலவிய முறைகளைக் காட்டிலும், வேறுபட்டிருந்தது. நிலங்

களை விற்றல், அதன் மூலம் இலாபம் தேடுதல் ஆகியவைகள் பெரும் பாலும் வெறுக்கப்பட்டன ; இதன் காரணமாக, நிலங்களை, புதிய நகரங்கள் வளரவும், புதியதாக வருவோர்க்கு அளிக்கவும், ஒதுக்கி வைத்தனர். பொதுவாக நியூ இங்கிலாந்தின் சமூகம் மிகவும் கட்டுக் கோப்பு உடையதாய் விளங்கியது. இதற்குக் காரணம், அங்கு வாழ் மக்களிடையே நிலவிய மொழி, சமய உணர்வு, சிந்தனைகள் ஆகியவை களில் இருந்த ஒற்றுமையேயாகும்;

மத்திய பகுதி குடியேற்றங்களில் நிலங்கள் பெரும்பாலும் அரச ருக்குச் சொந்தமானதாகவோ தனிப்பட்டவரின் உரிமையிலேயோ இருந்தன. இதன் காரணமாக, நிலங்களை வாடகைக்கு விடுதல், விற்றல், அல்லது உழைப்புக்கு ஈடாக கொடுத்தல், போன்றவை சாதாரணமாய் நடந்தது. இப் பகுதியில் நிலங்கள் விவசாயத்திற்கு ஏற்றதாயிருந்தன. இதன் காரணமாக, செழிப்பான பண்ணைகள் பல உருவாயின; பலவகையான தானியங்களும் பயிரிடப்பட்டன; என்றாலும் கோதுமை அதிக அளவில் பயிரிடப்பட்டது. ஆடு, மாடு, குதிரை, பன்றி ஆகியவைகளின் மேய்ச்சலுக்காகப் பரந்த புல்வெளி கள் வளர்க்கப்பட்டன. நல்ல பழத்தோட்டங்களும் வளர்க்கப்பட்டன. குறிப்பாக, ஆப்பிள் பெருமளவில் பயிரிடப்பட்டது.

தென்பகுதி குடியேற்றங்களில், நிலவழங்கு முறையானது, மத்தியப் பகுதி குடியேற்றங்களில் இருந்ததைப் போலவே இருந்தது. பதினேழாம் நூற்றாண்டில் சிறிய சிறிய பண்ணைகள் மிகுதியா யிருந்தன. பதினேழாம் நூற்றாண்டில் நீக்ரோ அடிமைகள், பெரு மளவில், இறக்குமதிச் செய்யப்பட்டதன் காரணமாக, ஆயிரக்கணக் கான ஏக்கர் நிலங்களைக் கொண்ட பெரியபெரிய பண்ணைகள் தோன்றலாயின.

நில அமைப்பு, வளம், தட்பவெப்பம், ஆகியவைகளின் காரணமாகத் தென்பகுதி குடியேற்றங்களில் வேளாண்மைக்கு முதலிடம் தரப்பட்டது. புகையிலை, நெல், அவுரி, பருத்தி ஆகியவைகள் தீவிர மாகப் பயிரிடப்பட்டன. காலப்போக்கில், தீவிரப் பயிர் காரண மாக, நிலம் சாரத்தை இழந்தபோது, மேற்கு மலைப்பகுதிகளில் வளம் மிக்க நிலங்கள் விவசாயத்திற்கு மேற்கொள்ளப்பட்டன. இதன் காரணமாக, தென்பகுதி குடியேற்றங்களின் உள்பகுதிகளிலும் பண்ணைகள் செழிப்புடன் வளர்ந்தன.

விவசாயத்தினைத் தவிர, வேறு சில இலாபகரமான தொழில்களும் நடைபெற்றன. அடர்ந்த காடுகளில் கிடைத்த மரப்பொருள்களும், பைன் மரத்திலிருந்து கிடைத்த மெழுகும், தார் போன்ற பொருளும், கப்பல் கட்டும் தொழில் வளர உதவின.

தென்பகுதி குடியேற்றங்களில் மக்கள் அனைவருமே சுயசார் புடையவர்களாயிருந்தனர். அவர்களுக்குத் தேவையான விவசாயக் கருவிகள், கட்டடக்கருவிகள், மரக்கருவிகள், தட்டுமுட்டுக் கருவி கள் என எல்லாவற்றையும் அவர்களே செய்து கொண்டனர். ஐரோப்பாவிலிருந்து, அவர்களுக்குத் தேவையான கருவிகளை அதிக விலைக்கு, இறக்குமதி செய்வதைக் காட்டிலும், இயற்கை அளித்துள்ள செல்வத்தைப் பயன்படுத்தி, தங்களுக்கு வேண்டிய பொருள்களைத் தயார் செய்து கொள்வது எளிதாயுமிருந்தது; சிக்கன மாயுமிருந்தது. பண்ணைகள் மிகுந்த தென்பகுதி குடியேற்றங்களில், தொழிற்சாலைகள் வளர்ந்ததற்கு இது ஒரு காரணமாகும். மற்றும், பெண்கள் வீடுகளிலிருந்தபடியே, கம்பளி, பருத்தி ஆடைகளை தயாரித்தனர்.

வட, மத்திய, தென்பகுதி குடியேற்றங்கள் அனைத்திலும் விவசாயத்தினைத் தவிர, வேறு சில தொழில்களும் நடைபெற்றன. நியூஇங்கிலாந்து பகுதிகளிலும், மத்திய பகுதிகளிலும் ஏராளமான, அளவில் தரமான மரங்கள் கிடைத்ததின் காரணமாக, இங்குக் கப்பல் கட்டும் தொழில் சிறப்பாக நடைபெற்றது. தென்பகுதிகளில் கிடைத்த ஓக்மரம், கப்பல்கட்டும்தொழில் இங்கு வளரக் காரணமாயிற்று. அதுமட்டுமல்லாமல், கப்பல்கட்டும்தொழிலுக்குத் தேவைப்படுகிற, மரங்கள், பைன் மெழுகு, தார்போன்ற பொருள்கள் பெருமளவில் ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டன.

உலோகத் தொழிற்சாலைகளும் தோன்றின. நியூஇங்கிலாந்திலும், வர்ஜீனியாவிலும் இரும்பு கிடைத்தது. காடுகளில் கிடைத்த ஏராள மான மரங்களை எரித்து, பென்சில்வேனியாவில், இரும்பு ஏராளமான அளவில் உருக்கியெடுக்கப்பட்டது. பின்னர், ஜியார்ஜியா தவிர மற்ற எல்லாக் குடியேற்றங்களிலும் இரும்பு உருக்கியெடுக்கப்பட்டது.

இதைத்தவிர வேறு சில தொழில்களும் குடியேற்றங்களில் நடை பெற்றன. உதாரணமாக, மான், காட்டு அணில், போன்றவைகளின் மிருதுவான உரோமங்கள், தோல் ஆகியவைகளிலிருந்து அழகுப் பொருள்கள் (Fancy goods) தயார் செய்யப்பட்டன. சார்லஸ்டன் நகரம் இவ் வகைத் தொழிலில் முன்னணியில் நின்றது. மசாசூசெட்ஸ் கானக்டிக்கட் ஆகிய இடங்களில் ரம், விஸ்கி ஆகிய மதுவகைகள் தயாரிக்கும் தொழில் வளர்ந்தது. நியூயார்க், பென்சில்வேனியா பகுதிகளில் நீர் சக்தியினைப் பயன்படித்தி, மாவரைக்கும் தொழில் வளர்த்தனர். இவ்விரண்டு இடங்களிலிருந்தும் தானியங்கள் குறிப்பாக, கோதுமை மாவு ஏராளமான அளவில் ஏற்றுமதி செய்யப் பட்டன.

**வணிகம்**

குடியேற்றங்களின் வணிக உறவுகள் பெரும்பகுதி இங்கிலாந்துடன் நிலவியது. தென்பகுதி குடியேற்றங்களில் விளைந்த பருத்தி, புகையிலை, நெல், அவுரி ஆகியவைகள் இங்கிலாந்திற்கு நேரடியாக தரகர்களின் உதவியின்றி அனுப்பி வைக்கப்பட்டன. அனுப்பிவைக்கப்பட்ட பொருள்களுக்கு ஈடாக அங்கு உற்பத்தியானதும் தென் பகுதி குடியேற்ற மக்களுக்கு மிகவும் தேவைப்படுகிறதுமான பொருள்கள் இறக்குமதி செய்து கொள்ளப்பட்டன. தரமான தானிய வகைகள், மீன் முதலானவைகள், தென் ஐரோப்பாவிற்கு ஏற்றுமதிச் செய்யப்பட்டு அதற்கு ஈடாக, தங்கம், ஒயின், வாசனைப்பொருள்கள் பெற்றுக் கொள்ளப்பட்டன; மரம், இறைச்சி, தானியவகைகள், குதிரைகள் ஆகியவைகள் மேற்கு இந்திய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, பதிலுக்கு தங்கம், வெல்லப்பாகு, சர்க்கரை ஆகியவைகள் பெற்றுக் கொள்ளப்பட்டன ; இறக்குமதி செய்யப்பட்ட வெல்லப்பாகிலிருந்து ரம் செய்து ஆப்பிரிக்க நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. இவைகளோடு, இரும்புச் சாமான்கள், வணிகப் பொருள்கள் ஆகியவைகளும் ஏற்றுமதி செய்யப்பட்டன ; அதற்கு ஈடாக நீக்ரோ அடிமைகள், தங்கம், வாசனைப்பொருள்கள் முதலானவை பெற்றுக்கொள்ளப்பட்டன. நீக்ரோ அடிமைகளை மீண்டும் மேற்கு இந்திய நாடுகளில் விற்று, சர்க்கரை, வெல்லப்பாகு, தங்கம் ஆகியவைகளைப் பெற்றனர். இவ்விதமாக மும்முனை வியாபார முறைகளால், அதிக அளவில் தங்கத்தினைப் பெற முடிந்தது. அதன்மூலம் இங்கிலாந்துடன் வியாபாரம் செய்து குடியேற்றங்களுக்குத் தேவைப்படுகிற விவசாயத் தொழில் கருவிகளைப் பெற்றனர்.

இவ்விதமாக உள்நாட்டு வெளிநாட்டு வணிகத்தொடர்புகள் பெருகியதன் காரணமாகநாணயச்செலாவணியின் அவசியத்தினை உணர்த்தியது. உள்நாட்டு வியாபாரம் பெரும்பாலும் பண்டமாற்று முறையின் அடிப்படையில் நடைபெற்றது. ஆனால், ஐரோப்பிய, மேற்கு இந்திய நாடுகளுடன் மேற்கொள்ளும் வணிகத்திற்கு ஒருபொதுநாணய செலாவணி தேவைபட்டது. இந் நிலையில் மெக்ஸிகோவின் ஸ்பானிஷ் டாலர் எல்லாராலும் வர்த்தக மாற்றங்களுக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆண்டுதோறும் பெருகிவரும் தேவைகளை ஈடு செய்யும் நோக்கத்தில், 1690 ஆம் ஆண்டில், குடியேற்றங்களின் சட்டமன்றங்கள் நாணயத்தினை வெளியிட்டன. ஆனால் செலாவணியில் இவைகள் விளைவித்த குழப்பங்கள் காரணமாக, குடியேற்றங்கள் நாணயங்களை வெளியிடுவதை பிரிட்டிஷ் பாராளுமன்றம் தடை செய்தது.

**சமயம்**

குடியேற்ற வாழ்மக்களிடையே பல்வேறு சமயப் பிரிவுகள் இருந்தன. மேலோட்டமாக சொல்வதானால் வடபகுதி குடியேற்றங்களில், பியூரிட்டன்களும், மத்திய பகுதி குடியேற்றங்களில் குவேக்கர்

களும், தென்பகுதி குடியேற்றங்களில் கத்தோலிக்கர்களும் எல்லைப் புறப் பகுதிகளில் பிரஸ்பிடேரியன்களும் ஜெர்மானிய செக்டேரியன் களும் அதிக அளவில் குழுமியிருந்தனர். பெரும்பாலும் சமயப் பற்று மிகுந்து மக்கள் இருந்தனர். அறிவு, மனவளர்ச்சி, கல்வி போன்றவை களையெல்லாம் சமயத்தோடு சம்பந்தப்படுத்திக் கொண்டார்கள். இதன் காரணமாக, நல்லறிவும், வழியும் வழங்கும் இடங்களான கோயில்கள், பள்ளிக்கூடங்கள் ஆகியவைகளை மிகவும் தனிப்பட்ட மரியாதையுடன் போற்றி மதித்தனர்.

நியூ இங்கிலாந்து பகுதிகளில் பெருமளவில் இருந்த பியூரிட்டன் கள், ஜான்கால்வினின் கொள்கையில் நம்பிக்கை கொண்டிருந்தனர். மனித கூட்டத்தில், வெகுசிலரே ஆண்டவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு விமோசனம் பெறுகிறார்கள் என்றும், மற்றவர்களெல்லாம் ஆண்டவனால் சபிக்கப்பட்டவர்களென்றும், கால்வினிஸக் கொள்கை நம்பியது. அதோடு அனைவருடைய வாழ்க்கை முறைகளும், போக்குகளும் முன்னதாகவே ஆண்டவனால் வகுக்கப்பட்டுவிடுகிற தென்றும் எனவே அனைவரும் தூய குணங்களைக் கொண்டு நல்வழியில் வாழ்ந்து, ஆண்டவன் அருள்பெற்று உய்ய வேண்டு மென்றும் கூறியது.

ஆண்டவன்மீது நம்பிக்கையற்று, சமயச் சடங்குகளை உதறித் தள்ளிவிட்டு வாழத் தெரியாத, துணியாத மக்கள் கூட்டம் வாழ்ந்த காலமது. எனவே, ஆண்டவனின் கோபம், சாபம் என்பன போன்ற அச்சுறுத்தல்களைத் தாங்கிக் கொள்ள முடியாது என்கிற அச்சத்தின் காரணமாக, இறையருளுக்காக — மீட்பிற்காக திருச்சபைக்கு வருதல், எல்லாச்சமயச் சடங்குகளிலும் பங்கு பெறுதல், புனித நெறிகளை மேற்கொள்ளுதல் என எல்லாவற்றிலும் மக்கள் ஆழ்ந்து ஈடுபட்டனர்.

பின்னாளில், ஐரோப்பாவில் நடந்த சமயசீர்திருத்த இயக்கங் களால், குடியேற்றமக்கள், சமயத்தின்மீது கொண்டிருந்த பிடிப்பு தளர்ந்து போனது. ஆண்டவனால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், 'சபிக்கப்பட்டவர்கள்' போன்ற வாதங்களையெல்லாம் நம்ப மறுத் தனர். அறிவுப்பூர்வமான, ஆதாரத்துடன் கூடிய விவகாரங்களையே ஏற்றுக் கொண்டார்களேயொழிய சமயப்பேருரைகளை, விளக்கங் களை நம்ப மறுத்தனர்.

தென்பகுதி குடியேற்றங்களில், (எபிஸ்கோபல் திருச்சபையைச் சார்ந்த) கத்தோலிக்க சமயம் பரவியிருந்தது. திருச்சபைகள் அரசின் ஆதரவில் இருந்தன; அதாவது மக்களிடம் பெற்ற வரிகள் மூலம் அவை பராமரிக்கப்பட்டன. வர்ஜீனியா, மேரிலாந்து

தென்கரோலின ஆகிய குடியேற்றங்களில், (எபிஸ்கோபல்) கத்தோலிக்க சமயம் நன்கு நிலைத்திருந்தது.

தென்பகுதி குடியேற்றங்களில், பொதுவாக, மக்கள், சமயத்தில் காட்டிய ஈடுபாடு, சமய வழிபாடுகள், தீவிரமாயில்லை. அதற்குக் காரணம், சமுதாய-பொருளாதார அமைப்புகளேயாகும். திருச்சபைகள் அமைந்து இருந்த இடங்களும் மக்கள் வாழ்ந்து வந்த இடங்களும் ஒன்றைவிட்டுஒன்று தள்ளி வெகுதூரத்தில் இருந்தன. கோயிலுக்குச் சென்று வழிபட வேண்டுமென்று விரும்புகிறவர்கள் சிலர் வாழ்ந்த இடங்களுக்கு மிக அருகில் இருந்த கோயில் 30 மைலிலிருந்து 40 மைல்கள் வரையிலான தூரத்தில் இருந்தது. மேலும் மோசமான சாலைகளில் நாள் கணக்கில், வசதியேயில்லாத வாகனங்களில், பயணம் செய்ய வேண்டியிருந்தது; அல்லது ஆற்றுவழியே படகுகளில் பயணம் செய்ய வேண்டியிருந்தது. கடுமையான பனி, மழை, பொழிகிற காலங்களில் கோயிலுக்குச் செல்ல முடிவதில்லை. எனவே, வசதிபட்டபோது கோயிலுக்குச் சென்றனர். இதன் காரணமாக, வழிபாட்டு நாள்களிலும், கோயில்கள் பெரும்பாலும் காலியாயிருந்தன. இதைத் தவிர, தெய்வபக்தியும், தூயகுணமும், திறமையும் ஊக்கமும் கொண்ட மதபோதகர்கள் குடியேற்றங்களுக்கு வர விரும்புவதில்லை; இவர்களுக்கு தாய்நாட்டில் கிடைத்த வசதியும், ஆதரவும் அதிகமாயிருந்தன.

சுருங்கச் சொல்லின், தென்பகுதி குடியேற்றங்களில், சமயத்தின்மீது நம்பிக்கை இருந்தது; ஆனால், கோயிலுக்குச் செல்லுதல், வழிபடுதல் விவிலிய வாசகங்களைக் கேட்டல் ஆகியவைகளுக்கு, நடைமுறை தொல்லைகள் குறுக்கே நின்றதால், சமய நெறிகள் வடபகுதி குடியேற்றங்களில் இருந்ததைப்போல அவ்வளவு தீவிரமாயில்லை.

மத்திய பகுதி குடியேற்றங்களில், சமயப் பிரிவுகள் அதிகமாயிருந்தன. இப் பகுதிகளில், தொடக்கக் கால முதலே, ஐரோப்பிய நாடுகளிலிருந்து, எல்லா வகையினரும், எல்லாப் பிரிவினரும், குடியேறினர். இதன் காரணமாகவே, சமுதாயக் கூறுகளும், சமுதாயப் பிரிவுகளும், இப் பகுதிகளில் அதிகமாகக் காணப்பட்டன. பென்சில்வேனியாவில் பிரஸ்விடெரியன்கள், குவேக்கர்கள், லூதரன்கள், யூகினட்டுகள் என அனைத்துப் பிரிவினரும் இருந்தனர். நியூயார்க்கில் ஜெர்மன், டச்சு ஆகிய நாடுகளின் சமய சீர்திருத்தவாதிகள் நிரம்பியிருந்தனர். ரோடுஐலண்டில், பாப்டிஸ்டுகள் (Baptists) குழுமியிருந்தனர். மேரிலாந்தில் கத்தோலிக்கர்கள் ஏராளமாயிருந்தனர்.

இவ்விதமாக, சமயத்தின் பெயரால் சொந்த நாட்டிலிருந்து துரத்தியடிக்கப்பட்டவர்கள், சமய சீர்திருத்தம் விரும்பியவர்கள்,

சமய சுதந்திரம் வேண்டி நின்றவர்கள், சமய எதிர்ப்பாளர்கள், சமய வெறுப்பாளர்கள் என எல்லா வகையினரும், கொள்கையினரும் மத்திய பகுதிகளில் இருந்து வந்ததால், இங்குச் சமய சகிப்புத் தன்மை மேலோங்கியிருந்தது. அவரவர் விரும்புகிற சமயத்தினை, அவரவருக்கு உகந்த வகையில் பின்பற்றிப் போற்றினர். சமயத்தின் பெயரால் யாரும் யாரையும் கட்டாயப்படுத்த வேண்டிய அவசியம் எழவில்லை; யாரும் யாரையும் பகைத்துக் கொள்ளவும் வேண்டியது இல்லை. சமயச் சண்டைகள் உருவாக வழியே இல்லை. நேரிடையாகச் சொல்வதானால், அவரவர் வழியில் நின்று, அடுத்தவருக்கு இடையூறு இல்லாமல், அவரவர் விரும்புகிற வகையில் சமயங்களைப் போற்றி வளர்த்துக் கொண்டனர். இதில் அச்சுறுத்தலுக்கும், துன்புறுத்தலுக்கும், துரத்தியடித்தலுக்கும் இடமேயில்லை. இந்த முறையே, அறிவுக்கு உகுந்த, நாகரிக மிக்க, நியாயமான செயலாக அனைவருக்கும் தோன்றியது. மேலும், வழிபாட்டு ஆலயங்களும், அரசின் ஆதரவினையோ, பொதுமக்களின் வரிப்பணத்தினையோ நம்பியிராமல் அவர்களின் நன்கொடையில், அன்பளிப்பில் நன்கு பராமரிக்கப்பட்டு வந்தன.

சமய நம்பிக்கையினைத் தவிர, குடியேற்ற மக்களிடையே, ஆவி, பேய், சூன்யம், மந்திரம், மாயம் இது போன்றவைகளின்மீதும் நம்பிக்கையிருந்தன.

**சமயம் வளர்த்த இலக்கியங்கள் :**

சமயவாதிகள், மக்களை நல்வழிப்படுத்தவும், மேன்மைப்படுத்தவும், புனித நெறிகளையும், தூய சிந்தனைகளையும் எடுத்துரைத்தனர். அவர்களின் கருத்துகள், பேருரைகள் பக்தி இலக்கியங்களாக மலர்ந்தன. இவைகள், அவர்கள் காலத்திய சமயம்சார்ந்த சிந்தனைக்கும், தெளிவிற்கும் சாட்சியங்களாக விளங்கின.

நியூ இங்கிலாந்து பகுதிகளில் இலக்கிய படைப்புகள் அதிக அளவில் இருந்தன. இதற்குக் காரணம் இங்குச் சமயத் தொடர்பான விவகாரங்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டதேயாகும். நியூ இங்கிலாந்தைச் சேர்ந்த காட்டன் மாதர். என்பவர் சிறியதும், பெரியதுமான முந்நூறுக்கு மேற்பட்ட நூல்களை எழுதினர். அவற்றுள், **'அமெரிக்க கிறித்துவ அதிசயங்கள்'** என்னும் நூல் சிறப்பாக இருந்தது. காலத்தை வென்ற நூல்களில் இதுவும் ஒன்று. மேலும் சமயத்துறையில் செய்யப்பட்ட தியாகங்களையும், சாதனைகளையும் கூறுகின்ற நூல்களும், சமயத்தினை வளர்க்கும், பெருமைப்படுத்தும் நூல்களும் ஏராளமாய் வெளிவந்தன.

கட்டுரை வடிவில் அல்லாமல், சமயம்சார்ந்த கவிதைகளும் பாடல்களும் பல எழுதப்பட்டன. மைக்கேல் விக்கில் ஒர்த்தின்

(Michael Wiggle Worth's), 'விதியின் தீர்ப்பு நாள்'. (Day of Doom) என்னும் கவிதையில், பாவம் செய்கிறவர்களுக்கு, 'தீர்ப்பு நாளன்று' காத்திருக்கும் கேடுகாலத்தினை எச்சரித்தார். ஆனே பிராட்ஸ்டீரிட் (Anne Bradstreet) என்பவர், இயற்கையில் ஆண்டவனின் மகத்துவத்தைக் கண்டு மகிழ்ந்து பாடல்கள் பல எழுதினர். எட்வர்ட் டெய்லர் (Edward Taylor) என்பவர் நற்கதியளிக்கும் இரட்சகருக்குப் பாக்களால் புகழாரம் சூட்டினர்.

**வரலாற்று நூல்கள் :**

வரலாற்று நூல்களும் பல எழுதப்பட்டன. வில்லியம் பிராட்போர்டின், 'பிளிமத் பண்ணையின் வரலாறு' (William Brad ford's History of Plymouth), ஜான் வின்த்ராப்பின், 'நியூ இங்கிலாந்து வரலாறு' (John wirthrop's History of New England) ஆகியவை நியூ இங்கிலாந்திலிருந்து வெளிவந்தன. வர்ஜீனியாவைச் சேர்ந்த, வில்லியம் பர்ட் (William Byrd) என்பவரின் 'வர்ஜீனியாவிற்கும் வடகரோலினவிற்கும் இடையே உள்ள பிரிவுக் கோட்டின் வரலாறு' (History of the Dividing Line Betwixt Virginia and North Carolina), பென்சில்வேனியாவைச் சேர்ந்த ஜான் உல்மன் (John Woollman) என்பவர் எழுதிய ஜர்னல் (Journal) ஆகியவைகளெல்லாம், மறக்க முடியாத நூல்களாகும்.

**கல்வி :**

கல்வியின் சிறப்பினை, குடியேற்ற மக்கள், நன்கு உணர்ந்திருந்த போதிலும், அவர்களுடைய வாழ்க்கைப் போராட்டம், ஓய்வின்மை, முயற்சியின்மை, தேவையின்மை, ஆகியவைகளினல், கல்வியினைப் போற்றி வளர்க்கும் நிலையில் அவர்கள் இல்லை. இருப்பினும், பியூரிட்டன்கள், மதக் கொள்கைகளைப் பரப்பவும், திருச்சபைகளின் நடவடிக்கைகளை மேற்கொள்ளவும், பேருரைகளை நிகழ்த்தவும், இளையதலைமுறையினரிடையே சமயகுருமார்களை உருவாக்கவும், இளையதலைமுறையினருக்குக் கல்வியறிவு வழங்கவும் 1636 ஆம் ஆண்டில் மசாசூசெட்ஸில் ஹார்வார்டு கல்லூரியினைத் தோற்றுவித்தனர். மேலும், இளமையிலேயே ஆரம்பக்கல்விக்கு வழிசெய்யும் வகையில், பள்ளிகளைத் தோற்றுவிக்க, 1647ஆம் ஆண்டில் மசாசூசெட்ஸ் சட்ட மன்றம், ஒரு சட்டத்தினை இயற்றியது. இச் சட்டம் ஐம்பது குடும்பங்கள் உள்ள ஒவ்வொரு பகுதியிலும், பள்ளி ஒன்றையும் நூறு குடும்பங்கள் உள்ள பகுதிகள் ஒவ்வொன்றிலும் உயர்நிலை பள்ளியொன்றையும், அப் பகுதிவாழ்மக்கள் நடத்துதல் வேண்டும் என்று வலியுறுத்தியது. இச் சட்டத்தின் மூலமாக, ஆரம்பக் கல்விக்கு, அரசு பொறுப்பேற்க முன்வந்தது, குறிப்பிடத் தகுந்ததாகும்.

இவ் வழியில், மற்றக் குடியேற்றங்களிலும், ஆரம்ப-உடர்நிலைப் பள்ளிகள் தோற்றுவிக்கப்பட்டன. இருந்த போதிலும், தென் பகுதி குடியேற்றங்களில் இம் மாதிரியான பொதுக்கல்வி முறை வளரவில்லை. இதற்குக் காரணம், அங்கே இருந்த பெரியபெரிய பண்ணைகள் நெருக்கமான குடியிருப்புகளைத் தோன்றவிடாமல் செய்துவிட்டன. எனினும், அங்கேயும் கல்விக்கு, முக்கியத்துவம் அளிக்கப்பட்டு, அவர் களுக்கு ஏற்ற வகையில், கல்வி அறிவு வழங்க, ஏற்பாடு செய்து கொண்டனர். தனிப்பட்ட முறையில் கல்வியினைக் கற்பிக்க ஏற்பாடு செய்துகொண்டனர். அதாவது, சமய குருமார்கள், மதப்பிரச்சாரகர் கள் போன்றவர்கள் தனிப்பட்ட முறையில் கல்வியினைக் கற்பித் தனர். அடுத்ததாக, பணம்படைத்த பண்ணையாளர்கள் ஒன்று சேர்ந்து இங்கிலாந்திலிருந்தோ வடக்குப்பகுதி குடியேற்றங்களி லிருந்தோ, ஆசிரியர்களையோ, படித்த ஒப்பந்த வேலைக்காரர், களையோ வைத்துத் தங்கள் குழந்தைகளுக்குக் கல்வியை அளித்தனர். பொதுவாக, எண், எழுத்து, ஆகியவைகளோடு, இலத்தீன், கிரேக்க மொழிகளும் சொல்லித் தரப்பட்டன. காலப் போக்கில், கல்லூரிப் படிப்பும் வளர்ந்தது. நியூ இங்கிலாந்து, கல்லூரிப் படிப்பில், முன்னணியில் நின்றது. குடியேற்றங்களில் தோற்றுவிக்கப்பட்ட ஒன்பது கல்லூரிகளில் நான்கு கல்லூரிகள் நியூ இங்கிலாந்து குடி யேற்றத்தில் இருந்தன. தென் பகுதிகளிலும் கல்லூரிகள் தோன்றின. தூய, திறமையான, பயிற்சி பெற்ற சமய குருமார்களை உருவாக்கும் நோக்கில், 1693ஆம் ஆண்டில் வர்ஜீனியாவில் வில்லியம் மேரி கல்லூரி தோற்றுவிக்கப்பட்டது. சில ஆண்டுகளுக்குப் பின் கானக் டிக்கட் கல்லூரிக்குச் சாசனம் அளிக்கப்பட்டது. அதுவே பின்னாளில் யேல் பல்கலைக் கழகமாக மாறியது. கல்லூரிப் படிப்பின் நிலைமை யில், மத்திய பகுதி குடியேற்றங்கள், மாறுபட்டிருந்தன. இப் பகுதி வாழ்மக்கள், சொத்து சேர்ப்பதிலும் முனைப்பாக ஈடுபட்டிருந்த தால், கல்வியின்மீது நாட்டமின்றி இருந்தனர். இருப்பினும், கல்வித்துறையில், மேரிலண்டு குடியேற்றமானது அக்கறை மிகுந்து காணப்பட்டது. குவேக்கர்களும், ஜெர்மானியர்களும் சில பள்ளிகளை நடத்தினர். நியூயார்க்கிலும் சில பள்ளிகள் இருந்தன. பொதுவாக, பள்ளிகள் எல்லாமே ஏழ்மைக் கோலத்தில் இருந்தன. பள்ளிகளைத் தவிர சில கல்லூரிகளும் தோற்றுவிக்கப்பட்டன. நியூ ஜெர்ஸி கல்லூரி, நியூயார்க்கில் உள்ள கிங்ஸ் கல்லூரி, (இப்போது கொலம்பியா பல்கலைக் கழகம்) நியூ பிரான்ஸ்விக்கில் உள்ள குயின்ஸ் கல்லூரி (இப்போது ரட்ஜர்ஸ் பல்கலைக் கழகம்) ஆகியவை குறிப்பிடத்தகுந்தவைகளாகும்.

குடியேற்றங்களிலேயே, கல்வித்துறையில், சிறப்புற்று விளங்கி யது பென்சில்வேனியாவேயாகும். 1688ஆம் ஆண்டில் முதன் முதலாக, பள்ளிக்கூடம் ஒன்று இங்கு ஏற்படுத்தப்பட்டது. எழுத

வும், படிக்கவும், கணக்குகள் வைக்கும் முறையும் அங்குப் பயிற்று விக்கப்பட்டன. அதன் பின்னர், ஒவ்வொரு குவேக்கர் குடியிருப்பு களிலும் ஆரம்பப் பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டன. கிரேக்க, இலத்தீன் மொழிகள், வரலாறு, இலக்கியம் ஆகியவை உயர்நிலைப்பள்ளி களில் சொல்லித் தரப்பட்டன. பிலடெல்பியாவில் 'வில்லியம் பென் சாசனப்பள்ளி' என்ற பெயரில் உருவான பள்ளியில் இலவசக்கல்வி அளிக்கப்பட்டது. பிலடெல்பியாவில் உருவான சமயச் சார்பற்ற பள்ளிகளில், மொழி, கணிதம், தாவர இயல் முதலிய பாடங்கள் போதிக்கப்பட்டன. முதியோர் கல்விக்கும் முக்கியத்துவம் அளிக்கப் பட்டது. பெண்களும் புறக்கணிக்கப்படவில்லை. பிலடெல்பியாவி லுள்ள, செல்வக் குமரிகளுக்கு, பிரெஞ்சு மொழி, இயல், இசை, நடனம், ஓவியம் முதலானவை சொல்லித்தரப்பட்டன. பெஞ்சமின் ஃபிராங்க்லின் என்பவரின் பெருமுயற்சியால், பிலடெல்பியா கல்லூரி (இப்போது பென்சில்வேனியா பல்கலைக்கழகம்) உருவானது.

இவ்விதமாக, குடியேற்றங்களில், அரசின் மானியம், தனியார் உதவித் தொகைகளைக் கொண்டு, அவரவர் தேவைகளுக்கேற்ப மதம், மொழி, கணிதம், இலக்கியம், சட்டம் ஆகிய துறைகளில் பாடங்கள் போதிக்கப்பட்டன. பின்னாளில் அறிவியல், மருத்துவம், தொழில் நுணுக்கங்கள் எனப் பலதுறைகளிலும் பாடங்கள் விரிந்தன.

**செய்தித்தாள்கள் :**

குடியேற்றங்களில் செய்தித்தாள்களும் பஞ்சாங்கம் போன்ற குறிப்புப்புத்தகங்களும் வெளிவந்தன. 1639ஆம் ஆண்டில், மசாசூசெட்ஸில், உள்ள கேம்ப்ரிட்ஜில், முதன்முதலில் அச்சகம் ஒன்று நிறுவப்பட்டது. வெகுவிரைவிலேயே எல்லாக் குடியேற்றங் களிலும் அச்சகங்கள் பல நிறுவப்பட்டன, பின்னாளில், அச்சகங்கள் இல்லாத குடியிருப்புகளே இல்லை. நூல் கள் வெளியிடும் நிறுவனங் களும் பல தோன்றின.

1690 ஆம் ஆண்டில் பாஸ்டனைச் சேர்ந்த பெஞ்சமின் ஹாரிஸ் என்பவர், 'பப்ளிக் அக்கரன்ஸஸ்' (Public Occurances) என்னும் பெயருடைய செய்தித்தாள் ஒன்றை வெளியிட்டார். இது தொடர்ந்து வெளிவரத் தணிக்கையினர் அனுமதிக்கவில்லை. 1704 ஆம் ஆண்டில் வெளியான, 'பாஸ்டன் நியூஸ் லெட்டர்' (Boston News Letter) என்னும் செய்தித்தாள் தொடர்ந்து வெளிவந்தது. 1719 ஆம் ஆண்டில், 'பாஸ்டன் கெஜட்' (Boston Gazette), 'அமெரிக்கன் வீக்லி மெர்குரி' (American Weekly Mercury) ஆகியவை வெளிவந்தன. 1750 ஆம் ஆண்டிற்குள் எல்லாக் குடியேற்றங்களிலும், செய்தித் தாள்கள் இருந்தன. சில குடியேற்றங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட செய்தித்தாள்கள் இருந்தன.

இச் செய்தித்தாள்கள் பெரும்பாலும், வெளிநாட்டுச் செய்திகளை யும், வெளிநாட்டுச் செய்தித்தாள்களில் வெளியான கட்டுரைகளை யும், தினசரி குறிப்புகளையும் வெளியிட்டன. பின்னுளில், குடியேற்றங் களில் உருவான, அரசியல், சமயம் சார்ந்த இயக்கங்களின் கருத்து களைப் பரப்ப இச் செய்தித்தாள்கள் பெரிதும் உதவின.

செய்தித்தாள்களைத் தவிர, தரமான நூல்களும் வெளியிடப் பட்டன. அவை பெரும்பாலும் சமயச்சார்புள்ளனவைகளாக ஆனல் அறிவு ஒளிர்வு (Enlightenment) இயக்கத்தின் போது, வேறு பல கருத்துகளைக் கொண்ட நூல்களும் வெளியாயின; பெஞ்சமின் ஃபிராங்க்லின் தொகுத்த 'புவர் ரிச்சர்ட்ஸ் ஆல்மனக்' ('Poor Richards' Almanac) என்னும் புத்தகம் மிகவும் விரும்பிப் படிக்கப்பட்டது.

**நுண் கலைகள் :**

குடியேற்றங்களில், தொடக்கக்காலத்திலிருந்த கலையுணர்வினைவிட பதினேழாம் நூற்றுண்டில், மிகுந்து காணப்பட்டது. இதற்குக் காரணம், அப்போது மக்களுக்குக் கிடைத்த செல்வமும், வசதியும், ஓய்வும், நிறைவுமேயாகும்.

கரடுமுரடான மிகச் சாதாரண முறையில், அமைந்திருந்த வீடுகள் மாறின. பல அறைகள் கொண்டதாயும், காற்றேட்டமும் வெளிச்சமும் கொண்டதாயும், முகப்பு மண்டபத்தோடு, புகைபோக்கி தனியாக சமையல் அறை என நல்ல முறையில், கலையுணர்ச்சியோடு கூடிய வீடுகள் கட்டப்பட்டன. வடபகுதிகளில் காணப்பட்ட வீடுகளை விட, தென்பகுதிகளில் பண்ணையாளர்களின் மாளிகைகள் அழகும் கவர்ச்சியும் மிக்க கட்டடங்களாயிருந்தன. மிகப்பெரிய முகப்பு மண்டபம், சித்திர வேலைப்பாடுகள் நிரம்பிய, பெரிய மாடிப்படிகளைக் கொண்ட வீடுகள் இருந்தன. குடும்ப முக்கியஸ்தர்களின் படங்களும், பிரபலமடைந்த வேறு பல நல்ல, அழகான ஓவியங்களும், மாளிகையின் முக்கிய பகுதிகளில் இடம் பெற்றன. பொதுவாக, எல்லாக் குடி யேற்றங்களிலும், உணவிலும், உடையிலும் சுகபோகம் பெருகியது.

குடியேற்ற மக்களுக்கு, இசையிலும், நாடகத்திலும், ஈடுபாடு பெருகியது. பிலடெல்பியாவிலும், சார்லஸ்டனிலும் இசைச் சங்கங்கள் தோன்றின. பிரான்ஸிஸ் ஹாப்கின்ஸ் என்பவர், புகழ் பெற்ற இசை அமைப்பாளராக விளங்கினர்.

நாடகம், நாட்டியம், ஆகியவை வேலையற்றவர்களின் சுகவாசி களின், அர்த்தமற்ற பொழுதுபோக்கும் சாதனங்களேயாகும் என்று நிலவி வந்த கருத்து மாறியது. 1716 ஆம் ஆண்டில் வர்ஜீனியா விலுள்ள வில்லியம்பர்க் என்னும் இடத்தில் நாடகமன்றம் ஒன்று முதன்முதலாகக் கட்டப்பட்டது. பின்னர், நியூயார்க்கிலும், சார்லஸ்

டனிலும் நாடகமன்றங்கள் உருவாயின. பெரும்பாலும், இங்கிலாந்திலிருந்து நாடகக் குழுவினர் வந்து, குடியேற்றங்களில், நாடகங்களை நடத்தினர். 1767ஆம் ஆண்டில், குடியேற்றவாசியான தாமஸ் காட்ரே என்பவர், 'பிரின்ஸ் ஆஃப் டார்தியா' (Prince of Darthia) என்னும் நாடகத்தினை பிலடெல்பியாவில் நடத்தினர்.

**கலாச்சாரப் போக்குகள்**

குடியேற்ற வாழ்க்கையிலும், கலாச்சார நடவடிக்கைகள் இருந்தன. இவை, புதியதொரு சமுதாயத்தை அமைப்பதற்கும், புதிய எண்ணங்களைத் தோற்றுவிப்பதற்கும் காரணமாயிருந்தன. மேலும், பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில், குடியேற்றங் களில் உருவாகி, ஊறிய கலாச்சாரப் போக்குகளே, உரிமைப் போருக்குப் பின் தோன்றிய அமெரிக்க ஐக்கிய நாட்டின் கலாச்சாரப் போக்குகளுக்கு அடிப்படையாயின.

**விழிப்புணர்வு (Great Awakening)**

பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் கடவுள் நம்பிக்கை, சமயப்பற்று ஆகியவைகளில் குடியேற்றமக்கள் கொண்டிருந்த ஆழ்ந்த பிடிப்புத் தளர்ந்துபோயிருந்தது. இதன் காரண மாக, திருச்சபையின் நடவடிக்கைகள், சமயச் சடங்குகள் ஆகியவற்றில் ஆர்வம் குறைந்து, ஈடுபாடில்லாமல் இருந்து வந்தனர். எல்லைப் புறங் களில் வாழ்வோருக்கு இருந்த வாழ்க்கைப் போராட்டமும் திருச்சபை கள் அப் பகுதிகளில் இல்லாமல் போனதும், இருந்த திருச்சபைகளும் வேவ்வேறு காரணங்களுக்காக, முக்கியத்துவம் பெறுமல் போனதும், எஞ்சிய பகுதிகளில் வசதியான வாழ்க்கை உருவானதால் உண்டான வெற்றியின் மதர்ப்பும், சமயச்சார்பற்ற பற்றில்லாத நிலைமையினை உருவாக்கின.

இவ்விதமாக, சமய விவகாரங்களில், நேர்ந்தவிட்ட தொய்வினைப் போக்கி மீண்டும் ஆழ்ந்த நம்பிக்கையையும், பக்தியையும் உண்டாக்க ஓர் ஆன்மீக இயக்கம் உருவானது. இதுவே 'விழிப்புணர்வு' (Great Awakening) இயக்கமாகும்.

1720ஆம் ஆண்டில் இவ்வியக்கமானது, மத்திய குடியேற்ற நாடு களில் தோன்றியது. அடுத்த பத்தாண்டுக் காலத்திற்குள் நியூஇங்கிலாந்து பகுதிகளுக்குப் பரவியது. இவ்வியக்கத்தினை, நியூஇங்கிலாந்து பகுதிகளில், ஜோனதான் எட்வர்ட்ஸ் என்பவர் பரப்பினர். ஆனல், இவரைவிட ஜார்ஜ்விட்பீல்டு என்பவர், இவ்வியக்கத்தினை தீவிரமாகப் பரப்பினர்; மேலும் குடியேற்ற மக்களி டையே மிகவும் பிரபலமாயும் திகழ்ந்தார். இவ்வியக்கத்திற்கு ஆதரவாக, இங்கிலாந்திலிருந்து வந்த, கத்தோலிக்கச் சமய செய்திப்

பரப்பாளர்கள் (Evangelists) இருந்தனர். இவர்களின் செயல்வேகத்தின் காரணமாக, சுமார் பத்து ஆண்டுக் காலத்திற்கு (1734 -1744) குடியேற்றங்களில், எங்குப் பார்த்தாலும் பக்தி நெறி பரப்பும் கூட்டங்கள், பிரசாரங்கள் என எல்லாமே, ஆர்வத்துடனும், புதுவேகத்துடனும் தீவிரமாக நடந்தன. பிறகு இயக்கத்தின் வேகம் குறைந்து மெல்லமெல்ல மறைந்து போயிற்று.

எனினும், இவ்வியக்கத்தினுல், சில நன்மைகள் ஏற்பட்டன. முதலாவதாக, மக்களைத் திருத்திநல்வழிபடுத்தவும், ஆன்மீக விவகாரங்களில் ஈடுபடுத்தவும் முயன்றது ; இரண்டாவது, எல்லைப்புறங்களிலும் திருச்சபைகள் தோன்ற உதவியது ; மூன்றுவதாக, புதிய கல்லூரிகள் — பிரின்ஸ்டன், பிரௌன், ரட்ஜர்ஸ், டார்டமவுத் ஆகிய கல்லூரிகள் — தோன்றுவதற்குத் தூண்டுகோலாயிருந்தது.

### அறிவு ஒளிர்வு இயக்கம்

பதினெட்டாம் நூற்றுண்டில் அமெரிக்க குடியேற்றங்களில் அறிவுப்பூர்வமான இயக்கம் ஒன்று உருவானது. இதன் காரணமாக, அவர்களிடையே நிலவி வந்த பல்வேறு கருத்துகளும், கோட்பாடுகளும், அடியோடு தகர்ந்து போயின. கதிரவன் உள்ளிட்ட கோள்கள், பூமி, இயற்கை, சமூகம், பொருளாதாரம், அரசியல், மதம் ஆகியவை சார்பாக காலம்காலமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்துகள் நிராகரிக்கப்பட்டன. பொதுவாக, சோதனைகள் வழியே, சான்றுகளின் ஆதாரங்களுடன் நிரூபிக்க முடியாத கருத்துகள், கோட்பாடுகள், தத்துவங்கள் என எல்லாமே மறுக்கப்பட்டன. இதன் காரணமாக, இடைக்காலத்தில் அரசியல், சமூக, பொருளாதார, சமயஞ் சார்ந்த கருத்துகள் மறுசிந்தனைக்கு ஆட்பட்டன.

உதாரணமாக, 'இடைக்காலத்தில் சமுதாய அமைப்பு நிலையானது என்றும் அதனை எவ்வகையிலும் யாரும் மாற்றியமைக்க முடியாது' என்கிற கருத்து ஆதாரமற்றவையாக அடிப்படை எதுவும் இல்லாததாகக் கருதப்பட்டது. அடுத்ததாக, மண்ணுலக வாழ்க்கையானது அர்த்தமற்றது ; துன்பங்கள் நிறைந்தது; முன்கூட்டியே நிருணயஞ் செய்யப்பட்டது ; எனவே இவ்வுலக வாழ்க்கை பயனற்றது ; மாருக விண்ணுலக வாழ்க்கையானது நிலையானது, நிறைவைத் தருவது ; எல்லாவற்றிற்கும் பொறுப்பு ஆண்டவனே ; இந்த உலகத்தினை இயக்குபவன் அவனே; எனவே, அவனிடம் சரணடைந்து முக்தியைப் பெறுதல் வேண்டும் என்றெல்லாம் நிலவி வந்த கருத்துகளைச் சான்றுகளுடன், சோதனைகளுடன் நிரூபிக்க இயலாது ; இவைகளெல்லாம் காலம்காலமாய்ச் சொல்லப்பட்டு வந்தன ; நம்பப்பட்டு வந்தன. ஆனுல் இப்போது இக் கருத்துகள் அப்படியே ஏற்றுக் கொள்ளப்படவில்லை

நிக்கோலஸ் கோப்பர்னிக்கஸ் என்பவர், இவ்வுலகிற்கு மையமாக விளங்குவது சூரியன் என்றும் சூரியனைச் சுற்றிச் சுழலுகிற எத்தனையோ கோள்களில் பூமியும் ஒன்று எனவும் ஆராய்ந்து கூறினர் இதனால், இதுவரை கருதப்பட்டு வந்த உலகத்தின் மையம் பூமியாகும் என்கிற கருத்துப் பொய்யாயிற்று. கோப்பர்னிக்கஸின் கருத்துக்கு மேலும் ஆதரவுதருகிற வகையில் பல புதிய சோதனைகளும், கண்டு பிடிப்புகளும் அமைந்தன. ஐஸக் நியூட்டன் என்பவரின் புவி ஈர்ப்பு விதி (Law of Motion) மிக முக்கியமானதாகும். உலகம் இயற்கையின் நியதிகளுக்குக் கட்டுபட்டு இயங்குகிறதேயொழிய வேறு எதனுலும் அன்று என்கிற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டது. அதாவது இவ்வுலகம், இயற்கை நியதிகளுக்குக் கட்டுப்பட்டு இயங்குகிறதே யொழிய ஆண்டவனின் கட்டளைகளினுல் அன்று என்கிற உண்மை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

இவ்விதமாக, பதினெட்டாம் நூற்றுண்டில், பல்வேறு துறைகள் புதிய கருத்துகள் சோதனைகளின் வழியே, ஆதாரங்களின் ஊடே நிரூபிக்கப்பட்டன.

ஜான் லாக் (John Lock) என்பவர், எழுதிய கட்டுரை ஒன்றில் (Essay Concerning Human Understanding 1689), 'தனிமனிதனின் பண்புகள் அவன் வாழ்கிற சூழ்நிலைகளுக்கேற்ப உருவாகிறதே யொழிய, ஆண்டவனின் நியதிப்படியன்று' என்ருர். இதனைத் தொடர்ந்து ஜீன் ஜேக்ஸ் ரூஸோ, "சமுதாய ஒப்பந்தம்" என்கிற நூலில், அரசர்களின் தெய்வீக உரிமைக்கோட்பாட்டினை மறுத்தார்; அதோடுகூட, மக்கள் தங்களின் உரிமைகளைக் காத்துக் கொள்ளுதல் அவர்களின் உரிமை என்றும் கூறினர். அடுத்ததாக மான்டஸ்க்யூ என்பவரின் "அதிகாரப் பிரிவினைகள்", ஆடம்ஸ்மித்தின் 'பொருளா தார விதிகள்' எல்லாமே அன்றை சமூகத்தில் மிகப்பெரிய அதிர்ச்சி யினையும், ஆச்சரியத்தினையும் விளைவித்தன.

புரட்சிகரமான கருத்துகள், குடியேற்ற நாடுகளில், மிக வேக மாகப் பரவின. அமெரிக்க சிந்தனையாளர்கள், இப் புதிய கருத்து களின் தன்மைகளை, அவைகளின் உண்மையான நோக்கில் புரிந்து கொண்டு, அவைகளின் அடிப்படையில் மேலும் பல புதிய கருத்து களைத் தோற்றுவித்தனர்.

'உலகம் இயற்கையின் நியதிகளுக்குக் கட்டுப்பட்டு, இயங்குகிறது ; அதனை நெறிப்படுத்த முடியும் என்பதனை, எல்லைப் புற வாழ்க்கை அனுபவ ரீதியாக நிரூபித்து விட்டது. அடுத்ததாக, சமுதாய அமைப்பில், வாய்ப்புகளும், வசதிகளும் அளிக்கப்பட்டால், ஒவ்வொரு தனிமனிதனும், அவனுடைய சுயமுயற்சியால் சமூக, பொருளாதார, அரசியல் ரீதியாக உயரமுடியும் என்பதையும்

ஒவ்வொரு தனிமனிதனும், அவனுக்குரிய இயல்பான பங்கினையும் உரிமையினையும் பெறுவதை யாரும் தடுக்கமுடியாது என்பதனையும் குடியேற்ற வாழ்க்கையின் அனுபவங்கள் உணர்த்திவிட்டன. இந்த அனுபவ உண்மைகளோடு, புதிய கருத்துகள் அளித்த சக்தியும், நம்பிக்கையும், அறிவுஒளிர்வு இயக்கத்தினை மேலும் ஊக்கமுள்ள தாக்கியது. மனித சமூகத்தினை உயர்த்தும் நோக்கம், அரசியலில் சீர்திருத்தம் செய்யும் முயற்சி, அறிவியல் கண்டுபிடிப்புகளில் உண்டான ஆர்வம், பயன்தரும் கல்வியினைப் பரப்புதல் வேண்டு மென்கிற துடிப்பு எல்லாமே இந்த இயக்கத்தின் அம்சங்களாயின. எனினும், இந்த இயக்கமானது, குடியேற்ற மக்களுக்கு, அறிவியலை விட, அரசியலில் உறுதுணையாய் நின்றது.

# 5. அமெரிக்க சுதந்திரப் போர் (1775 — 83)

பதின்மூன்று குடியேற்ற நாடுகளும் ஆரம்பத்தில் சுதந்திரமாகவே இருந்தன எனக் கூறலாம். ஒவ்வொரு குடியேற்ற நாடும் தனி ஆட்சி அமைப்பைப் பெற்றிருந்தது. தாய்நாடாகிய பிரிட்டனும் உள்நாட்டுச் சிக்கல்களிலும், ஐரோப்பியப் போர்களிலும் ஈடுபட்டிருந்தமையால் குடியேற்ற நாடுகளைக் கட்டுப்படுத்துவதில் கவனம் செலுத்தவில்லை. பதினெட்டாம் நூற்றுண்டில் பிரிட்டன் படிப்படியாகக் குடியேற்ற நாடுகளைக் கட்டுப்படுத்த ஆரம்பித்தது. இதனை மக்கள் விரும்பவில்லை. இறுதியில் மூன்ரும் ஜார்ஜின் ஆட்சிக் காலத்தில் பதின்மூன்று குடியேற்ற நாடுகளும் பிரிட்டனுடன் போரிட்டுப் பூரண சுதந்திரம் பெற்றன. மூன்ரும் ஜார்ஜ் பட்டத்திற்கு வரும் முன்னரே அமெரிக்க மக்களின் உள்ளங்களில் உரிமைவேட்கை புகைய ஆரம்பித்தது. தங்கள் தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்து கொண்டும், தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொண்டும் வருகின்ற அமெரிக்கர்கள், சுமார் 3000 மைல்களுக்கு அப்பாலுள்ள ஓர் அரசாங்கத்தினுல் அல்லது ஓர் அமைச்சரவையினுல் (பிரிட்டிஷ்) தாங்கள் ஆளப்படுவதை அமெரிக்கர்கள் விரும்பவில்லை. மூன்ரும் ஜார்ஜின் பிடிவாதத்தாலும், ஆதிக்க மனப்பான்மையாலும் அவ்வேட்கை நன்கு கொழுந்துவிட்டெரிய ஆரம்பித்து ஒரு போராக உருவெடுத்தது.

## போருக்கான காரணங்கள்

### (1) ஏழாண்டுப் போரின் விளைவு.

ஏழாண்டுப் போரின் இறுதியில் வடஅமெரிக்காவில் இருந்து வந்த பிரெஞ்சு ஆதிக்கம் மறைந்தது. அத்துடன் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளைப் பிரெஞ்சுக்காரர் தாக்கக்கூடும் என்ற பேரச்சமும் அகன்றது. தெற்கிலிருந்த ஸ்பானியர்களும் தங்களது செல்வாக்கை

இழந்தனர். இவற்றின் விளைவாக பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் தங்கள் பாதுகாப்பிற்காகத் தாய் நாட்டின் உதவியை நாடும் கட்டாயத்தினின்றும் விடுதலை பெற்றனர். மேலும், ஏழாண்டுப் போரின்போது பதின்மூன்று குடியேற்றநாட்டினரும் சேர்ந்து ஒன்றாகப் போரிட ஒரு வாய்ப்பைப் பெற்றனர். அதனால் அவர்களிடையே ஓர் ஒற்றுமை மனப்பான்மை வளர்ந்திருந்தது. பல மாநிலங்களையும் ஒன்றாக இணைக்கும் எண்ணமும் அப்போது பலருக்கு உதித்தது. மற்றும் ஏழாண்டுப் போரில் அமெரிக்கர் பலர் சிறந்த போர்ப் பயிற்சி பெற்றனர். அவர்களிடையே தன்னம்பிக்கை வளர்ந்திருந்தது. சில போர்க்களங்களில் பிரிட்டிஷ் துருப்புக்களைவிட அமெரிக்க வீரர்கள் சிறப்பாகப் போரிட்டார்கள். எனவே, பிரிட்டிஷாரை எதிர்த்து வெற்றி பெறலாம் என்ற நம்பிக்கையும் அமெரிக்கர்களிடையே ஏற்பட்டது.

ஏழாண்டுப் போருக்காகப் பிரிட்டன் பெருமளவில் செலவு செய்தது. அதனால் நாட்டுக் கடனும் அதிகரித்தது. போருக்குப் பின்னரும் பிரெஞ்சுக்காரர்களாலும், செவ்விந்தியர்களாலும் குடியேற்ற மக்களுக்கு ஏற்படும் ஆபத்து முற்றிலும் நீங்கியதாகத் தெரியவில்லை. எனவே, பிரிட்டிஷ் அரசு குடியேற்ற நாடுகளின் பாது காப்புக்காக ஒரு கப்பற்படையையும், ஒரு சேனையையும் அமெரிக்காவில் வைத்திருந்தது. இதனால் ஏற்படும் செலவினைக் குடியேற்ற நாடுகளும் ஓரளவு பகிர்ந்து கொள்ளவேண்டும் என பிரிட்டிஷ் அரசு கருதி அமெரிக்கர்மீது வரிவிதிக்க ஆரம்பித்தது. இதனை அமெரிக்கர் வெறுத்தனர்.

### (2) வாணிகக் கட்டுப்பாடுகள்

வணிக முறையில் இருந்த சில கட்டுப்பாடுகளும் குடியேற்ற நாட்டிற்கும் தாய்நாட்டிற்கும் இடையே மனக்கசப்பை உண்டாக்கி இறுதியில் போராக மாறக் காரணங்களாய் இருந்தன. அக் காலத்தில் குடியேற்ற நாடுகள் தாய்நாட்டின் நன்மைக்காகத்தான் இருக்கின்றன என்ற கருத்து நிலவி வந்தது. எனவே பிரிட்டனுக்குச் சாதகமாகவே குடியேற்ற நாடுகளின் வாணிகம் இருக்க வேண்டுமென வற்புறுத்தப் பட்டது. அதன் விளைவாகப் புகையிலை, பருத்தி போன்ற சில மூலப் பொருள்களையெல்லாம் பிரிட்டனைத் தவிர வேறு நாடுகளுக்கு அனுப்ப அமெரிக்கருக்கு உரிமை இல்லாதிருந்தது. இதனால் வேற்று நாடு களுக்கு ஏற்றுமதி செய்வதனால் வரக்கூடிய ஆதாயம் தடைப்பட்டது. மற்றும் அமெரிக்கர் தங்களது வணிகப் பொருள்களைப் பிரிட்டிஷ் கப்பல்களில் தவிர வேற்று நாட்டுக் கப்பல்களில் அனுப்புவதை நாவாய்ச் சட்டங்கள் (Navigation Act) தடை செய்தன. ஆகவே குடியேற்ற நாடுகள் கள்ளக்கடத்தலில் ஈடுபட்டன. மூன்றும் ஜார்ஜின் அமைச்சர் கிரென்வில் (Grenville) கள்ளக் கடத்தலை

அறவே ஒழிக்க விரும்பி நாவாய்ச் சட்டங்களைக் கடுமையாகச் செயல் படுத்தினர். அதனால் அமெரிக்கரின் இலாபம் குறைந்தது.

### (3) ஆட்சியமைப்பில் குறைபாடுகள்

குடியேற்ற நாடுகளில் நிறுவப்பட்டிருந்த ஆட்சியமைப்பில் காணப்பட்ட குறைகளும் போருக்குரிய காரணங்களில் ஒன்றாகும். ஒவ்வொரு குடியேற்ற நாட்டின் ஆளுநரையும் (Governor) இங்கிலாந்தின் அரசர் நியமித்து வந்தார். ஆளுநர் மன்னர் பெயரில் குடியேற்ற நாடுகளின் நிருவாகத்தைக் கவனித்து வந்தார். ஒவ்வொருகுடியேற்றத்திலும்மக்களால்ஒருசட்டசபை தேர்ந்தெடுக்கப் பட்டது. ஆளுநருக்கு ஊதியத் தொகையை, அளிக்கும் அதிகாரம் அச் சட்டசபையினிடத்திருந்தது. அடிக்கடி ஆளுநருக்கும் சட்ட சபைக்குமிடையே சச்சரவுகள் தோன்றின. சட்டசபை, ஆளுநரைத் தன்னுடைய அதிகாரத்திற்குட்படுத்த முயன்றது. ஆளுநர், சட்ட சபைக்கு உட்பட்டு நடக்க மறுத்தார். பொதுமக்கள் தங்களது அதிகாரமே பெருக்கப்படவேண்டுமெனவும், அடக்குமுறை ஆட்சிக்கு வித்தான ஆங்கில ஆட்சியும் அதன் சின்னமான ஆளுநரும் ஒழிய வேண்டுமெனவும் கூக்குரலிட்டனர்.

### (4) கிரென்வில்லின் கொள்கை

அமெரிக்காவில் குடியேற்ற நாடுகளைப் பாதுகாக்க நிரந்தரமாக ஒரு பிரிட்டிஷ் படையைப் பராமரிப்பதற்கான செலவினை ஈடுகட்டும் நோக்கத்துடன் கிரென்வில் 1765-ல் பத்திரமுத்திரைச் சட்டத்தை (Stamp Act) இயற்றினர். அதன்படி எல்லாப் பத்திரங்களும் முத்திரையிடப்பட்ட காகிதங்களில் எழுதப்பட வேண்டும். இது வரை, பிரிட்டிஷ் அரசு குடியேற்ற நாடுகளின்மீது நேரடி வரிகளை விதித்ததில்லை. எனவே, இதற்கு அமெரிக்காவில் வன்மையான எதிர்ப்பு தோன்றிற்று. அமெரிக்கப் பிரதிநிதிகள் இல்லாத பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு அமெரிக்கர்மீது வரிவிதிக்க உரிமை கிடையாது என்று அமெரிக்கர் வாதிக்கலாயினர். பிரிட்டிஷ் பாராளு மன்றத்தில் 'பிரதிநிதித்துவம் இல்லையேல் வரியும் இல்லை' (No taxation without representation) என்றும் கூக்குரலிட்டனர்; பிரிட்டிஷ் அரசின் வரிக் கொள்கையை முறியடிப்பதற்காக எத்தகைய கிளர்ச்சிகளையும், தியாகங்களையும் செய்யத் தயாராக இருந்தார்கள். முத்திரைப் பத்திரங்களைக்கொளுத்துதல், அதை விற்கும்அதிகாரிகளை விரட்டல், கவர்னர்களைக் கொல்ல முயலுதல் போன்ற வன்முறைச் செயல்களில் கலகக்காரர்கள் ஈடுபட்டனர். பத்திரமுத்திரைச் சட்டத்திற்குக் கடும் எதிர்ப்புத் தோன்றவே 1766ஆம் ஆண்டு ராக்கிங்ஹாம் (Rockingham) தலைமை அமைச்சரானதும் அதனை ரத்து செய்தார். ஆனால், பிரிட்டிஷ் பாராளுமன்றத்திற்குக் குடியேற்ற

நாடுகள் மீது வரி விதிக்க உரிமை உண்டென்று கூறுகிற அறிவிப்புச் சட்டமொன்றையும் (Declaratory Act) இயற்றினர். இதை அமெரிக்கர் வெறுத்தனர்.

### (5) டவுன்ஷெண்டு சட்டம்

சார்லஸ் டவுன்ஷெண்டு (Charles Townshend) குடியேற்ற நாடுகளின் பாதுகாப்புக்காக அமைக்கப்படும் இராணுவம், கப்பற் படை ஆகியவற்றிற்காகச் செலவிடப்படும் தொகையைப் பெறத் தேயிலை, காகிதம், கண்ணாடி ஆகிய பொருள்களின்மீது மறைமுக வரியை விதித்தார். இவ்வரி அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் துறைமுகங்களுக்குள் மேற்கூறிய பொருள்களைக் கொண்டு செல்லும் போது திரட்டப்படவேண்டும். எனவே, இதற்கு எதிர்ப்பு ஏதும் இராது என்று டவுன்ஷெண்டு எண்ணினர். ஆனால், இதற்கும் கடும் எதிர்ப்பு தோன்றியது. பல இடங்களில் கிளர்ச்சிகள் ஏற்பட்டன. பிரிட்டிஷ் பொருள்களை வாங்கா இயக்கம் அமெரிக்காவில் வளர்ந்தது. வரி விதிக்கப்பட்ட பொருள்களை இறக்குமதி செய்வதில்லை என்று வணிகர்கள் தமக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டனர். இறக்குமதியின் அளவு அதனால் பாதியாகக் குறைந்தது. இதன் காரணமாக 1770ஆம் ஆண்டு நார்த் பிரபு (Lord North) தேயிலை தவிர மற்றப் பொருள்களின் மீதிருந்த வரிகளை ரத்து செய்தார்.

### (6) பாஸ்டன் படுகொலை 1770

டவுன்ஷெண்டு விதித்த மறைமுக வரிகளை மசாசூசெட்ஸ் (Massachusetts) மாநிலம் ஏற்றுக்கொள்ள மறுத்ததால் அதன் சட்டசபை கலைக்கப்பட்டது. அதையொட்டி அங்குக் கலகங்கள் நிகழ்ந்தன. இராணுவ அதிகாரிகள் கலகங்களை அடக்கினர். பாஸ்டன் நகரில் ஏற்பட்ட கலகத்தில் பிரிட்டிஷ் சிப்பாய்களின் துப்பாக்கிப் பிரயோகத்தால் மூவர் இறந்தனர். இதனை 'பாஸ்டன் படுகொலை' (Boston Massacre) என்றழைத்தனர். இதனால் அமெரிக்கருக்குப் பிரிட்டிஷார்மேல் இருந்த வெறுப்பு அதிகமாயிற்று.

### (7) பாஸ்டன் தேநீர் விருந்து (Boston Tea Party) 1773

நார்த் பிரபு ஆங்கிலக், கிழக்கிந்திய வர்த்தக நிறுவனத்திற்கு உதவி செய்யும்பொருட்டு அந் நிறுவனம் இந்தியாவிலிருந்து அமெரிக்காவிற்குத் தேயிலையை நேராக எடுத்துச் செல்ல அனுமதியளித்தார். இதனால் தேயிலையின் விலை குறைந்தது. இதனை அமெரிக்கர் தவருகப் புரிந்துகொண்டனர். விலையைக் குறைத்துக் குடியேற்ற மக்களைத் தேயிலைவரியை ஏற்றுக் கொள்ள, பிரிட்டிஷார் செய்த சூழ்ச்சியாகக் கருதினர். ஒவ்வொரு துறைமுகத்திலும் கிழக்கிந்திய வர்த்தக நிறுவனத்தின் தேயிலைக்குக் கடும் எதிர்ப்பு

தோன்றியது. பாஸ்டன் துறைமுகத்தில் தேயிலை ஏற்றி வந்த ஒரு கப்பலுக்குள் சிவப்பிந்தியர் போன்று வேடந்தரித்து ஐம்பது அமெரிக்கர் புகுந்து 340 தேயிலைப் பெட்டிகளை உடைத்துக் கடலில் வீசி எறிந்தனர். இந் நிகழ்ச்சி 'பாஸ்டன் தேநீர் விருந்து' எனப்படும். பிரிட்டிஷ் அரசு உடனே கடுமையான நடவடிக்கைகளை மேற்கொண்டது. பாஸ்டன் துறைமுகம் மூடப்பட்டது. பாஸ்டன் துறைமுகத்தைத் தன்னகத்தே கொண்டிருந்த மசாசூசெட்ஸ் குடியேற்ற நாட்டின் சாசனமும் ரத்து செய்யப்பட்டது.

## பிலடெல்பியா மாநாடு (Philadelphia Congress)

மசாசூசெட்ஸ் மாநிலத்தின் சாசனம் ரத்து செய்யப்பட்டதைக் கண்ட பிற மாநிலங்கள் தங்களுக்கும் அதே நிலை வரக்கூடும் என அஞ்சி பிலடெல்பியாவில் (1774) ஒரு மாநாட்டைக் கூட்டின. அம் மாநாட்டிற்கு ஜார்ஜியாவைத் தவிர மற்ற மாநிலங்களிலிருந்து பிரதிநிதிகள் வந்தனர். தங்கள்மீது வரி விதிக்க பிரிட்டிஷ் பாராளுமன்றத்துக்கு உரிமையில்லை என்றும் மசாசூசெட்ஸின் உரிமை ரத்து செய்யப்பட்டதைக் கண்டித்தும் அம் மாநாட்டில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன; பிரிட்டனுடன் வாணிகம் செய்வதை நிறுத்த வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. ஒரு பாதுகாப்புக் குழு அமைக்கப்பட்டது ; ஒரு படையும் சேர்க்கப்பட்டது.

ஜார்ஜ் வாஷிங்டன் என்பவர் அமெரிக்கப் படையின் தலைவராக நியமிக்கப்பட்டார். அவர் வர்ஜீனியா குடியேற்ற நாட்டைச்சார்ந்தவர்; எல்லைப்புறத்தில் இராணுவ அதிகாரியாகவும் பணியாற்றியிருந்தார். அவரது தளரா நாட்டுப்பற்றும், தெள்ளறிவும், துணிவும் பெருந்தன்மையும், நடுநிலையுமே அவருக்குப் படைத்தலைவர் பதவியைத் தேடித்தந்தன எனலாம். அவருடைய நேர்மையும், மேன்மையும், இரக்க குணமும் இறுதிவரை அவரை விட்டு விலகவே இல்லை. துணிவும், சகிப்புத்தன்மையும் ஒருங்கே பெற்றிருந்த அவர் எதிரியைத் தாக்க வேண்டிய சரியான தருணத்தை நோக்கிப் பொறுமையுடன் காத்திருப்பார். எனினும், வரம்பு கடந்து தவறு செய்யப்பட்டால் அவருக்கு அளவுக்கு மீறிய சினம் வரும்; கண்டிப்பான குணமுடையவராயிருந்தமையால் துருப்புக்களைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கினர்; இராணுவக் குற்றங்களை மிகக் கடுமையாகத் தண்டித்தார். எனினும், அவருடைய நேர்மையையும், தங்களிடத்து காட்டிய அக்கறையையும் கண்ட துருப்புக்கள் அவரிடம் முழு நம்பிக்கை கொண்டிருந்தனர். ஊதியம் சரிவர அளிக்கப்படாத காரணத்தால் கலகம் விளைவித்த துருப்புகளைக் கண்டு வாஷிங்டன் உணர்ச்சியுடன் பேசியபோது பலர் கண்ணீர் வடித்தனர். உரிமைப் போரின்போது அவர் தம் செலவுத் தொகையைத் தவிர வேறு


அமெரிக்க உரிமைப் போர்
செயின்ட் லாரென்ஸ் நதி
கிரௌன் பாயிண்ட்
டிக்கண்டரோகா
சரடோகா
பங்கர் குன்று
நியூயார்க்
கன்கார்டு
லெக்சிங்டன்
பென்சில்வேனியா
டிரெண்டன்
போர்ஜ் பள்ளத்தாக்கு
பிலடெல்பியா
வடமேற்கு
நிலப் பகுதி
வர்ஜீனியா
யார்க்டவுன்
வட கரோலினா
தென்
கரோலினா
ஜார்ஜியா
மிசிசிபி நதி
ஸ்பானியர் பகுதி
மெக்ஸிகோ வளைகுடா
அட்லாண்டிக் பெருங்கடல்

ஊதியம் எதையும் எற்கவில்லை. அத் தொகைக்கும் அவர் சரிவர கணக்கு எழுதி வைத்திருந்தார். போர் முடிவுற்றதும் தம்முடைய பண்ணைக்குத் திரும்பிச் சென்று பயிர்த்தொழிலில் ஈடுபட வாஷிங்டன் விரும்பினர். ஆனல், கடமை அவரை அழைக்கவே அவர் அதற்குக் கீழ்ப்படிந்தார்.

### போர் நிகழ்ச்சிகள்

மசாசூசெட்ஸ் மாநிலத்தின் சாசனம் ரத்து செய்யப்பட்டதை யடுத்து ஆங்கிலத் தளபதி கேஜ் (Gage) என்பவர் ஆளுநராக நியமிக் கப்பட்டார். பாஸ்டன் நகரின் அருகிலிருந்த கன்கார்டு (Concord) பட்டணத்திலுள்ள அமெரிக்கப் போர்த்தளவாடக் கிடங்கினைக் கைப்பற்ற ஒரு படையைக் கேஜ் அனுப்பினர். அமெரிக்கர் அப் படையினை லெக்ஸிங்டனில் (Lexington) தடுத்து நிறுத்த முயன்றனர். அம் மோதலில் எட்டு அமெரிக்கர் சுட்டு வீழ்த்தப் பட்டனர் (April 1755). இச் செய்தி எல்லா மாநிலங்கட்கும் பரவியது. ஆங்கிலேயர் வெற்றிகரமாக ஆயுதக் கிடங்கினைக் கைப்பற்றினர்.

அமெரிக்கப் படையினர் போதிய பயிற்சியற்றவர்களாயிருந்தனர். அவர்களிடத்துப் போர்க் கருவிகளும் போதிய அளவு இருக்கவில்லை. இருப்பினும் நற்பயனைச் சிறந்ததொரு படைத்தலைவரை அவர்கள் பெற்றிருந்தனர். அமெரிக்கர், பாஸ்டனைக் கைப்பற்றத் திட்டமிட்டு முற்றுகையிட்டனர். பங்கர் குன்றில் (Bunker's Hill) ஆங்கிலப் படை கேஜின் தலைமையில் போரிட ஆரம்பித்தது. ஆங்கிலேயர் போரில் வெற்றி பெற்றனர். ஆனல்; பேரளவில் வீரர்களை இழந் தனர். (போதிய அளவு) போர்த் தளவாடங்கள் இல்லாமையால் வாஷிங்டன் பின்வாங்கினர். பின்னர் எதிர்பார்த்த உதவி வந்ததும் அவர் போரிட ஆயத்தமானர். இதனைக் கண்ட ஆங்கிலேயர், பாஸ்டனை விட்டு விலகினர். அடுத்து அமெரிக்கர், கனடாவைப் கைப்பற்ற நினைத்துப் படையெடுத்துத் தோல்வியுற்றனர்.

### சுதந்திர அறிவிப்பு—ஜூலை 4, 1776

மே 1775-ல் இரண்டாவது மாநாடு பிலடெல்பியாவில் கூட்டப் பட்டது. அம் மாநாட்டில் அமெரிக்கர் 'ஆலிவ் கிளை விண்ணப்பம்' (Olive Branch Petition) ஒன்றைத் தயாரித்து, போரை நிறுத்தி அமைதிக்கு வழி காணவேண்டி மூன்றும் ஜார்ஜுக்கு அனுப்பினர். ஆனல், மூன்றும் ஜார்ஜ் அந்த விண்ணப்பத்தை மதியாது, புறக்கணித்து விட்டார். பிரிட்டிஷ் படையினரின் நாசவேலைகளாலும், மூன்றும் ஜார்ஜ் மன்னரின் பிடிவாதத்தாலும் வெறுப்புற்ற அமெரிக்கர் 1776ஆம் ஆண்டு, ஜூலை 4ஆம் நாள் 'சுதந்திர

அறிவிப்புப் பத்திரம்' (Declaration of Independence) ஒன்றை வெளியிட்டனர். அதில் அமெரிக்கா, சுதந்திர நாடு என அறிவிக்கப்பட்டது. மற்றும் அப் பத்திரத்தில் பிரிட்டிஷ் பேரரசிலிருந்து பதின்மூன்று குடியேற்றங்களும் பிரிவை நாடும்படி தூண்டியதற்கான காரணங்கள் பல வரிசையாக எடுத்துக் காட்டப்பட்டிருந்தன.

'சுதந்திர அறிவிப்புப் பத்திரம்' அரசியல் தத்துவத்தில் ஒரு பெரும் இலக்கியமாகக் கருதப்படுகிறது. மேலை நாட்டு அரசியல் அரங்கில் உணர்வூட்டும் பெரும் சக்தியாக இது விளங்கிற்று. அச்சமயம் இங்கிலாந்திலிருந்து வெளி வந்த **தாமஸ் பெயின்** எழுதிய "பொது அறிவு" (**Common Sense**) என்னும் நூல் அமெரிக்கரை மிகவும் கவர்ந்தது. பெயின் ஒரு கீர்த்தி வாய்ந்த இளம் முற்போக்குவாதி. தமது நூலில் பிரிட்டிஷ் அரசரைத் தாக்கியும், கேலி செய்தும் அவர் எழுதியிருந்தார். அக் காலத்து நிலவிய அரசியல் குழப்பங்களுக்குச் சுதந்திரம் ஒன்றுதான் மருந்தென்றும், தாமதம் ஆகஆக சுதந்திரத்தைப் பெறுவதும் அதிகக் கடினமாகுமென்றும் சுதந்திரம் ஒன்றுதான் அமெரிக்க ஐக்கியத்தை உருவாக்கும் என்றும் அவர் தர்க்க ரீதியில் எடுத்துரைத்தார். இது அமெரிக்கரிடையே சுதந்திர உணர்ச்சியை ஊட்டியது. உடனடியாகத் தங்களுக்குச் சுதந்திரம் வேண்டுமென்பதை எல்லாக் குடியேற்றங்களும் ஏற்றுக் கொண்டன. 1776, ஜூன் மாதம் 7 ஆம் நாள் நடந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற கூட்டத்தில் **ரிச்சர்டு ஹென்றி லீ** என்பவர் "அமெரிக்காவிற்குச் சுதந்திரம் வேண்டும்" என்ற யோசனையை முன்மொழிந்தார். அமெரிக்கா முன்னேற வேண்டுமானால் இங்கிலாந்திடமிருந்து பிரிந்து சுதந்திர நாடாக வேண்டும் என்ற கருத்தை அமெரிக்கர்கள் யாவரும் ஏற்றனர்.

இதற்கிடையில் வர்ஜீனியாவைச் சேர்ந்த முப்பத்து மூன்று வயதேயான இளைஞரான தாமஸ் ஜெபர்சன் (**Thomas Jefferson**) என்பவரிடம் சுதந்திர அறிவிப்புப் பத்திரத்தைத் தயாரிக்கும் பொறுப்பு விடப்பட்டிருந்தது. ஜெபர்சன் மனித உரிமை பற்றிய விரிவான விளக்கத்தினை எழுதினார். "எல்லா மனிதர்களும் சமமாகப் படைக்கப்பட்டிருக்கிறார்கள்; படைத்தவனால் அவர்களுக்கு, பறிக்க முடியாத சில உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. வாழ்க்கை உரிமை, சுதந்திர உரிமை, மகிழ்ச்சியை நாடும் உரிமை ஆகியவை இவற்றுள் அடங்கும். இவ்வுரிமைகளை அடைவதற்காகவே மக்களிடையே அரசுகள் நிறுவப்படுகின்றன. அரசுக்கு ஆளப்படுபவர்களுடைய அனுமதியுடன் நியாயமான அதிகாரங்கள் வழங்கப்படுகின்றன. எந்த அரசும் இந்த இலட்சியங்களை மதிக்காது அழிக்க முற்பட்டால், அவ்வரசை மாற்றியமைத்துப் புதிய அரசு ஒன்றை நிறுவ மக்களுக்கு உரிமையுண்டு; அரசின் அடிப்படைக் கொள்கை

களும், நிருவாக சக்திகளும் மக்களுக்கு நலனையும் மகிழ்வையும் அளிக்கக் கூடியனவாக இருக்கவேண்டும். இவ்வுண்மைகளைச் சிறப்பு மிக்கனவாக நாங்கள் மதிக்கிறோம்''- என்று ஜெபர்சன் குறிப்பிட்டிருந்தார்.

சுதந்திர அறிவிப்புப் பத்திரம் குடியாட்சியின் தத்துவத்தை இரத்தினச் சுருக்கமாகக் கூறியுள்ளது எனலாம். உலகில் சில விஷயங்கள் சுய நிரூபண உண்மைகள் (Self-evident truths) என்பது அமெரிக்கரின் கருத்து. மக்களனைவருக்கும் கடவுள் முன்னிலையிலும், சட்டத்தின் முன்னிலையிலும் வேறுபாடு கிடையாது. ஜெபர்சன் இதனை எழுதிய காலத்தில் அமெரிக்காவில் ஏழை, பணக்காரன், ஆண், பெண், கறுப்பர், வெள்ளையர் எனப் பல வேறுபாடுகள் இருந்தன. ஆனால், ஒரு சமூகம் தன் இலட்சியப்படி வாழ முடியவில்லை என்பதற்காக அந்த இலட்சியமே பொய்யாகிவிடாது. சமத்துவம் என்னும் கருத்து அறிவிக்கப்பட்டதும் அஃது அமெரிக்கர் சிந்தனையில் கனிந்து புகையலாயிற்று.

தன்னிடமிருந்து பிரிக்க முடியாத உரிமைகள் சிலவற்றை மனிதன் பிறக்கும்போதே இயல்பாகப் பெற்றுள்ளான் என்ற கருத்தும் சுதந்திர அறிவிப்புப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. அவ்வுரிமைகள் எந்த அரசராலும் அளிக்கப்பட்டவையல்ல. இந்தக் கருத்தும் அமெரிக்கர் உள்ளத்தில் வேரூன்றி அதிகாரபூர்வமான ஆட்சியை எதுர்க்கத் துணிவு ஊட்டியது. இவ்வுரிமைகளைக் காக்கவே அரசுகள் அமைக்கப்படுகின்றன. அத்தகைய ஆட்சி அமைப்புகளெல்லாம் ஒருவகையான ஒப்பந்த அடிப்படையில் உருவாயின. மக்களது உயிரையும், உரிமைகளையும், உடைமைகளையும் காப்பாற்றவே அரசுக்கு அதிகாரங்கள் தரப்பட்டன. சுருங்கக் கூறினல், தங்களுக்கு நன்மை செய்வதற்காகவே மக்கள் அரசுகளை உருவாக்கினர்களே ஒழிய தீமை செய்வதற்காக அன்று. எந்தக் குறிக்கோளுக்காக அரசு அமைக்கப்பட்டதோ, அந்தக் குறிக்கோளை அரசு நிறைவேற்றத் தவறினல் அது மக்களின் ஆதரவையும் நம்பிக்கையையும் இழக்கும். மக்கள், அரசை உருவாக்க முடியுமானல் அவர்களே அதனை அழிக்கவும், மாற்றியமைக்கவும், புதியதொரு அரசை நிறுவவும் முடியும் என்ற கருத்தும் தெளிவாயிற்று. அக் கருத்தை விரைவில் அமெரிக்கர் செயல் முறையில் கொண்டுவந்தனர். உரிமைப் போர் நடந்துக் கொண்டிருக்கும்போதே போரின் குழப்பத்திற்கும் இடுக்கண்களுக்கும் இடையிலேயே இக் கருத்தைச் செயலாக்க முனைந்தனர். மாநாடுகளில் கூடிப் பேசி, சட்ட அடிப்படையில் பழைய அரசுகளை நீக்கிப் புதியனவற்றை நிறுவினர்கள். அரசியலமைப்பில் உயிருக்கும், உரிமைக்கும், உடைமைக்கும் பாதுகாப்பளிக்கப்பட்டது.

பல நூற்றாண்டுகளாகத் தத்துவ அறிஞர்களின் சிந்தனைப் பொருளாக இருந்த கருத்துகள் முதன்முறையாக நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டுச் சட்டமாக்கப்பட்டன. அவை 1776-ஜூலைமாதம் 4ஆம்நாள் அமெரிக்க மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இச் சாசனத்தின் அறைகூவலே பிரஞ்சு நாட்டு அரசியல் சட்டமும், இதற்குப் பின்னால் கனடா, பிரேசில், இந்தியா முதலிய நாடுகளின் அரசியல் சட்டத்திற்கும் ஒரு முன்மாதிரியாக அமைந்தது. சுதந்திர அறிவிப்பிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாறு தொடங்கிற்று.

1776-ல் சர் வில்லியம் ஹோவ் (Sir William Howe) பிரிட்டிஷ் படைகளின் தளகர்த்தராக நியமிக்கப்பட்டார். அவர் பாஸ்டனிலிருந்து பிரிட்டிஷ் துருப்புகளை விலக்கிக் கொண்டார். வாஷிங்டனைப் புரூக்லின் (Brooklyn) என்னுமிடத்தில் தோற்கடித்தார். ஆனால், ஹோவ் மேற்கொண்டு முன்னேறவொட்டாதபடி டிரென்டன் (Trenton), பிரின்ஸ்டன் (Princeton) ஆகிய இடங்களில் வாஷிங்டன் முறியடித்துத் தடுத்து நிறுத்தினர். அடுத்து நியூ இங்கிலாந்து குடியேற்றங்களைக் கைப்பற்ற எண்ணி பிரிட்டிஷார் திட்டமிட்டுப் படையெடுத்தனர். பர்காயின் (Burgoyne) கனடாவிலிருந்து ஒரு படை திரட்டிக் கொண்டும், கிளிண்டன் (Clinton) நியூயார்க்கிலிருந்து ஒரு படை திரட்டிக் கொண்டும் வந்து, ஒன்று சேர்ந்து நியூஇங்கிலாந்துக் குடியேற்றங்களை ஏனைய பகுதிகளிலிருந்து துண்டிக்க எண்ணினர். பர்காயின், டிக்கண்டிரோகா (Ticonderoga) வரை வெற்றியோடு முன்னேறினர். ஆனால், மேலும் உதவி வராததனால் அவர்களை இறுதியில் அமெரிக்கப் படைத் தளபதி கேட்ஸ் (Gates) என்பவர் சாரடோகா (Saratoga) என்னுமிடத்தில் முறியடித்தார். நான்காயிரம் பிரிட்டிஷ் போர்வீரர்கள் சரணடைந்தனர்.

### அமெரிக்கருக்குப் பிரான்சும் ஸ்பெயினும் உதவி

சாரடோகா வெற்றியானது அமெரிக்க சுதந்திரப் போரில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்திற்று ஐரோப்பிய நாடுகள் பல பிரிட்டனுடன் நட்புறவற்ற நிலையிலிருந்தன. எனவே, அமெரிக்கருக்கு அச் சூழ்நிலை சாதகமாயிருந்தது. ஏற்கனவே பிரான்ஸ், ஸ்பெயின் ஆகிய நாடுகளிள் அரசர்கள் அமெரிக்காவுக்கு இரகசியமாகக் கடன் கொடுத்திருந்தார்கள். அப் பணத்தைக் கொண்டு ஏராளமான போர்க்கலங்கள் வாங்கப்பட்டிருந்தன. ஆனால், இப்பொழுது வெளிப்படையாக அவ்விருநாடுகளும் உதவ முன்வந்தன. பிரான்ஸ் ஆறாயிரம் சிப்பாய்களை அனுப்ப முனைந்தது. முன்னைக் காட்டிலும் அதிகமாகப் பணமும் தளவாடங்களும் தரப்பட்டன. ருஷ்யா, பிரஷ்யா, ஹாலந்து, டென்மார்க், ஸ்வீடன் ஆகிய நாடுகள் 'படை

யேந்திய நடுநிலைக் கூட்டுறவு' (Armed Neutrality) என்ற ஓர் ஒப்பந்தத்தைத் தம்முள் ஏற்படுத்திக் கொண்டு, தங்களது கப்பல்கள் அமெரிக்காவுக்கு உதவியாகத் தளவாடங்களைத் தாங்கிச் செல்கின்றனவா என்பதைச் சோதிக்கப் பிரிட்டனுக்கு உரிமையில்லை என்று அறிவித்தனர். இதனால், வெகுண்ட ஆங்கிலேயர் ஹாலந்து மீது படையெடுத்தனர். ஸ்பெயின், ஜிப்ரால்டரை முற்றுகை யிட்டது. பிரெஞ்சுக்காரர் மேற்கிந்தியத் தீவுகளைத் தாக்கினர். இந்தியாவில் அவர்கள் ஆங்கிலேயருக்கு எதிராக ஹைதர்அலிக்கு உதவி செய்தனர்.

### யார்க் டவுன் சரணாகதி

பிரிட்டிஷ் தளகர்த்தர்கள் வடபகுதி குடியேற்றங்களில் வெற்றி பெற இயலாமையால், தென்புறத்தில் அமெரிக்கரின் வலிமையைச் சோதிக்க எண்ணினர்; 1779-ல் ஜார்ஜியாவிலும், தென் கரோலினாவிலும் பல பகுதிகளைக் கைப்பற்றினர். சார்ல்ஸ்டன் என்ற முக்கியத் துறைமுகப்பட்டினமும் வீழ்ந்தது. இதைத் தொடர்ந்து அமெரிக்கருக்குப் பல தோல்விகள் கிடைத்தன. இருப்பினும் பிரிட்டிஷ் படைகளை அங்குமிங்கும் அலையவைத்து அலுப்படையும் படிச் செய்வதில் அமெரிக்கர் வெற்றி பெற்றனர். ஆங்காங்கு அமெரிக்க மக்கள் பிரிட்டிஷ் துருப்புக்களின் மீது கொண்டிருந்த விரோத மனப்பான்மையும் அவர்களை முன்னேறவொட்டாமல் தடுத்தது. பிரிட்டிஷ் தளகர்த்தர் காரன்வாலிஸ் (Cornwallis), யார்க் டவுனைத் (York Town) தன்வயப்படுத்தியிருந்தார். அப்பொழுது மேற்கிந்தியத் தீவுகளிலிருந்த பிரெஞ்சுக் கப்பற்படைத் தலைவனை டிக்ராசே (Degrasse) யிடமிருந்து "தான் ஒத்துழைக்கக் கூடும்" என்று வாஷிங்டனுக்குத் தகவல் கிடைத்தது. அந்த வாய்ப்பை வாஷிங்டன் நன்கு பயன்படுத்திக்கொண்டு ஒரு பெரும் படையைத் திரட்டிக் கொண்டு வந்து யார்க் டவுனை முற்றுகையிட்டார். கார்ன்வாலிஸ் கடல்வழியே தப்பிச்செல்லாத வண்ணம் பிரெஞ்சுக் கப்பற்படை தடுத்து நின்றது. வேறு வழியின்றி கார்ன்வாலிஸ் வாஷிங்டனிடம் அக்டோபர் 1781-ல் சரணடைந்தார். சார்லஸ் டவுனையும் அமெரிக்கர் கைப்பற்றினர். ஏனைய இடங்களும் அமெரிக்கர் வசமாயின. 1783ஆம் ஆண்டில் இங்கிலாந்திற்கும் அமெரிக்கருக்குமிடையே வெர்ஸேல்ஸ் உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது.

### வெர்ஸேல்ஸ் உடன்படிக்கை

பாரிசில் நடைபெற்ற சமாதான ஒப்பந்தப் பேச்சில் கலந்து கொள்ள, அமெரிக்க ஐக்கிய நாட்டின் சார்பாகப் பெஞ்சமின் பிராங்க்ளின் (Benjamin Franklin), ஜான் ஆடம்ஸ் (John Adams),

ஜான் ஜே (John Jay) ஆகியோரா சென்றிருந்தனர். பிரிட்டிஷ் அரசின் சார்பில் அமைச்சர் ஷெல்பர்ன் (Shelburne) கலந்து கொண்டார். இருதரப்பினராலும் கையெழுத்திடப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்ட உடன்படிக்கையின்படி, அமெரிக்க சுதந்திரத்தைப் பிரிட்டிஷார் ஒப்புக்கொண்டனர். மேற்கு மிசிசிபி நதி வரையிலுள்ள நிலப்பகுதியையும், வடக்கே ஐம்பெரும் ஏரிகளையும் அமெரிக்கர் பெற்றனர். நியூபவுண்டுலாந்து நீர்ப்பகுதியில் அமெரிக்கருக்கு மீன்பிடிக்கும் உரிமையும் தரப்பட்டது. மிசிசிபி நதியில் தனது கலங்களைச் செலுத்த பிரிட்டன் உரிமை பெற்றது. போரின்போது கைப்பற்றப்பட்ட பிரிட்டனை ஆதரித்தவர்களின் உடைமைகள் புரட்சி யாளர்களால் அவர்களுக்கே திருப்பித் தரப்படவேண்டும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஸ்பெயினுக்குப் புளோரிடாவும், மினர்க்கா வும், தரப்பட்டது. பிரான்சிற்குப் பல மேற்கிந்தியத் தீவுகள் தரப் பட்டன.

**பிரிட்டனின் தோல்விக்குக் காரணங்கள்**

(1) பிரிட்டன் மூவாயிரம் மைலுக்கு அப்பாலிருந்து போர் நடவடிக்கைளில் ஈடுபட நேர்ந்தது. விரைவான போக்குவரத்து வசதிகள் இல்லாத அக் காலத்தில் அத்தகையதொரு போரை அவ்வளவு தொலைவிலிருந்து நடத்துவது மிகவும் இடர்ப்பாடான செயலாகவிருந்தது. ஆள்களையும், பண்டங்களையும், விரிந்த கடல் தாண்டி முறையாக அனுப்பி வைப்பது எளிதான காரியமாகவிருக்க வில்லை. அதற்கு மாருக அமெரிக்கர், பிரிட்டனை எதிர்த்து, அமெரிக்காவிலேயே தங்களுக்கு மிகவும் பழக்கமான நிலப்பரப்பில் போர் புரிந்தனர். (2) பிரிட்டிஷ் தளகர்த்தர்கள் போதிய அளவு அனுபவமும், திறமையும் அற்றவர்களாய்த் திகழ்ந்தனர். பிரிட்டிஷ் தளபதிகள் கேஜ், ஹோவ் ஆகியோர் வாஷிங்டனுக்கு இணையாக விளங்கவில்லை. வாஷிங்டன் நாட்டுப்பற்று, தெளிந்த அறிவு, துணிவு, பெருந்தன்மை ஆகிய பண்புகள் அனைத்தும் ஒருங்கே பெற்று ஒப்பற்ற படைத் தலைவராய் விளங்கினர். (3) அமெரிக்க உரிமைப்போரில் பிரிட்டிஷ் படையிலிருந்தவர்களெல்லாம் அரை மனத்தோடு போரிட்டனர் எனலாம். ஏனெனில், எதிர்த்தரப்பி லிருந்த அமெரிக்கரெல்லாம் பிரிட்டனிலிருந்து குடிபெயர்ந்து வந்தவர்களே. எனவே, ஆங்கிலேயர், ஆங்கிலேயரைத் தாக்கிக் கொல்ல முன்வரவில்லை. அதனல், ஹெஸ்ஸியன்ஸ் (Hessians) என்றழைக்கப்படும் ஜெர்மானியக் கூலிப்படையினர் தருவிக்கப்பட்டு பிரிட்டிஷ் படையில் பணி புரிந்தனர். அவர்களை ஆங்கிலேயரும், அமெரிக்கரும் ஒருமுகமாக வெறுத்தனர். (4) மூன்ரும் ஜார்ஜின் பிடிவாத குணமும் பிரிட்டனின் தோல்விக்கு ஒரு காரணமாகும். அவரது ஆட்சியின் முதல் பத்தாண்டுகளில் நிலையற்ற, ஒற்றுமை இல்லாத பல அமைச்சரவைகள், ஒன்றன்பின் ஒன்ருக மாறிமாறி

அமெரிக்க உரிமைப் போரைத் தோற்றுவிப்பதில் தத்தம் பங்கைப் புரிந்தன. அமைச்சரவை ஒற்றுமை குலைக்கப்பட்டதால் போரினைத் திறம்பட நடத்த முடியவில்லை. (5) பிரிட்டனுக்கு எதிராகப் பிற ஐரோப்பிய நாடுகள் அமெரிக்கருக்கு உதவி புரிந்தன. போரின் இறுதிக் கட்டத்தில் பிரான்சும், ஸ்பெயினும் ஒருமனதாக அமெரிக்கருக்குச் சாதகமாக ஒரு கப்பற்படையை இயக்கினர். ஆதலால், பிரிட்டிஷாருடைய பண்டப்போக்குவரத்து, இன்னல்களுக்குள்ளாகிப் படையினரை வலுவிழக்கச் செய்தது.

**சுதந்திரப் போரின் விளைவு :**

உலக சரித்திரத்தில் ஒரு குடியரசுக்கு முதன்முதலாக வழிகோலியது. (2) உலக வரலாற்றில் முதன்முதலாக எழுதப்பட்ட அரசியல் சாசனம் (Written Constitution) உருவாவதற்கு ஏதுவாகியது. (3) உலக வரலாற்றில் முதன்முதலில் கூட்டாட்சி அரசு (Federal Govt.) உருவாவதற்குக் காரணமாகியது. எல்லாவற்றிற்கும் மேலாக விஞ்ஞான, சரித்திர சகாப்தத்தில் ஒரு பெரிய சாம்ராஜ்ஜியத்தை எதிர்த்துக் குடியரசு முறையில் போராடிய முதல் நிகழ்ச்சி ஆகும்.

# 6. நேசக் கூட்டாட்சி 1781 —89

குடியேற்ற நாடுகள் உரிமை பெற்றதும் முதற்காரியமாகத் தங்களை ஒரு சுதந்திர நாடாக உருவாக்கிக் கொள்வதிலும், ஒரு ஐக்கிய நாட்டு அரசை நிறுவுவதிலும் ஈடுபட்டனர். வியக்கத்தக்க வகையில் ஒரு சில ஆண்டுகளில் உரிமையுடன் கூடிய ஒழுங்கான அரசை நிறுவுவதிலும், தலசுய ஆட்சியோடு தேசிய ஒற்றுமையை நிறுவுவதிலும், அமெரிக்கர் வெற்றி கண்டனர். அதன் மூலம் குடியாட்சி நிறுவனங்கள் சிறப்புறச் செயற்பட முடியும் என்பதை உலகுக்கு எடுத்துக் காட்டினர். அமெரிக்க மக்களிடையே பேரளவில் அரசியல் ரீதியிலும், பொருளாதார ரீதியிலும் வேறுபாடு இருந்தபோதிலும், இத்தகைய முறையில் ஒற்றுமையாகச் செயற்பட்டமை பாராட்டத் தக்கதாகும்.

**மாநிலங்களின் அரசியலமைப்புகள்**

சுதந்திர அறிவிப்புப் பத்திரத்தில் வெளியிட்ட அரசியல் கோட்பாடுகளுக்குச் சட்ட ரீதியில் விளக்கம் காணவும், தங்களது மனக் குறைகளுக்குத் தீர்வு காணும் வகையிலும் மாநில அரசியலமைப்புகளையும், சட்டங்களையும் விருப்பப்படி இயற்றவும், அமெரிக்கர் உரிமைப் போரின் விளைவாகச் சிறந்ததொரு வாய்ப்பைப் பெற்றனர். ஒவ்வொரு மாநிலத்திலும் புதிய அரசு அமைக்கப்பட வேண்டும் என பிலடெல்பியா மாநாடு 1776-லேயே எல்லா மாநிலங்களுக்கும் அறிவுரை வழங்கியிருந்தது. அதனையடுத்துச் சுதந்திர அறிவிப்புப் பத்திரம் வெளியிடப்பட்ட ஓராண்டிற்குள் மாசாசூசெட்ஸ், கனெக்டிக்கட், ரோடுஐலண்டு ஆகிய மாநிலங்கள் தவிர ஏனைய மாநிலங்கள் தத்தம் அரசியலமைப்புகளை அமைத்தன. (மாசாசூசெட்ஸ் மாநிலம் 1780-ல் தன்னுடைய அரசியலமைப்பை அமைத்துக் கொண்டது.) மற்றைய இரு மாநிலங்களும் தங்களது

குடியேற்ற சாசனத்திற்கு ஒரு முகப்புரையைச் சேர்த்து மாற்றி யமைத்துக் கொண்டன.

## நேசக் கூட்டாட்சியின் அமைப்பு

விடுதலைப் போர் முடிவுற்ற சில ஆண்டுகளுக்கு அமெரிக்க ஐக்கிய நாடு உறுதியாக இணைக்கப்படாத நாடுகளின் கூட்டு அமைப்பாக இருந்தது. அவ்வமைப்பின் விதிகளைத் தொகுத்தவர் ஜான் டிக்கின்ஸன் (John Dickinson) என்பவராவார். அரும்பாடு பட்டுப் பெற்ற சுதந்திரத்தையும், மாநிலங்களின் இறைமையையும் போற்றிப் பேணும் நோக்கத்தோடு அவ்விதிகள் வகுக்கப்பட்டன. அவ்விதிகளைக் குடியேற்ற நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கிய சபை 1777-ல் ஏற்றுக் கொண்டது. கூட்டாட்சி அமைப்பின் விதிப்படி குடியேற்ற நாடுகளின் பிரதிநிதிகள் கொண்ட சபையொன்று அமைக்கப்பட்டது. அதில் அங்கம் வகித்திருந்த நாடுகளின்மீது அதிகாரம் செலுத்த அச் சபை உரிமை பெறவில்லை. அம்மாநிலங் களுக்குப் பரிந்துரை செய்யும் உரிமைமையை மட்டுமே பெற்றிருந்தது. அப் பரிந்துரைகளை ஏற்கவோ மறுக்கவோ அந் நாடுகளுக்கு உரிமை இருந்தது. வெளிநாட்டுறவு, பாதுகாப்பு ஆகியவற்றைக் கட்டுப் படுத்தவும், அஞ்சல்நிலையங்கள் நிறுவுதல், நிறுத்தல் முகத்தல் அளவைகள் நிருணயித்தல், நாணயம் அச்சிடல் போன்ற பணிகளைச் செய்யவும் கூட்டாட்சி அரசு அதிகாரம் பெற்றிருந்தது. ஆனல், கூட்டாட்சி அரசு இறைமைத் தன்மையை முழு அளவில் ஏற்றுச் செயற்பட இன்றியமையாத அதிகாரங்களான—வரிகள் விதித்தல், வாணிகத்தைக் கட்டுப்படுத்தல் ஆகிய உரிமைகளைப் பெற்றிருக்க வில்லை. கூட்டாட்சி அரசுக்கான வருமானம் பல மாநிலங்களினின்றும் வேண்டிக் கேட்கப்பட்டுப் பெறப்படும் தொகையைப் பொறுத்திருந் தது. ஆட்சித்துறைபற்றியும், நீதித் துறை பற்றியும் கூட்டாட்சியின் விதிகளில் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. எல்லா அதிகாரங்களும் ஒரே அங்கமான சபைக்கே தரப்பட்டிருந்தது. ஒவ்வொரு மாநிலத் திற்கும் ஒரு வாக்கு தரப்பட்டிருந்தது. முக்கியமான முடிவுகளை யெடுக்க ஒன்பது மாநிலங்கள் இசைவு அளிக்க வேண்டும். கூட்டாட்சி அமைப்பின் விதிகளை மாற்றியமைக்க பதின்மூன்று மாநிலங்களின் இசைவும் தேவை.

## பொருளாதார முன்னேற்றம்

நேசக் கூட்டாட்சி 1781 முதல் 1789 வரை நீடித்தது. நாட்டின் பல பகுதிகளில் போரின் விளைவாகப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருந்தது. இருப்பினும் கூட்டாட்சி காலத்தில் பல துறை களிலும் அதிக முன்னேற்றம் காணப்பட்டது. போர் முடிவுற்றதும் அதிக அளவில் பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டன. அதனல்

அந்நியநாட்டுச் செலாவணி மிகவும் பாதிக்கப்பட்டு அரிய உலோகங்கள் நாட்டில் குறையலாயின. இந் நிலையை மாற்ற உடனடியாக அமெரிக்க வணிகர்களும் முனைந்தனர்; உலகின் பல்வேறு நாடுகளில் புதிய சந்தைகளில் வாணிகம் செய்ய முற்பட்டனர். பல அயல் நாட்டு அரசுகளும் ஒரு சில கட்டுப்பாடுகளுடன் அமெரிக்கர் வாணிகம் செய்ய இசைவளித்தன. ஒரு சில ஆண்டுகளில் வெளி நாட்டு வாணிகம் பன்மடங்காகப் பெருகிவிட்டது. ஒவ்வொரு துறை முகப்பட்டினத்திலும் வாணிகம் சுறுசுறுப்பாக நடைபெற்றது. பண்டங்களை ஏற்றிச் செல்வதற்காக நாடெங்கிலும் சாலைகளை அமைப்பதிலும், கால்வாய்களை வெட்டுவதிலும், பாலங்களைக் கட்டுவதிலும் மக்கள் ஈடுபட்டனர். நிலங்கள் விற்பனை செய்வதிலும், வங்கி முறைகளிலும் (Banking) மக்கள் முனைந்து செயலாற்றி நாட்டின் செல்வத்தைப் பெருக்கினர்.

### புதிய குடியேற்றத் திட்டம்

ஐந்து மாபெரும் ஏரிகளுக்குத் தெற்கேயும், மிசிசிபி நதிக்குக் கிழக்கேயுமுள்ள நிலப்பகுதியினைப் பிரிட்டன் ஏழாண்டுப்போரின் விளைவாக பிரான்சிடமிருந்து பெற்றது. அமெரிக்க உரிமைப் போருக்குப் பிறகு அதே நிலப்பகுதியை அமெரிக்க ஐக்கிய நாடு பெற்றது. ஏழாண்டுப் போருக்குப் பிறகு குடியேற்றங்கள் அலெகெனி மலைத்தொடருக்கு மேற்கே தத்தமக்கு நேர் மேற்கே இருந்த நிலப்பகுதிகள்மீது உரிமை கொண்டாடின. அந்தந்தக் குடியேற்ற நாட்டு மக்களும் அப் பகுதிகளில் குடிபெயரலாயினர். மேற்குப் பகுதியில் குடியேற்றங்கள் நிறுவது குறித்து மாநிலங்களிடையே சிக்கல்கள் தோன்றலாயின. ஆனால், நற்பயனாக அமெரிக்க உரிமைப் போர் முடிவுற்று, அமெரிக்க ஐக்கிய நாடு நிறுவப்பட்டதும் எல்லா மாநிலங்களும் தத்தம் கட்டுப்பாட்டினுள் கொண்டிருந்த மேற்கு நிலப்பகுதிகளை நேசக்கூட்டாட்சியால் ஏற்படுத்தப்பட்ட பொது அரசுக்கு விட்டுக்கொடுத்துவிட்டன. ஆள் நடமாட்டமில்லாத அந் நிலப் பகுதிகளை என்ன செய்வது என்பது கூட்டாட்சி அரசுக்குப் பெரும் பிரச்சனையாக இருந்தது. கூட்டாட்சி மன்றம் பொதுமக்களுக்கு நிலங்களை விற்க, 1785-ல் இயற்றப்பட்ட நில ஆணை ஒன்றில் முடிவு செய்தது. அவ்வாணையின்படி மேற்குப் பகுதியிலுள்ள நிலங்களெல்லாம் அளக்கப்பட்டு, நகர்ப்புறங்களாக வகுக்கப்பட்டும், ஒவ்வொரு நகரமும் முப்பத்தாறு சதுர மைல்கள் பரப்புள்ளனவாக அமைக்கப்பட்டும், ஒவ்வொரு நகரத்திலும் நான்கு சதுர மைல்கள் மைய அரசுக்காக ஒதுக்கப்பட்டும், ஒரு சதுர மைல் பரப்பு ஒரு கல்விக்கூடத்திற்காக ஒதுக்கப்பட்டும் அமைத்தல் வேண்டும். எஞ்சியுள்ள முப்பத்தோரு சதுர மைல்கள் பொதுமக்களுக்கு

ஏலத்தில் விற்கப்படும். இந் நில ஆணை அடுத்த அரை நூற்றுண்டுக்கு ஒரு சிறு மாற்றங்களோடு மேற்கு நிலக் கொள்கைக்கு அடிப்படையாக விளங்கிற்று.

மேற்கு நிலப்பகுதிகளில், சீராகத் தொடர்ந்து மக்கள் குடியேறுவதை ஊக்குவிப்பதற்கான விதிமுறைகள், 1787-ல் பிறப்பிக்கப்பட்ட வடமேற்கு ஆணையில் (North West Ordinance) காணப்பட்டது. வடமேற்கு நிலப்பகுதிகள் இறுதியில் மூன்று அல்லது ஐந்து மாநிலங்களாகப் பிரிக்கப்படும். அந் நிலப்பகுதிகளில் அடிமை முறை (Slavery) இருக்கக் கூடாது. அங்குக் கல்வியைப் பரப்புவதற்காகவும் வழிமுறைகள் வகுக்கப்பட்டன. ஒரு மாநிலமாக உருவெடுக்க அந் நிலப்பகுதிகள் மூன்று நிலைகளைக் கடந்து வர வேண்டும். முதல் நிலையில், மைய அரசு ஒரு நிலப்பகுதியின் எல்லைகளைக் குறிப்பிட்டு ஓர் ஆளுநரையும் நீதிபதிகளையும் நியமிக்கும். அவர்கள் சட்டங்கள் தயாரிப்பார்கள்; ஆனல் அச் சட்டங்களைக் கூட்டாட்சியின் சட்டமாமன்றம் தள்ளுபடி செய்யலாம். இரண்டாவது நிலையில், அந் நிலப்பகுதியில் மக்கள்தொகை 5000ஆக வளர்ந்த பிறகு தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அடங்கிய ஒரு சட்டமன்றத்தைப் பெறலாம். வயது வந்த ஆண்கள் அனைவருக்கும் வாக்குரிமை தரப்படும். மூன்ருவது நிலையில், அந் நிலப் பகுதிகளின் மக்கள் தொகை 60,000 ஆக வளர்ந்ததும் ஒரு மாநிலமாக அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சம உரிமைகளோடு சேர்த்துக் கொள்ளப்படும். இவ்வகையில் நேசக் கூட்டாட்சி மேற்குப் பகுதிகளில் குடியேற்றங்களை நிறுவ வழிவகை செய்தது.

குடியேற்றங்களை நிறுவதில் புதியதொரு கொள்கையை அமெரிக்க ஐக்கிய நாடு உருவாக்கிற்று. முதன்முறையாகச் சமத்துவக் கொள்கையின் அடிப்படையில் குடியேற்றங்கள் ஆளப்பட்டன. அதுவரை குடியேற்றங்களெல்லாம் தாய்நாட்டின் நலனுக்காகவே உள்ளன; ஆகையால், அவை தாய்நாட்டுக்குக் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்ற நியதியே இருந்து வந்தது. ஆனல், இப்போது அந் நியதி முறையானதன்று என்று தள்ளுபடி செய்யப்பட்டது. குடியேற்றங்கள் சம உரிமைகளோடு நடத்தப்பட வேண்டும் என்ற நியதி நிலை பெறலாயிற்று.

**நேசக் கூட்டாட்சிக் காலத்து வெளிநாட்டுறவு**

கூட்டாட்சி சபையினல் ஏற்றுக் கொள்ளப்பட்ட பாரிஸ் உடன்படிக்கையில், பல சிக்கல்களுக்குத் தீர்வு காணுத நிலை தொடர்ந்து இருந்தது. கிரேட் பிரிட்டன் கனடாவையும், ஸ்பெயின் புளோரிடாவையும், லூசியானவையும் பெற்றிருந்தன. அவ்விருநாடுகளும் அமெரிக்கரின் மேற்குப் பகுதி குடியேற்றத்திற்குத் தடையாக

இருந்தன. பாரிஸ் உடன்படிக்கைப்படி அளவிற்கு மேலாக அமெரிக்கருக்கு எண்ணிறந்த சலுகைகளை வழங்கி விட்டதாகப் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் கருதினர். எனவே ஐம்பெரும் ஏரிகளின் தெற்குப் பகுதியிலும், டெட்ராய்ட் (Detroit) பகுதியிலும் இருந்த காவல்நிலையங்களைப் பிரிட்டன் அப்புறப்படுத்த மறுத்துவிட்டது. அமெரிக்க உரிமைப்போரின்போது பிரிட்டனை ஆதரித்தவர்களிட மிருந்து கைப்பற்றிய உடைமைகளை, உரிய முறையில் அமெரிக்கர் திருப்பித் தரவில்லை எனப் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் குற்றம் சாட்டினர். நேசக்கூட்டாட்சியின் மன்றமோ பாரிஸ் உடன்படிக்கை யில் ஏற்றுக் கொண்ட நிபந்தனைகளை நிறைவேற்றப் போதிய அதிகாரங்களைப் பெறுதிருந்தது. இச் சூழ்நிலையைப் பிரிட்டன் பயன் படுத்திக்கொண்டு, தான் ஒப்புக்கொண்ட நிபந்தனைகளையும் நிறை வேற்றுதிருந்தது.

அமெரிக்க உரிமைப் போரின்போது, அமெரிக்கரோடு நட்பு கொண்டு உதவிய ஸ்பெயினும் போருக்குப் பிறகு எதிரி நாடுபோல் நடந்துகொண்டது. ஸ்பானிய அதிகாரிகள் புளோரிடாவின் கிழக்கு, மேற்குப் பகுதிகளில் கோட்டைகள் கட்டினர்; அங்குள்ள இந்தியப் பழங்குடியினரோடு ஒப்பந்தங்கள் செய்துகொண்டனர். மேற்குப் புறத்தில் குடியேறும் அமெரிக்கர் தங்களுடைய பொருள்களை மிசிசிபி நதி வழியே ஏற்றிச் செல்ல ஸ்பானியர் அனுமதி தர மறுத்து விட்டனர். இச் சிக்கல்களைத் தீர்த்து வைப்பதற்காக 1786-ல் வெளியுறவுத் துறையைப் பொறுப்பேற்று வந்த ஜான் ஜே (John Jay) ஸ்பானியர்களோடு கூடிக் கலந்துபேசி, ஓர் ஒப்பந்தம் செய்தார். அவ்வொப்பந்தத்தின்படி அமெரிக்க வணிகருக்கு ஸ்பெ யினுடன் வாணிகம் செய்வதில் சில சலுகைகள் அளிக்கப்பட் டன. இவ்வேற்பாட்டினைக் கேட்ட தெற்கு, மேற்கு மாநிலத்தவர் கள் கொதித்தெழுந்தனர். எனவே, இவ்வொப்பந்தம் கூட்டாட்சி மன்றத்தின் இசைவுக்காகப் படைக்கப்படவில்லை.

### நிதி நிலைமை

போரின்போது நேசக்கூட்டாட்சி உள்நாட்டிலும், வெளி நாட்டிலும் ஏராளமாகக் கடன் வாங்கியிருந்தது. வரி விதிக்கும் அதிகாரத்தைக் கூட்டாட்சி பெறுமலிருந்தமையால் அக் கடன் தொகையைத் திருப்பித் தர முடியவில்லை ; அவற்றிற்கான வட்டியை அளிக்கவும் சில சமயம் தவறியது. இவற்றிற்கும் மேலாக நாடு முழுவதும் பணப்புழக்கம் பெருங்குழப்பத்திலிருந்தது. மாநில அரசுகளிடையே வெவ்வேறு வகையான நாணயங்களும், தாள் நாணயங்களும் கையாளப்பட்டமையால் வணிகர்கள் பெருந் தொல்லைக்குள்ளாயினர். அவற்றின் மதிப்பும், இடத்திற்கிடம்

மாறியிருந்தது. இவற்றிற்கிடையே போலி நாணயங்களும் கள்ள தாள் நாணயங்களும் நடமாடின. போருக்குப் பிறகு, பல மாநிலங்கள், தாள் நாணயம் அச்சிட்டு வெளியிடுவதை நிறுத்திக் கொண்டமையால், மீண்டும் பொன்னும், வெள்ளியுமே செலாவணி உலோகங்களாகப் பயன்படுத்தப்பட்டன. மேலும் ஒவ்வொரு மாநில அரசும் காப்பு வரிகள் விதித்திருந்தமையால் உள்நாட்டு வாணிகமும் பெரிதும் பாதிக்கப்பட்டது.

பொருளாதார நெருக்கடியின் விளைவாக விலைவாசி இறங்க, பணத்தின்மதிப்பு உயரலாயிற்று. அதன் விளைவாகக் கடன்பட்டவர்கள் பெரும் அவதிக்குள்ளாயினர். அவர்களால், வாங்கிய கடனைத் திருப்பித் தரப் பொருளீட்ட முடியவில்லை; கடனுக்காக வட்டித் தொகையை அளிக்கவோ, அடைமானங்களை மீட்கவோ, வரித் தொகையைக் கட்டவோ முடியாது தவித்தனர். ஆனால், கடன் (கொடுத்தவர்களோ கடன்) பட்டவர்கள் மீது நீதிமன்றங்கள் மூலமாகக் கடும் நடவடிக்கைகள் மேற்கொள்ளலாயினர். மாநில அரசுகளும் கடன்பட்டவர்களைப் பாதுகாக்க முன்வரவில்லை. எனவே பல மாநிலங்களில் குடியானவர்களும் தொழிலாளர்களும் கிளர்ச்சி செய்யலாயினர். மாசாசூசெட்ஸ் மாநிலத்தில் டேனியல் ஷே (Daniel Shay) என்ற ஒரு பழைய போர்வீரன் தலைமையில் மாநில அரசுக்கெதிராக ஒரு பெருங்கலகம் 1786-ல் ஏற்பட்டது. மாநில அரசு, உரிமைப்போரின் கடன்களை அடைப்பதற்காக அதிகமான வரிகளை விதித்தது. ஏற்கனவே பொருளாதார நெருக்கடியினால் துன்பத்திற்குள்ளான மக்கள் கொதித்தெழுந்தனர். கடன் வாங்கியவர்கள்மீது நடவடிக்கை ஏதும் எடுக்காமலிருக்கவும், தீர்ப்புகளை நீதி மன்றங்கள் வழங்காமலிருக்கவும், நீதி மன்றங்களும் பிற அலுவலகங்களும் தாக்கப்பட்டன. உடனே மாநில அரசு துருப்புகளை அனுப்பிக் கலகத்தை ஒடுக்கிற்று.

ஷே கலகம் நாட்டின் சீர்கேடான பொருளாதார நிலையை ஆட்சிப் பொறுப்பிலுள்ள அனைவருக்கும் தெளிவுபட எடுத்துக் காட்டிற்று. மற்றும் இக் கலகம் நாடு முழுவதும் பழமைமீது பற்றுக்கொண்டவர்கள் மனத்தில் அச்சத்தை உண்டாக்கியது. இடதுசாரிப் புரட்சி மனப்பான்மையின் சின்னமாக அது காட்சியளித்தது. இது போன்ற கலகங்களை அடக்க வலிமை பொருந்திய மைய (அரசு தேவை என்பதை அனைவரும் உணர்ந்தனர். அத்தோடு ஒரு மைய அரசின்) நாணயச் செலவாணி கட்டுப்பாடு இல்லாமல் நிதிநிலையைச் சீர்படுத்தவோ, உள்நாட்டு வாணிகத்தைப் பெருக்கவோ முடியாதென்பதையும் அனைவரும் உணர்ந்தனர். உரிமைப்போருக்குப் பின் ஏற்பட்ட அரசியல், பொருளாதார, அயலுறவு—சிக்கல்களைத் தீர்க்க, நேசக்கூட்டாட்சிகளின் விதிகள் மாற்றியமைக்கப்பட வேண்டும்

என்ற எண்ணம் ஆட்சிப் பொறுப்பிலுள்ளோர் அனைவர் மனத்திலும் உருவாயிற்று.

**அரசியலமைப்பாண்மைச் சிறப்புக் குழு (Constitutional Convention)**

உரிமைப் போருக்குப் பிறகு மாநிலங்களுக்கிடையே எல்லைகள் பற்றியும் நதிகளின் நீரினைப் பயன்படுத்துவது பற்றியும் தகராறுகள் இருந்து வந்தன. அவற்றிலொன்று பொடோமாக் நதியில் படகு செலுத்துவது குறித்து மேரிலாண்டுக்கும், வர்ஜீனியாவுக்கும் இடையே இருந்து வந்த தகராறு ஆகும். எனவே, படகு போக்கு வரத்து உரிமைகளை விவாதிக்க இரு மாநிலங்களின் பிரதிநிதிகளும் ஜார்ஜ் வாஷிங்டன் தலைமையில் 1785-ல் கூடிப்பேசினர். ஆனால், அங்கும் குழப்ப நிலை நீடித்தமையால் எல்லா மாநிலங்களுமே கூடிப் பேசி, கூட்டாட்சி சபையின் விதி முறைகளுக்கு உட்படுவதே நன்மை பயக்கும் என்று பலரும் நம்பினர். அதன்படி 1786-ல் அன்னாபாலிஸ் (Annapolis) என்னுமூரில் ஐந்து மாநிலங்களின் பிரதிநிதிகளை மட்டும் கொண்ட மாநாடு ஒன்று நடைபெற்றது. நற்பயனைத் தொண்டுணர்வு மிக்க இளம் உறுப்பினராக அலெக்ஸாண்டர் ஹாமில்டன் என்பவர், இந்த மாநாட்டில், படகு செலுத்துவது குறித்த சிக்கலைத் தவிர வேறு பல பிரச்சினைகளையும் பரிசீலனை செய்ய, எல்லா மாநிலங்களின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு சபையை அமைப்பது இன்றியமையாதது என்ற கருத்தைத் தெரிவித்தார். அலெக்ஸாண்டர் ஹாமில்டன் மீண்டும் மாநிலங்களை அணுகி, பிரதி நிதிகளை நியமிக்கும்படி அவைகளை வேண்டி, 1787ஆம் ஆண்டு, மே மாதம் பிலடெல்பியாவில் கூட வேண்டுமென்றும், அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிலையைப் பரிசீலிக்க வேண்டுமென்றும், அமெரிக்கப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான அதிகாரங்கள் கூட்டாட்சி அரசுக்கு அளிக்கும் பொருட்டு வழிகள் செய்ய வேண்டுமென்றும் கருத்துத் தெரிவித்தார். முதலில் இதனைக் கேட்ட சிலர் ஹாமில்டனை எள்ளி நகையாடினர். ஆனால், ஜார்ஜ் வாஷிங்டனை வர்ஜீனியா தன் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்திருக்கிறது என்பதை அறிந்ததும், கூட்டாட்சி சபை அந்தக் கருத்தை ஏற்றுக் கொண்டது. ரோடு ஐலண்டு தவிர ஏனைய பன்னிரண்டு மாநிலங்களும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தன.

மாநிலங்களின் பிரதிநிதிகள் 1787 ஆம் ஆண்டு, மே மாதம் பிலடெல்பியாவில் கூடிப் பேச ஆரம்பித்தனர். இம் மாநாடு அரசியலமைப்பாண்மைச் சிறப்புக் குழுவாகச் செயற்பட ஆரம்பித்தது. போர்த் திறமையினாலும், நாணயம், புகழினாலும் நாட்டிலேயே தலைசிறந்தவராகத் திகழ்ந்த ஜார்ஜ் வாஷிங்டன் இம் மாநாட்டின்

தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஒவ்வொரு மாநிலமும் எத்தனை பிரதிநிதிகள் வேண்டுமென்றாலும் அனுப்பலாம். ஆனால், ஒவ்வொரு மாநிலத்திற்கும் தரப்பட்ட வாக்குரிமை ஒன்றுதான். பல மாநிலங்கள் சிக்கனத்திற்காக ஓரிரு பிரதிநிதிகளையே அனுப்பின. மொத்தம் ஐம்பத்தைந்து பேர் மாநாட்டிற்கு வந்தனர். சிலர், சில நாள் தங்கவே வந்தார்கள். ஆகவே, மாநாடு முடியும்போது முப்பத்தொன்பது பேரே இருந்தனர். வாஷிங்டனைப் போன்ற சிலர் அதிகம் பேசாது காதால் கேட்பதோடு இருந்துவிட்டனர். பாதிப்பேர் பல்கலைக்கழகப் பட்டம் பெற்றவர்கள் ; பலர் வழக்குரைஞர்கள். அவர்கள் தெளிவாகவும், சுருக்கமாகவும் பேசுவதில் வன்மை பெற்றிருந்தனர். சபையின் நடவடிக்கைகள் மறைபொருளாகவே இருந்தன. அவை வெளியிடப்படக் கூடாது என்ற விதி மிகவும் பயனளித்தது. சபையின் விவாதங்களை உடனடியாக அவ்வப்போது வெளியிட்டிருந்தால் கருத்து வேறுபாடுகள் பெருகியிருக்கக் கூடும் ; கட்சிகளைச் சார்ந்திருந்த பிரதிநிதிகள் பலர் உறுதியாகக் கொண்டிருந்த நடுநிலையைக் குலைத்திருக்கும் : கட்சிக்காரர்களும் தத்தம் பிரதிநிதிகளை அவ்வப்போது முடுக்கிக் கொண்டே இருந்திருப்பார்கள்.

மாநிலச் சட்டசபைகள், அரசியலமைப்பாண்மைக் குழுவுக்கான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும்போதே, அரசியலமைப்பும், கூட்டாட்சி அரசும் இப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்ற நோக்கோடு இயங்கின. சில மாநிலங்களில் தீவிர சீர்திருத்தம் கோரும் வேளாண்மையிலீடுபட்டவர்கள் கைமேலோங்கியிருந்தது. அம் மாநிலங்கள் மாநில அரசே முதன்மையான இடத்தையும் அதிக வலிமையையும் பெற்றிருக்க வேண்டுமென விரும்பின. சில மாநிலங்களில் கூட்டாட்சி அரசு வலுமிக்கதாய் அமைய வேண்டுமென்ற கருத்து நிலவியது. அமெரிக்கப் புரட்சிக்குக் காரணமாயிருந்து, தீவிரமாகப் போராடிய சிலர் பிரதிநிதிகளாக வரவில்லை. எடுத்துக்காட்டாக, தாமஸ்ஜெபர்சன் பிரான்சிலும், ஜான் ஆடம்ஸ் இங்கிலாந்திலும் இருந்தனர். பிரதிநிதிகளில் பலர் சொத்துள்ள செல்வந்தர்கள் ; மத்திய அரசுக்கு அல்லது மாநில அரசுகளுக்குக் கடனாகப் பண உதவி செய்தார்கள். எனவே, சொத்துள்ளவர்களின் நலனைப் பாதுகாக்கும் வகையிலும் சிலர் அரசியலமைப்பை அமைப்பதில் ஈடுபட்டனர்.

நேசக் கூட்டாட்சி போன்றதொரு மேலோட்டமான எளிய விதிகள் கொண்ட அரசு பயனளிக்காது என்பதையும், எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வகையில் பல அங்கங்கள் கொண்ட ஓர் அரசியல் இயந்திரம் நிறுவப்பட வேண்டும் என்பதையும் பிரதிநிதிகள்

அனைவரும் உணர்ந்தனர். பதின்மூன்று மாநிலங்கள் ஏற்கனவே அனுபவித்து வரும் ஸ்தல சுய ஆட்சி அதிகாரம் ஒரு பக்கமிருக்க, புதிதாக நிறுவப்படவிருந்த மைய ஆட்சியின் அதிகாரம் ஒரு பக்க மிருக்க, இவ்விருவகைப்பட்ட அதிகாரங்களையும் பாரபட்சமின்றி நுண்ணிய முறையில் இணங்கச் செய்ய வேண்டிய மாபெரும் பணி பிரதிநிதிகளிடையே ஒப்படைக்கப்பட்டது. பிரதிநிதிகளில் பெரும் பாலோர் அரசியலை நன்கு கற்றவர்கள்.. அவர்கள் கூட்டாட்சி அரசின் கடமைகளும், செய்முறைகளும், அதிகாரங்களும் தெளிவாய்க் குறிப்பிடப்பட வேண்டுமென்றும், அவற்றில் அடங்காத எஞ்சிய கடமைகளும், அதிகாரங்களும், மாநிலங்களைச் சேர்ந்ததாகக் கொள்ள வேண்டுமென்றும் ஓர் அடிப்படைக் கொள்கையை ஏற்றுக் கொண்டனர். கூட்டாட்சி அரசின் ஆற்றல்கள் புதியதாக இருப்பதால் அவற்றை எடுத்துரைப்பது இன்றியமையாததாயிற்று.

மாநிலங்கள் தங்களுடைய தனித்தன்மையை அடியோடு விட்டுக் கொடுத்தாலொழிய, வன்மை பொருந்திய கூட்டாட்சி அரசினை நிறுவ முடியாது என அலெக்சாண்டர் ஹாமில்டன் வாதாடினார். இத் தீவிரக் கருத்தைப் பலர் ஏற்க மறுத்தனர். எனவே, மாநிலங்களின் தனித்தன்மையினையும் உரிமையினையும் இழக்காமல், நாட்டின் பொதுக் காரியங்களை நிறைவேற்ற ஒன்றுசேர வாய்ப்பைத் தரும் கூட்டாட்சி அரசினை நிறுவுவதிலும் ஒரு பொது அடிப்படைக் கொள்கையைப் பிரதிநிதிகள் ஏற்றுக்கொண்டனர். சமமான, ஒன்றுக் கொன்று இணைப்புள்ள மூன்று வெவ்வேறு அங்கங்கள் நிறுவப்பட வேண்டுமென ஒப்புக்கொண்டனர். சட்டங்கள் இயற்ற சட்டசபை (Legislature), அச் சட்டங்களைச் செயற்படுத்த ஓர் ஆட்சித் துறை (Executive), சட்டங்களை விளக்கி நியாயம் வழங்க ஒரு நீதித் துறை (Judiciary) — ஆகிய மூன்று அங்கங்களும் நன்முறையில் ஒன்று பட்டுச் செயற்பட அவை தக்க திருத்தங்களுடன் இணைக்கப்பட வேண்டும் ; அதே நேரத்தில் ஓர் அங்கம் மற்றவைகளைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் பெறக் கூடாது. அரசியல் தத்துவ ஞானிகளான லாக் (Locke), மான்டெஸ்க்யூ (Montesquieu) ஆகியோரும் இம் மூன்று அங்கங்களும் தனி நிலை அதிகாரக் கோட் பாட்டின்படி (Separation of Powers) அமைக்கப்படவேண்டும் என்ற கருத்தை வெளியிட்டிருந்தனர். இக் கருத்து அமெரிக்கருக்கு மிகவும் பிடித்திருந்தது. ஏனெனில், மூன்று அங்கங்களில் ஒன்று அதிகச் செல்வாக்குப் பெற்றால் அது மக்களாட்சிக்கு ஊறுவிளைவிக்கக் கூடியதாய் அமையும் என அவர்களால் கருதப்பட்டது. எனவே, ஒவ்வொன்றையும் தடைகளோடும் கட்டுப்பாடுகளோடும் (Checks and Balances) வைத்திருக்க விரும்பினர். நாட்டின் ஆட்சி பெரும் பான்மையோரது ஆட்சியாக மாறிவிடக் கூடாது என்றும் அதே சமயம் சிறுபான்மையோரது உரிமைகள் காக்கப்படவேண்டுமென்றும்

அரசை அமைப்பதிலும், நடத்துவதிலும், மக்களுக்கு உரிய பங்கு அளிக்கப்பட வேண்டும் என்றும் விழைந்தனர். இனி, கூட்டாட்சியின் மூன்று அங்கங்களும் அமைக்கப்பட்ட முறையைக் காண்போம்.

### காங்கிரஸ்

பிரிட்டிஷ் பாராளுமன்றத்தைப் போலவும், மாநிலங்களிலிருந்த சட்டமன்றங்களைப் போலவும் இரண்டு பிரிவுகள் கொண்டதாகக் கூட்டாட்சியின் காங்கிரசை அமைக்கவே பிரதிநிதிகள் பலரும் விரும்பினர். ஆனால், அவற்றிற்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதில் பிரதிநிதிகளிடையே கருத்து வேறுபாடு தோன்றலாயிற்று. வர்ஜீனியா போன்ற மக்கட் தொகை அதிகம் கொண்ட பெரிய மாநிலங்கள், மக்கட்தொகை அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப்பட வேண்டுமென வாதாடின. அதற்கு 'வர்ஜீனியா திட்டம்' (Virginia Plan) என்று பெயர். இதற்கு மாறாக, நியூஜெர்ஸி போன்ற சிறிய மாநிலங்கள் எல்லா மாநிலங்களுக்கும் சமமான பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டுமென வாதாடின. அதற்கு 'நியூ ஜெர்ஸி திட்டம்' (New Jersey Plan) என்று பெயர். இறுதியில் இருதரப்பினருக்குமிடையே ஓர் உடன்பாடு உண்டாயிற்று. அதன்படி, பிரதிநிதிகள் மன்றத்தில் (House of Representatives) மாநிலங்களுக்கு மக்கள்தொகையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது ; செனட் மன்றத்தில் (Senate) எல்லா மாநிலங்களுக்கும் சமமான பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் மொத்த அடிமைகள் எண்ணிக்கையில் ஐந்தில் மூன்று பங்கினர் தனிக் குடிமையுரிமை பெற்றவர்களாகக் கணக்கிடப்படுவர். இவ்வேற்பாட்டிற்குக் கனெக்டிக்கட் சமரச இணக்கம் (Connecticut Compromise) என்று பெயர். எனவே பிரதிநிதிகள் மன்றம் நாட்டிற்கும், செனட் மன்றம் மாநிலங்களுக்கும் சரர்பாக அமைந்தது எனலாம். வரிகள், காப்பு வரிகள், சுங்க வரிகள், தீர்வைகள் விதிக்கவும், உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் வாணிகத்தைக் கட்டுப்படுத்தவும்,நாணயங்கள் அச்சிடவும், நிறுத்தல், முகத்தல் அளவைகளைக் கட்டுப்படுத்தவும், அயல்நாட்டவர்களுக்குக் குடியுரிமை வழங்கவும், நீதி மன்றங்கள் நிறுவவும், அஞ்சல் பணியைச் செய்யவும், காப்புரிமைப் பட்டயச் சட்டங்கள் இயற்றவும், போர் தொடுக்கவும், இவ்வதிகாரங்களைச் செயல்படுத்தத் துணைபுரிவதற்கான சட்டங்களை இயற்றவும் சட்டமாமன்றத்திற்கு அதிகாரங்கள் அளிக்கப்பட்டன.

### ஆட்சித் துறை

அடுத்து, செயல்துறையினை அமைப்பது பற்றியும் பிரதிநிதிகளிடையே கருத்து வேறுபாடு நிலவிற்று. குடியரசுத்தலைவர்

பிரிட்டிஷ் அரசரைப் போல் வாழ்நாள் முழுமையும் பதிவியிலிருக்க வேண்டுமென்றும், அவரே மாநில ஆளுநர்களை நியமிக்க வேண்டு மென்றும், மாநிலங்கள் இயற்றும் சட்டங்களைத் தள்ளுபடி செய்ய உரிமை அளிக்கப்படவேண்டுமென்றும் பழமைவாதிகள் வாதிட்டனர். இவற்றை ஏற்றால் அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஒரு வகையான முடியாட்சியே அமையும் என முற்போக்குவாதிகள் பெரிதும் அஞ்சினர். இறுதியில், குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்ற கருத்தை ஏற்றுக் கொண்டபோதிலும், தேர்தல் முறையைப்பற்றி சிக்கலான பிரச்சினைகள் கிளம்பின. குடியரசுத் தலைவரைக் காங்கிரஸ் தேர்ந்தெடுத்தால் அவர் சட்ட மன்றத்திற்குக் கடமைப்பட்டவராக ஆகக் கூடும். இஃது அதிகாரப் பிரிவினைக் கொள்கைக்கு மாறாக அமையும். மக்களால் நேரிடையாகத் தேர்ந் தெடுக்கப்படலாம் என்றாலும், அப்பொழுதிருந்த நிலையில் அது முடியாத காரியமாக இருந்தது. கடைசியாக, குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்க ஒரு தேர்தல் குழுவினை (Electoral College) அமைக்கும் கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஒவ்வொரு மாநிலத்திலும் எத்தனை செனட் உறுப்பினர்களும், பிரதிநிதி மன்ற உறுப்பினர்களும் இருந்தார்களோ, அத்தனை உறுப்பினர்கள் தேர்தல் குழுவில் இருப்பது என்று தீர்மானிக்கப்பட்டது. குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடும் வேட்பாளர்களில் பெரும்பான்மையான வாக்குபெறுபவர் குடியரசுத்தலைவராகவும், அடுத்துபெரும்பான்மை யான வாக்குபெறுபவர் குடியரசுத் துணைத்தலைவராகவும், தேர்ந் தெடுப்பதென முடிவு செய்யப்பட்டது. குடியரசுத் தலைவருடைய பதவிக்காலம் நான்கு ஆண்டுகளென வரையறுக்கப்பட்டது. சட்டங் களைச் சீரிய முறையில் செயலாக்க குடியரசுத் தலைவருக்கு அனைத் ததிகாரங்களும் தரப்பட்டன: அரசாங்கத்தின் உயர் அலுவலர் களையும், இராணுவ அதிகாரிகளையும் நியமனம் செய்யக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. மற்றும் அவரே தரைப் படை, கப்பற்படை—ஆகியவற்றின் தலைவராக விளங்கினர்.

## நீதித் துறை

அரசியலமைப்பாண்மைக் குழுவினர் ஓர் உயர்நீதிமன்றம் (Supreme Court) நிறுவப்பட வேண்டுமென்ற கருத்தை ஒருமுகமாக ஏற்றுக் கொண்டனர். உயர்நீதிமன்ற நீதிபதிகளைக் குடியரசுத் தலைவர் செனட்டின் இசைவோடு நியமிப்பார். அவர்கள் வாழ்நாள் வரை பதவியிலிருக்கலாம். மாநிலங்களில் கூட்டாட்சி நீதிமன்றங்களை நிறுவவும் வகை செய்யப்பட்டது. சட்டமாமன்றத்தால் இயற்றப் படும் சட்டங்களும், குடியரசுத்தலைவரின் நடவடிக்கைகளும் அரசியலமைப்புக்கு ஒத்தவாறு உள்ளனவா என்பதனை முடிவு செய்ய உயர்நீதிமன்றத்துக்கு அதிகாரம் தரப்பட்டது. கீழ் நீதி

மன்றங்களிலிருந்து வரும் முறையீட்டு வழக்குகளை விசாரணை செய்யவும் உயர்நீதிமன்றம் பொறுப்பேற்றது.

முன்பிருந்த நேசக் கூட்டாட்சியின் விதிமுறைகள் வலிமை யற்றனவாயிருந்தமையால் ஏற்பட்ட மனநிறைவின்மையைப் போக்கிக் கொள்ளும் வகையில் அதிக வலிமை பொருந்திய மைய அரசு நிறுவப்பட்டது. அதே நேரத்தில் மாநிலங்களும் ஆற்றலுடன் வளருவதற்கான வழி வகைகள் செய்யப்பட்டன. அரசியலமைப்பில் சொல்லாது விடப்பட்ட அதிகாரங்களெல்லாம் மாநிலங்களுக்கே தரப் பட்டன. ஏனெனில், மக்களின் அன்றாட வாழ்க்கையை அவைதான் நிருணயித்தன. தேர்தல் நடைபெறும் முறை, வாக்காளர் தகுதியை வரையறுக்கும் பொறுப்பு எல்லாம் மாநிலங்களுக்கே தரப்பட்டது. மற்றும் கல்விக்கூடங்கள், நீதிமன்றங்கள், காவல்துறை, ஊராட்சி, பாலங்கள், சாலைகள் — ஆகியவற்றை நிருமாணிக்கும் பொறுப்பு மாநிலங்களையே சார்ந்திருந்தது.

கூட்டாட்சி அரசு வலிமை மிக்கதாக நிறுவப்பட்ட போதிலும், அதன் அதிகாரங்கள் அதன் மூன்று அங்கங்களிடையே பரவிக் கிடந்தன. சட்டமன்றம், ஆட்சித் துறை, நீதித்துறை— ஆகிய மூன்று அங்கங்களும் தனித்தியங்கும் ஆற்றல் பெற்றிருந்த போதிலும், அவை நுண்ணிய முறையில் பிணைக்கப்பட்டிருந்தன. ஒன்றையொன்று கட்டுப்படுத்தும் அதிகாரமும் அவற்றிற்குத் தரப்பட்டது. சட்டமாமன் றத்தால் நிறைவேற்றப்படும் சட்ட வரைவுகளெல்லாம் குடியரசுத் தலைவரின் இசைவு பெற்ற பின்னரே சட்டமாகும். சட்டவரைவுகளைத் தள்ளுபடி செய்யவும் குடியரசுத் தலைவர் உரிமை பெற்றிருந்தார். குடியரசுத்தலைவர் செய்யும் நியமனங்களைச் செனட் ஏற்றுக் கொள்ள வேண்டும். மற்றும் சட்டமாமன்றம் குடியரசுத்தலைவர் மீது அரசுத் துரோகக் குற்றம் சாட்டி நிரூபித்து, பதவியினின்று அவரை விலக்க முடியும். கூட்டாட்சி நீதிமன்றம் எல்லா வழக்குகளையும் விசாரித்து நீதி வழங்குவதோடு, கூட்டாட்சி சட்டமாமன்றமோ, மாநிலச் சட்ட மன்றங்களோ இயற்றும் சட்டங்கள், அரசியலமைப்புச் சட்டத்திற்கு உட்பட்டனவா அல்லது புறம்பானவையா என நீதிமறுஆய்வு (Judicial Review) செய்யவும் உரிமை பெற்றிருந்தது. நீதிபதிகள் குடியரசுத்தலைவரால் நியமிக்கப்பெறுகின்றனர். ஆனால், சட்டமா மன்றம் அவர்கள்மீது குற்றம் சாட்டி விசாரித்துப் பதவியினின்று விலக்கலாம். இப்படி ஒவ்வொரு அங்கமும் ஒன்றையொன்று கட்டுப் படுத்தும் வகையில் அரசியலமைப்பு இறுதி வடிவம் பெற்றது.

**ஏற்றுக்கொள்ளல்** (Ratification)

அரசியலமைப்பாண்மைக் குழு ஏறத்தாழ நான்கு மாத காலம் கூடிப்பேசி (1787 மே 25 முதல் செப்டம்பர் 17 வரை) அரசிய

லமைப்பு இயற்றிற்று. காலத்தை வென்று நிற்கும் வலிமை பொருந்திய அரசியலமைப்புத் தீட்டியமை உண்மையிலேயே ஒரு மாபெரும் சாதனையாகும். கூட்டாட்சி அமைப்பில் அங்கம் வகிக்கும் பதின்மூன்று மாநிலங்களும், அரசியலமைப்பை ஏற்றுக்கொள்வதற்காக அம் மாநிலங்கள் முன்னர் சமர்ப்பிக்கப்பட்டது. பதின்மூன்று மாநிலங்களில் குறைந்தது ஒன்பது மாநிலங்கள் ஏற்றுக்கொண்டால் அரசியலமைப்புச் செயலுக்கு வரும் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. 1787 ஆம் ஆண்டு இறுதிக்குள் டெலாவர், பென்சில்வேனியா, நியூ ஜெர்ஸி ஆகிய மூன்று மாநிலங்களும் அரசியலமைப்பை ஏற்றுக் கொண்டு உறுதிப்படுத்தின. ஆனல், பிற மாநிலங்களில் அரசியலமைப்புக்குக் கடும் எதிர்ப்புத் தோன்றி ஏற்றுக்கொள்வதா, ஏற்றுக் கொள்ளக்கூடாதா என்பது பற்றிக் கடுமையான விவாதங்கள் நடைபெற்றன. இவற்றல் நாட்டில் இரண்டு கட்சிகள் தோன்றின. அரசியலமைப்பை ஆதரித்து வலுவுள்ள மைய அரசை விரும்பியவர்கள் கூட்டாட்சிவாதிகள் (Federalists) என்றும் அரசியலமைப்பை எதிர்த்து வலுவுள்ள மாநில ஆட்சியை விரும்பியவர்கள் கூட்டாட்சி எதிர்ப்பாளர் (Anti—Federalists) என்றும் அழைக்கப்படலாயினர். கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள் தரப்பில் பேட்ரிக் ஹென்றி (Patrick Henry), ரிச்சர்டு ஹென்றி லீ (Richard Henry Lee), ஜார்ஜ் மேசன், (George Mason), ஜார்ஜ் கிளிண்டன் (George Clinton), போன்ற அரசியல் விற்பன்னர்கள் இருந்தனர். நாட்டில் அப்போது அமைதியும்,ஒழுங்கும், செழிப்பும் நிலவியமையால் அப்போதிருந்த ஆட்சியமைப்பே போதுமானதென்றும், ஒரு சிறு குழுவினல் தீட்டப் பட்ட அரசியலமைப்பு மக்களை ஏமாற்றும் வகையில் உள்ளதென்றும், அதனல் இறுதியில் நாட்டில் உயர்குடிஞர் ஆட்சி (Aristocracy) அல்லது வல்லாட்சி (Dictatorship) வந்தே தீருமென்றும் வாதாடினர். மற்றும் அரசியலமைப்பில் குடிமக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும் வகையில் உறுதிப்பாடு ஏதும் அளிக்கப் படவில்லை என்றும் கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள் குற்றஞ் சாட்டினர்.

கூட்டாட்சிவாதிகள் அரும்பாடுபட்டுத் திறமையாக மேற்கூறிய விவாதங்களுக்கெல்லாம் எல்லோரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வகையில் முடிவு கண்டனர். அலெக்சாண்டர் ஹாமில்டன், ஜேம்ஸ் மாடிசன், ஜான் ஜே—ஆகிய மூவரும் அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகளையும், கூட்டாட்சி அரசின் அமைப்பினை விளக்கியும் பல கட்டுரைகள் வெளியிட்டனர் : ஆங்காங்கே சொற்பொழிவுகளும் நிகழ்த்தினர். அவர்கள் இயற்றிய கட்டுரைகளின் தொகுப்பே "பெடரலிஸ்ட்" (Federalist) என்றழைக்கப்படுகிறது. அஃது ஆட்சி இயலில் முக்கியமான படைப்பாகக் கருதப்பட்டு, போற்றிப்படிக்கப் பட்டுவரும் நூலாகும். இறுதியில் கூட்டாட்சிவாதிகள் எல்லா

மாநிலங்களிலும் அரசியலமைப்பை உறுதிப்படுத்துவதில் முழு வெற்றி கண்டனர். குடிமக்களின் அடிப்படை உரிமைகளைப் பாது காக்கும் வகையில் உரிமைகள் பட்டியலொன்று அரசியலமைப்பில் சேர்க்கப்படும் என்று உறுதியளித்தனர்.

**குடியாட்சியின் துவக்கம்**

எல்லா மாநிலங்களும் அரசியலமைப்பை உறுதி செய்ததும், நேசக் கூட்டரச்சியின் மன்றம், முதல் குடியரசுத் தலைவரைத் தேர்ந் தெடுக்க முனைந்தது. எல்லோரும் எதிர்பார்த்த வண்ணம், விரும்பியபடி ஜார்ஜ் வாஷிங்டன் போட்டியின்றி ஒருமனதாக முதல் குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்; ஜான் ஆடம்ஸ் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1789ஆம் ஆண்டு ஏப்ரல் 30 ஆம் நாள், நியூயார்க்கில் வால்வீதியிலுள்ள (Wall Street,) கூட்டாட்சி மண்டபத்தின் மாடி முகப்பிலிருந்து மாபெரும் மக்கள் கூட்டத்தின் முன்னிலையில் நியூயார்க் திருச்சபைத் தலைவர் வாக்குறுதிச்சடங்கை நடத்தி வைக்க, ஜார்ஜ் வாஷிங்டன் "ஐக்கிய அமெரிக்க நாடுகளின் அரசியலமைப்பைப் போற்றி, பேணி, பாது காத்து, செயற்படுத்த முழுத் திறமையுடன் பணியாற்றுவேன்" என்று உறுதி கூறிப் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டார். அங்குக் குழுமியிருந்த மக்கள் இடி முழக்கம் போன்ற ஆரவாரம் செய்தனர்.

# 7. ஜார்ஜ் வாஷிங்டன்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் முதல் குடியரசுத் தலைவராக ஜார்ஜ் வாஷிங்டன் 1789-ல் பொறுப்பேற்ருர். மிகுந்த அச்சத்துடன் அவர் அப் பதவியை ஏற்ருர்; 1774-ல் பிலடெல்பியாவில் நடந்த முதல் சுதந்திரப் போரின் முதல் அரசியல் கூட்டமான முதல் காண்டி னெண்டல் காங்கிரஸில் பங்கு ஏற்ருர். அதைத் தொடர்ந்து 2-வது அரசியல் கூட்டத்திற்கும் வர்ஜீனியாவின் பிரதிநிதியாகச் சென்று சுதந்திரப் படைக்குத் தலைவராளுர்; வெற்றியும் பெற்ருர். அரசியல் துறையில் அவருக்கு அதிக அனுபவம் கிடையாது. அவரது எழுத் திலும் பேச்சிலும் கவர்ச்சி இருந்ததில்லை. இருப்பினும் மக்கள் அவரிடம் பெருமதிப்பு கொண்டிருந்தனர்; அவர் சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடந்தனர்; புதிதாக உரு வெடுத்திருந்த தங்களுடைய நாட்டினை ஒன்ருகப் பிணைக் கும் ஓர் ஒப்பற்ற மாபெருந் தலைவராக வாஷிங்டனைக் கருதினர். அவரது நேர்மை யான, பரந்த, தெளிந்த நுண் ணறிவில் மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். ஜார்ஜ் வாஷிங்டனும் தம்முடைய மாபெரும் பொறுப்பினை உடனே உணர்ந்தார்; நாட்டின் தலைமைப் பொறுப்பை ஏற் பது தமது தலையாய கடமை யெனக் கருதினர். கட்சி மனப்பான்மையினின்று விலகி நின்று தன்னலங் கரு தாது நாட்டின் நலன் ஒன்றை மட்டுமே கருத்திற்கொண்டு அவர் செயலாற்றினுர். வாஷிங்டன் ஏற்கனவே அரசி



ஜார்ஜ் வாஷிங்டன்
முதலாவது குடியரசுத் தலைவர்
(1789 - 1797)
கட்சி சார்பற்றவர்

யலமைப்பாண்மைச் சிறப்புக் குழுவின் தலைவராகப் பணியாற்றி யிருந்தமையால் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்பின் நுணுக்கங்களை நன்கு அறிந்திருந்தார். எனவே, நன்முறையில் சிறந்த ஆட்சிமுறையினை உருவாக்குவதில் அவர் முனைந்தார்.

## ஆட்சித் துறைகளை அமைத்தல்

முதல் தலைநகரமாக விளங்கிய நியூயார்க்கில் கூட்டாட்சி அரசு செயற்படத் துவங்கிற்று. ஜான் ஆடம்ஸ் குடியரசின் துணைத் தலைவர் பதவிக்கு ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். காங்கிரஸ் அரசிற்கான உடனடி செலவுக்குத் தேவையான சுங்கவரிகள் சிலவற்றை விதித்தது. ஆட்சித்துறையை நிறுவுவதிலும், அலுவலர் களைத் தேர்ந்தெடுப்பதிலும் வாஷிங்டன் ஈடுபட்டார்; நற்பெயர் பெற்றவர்களையும், நேர்மையானவர்களையும் நாணயமிக்கவர்களையும் அலுவலர்களாக நியமித்தார். அவர்களிடமிருந்து தரம் மிக்கதொரு ஆட்சியை அவர் எதிர்பார்த்தார். பதினெட்டாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் அரசு ஊழியர்களிடையே நேர்மை என்பது மிக அரிதாக இருந்தது. பிற நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அமெரிக்க அரசின் தரம் உயர்ந்ததாகவே இருந்தது எனலாம். அரசியலமைப்பை ஆதரித்தவர்களுக்கே பதவிகள் தந்தாரென வாஷிங்டன்மீது ஒரு சிலர் குற்றம் சாட்டினர். இஃது ஓரளவு உண்மையேயாம். புதிய அரசு நன்முறையில் செயற்பட அரசிய லமைப்பின் மீது நம்பிக்கை கொண்டவர்களையே நியமித்ததில் தவறொன்றுமில்லை எனலாம்.

## உள்நாட்டுக் கொள்கை

கருவூலச் செயலாளராக **அலெக்ஸண்டர் ஹாமில்டன்** (Alexander Hamilton) என்பவரையும், வெளிநாட்டுறவுச் செயலாள ராகத் **தாமஸ் ஜெபர்ஸனும்** (Thomas Jefferson) சட்டத்துறைச் செயலாளராக எட்மண்ட் **ராண்டால்ப்** (Edmund Randolph) என்பவரையும் ஜார்ஜ் வாஷிங்டன் நியமித்தார். அரசியலமைப்பில் அமைச்சரவை ஒன்று செயற்பட வகை செய்யப்படவில்லை இருப்பினும் வாஷிங்டன் மேற்கூறிய செயலாளர்கள் கொண்ட அமைச்சரவை போன்றதோர் அமைப்பைக் கலந்தாலோசித்த பிறகே முடிவுகளைச் செய்தார். இப்படி ஆரம்பத்திலிருந்தே அமைச்சரவை முறை அரசின் ஒரு முக்கிய பகுதியாயிற்று.

## நீதித் துறை

அரசியலமைப்பு தலைமை நீதிமன்றம் ஒன்றை மட்டும் தோற்று வித்திருந்தது. நீதித் துறை எப்படி அமைக்கப்படவேண்டும், எப் படிச் செயல்பட வேண்டும் என்பன பற்றி அரசியலமைப்பில் திட்ட

வட்டமாக ஒன்றும் கூறப்படவில்லை. இக் குறையை அகற்ற, சட்டமா மன்றம் 1789-ல் நீதித்துறை சட்டமொன்றை (Judiciary Act) இயற்றியது. அதன்படி தலைமை நீதிமன்றத்தில் ஆறு நீதிபதிகள் நீதி வழங்க வேண்டும். மற்றும் பதின்மூன்று மாவட்ட நீதிமன்றங் களும், மூன்று சுற்றுலா நீதிமன்றங்களும் நிறுவப்பட்டன. நியூயார்க்கைச் சார்ந்த **ஜான் ஜே** (John Jay) என்பவர் தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டார். தலைமை நீதிபதியும், ஏனைய நீதிபதி களும் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவர். அந் நியமனம் காங்கிரஸ் மேல்சபையின் இசைவைப் பெறல்வேண்டும். மாநில நீதிமன்றங்களி லிருந்து உயர்நீதி மன்றத்துக்குப் அரசியலமைப்பு பற்றி எழும் வழக்கு கள் மீதும், குடிமக்களது உரிமைகள் பற்றி எழும் வழக்குகள் மீதும் முறையீடு செய்து கொள்வதற்கான முறைகளை விரிவாக இச் சட்டம் எடுத்தியம்பியது. இப்படி முறையீடு வழக்குகளை விசாரிப்பது தலைமை நீதிமன்றத்தின் முக்கிய செயலாகும். தலைமை நீதிமன்றத் தின் முக்கியமான இச் செயலே நீதிமறுஆய்வு (Judicial Review) என்று சொல்லப்படுகிறது. சுற்றுலா நீதிமன்றங்கள் இப் பணியை 1791-1792-லேயே செய்ய ஆரம்பித்து விட்டன; பல மாநிலங் களின் சட்டங்கள் செல்லாதெனத் தீர்ப்பு கூறின. இந் நீதிமறுஆய்வு குறித்து முன்னரே ஹாமில்டன் "பெடரலிஸ்ட்" கட்டுரைகளில் விவரித்துள்ளார். வெகு விரைவில் இந் நீதிமறுஆய்வுமுறை கூட்டாட்சி அரசின் ஓர் அங்கமாக விளங்கலாயிற்று.

**உரிமைகள் மசோதா**

அரசியலமைப்பை முதலில் தீட்டியபோது குடிமக்களுக்குப் பல வகையான உரிமைகள் பற்றி உறுதி தரப்பட்டிருந்தும், தனியே உரிமைகள் பற்றிய பகுதி இல்லாதிருந்தது. இதனைப் பல மாநிலங் கள் குறையாகக் கருதின. கூட்டரசு கோட்பாட்டின் எதிரிகள் இக் குறையை மிகுதிப்படுத்திக் கூறியதுடன், அரசியலமைப்பையே ஏற்க சில மாநிலங்களில் எதிர்ப்பை உருவாக்கினர். உரிமைகள் பற்றிய பகுதி விரைவில் சேர்க்கப்படும் என்ற உறுதியை அளித்ததன் பேரில் அம் மாநிலங்கள் அரசியலமைப்பை ஏற்றுக்கொண்டு உறுதியளித் தன. எனவே அடிப்படை உரிமைகளை அரசியலமைப்பில் சேர்ப்பதற் காகப் பன்னிரண்டு திருத்தங்களைக் காங்கிரஸ் கொண்டு வந்தது. அவற்றில் பத்து இறுதியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு உறுதி செய்யப் பட்டன. அப் பகுதி உரிமைகள் மசோதா என்றழைக்கப்படுகிறது. அஃது அரசியலமைப்பின் இன்றியமையாததொரு பகுதியாக விளங்கு கிறது. அமெரிக்கக் குடிமக்களின் தனியுரிமைகளின் அடிப்படையாக அமைந்துள்ளது.

## ஹாமில்டனின் நிதிக் கொள்கை

அலெக்சாண்டர் ஹாமில்டன் 1757-ல் மேற்கிந்தியத் தீவுகளில் ஒரு சிறு தீவில் பிறந்தவர். சிறு வயதிலேயே வாழ்க்கையைச் சிறப்புற அமைத்துக்கொள்ளும்பொருட்டு நியூயார்க் வந்து சேர்ந்தார். அங்குப் படித்துக் கொண்டிருக்கும்போது ஆங்கில அரசரின் உரிமைகளைக் கண்டிக்கும் தீவிரவாதிகளின் நட்பைப் பெற்றார். இராணுவத்தில் சேர்ந்து விரைவில் பீரங்கிப் படையின் தலைவரானார். ஜார்ஜ் வாஷிங்டனின் கருத்தைக் கவர்ந்த அவர், அவருடைய முக்கிய இராணுவத் துணைவர் ஆனார்; பின்னர் புரட்சியின்போது வாஷிங்டனின் செயலாளராகவும் பணியாற்றினார்; சில காலம் நியூயார்க்கில் வழக்கறிஞராகவும் இருந்தார்; செல்வக் குடும்பத்தில் பிறந்த மங்கையொருத்தியை மணந்தார். அவரிடம் முன்னுக்கு வரத் தீவிர ஆசை, தன்மானம், கூரிய சிந்தனை, அயரா ஆற்றல் ஆகிய நற்குணங்கள் இருந்தன. அதே சமயம் பதற்றம், முன்கோபம், தோல்வியுற்றால் நிதானமிழத்தல், வீண்சண்டையை வரவேற்றல் ஆகிய குறைபாடுகளும் இருந்தன. இவற்றால் பலருடைய வெறுப்புக்கு அவர் ஆளாக நேரிட்டது.

வினைத்திட்பம், ஒழுங்கு, அமைப்புமுறை ஆகியவற்றில் ஹாமில்டன் காட்டிய ஆர்வமே, அவர் கருவூலத்தின் செயலாளராகப் பணியேற்று செயலாற்றியமையைச் சிறப்பித்தது. வளரும் நாட்டிற்கு அவர் செய்த தொண்டு மறக்க முடியாததாகும். திட்டங்களைத் தீட்டுவதிலும், கொள்கைகளை வரையறுப்பதிலும் அவருக்கிருந்த உறுதிப்பாட்டினைப் பிறரிடம் காண்பதரிதாயிருந்தது. காங்கிரஸ், மக்களுக்கு அஞ்சி செயற்பட்ட காலை, அஃது இப்படித்தான் செயலாற்ற வேண்டும், மக்கள் இதைத்தான் செய்ய வேண்டும் என்று ஹாமில்டன் திட்டவட்டமாகக் கூறினார். புரட்சியின்போது நாட்டில் ஏற்பட்ட குழப்பங்களைக்கண்ட அவருக்குக் குடியாட்சியின் மீது ஒருவகை நம்பிக்கையின்மை ஏற்பட்டது. மக்கள் கூட்டம் தங்களைத் தாங்களே செவ்வையாக ஆண்டு கொள்ளத் தகுதியற்றது என்றும், குடியாட்சியின் குறிக்கோள்களைச் செயலாக்க விரும்புகின்றவர் செயல்முறைக்கு ஒவ்வாத கோட்பாடுடையவர்களே என்றும், ஹாமில்டன் கருதினார். சிறப்பான ஆட்சி, நீதி, ஒழுங்கு, குடிமகனின் உரிமைகள் ஆகியவையெல்லாம் உயர்குடிப் பிறப்பாளர்களின் ஆட்சி ஒன்றினால் மட்டுமே பாதுகாக்க முடியும் என்பதை உணர்ந்தார். எனவே தம்முடைய நிதிக் கொள்கைகள் கூட்டாட்சி அரசுக்கும், செல்வந்தர்களுக்கும் இடையே நல்லுறவை வளர்ப்பனவாக அமைய வேண்டும் என்பதை மனத்திற் கொண்டார்; அக்கருத்தை வெளிப்படையாகவும் சொன்னார்; அவ்வாறே செயலாற்றினார்.

**நாட்டுக் கடன் (National Debt)**

ஹாமில்டன், கருவூலத்தின் செயலாளராகப் பணியேற்றதும் நாட்டின் நிதிநிலையைச் சீர்திருத்துவதில் ஈடுபட்டார். புரட்சியின் போதும், புரட்சிக்குப் பின்னும் சட்டமாமன்றம் கடன் தொகையைப் பெருக்கிக்கொண்டே போயிற்று. 1789-ல் நாட்டுக் கடன் 56,000,000 (56 மில்லியன்) டாலராக இருந்தது. ஒரு சிலர் நாட்டுக் கடனை திருப்பிச் செலுத்த மறுத்துவிட வேண்டுமென்றனர்; மற்றும் சிலர் ஒரு பகுதியே செலுத்த வேண்டுமென்று விரும்பினர்கள். ஹாமில்டன் இக் கூற்றுகளை ஏற்க மறுத்தார்; கூட்டாட்சி அரசு கடன் தொகையை முழுதுமாக திருப்பியளிக்க வேண்டுமென்றார். அப்பொழுதுதான் கடன் கொடுத்தவர்களுக்கு அரசின்மீது நம்பிக்கை ஏற்படும்; தங்கள் கடனைத் திருப்பிப் பெற வேண்டும் என்ற ஆர்வத்தில் நிலையான அரசு இருப்பதை விரும்புவர்; நிதி நிலையிலும் அப்பொழுதுதான் உறுதிநிலை ஏற்படும் என்றெல்லாம் ஹாமில்டன் நினைத்தது பின்னர் உண்மையாயிற்று. அரசு பழைய கடன் பத்திரங்களையெல்லாம் திரும்பப் பெற்று, பொது நிதிக் கணக்கு ஒன்றினைத் தொடங்கி கடன்தந்தவர்களுக்கு வட்டிவீதத்தைக் குறிப்பிட்டுப் புதிய கடன் பத்திரங்களை வழங்க வேண்டுமென்றார்; இதனால் கூட்டாட்சி அரசின் பெருமை உயருமென்றார். ஹாமில்டனின் இத் திட்டம் சில சிறிய திருத்தங்களோடு காங்கிரஸால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**மாநிலக் கடன்கள்**

அடுத்து, ஹாமில்டன் மாநிலக் கடன்களைத் திருப்பித் தருவதில் முனைந்தார். மாநிலக் கடன் தொகை 25,000,000 (25 மில்லியன்) டாலராக இருந்தது. மாநில அரசுகள் கடன் அளித்தவர்களுக்குத் திருப்பித் தர முயற்சியேதும் எடுக்காததால் அவர்கள் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தனர். எல்லா மாநிலக் கடன்களையும் கூட்டாட்சி அரசு மேற்கொண்டு, அவற்றை நாட்டுக் கடன்களோடு இணைத்துவிட வேண்டுமென்று ஹாமில்டன் கூறினர். அதனால் கடன் கொடுத்தவர்கள் கூட்டாட்சி அரசின் மீது நம்பிக்கையும், மதிப்பும் கொள்வர் என்றும், மாநில சட்டமன்றங்களை எதிர்நோக்காமல் கூட்டாட்சி காங்கிரஸையே ஆவலோடு ஆதரிப்பர் என்றும், அதனால் கூட்டாட்சி அரசு வலுப்பெறும் என்றும் ஹாமில்டன் விளக்கினர்; கடன் கொடுத்திருந்த செல்வந்தர்கள் கடன் தொகையைப் பெற்றுப் புதிய தொழில் துறைகளில் முதலீடு செய்வர் என்றும் நம்பினர்.

மாநிலக் கடன்களைக் கூட்டாட்சி அரசு ஏற்கவேண்டும் என்ற திட்டத்திற்குக் கடும் எதிர்ப்புத் தோன்றிற்று. சிறப்பாகத் தென்

மாநிலங்களின் உறுப்பினர்கள் எதிர்த்தனர்; ஏனெனில், வட மாநிலங்களின் கடன் தொகைதான் அதிகமாயிருந்தது. தென்மாநிலங்களின் கடன் தொகைக் குறைவாக இருந்தது. இத் திட்டத்தால் அதிகப் பயன் பெறுவோர் வடமாநிலத்தவர்கள். அவர்கள் நலனுக்காகவே இத் திட்டம் எனவும் கருதப்பட்டது. ஜெபர்சன் மூலம், ஹாமில்டன் தென் மாநில உறுப்பினர்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார். தென் மாநில உறுப்பினர்கள் மாநில அரசுகளின் கடன்களை ஏற்றுக் கொள்ளும் திட்டத்திற்கு இசைவு தந்தால், கூட்டாட்சி அரசின் தலைநகர் தென் மாநிலப் பகுதியில் நிறுவப்படும் என்பதே அவ்வொப்பந்தமாகும். தென்மாநில உறுப்பினர்கள் இதனையேற்றனர். அதன்படி கூட்டாட்சி அரசின் தலைநகர் நியூயார்க்கிலிருந்து 1790-ல் பிலடெல்பியாவிற்கும், பிறகு அங்கிருந்து 1800-ல் புதிதாக நிருமாணிக்கப்பட்ட நகரான வாஷிங்டனுக்கும் மாற்றப்பட்டது.

**பாங்கு நிறுவப்படல்**

நாட்டுக்கடனைப் பெறும் ஓர் அரசு அதனைத் திருப்பித் தருவதற்கான வழிகளையும் உடனே மேற்கொள்ள வேண்டுமென ஹாமில்டன் கூறினர்; அதில் முதற்படியாகக் கடன் தொகைக்குரிய வட்டியினை அரசு அளிக்க முற்பட வேண்டுமென்றார்; இப்படிக் கடன் பத்திரங்களை வழங்கவும், பொதுநிதிக் கணக்கினை வைத்துக்கொள்ளவும், வட்டித்தொகையினை மக்களுக்கு அளிக்கவும், ஒரு பாங்கு நிறுவனம் தேவை என்பதை வலியுறுத்தினர். ஏற்கனவே சில தனியார் பாங்குகள் இருந்தன. அவை தனித்தனியே பணத்தாள்களை வெளியிட்டிருந்தன. பணப் புழக்கத்தில் பெரும் குழப்பமே நிலவிற்று. இவற்றைச் சீர்திருத்தவும் ஒரு பாங்கு தேவைப்பட்டது. இங்கிலாந்து பாங்கின் அடிப்படையில், அமெரிக்க ஐக்கிய நாட்டின் பாங்கினை அமைக்க ஹாமில்டன் திட்டம் வகுத்தார். ।।த்து மில்லியன் டாலர் (10,000,000) முதலீடு செய்யப்பட வேண்டும். அதில் ஐந்தில் ஒரு பங்கினை அரசு அளிக்கும். எஞ்சிய நான்கு பங்குகளைத் தனியார் அளிக்க வேண்டும். இதனால் பாங்கினைக் கட்டுப் படுத்துவதில் தனியார் அதிக உரிமை பெற்றனர்.

ஹாமில்டனின் பாங்குத் திட்டத்திற்கும் கடும் எதிர்ப்பு தோன்றிற்று. ஒரு பாங்கினை அரசு நிறுவ அரசியலமைப்பு இடந்தரவில்லை என ஜெபர்சன் கூறினர். இவ்வெதிர்ப்பினை ஹாமில்டன் திறமையாக வென்றார். அரசியலமைப்பில் கூட்டாட்சி அரசுக்குப் பணப்புழக்கத்தைக் கட்டுப்படுத்தவும், கடன் வாங்கவும், வரிகள் விதிக்கவும், திரட்டவும் உரிமை தரப்பட்டுள்ளது. இச் செயல்களைக் கவனிக்க ஒரு பாங்கினை நிறுவ அரசு உள்ளடங்கிய

அதிகாரத்தின்படி உரிமை பெற்றுள்ளது எனத் திறமையாக ஹாமில்டன் வாதாடி பாங்கினை நிறுவுவதில் வெற்றி பெற்றார். அரசியலமைப்பின் பொருள் விளக்கத்தைப்பரந்த நோக்கோடு காண வேண்டுமே ஒழிய குறுகிய, வரம்புமீறுத நோக்கில் காணக்கூடாது என்று வாஷிங்டன் கருதினார். அமெரிக்க ஐக்கிய நாட்டு பாங்கு 1791-ல் நிறுவப்பட்டு இருபது ஆண்டுகள் செயலாற்ற உத்தரவு தரப்பட்டது.

புழக்கத்திலிருக்கும் நாணயங்களின் மதிப்பைக் கட்டுப்படுத்தக் கூட்டாட்சி அரசே தங்க, வெள்ளி நாணயங்களை அச்சிட வேண்டும் என்று ஹாமில்டன் கூறிய கருத்தையும் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டது. அதன்படி நாணயம் அச்சிடும் கூடம் ஒன்று நிறுவப் பட்டது. அடுத்து உள்நாட்டில் தொழில் உற்பத்தியைப் பெருக்க மிதமான இறக்குமதிச் சுங்கவரி விதித்தல் நல்லது என்று கூறினார். காங்கிரஸ் அதற்கான சட்டம் இயற்றிற்று.

**சாராயக் கலகம்**

ஹாமில்டன் கூட்டாட்சி அரசின் வருவாயைப் பெருக்கவும், அதிகாரத்தை நிலைநாட்டவும், நாட்டில் தயாரிக்கப்படும் சாராயத்தின் மீது தீர்வை விதிக்கச் சொன்னார். காங்கிரஸ் இக் கருத்தை ஏற்றுக் கொண்டு தீர்வை விதித்தது. ஆனால், இதனை எதிர்த்து மேற்கு பென்சில்வேனியாப் பகுதியில் 1794-ல் பெருங்கலகம் மூண்டது. தீர்வை திரட்டச் சென்ற அரசு ஊழியர்கள் கடுமையாகத் தாக்கப் பட்டனர். ஹாமில்டனின் ஆலோசனைப்படி வாஷிங்டன், கூட்டாட்சி யின் படைகளை அனுப்பிக் கலகத்தை அடக்கி ஒடுக்கினார். இதனால் கூட்டாட்சி அரசின் செல்வாக்குப் பெருகிற்று.

## வெளிநாட்டுக் கொள்கை

வெளிநாட்டுறவில் வாஷிங்டன், அமைதியை நிலைநாட்டவே பெரிதும் விரும்பினார். அமெரிக்க உரிமைப் போரில் ஏற்பட்ட அழிவுகளைச் சீர்ப்படுத்தவும், (நாட்டிற் ஒருமைப்பாட்டினை வளர்த்து இளைய குடியரசை வலுப்படுத்தவும்) அமைதியான வெளிநாட்டுக் கொள்கை இன்றியமையாததாயிற்று. ஆனால், ஐரோப்பாவில் நடந்த பயங்கர நிகழ்ச்சிகள் வாஷிங்டனுக்குக் கவலையை அளித்தன. அவர் பதவியேற்ற சின்னாள்களில் பிரெஞ்சுப் புரட்சி ஆரம்பித்தது.

**பிரெஞ்சுப் புரட்சி**

அமெரிக்கர்கள், பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்துப் போராடி உரிமை பெற்றதுபோல, பிரான்சில் புரட்சிக்காரர்கள் கொடுங்கோலாட்சியை

ஒழித்து மக்களாட்சியை நிறுவப் புரட்சியிலிறங்கினர். அமெரிக்க உரிமைப்போரில் பிரெஞ்சுக்காரர் அமெரிக்கருக்கு உதவினர். உரிமைப்போரினை நேரில் கண்ட பிரெஞ்சு இராணுவத்தினர் பிரான்சிற்குத் திரும்பிச் சென்றதும் அமெரிக்காவில் நிகழ்ந்தன வற்றை எடுத்தியம்பி உரிமைவேட்கையை மக்களிடம் எழுப்பினர். அமெரிக்க அரசியலமைப்பின் மொழிபெயர்ப்புகள் ஐரோப்பாவெங்கும் ஆர்வமுடன் படிக்கப்பட்டன. அமெரிக்கர்கள் வெளியிட்ட உரிமை அறிக்கைபோன்று பிரான்சிலும் மனித உரிமைகள் அறிக்கை ஒன்றும் வெளியிடப்பட்டது.

தொடக்கத்தில் பிரெஞ்சுப் புரட்சி அமைதிப் பாதையில் சென்றது. அமெரிக்க ஐக்கியநாட்டு மக்கள் புரட்சியை ஆர்வத் தோடும் பரிவோடும் நோக்கினர். 1793ஆம் ஆண்டு ஜனவரியில் பதினாறும் லூயி சிரச்சேதம் செய்யப்பட்டதும், அதனையொட்டிப் பல உயர்குடிப்பிறப்பாளர்கள் கொல்லப்பட்டதும், ஜாகோபியர்களது கொடூரச்செயல்களும் அமெரிக்கர் எண்ணங்களை மாற்றின. குடியரசுக்கட்சியினர் தொடர்ந்து பிரெஞ்சு புரட்சிக்காரர்களை ஆதரித்தனர்; புரட்சிக்காரர்கள் தங்களது உரிமைகளுக்காகவே போராடுவதாகக் கருதினர். கூட்டாட்சிவாதிகள் ஜாகோபியர்களின் கொடூரச் செயலைக் கண்டு, அஞ்சிப் புரட்சியை வெறுக்கலாயினர். புரட்சியாளர்கள் பிரெஞ்சுப் புரட்சியை உலகப் புரட்சியாக நினைத்து, பிரிட்டன்மீதும், ஆஸ்த்திரியாமீதும் போர் தொடுத்தனர். அமெரிக்க உரிமைப்போரின் போது 1778-ல் அமெரிக்காவிற்கும் பிரான்சிற்கும் இடையே ஏற்பட்ட உடன்பாட்டின்படி, பிரெஞ்சுக் காரர்கள் தங்களுக்கு அமெரிக்கரிடமிருந்து உதவி கிட்டும் என எதிர் பார்த்தனர். அமெரிக்கா நேரிடையாகத் தங்களோடு போரில் கலந்து கொண்டு உதவாவிட்டாலும், பொருளாதார உதவி தரும் எனப் புரட்சியாளர்கள் நினைத்தனர்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் பிரான்சின் தூதுவராக இருந்த எட்மண்டு சார்லஸ் ஜெனெட் (Edmond Charles Genet) புரட்சிச் செயல்களில் ஈடுபடலானார். அமெரிக்கத் துறைமுகங்களில் பிரெஞ்சுப் போர்க்கப்பல்கள் வந்து தங்கி ஸ்பானிய குடியேற்றங்கள் மீது தாக்குதல் நடத்த அவர் உதவி செய்யலானார். குடியரசுக் கட்சியினர் ஆதரவோடு அவர் அமெரிக்காவின் உள்நாட்டு விவகாரங் களிலும் தலையிடலானார். 1793ஆம் ஆண்டு, ஏப்ரல் 23ஆம் நாள், வாஷிங்டன், பிரெஞ்சுப் போரில் அமெரிக்கா நடுநிலை வகிக்கும் என்ற பொது அறிவிப்பு ஒன்றை வெளியிட்டார். இவ்வறிவிப்பை மதியாது தொடர்ந்து ஜெனட் புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபட்டார். இதனைக் கண்ட வாஷிங்டன் ஜெனெடை நாடு திரும்பும்படிக் கட்டளையிட்டார்.

நாடு திரும்பினால் தமக்குச் சிரச்சேதத்தண்டனைதான் கிடைக்குமென அஞ்சி ஜெனெட் தம் அலுவலிருந்து விலகி அமெரிக்க ஐக்கிய நாட்டிலேயே மணந்து கொண்டு வாழ்ந்தார்.

### பிரிட்டனுடன் உடன்படிக்கை

பிரெஞ்சுப் புரட்சி ஆரம்பித்த பிறகு அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் பிரிட்டனுக்குமிடையே நல்லுறவு இல்லை. பிரிட்டிஷ் துருப்புகள் மேற்குப் பகுதியில் சில கோட்டைகளில் தங்கிக் கொண்டு வெளியேற மறுத்தன. உரிமைப்போரின்போது அமெரிக்கக் குடிமக்களது உடைமைகளைக் கவர்ந்து சென்ற பிரிட்டிஷ் வீரர்கள் இன்னும் திருப்பித் தரவில்லை; அதற்கான இழப்பீட்டையும் தரவில்லை. (பிரிட்டன் தனது மேற்கிந்தியத் தீவுகளை அமெரிக்க ஐக்கிய நாட்டு வணிகத்திற்குத் திறந்தவிட மறுத்ததோடு பல அமெரிக்கக் கப்பல்களை பிரிட்டன் கைப்பற்றியது). சில தீவிரவாதிகள் அமெரிக்கா இங்கிலாந்துடன் போர் தொடுக்க வேண்டுமென்றனர்.

பிரிட்டனுடன் போரிட்டால், அப்பொழுதுதான் உருவெடுத்து வளர்ந்து வரும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குப் பெரும்சேதத்தையே விளைவிக்கும் என ஜார்ஜ்வாஷிங்டன் நம்பினார். எனவே, இரு நாடுகளுக்கிடையே இருந்து வரும் கருத்து வேறுபாடுகளுக்குத் தீர்வ காணத் தலைமை நீதிபதியாயிருந்த ஜான் ஜே (John Jay) என்பவரைச் சிறப்புத் தூதராகப் பிரிட்டனுக்கு அனுப்பி வைத்தார். ஜே நிதானத்தோடும், பண்போடும் பேச்சுவார்த்தைகள் நடத்தி, பிரிட்டனோடு 1794 நவம்பரில், ஓர் உடன்படிக்கையில் கையெழுத்திட்டார். அதன்படி மேற்குப் பகுதியிலிருந்த கோட்டைகளினின்று துருப்புக்களை விலக்கிக் கொள்ள பிரிட்டன் இசைந்தது. துருப்புகள் கைப்பற்றிய அமெரிக்க உடைமைகளைத் திருப்பித் தருவது பற்றியும், கைப்பற்றப்பட்ட அமெரிக்கக் கப்பல்களுக்கு இழப்பீடு வழங்குவது பற்றியும், பிரிட்டிஷ் மேற்கிந்தியத் தீவுகளில் அமெரிக்க வணிகர்களுக்குச் சலுகைகள் அளிப்பது பற்றியும் அவ்வுடன்படிக்கையில் ஒன்றும் கூறாது, அச் சிக்கல்களை ஒரு குழு ஆராய்ந்து முடிவு தெரிவிக்கும் என்று சொல்லப்பட்டது. இதனைக் கேட்ட அமெரிக்கர் சினங்கொண்டு ஜேவையும், வாஷிங்டனையும் குறை கூறினர்; அமெரிக்காவின் தன்மானம் பறி போயிற்று என்றனர். வாஷிங்டன் இவற்றைப் பொருட்படுத்தவில்லை. காங்கிரஸின் மேலவையும் அவ்வுடன்படிக்கையை ஏற்றுக்கொண்டது.

### பின்க்சிலி உடன்படிக்கை

ஸ்பானியர்கள் ஆதிக்கத்திலிருந்த மிசிசிபி நதியை அமெரிக்க வணிகர்களுக்குத் திறந்துவிட வாஷிங்டன் பதவியேற்றதிலிருந்து

முயன்று வந்தார். பிரான்சிற்கு எதிராகப் பிரிட்டனுடன் சேர்ந்து அமைத்துக் கொண்டிருந்த கூட்டிணைவிலிருந்து ஸ்பெயின் 1795-ல் விலகிற்று. அதனால், ஒருவேளை பிரிட்டனுடன் போரிட நேரிடுமோ என அஞ்சிய ஸ்பெயின் அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் நட்பு கொள்ள விழைந்தது. அமெரிக்கத் தூதுவர் தாமஸ் பின்க்கிலி, ஸ்பானியர், களோடு நன்முறையில் ஓர் ஒப்பந்தத்தை அக்டோபர் 1795-ல் செய்து கொண்டார். அதன்படி மிசிசிபி நதியை அதன் முழு நீளத் திற்கும் அமெரிக்கர் போக்குவரத்துக்குத் திறந்துவிடவும், நியூஆர்லியன்ஸ் (New Orleans) துறைமுகத்தை மூன்றாண்டு களுக்கு அமெரிக்கர் பயன்படுத்தவும் ஸ்பெயின் ஒப்புக்கொண்டது, புளோரிடா (Florida) வின் வட எல்லை 31டிகிரி அட்சரேகை எனவும் வரையறுக்கப்பட்டது. இம் மூன்று அம்சமும் சுதேச வெளி நாட்டுக் கொள்கையில் தன்னை ஒரு சிறந்த நாடாக, வெற்றிபெற்ற நாடாக ஆக்கிக் கொண்டது என ஆர்லோபிளே கூறுகிறார்.

### வாஷிங்டன் ஓய்வு பெறல்

ஜார்ஜ் வாஷிங்டன் அமெரிக்கக் குடியாசுத் தலைவராக இரு பதவிக்காலம் (1789-93, 1793—97) பணியாற்றிவிட்டு 1797-ல் ஓய்வு பெற்றார்; பின்னர் இரண்டு ஆண்டுகள் கழித்து மறைந்தார். தம்முடைய பிரிவு விடை சொற்பொழிவில் மக்களுக்கும், வருங்கால அரசியல்வாதிகளுக்கும் நல்ல பல அறிவுரைகளை அவர் வழங்கினார்; பிரிவினைச்சக்திகளிலிருந்து மக்கள் தங்களைக் காத்துக் கொள்ளும்படி எச்சரித்தார்; அயல் நாட்டுறவில், அமெரிக்க ஐக்கிய நாடு அன்று நிலவிய ஐரோப்பிய சிக்கல்களில் தலையிடாது தனித்திருப்பதே உகந்தது என்றார். சில தற்காலிக உடன்பாடுகளைச் செய்து கொள்வதில் தவறில்லை என்றும் அவர் கூறினார். வாஷிங்டனது தனித்திருத்தல் கொள்கையே தாற்காலிகச் சூழ்நிலைக்கிசைந்த ஒன்றே தவிர முடிவானதொன்றன்று. எனினும், அவரது அறிவுரைகள் எதிர் காலத்திற்கு ஒரு வழிகாட்டியாக அமைந்தது எனலாம்.

வாஷிங்டன் தமது பதவிக் காலத்தில் பல செயற்கரிய செயல் களைச் சாதித்திருந்தார்; கூட்டாட்சி அரசுக்கு ஒரு சிறந்த அரசு அமைப்பைத் தந்தார்; கூட்டாட்சியின் நிதி நிலையைச் சீர்படுத்தினார். உள்நாட்டுச் கலகங்களை அடக்கி ஒடுக்கி அமைதியை அவர் நிலை நாட்டினார்; கடல் கடந்த வாணிகத்தை ஊக்குவிப்பதிலும் ஆர்வங் காட்டினார். ஐரோப்பியப் போர்களில் தமது நாட்டைக் கலந்து கொள்ளாது காத்தார். வாஷிங்டன் தமது பதவிக்காலத்தில் பல நல்ல மரபுகளையும் ஏற்படுத்தியிருந்தார். எடுத்துக்காட்டாக ஒரு குடியாசுத் தலைவர் இரண்டு பதவிக் காலத்திற்குமேல் பதவியில் இருத்தலாகாது என்பதும் ஒன்றாகும். இப்படிப் பலவகையிலும்

சிறப்புறத் தொண்டாற்றிய ஒரு பெருமகனைப் பெற்றிருந்தமை அமெரிக்க ஐக்கியநாடு செய்த நற்பேறு எனலாம். எல்லாவற்றிற்கும் மேலாக (அவரின் சிறப்புத் தன்மை) அரசியலுக்கு அப்பால் ஆனால் அரசியலில் ஏற்பட்ட வட்டத்திற்குள் அமெரிக்க அரசியலில் இயங்கி அந் நாட்டின் சரித்திரத்தில் ஒரு நிலையான இடத்தைப் பெற்றார். அரசியலில், தனிப்பட்ட மனிதனுடைய நன்மைகளை முற்றிலும் தவிர்த்து, நாட்டிற்கு மக்கள் தங்களைத் தியாகம் செய்ய வேண்டுமென்ற ஒரு சிறந்த கொள்கைக்கு அவர் ஓர் நடமாடும் எடுத்துக்காட்டு ஆவார்.

அவர் பணியை மறவாத அமெரிக்கர்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைநகருக்கு **'வாஷிங்டன்'** எனப் பெயர் சூட்டினர்.

# 8. அமெரிக்க ஐக்கிய நாட்டில் அரசியல் கட்சிகளின் தோற்றம்

அரசியல் கட்சிகள் விரும்பத்தக்கன அல்ல என அமெரிக்க அரசியலமைப்பை இயற்றியவர்கள் கருதினர்கள். கட்சிகள் குடியாட்சியை மாசுபடுத்தும் என நினைத்தனர். ஆனால், அவர்கள் எண்ணியதற்கு மாருக உரிமை பெற்ற சில ஆண்டுகளில் கட்சிகள் தோன்றலாயின. அரசியலமைப்பைத் திட்டும்போதே சில பகுதிகளைத் திருத்தியமைக்கும் விவாதத்தின்போது பிரிவுகள் தலைகாட்டின. பிறகு சில அரசியல் கோட்பாடுகளின் அடிப்படையிலும், பொருளாதாரக் கொள்கைகளின் அடிப்படையிலும், அவை வலுப் பெறலாயின. அரசியலமைப்பை இயற்றிய பின் அதனை மாநிலங்களில் ஏற்றுக் கொள்ளச் செய்ய வாதாடியவர்கள் கூட்டாட்சிவாதிகள் (Federalists) என்றும், அதற்கு எதிரானவர்கள் கூட்டாட்சி எதிர்ப்பாளர் (Anti-Federalitsts) என்றும் பெயர் பெற்றனர். கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள் தங்களைக் குடியரசுக் கட்சியினர் (Republicans) என்றழைத்துக் கொண்டனர். ஆரம்பத்தில் குடியரசுக் கட்சி என்றழைக்கப்பட்ட கட்சி தனது பெயரை மக்களாட்சி கட்சி (Democratic Party) என ஜாக்ஸன் ஆட்சியின்போது மாற்றிக் கொண்டது. இன்றுள்ள குடியரசுக் கட்சி 1854-ல் தோற்றுவிக்கப் பட்டது.

### கட்சிகளின் உறுப்பினர்கள்

**கூட்டாட்சிவாதிகள் :** குடியாட்சி என்பது அறிவிற் சிறந்தவகளாலும், செல்வர்களாலும், உயர்குடிப் பிறப்பாளர்களாலும் மட்டுமே செவ்வையாக நடத்த முடியும் என்ற கருத்தினைக் கொண்டவர்களுக்கு ஹாமில்டனின் அரசியற் கோட்பாடுகளும், அவர் செயலாற்றிய கட்டங்களும் பிடித்திருந்தன. வலுவான மைய அரசை நிறுவும் திருத்துடன் ஹாமில்டன் பணியாற்றினர். கூட்டாட்சிவாதிகள்

கட்சியில் பெரும்பாலும் நகரங்களிலும், கடலோரப் பகுதிகளிலும் வாழ்பவர்களும், சிறப்பாக வணிகர்களும், உற்பத்தியாளர்களும், பாங்குகளை நடத்துபவர்களும், தொழிலதிபர்களும் இருந்தனர். வட பகுதியிலிருந்த பெரு வணிகர்களும், நியூ இங்கிலாந்து வணிகர்களும் இக் கட்சியின் முதுகெலும்பாயிருந்தனர்.

**குடியரசுக் கட்சியினர்** (ஜனநாயகக்கட்சி) : ஹாமில்டனின் திட்டங்களுக்கு முதலில் தென் மாநிலங்களிலிருந்த பண்ணையார்களிடமிருந்து கடும் எதிர்ப்புத் தோன்றிற்று. அவருடைய திட்டங்களெல்லாம் வட மாநிலங்களிலிருந்த செல்வந்தர்களுக்கே நன்மை பயப்பனவாயிருந்தன. அவற்றை ஆரம்பத்திலிருந்தே வெளியுறவுத்துறைச் செயலாளர் தாமஸ் ஜெபர்சன் எதிர்த்துவந்தார். பண்ணையாளர்கட்கும், கடன் சுமையால் நசுங்கப் பெற்ற ஏழைக் குடியானவர்கட்கும், சார்புரிமைப் பேச்சாளராக ஜெபர்சன் விளங்கினர். நாளடைவில் விவசாயத்தில் ஈடுபட்டிருந்த தென் மாநிலங்கள் உறுதிப்பாட்டுடன் ஹாமில்டனது திட்டங்களை எதிர்த்தன. குடியரசுக் கட்சியில் பெரும்பாலும் குடியானவர்களும், கைவினைஞர்களும், சிறு வணிகர்களும் இருந்தனர்.

**கட்சிகளின் கோட்பாடுகள்**

**கூட்டாட்சிவாதிகள் :** ஐரோப்பாவிலும், பிற இடங்களிலுமிருந்த முடியாட்சியைப் போன்றதொரு ஆட்சியை அமெரிக்க ஐக்கிய நாட்டில் நிறுவ வேண்டும் என்ற தீய எண்ணம் ஹாமில்டனுக்குக் கிடையாது. பிரிட்டிஷ் அரசை அவர் போற்றினும் அமெரிக்க அரசியலமைப்புக்குப், பற்றுறுதியைக் காட்டினர். அமெரிக்கக் குடியரசு வாணிகத் துறையிலும் தொழிற்றுறையிலும் உச்ச நிலையை அடைய வேண்டுமென்பதே அவரது பேரவா. அதற்காகவே பாங்கினையும் சுங்கவரிகளையும் கொண்டு வந்தார். அவர், ஜெபர்சனை "வெறுக்கத் தக்க வேடதாரி' என்று கூறினர். குடியரசுக் கட்சியினரது கோட்பாடுகள் செயல்முறைக்கு ஒவ்வாதனவென்றும், அவற்றை நடைமுறைக்குக் கொண்டு வந்தால் நாட்டில் குழப்பமே ஏற்படும் என்றும் ஹாமில்டன் கருதினர். வெளிநாட்டுறவில் பிரிட்டனுடன் நட்புறவு கொள்வதையே கூட்டாட்சிவாதிகள் விரும்பினர்.

**குடியரசுக் கட்சியினர் :** அமெரிக்கப் புரட்சியின் கோட்பாடுகளை நிறைவேற்றும் வகையில் ஆட்சிமுறை அமைய வேண்டுமென ஜெபர்சன் விரும்பினர். கூட்டாட்சி அரசு பொதுமக்களது (அரசாக இருக்கவேண்டுமென்றும்; உயர்குடிப் பிறவாதபொதுமக்களது )உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும், எண்ணினர். ஹாமில்டன்

மறைவாக அமெரிக்கக் குடியரசையே அழிக்க முயலுகிறார் என ஜெபர்சன் குற்றம் சாட்டினர். ஹாமில்டனால் விவரிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்ட உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாட்டினை (ஜெபர்சன் பெரிதும் கண்டித்தார். அக் கோட்பாட்டினால்), கூட்டாட்சி அரசு மக்களது உரிமைகளையும், மாநிலங்களின் அதிகாரங்களையும் பறிக்கக்கூடும் எனக் கருதினர். கூட்டாட்சி அரசு வெளியுறவை நிறுவுவதோடு செயற்பட்டு, உள்நாட்டுக் காரியங்களை மாநிலங்களிடத்து விட்டுவிடவேண்டும் என்றும் சொன்னர். குடியரசுக் கட்சியினர் வெளியுறவில் பிரான்சோடு நட்புக் கொள்ள விரும்பினர்.

### கட்சிகளின் அமைப்பு

இரு கட்சிகளும் 1791ஆம் ஆண்டில் வடிவம் பெற்றன. காங்கிரஸ் உறுப்பினர்களும், மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களும் தங்களைக் கூட்டரசுவாதிகள் கட்சியோடு அல்லது குடியரசுக் கட்சியோடு இணைத்துப் பேச ஆரம்பித்தனர். ஒவ்வோர் ஊரிலும் கட்சிகளின் குழுக்கள் தோன்றி, கொள்கைகள் பற்றியும், தேர்தலுக்கு வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பது பற்றியும் கருத்து விளக்கம் செய்யத் தொடங்கின. ஒவ்வொரு கட்சியும் செய்தித்தாள் ஒன்றினையும் வெளியிட முனைந்தன. அவற்றில் பெரும்பாலும் ஒன்றையொன்று தாக்கி, வசைமாரி பொழிந்தன. கூட்டாட்சிவாதிகள் "அமெரிக்க ஐக்கிய நாட்டு செய்தித்தாள்" (United States Gazette) என்ற தலைப்பில் ஒரு செய்தித்தாள் வெளியிட்டனர். அதில் ஹாமில்டனே கட்டுரைகள் பல எழுதினர். குடியரசுக் கட்சியினர் "தேசிய செய்தித்தாள்" (National Gazette) என்ற தலைப்பில் ஒரு செய்தித்தாளை பிலடெல்பியாவிலிருந்து வெளியிட்டனர். ஜேம்ஸ் மாடிசன் (James Madison) பல தொடர் கட்டுரைகளை வெளியிட்டு, கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள் என்ற பெயரிலிருந்து மெல்லக் குடியரசுக் கட்சி என்ற பெயரைப் படைத்துத் தந்தார். இவ்வாறு ஒவ்வொரு கட்சியும் மற்றொன்றை ஐயக்கண் கொண்டு நோக்கின.

### வாஷிங்டனும் கட்சிகளும்

கூட்டாட்சிவாதிகள் தொடக்கத்தில் பல நல்ல பயன்களைப் பெற்றிருந்தனர். அவர்களிடம் திட்டவட்டமான கோட்பாடுகளும், கொள்கைகளும் இருந்தன. நற்பயனைக விடாமுயற்சியோடு செயலாற்றும் திறன் கொண்ட ஹாமில்டனைத் தலைவராகப் பெற்றிருந்தனர். (வாஷிங்டனும் அவர்களுக்குப் பேராதரவாளராயிருந்தார்). வாஷிங்டன் எக் கட்சியையும் சாராதவர். கட்சிப் பூசல்களின்று விலகியிருந்தார். ஹாமில்டனின் உள்நாட்டுத்

திட்டங்களையும், வெளிநாட்டுக் கொள்கையையும் அவர் ஆதரிக்கக் காரணம், அவை கூட்டாட்சிவாதிகளது கொள்கைகள் என்பதற் காகவல்ல ; அவற்றால் நாட்டிற்கு நல்லதே விளையும் என்பதற்காகவே. கூட்டாட்சி அரசினைக் கூட்டாட்சிவாதிகள் மட்டும் கட்டுப்படுத்தக் கூடாது என்பதற்காகவே ஹாமில்டனோடு ஜெபர்சனையும் அமைச் சரவையில் இடம்பெறச் செய்தார். கட்சி அடிப்படையில் குடிரசுத் தலைவர் தேர்தலில் பூசல் வரக் கூடாது என்பதற்காகவே வாஷிங்டன் 1792-ல் தம் இரண்டாவது பதவிக்காலத்தை ஏற்க இசைந்தார், குடியரசுக் கட்சியைச் சார்ந்த ஜெபர்சன், தாம் அடிக்கடி அமைச்சரவை கூட்டங்களில் கூட்டாட்சிவாதிகளால் சிறுபான்மை யாக்கப்படுவதைக் கண்டு பதவியில் இருந்து விலகினார். இறுதியில் வாஷிங்டன் விருப்பத்திற்கு மாறாக ஒரு கட்சிச் சார்புடைய அமைச்சரவையே விளங்கிற்று.

## 1796 தேர்தல்

வாஷிங்டன் ஓய்வு பெறவிருப்பதாக அறிவித்ததும், இரு கட்சி களும் குடியரசுத் தலைவர் பதவிக்குத் தங்களது வேட்பாளர்களைத் தேர்ந்தெடுப்பதிலும், வாக்குகளைப் பெறுவதிலும் முனைந்தன. கூட்டாட்சிவாதிகள் ஜான் ஆடம்ஸ் (John Adams) என்பவரையும், குடியரசுக் கட்சியினர் தாமஸ் ஜெபர்சனையும் வேட்பாளர்களாகத் தேர்ந்தெடுத்தனர். ஏற்கனவே இருந்த பதின்மூன்று மாநிலங்களோடு புதிதாக வெர்மாண்ட் (Vermont) கென்ட்டக்கி (Kentuky), தென்னசி (Tennessee) ஆகிய மூன்று மாநிலங்கள் சேர்ந்து பதினாறு மாநிலங் களின் சட்டமன்றங்கள் சேர்ந்து தேர்தல் குழுவை நியமித்தன. வாக்கெடுப்பில் ஜான் ஆடம்ஸுக்கு 71 வாக்குகளும் ஜெபர்சனுக்கு 68 வாக்குகளும் கிடைத்தன. ஜான் ஆடம்ஸ் குடியரசுத் தலைவரானார். இதனின்று கட்சி அடிப்படையில் தேர்தல் எவ்வளவு மும்முரமாக நடைபெற்றதென அறியலாம்.

# 9. ஜான் ஆடம்ஸ்

ஜான் ஆடம்ஸ் (John Adams) அமெரிக்க ஐக்கிய நாட்டுக் குடியரசின் இரண்டாவது தலைவராக 1797 முதல் 1801 வரை பணியாற்றினர். இவர் கூட்டாட்சிவாதிகள் கட்சியின் கொள்கைகளில் அதிகப் பற்றுடையவர்; அதிகப் பற்றுறுதியின் காரணமாகக் கூட்டாட்சிவாதிகளை மட்டும் ஆதரித்தும், குடியரசுக் கட்சியினரை ஒடுக்கியும் தமது குறுகிய மனப்பான்மையை வெளியிட்டார். அவர் திறமையும், நேர்மையும், உயர்ந்த நோக்கங்களும் கொண்டவர்; ஐரோப்பாவில் பல ஆண்டுகள் அமெரிக்காவின் அரசியல் விரகராகப் (Diplomat) பணியாற்றியவராவார். ஜார்ஜ் வாஷிங்டன் குடியரசுத் தலைவராக இருந்தபோது ஜான் ஆடம்ஸ் துணைத் தலைவராக இருந்தார். அவருடைய பதவிக் காலம் மிகவும் குழப்பம் நிறைந்த ஒன்றாகும்; ஜான் ஆடம்ஸுக்கும் ஹாமில்டனுக்கும் இடையே கருத்து வேறுபாடிருந்தது. இதனால் கூட்டாட்சிவாதிகள் கட்சியிலேயே பிளவு ஏற்பட்டது. எனினும் ஆடம்ஸே பெரும்பாலாராலும் விரும்பப்பட்டார். வாஷிங்டனால் நியமிக்கப்பட்ட உயர் அலுவலர்களை ஆடம்ஸ் அப்படியே தொடர்ந்து பதவியிலிருக்கச் செய்தார். பல துறைத் தலைவர்கள் ஹாமில்டனையே ஆதரித்தனர். தென் மாநிலத்தவருக்கு ஆடம்ஸ் மீது நியூஇங்கிலாந்தைச் சேர்ந்தவரென்பதால் வெறுப்பு. கட்சி உணர்ச்சி, மிகக் கசப்பான நிலையையடைந்தது. மற்றும் வெளிநாட்டுறவிலும் பல சிக்கல்கள் தோன்றின.

**பிரான்சுடன் உறவு நிலை** (x, y, z, **நிகழ்ச்சி**)

வாஷிங்டன் பதவிக் காலத்தில் இங்கிலாந்தோடும், ஸ்பெயினோடும் அமெரிக்க ஐக்கிய நாடு உடன்பாடு செய்து கொண்டதைப் பிரான்சு பொறுமையுடன் நோக்கியது. வாஷிங்டன் நடுநிலைமைக் கொள்கையை அறிவித்தது முதல் இரு நாடுகளுக்குமிடையேயிருந்த உறவுநிலை சீர் குலையலாயிற்று. ஆடம்ஸ் அனுப்பிய அயல்நாட்டு

அமைச்சரை பிரான்சு ஏற்றுக் கொள்ளாமல் அவமதித்தது. இதனைக் கண்ட அமெரிக்கர் பலர் பிரான்சுமீது போர் தொடுக்க வேண்டினர். ஆனால், ஆடம்ஸ் போரைத் தவிர்க்க விரும்பினார். சார்லஸ் பின்க்சிலி, ஜான் மார்ஷல், எல்பிரிட்ஜ் ஜெர்ரி ஆகிய மூவரடங்கிய குழுவொன்றினை, ஆடம்ஸ் சமரச பேச்சுவார்த்தைகள் நடத்துவதற்காகப் பிரான்சிற்கு அனுப்பி வைத்தார். அங்கு அரசியல் சூழ்நிலையில் குழப்பம் நிலவியதால் நல்லெண்ணத் தூதுவர்கள் மூவரும் அவமதிக்கப்பட்டனர். பிரான்சின் அயலுறவுச் செயலாளரான டாலிரான் (Talleyrand) மூவர்குழுவைக் காணவும்மறுத்தார். அந்நாள்அரசியலில் உலகெங்கும் ஊழல்கள் மலிந்திருந்தன. சில நாள் கழித்து அமெரிக்கக் குழுவினரை, பெயர் சொல்லிக் கொள்ளாத மூன்று பிரெஞ்சு அரசு உயர் அலுவலர்கள் சந்தித்து, பிரெஞ்சு செயலாளருக்கு இரண்டரை லட்சம் டாலர் கையூட்டும், பிரெஞ்சு அரசிற்கு கடனுதவி அளிக்க உறுதியும் கொடுத்தால் டாலிரானைச் சந்திக்க முடியும் என்று கூறினர். இச் செய்தியைக் குழுவினர் குடியரசுத் தலைவருக்குத் தெரிவித்தனர். தங்களைச் சந்தித்த அரசு ஊழியர்களை X, Y, Z, என்று குறிப்பிட்டிருந்தனர். இச் செய்தி அமெரிக்கா முழுவதும் வெளியிடப்பட்டதும், அமெரிக்கர் கொதித்தெழுந்தனர். மூவர்குழு நாடு திரும்பச் சொல்லப்பட்டது.

### பிரான்சுடன் உடன்படிக்கை 1800

பிரான்சுமீது போர் தொடுப்பதற்காகப் படைகள் திரட்டப்பட்டன. கப்பற்படை வலுப்படுத்தப்பட்டது. பிரான்சிற்குச் சொந்தமான லூசியானா (Louisiana) பகுதியைக் கைப்பற்ற அனுப்பப்பட்ட படைக்கு ஹாமில்டன் தலைவராக நியமிக்கப்பட்டார். சில கடல் தாக்குதல்கள் நடந்தன. பெரும்போர் நடந்தே தீரும் என்று ஒரு சமயம் தோன்றிற்று. நற்பயனாக பிரெஞ்சு அரசு தங்களுக்கிடையேயிருந்த கருத்து வேறுபாடுகளை அமைதியான முறையில் தீர்த்துக்கொள்ள விருப்பம் தெரிவித்தது. ஆடம்ஸும் அதற்கிசைந்து ஓர் அமைச்சரை அனுப்பினார். அமெரிக்க ஐக்கிய நாட்டின் அமைச்சர் போய்ச் சேர்ந்த சமயம் பிரெஞ்சு அரசியலில் மாற்றங்கள் ஏற்பட்டு நெப்போலியன் ஆட்சிப் பொறுப்பிலிருந்தார்; அமெரிக்க அமைச்சரை அன்போடு வரவேற்றுப் பேசினார். இரு நாடுகளுக்குமிடையே ஓர் ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. அதன்படி 1778-ல் ஏற்பட்ட ஒப்பந்தம் தள்ளுபடி செய்யப்பட்டது. பிரான்சால் கைப்பற்றப்பட்ட அமெரிக்கக் கப்பல்களுக்கான இழப்பீட்டைக் கேட்பதில்லையென அமெரிக்கா ஒத்துக் கொண்டது. இவ்வமைதி ஒப்பந்தம் பின்னர் அமெரிக்கா, பிரான்சிடமிருந்து லூசியானாவை விலைக்கு வாங்க வழி செய்தது.

குடியரசுக் கட்சியினர், பிரான்சையும், பிரெஞ்சுப் புரட்சியின் கோட்பாடுகளையும் தீவிரமாக ஆதரித்தனர். குடியரசுக் கட்சியின ருக்கு இழுக்கை உண்டு பண்ண வேண்டுமென்ற அடிப்படை நோக்கத்தோடு கூட்டாட்சிவாதிகள் கட்சியைச் சார்ந்த ஆடம்ஸ், பிரான்சு மீது போர் தொடுத்தார். ஆனால் பெரும்போர் தவிர்க்கப் பட்டது. இருப்பினும் போருக்கான ஆயத்தங்களைச் செய்தமையால் அரசுக்கு நிதி நிலைமையில் இக்கட்டான நிலையேற்பட்டது. கூட்டாட்சி வாதிகள் ஆட்சி பெரிதும் பாதிக்கப்பட்டது. அதே சமயம் உள்நாட்டு நிகழ்ச்சிகளில் ஆடம்ஸ் குறுகிய மனத்தோடு மக்களின் உணர்ச்சிகளை மதிக்காது நடந்து கொண்டமையால், மக்களின் வெறுப்பைப் பெற்றார்.

### அயலவர் சட்டமும் அரசுத்துரோகச்சட்டமும்

காங்கிரஸ் 1798-ல் அயலவர் சட்டத்தையும், அரசுத் துரோகச் சட்டத்தையும் இயற்றிற்று. குடியரசுக் கட்சியினருக்கு எதிராக இச் சட்டங்கள் இயற்றப்பட்டன எனலாம். கூட்டரசு வாதிகள் கட்சியினரான ஆடம்ஸ், குடியரசுக் கட்சியினரது உரிமை களைப் பறிக்கவும், அவர்கள் கூட்டாட்சி அரசை மதிக்கச் செய்யவும் விரும்பினர். ஐரோப்பிய நாடுகளிலிருந்து வந்து குடிபுகுந்தவர் களில் பெரும்பாலானோர் தாராளக் கொள்கையினராக இருந்தனர். அவர்கள் குடியரசுக் கட்சியினரது எண்ணிக்கையை அதிகப்படுத் தினர். இதனைக் கட்டுப்படுத்துவதற்காகச் சில சட்டங்கள் இயற்றப் பட்டன. அயலவர்க்குக் குடியுரிமை வழங்கும் சட்டப்படி (Naturali-sation Act) அயல் நாட்டவர் அமெரிக்கக் குடியாவதற்கு அமெரிக்க ஐக்கிய நாட்டில் வசிக்க வேண்டிய காலம் ஐந்தாண்டிலிருந்து பதினான்கு ஆண்டுக் காலமாக உயர்த்தப்பட்டது. மற்றொரு சட்டப்படி (Alien Act) நாட்டின் அமைதிக்கு ஊறுவிளைக்கக் கூடிய அயலவர்களைச் சிறையிடவோ நாட்டினின்று வெளியேற்றவோ குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் தரப்பட்டது. இச் சட்டத்தால் பிரான்சிலிருந்து வந்து குடியேறியிருந்த பலர் மீண்டும் பிரான்சிற்கே திரும்பினர். அரசுத் துரோகச் சட்டத்தின்படி (Sedition Act) குடியரசுத் தலைவருக்கெதிராகவோ அரசுக்கெதிராகவோ சதி செய் பவர்க்கு ஐந்தாண்டுச் சிறைத் தண்டனையும், ஐந்தாயிரம் டாலர் தண்டமும் விதிக்கப்படும். காங்கிரஸையோ, குடியரசுத் தலைவரையோ இகழ்ந்து கட்டுரைகள் வெளியிடுபவர்க்கு இரண்டாண்டுச் சிறை வாசமும், இரண்டாயிரம் டாலர் தண்டமும் விதிக்கப்படும்.

### வர்ஜீனியா, கென்டக்கி—தீர்மானங்கள்

அயலவர் சட்டமும், அரசுத் துரோகச் சட்டமும் தனி மனிதனது அடிப்படை உரிமைகளைப் பறிக்கும் வகையில் இருந்தமையால்

மக்கள் அவற்றைப் பெரிதும் வெறுத்தனர். நீதித்துறையிலும் கூட்டாட்சிவாதிகளே பெருமளவில் இருந்தமையால் இச் சட்டங்கள் வலிந்து செயற்படுத்தப்பட்டன. இவற்றை ஜெபர்சன், மாடிசன் போன்ற தலைவர்கள் கண்டித்தனர். கூட்டாட்சிவாதிகள் கூட்டாட்சி அரசின் அதிகாரங்களை அளவுக்குமீறிப் பயன்படுத்துவதாகக் கருதினர். பல்வேறு மாநிலங்களுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தால் அமெரிக்க ஐக்கிய நாட்டின் கூட்டாட்சி நிறுவப்பட்டதென்றும், அவ்வொப்பந்தத்தையும், அரசியலமைப்பையும் மீறும் வண்ணம் கூட்டாட்சி அரசு சட்டங்களை இயற்றினால் அவற்றைத் தள்ளுபடி செய்யவும், கட்டுப்பட மறுப்பதற்கும் மாநிலங்களுக்கும் உரிமையுண்டு எனக் கூறினர். இதுவே "செல்லுபடியற்றதாகும் கோட்பாடு" (Doctrine of Nullification) எனப்படும். இக்கோட்பாட்டினை உள்ளடங்கிய தீர்மானங்கள் வர்ஜீனியா, கென்டக்கி — ஆகிய மாநிலங்களின் சட்டமன்றங்களில் இயற்றப்பட்டன.

## குடியரசுத் தலைவர் தேர்தல் 1800

கூட்டாட்சிவாதிகள் ஆடம்ஸையும், குடியரசுக் கட்சியினர் ஜெபர்சனையும், தத்தம் வேட்பாளராக 1800-ல் நடைபெற்ற குடியரசுத் தலைவர் தேர்தலில் நிறுத்தினர். கூட்டாட்சிவாதிகளிடையே பிளவுகள் பல உண்டாயிருந்தன. ஹாமில்டனுக்கும் ஆடம்ஸுக்கும் இடையே மனக்கசப்பு அதிகரித்தது. பிரான்சுக்குப் போக மறுத்த இரு அமைச்சர்களை ஆடம்ஸ் பதவியிலிருந்து விலக்கினார். பிரெஞ்சுப் போரினாலும், அதனால் ஏற்பட்ட செலவாலும் கூட்டாட்சிவாதிகள் மக்களிடத்து செல்வாக்கிழந்தனர். அயலவர் சட்டமும், அரசுத்துரோகச் சட்டமும் தங்களது அடிப்படை உரிமைகளை மீறும்வகையில் இருந்தமையை மக்கள் வெறுத்தனர். இக் காரணங்களால் ஆடம்ஸ் 65 வாக்குகள் மட்டும் பெற்று 73 வாக்குகள் பெற்ற ஜெபர்சனிடம் தோற்றார்.

### கூட்டாட்சிவாதிகளின் நற்பணி

அமெரிக்கக் குடியரசு ஆரம்பித்து முதல் பன்னிரண்டு ஆண்டுகள் கூட்டாட்சி அரசு கூட்டாட்சிவாதிகளின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தது. அச் சமயத்தில் பல மாநிலங்கள் கூட்டாட்சி அரசின் வலிமையைக் குறைக்கும் வகையில் பல உரிமைகளை மாநிலங்களுக்குத் தருமாறு கேட்டன. ஐரோப்பாவிலும் பிரெஞ்சுப் புரட்சிக்குப் பிறகு அச் சமயம் போர் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்த அப்படிப்பட்ட சிக்கலான நேரத்தில் கூட்டாட்சிவாதிகள் பிரிவினைச் சக்திகளைக் களைந்து குடியரசை வலுப்படுத்தினர். நாட்டிற்குச் சிறந்ததொரு கூட்டாட்சி அரசியலமைப்பை ஆக்கித்தந்தனர். கட்டுத்தளர்வான அரசியலமைப்பும், கூட்டாட்சி அரசை

வலுவாக்க வழி செய்தது. வலிமைமிக்கக் கூட்டாட்சி அரசும் அமைக்கப்பட்டது. கூட்டாட்சியின் நிதி நிலைமை சீர்திருத்தப்பட்டு, ஒரு பாங்கும் நிறுவப்பட்டது. மேற்குப் பகுதியில் பூர்வீக இந்தியக் குடிகள் அடக்கப்பட்டுக் குடியேற்றத்தில் வழிவகை செய்யப்பட்டது. கூட்டாட்சிவாதிகள் பல்வகைப் பொருளாதார வளர்ச்சிக்குப் பாடு பட்டனர். தொழில் முன்னேற்றத்திற்கான வழிவகைகளையும் வகுத்தனர். ஜார்ஜ் வாஷிங்டனால் வகுக்கப்பெற்ற, 'தனித்திருத்தல் கொள்கை'யே பின்னர் "மன்ரோ கோட்பாடு" ஆயிற்று. அமெரிக்கக் குடியரசு குலையாமல் நிலைத்திருக்குமா என்று 1789-ல் தோன்றிய ஐயம் 1800-ல் யாருக்கும் தோன்றவில்லையெனலாம்.

**1800-ல் குடியரசுக் கட்சியினரது வெற்றியின் சிறப்பு**

அமெரிக்கக் குடியரசு மக்களுடைய அரசாக இருக்க வேண்டுமெனக் கூட்டாட்சிவாதிகள் நினைக்க மறந்தனர். தனிப்பட்ட உயர் குடிப்பிறப்பாளருக்குமட்டுமே ஊதியமும், உரிமைகளும் தரும் வகையில் தங்களது கொள்கைகளை வகுத்தனர். இவற்றைக் கண்ட மக்கள், ஆட்சியில் ஒரு மாற்றத்தை விரும்பினர். 1800-ல் நாடும், மாறுதலுக்கு ஆயத்தமாக இருந்தது. அந்த ஆண்டு மாபெரும் அரசியல் கிளர்ச்சியுடைய ஆண்டாக இருந்தது. குடியரசுக் கட்சியினர் தங்களது கட்சியைச் சிறப்புற அமைத்திருந்தனர். கூட்டாட்சி அரசு குறிப்பிட்ட சில கூட்டத்தாரின் நன்மைக்காக இருக்கக்கூடாது என்றும், பொதுமக்களின் நன்மைக்காகவே பாடுபடவேண்டுமென்றும் குடியரசுக் கட்சியினர் மக்களுக்கு எடுத்துக் கூறி மக்களைப் பெரிதும் கவர்ந்தனர்; குடியரசுக் கட்சியின் தலைவரான ஜெபர்சனும் சிறுகுடியானவர்கள், கைவினைஞர், சிறு வணிகர்கள், இதரத் தொழிலாளர்கள் முதலியோரின் நன்மதிப்பைப் பெற்றிருந்தார். எனவே. ஜெபர்சன் உறுதியான நம்பிக்கையோடு 1800-ல் நடைபெற்ற தேர்தலில் போட்டியிட்டார்.

குடியரசுக் கட்சியினர் ஜெபர்சனைக் குடியரசுத் தலைவர் பதவிக்கும், ஆரன்பர் (Aaron Burr) என்பவரைத் துணைத்தலைவர் பதவிக்கும் வேட்பாளராக நியமித்தனர். கூட்டாட்சிவாதிகள் ஜான் ஆடம்ஸை தலைவர் பதவிக்கும், பின்க்கினி என்பவரைத் துணைத் தலைவர் பதவிக்கும் தேர்ந்தெடுத்தனர். அப்போதிருந்த தேர்தல் விதிப்படி குடியரசுத் தலைவருக்கும், துணைத் தலைவருக்கும் ஒரே வாக்கெடுப்புதான் இருந்தது. அதிக வாக்கு பெற்றவர் குடியரசுத் தலைவராகவும், அடுத்து அதிக வாக்கு பெற்றவர் துணைத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்படுவார். 1800-ல் நடைபெற்றத் தேர்தலில் ஜெபர்சனுக்கு 73 வாக்குகளும் ஆரன்பருக்கு 73 வாக்குகளும் ஆடம்ஸிற்கு 65 வாக்குகளும் கிடைத்தன. இப்படித் தேர்தலில் இரு வேட்பாளருக்குமிடையே சமநிலை ஏற்பட்டால், சட்டமா

மன்றத்தின் கீழ்ச்சபையான பிரதிநிதிகள் சபைக்குக் குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு தரப்பட்டிருந்தது. பிரதிநிதிகள் சபையில் ஹாமில்டன் தம் செல்வாக்கை ஜெபர்சனுக் காகப் பயன்படுத்தி அவருக்கு வெற்றியைத் தேடித்தந்தார். ஆரன்பர் குடியரசு துணைத் தலைவரானார். 1804-ல் கொண்டு வரப்பட்ட பன்னிரண்டாவது அரசியலமைப்புத் திருத்தத்தின்படி குடியரசுத் தலைவருக்கும், துணைத் தலைவருக்கும் தனித்தனியே வாக்கெடுப்பு நடத்த வகை செய்யப்பட்டது.

குடியரசுக் கட்சியினரது வெற்றி ஒரு புரட்சிகரமான செயல் என சில வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர். ஜெபர்சன் குடியரசுக் கட்சியைச் சார்ந்திருந்தபோதிலும், அவர் செயல் முறையில் கூட்டாட்சிவாதிகளின் கொள்கைகளையே பின்பற்றினார் என்று சில வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். இரண்டு கூற்றுக் களையும் நாம் சரியானவை என ஏற்றுக் கொள்ள முடியாது. குடியரசுத் தலைவர் பதவியும், கூட்டாட்சி அரசும் ஒரு கட்சியினரிட மிருந்து மற்றொரு கட்சியினர் கைக்கு மாறியமை ஓரளவு புரட்சிகர மான செயலேயாகும். பன்னிரண்டு ஆண்டுகள் கூட்டாட்சிவாதிகள் பதவியிலிருந்த பிறகு, புதியதொரு கட்சி, புதிய — முற்றிலும் மாறான கொள்கைகளோடு பதவிக்கு வந்தது. பழமைவாதிகளான கூட்டாட்சிவாதிகள் நீக்கப்பட்டு, தாராளக் கொள்கைகளைப் பின் பற்றும் குடியரசுக் கட்சியினர் அரசைக் கைப்பற்றினர். கிழக்குப் பகுதியினராலும், கடலோரப் பகுதியினராலும் கட்டுப்படுத்தப்பட்ட கூட்டாட்சி அரசு தெற்குப் பகுதியினராலும், மேற்குப் (உட்) பகுதி யினராலும் கைப்பற்றப்பட்டது. அதிகாரம் ஓர் உயர்குடி வகுப்பாரின் கையினின்று மற்றொரு உயர்குடி வகுப்பாரின் கைக்கு மாறிற்றே ஒழிய, அரசு பொதுமக்களால் கட்டுப்படுத்தப்படவில்லை. வணிகர்கள் முன்பு ஆட்சிப் பொறுப்பிலிருந்தவர்களைக் கட்டுப் படுத்தினர். இப்போது நிலக்கிழார்களின் கை, ஆட்சிப் பொறுப்பில் ஓங்கிற்று எனலாம்.

# 10. ஜெபர்சன்

## ஜெபர்சனின் அரசியற் கொள்கைகள்

குறைந்த அளவில் ஆட்சிப் பொறுப்பையுடைய அரசே சிறந்த அரசு (The Government was the best that governed the least) என்று குடியரசுக் கட்சியினர் கருதினர். பொதுமக்கள், அரசால் அதிகமாகக் கட்டுப்படுத்தப்படாமல் உரிமைகளோடு வாழ விடப்பட வேண்டும் என்பதே ஜெபர்சனின் கொள்கையாகும். அரசு தனிப்பட்டவர்களது உரிமைகளுக்கும், பெரும்பான்மையோரது விருப்பங்களுக்கும் மதிப்புத் தரவேண்டுமென்றும், இராணுவம் ஆட்சித் துறைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்றும் விரும்பினர். சட்டத்தின் முன் ஏழை, பணக்காரர் என்ற வேறுபாடின்றிக் குடிமக்கள் அனைவரும் சமமாகக் கருதப்படவேண்டும். (தனிப்பட்ட மனிதனது மேன்மையும் அரசால் போற்றப்பட வேண்டும்). அமெரிக்கக் குடியரசு சிறிய நில உரிமையாளர்களை அடிப்படையாகக் கொண்டு விளங்க



**தாமஸ் ஜெபர்சன்**
முதலாவது குடியரசுத் தலைவர்
(1801 - 1809)
மக்களாட்சிக் குடியரசுக் கட்சி

வேண்டுமென ஜெபர்சன் விரும்பினர்; பெரு வணிகர்களுக்கும், தொழிலதிபர்களுக்கும் முக்கியத்துவம் கொடுக்க விரும்பவில்லை. மாநிலங்களின் உரிமைகளைப் பேணுவதில் அதிக நாட்டம் கொண்டார். அரசியலமைப்புக்குச் சீரான முறையில் விளக்கம் காணவேண்டும் என்றும் கூட்டாட்சி அரசின் அலுவல்கள் கட்டுப்படுத்தப்பட்டு, மாநில அரசுகளுக்குப் பேரளவில் உரிமைகள் தரப்பட வேண்டுமென்றும் அவர் கூறினர்; வெளிநாட்டுக் கொள்கையில் தீவிரமாகப் பிரான்சை ஆதரித்தார். பிரெஞ்சுப் புரட்சியின் கொள்கைகள் அவரைப் பெரிதும் கவர்ந்தன. அயல்நாடுகளோடு இடர்விளைவிக்கக் கூடிய உடன்பாடுகளை அமெரிக்கா செய்து கொள்ளக்கூடாது என்றும் ஜெபர்சன் வலியுறுத்தினர்.

வாஷிங்டனில் புதியதாகக் கட்டப்பட்ட தலைநகரில் தாமஸ் ஜெபர்சன் குடியரசுத் தலைவராக 1801 - ல் பதவியேற்ருர். (அவருடைய கொள்கைகளுக்கிணங்க) பதவியேற்பு விழா மிகவும் எளியமுறையில் நடைபெற்றது. பகட்டு, ஆரவாரம், இன்பநுகர்வு ஆகியவற்றில் ஜெபர்சனுக்கு ஈடுபாடு கிடையாது. தாமே ஒரு சாதாரண குடிமகனைப்போல் உடையணிந்து கொண்டார். வாக்குறுதி கூறிப் பதவியேற்றவுடன் அவர் நிகழ்த்திய சொற் பொழிவு பதவியேற்புச் சொற்பொழிவுகளிலே சிறந்த ஒன்ருகப் போற்றப்படுகிறது. தேர்தலின்போது ஏற்பட்ட மனக்கசப்பினையும், தேர்தலுக்குப் பிறகு இருந்து வந்த காழ்ப்புணர்ச்சியையும் மறந்து விட வேண்டுமென்பதை மறைமுகமாக, ஒவ்வொருவரும் நல் லெண்ணத்துடன், விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையுடன் செயலாற்ற வேண்டுமென, தமது உரையில் அவர் வேண்டினர். அரசியலிலும் சகிப்புத் தன்மையைப் பின்பற்றி, நாட்டில் வளங்களைப் பெருக்கவும், நாட்டின் ஒருமைப்பாட்டினைப் பேணவும், குடியாட்சியைப் பயனுள்ளதாகச் செய்யவும் மக்கள் ஒற்றுமையுடன் செயலாற்ற வேண்டுமென்றும், அவர் கேட்டுக் கொண்டார்.

தம்முடைய கொள்கைகளைச் செயல்முறைக்குக் கொண்டு வருவது என்பது ஜெபர்சனுக்கு எளிதான செயலாக அமையவில்லை. பொதுமக்களது உரிமைகளைப் பற்றிப் பேசிய அவர் மக்கள் அனைவரும் கல்வியறிவுபெற்றும் ஆட்சியில் பங்குபெறப் போதிய பயிற்சி பெற்றும் இருந்தனர் என்று நம்பினர். ஆனல், நடை முறையில் தமது தாராளக் கொள்கைகள் இந்தியப் பழங்குடி களுக்குப் பொருந்துவன அல்ல என்ற முறையில் செயற்பட்டார்; அவர்களை அமெரிக்கக் குடிமக்களாகக் கருதவில்லை; அவர்களை மிசிசிபி ஆற்றுக்கு அப்பாலுள்ள பகுதிக்குக் குடிபெயரச் செய்தார். இருப்பினும் பொதுமக்கள் ஜெபர்சனது மக்களாட்சிக் கொள்கையை ஆதரித்தனர்.

**அரசியல் மாற்றங்கள்**

ஜெபர்சன் ஆட்சிப் பொறுப்பையேற்றதும் அரசியலில் சில மாற்றங்களைச் செய்தார். வெளியுறவுத்துறைச் செயலாளராக ஜேம்ஸ் மாடிசனும் (James Madison), கருவூலச் செயலாளராக ஆல்பர்ட் கால்லடினும் (Albert Gallatin) பதவியேற்றனர். இவ்விரு புகழ்வாய்ந்த தலைவர்களும் நிலக்கிழார்களின் பிரதிநிதிகளாய் இருந்தனர். குடியானவர்களுடைய ஆதரவைப் பெறும்பொருட்டு ஜெபர்சன், ஹாமில்டன் விதித்திருந்த சாராயத் தீர்வையை ரத்து செய்தார். இதனால், வருமானத்தில் ஏற்பட்ட குறையை ஈடுசெய்ய இறக்குமதிப் பொருள்கள்மீதான சுங்கவரி உயர்த்தப்பட்டது. குடியரசுக் கட்சியினரை ஒடுக்கும் நோக்கத்தோடு இயற்றப்பட்ட அயலவர் சட்டத்தையும், அரசுத் துரோகச் சட்டத்தையும் அவர் ரத்து செய்தனர். 1801 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நீதித்துறை சட்டமும் ரத்து செய்யப்பட்டது. அச் சட்டம் கூட்டாட்சிவாதிகளைச் சார்ந்திருந்தவர்களை நீதிபதிகளாக நியமித்தது. அந் நீதிபதிகளை "நடு இரவு நீதிபதிகள்" என்பர். ஏனென்றால், மறுமுறை குடியரசுத் தலைவராக இருக்க விரும்பி, தேர்தலில் போட்டியிட்டுத் தோற்றுவிட்ட ஆடம்ஸ் பதவியினின்று விலகும்முன் கடைசி நாள் (மார்ச் 3) இரவு வரை அந் நீதிபதிகளை நியமித்தார். (மார்ச் 4 ஜெபர்சன் பதவியேற்றார்.) அச் சட்டப்படி பதவியிலிருந்த நீதிபதிகள் பதவியிழந்தனர்.

ஜெபர்சன் பிற முக்கியமான துறைகளில் கூட்டாட்சிவாதிகளால் தொடங்கப்பெற்றப் பணிகளை அப்படியே மேற்கொண்டார். உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாட்டினை விளக்கச் செய்யும் வகையில் பல எதிர்ப்புகளுக்கிடையில் நிறுவப்பட்ட பாங்கினை ஜெபர்சன் ஒழிக்க விரும்பவில்லை. தேசியக் கடனைத் திருப்பித் தரும் கொள்கையும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஜெபர்சன் பதவிக்கு வரும் முன்னர் ஆட்சித்துறை சிக்கனமாகச் செலவு செய்ய வேண்டுமென்று கூறி வந்தார். ஆனால், அவர் பதவியேற்றதும் இராணுவத்தை வலிமைப்படுத்த அரசு அதிகமாகச் செலவு செய்ய நேரிட்டது. வட ஆப்பிரிக்க நாடுகளோடு போரிட நேரிட்டதால் இராணுவம் பெரிதாக்கப்பட்டது. லூசியானாப் பகுதியிலும் போர் மூளுவதற்கான சூழ்நிலை உருவாயிற்று. ஜெபர்சன் கூட்டாட்சிவாதிகள் சார்புடைய பல உயர்நிலை அலுவலர்களை அரசியலில் தொடர்ந்து பணிபுரிய வைத்துக் கொண்டார். கட்சி அடிப்படையில்லாது நாட்டிற்கு உண்மையாக ஊழியம் செய்யும்வரை, அலுவலர்களை மாற்றத் தேவையில்லையென்று அவர் கூறினர். உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாட்டினை எதிர்த்த அவர், பின்னர் அதன் அடிப்படையிலேயே லூசியானாவை விலைக்கு வாங்கினர். இப்படிக் கூட்டாட்சிவாதிகளை முன் கண்டித்த அவர், பின்னர் அவர்களுடைய பல கொள்கைகளை அப்படியே பின்பற்றினர்.

**மார்பரி வழக்கு**

1801ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நீதித்துறைச் சட்டம் ரத்து செய்யப்பட்டதன் விளைவாக, அச் சட்டத்தின்படி நியமிக்கப்பட்ட நீதிபதிகளெல்லாம் பதவியினின்று விலக்கப்பட்டனர். உரிய முறையில் பணிபுரியும் நீதிபதிகளைப் பதவியினின்று நீக்க அரசியலமைப்பு இடந்தரவில்லை. இதனடிப்படையில் கூட்டாட்சிவாதிகள் பதவியிழந்த நீதிபதிகளுக்கு மீண்டும் பதவி வாங்கித் தரும் பொருட்டு நீதிமன்ற ஆணை ஒன்றைப் பிறப்பிக்கும்படி உயர்நீதிமன்றத்தை வேண்டினர். இவ்வழக்கினை விசாரித்தத் தலைமை நீதிபதி ஜான் மார்ஷல் சிறப்புமிக்கதொரு தீர்ப்பை வழங்கினார். கூட்டாட்சி அரசின் வெளியுறவுச் செயலாளராகிய மாடிசன், நீதிபதிகளின் நியமனத்தை செயற்படுத்தாமலிருந்தது தவறு என்றும், ஆனால் அதன்பொருட்டு உயர்நீதிமன்றம் ஆணை ஒன்றைப் (Writ of mandamus) பிறப்பிக்க முடியாதென்றும் மார்ஷல் கூறினார். ஆணை பிறப்பிக்க முடியாததற்கான காரணங்களையும் அவர் விளக்கினார். 1789ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நீதித்துறைச் சட்டத்தில், கீழ் மன்றங்களுக்கு ஆணை பிறப்பிக்கும் பணி, உயர்நீதிமன்றத்தின் மூல நீதியின் செயலாட்சியில் (Original Jurisdiction) ஒரு பணியாகும் என வரையறுக்கப்பட்டது. கீழ்மன்றங்களுக்கு ஆணை பிறப்பிக்கும் பணி உயர்நீதிமன்றத்திற்கு அரசியலமைப்பில் தரப்படவில்லை. எனவே, அதற்கு மாறாக அப்பணியை வரையறுத்த நீதித்துறைச் சட்டம் செல்லுபடியாகாது என மார்ஷல் கூறினார். இதனால் காங்கிரஸால் இயற்றப்பட்ட சட்டமொன்று செல்லுபடியாகாது எனக் கூறும் உரிமை உயர்நீதி மன்றத்துக்கு உண்டு என்ற நியதியையும் அவர் நிறுவினார். இவ்வாறு கூட்டாட்சிச் சட்டமாமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்களைத் தள்ளுபடி செய்யும் உரிமையே நீதிமறுஆய்வு (Judicial Review) என வழங்கப் பெறுகிறது.

**புதிய மாநிலங்கள்**

ஒகியோ மாநிலம் 1802-ல் அமெரிக்கக் கூட்டாட்சியினுள் சேர்த்துக்கொள்ளப்பட்டது. அம் மாநிலத்தைச் சேர்த்துக் கொள்வதற்காக இயற்றப்பட்ட சட்டத்தில், அம் மாநிலத்திடமிருந்து இரண்டு உறுதிப்பாடுகள் பெறப்பட்டிருந்தன. (1) ஒவ்வொரு நகர்ப் பகுதியிலும் ஒரு பள்ளிக்கூடத்தை நிறுவுவதற்காக ஒரு பகுதி ஒதுக்கப்பட வேண்டும். (2) ஒகியோ மாநிலத்தில் விற்கப்படும் அரசு நிலங்களின் வருவாயில் ஐந்து விழுக்காடு, சாலைகளை அமைப்பதற்காக ஒதுக்கப்பட வேண்டும். உள்நாட்டுச் சீரமைப்புக்கான வழிமுறைகளுக்கு இச் சட்டம் வித்திட்டது எனலாம். மாநில உரிமைகளைப் பற்றிப் பெரிதும் பேசிய குடியரசுத் தலைவரும்,

காங்கிரஸும் இவ்வகையில் மாநில ஆட்சி முறையில் தலையிட்டமை வியக்கத்தக்கதாகும்.

1804ஆம் ஆண்டு இயற்றப்பட்ட நிலச் சட்டத்தின்படி ஓர் அமெரிக்கக்குடிமகன் குறைந்த அளவு வாங்க வேண்டிய நிலப்பரப்பு 320 ஏக்கரிலிருந்து 160 ஏக்காராகக் குறைக்கப்பட்டது. நிலத்தின் தொகையைத் தவணை முறையில் செலுத்தவும் வழி செய்யப்பட்டது. இந்தியப் பழங்குடியினருக்காகத் தனி அங்காடிகள் நிறுவப்பட்டன. அவர்கள் பெரும்பாலும் கடனாளிகளாகித் தங்களது நிலங்களை இழக்க நேரிட்டது. இந்தியப் பழங்குடியினரை மிசிசிபி ஆற்றுக்கு அப்பால் குடிபெயரச் செய்யவேண்டுமென்பது ஜெபர்சனின் கொள்கையாகும்.

## லூசியானாவை விலைக்கு வாங்குதல்

ஜெபர்சனின் ஆட்சியில் லூசியானா எனப்படும் நிலப்பகுதியை விலைக்கு வாங்கியமை ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். மிசிசிபி நதிக்கு மேற்கேயுள்ள அப் பகுதி பிரெஞ்சுக்காரர்களால் குடியேற்ற நாடாக்கப் பட்டது; பதினான்காம் லூயியின் நினைவாக லூசியானா என அழைக்கப்பட்டது. ஏழாண்டுப் போரின்போது ஸ்பெயின் பிரான்சிற்கு உதவிற்று: அதற்கு நன்றி பாராட்டும் வகையில் பிரான்சு, ஸ்பெயினுக்கு லூசியானாப் பகுதியை அளித்தது. மிசிசிபியின் முகத்துவாரத்திலுள்ள நியூ ஆர்லியன்ஸ் என்னும் துறைமுகப்பட்டினமும் ஸ்பெயின் நாட்டவர் வசமிருந்தது. ஜெபர்சன் பதவியேற்றபோது நெப்போலியன், வலுவிழந்திருந்த ஸ்பெயின் அரசனிடமிருந்து லூசியானாவை மீட்டார். இச் செய்தி 1802-ல் அமெரிக்க ஐக்கியநாட்டினை எட்டியது. இதனைக் கேட்ட அமெரிக்கர் அஞ்சினர். வலிமை மிக்கதொரு ஐரோப்பிய அரசு மேற்கு எல்லைப் பகுதியில் ஆதிக்கம் பெற்றால் அஃது அமெரிக்கர்களது முன்னேற்றத் திற்குப் பெருந்தடையாக அமையும். மற்றும் ஓகியோ, மிசிசிபி பள்ளத்தாக்குகளில் விளையும் பொருள்களைக் கப்பல் வழியாக ஏற்றிச் செல்ல நியூ ஆர்லியன்ஸ் இன்றியமையாத துறைமுகமாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு வடக்கே இருக்கும் ஆங்கிலப்பேரரசிற்கு ஈடாக, மேற்கே பிரெஞ்சுக் குடியேற்றமொன்றை நிறுவவேண்டு மென்பது நெப்போலியனின் பேரவா. பிரெஞ்சுப் பேரரசு நிறுவப் பட்டால் அமெரிக்க வணிகர்களின் உரிமைகளும், நலன்களும் பெரிதும் பாதிக்கப்படும். தெற்கே புளோரிடாப் (Florida) பகுதியில் ஸ்பெயின் தொல்லை கொடுத்துக்கொண்டே இருந்தது.

அமெரிக்க ஐக்கியநாடு லூசியானாவைக் கைப்பற்ற திட்டங்கள் வகுத்தது. படையின் வலிமை பெருக்கப்பட்டது. கோட்டைக் கொத்தளங்கள் எழுப்பப்பட்டன. நியூ ஆர்லியன்ஸ் துறை முகத்தைக் கைப்பற்ற நினைத்தால் அமெரிக்கா, பிரான்சிற்கு எதிராகப் பிரிட்டனுடன் கூட்டு சேருமென ஜெபர்சன் பிரான்சைக் கடுமையாக

எச்சரித்தார். இதற்கிடையில் நெப்போலியன் வட அமெரிக்காவில் ஒரு பேரரசை நிறுவ உறுதி கொண்டிருந்தார். அதில் முதற் கட்டமாக பிரெஞ்சு மேற்கிந்தியத் தீவுகளில் தமது ஆதிக்கத்தினை நிலைநாட்ட முனைந்தார். ஹைத்தித் (Haiti) தீவின் கிழக்குப் பகுதியில் நீக்கிரோக்களோடு பெரும் போர் புரிய நேரிட்டது. ஐம்பதாயிரம் பிரெஞ்சு வீரர்கள் கொல்லப்பட்டனர். நீக்கிரோக்களை அடியோடு கொன்று குவித்தாலொழிய, பிரான்சு தனது ஆதிக்கத்தை நிலையாக நிறுவ முடியாது என்று அங்கிருந்த தளபதி, நெப்போலி யனுக்கு அறிவித்தான். ஹைத்திப் போரினால் நெப்போலியன் சோர்வுற்றிருந்தார். அதே சமயம் பிரிட்டனோடு மீண்டும் போர் தொடங்கும் நிலை உருவாகியிருந்தது. எனவே, மேற்கிந்திய தீவு களுக்கு மேலும் துருப்புக்களை அனுப்பவில்லை. பிரிட்டனோடு போர் மூளுமானால் லூசியானாவை அமெரிக்கருக்கெதிராகக் காப்பது பெருஞ்சுமையாகுமென நெப்போலியன் கருதினார். ஐரோப்பியப் போர்களுக்கும் நெப்போலியனுக்குப் பணம் தேவைப்பட்டது.

அமெரிக்காவில் கூட்டாட்சிவாதிகள் பிரான்சோடு போர்மூளக் கூடிய நிலையைக் கண்டு மகிழ்ந்தனர். ஒரு வேளை போர் மூண்டால் கூட்டாட்சிவாதிகள் மீண்டும் செல்வாக்குப் பெறக் கூடுமென ஜெபர்சன் அஞ்சினார். பிரான்சோடு அமைதியான முறையில் முடிவு காண அவர் விரும்பினார். அதற்கான பேச்சுவார்த்தைகளை நடத்த பாரிஸில் அமெரிக்கத் தூதுவராக இருந்த ராபர்ட் லிவிங்ஸ்டன் (Robet Livingstone) என்பவருக்குத் துணையாக ஜேம்ஸ் மன்ரோவை பாரீஸுக்கு ஜெபர்சன் அனுப்பினார். நியூ ஆர்லியன்ஸையும், புளோரிடாவின் மேற்குப் பகுதியையும் பத்து மில்லியன் டாலருக்கு ($10,000,000) விலைபேசும்படி ஜெபர்சன் சொல்லியனுப்பினார். ஜேம்ஸ் மன்ரோ பாரிஸ் போய்ச் சேரும் முன் லூசியானாவை விற்றுவிட பிரான்சு லிவிங்ஸ்டனிடம் இசைவு தெரிவித்தது. பிரெஞ்சு அமைச்சர் டாலிரண்டு (Talleyrand) அமெரிக்க அமைச்சர்களை லூசியானாப் பகுதிக்கு எவ்வளவு விலை தரமுடியுமென வினவ, அவர்கள் பதினைந்து மில்லியன் டாலர் (15,000,000) தர ஒப்புக் கொள்ள, லூசியானா அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு விற்கப்பட்டது. இதைக் கண்ட அமெரிக்க அமைச்சர்கள் மிக வியந்தனர்.

லூசியானாவைப் பெற்றதன்மூலம் அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிலப்பரப்பு இருமடங்காகப் பெருகிற்று. மிசிசிபி நதியும், நியூ ஆர்லியன்ஸும் அமெரிக்காவின் ஆதிக்கத்தின்கீழ் வந்தன. பிரெஞ்சுக்காரர்கள் ஆதிக்கம் வட அமெரிக்காவில் அகற்றப்பட்டது. பல பெரிய ஆறுகள் கொண்ட அமெரிக்கக் கண்டத்தின் செழிப்பான நடுப்பகுதி மக்கள் குடியேற்றத்திற்குப் பெரிதும் பயன்படலாயிற்று.

சில ஆண்டுகளில் அப் பகுதி உலகத்தின் தானியக் களஞ்சியங்களுள் ஒன்ருக விளங்கிற்று. லூசியாளுவின் எல்லைகள் திட்டவட்டமாக வரையறுக்கப்படாமலிருந்தமையால் அதன்பேரில் அமெரிக்கா பின்னர் டெக்சாஸ் (Texas), புளோரிடாவின் ஒரு பகுதி, ஆகியவற்றைப் பெற முனைந்தது. ஜெபர்சன் ஆட்சியில் இந்தியப் பழங்குடியினர் மிசிசிபி நதிக்கு மேற்கே அகற்றப்பட்டனர். பின்னர் அவர்கள் அரிசோளு (Arizona) பாலைவனப் பகுதிக்கு விரட்டப்பட்டனர். இந்தியப் பழங் குடிபினர் அமெரிக்கருக்கு எதிராக ஐரோப்பிய நாடுகளினின்று பெற்று வந்த உதவி இனியும் தொடர்ந்து கிட்டாமல் போயிற்று. அமெரிக்காவில் ஐரோப்பிய நாடுகளின் அச்சுறுத்தலும் மறைந்தது எனலாம்.

நெப்போலியனிடமிருந்து லூசியாளுவை வாங்கியமை நீதிக்குப் புறம்பான செயலெனச் சிலர் கருதினர். ஏனெனில், லூசியாளுவே ஸ்பெயினிடமிருந்து நெப்போலியளுல் கைப்பற்றப்பட்ட நிலப்பரப் பாகும். அமெரிக்க அரசிற்கு அயல் ஆட்சியிலிருக்கும் நிலத்தை வாங்க அனுமதி கிடையாது. மற்றும், அமெரிக்க அரசியலமைப்பில் குடியாட்சித் தலைவருக்கு நிலம் வாங்க உரிமை தரப்படவில்லை. காங்கிரஸின் ஒப்புதல் பெற்ற பின்னரே நிலம் வாங்கப்பட வேண்டும். ஜெபர்சன் துணிவுடன் அதிகாரங்களை மீறி காங்கிரஸின் இசைவு பெருமல் லூசியாளுவை வாங்கி விட்டார். ஆளுல், உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாட்டின்படி (Doctrine of Implied Powers) குடியரசுத் தலைவர் நாட்டின் நன்மைக்காகப் பிற நாடுகளோடு ஒப்பந்தம் செய்து கொள்ள உரிமை பெற்றிருந்தார். அதன்படி புதிய நிலப்பகுதியை வாங்கி ஒப்பந்தம் செய்து கொள்ளவும் குடியரசுத் தலைவருக்கு உரிமையுண்டு என்றும் வாதிட்டனர்.

மிசிசிபி நதிக்கு அப்பாலுள்ள மேற்குப் பகுதியை ஆராய்ந்தறிய ஜெபர்சன் ஒரு தொகையை ஒதுக்கிஞர். எல்லைப்புற அனுபவம் பெற்ற மெரிவெதர் லூயி (Meriwether Lewis), வில்லியம் கிளார்க் (William Clark) என்ற இரு இளைஞர்களை அப் பணிக்குத் தேர்ந் தெடுத்தார். அவர்களிருவரும் ஆய்வுப் பயணம் மேற்கொண்டு (1804—06) அந் நிலப்பகுதியின் தன்மைகளை அறிந்து, நிலப்படங் களோடு குறிப்புக்களை வெளியிட்டனர். பின்னர், பிரிட்டன் ஓரிகான் (Oregon) நிலப்பகுதிமீது சிக்கல் எழுப்பியபோது அமெரிக்கர் இந்த ஆய்வுப் பயணத்தின் அடிப்படையில் சொந்தம் கொண்டாடிப் பெற்றனர்.

### வட ஆப்பிரிக்க நாடுகளை அடக்குதல்- கடற் கொள்ளைக்காரர்களை அடக்குதல் :

போர்களை விரும்பாத ஜெபர்சன் வட ஆப்பிரிக்க நாடுகளோடு போர் தொடுப்பதைத் தவிர்க்க முடியாததாகக் கருதிஞர். மத்தியத்

தரைக்கடலில் சென்ற அமெரிக்கக் கப்பல்களிடமிருந்து வட ஆப்பிரிக்க நாடுகளான அல்ஜீரியா, டியூனிஸ், டிரிப்போலி ஆகியவை கப்பம் திரட்டின. டிரிப்போலியின் பாஷா பேராசை கொண்டு அதிகக் கப்பம் கட்டச் சொன்னுன். டிரிப்போலியின் கடற்கொள்ளைக் காரர்கள் அமெரிக்கக் கப்பல் ஒன்றைத் தாக்கி அமெரிக்கக் கொடியினையும் இழிவுபடுத்தினர். பல அமெரிக்க மாலுமிகள் பிடிக்கப்பட்டுச் சிறையிலடைக்கப்பட்டனர். இதனைக் கேள்வியுற்ற ஜெபர்சன் படைகளை அனுப்பினுர். இரண்டாண்டுப் போர்களுக்குப் பிறகு 1805-ல் டிரிப்போலி அடக்கி ஒடுக்கப்பட்டது. இனியும் அமெரிக்கக் கப்பல்களிடமிருந்து கப்பம் வாங்குவதில்லை என்று அது ஒப்புக் கொண்டது. பிடிபட்ட அமெரிக்க மாலுமிகள் விடுவிக்கப்பட்டனர். பிற வட ஆப்பிரிக்க நாடுகள் வழக்கம்போல கப்பம் திரட்டின. அந் நாட்டுக் கடற்கொள்ளைக்காரர்கள் 1812ஆம் ஆண்டுப் போரின்போது மீண்டும் அமெரிக்க வணிகக் கப்பல்களுக்குத் தொல்லை தந்தனர். அப்பொழுது பெருங்கப்பற்படையொன்று அங்கு அனுப்பப்பட்டது. அது கடற்கொள்ளைக்காரர்களை யெல்லாம் அழித்துக் கப்பம் திரட்டும் முறைக்கும், மீட்புப் பணம் பெறும் முறைக்கும் முற்றுப் புள்ளி வைத்தது. இதன் விளைவாக எல்லா நாட்டுக் கப்பல்களும் மத்தியத் தரைக்டல் வழியாக அச்சமின்றி செல்லலாயின. இது ஜெபர்சன் புகழை இரு கண்டங்களிலும் உயர்த்தியது.

### கூட்டாட்சிவாதிகளின் உட்கிளர்ச்சி

மக்களிடையே குடியரசுக் கட்சியினர் பெற்றிருந்த ஆதரவைக் கண்ட கூட்டாட்சி வாதிகள் பொருமையுற்றனர். நியூ இங்கிலாந்து பகுதி தொடர்ந்து கூட்டாட்சிவாதிகளின் கோட்டையாகத் திகழ்ந்தது. குடியரசுக் கட்சியைச் சார்ந்திருந்த ஆரன்பர் என்பவர் தமக்குக் குடியாட்சித் துணைத் தலைவர் பதவியை ஜெபர்சன் அளிக்காததால் அக் கட்சியின் மீது கோபமுற்றிருந்தார். கூட்டாட்சி வாதிகள் தம் பக்கம் ஆரன்பர்ரைக் கவர்ந்து, அவரை நியூயார்க்கின் ஆளுநராகத் தேர்தலில் போட்டியிடச் செய்து, நியூயார்க் உள்பட நியூ இங்கிலாந்து பகுதி கூட்டாட்சியினின்று பிரிந்துவிட வேண்டுமெனத் திட்டமிட்டனர்; இத் திட்டத்தைக் கேள்வியுற்ற ஹாமில்டன் திடுக்குற்றுர். தமது செல்வாக்கைப் பயன்படுத்தி ஆரன்பர்ரைத் தேர்தலில் தோல்வியுறச் செய்தார். தமது தோல்விக்கு ஹாமில்டனே காரணம் என்பதனையுணர்ந்த ஆரன்பர், ஹாமில்டனைப் பழி வாங்குவதற்காகச் சண்டைக்கிழுததார. ஆரன்பருக்கும், ஹாமில்டனுக்குமிடையே நடைபெற்ற போரில் ஹாமில்டன் உயிர் துறந்தார். ஹாமில்டன் கொல்லப்பட்டதைக் கேட்ட மக்கள் வெகுண்டெழுந்தனர். உயிருக்கஞ்சி ஆரன்பர் மேற்கே தலை மறைவாகச் சென்று வாழ நேரிட்டது.

## 1804 ஆம் ஆண்டு தேர்தல்

பொதுமக்களின் ஆதரவைப் பெரிதும் பெற்ற ஜெபர்சன் மறுமுறையும் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவது உறுதியென அனைவரும் அறிந்திருந்தனர். குடியரசுக் கட்சி ஜெபர்சனை குடியரசுத் தலைவர் பதவிக்கும் நியூயார்க்கைச் சார்ந்த ஜார்ஜ் கிளின்டன் (George Clinton) என்பவரைக் குடியரசுத் துணைத் தலைவர் பதவிக்கும் வேட்பாளர்களாக நியமித்தது. கூட்டாட்சிவாதிகள் வேட்பாளர்களைத் தேர்தலில் நிறுத்தாவிட்டாலும் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்ட சார்லஸ் சி. பிங்கினி (Charles G. Puickney) என்பவரையும் துணைத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்ட ரூபஸ் கிங் (Rufus King) என்பவரையும் ஆதரித்தனர். தேர்தலில் ஜெபர்சனும், ஜார்ஜ் கிளின்டனும் பெரும்பான்மையான வாக்குகள் பெற்று வெற்றி பெற்றனர். குடியரசுக் கட்சி காங்கிரஸையும் சட்டமாமன்றத்தையும் தன்வயப்படுத்தியது.

### வெளியுறவுக் கொள்கை

ஜெபர்சனின் இரண்டாவது பதவிக்காலத்தில் வெளிநாட்டுறவில் பெரும் சிக்கல்கள் தோன்றின. உள்நாட்டுச் சிக்கல்களை எளிதில் தீர்த்து வைத்த ஜெபர்சனுக்கு வெளிநாட்டுறவில் எழுந்த சிக்கல்கள் மிகுந்த தொல்லை தருவனவாய் இருந்தன. வாஷிங்டன் வகுத்துச் சென்ற கொள்கைகளையே வெளியுறவில் ஜெபர்சன் கடைப்பிடித்தார். ஐரோப்பியப் போர்களில் அமெரிக்கா தலையிடாது நடுநிலை வகித்தது. இன்னும் போதிய அனுபவம் பெறாத இளம் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குப் போரற்ற வாழ்க்கை இன்றியமையாதது என்பதை ஜெபர்சன் உணர்ந்தார். ஐரோப்பாக் கண்டம் முழுவதையும் தன் குடைக்கீழ் கொண்டுவர நினைத்த பிரான்சினை எதிர்த்து பிரிட்டன் கடும்போர் புரிந்து கொண்டிருந்தது. இப் போரினால் நடுநிலை வகுக்கும் நாடுகளின் கடல் போக்குவரவு உரிமைகள் பெரிதும் பாதிக்கப்பட்டன. பிரிட்டன் மிகவும் புதிய முறையில் பிரான்சைப் பணிய வைக்க வணிகப் போர் ஒன்றை ஆரம்பித்தது; பிரெஞ்சுப் பேரரசின் கப்பல் போக்குவரத்தைத் தடுக்க முயன்றது. நெப்போலியனும் அதே முறையில் பழி வாங்க எண்ணினார். அந்நடவடிக்கையில் அமெரிக்கக் கப்பல் வாணிகம் பெருந்தாக்குதல்களுக்கு ஆளாகியது.

ஐரோப்பாவில் போர் நடந்துகொண்டிருக்கும்போது அமெரிக்க வணிகர் வளமான முறையில் வாணிகம் செய்வதைக் கண்ட பிரிட்டிஷ் வணிகர் பொறாமை கொண்டனர். பிரிட்டிஷ் அரசும் அமெரிக்க வாணிகத்தை மறைமுகமாகத் தடுக்கும் நோக்கத்தோடு 1807 ஆம் ஆண்டு ஆணைகள் (Orders in Council) சில பிறப்பித்தது. பிரெஞ்சு மேற்கு இந்தியத் தீவுகளின் விளைபொருள்களை ஏற்றிச் சென்ற

அமெரிக்கக் கப்பல்களை பிரிட்டிஷார் தடுத்து நிறுத்தினர். மேலும் ஸ்பெயினிலிருந்த ஜெர்மனியின் எல்பு (Elbe) நதி வரையிலிருந்த துறைமுகங்கள் அமெரிக்கக் கப்பல்களுக்கு மூடப்பட்டன. அமெரிக்கா போன்ற நடுநிலை வகிக்கும் நாடுகளின் கப்பல்கள், பிரிட்டன் வழியாகவே ஐரோப்பிய நாடுகளோடு, வாணிகம் செய்ய வேண்டுமென்றும் ஓர் ஆணையைப் பிரிட்டன் பிறப்பித்தது. மற்றும் பிரிட்டிஷ் கப்பற்படையினர் அமெரிக்கக் கப்பல்களைச் சோதிக்கவும் அவற்றில் பிரிட்டிஷ் குடிமக்கள் இருந்தால் அவர்களைப் பற்றிக் கொள்ளவும் தங்களுக்கு உரிமையுண்டு என்று கருதினர். பிரிட்டிஷ் கப்பற்படையில் போதிய மாலுமிகள் இல்லை. இருந்த மாலுமிகளும் வேலையை விட்டுவிட்டுப் பிற நாட்டுக் கப்பல்களில் பணிபுரியச் சென்றனர். பல மாலுமிகள் அமெரிக்கக் கப்பல்களில் தஞ்சம் புகுந்தனர். இதைக் கண்டிக்கும் வகையில்தான் அமெரிக்கக் கப்பல்களைப் பிரிட்டிஷார் சோதனையிட்டனர். ஆனால், பல பிரிட்டிஷ் அதிகாரிகள், இறுமாப்போடும், நியாயம் தவறியும் நடந்து கொண்டனர். அவர்கள் நூற்றுக்கணக்கான அமெரிக்க மாலுமிகளை வலுக்கட்டாயப்படுத்தித் தம் படையில் பணிபுரியச் செய்தனர்.

### பெர்லின் மிலான் ஆணைகள்

(1807) பிரிட்டனைப் பழிக்குப்பழி வாங்கும் நோக்கத்தோடு நெப்போலியனும் சில ஆணைகளைப் பிறப்பித்தார். பிரிட்டிஷாரின் சோதனைக்கு இணங்கிய அமெரிக்கக் கப்பலையும், பிரிட்டிஷ் துறைமுகத்தில் தங்கிய கப்பலையும் கைப்பற்றும்படி பிரெஞ்சு அரசு ஆணை பிறப்பித்தது. இதனால் பிரெஞ்சுத் துறைமுகங்களிலோ, பிரிட்டனுடனோ அமெரிக்கக் கப்பல்கள் தொடர்பு கொள்ள முடியாத நிலை ஏற்பட்டது. சோதனையிடுதல், தண்டம் விதித்தல் போன்ற நடவடிக்கைகளில், பிரிட்டன் விதிப்படி நடந்து கொண்டது. பிரெஞ்சுக் காரரோ சிறு காரணம் கிடைத்தாலும் அமெரிக்கக் கப்பல்களைப் பறிமுதல் செய்வதில் முனைந்தார்கள். ஜெபர்சன் தெரிவித்த எதிர்ப்புகள் பயனற்றவையாயிருந்தன.

### இறக்குமதியின்மைச் சட்டம்

1806 அமைதியைப் பெரிதும் விரும்பிய ஜெபர்சன் நேரிடையாகப் போரில் இறங்குவதைவிட பொருளாதார ஆயுதங்களைப் பயன்படுத்தி எதிரி நாடுகளை இணங்க வைக்கலாம் என்று கருதினார். போரில் ஈடுபட்டிருந்த நாடுகளுக்கு அமெரிக்க வாணிகத் தொடர்பு இன்றியமையாததெனவும், அப்படி அமெரிக்க வாணிகத் தொடர்பை முறித்துக்கொண்டால் அதற்கு அஞ்சி, நடுநிலைக் கொள்கை வகிக்கும் நாடுகளின் உரிமைகளுக்கு, அந் நாடுகள் மதிப்பு தரும் என்றும் ஜெபர்சன் நினைத்தார். இதனடிப்படையில் இறக்குமதியின்மைச் சட்டம் ஒன்று இயற்றப்பட்டது. அதன்படி அமெரிக்காவினுள்

பிரிட்டிஷ் பொருள்கள் இறக்குமதி செய்வது தடை செய்யப்பட்டது. அதனால் பிரிட்டனுக்குப் பெருந்தீங்கு விளைந்ததாகச் சொல்ல முடியாது.

## வணிகத் தடை நடவடிக்கைச் சட்டம் (The Embargo Act - 1807)

போர் புரியாமல் பிரிட்டனையும், பிரான்சையும் நியாயமான வழிக்குத் திருப்புவதற்காக ஜெபர்சனின் பரிந்துரைப்படி காங்கிரஸ் வாணிகத் தடை நடவடிக்கைச் சட்டமொன்றை இயற்றியது. அதன் படி, அயல்நாட்டு வாணிகம் முற்றிலும் தடைப்பட்டது. இத் தடையினால் எதிரி நாடுகளுக்கு உணவுத் தட்டுப்பாடு ஏற்படக்கூடும் என்ற நம்பிக்கை தவறாயிற்று. பிரிட்டனு', பிரான்சும் இதனைப் பொருட் படுத்தவேயில்லை. அதற்கு மாறாக, அமெரிக்க வணிகர் பெருந் தொல்லைக்குள்ளாயினர். கடல் வாணிக நிலையங்கள் பெரிதும் முறிந் தன. நிலக்கிழார்கள் அதிகப்படியான தானியம், புகையிலை முதலிய வற்றை ஏற்றுமதி செய்ய இயலவில்லை. அதனால், அவற்றின் விலைகள் சரிந்தன ; குடியானவர்கள் பேரிழப்பிற்கு ஆளானார்கள். உள் நாட்டில் குழப்பமும், எதிர்ப்பும் அதிகமாவதைக்கண்ட ஜெபர்சன் தம் கொள்கையைச் சற்று மாற்றியமைத்தார். வாணிகத் தடைச் சட்டத்திற்குப் பதிலாக உறவின்மைச் சட்டம் (Non-Intercourse Act) விதிக்கப்பட்டது. அதன்படி பிரிட்டனோடும், பிரான்சோடும் அந்நாடு களின் கட்டுப்பாட்டிலுள்ள நாடுகளோடும் வாணிகம் செய்யக்கூடாது; ஆனால், அவ்விரு நாடுகளில் ஏதேனும் ஒன்று நடுநிலை வகிக்கும் நாட்டின் வாணிகத்தைத் தாக்காதிருந்தால், அந் நாட்டுடன் உறவு மறுபடியும் கொள்ளப்படும். நெப்போலியன், அமெரிக்காவுக்கு முரணான நடவடிக்கைகளை நிறுத்தி விட்டதாக சட்டபூர்வமாய் அறிவித்தார். அமெரிக்கா பிரான்சோடு வணிகத் தொடர்பை மீண்டும் நிறுவி, பிரிட்டனோடுமட்டும் உறவு கொள்ளாமல் இருந்தது.

## ஜெபர்சன் ஓய்வு பெறல்

ஜெபர்சனின் இரண்டாவது பதவிக் காலம் முடியுந்தறுவாயில் பல மாநிலச் சட்டமன்றங்கள் அவரையே தொடர்ந்து மூன்றாவது முறையாகக் குடியரசுத் தலைவர் பதவியேற்க வேண்டித் தீர்மானங்கள் இயற்றின. இத் தீர்மானங்களைக் கேள்வியுற்ற ஜெபர்சன் ஓர் அறிக்கை வெளியிட்டார். அதில் தாம் ஓய்வுபெற முடிவு செய்திருப் பதாயும், தம்மிடம் உண்மையாக ஊழியம் செய்த அயலுறச் செயலாளரான ஜேம்ஸ் மாடிசன், குடியரசுத் தலைவர் பதவிக்கு உகந்தவரென்றும் குறிப்பிட்டிருந்தார். இரண்டு பதவிக் காலமே போதுமென்றும், மீண்டும் மீண்டும் தேர்ந்தெடுத்தல் முறையன்று என்றும் அவர் கூறினர். இப்படி வாஷிங்டனால் தோற்றுவிக்கப் பட்ட நல்லதொரு மரபினை ஜெபர்சனும் கடைப்பிடித்தார்.

**மதிப்பீடு**

ஜெபர்சன் முதலாவது பதவிக் காலத்தில் சிறந்த உள்நாட்டுக் கொள்கையினால் மக்களின் நன்மதிப்பையும், பெரும் ஆதரவையும் பெற்றிருந்தார். இரண்டாவது பதவிக்காலத்தில் வெளிநாட்டுறவில் ஏற்பட்ட நெருக்கடியினால் மக்களின் மதிப்பை ஓரளவு இழக்க நேரிட்டது. அவர் கசப்புணர்வுடனேயே ஓய்வு பெற்றபோது தலைநகரைவிட்டுச் சென்றார். பிரிட்டனுக்கும் பிரான்சுக்குமிடையே நடைபெற்ற போரில் அவர் நடுநிலைமை வகித்தது நாட்டைக் கட்டிக் காக்கவும், எல்லைகளை வலுப்படுத்தவும் அமெரிக்காவுக்கு உதவியது என்பதில் ஐயமில்லை. அவர் ஓய்வு பெற்றுச் சென்றபோது அவர் வகுத்துவிட்டுச் சென்ற கொள்கைகளும், வழிமுறைகளும் பயனற்றவையாகுமெனப் பலர் நினைத்தனர். ஆனால், அதற்கு மாறாக அவை நற்பயனளித்தமையை அனைவரும் உணர்ந்தனர். கட்சிக் கண்கொண்டு பார்க்காது நடுநிலைமையோடு நோக்கினால் ஜெபர்சனது அறிவுத்திறனும், தொலைநோக்குடைய அரசியல் நயத்திறனும் நன்கு புலப்படும். ஜெபர்சன் ஓய்வு பெற்றார். ஆனால் அவரது அரசியற் கொள்கைகள் அமெரிக்க அரசியலில் இரண்டறக் கலந்து ஒளி வீசுகின்றன.

# 11. 1812ஆம் ஆண்டுப் போர்

ஜெபர்சனின் நம்பிக்கைக்குகந்த ஜேம்ஸ் மாடிசன் இரண்டு பதவிக் காலத்திற்கு (1809—17) அமெரிக்க குடியரசுத் தலைவராய்ப் பணியாற்றினர். குடியரசுக் கட்சியில் பற்றுமிக்கவர் அவர். ஜெபர்சனிடம் அயலுறவுச் செயலாளராகப் பணியாற்றியமையால், வெளிநாட்டு நிகழ்ச்சிகளில் சிறந்த அனுபவம் பெற்றிருந்தார். இருப்பினும் ஜெபசர்னைப்போல் சிறந்த அரசியல் திறம்படைத்தவராக அவர் விளங்கவில்லை. அவருடைய பதவிக் காலத்தில் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சி 1812ஆம் ஆண்டுப் போராகும். அப்போரினை 'மாடிசனது போர்' என்றும் சிலர் கூறுவர்.

### போருக்கான காரணங்கள்

1812-ஆம் ஆண்டுப் போர் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் பிரிட்டனுக்குமிடையே நடந்த போராகும். பிரிட்டனுக்கும், பிரான்சுக்கும் இடையே நிகழ்ந்தஐரோப்பியப் போர்களில் அமெரிக்க ஐக்கியநாடு நடுநிலைமை வகித்தும், அதனுடைய உரிமைகள் பல அசட்டை செய்யப்பட்டன. இதுவே இப் போருக்கான அடிப்படைக் காரணமாகும். பிரெஞ்சுப் புரட்சியின் தொடர்ச்சியாக நடைபெற்ற போர்களில் 1805ஆம் ஆண்டு பிரிட்டன் நீர்பரப்பிலும், பிரான்சு நிலப்பரப்பிலும் வெற்றிகள் பல பெற்று தங்கள் வலிமையைக் காட்டினவே ஒழிய, இரு நாடுகளும் திட்டவட்டமாக வெற்றி தோல்வி காணுநிலை நிலவி வந்தது. நெப்போலியன் பிரிட்டனை வேறு வகையில் அடிபணியச் செய்யத் திட்டமிட்டார். பிரிட்டனின் பொருளாதார நிலையைச் சீர்குலைக்கும் எண்ணத்தோடு ஐரோப்பிய வாணிகத் திட்டம் (Continental System) ஒன்று வகுத்தார். பிரிட்டன் பெரும்பாலும் தனது வெளிநாட்டு வாணிகத்தாலேயே வாழ்கிறது என்றும், அதனைத் தடை செய்தால் பிரிட்டன் நலிவுறும் என்றும் நெப்போலியன் எண்ணி பெர்லின், மிலான் ஆணைகளைப் பிறப்பித்தார். அவற்றின்படி, பிரிட்டிஷ் துறைமுகங்கள் முற்றுகை

யிடப்பட்டன ; நடுநிலே வகிக்கும் நாடுகளும் பிரிட்டனேடு வாணிகம் செய்யக் கூடாது என்றும் விதிக்கப்பட்டது. பழிக்குப்பழி வாங்கும் நோக்கத்தோடு பிரிட்டனும் பல தடைகளை விதித்தது. அமெரிக்கா போன்ற நடுநிலே வகிக்கும் நாடுகள் பிரான்சோடு வாணிகத் தொடர்பு கொள்ளக்கூடாது எனப் பிரிட்டன் அறிவித்தது. இத் தடைகளால் அமெரிக்காவின் வாணிகம் பெரிதும் பாதிக்கப்பட்டது. இரு நாடுகளும் பல அமெரிக்கக் கப்பல்களைப் பறிமுதல் செய்தன. பிரிட்டன் தனது கப்பற்படைக்காகப் பல அமெரிக்க மாலுமிகளேயும் கடத்திச் சென்றது. பல ஆங்கில மாலுமிகள் அமெரிக்கக் கப்பல் களில் பணியேற்றனர். இதனுல் பிரிட்டிஷ் அதிகாரிகள் அமெரிக்கக் கப்பல்களை நிறுத்திச் சோதனையிட்டனர். பிரிட்டிஷாருக்கும் அமெரிக்கருக்குமிடையே உருவ அளவில் வேறுபாடு காண்பதரி தாயிருந்தது.

1807ஆம் ஆண்டு **'லெப்பர்டு'** (Leopard) என்னும் பிரிட்டிஷ் போர்க்கப்பல் **'செசப்பீக்** (Chesapeake) என்னும் அமெரிக்கப் போர்க் கப்பலே வழிமறித்துப் பல முறை சுட்டது. நான்கு அமெரிக்கர்களைக் கடத்திச் சென்றது. இச் செய்கையால் பிரிட்டனிடத்து விரோதம் அதிகமாயிற்று ; இரண்டு நாடுகளும் போர் நிலேயை நெருங்கின மேலும் பல (நிகழ்ச்சிகள் மனக் கசப்பை வளர்த்தன. இது போன்று ஆருயிரத்துக்கும் மேற்பட்ட) நிகழ்ச்சிகளில், பிரிட்டன் வலுக் கட்டாயப்படுத்தி அமெரிக்கக் குடிமக்களைக் கவர்ந்து சென்றமையைக் குடியரசுத் தலைவர் ஜெபர்சன், காங்கிரஸிடம் ஓர் அறிக்கையில் தெரிவித்தார். உடனே (போர் தொடுக்குமாறு பலர் வேண்டினர். ஜெபர்சன் வணிகத்தடை) நடவடிக்கைச் சட்டம் (The Embargo Act) ஒன்று இயற்றினுர். இச் சட்டத்தின்படி ஐரோப்பாவுடன் வாணிகம் நிறுத்தப்பட்டது. இதனுல் பிரிட்டனும், பிரான்சும் அமெரிக்கப் பொருள்கள் பெறமுடியாது போயின. அமெரிக்க வணிகர் பெரிதும் பாதிக்கப்பட்டு, வாணிகக் கப்பல்கள் துறைமுகங்களில் முடங்கிக் கிடந்தன. இந் நிலேயை மாற்ற 1808ஆம் ஆண்டு உறவின்மைச் சட்டம் (Non-Intercourse Act) இயற்றப்பட்டது. இச் சட்டம் பிரிட்டன், பிரான்சு ஆகிய நாடுகள் தவிர, பிற நாடுகள் மீது விதிக்கப் பட்டிருந்த வாணிகத் தடையை அகற்றியது. 1810-ல் மற்ருெரு சட்டத்தின்படி (Macon's Bill No. 2) பிரிட்டனும், பிரான்சும் வாணிகத்தடைகளை அகற்றினுல் உடனே அமெரிக்காவும் தடைகளை நீக்கி வாணிக உறவை நிறுவும் என அறிவிக்கப்பட்டது. முதலில் பிரிட்டன் இச்சட்டத்திற்கு செவிசாய்க்க நினைத்தது. ஆனுல், பின்னர் வாளாயிருந்துவிட்டது. நெப்போலியன் இதுவே தக்க தருணம் என்று நினைத்து பெர்லின், மிலான் ஆணைகளை ரத்து செய்ய விரும்புவதாகக் குடியரசுத் தலைவர் மாடிசனுக்கு அறிவித்தார், மாடிசனும் அதனை வரவேற்ருர். மற்றும், அவர் பிரிட்டனுடன்

வாணிக உறவின்மை கட்டளை பிறப்பித்தார். அதைத் தொடர்ந்து பிரிட்டன் மீது போர் தொடுக்கப்பெற்றது.

### பிரிட்டிஷார் இந்தியப் பழங்குடியினரை ஆதரித்தல்

ஒகியோ நதிக்கும், மிசிசிபி நதிக்கும் இடைப்பட்ட நிலம் இந்தியப் பழங்குடியினர் வாழும் பகுதியாக இருந்தது. 1787ஆம் ஆண்டு பிறப்பிக்கப்பட்ட அரசு ஆணையில், இந்தியர்கள் அதிகமாக வாழ்ந்தமையால் அப் பகுதி இந்தியானு (Indiana) என்றழைக்கப் பட்டது. ஆனல் அமெரிக்கர் மக்கட்தொகை பெருக்கத்தினல் மேன்மேலும் மேற்கே குடிபுகலாயினர். இந்தியர்கள் மேற்குப் பகுதிக்கு விரட்டப்பட்டனர். மிசிசிபி நதிக்கு மேற்கே அவர்களைக் குடிபெயரச் செய்ய வேண்டுமென்பது ஜெபர்சனின் கொள்கையாயிருந்தது. இந்தியப் பழங்குடியினரது நிலங்களைக் கையூட்டு கொடுத்தும், வஞ்சித்தும் பெறுமாறு இந்தியானு மாநில ஆளுநரான வில்லியம் ஹென்றி ஹாரிசனுக்கு (William Henry Harrison) ஆணை பிறப்பித்தார். ஹாரிசனும் இந்தியர்களைப் பல ஒப்பந்தங்களில் கையெழுத்திடச் செய்து, அவர்களிடமிருந்து பெருநிலப் பரப்பினைப் பெற்றுர். தங்களையும், வெள்ளையர்களையும் பிரிக்கும் எல்லைக் கோடாக ஒகியோ நதி அமைய வேண்டுமென இந்தியர் விரும்பினர்.

இந்தியப் பழங்குடியினர் பல குடும்பங்களாகத் தனிப்பெயர் பெற்றிருந்தனர். அவை கிரீக்ஸ் (Creeks), சோக்டாஸ் (Choctaws) சிக்சாஸ் (Chicksaws), செரோக்கீஸ் (Cherokees), செமிஞேல்ஸ் (Seminoles) என்பனவாம். அவர்களெல்லாம் ஒன்று சேர்ந்து தேக்கும்ஷே (Tecumseh) என்ற இந்தியத் தலைவரின்கீழ் திப்பிக்காஞே (Tippecanoe) என்னுமிடத்தில் தலைநகர் நிறுவி, ஒரு கூட்டணியை அமைத்தனர். வெள்ளையர்களோடு ஒத்துழையாமை இயக்கம் ஒன்றை தேக்கும்சே ஆரம்பித்தார். மற்றும், பழங் குடியினர் அனைவருடைய இசைவின்றி யாரும் நிலத்தை அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குத் தரக்கூடாது என்றும் அறிவித்தார். இந்தியர்கள் நிலத்தைப் பொதுவுடைமைச் சொத்தாகக் கருதினர். இந்தியப் பழங்குடியினருக்கு, பிரிட்டன் மறைவாகக் கனடா வழியாக அமெரிக்கருக்கெதிராக உதவுவதாகவும், இந்தியர்கள் ஒரு தனி அரசை நிறுவ ஊக்குவிப்பதாகவும் தெரிய வந்தது. இதனைக் கேள்வி யுற்ற அமெரிக்கர் அஞ்சினர்.

1812ஆம் ஆண்டுப் போருக்கு மற்றொரு காரணமும் உண்டு. அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிலப்பரப்பைப் பெருக்க வேண்டுமெனச் சிலர் நிலப்பேராசை கொண்டிருந்தனர். வடக்கே பிரிட்டிஷ் பேரரசின் பகுதியாயிருந்த கனடாவையும், தெற்கே ஸ்பெயினின் ஆதிக்கத்தி லிருந்த புளோரிடாவையும் கைப்பற்ற பல காங்கிரஸ் உறுப்பினர்கள் ஆர்வத்தோடு உரையாற்றினர். அவர்களில் தலைவர்களாகத்


1812 ஆம் ஆண்டுப் போர்
கனடா
ஹியூரன் ஏரி
மாண்ட்ரீல்
பிளாட்ஸ்பர்க்
சேம்பிளின் ஏரி
ஒண்டேரியோ ஏரி
நயாகரா கோட்டை
தேம்ஸ்போர்
டெட்ராயிட்
ஈரி ஏரி
ஓகியோ
பென்சில்வேனியா
நியூயார்க்


தென்னசி
மிசிசிபி ஆறு
ஷார்ஸ் ஷீ பெண்டு
ஜார்ஜியா
பென்சகோலா
நியூ ஆர்லியன்ஸ்
மெக்ஸிகோ வளைகுடா

திகழ்ந்தவர்கள் ஹென்றி கிளே (Henry Clay) என்பவரும், ஜான் சி. கால்ஹூன் (John C. Calhoun) என்பவருமாவர். 1810, 1811 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற காங்கிரஸ் தேர்தல்களில், போர் ஆசை கொண்ட பல இளைஞர்கள் வெற்றி பெற்றிருந்தனர். அவர்களைப் போர் வெறியர்கள் (War-Hawks) என்றும் அழைத்தனர். இவர்களெல்லாம்கூடிப் பிரிட்டன்மீது போர் தொடுப்பதற்கான சூழ்நிலையை உருவாக்கி விட்டனர்.

1812ஆம் ஆண்டுப் போர் அமெரிக்க வரலாற்றிலேயே பல விதங்களிலும் மிகவும் வருந்தத்தக்க நிகழ்ச்சியாகும். இப் போரை எளிதில் தவிர்த்திருக்கலாம். காங்கிரஸ் போர் தொடுப்பதற்கான தீர்மானத்தை இயற்றிய அதே நேரத்தில் பிரிட்டிஷ் அரசும் அமெரிக்கருக்கு எரிச்சலூட்டிய ஆணைகளை ஒரு நிபந்தனையுமின்றி ரத்து செய்தது. மற்றும் போர் மூண்டபோது அமெரிக்காவினுள் உள் நாட்டுப் பூசல்கள் வளர்ந்து கொண்டிருந்தன. தெற்கு, மேற்கு மாநிலங்கள் போரை ஆதரிக்கையில் நியூயார்க்கும், நியூ இங்கிலாந்து மாநிலங்களும் எதிர்த்தன. அமெரிக்க இராணுவம் சீர்கேடான நிலையிலிருந்தது.

## போரின் முக்கிய நிகழ்ச்சிகள்

1812-ல் ஆரம்பித்த போர் மூன்றாண்டுகள் நடைபெற்றது. இரு தரப்பினரும் போருக்கு ஆயத்தமான நிலையில் இல்லை. அமெரிக்க ஐக்கிய நாட்டில் மக்களில் பெரும்பாலானோர் ஊக்கத்தோடு போரை வரவேற்ற போதிலும் நியூ இங்கிலாந்து மாநிலங்களும் வேறு சில மாநிலங்களும் போர்ச் செலவினைப் பகிர்ந்துகொள்ள மறுத்தன. அமெரிக்க பாங்கின் சாசனம் புதுப்பிக்கப்படாமல் விடப்பட்டமையால் நாட்டின் நிதிநிலையும் சீர்குலைந்திருந்தது. அரசின் கையிருப்பும் போரின்போது குறைய ஆரம்பித்தது. போருக்கான படையும் திரட்டப்படாமலிருந்தது. ஏற்கனவே, இருந்த படையும் போதிய படைக்கலன்கள் பெறாதிருந்தது ; போதிய பயிற்சியும் பெறாத தகுதியற்ற படைத்தலைவர்களைப் பெற்றிருந்தது. பிரிட்டன், நெப்போலியனோடு போரில் ஈடுபட்டிருந்தமையால், அமெரிக்காவுடன் போரில் ஈடுபட ஆயத்தமான நிலையிலில்லை. ஆயினும், போர் தொடங்கப் பெற்றது. பிரிட்டனுக்கு இந்தியப் பழங்குடியினரது ஆதரவு இருந்தது.

பிரிட்டிஷ் பேரரசின் ஒரு பகுதியான கனடாவைக் கைப்பற்ற அமெரிக்கா திட்டமிட்டு மும்முனைத்தாக்குதல் ஒன்றை நடத்தியது. ஆனால், மும்முனையிலும் தோல்வியே கிட்டியது. அமெரிக்கத் தளபதி ஹல் (Hull) நடத்திச் சென்ற படையினை இந்தியப் பழங்குடியினர் தோற்கடித்து, பிரிட்டிஷார் உதவியுடன் டெட்ராய்ட் (Detroit) நகரைக் கைப்பற்றினர். வடமேற்கில் சில கடலோரப் பகுதிகளையும்

கைப்பற்றினர். 1813-ல் தளபதி ஹாரிசன் (Harrison) இராணுவ நடவடிக்கைகளை மேற்கொண்டார். அவர் இந்தியர்களைத் தோற்கடித்துக் கனடாவிற்கு விரட்டியடித்தார். தளபதி பெரி (Perry)யின் தலைமையில் சென்ற துருப்புக்கள் பிரிட்டிஷ் கடற்படையை ஐந்து ஏரிகளில் (Great Lakes) தோற்கடித்தன. கனடாவிலுள்ள தேம்ஸ் (Thames) நதிக்கரையில் நடந்த போரில் ஹாரிசன் இந்தியர்களைத் தோற்கடித்து அவர்கள் தலைவரான தேக்கும்சேவையும் கொன்றார்.

நெப்போலியனுடன் நடத்தியப் போர்களிலிருந்து விடுபெற்ற பிரிட்டன் 1814-ல் அமெரிக்கப்போரில் முழு கவனம் செலுத்த முனைந்தது. வடபகுதியில் ஐந்து ஏரிகள் பகுதியைக் கைப்பற்ற அனுப்பப்பட்ட படை, அமெரிக்கரால் தோற்கடிக்கப்பட்டது. மற்றொரு பிரிட்டிஷ் படை, அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைநகரான வாஷிங்டனைத் தாக்க முற்பட்டது. செசப்பீக் வளைகுடா (Chesapeake Bay) வழியாக முன்னேறிய துருப்புக்கள் குடியரசுத் தலைவர் மாளிகையையும், அலுவலகங்களையும் தாக்கின. குடியரசுத் தலைவரது மாளிகையின் ஒரு பகுதி எரிந்தது. பின்னர் புகைபடிந்த சுவர்கள் மீது வெள்ளை வண்ணம் பூசப்பட்டமையால் அது வெள்ளை மாளிகை (White House) என்ற பெயர் பெற்றது. தலைநகர் தற்காலிகமாக வர்ஜீனியாவிற்கு மாற்றப்பட்டது. இத்தாக்குதலால் பிரிட்டிஷாருக்கு நன்மையேதும் ஏற்படவில்லை. தாக்குதலுக்குப் பிறகு பின் வாங்கிய பிரிட்டிஷ் துருப்புக்களை அமெரிக்கர் மேலும் முன்னேறவொட்டாமல் தடுத்தனர். கரையோரத்து மணல் திட்டுகளின் காரணமாகப் பிரிட்டிஷ் கப்பல்கள் தொலைவிலேயே நிற்க வேண்டியதாயிற்று. அடுத்து, தென்பகுதியில் நடந்த போரிலும் அமெரிக்கரே வெற்றி பெற்றனர். நியூ ஆர்லியன்ஸில், இந்தியப் பழங்குடியினரை ஆண்ட்ரூ ஜாக்ஸன் (Andrew Jackson), ஹார்ஸ்-ஷு-பெண்டு (Horse-shoe-Bend) என்னுமிடத்தில் நடந்த போரில் தோற்கடித்தார். இதனையடுத்து அப் பகுதிக்கு வந்த பிரிட்டிஷ் துருப்புக்களையும் ஜாக்ஸன் தோற்கடித்தார். இவ்விடத்தில் இப்போர் நடைபெறும் முன்னரே அமைதி உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது.

### கெண்ட் உடன்படிக்கை (Treaty of Ghent)

போர் ஆரம்பமானதுமே இரு நாடுகளிடையே அமைதியை நிலை நாட்ட முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பிரிட்டனுக்கும், அமெரிக்காவிற்குமிடையே நட்புறவை நிறுவ ரஷ்யா முன் வந்தது. ஆனால், பிரிட்டன் நேரடியாக அமெரிக்காவோடு நட்புறவு கொள்ள விரும்புவதாகச் சொல்லிவிட்டது. அமெரிக்கா ஐவர் அடங்கிய குழுவொன்றினை ஐரோப்பாவிற்கு அனுப்பியது. பிரிட்டனும் தனது பிரதிநிதிகளை அனுப்பியது. இருதரப்பினரும் கெண்ட் என்னுமிடத்தில் கூடிப் பேசினர். அமெரிக்கா, அதனுடைய வடமேற்கு எல்லைக்காவல்

நிலையங்களைத் தனக்குக் கொடுத்துவிடவேண்டுமென்றும், கனடாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடைத்தடுக்கு நாடாக ஓர் இந்தியப் பழங்குடியினர் மாநிலம் அமைய வேண்டுமென்றும், பிரிட்டன் கோரியது. அமெரிக்கக் குழு, பிரிட்டன் கைப்பற்றிய கப்பல்களுக்கு இழப்பீடு தரும்படியும் கனடா முழுவதையும் கொடுத்துவிடும்படியும் வேண்டிற்று. இரு தரப்பினரது கோரிக்கைகளும் ஏற்றுக்கொள்வனவாக அமையாததால், இருவரும் விட்டுக்கொடுக்க முன்வந்தனர். போரை நிறுத்த அமெரிக்காவும் விரும்பிற்று ; பிரிட்டனும் வியன்னா மாநாட்டிற்குப் (1815) பிறகு மீண்டும் போர் மூளக் கூடிய நிலையைக் கண்டு அமைதி உடன்படிக்கை செய்து கொள்ள விழைந்தது.

கெண்ட் உடன்படிக்கை 1814ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் கையெழுத்திடப்பட்டது. அதன்படி போருக்கு முந்திய நிலையை (Status Quo ante-bellum) ஏற்றுக்கொள்ளவும், இரு நாடுகளுக்குமிடையேயுள்ள சிக்கல்களை நடுவர் தீர்ப்புக்கு விடவும், இரு நாடுகளும் இசைந்தன. இரு நாடுகளின் பிரதிநிதிகள் அடங்கிய குழுவொன்று சிக்கல்களைத் தீர்த்து வைக்க அமைக்கப்பட்டது. அதன் பயனாகப் பல ஒப்பந்தங்கள் செய்யப்பட்டன. 1815ஆம் ஆண்டு கையெழுத்திடப்பட்ட வாணிக ஒப்பந்தத்தின்படி அமெரிக்காவிற்கும், பிரிட்டனுக்குமிடையே வாணிகத் தொடர்பு மீண்டும் நிறுவப்பட்டது. 1817-ல் செய்யப்பட்ட ரஷ்-பேகாட் (Rush-Bagot) ஒப்பந்தத்தின்படி இரு நாடுகளும் ஐம்பெரும் ஏரிகளில் போர்க் கப்பல்களை வைத்துக் கொள்ளக் கூடாதென்றும், கோட்டை கொத்தளங்கள் கட்டக்கூடாதென்றும் முடிவு செய்தன. 1818ஆம் ஆண்டு ஏற்பட்ட (மீன்பிடிப்பு ஒப்பந்தப்படி கனடாவின் நீர்ப்பகுதியில் அமெரிக்கர்) மீன்பிடிக்க உரிமை பெற்றனர். ஐம்பெரும் ஏரிப் பகுதியிலிருந்து மேற்கே ராக்கி மலைகள் வரை 49° எல்லைக்கோடாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**போரின் விளைவுகள்**

கெண்ட் உடன்படிக்கையின் உட்பிரிவுகளைக் கூர்ந்து நோக்கினோமானால், நடுநிலை உரிமைகள் பற்றியோ, வலுக்கட்டாயமாக அமெரிக்கா மாலுமிகளை வேலைக்கு சேர்த்துக் கொள்வது பற்றியோ ஒன்றும் சொல்லப்படவில்லை. இருப்பினும் இரு நாடுகளிடையே அமைதி நிலவியமையால் வாணிகம் பெருகிற்று.

இப் போரினால் கூட்டாட்சிவாதிகள் கட்சி வீழ்ச்சியுற்றது. போரின் போது அக் கட்சியினர்ப் பிரிட்டனிடத்து பரிவு காட்டினர். நியூ இங்கிலாந்து மாநிலங்கள் அக் கட்சியின் கோட்டையாக விளங்கிற்று. இம் மாநிலங்கள் போரின்போது பிற மாநிலங்களுக்கு தமது ஒத்துழைப்பைத் தர மறுத்தன. இவற்றால் கூட்டாட்சிவாதிகள் மக்களிடத்தில் செல்வாக்கை இழந்தனர்.

இப் போரின்போது செல்லுபடியற்றதாக்கும் கோட்பாடு மீண்டும் வலியுறுத்தப்பெற்றது. 1814ஆம் ஆண்டு நியூஇங்கிலாந்து மாநிலங்கள் ஹார்ட்பேரர்டு (Hartford) என்னுமிடத்தில் ஒன்று கூடி கூட்டாட்சி அரசின் உரிமைகள் கட்டுப்படுத்தப்பட வேண்டுமென்றும், அரசியலமைப்பின் வரம்பினை மீறும் வகையில் காங்கிரஸால் இயற்றப் படும் சட்டங்களை எதிர்க்க மாநிலங்களுக்கு உரிமை உண்டென்றும், தீர்மானங்கள் இயற்றின. கூட்டாட்சி அரசுக்குப் பிறநாட்டின்மீது போர் தொடுக்கும் உரிமை தரப்படக் கூடாது என்றும், தென் மாநிலங் களுக்கு காங்கிரஸில் நீக்கிரோ மக்கள் தொகை அடிப்படை உள்பட, தரப்பட்ட பிரதிநிதித்துவ இடங்கள் பறிக்கப்பட வேண்டுமென்றும் அக் 'கூட்டம் கருத்து தெரிவித்தது. பெரும்பான்மையினரது ஆதிக்கத்தை சிறுபான்மையினர் எதிர்க்க 'மாநில உரிமைகள்' என்ற கருவி இவ்வகையில் அடிக்கடி பயன்படுத்தப்படலாயிற்று.

இப்போரின் விளைவாக இந்தியப் பழங்குடியினர் கிழக்குப் பகுதியிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டனர். அவர்களது கூட்டணி வடமேற்குப் பகுதியில் தங்களுக்கென ஒரு மாநிலத்தை நிறுவத் திட்டமிட்டிருந்தது. ஆனால் அவர்களது தலைவரான தேக்கும்சே கொல்லப்பட்ட பிறகு அக் கூட்டணியும் முறிந்தது. பிரிட்டிஷாரும் அவர்களைக் கைவிட்டுவிட்டனர். கெண்ட் உடன்படிக்கையிலும் அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய பாதுகாப்புபற்றி ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. எனவே அவர்கள் அமெரிக்கருடன், தன்மானம் ஊறுபாடு செய்கின்ற நிலையில் பல உடன்படிக்கைகளைச் செய்துகொண்டு பரந்த நிலப்பரப்புகளைப் பணிந்து, விட்டுக் கொடுத்துச் சென்றனர்.

வெளிநாடுகளோடு, "அமெரிக்கா நிலையான ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளாமல் செயற்படவேண்டு"மென்று ஜார்ஜ் வாஷிங்டன் அன்று அறிவுரை கூறினர். ஜெபர்சனும் அதனையே மீண்டும் வலியுறுத்தினர். 1812ஆம் ஆண்டுப் போரினுல் ஐரோப்பிய நிகழ்ச்சிகளில் அமெரிக்கா ஈடுபட நேர்ந்தமையால், அமெரிக்கருக்கு மேற்கூறிய அறிவுரைகள் பொன்னுனவையாகத் தோன்றின. இப் போர் அமெரிக்கருக்கு நல்லதொரு பாடத்தைக் கற்பித்தது எனலாம். ஏறத்தாழ அடுத்த ஒரு நூருண்டுக் காலத்திற்கு அமெரிக்கா, ஐரோப்பிய நிகழ்ச்சிகளினின்று விலகி நின்று நாட்டின் முன்னேற்றத்தில் கவனம் செலுத்தலாயிற்று.

1812ஆம் ஆண்டுப் போரில் இந்தியப் பழங்குடியினர் அடக்கி ஒடுக்கப்பட்டமையால் அமெரிக்கர் அச்சமின்றி மேற்குப் பகுதியில் குடியேற மும்முரமாக முனைந்தனர். போரின்போது வாணிகத் தடை நடவடிக்கைச் சட்டம் இயற்றப்பட்டதால் கிழக்குக் கடற்கரையோர துறைமுகங்களெல்லாம் மூடப்பட்டன. இதனுல் பெரிதும் இன்ன

லுற்ற வணிகர்கள் கள்ளத்தனமாக ஐம்பெரும் ஏரிகள் வழியாகவும், செயின்ட் லாரென்ஸ் நதி வழியாகவும், தங்கள் பொருள்களை ஏற்றியனுப்பலாயினர். இதனால் மேற்குப் பகுதியின் தொடர்பு அதிகரித்தது. மக்கள் வாழ்வதற்கும் வாணிகத்திற்கும் வசதியான இடம் என்றும் உணரப்பட்டது.

இப் போரின் மற்றொரு முக்கிய விளைவு தொழிற்புரட்சி விரைவு பெற்றதாகும். பொருள்களைக் கைகளினால் செய்யாது இயந்திரங்கள் உதவி கொண்டு செய்வதே தொழிற்புரட்சியாகும். அத்தகைய தொழிற்புரட்சி அமெரிக்காவில் இப் போருக்குச் சில ஆண்டுகள் முன்பே ஆரம்பித்துவிட்டது. 1793-ல்எலிவிட்னி (Eli Whitney) என்பவர் ஒரு பஞ்சு இயந்திரத்தைக் (Cotton Gin) கண்டு பிடித்த திலிருந்து தொழிற்புரட்சி ஆரம்பித்ததாக அமெரிக்கர் கணக்கிடு கின்றனர். அவ்வியந்திரம் பருத்தியிலிருந்த கொட்டைகளைப் பிரித் தெடுப்பதை எளிதாக்கிற்று. எலிவிட்னி தொடர்ந்து பல இயந்திரங் களை உருவாக்கினார். இவருடைய படைப்புக்களை ஜெபர்சன் ஆர்வத்தோடு கண்டு மகிழ்ந்தார். எலிவிட்னி நூற்றுக்கணக்கான துப்பாக்கிகளைச் குறுகிய காலத்தில் செய்யமுடியுமென்றார். போரின் போது இரண்டே ஆண்டுகளில் அரசின் ஆணைப்படி பத்தாயிரம் துப்பாக்கிகளைச் செய்து கொடுத்தார். ஒன்றிற்கொன்று மாற்றிப் போடும் வகையில் பாகம் பாகமாகச் செய்து கோத்தமையால் பெரு மளவில் பொருள்களைக் குறுகிய காலத்தில் உற்பத்தி செய்ய முடிந்தது. துப்பாக்கி செய்யப் பயன்படுத்தப்பட்ட இம் முறை, எல்லாப் பொருள்களைச் செய்யவும் பயன்படுத்தலாம் என விரைவில் உணரப் பட்டது.

இப் போரினால் அரசுக்கும் பல தொல்லைகள் ஏற்பட்டன. போர்ச் செலவு அதிகமாயிற்று. வாணிகம் தடைப்படுத்தப்பட்டமையால் அதன் வழியாக வரும் சுங்கவரியும் அரசுக்கு இல்லாது போயிற்று. ஹாமில்டனின் தேசியக் கடன் அமைப்புத் திட்டத்தைக் குடியரசுக் கட்சியினர் முன்பு வெகுவாகக் கண்டித்தனர். ஆனால், இப்போது தேசியக்கடன் தொகை பன்மடங்காகப் பெருகியிருந்தது. நாட்டில் மக்களிடத்து நாணயத்தின் மீதான மதிப்பும் குறையலாயிற்று. இந் நிலையை மாற்றியமைக்கக் குடியரசுக் கட்சியினர் ஹாமில்டனால் கையாண்ட முறைகளையே பின்பற்றலாயினர். ஹாமில்டனால் தோற்றுவிக்கப்பட்ட பாங்கிற்கான சாசனம் 1811-ல் காலாவதி யாயிற்று. பங்குதாரர்கள் சாசனத்தின் காலவரையை நீடிக்க வேண்டினர். நிதிச்செயலாளரான காலட்டினும் (Gallatin), பாங்கு நன்முறையில் செயல்பட்டுள்ளதென்றும், அதன் சாசனத்தை நீட்டிக்க வேண்டுமென்றும் வலியுறுத்தினர். ஆனால் குடியரசுக் கட்சியினர் சாசனத்தை நீட்டிக்க மறுத்துவிட்டனர். அவர்கள் மாநில உரிமை

களை அதிகம் வலியுறுத்தியமையால் மாநில பாங்குகளே போது மென்றும் தேசிய பாங்கு வேண்டாமென்றும் கருதினர். எனவே பாங்கு மூடப்பட்டது. போரின்போது பாங்கு இருந்திருந்தால் நிதி நிலையைச் சமாளிப்பதில் அரசுக்குப் பேருதவியாயிருந்திருக்கும். மாநில பாங்குகளால் போர்நிலையைச் சமாளிக்க முடியவில்லை. பணத்தால் நிலை மிகவும் குழப்பமான நிலையிலிருந்தது. எனவே 1816-ல் இரண்டாவது பாங்கு தோற்றுவிப்பதற்கான சாசனம் தீட்டப்பட்டது. முப்பத்தைந்து மில்லியன் (35,000,000) டாலர் மூலதனத்தில் ஐந்தில் ஒரு பங்கு அரசாலும், மீதி பங்குகள் தனியாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு பாங்கு அமைக்கப்பட்டது.

# 12. மன்ரோ கோட்பாடு
## (Monroe Doctrine)

ஜேம்ஸ் மாடிசன் ஓய்வு பெற்றபின் ஜேம்ஸ் மன்ரோ அமெரிக்க ஐக்கியநாட்டின் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெளிநாட்டுறவில் புதிய கோட்பாடுகளை வகுத்தளித்தமையால், அவரது பெயர் வரலாற்றில் உன்னதமான இடத்தைப் பெற்றுள்ளது. குடியரசுத் தலைவர் பதவியை ஏற்கு முன் உயர்ந்த பதவிகளை மன்ரோ சிறப்புடன் வகித்திருந்தார். அமெரிக்காவின் தூதுவராகப் பிரான்சிலும், இங்கிலாந்திலும் பணியாற்றியிருந்தார். மாடிசனது பதவிக் காலத்தில் வெளி நாட்டுறவு செயலாளராகப் பொறுப்பேற்றிருந்தார். 1816-ல் நடைபெற்ற தேர்தலில் குடியரசுத் கட்சியினர் மன்ரோவை குடியரசுத் தலைவர் பதவிக்குத் தங்களது வேட்பாளராக நியமித்தனர். கூட்டாட்சிவாதிகள் 1812ஆம் ஆண்டுப் போரின்போது இங்கிலாந்தை ஆதரித்தமையால் மக்களின் செல்வாக்கை முற்றிலும் இழந்திருந்தனர். ஆகையால் தங்கள் கட்சி சார்பில் வேட்பாளர்களை நியமிக்கவில்லை. மன்ரோ தம்மை எதிர்த்துப் போட்டியிட்ட ரூபஸ்



**ஜேம்ஸ் மன்ரோ**
5 - வது குடியரசுத் தலைவர்
1817 - 1825
மக்களாட்சிக் குடியரசுக் கட்சி

கிங் (Rufus King) என்பவரை எளிதில் தோற்கடித்தார். இத் தேர்தலுக்குப் பிறகு குடியரசுக் கட்சியினருக்கும் கூட்டாட்சிவாதிகள் கட்சியினருக்குமிடையே இருந்த வேறுபாடுகளெல்லாம் முற்றிலும் மறைந்து போய் நாட்டில் 'நல்லுறவு காலம்' (Era of good feeling) நிலவிற்று.

## புளோரிடாவை (Florida) ஸ்பெயினிடமிருந்து பெறுதல்

ஸ்பெயின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த புளோரிடா இரு பகுதிகளைக் கொண்டிருந்தது. ஒன்று மேற்கு புளோரிடா; மற்றொன்று இன்றைய கிழக்கு புளோரிடா. அங்குப் பெரும்பாலும் செமினோல் (Seminoles) என்றழைக்கப்படும் இந்தியப் பழங்குடியினரே வசித்து வந்தனர். லூசியானாவை அமெரிக்கா விலைக்கு வாங்கியபொழுது அதன் எல்லைகள் திட்டவட்டமாக வரையறுக்கப்படாது விடப்பட்டன. எனவே புளோரிடாவும், டெக்சாசும் லூசியானாவைச் சேர்ந்ததே எனக் கூறி அமெரிக்கா அந்நிலப் பகுதிகளுக்குச் சொந்தம் கொண்டாடிற்று. ஆனால், ஐயத்திற்கிடமில்லாமல் புளோரிடா ஸ்பானியப் பேரரசுக்கு உட்பட்டதாக இருந்தது. ஆனாலும், அமெரிக்கர் லூசியானாவின் ஒரு பகுதியே என வாதாடினர். புளோரிடாவில் கொலைக்காரர்களும், தப்பியோடிய அடிமைகளும், முன்னாள் பிரிட்டிஷ் வீரர்களும் தஞ்சம் புகுந்தனர். அங்கு எப்பொழுதும் குழப்பமான நிலையே நிலவிற்று. அதனால், அமெரிக்காவின் எல்லைப்புற ஊர்கள் பாதிக்கப்பட்டன.

புளோரிடாப் பகுதியைப் பெற ஜெபர்சன் தொடர்ந்து பலமுறை முயன்றார். அவர் பல முறைகளை அதற்காகவும் பின்பற்றியிருக்கலாம். போரின் மூலமாவது, விலைக்காவது, அல்லது அமெரிக்க மக்களை படிப் படியாக உள்சென்று குடியேறச் செய்வதன் மூலமாவது. புளோரிடாவைப் பெற்றிருக்கலாம். ஜெபர்சன் விலைக்கு வாங்க ஸ்பெயினுக்கு விருப்பம் தெரிவித்தார். ஆனால், ஸ்பெயின் விற்க மறுத்துவிட்டது. ஜெபர்சன் இதற்காகப் போர் தொடுக்க விரும்ப வில்லை. எனவே அமெரிக்கமக்களைப் புளோரிடாவில் குடியேற ஊக்கு வித்தார். புளோரிடாவின் எல்லை ஒழுங்காகக் காக்கப்படாம லிருந்தமையால் எளிதில் புதுப்புலங் காண்போர் உள்சென்று குடியேற முடிந்தது. அங்குச் சென்று குடியேறிய அமெரிக்கர் 1810-ல் உரிமைபெறக் கிளர்ச்சி செய்தனர். அந்த ஆண்டில்தான் நெப்போலியன் ஸ்பெயினைக் கைப்பற்றினார். நெடுந்தொலைவிலிருந்த புளோரிடாவை, தாய்நாடான ஸ்பெயினாலும் அடக்கி ஆளமுடியவில்லை அமெரிக்கர் புரட்சி செய்து மேற்கு புளோரிடாவை உரிமை பெற்ற நாடாக அறிவித்தனர். அதன்பேரில் 1810-ல் மிசிசிபி ஆற்றுக்கும் பெர்ல் (Pearl River) ஆற்றுக்குமிடைப்பட்ட புளோரிடாவை அமெரிக்கா தன் நாட்டோடு இணைத்துக்கொண்டது.

1812ஆம் ஆண்டுப் போரின்போது ஸ்பெயின் பிரிட்டனை ஆதரித்தது. எனவே, அமெரிக்கத் தளபதி ஜாக்சன் தலைமையில் ஒரு படை பெர்ல் ஆற்றுக்கும் மொபைல் (Mobile) ஆற்றுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதியைக் கைப்பற்றியது. ஆனால், இன்னும் புளோரிடா தீபகற்பம் உள்பட கிழக்கு புளோரிடா கைப்பற்றப் படாமலிருந்தது.

ஸ்பெயின் தூதுவராக ஓனிஸ் (Onis) என்பவர் வாஷிங்டனுக்கு 1815-ல் அனுப்பப்பட்டார். ஸ்பெயினுக்கும் அமெரிக்காவுக்கு மிடையே இருந்த சிக்கல்களைத் தீர்த்து வைக்குமாறு அவருக்கு உத்தரவிடப்பட்டிருந்தது. அமெரிக்காவிற்கும் ஸ்பெயினுக்கும் இடையேயுள்ள எல்லையை நிர்ணயித்தல், ஸ்பெயின் மீது அமெரிக்கா கொண்டாடும் உரிமைகளை ஆராய்தல், கிழக்கு புளோரிடாவை விற்றல் முதலியனபற்றி பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. ஆனால், அவற்றில் முன்னேற்றம் ஏதும் காணப்படவில்லை. இதற் கிடையே புளோரிடாவிலிருந்த இந்தியப் பழங்குடியினரும், நீக்கிரோக்களும் எல்லைப்புற அமெரிக்கருக்கு அதிக அளவில் தொல்லை தந்தமையால் அமெரிக்கர் பொறுமையிழந்தனர். இந்தியர்களையும் நீக்கிரோக்களையும் தண்டிக்கும்படி மன்ரோ, ஜாக்சனுக்குக் கட்டளை யிட்டார். ஜாக்சன் கிழக்கு புளோரிடாமீது படையெடுத்துச் சென்று ஸ்பானிய நகரங்களான செயின்ட் மார்க்கையும் (St. Mark), பென்சகோலாவையும் (Pensacola) தரைமட்டமாக்கினர் : இரண்டு வெள்ளையர்கள் கொல்லப்பட்டனர் ; ஸ்பானிய ஆளுநர் விரட்டி யடிக்கப்பட்டார். இச் செய்கைகளைக் கேள்வியுற்ற அயலுறவுச் செயலாளரான ஜான் குவின்சி ஆடம்ஸ் (John Quincy Adams) பெரிதும் கவலைப்பட்டார். ஒரு வேளை பிரிட்டன், ஸ்பெயினின் சார்பாக அமெரிக்காவைத் தாக்கக் கூடும் என்று அவர் அஞ்சினர். ஆனல், அமெரிக்கா தான் கைப்பற்றிய பகுதிகளைத் திருப்பியளிப்ப தாக ஒப்புக்கொண்டதால், ஸ்பெயின் போர் நடவடிக்கைகளை மேற் கொள்ளவில்லை. கிழக்கு புளோரிடாவை அமெரிக்கா வன்முறையால் கைப்பற்றக்கூடும் என்று அஞ்சிய ஸ்பெயின், புளோரிடாவை விற்று விட விருப்பம் தெரிவித்தது. அதன் பலனாக ஆடம்ஸ்-ஓனிஸ் உடன்படிக்கை (Adams-Onis Treaty) 1819-ல் கையெழுத்திடப் பட்டது.

ஆடம்ஸ்—ஓனிஸ் உடன்படிக்கையின்படி கிழக்கு புளோரிடாவை அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு அளித்துவிடவும், 1810-லும், 1812-லும் அமெரிக்கா கைப்பற்றிய பகுதிகளை அமெரிக்காவிற்கே அளித்துவிடவும் ஸ்பெயின் இசைந்தது. இதற்கு ஈடாக ஸ்பானிய அரசிடத்து அமெரிக்கக் குடிமக்கள் கோரிய இழப்பீட்டுத் தொகை களை அவர்களுக்கு அளிக்க அமெரிக்கா ஒப்புக்கொண்டது. அத்தொகை ஐந்து மில்லியன் டாலர் எனக் கணக்கிடப்பட்டது.

லூசியானாவின் எல்லையும், ஸ்பானிய மெக்சிகோவின் எல்லையும் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டன. அமெரிக்காவிற்குச் சொந்தமான ஓரிகான் (Oregon) பகுதிமீது ஸ்பெயின் சொந்தம் கொண்டாடுவதை நிறுத்தியமையால், ஸ்பெயினுக்குச் சொந்தமான டெக்சாஸ் பகுதிமீது அமெரிக்கா சொந்தம் கொண்டாடுவதை நிறுத்திக் கொண்டது.

ஆடம்ஸ்-ஒனிஸ் உடன்படிக்கையை உறுதிசெய்ய ஸ்பெயின் காலந் தாழ்த்தியது. அதற்குக் காரணம், ஸ்பெயின் ஆட்சிக்குட்பட்டிருந்த தென் அமெரிக்க நாடுகள் பல குடியரசுகளானமையை அமெரிக்க ஐக்கிய நாடு அங்கீகரிப்பதைக் காலந்தாழ்த்தவேயாம். பல தென் அமெரிக்க நாடுகள் 1810-லிருந்து விடுதலைபெறக் கிளர்ச்சி செய்து வந்தன. அவற்றில் பல 1820-க்குள் விடுதலை பெற்று விட்டன. இறுதியாக ஸ்பானிய அரசர் பெர்டினண்டு அவ்வுடன்படிக்கையை ஏற்றுக்கொண்டு உறுதி செய்தார். கிழக்கு புளோரிடாவை அமெரிக்கா பெற்றமை அமெரிக்காவின் எல்லை விரிவடையும் வரலாற்றில் ஒரு முக்கியமான நிகழ்ச்சியாகும். புளோரிடா, போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்ததொரு நிலப்பரப்பாகும், ஸ்பெயின், ஓரிகான்மீது சொந்தம் கொண்டாடுவதை நிறுத்திக் கொண்டமையால் அமெரிக்கா தனது எல்லையை பசிபிக் கடலோரம் வரை நீட்டிச் செல்ல ஏதுவாயிற்று.

### மன்ரோ தம் கோட்பாட்டினை வெளியிட நேரிட்ட நிகழ்ச்சிகள்

அமெரிக்காவின் வெளிநாட்டுறவில் மன்ரோ கோட்பாடு முக்கியமானதொரு பத்திரமாகக் கருதப்படுகிறது. தனித்திருத்தல் கொள்கையின் கருத்தை எடுத்துக்காட்டுவதாக அமைந்துள்ள இக் கோட்பாடு, சிறப்பாக உள்நாட்டுப் போருக்குப் பிறகு பெரிதும் செயல்முறையில் பின்பற்றப்பட்டது. மன்ரோ இக் கோட்பாட்டினை வகுக்கக் காரணம் ரஷ்யாவிடமிருந்து வந்த மிரட்டலேயாகும். வட அமெரிக்காவின் வடமேற்குக் கோடியிலிருந்த அலாஸ்கா (Alaska) நிலப்பகுதியை ரஷ்யா தன் கட்டுப்பாட்டினுள் வைத்திருந்தது. அதன் ஆளுநரான அலெக்சாண்டர் பாரனேவ் (Alexander Baranov) அமெரிக்கரோடு வலியச் சண்டை செய்ய முனைந்தார். ரஷ்யாவின் நிலப்பரப்பைப் பெருக்கும் நோக்கத்தோடு சான்பிரான்சிஸ்கோவிற்கு வடக்கே போர்ட் ரைஸ் (Port Rise) என்னுமிடத்தில் ஒரு கோட்டை கட்டினர். அதே சமயம் ரஷ்ய மன்னர் ஒரு பேராணை பிறப்பித்து, ரஷ்யாவின் எல்லைக்கோட்டை 55° -லிருந்து 51° ஆக மாற்றிக் கூறி அதற்குட்பட்ட நிலமெல்லாம் ரஷ்யாவிற்குச் சொந்தமானதென அறிவித்தார். மற்றும் வெளிநாட்டுக் கப்பல்கள் அமெரிக்கக் கடற்கரையினின்று நூறு மைல் தொலைவுக்குள் வரக்கூடாது என்றும் ரஷ்ய மன்னர் கட்டளை பிறப்

பித்தார். இவ்வகையில் வடபகுதியில் ரஷ்யா தன் நிலப்பரப்பினை பெருக்குவதில் முனைந்தது. இதனைக் கண்ட அமெரிக்கா அந் நிலையை மாற்ற உறுதி பூண்டது.

ஐரோப்பிய அரசியல் அரங்கில் ரஷ்யா, பிரஷ்யா, பிரிட்டன் பிரான்சு, ஆஸ்த்திரியா ஆகிய நாடுகள் ஒன்றுகூடி ஒரு கூட்டணியை (Concert of Europe) அமைத்து, முடியாட்சிக்கு எதிரான புரட்சி இயக்கங்களை ஒடுக்குவதில் முனைந்தன. ஸ்பெயினிலும், இத்தாலியிலும் மக்களாட்சி வளராமல் தடுக்கப்பட்டது. தென் அமெரிக்காவில் ஸ்பெயினுக்குட்பட்டிருந்த பல குடியேற்றங்களில் உரிமைப் போர்கள் நடந்து கொண்டிருந்தன. 1822-ல் வெரோனவில் (Verona) நடைபெற்ற மாநாட்டில் அக் குடியேற்ற நாடுகளை அடக்கும் பணி பிரான்சிடம் ஒப்படைக்கப்பட்டது. அதன் விளைவாக பிரான்சுக்குச் சில குடியேற்ற நாடுகள் கிடைக்கக்கூடும் என எதிர் பார்க்கப்பட்டது. தென் அமெரிக்காவில் மீண்டும் முடியாட்சி நிறுவுவதற்கான முயற்சிகளைக் கண்ட அமெரிக்க ஐக்கிய நாடு அஞ்சியது. அதனல், அந் நாடுகளோடு அமெரிக்கா கொண்டிருந்த வாணிகத் தொடர்பும் அறுபடக் கூடுமென எதிர்பார்க்கப்பட்டது.

ஐரோப்பிய நாடுகள் தென் அமெரிக்காவில் நடைபெற்றுக் கொண்டிருந்த உரிமை இயக்கங்களை அடக்குவதில் ஈடுபட்டதைக் கண்ட பிரிட்டிஷ் வெளியுறவு அமைச்சர் ஜார்ஜ் கானிங் (George Canning) மிகவும் துயருற்றூர். பிரிட்டன் உரிமை இயக்கங்களை ஆதரித்தமையால், அவற்றைத் தடுப்பதற்காக அமைக்கப்பட்ட ஐரோப்பிய கூட்டணியில் சேர மறுத்துவிட்டது. பிரிட்டன் தென் அமெரிக்க நாடுகளோடு வாணிகத் தொடர்பு கொள்ளவும் விழைந்தது. ஆனல், பிரிட்டிஷ் மன்னர் நான்காம் ஜார்ஜ், தென் அமெரிக்கக் குடியேற்றங்கள் உரிமை பெறுவதை விரும்பவில்லை. அத்துடன் பிரிட்டன், ஸ்பெயினேடு நட்புரிமை கொண்டிருந்தது. எனவே கானிங் வெளிப்படையாக உரிமை பெற்ற தென் அமெரிக்கக் குடியேற்றங்களை அங்கீகரிக்க முடியவில்லை. அதற்காக, அவர் அமெரிக்க ஐக்கிய நாடும், பிரிட்டனும் சேர்ந்து தென் அமெரிக்கக் குடியரசுகளை ஆதரிக்கும் வகையில் ஒரு கூட்டறிக்கையை வெளியிடலாமெனப் பிரிட்டனிலிருந்த அமெரிக்கத் தூதுவரான ரிச்சர்டு ரஷ் (Richard Rush) என்பவரிடம் கருத்துத் தெரிவித்தார். அப்படி வெளியிடப்படும் கூட்டறிக்கையில், இரண்டு கொள்கைகள் தெளிவாக்கப்பட வேண்டுமென்றூர். பிரிட்டனுக்கும், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் அமெரிக்கக் கண்டத்திலுள்ள பிற ஐரோப்பிய நாடுகளின் ஆதிக்கத்திலுள்ள குடியேற்ற நாடுகளைக் கைப்பற்ற எண்ணமில்லையென்றும், தென் அமெரிக்க நாடுகள்மீது ஐரோப்பிய நாடுகள் வலுக்கட்டாயமாகத் தங்களது ஆட்சியைத் திணிக்கக் கூடாதென்றும் தெளிவுபடுத்த,

கானிங் விரும்பினார். அமெரிக்க ஐக்கிய நாடு, கியூபாவைக் (Cuba) கைப்பற்றப் பேரவா கொண்டிருந்தமையால் பிரிட்டனோடு சேர்ந்து கூட்டறிக்கை விட விரும்பவில்லை. மற்றும் அமெரிக்கக் கண்டம் பற்றிய நடவடிக்கையில் அமெரிக்க ஐக்கிய நாடு தனித்துச் செயற்பட விரும்பியதே யொழிய பிரிட்டனோடு சேர விரும்பவில்லை. மற்றும் தென் அமெரிக்கக் குடியரசுகளைப் பிரிட்டன் அங்கீகரிக்க வேண்டுமென்றும் அமெரிக்கா கோரியது. ஆனால், பிரிட்டன் மறுத்துவிட்டது. ஜெபர்சனும், மாடிசனும் கூட்டறிக்கை வெளியிடுவதே நல்லதென்று கருதினர். ஆனால், வெளியுறவுச் செயலாளரான ஜான் குவின்சி ஆடம்ஸ் அமெரிக்க ஐக்கிய நாடு தனியாகவே அந் நடவடிக்கையில் ஈடுபட வேண்டுமென்று கூறினார். மன்ரோவும் அக் கருத்தையே ஏற்றார். "அமெரிக்கக் கண்டத்தின் அரசியலில் ஐரோப்பிய நாடுகள் தலையிடக் கூடாதென்பதை" ஓர் அறிக்கையின்மூலம் மன்ரோ வெளியிட விரும்பினார். ஆனால், முடிவில் அக் கருத்தை 1823-ல் காங்கிரஸில் நிகழ்த்தும் ஆண்டுச் செய்தியறிக்கையில் சேர்த்து வெளியிட்டார். அதுவே பின்னர் "மன்ரோ கொள்கை" என்றழைக்கப் பட்டது.

## மன்ரோ கொள்கை

(1) ஐரோப்பிய வல்லரசுகள் இனிமேல் அமெரிக்கக் கண்டங்களில் குடியேற்ற நாடுகளை நிறுவக் கூடாது என்றும், (2) அன்றிருந்து வந்த ஐரோப்பிய குடியேற்ற நாடுகளின் நடவடிக்கைகளில் அமெரிக்க ஐக்கிய நாடு ஒரு போதும் தலையிடாது என்றும், (3) அமெரிக்கக் கண்டத்திலுள்ள நாடுகள்மீது ஐரோப்பிய வல்லரசுகள் தங்களது ஆதிக்கத்தைச் செலுத்தக் கூடாது என்றும் (4) அப்படியும் மீறி தென் அமெரிக்க நாடுகளின் ஆட்சியில் ஐரோப்பிய வல்லரசுகள் தலையிட்டுத் துன்பம் விளைவித்தால், அமெரிக்க ஐக்கிய நாடு தனக்கு ஊறுவிளைந்ததாக எண்ணி செயலாற்றும் என்றும் மன்ரோ அறிவித்தார். அமெரிக்க ஐக்கிய நாட்டின் அயல்நாட்டுக் கொள்கையில் இது ஒரு முக்கியமான கட்டமாகும். ஆகவே, இச் சித்தாந்தம் அமெரிக்க கண்டத்திற்கு வரும் அமெரிக்கர் அல்லாதவர் எவரையும் மேற்கூறிய காரணங்களைக் காட்டி தடுத்து நிறுத்தியது.

## மன்ரோ கொள்கை அறிவிப்புத் தேவையானதா ?

மன்ரோ கொள்கை அறிவிப்புத் தேவையற்றது என்று சில வரலாற்றறிஞர்கள் கருதுகின்றனர். பேராபத்து ஏதும் அமெரிக்காவை அச் சமயம் சூழவில்லை. அப்படியே ஒரு வேளை ஐரோப்பிய நாடுகள் தென் அமெரிக்க நாடுகளின்மீது ஆதிக்கம் செலுத்த முற்பட்டால், அதனைத் தடுத்து நிறுத்துமளவிற்கு அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குப் போதிய வலிமை அச்சமயம் கிடையாது. அடுத்து,

ரஷ்யாவின் அச்சுறுத்தல் உண்மையானதன்று. ஓரளவு கற்பனையான தென்றே சொல்லலாம். ரஷ்யா, ஆக்கிரமிப்பு செய்ய முடியாத நிலை யில் பல தொல்லைகளுக்குட்பட்டிருந்தது; மற்றும் தென்பகுதியில் சொந்தம் கொண்டாடுவதையும் நிறுத்திக் கொண்டது. அடுத்து ஐரோப்பிய நாடுகளினின்று எதிர்பார்த்த பயமுறுத்தலும் கற்பனை யானதென்றே கொள்ளலாம். பிரான்சு மட்டுமே தென் அமெரிக்க நாடுகளைக் கட்டுப்படுத்துவதில் ஆர்வங்காட்டிற்றே ஒழிய பிறநாடுகள் வாளாயிருந்தன. பிரிட்டனும் பிரான்சை ஏற்கனவே எச்சரித் திருந்தது. பிரிட்டிஷ் கப்பற்படை உதவியின்றியும், பிரிட்டனுக் கெதிராகவும் ஐரோப்பிய நாடுகள் செயற்படக் கூடிய நிலையில் அப்போதில்லை. அடுத்து, தென் அமெரிக்க நாடுகளும் தங்களைக் காப்பாற்றும் பொருட்டு, அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்து எத்தகைய உதவியையும் கேட்கவில்லை. சில நாடுகள் ஏற்கனவே தனி நாடா கும் உரிமை பெற்றுவிட்டன. அவை பிரிட்டனின் உதவியைத்தான் நாடின.

**மன்ரோ கொள்கை பற்றிப் பிறநாடுகளின் கருத்து**

அமெரிக்க ஐக்கிய நாட்டில் மன்ரோ கொள்கைக்குப் பெரும் வரவேற்பு இருந்தது. தேசிய உணர்வு மேலோங்கிய காலம் அது. மன்ரோ கொள்கை இளங்குடியரசின் வளரும் வலிமையின் சின்ன மாகக் கருதப்பட்டது. இருப்பினும், அமெரிக்கா உடனே அதனைச் செயற்படுத்த முனையவில்லை. கொலம்பியா, பிரான்சுக்கெதிராகவும், பிரேசில், போர்ச்சுகலுக்கெதிராகவும் உதவி கோரி அமெரிக்க ஐக்கிய நாட்டை நாடியபோது அமெரிக்கா வாளாயிருந்து விட்டது.

அமெரிக்க ஐக்கிய நாடு தமக்குப் பாதுகாப்பாளராக செயலாற்றுவதைத் தென் அமெரிக்க நாடுகள் விரும்பவில்லை. அவை பிரிட்டனிடம் உதவியைக் கோரினவே ஒழிய, அமெரிக்க ஐக்கிய நாட்டை நாடவில்லை. தென் அமெரிக்கப் புரட்சித் தலைவரான சைமன் பொலிவர் (Simon Bolivar) அனைத்து அமெரிக்க நாடுகளின் மாநாடு (Pan - American Congress) ஒன்றைப் பனமாவில் 1826-ல் கூட்டினர். அவர் பிரதிநிதிகளை அனுப்பச் சொல்லி அமெரிக்காவை அழைக்கவில்லை. ஆனால், பிரிட்டன் அழைக்கப்பட்டது. இருப்பினும் அமெரிக்க ஐக்கிய நாடு தானே தனது பிரதிநிதிகளை அனுப்பிற்று. அப் பிரதிநிதிகள் மாநாடு முடிந்தபின் போய்ச் சேர்ந்ததனால் கேலிக்குள்ளாயினர்.

ஐரோப்பிய நாடுகளும் மன்ரோவின் அறிவிப்பை வெறுப்புடன் நோக்கின. மன்ரோ தனித்து இக்கொள்கையை அறிவித்தமையால் கானிங் சினங்கொண்டிருந்தார். எனவே பிரிட்டன், 'அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு எதிராகத் தென் அமெரிக்காவில் செயற்பட

லாயிற்று. மன்ரோவின் அறிக்கை அநாகரிகமானதென மெட்டர்னிச் (Metternich) கூறினர். ரஷ்யாவும் மன்ரோ அறிக்கையைப் பொருட் படுத்தாதிருந்தது. இருப்பினும் ஐரோப்பிய நாடுகளெல்லாம் ஒன்று கூடி இக்கொள்கையினடிப்படையில் அமெரிக்க ஐக்கிய நாட்டை எதிர்க்க முயலவில்லை. அதனாலேயே இக் கொள்கை காலத்தை வென்று நிற்கிறது எனலாம்.

## மன்ரோ கொள்கையின் முக்கியத்துவம்

"அமெரிக்கா அமெரிக்க மக்களுக்கே", என்ற கருத்தினை மன்ரோ கொள்கை தெளிவுற வலியுறுத்தியது எனலாம். முடியாட்சியை மீண்டும் நிறுவுவதற்காக ஐரோப்பாவில் உருவாகியிருந்த சக்திகளை எதிர்க்கும் வகையில் இக் கொள்கை அமைந்தது. குடியாட்சிக்கு உரிய இடமாக அமெரிக்கா கருதப்பட்டது.

மன்ரோ கொள்கை புதிய உலகையும் பழைய உலகையும் பிரிக்கும் கருத்துக் கோவையாகவும், அமெரிக்க ஐக்கிய நாட்டின் நலத்தைப் பாதுகாக்கும் கொள்கையாகவும் மட்டுமே தொடக்க காலத்தில் கருதப்பட்டது. வாஷிங்டனால் உருவாக்கப்பட்ட 'தனித்திருத்தல்' கொள்கைக்கு முழு வடிவத்தை அளிக்கும் வகையில் மன்ரோகொள்கை அமைந்துவிட்டது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் வலிமை பெருகப்பெருக இக் கொள்கையின் நோக்கெல்லையும் (Scope) விரிவாக்கப்பட்டது. புதிய உலகின் காப்பாளராகவும், தலைவராகவும் விளங்கும் வகையில் அமெரிக்க ஐக்கிய நாடு தான் விரும்பியபடியெல்லாம் மன்ரோ கொள்கையை நெகிழ்ச்சியுடைய தாக்கி விளக்கங் காணலாயிற்று. அனைத்து அமெரிக்கத் தேசிய உணர்விற்கும், இணையற்ற பேரரசுக் கொள்கைக்கும் முன்னோடியாக இக் கொள்கை அமைந்தது எனலாம்.

# 13. முன்னைய ரிப்பப்ளிக்கன் காலத்தில் வாழ்வும் எண்ணங்களும்

உரிமைப் போருக்குப்பின் அமெரிக்க ஐக்கிய நாட்டு மக்களிடையே நிலவிய சுதந்திர உணர்வுகள் பல வகையிலும், பிரதி பலித்தன. தாம் பெற்றுள்ள சுதந்திரத்தினை நியாயப்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதிலும் தாம் பெற்றுள்ள சுதந்திரத்துக்குத் தங்களைத் தகுதிப்படுத்திக் கொள்ளவேண்டுமென்பதில் மக்களுக்கு ஆர்வமும் அக்கறையும் நிரம்ப இருந்தது. மேலும், அமெரிக்கத் தன்மைகள் முழுவதுமாய் பிரதிபலிக்கிற அமெரிக்க நாகரிகத்தினை உருவாக்கவேண்டும் என்கிற துடிப்பு அவர்களிடையே இருந்து வந்தது. உரிமை பெற்ற நாட்டில் அவரவர் திறமைகளுக்கும் தேவைகளுக்கும் ஏற்ற வகையில் வளர வாய்ப்புகள் உண்டு. இந் நிலையில் உரிமை பெற்ற அமெரிக்காவில் காலத்துக்குப் பொருந்தாத நில மானியப் போக்குகளையும், உரிமைகளையும், பட்டங்களையும் உதறித் தள்ளிவிட்டு, சுதந்திரமான, அரசியல் நிறுவனங்களை உருவாக்கி, தூய்மையான சமுதாயத்தை வடித்து, நல்ல பண்பாடுகளைத் தோற்றுவித்து, நல்லதொரு நாகரிகத்தினை, உலகுக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் ஒரு நாகரிகத்தினை, உருவாக்க வேண்டுமென்கிற ஆர்வத்தின் காரணமாகப் பல சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன.

உரிமைப் போருக்குப்பின் நிலமானியத் திட்டத்தின் அடிப்படையில் வழங்கப்பட்ட பட்டங்கள், வரிகள், உரிமைகள் ஆகியவை எல்லாமே கைவிடப்பட்டன. உரிமைப்போரின்போது கைப்பற்றப்பட்ட நிலங்கள், நிலமற்றோர்க்கு வழங்கப்படும் வகையில் சீர்திருத்தங்கள் செய்யப்பட்டன. ஏனெனில், உரிமைப் போருக்குப் பின்னும் அமெரிக்க ஐக்கிய நாட்டில் குறிப்பாக, செல்வந்தர்களிடையேயும், பண்ணை முதலாளிகளிடையேயும், 'சமுதாய தட்டுகளை (Stratification) உருவாக்கும் மனபாங்கு இருந்து வந்தது. ஆனால், அவர்களின் எண்ணம் நிறைவேறவில்லை.

இதற்குக்காரணம், உருவாக இருக்கும் ஆளும் வர்க்கம் இளைய தலைமுறையினருக்குச் சொந்தமாயிருந்தது. உரிமைப்போரின் போது

தாமஸ் ஜெபர்ஸனுக்கு வயது 20; ஜான் ஆடம்ஸ்க்கு வயது 28. இவ்விதமாக அமெரிக்க ஐக்கிய நாட்டின் எதிர்கால அரசியல் தலைவர்கள், மக்களாட்சி, தேசியம் ஆகிய கோட்பாடுகளில் இளமைக் காலமுதலே ஊறி வளர்ந்தனர். சில மாநிலங்களிலிருந்து, குறிப்பாக தென்பகுதி மாநிலங்களான, வர்ஜீனியா, தென் கரோலினா, மேரிலாந்து ஆகியவைகளிலிருந்து—உரிமைப்போரில் ஈடுபட்ட தலைவர்கள் பிரபுத்துவ மரபுகளில் ஊறிய செல்வர்களாயும், செல்வாக்கு மிக்கவர்களாயும் இருந்தபோதிலும் உரிமைப்போருக்குப் பின் வெகு இயல்பாக தங்களுடைய சமுதாய அந்தஸ்துகளை உதறித் தள்ளிவிட்டு, எளிதாக இளைய தலைமுறையினருடன் கலந்து விட்டனர். ஆனாலும் உரிமைப் போருக்குப் பின்னும், மக்களாட்சி, மலர்ந்து விட்ட பின்னும், பிரப்புத்துவ நாகரிகத்தின் தன்மைகளையே போற்றிப் பாராட்டிச் சில பரம்பரை பணக்காரர்கள், தோன்றியுள்ள புதிய தலைமையை, ஆளும் வர்க்கத்தினை, ஏற்றுக்கொள்ள முடியாமல் இங்கிலாந்துக்குச் சென்று விட்டனர். இவர்களின் நிலம் பறிக்கப்பட்டு மற்றவர்களுக்கு பிரித்துக் கொடுக்கப்பட்டது. அடுத்ததாக உரிமைப்போருக்குப் பின் சில புதிய பணக்காரர்களும் உருவாக்கி இருந்தார்கள். வணிகர்கள், லேவாதேவிக்காரர்கள், நிலத்தரகர்கள், நில உடைமையாளர்கள் ஆகியோர் ஆவர். ஆனால், அவர்களிடம் சேர்ந்திருந்த செல்வமானது பரம்பரை பணக்காரர்கள் பெற்றிருந்த செல்வத்திற்கும் அதிகமாக இருந்தது. ஆனால், அவர்களுக்கு இருந்ததைப்போல குடிப்பெருமை, பாரம்பரியம் போன்ற சமுதாய அந்தஸ்துகள் அந்தப் புதிய பணக்காரர்களுக்குக் கிடையாது. எனவே, அவர்கள், அவர்களைப் போல குடிப்பெருமை, அந்தஸ்து போன்ற காரணங்களினால் மற்றவர்களிடமிருந்து, தனிமைப்பட்டு ஒதுங்கி வாழ்ந்ததைப் போல, அவர்களால் வாழ முடியாது. எனவே தொடக்க காலமுதலே அவர்களிடம் சமுதாயத்தில் 'தாம் ஒரு அங்கம்' என்கிற உணர்வு எப்போதும் இருந்து வந்தது. இன்னும் சொல்லப்போனால், நாடு வளர்ந்தால்தான் தாமும் வளர முடியும் என்கிற எண்ணம் அவர்களுக்கு எப்போதும் உண்டு. அதாவது தம்முடைய நல்வாழ்வானது, நாட்டு நல்வாழ்வுடன் நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருக்கிறது என்பதனையும் உணர்ந்து இருந்தனர். இதன் காரணமாகவே வர்க்கபேதங்கள், சமுதாயத்தட்டுக்கள் போன்றவைகளை இவர்களால் தோற்றிவிக்க முடியாது. எனவே உரிமைப்போருக்குபின் சமன்பட்ட சமுதாயம் வளர்ந்து வரலாயிற்று.

இவ்விதமான மனப்போக்கினைக் கொண்டுள்ள சமுதாயத்தில் எல்லார் நலனும் போற்றப்படல் வேண்டுமென்கிற பொதுநோக்கு மேலோங்கி இருந்ததில் வியப்பில்லை. இந்தப் பொதுநோக்கினை உரமாகக் கொண்டு ஆட்சியும், அரசியலும் அமைந்தது ; அமெரிக்கன் ரிப்பப்ளிக்கனிஸம் பிறந்தது.

**பொருளாதாரம் :**

உழவுத் தொழில் முக்கிய தொழிலாக இருந்து வந்தது. அதாவது நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் வாழ்ந்து வந்த மக்களில் பெரும்பாலோர், உழவுத்தொழிலில் ஈடுபட்டு இருந்தனர். விவசாயமானது பழைய முறைகளிலேயே செய்யப்பட்டு வந்தது. மாற்றுப் பயிர் முறைகள், உரமிடுதல், நவீன விவசாய கருவிகளைப் பயன் படுத்துதல் போன்றவைகள் இன்னமும் நடைமுறைக்கு வரவில்லை. விளைச்சலும், அந்தந்தப் பகுதிகளின் தேவைகளுக்குப் போதுமான அளவிற்குமட்டுமேயிருந்தது. மேலும், விவசாயப் பொருள்கள், வர்த்தகப் பொருள்களாக மாறிச் சந்தைக்கு வராதிருந்த இக் காலத்தில் அதிகமாக விளைவிப்பதற்கு வேண்டிய ஊக்கமும் இல்லை ; தேவையும் இல்லை ; அதோடுகூட, விளைநிலங்களானது வர்த்தக நிலையங்களுடன் நெருக்கமாக இணையும் அளவிற்குத்தேவையான போக்குவரத்து வசதிகளும் வளராதிருந்ததனாலும் தேவைக்கு மீறிய விளைச்சலை யாரும் விரும்பவில்லை. எனவே, சுயதேவையினை அடிப்படையாகக்கொண்டு, அமெரிக்க விவசாயம் அக் காலத்தில் இருந்து வந்தது. ஆனால் 1815ஆம் ஆண்டிற்குப் பின்னர், அந் நிலையில், ஓரளவிற்கு மாற்றம் ஏற்பட்டது.

**நகரங்கள்**

மக்கள் தொகையானது நகரங்களில், வேகமாகப் பெருகியது. ஐரோப்பாவிலிருந்து புதியதாக வந்து குடியேறுபவர்களின் எண்ணிக்கை ஆண்டுகள்தோறும் பெருகியபடியே இருந்தது. புதியதாக வந்து குடியேறுபவர்கள், நகரங்களில் கிடைத்த வேலை வாய்ப்புகள், வசதிகள் போன்ற காரணங்களுக்காக நகரங்களில் வாழ்வதையே விரும்பினர். இதன் காரணமாக, பிலடெல்பியா, நியூயார்க் போன்ற நகரங்களின் மக்கள் தொகையானது, இவ்வாண்டுகளில் மும்மடங்காக பெருகியது. புதிய நகரங்கள் பலவும் உருவாயின; இவைகள் பெரும்பாலும், நியூ இங்கிலாந்தின் தென் பகுதிகளில் உருவாயின. உரிமைப்போருக்குப் பின்னர் அமெரிக்க ஐக்கிய நாட்டில் பிறப்புவீதத்தின் அளவு அதிகரித்ததின் காரணமாகவும் மக்கள் தொகை கூடியது. மேலும், 1800ஆம் ஆண்டில் அம்மைக்குத்தும் முறை கண்டுபிடிக்கப்பட்டுவிட்டதால், மக்கள் கொள்ளை நோய்களினால் மடிவது பெருமளவில் தடுக்கப்பட்டது. இவ்விதமாக தொடக்கக் காலமுதகல பெருகியபடியே இருந்த மக்கள் தொகையினைத் தாங்கிக் கொள்ளும் மிகப்பெரிய உருக்குப்பானை (Melting Pot) யாக அமெரிக்கா இருந்துவந்தது.

**தொழில் :**

நகரங்களில் வாழ்ந்த மக்கள், வியாபாரம், தரகு, தொழில்கள் எனப் பல்வேறு தொழில்களைச் செய்து வந்தனர். இருப்பினும், சமய

போதகர் தொழிலும், அதற்கு அடுத்தபடியாக, வழக்கறிஞர் தொழிலும் மிகவும் பிரபலமாயிருந்தன. வழக்கறிஞர்கள் பெரும் பாலும் சுயமாகப் படித்து, சட்ட அறிவினையும், நுணுக்கங்களையும் பயிற்சியினையும் பெற்றவர்களாயிருந்தனர். 1817ஆம் ஆண்டில் முதன்முதலாக, ஹார்வர்ட்டில் சட்டக் கல்லூரி ஒன்று ஏற்படுத்தப் பட்டது.

**மதம் :**

ஐரோப்பிய சிந்தனையாளர்கள், மரபுவழிச் சிந்தனைகளையும், பிற் போக்குத்தனமான போக்குகளையும், காரணத்திற்கு உகந்ததாயில்லாத விவகாரங்களையும், எதிர்ப்பதில் ஏற்கனவே பழகிப் போயிருந்தனர். மேலும் எந்த ஒரு கருத்தினையும், தீவிரமாக ஆராய்ந்த பின்னரே, ஏற்றுக் கொள்ளவும் பக்குவப்பட்டுப் போயிருந்தனர். இதன் காரண மாகப் பதினெட்டாம் நூற்றாண்டின் பகுத்தறிவு வளர்ச்சிக்கு ஏற்ப மதச்சிந்தனைகளும் வளரலாயின. பைபிளில் கூறப்பட்டுள்ளபடி, உலகம் உருவான விதம், அதிசயங்கள். பேருரைகள் (Sacrament) ஆண்டவனால் ரட்சிக்கப்படுதல், ஆண்டவன் உலகத்தை இயக்குதல் இன்னபிறவற்றையும், அவர்கள் ஏற்க மறுத்தனர். ஆனால், இறை உண்மைக் கோட்பாட்டினை அவர்கள் ஏற்றுக் கொண்டனர். அவர்கள துவைத (Deist) வாதிகள் என அழைக்கப்பட்டனர்.

**அமெரிக்காவில் துவைதம்** (Deism) : துவைதக்கொள்கை யானது, உரிமைப்போருக்கு முன்னதாக, அவ்வளவாக அமெரிக்காவில் பரவவில்லை. ஆனால், உரிமைப்போரின்போது, பிரெஞ்சு வீரர்களின் தொடர்பின் காரணமாக, இக் கொள்கையானது, பொதுமக்களிடையே வேகமாகப் பரவியது. பெஞ்சமின் பிராங்க்லின், தாமஸ் ஜெபர்ஸன் போன்றவர்கள் இக் கொள்கையினைப் பெரிதும் விரும்பினர். எனினும் இந்தத் துவைதக் கொள்கையில், மக்களில் பெரும்பாலோருக்குப் பிடிப்பு வளரவில்லை. அவர்கள் இன்னமும் வைதீக முறைகளிலேயே மூழ்கியிருந்தனர். எனினும் இந்தத் துவைதக் கொள்கையானது உரிமைப்போருக்குப் பின்னர், வைதீகக் கொள்கைகளுக்குப் பெரும் சவாலாய் அமைந்தது என்பது மறுக்க முடியாதது. ஈதன் ஆலன் (Ethan Allen) தாமஸ் பெயின் (Thomas Paine), ஆகியோர் துவைதக் கொள்கையினை மக்களிடையே தீவிரமாகப் பரப்பினர்கள்.

இவ்விதமாக, சமயவிவகாரங்களில், வைதீகக் கொள்கைகளுக்கு, எதிராக, தாராள மனப்போக்குகள் வளர்ந்து வரலாயிற்று. மேலும் இரண்டு வகைப்பட்ட சமயப் பிரிவுகள் தோன்றின: முதலாவது யூனிவர்ஸலிஸ்ட் திருச்சபையும் (Universalist Church), இரண்டாவது யூனிடேரியன் திருச்சபையும் (Unitarian Church) ஆகும். யூனிவர்ஸலிட்டு திருச்சபையினர், 'மனித இனம் முழுவதற்கும் மீட்பு கிடைக்கும்' என்ற கொள்கையினைக் கொண்டிருந்தனர். மேலும்

கடவுளைத் தந்தையாகவும் மனித இனம் முழுவதையும் சகோதரர் களாயும் கருதினர்.

யூனிட்டேரிய திருச்சபையினர், இறைமூவொருமையினை (TRINITY) மறுத்தனர். மேலும், கட்டுப்பாடற்ற மனச் சாட்சியினையும், காரணங்கள் வழியே ஆண்டவனைக் காணுதலையும் மனித சமூகம் முழுவதற்கும் மீட்பு கிடைத்தலையும் நம்பினார்கள்; இவ்விதமாக, உரிமைப் போருக்குப் பின்னர், அமெரிக்க ஐக்கிய நாட்டில், தாராள மனப் போக்கின் வழியே அமைந்த சமயப் பிரிவுகளுக்கு ஆதரவு வளர்ந்து பெருகலாயிற்று. அரசியல் ரீதியாக, பொருளாதார ரீதியாக, உரிமைகளை அனுபவிப்பதுபோல, சமய விவகாரங்களிலும் கட்டுப் பாடற்ற நிலையினை மக்கள் பெரிதும் விரும்பினர்.

இப் புதிய, மதப் பிரிவுகள், அதிலும் குறிப்பாக யூனிட் டேரியனிஸம், மிகக் குறுகிய காலத்தில், மக்களை வெகுவாகக் கவர்ந்தது. இப் பிரிவு நியூஇங்கிலாந்து பகுதிகளில் அதிகமாகப் பரவியது. இவ்விதமாக, தாராளப்போக்குகள் கொண்ட சமயப் பிரிவுகள்மீது மக்கள் கொண்ட ஈடுபாட்டின் காரணமாக, கட்டுப்பாடு களும் மக்களாட்சிக் கோட்பாட்டிற்கு முரணும் இருக்கிற பழைய சமய பிரிவுகளின் மீது மக்களுக்குப் பிடிப்பு, தளர்ந்து வரலாயிற்று. கட்டுப்பாடுகள் நிரம்பிய, ஆங்கிலிகன் திருச்சபை முறையானது, மேரிலாந்திலும், நியூஇங்கிலாந்திலும் ஏற்கனவே இருந்தது. இவைகள், அரசின் ஆதரவினாலும், மக்களின் வரிப்பணத்தினாலும், பராமரிக்கப்பட்டு வந்தன. இதன் காரணமாக, அத் திருச்சபை களுக்குச் சென்று வழிபடாதவர்களும், வரி செலுத்த வேண்டிய தாயிருந்தது. இதனை அவர்கள் வெகுவாக எதிர்த்தனர். வர்ஜீனியா மாநிலத்தில் தாமஸ் ஜெபர்ஸனின் தலைமையில் இதனைக் கடுமையாக எதிர்த்தனர். முடிவில், 1886ஆம் ஆண்டில் வர்ஜீனியா மாநிலத்தில், உருவாக்கப்பட்ட சமய சுதந்திரச் சட்டமானது (The Statute of Religious Liberty) மக்கள் அனைவருக்கும் சமய சுதந்திரத்தினை அளித்தது. இதனைத் தொடர்ந்து மற்றத் தென் மாநிலங்களிலும், சமய சுதந்திரம் மக்களுக்கு அளிக்கப்பட்டது.

ஐரோப்பாவில் தலைமைத் திருச்சபையினைக் கொண்டு, அமெரிக்காவில், அதன் கிளை திருச்சபைகள் செயற்படுவதையும், அதில் அமெரிக்கர்கள் சென்று வழிபடுவதையும், அமெரிக்கர்களின் ஆதரவு அவைகளுக்கு இருத்தலையும், தேசியப்பற்று மிக்க அமெரிக்கர்கள் வெறுத்தனர். அவர்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு உகந்த, தேவைபடுகிற முறையில், அமைந்த (அமெரிக்க) தேசிய திருச்சபைகளை உருவாக்கப் பெரிதும் விரும்பினர். இதன் காரணமாக, 1884ஆம்ஆண்டில், அமெரிக்க மெத்தாடிஸ்டுகளின் எபிஸ்கோபால் திருச்சபையானது தனிப்பட்ட முறையில் நிறுவப்

பட்டது. இதனைத் தொடர்ந்து, அமெரிக்க புரொட்டஸ்டன்டு எபிஸ்கோபல் திருச்சபையும் (1884- 1889) உருவாக்கப்பட்டது. மேலும், அமெரிக்க ஐக்கிய நாட்டு பிரஸ்பிரிட்டரியன் திருச்சபையும் (1885-1888) தோற்றுவிக்கப்பட்டது.

இவ்விதமாக, அமெரிக்க ஐக்கிய நாட்டில், குடியாட்சிக் கோட்பாடுகளுக்கு ஏற்ப, சமயவிவகாரங்களிலும் உரிமைகள் போற்றப் பட்டன. அதோடுகூட நாட்டுணர்வும் மிகுந்து காணப்பட்டது.

**கல்வி :**

உரிமைப்போருக்குப் பின்னர், கல்வியில், அமெரிக்க மக்களுக்கு, அதிக ஆர்வம் உண்டாகியது. இதற்குக் காரணம், குடியாட்சிமுறை, சிறப்பாகவும், சீராகவும் நடைபெற அறிவுமிக்க வாக்காளர்களை உருவாக்குதல் வேண்டும் என்றஎண்ணம் பரவலாக இருந்து வந்ததேயாகும். முதன்முதலாக, வர்ஜீனியா மாநிலத்தில் இலவச ஆரம்பக் கல்வித்திட்டத்தினை அமல்படுத்தினர். எனினும், இலவசக் கல்வி முறை பலமாநிலங்களில் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இதனை ஈடு செய்யும் வகையில், திருச்சபைகளும், தொண்டு மனப்பான்மைக் கொண்ட சங்கங்களும், ஆரம்பக்கல்வியினை வளர்த்தன.

இக் காலத்தில், ஆரம்பக்கல்வியில், பல புதுமைகள் செய்யப் பட்டன. 1791ஆம் ஆண்டில், ஞாயிறு பள்ளிகள் (SundaySchools) தோற்றுவிக்கப்பட்டன. விடுமுறை நாளான ஞாயிறன்று, ஓய்வு பெறும், வேலைசெய்கிற பிள்ளைகளுக்குக் கல்வி வழங்கும் நோக்கத்தில் இப்பள்ளிகள் தோற்றுவிக்கப்பட்டன. அடுத்ததாக, லங்காஸ்டிரியன் கல்விமுறை (Lancostrian system)மேற்கொள்ளப்பட்டது. திறமையும் அறிவும் உடைய ஒரு சில மாணவர்களுக்குப் பாடத்தைச் சொல்லிக் கொடுத்து, பின்னர், அவர்களைக்கொண்டு மற்றப் பிள்ளைகளுக்குப் பாடங்கள் போதிக்கப்பட்டன. முதன்முறையாக அமெரிக்கப் பாடப் புத்தகங்கள் அறிமுகப்படுத்தப்பட்டதும் இக்காலத்திலேயேயாகும். இவ்விதமாக, கல்வியின் பயனை உணர்ந்து, அதனைப் பிள்ளைகளுக்கு, சிறுவயதுமுதலே அளிக்கலாயினர்.

உயர்கல்விக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. முதன்முதலாக, 1821 ஆம் ஆண்டில், பாஸ்டன் நகரில், உயர்நிலைப் பள்ளி ஒன்று நிறுவப்பட்டது. எனினும், உயர் கல்விமுறையானது, உள்நாட்டுப் போருக்கு முன்னதாகப் பிரபலமடையவில்லை என்று சொல்லலாம். வரலாறு, புவிஇயல், நிலம் அளக்கும் முறை போன்ற அன்றாட வாழ்க்கைக்குத் தேவைப்படுகிற விஷயங்கள் போதிக்கப்பட்டன

உயர்கல்வியினைவிட, கல்லூரிப் படிப்பிற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இக் காலத்தில் சுமார் முப்பது கல்லூரிகள் தோற்றுவிக்கப்பட்டன. பொதுவாகவே, கல்லூரிகளில், சமயத்

தொடர்பான விஷயங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இருப்பினும் அறிவியல், நவீன மொழி வரலாறுகள் ஆகியவைகளும் போதிக்கப்பட்டன.

**இலக்கியம்**

தேசியத்தினையும், சுதந்திரத்தையும், மையமாகக்' கொண்டு இலக்கியங்கள் மலர்ந்தன. இலக்கியங்களில் மலிந்து கிடந்த, இங்கிலாந்தின் மரபுகளும் பின்னணிகளும், பாதிப்புகளும் அடியோடு வெறுத்து ஒழிக்கப்பட்டன. ஆனல், இங்கிலாந்து அல்லாத மற்ற ஐரோப்பிய நாடுகளின் எண்ணங்களும், எழுத்துகளும், முறைகளும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. பிரஞ்சுப் புரட்சியின் கருத்துகள், அமெரிக்க மக்களிடையே மிகவும் பிரபலமாயிருந்ததின் காரணத்தினல், அந் நாட்டின் பழக்கவழக்கமுறைகளையும், எண்ணங்களையும் விரும்பி ஏற்றுக்கொண்டனர். இருப்பினும், அமெரிக்கத் தன்மைகள் மிளிர்கிற, தெரிகிற வகையில் தனித்தன்மை வாய்ந்த இலக்கியத்தினை உருவாக்குதல் வேண்டுமென்கிற வேகமும், ஆர்வமும் இலக்கியப் படைப்பாளிகளிடம் மிகுந்து காணப்பட்டது.

ஆங்கிலேயர்களின்மீது வளர்ந்து கிடந்த மிதமிஞ்சிய வெறுப்பின் காரணமாக நடைமுறையில் பயன்பட்டு வருகிற ஆங்கில மொழியினை விட்டொழித்துவிட்டு, ஜெர்மானிய மொழியையாவது, அல்லது ஹீப்ரு மொழியையாவது மேற்கொள்ளுதல் வேண்டும் என்கிற எண்ணம் தீவிர தேசியவாதிகளிடம் இருந்ததுண்டு. ஆனல், அப்படி எதுவும் நேர்ந்துவிடவில்லை. கனக்டிக்கட்டினைச் சேர்ந்த நோவா வெப்ஸ்டர் (Noawwebster) என்பவர் ஒரு சிறந்த தேசியவாதி; கல்விமான்; இலக்கியவாதி; ஆங்கிலமொழியினைப் பயன்படுத்துதலை விட்டொழித்தல் வேண்டுமென்ற எண்ணம் கொண்டவர். ஆனல் அம்மாதிரி விட்டொழிப்பதனல் விளைகிற நடைமுறைச் சிக்கலைத் தீர்க்கதரிசனத்துடன் நன்கு உணர்ந்தார். அதன் பயனக ஆங்கில மொழியினை அடியோடு விட்டொழித்தல் வேண்டுமென்கிற எண்ணத்தினை அவர் மாற்றிக் கொண்டார். அதற்குப் பதிலாக ஆக்கப்பூர்வமான ஒரு சீர்திருத்தத்தினைச் செய்தார்.

அமெரிக்கர்கள் பேசும் முறைகளை அடிப்படையாகக் கொண்டு எழுதுவதற்கு ஏற்றவகையில், ஆங்கிலச் சொற்களுக்குரிய, எழுத்துத் தொகுதிகளில் (Spelling) மாற்றங்களைச் செய்து, எழுத்து, சொல், அகராதிகளையும், நூல்களையும் வெளியிட்டார். 1828ஆம் ஆண்டில் அவர் வெளியிட்ட, ஆங்கில மொழியின் அமெரிக்க அகராதியானது சிறப்புமிக்க ஒன்றுகும்.

இவ்விதமாகத் திருத்தங்கள் செய்யப்பட்ட ஆங்கில எழுத்து அகராதிகள், கூட்டுச் சொற்றெடர்கள் ஆகியவை, அமெரிக்க ஐக்கிய

நாட்டில், பரவலாகப் பயன்படுத்தப்பட்டன. இம் மொழிச் சீர்திருத்தமும் அவைகளின் புழக்கமும் அமெரிக்க மக்களிடையே தேசியத்தையும், ஐக்கியத்தையும் வளர்க்கப் பெரிதும் உதவின.

குடியேற்ற காலத்தில், நாவல், இலக்கியங்கள் மக்களுக்குத் தெரியாததொன்று, என்றே சொல்லலாம். இதற்குக் காரணம், மதச் சார்புள்ள நூல்களைத்தவிர வேறு நூல்களைப் படித்த வெறுக்கத்தக்க, தகாத, கீழ்ச் செயலாக பொதுவாகக் கருதப்பட்டு வந்ததேயாகும். ஆனால், உரிமைப் போருக்குப்பின் நாவல் இலக்கியமானது வேகமாக வளர்ந்து வரலாயிற்று. இதற்குக் காரணம் ஆன்மீக விவகாரங்களில் ஈடுபாடு குறைந்து, உலகியல் விவகாரங்களில் ஆர்வம் பெருகியதே ஆகும். உணர்ச்சிவயப்படுத்துகிற நாவல்களுக்கு ஆதரவு மிகுந்திருந்தது. முதன்முதலாக, வில்லியம் எச். பிரௌன் (William H. Brown) என்பவர் 'திபவர் ஆஃப் சிம்பதி' (The Power of Sympathy) என்கிற நாவலை 1789-ல் எழுதினர். இதனைத் தொடர்ந்து பல நாவல்கள் வெளியாயின. அவற்றுள் சூசன்னு எச். ராவ்சன்ஸ் (Susanna H. Rowson's) என்பவர் 1790-ல் எழுதிய 'சார்லட் டெம்பிள்' (Charlotte Temple) என்கிற நாவல் நூறு பதிப்புகளுக்குமேல் வெளியிடப்பட்டு, தொடர்ந்து பல தலைமுறைகளில் விரும்பிப் படிக்கப்பட்ட ஒன்ருகும். நாவல்கள் பெரும்பாலும் அமெரிக்க ஐக்கிய நாட்டு மக்களையும், நிகழ்ச்சிகளையும், புகழ்வனவாயும், பெருமைப்படுத்துவனவாயுமிருந்தன.

**கவிதைகள்**

கவிதைகளும் முக்கியத்துவம் பெறத் தொடங்கின. கவிதைகளில் தேசியத் தன்மைகள் சுடர்விட்டெரிந்தன. ஜோயல் பார்லோ (Joel Barlow) என்னும் கவிஞர் எழுதிய 'தி விஷன் ஆஃப் கொலம்பஸ்' (The Vision of Columbus) என்னும் கவிதையும், டிமோதி டிவைட் (Timothy Dwight) என்பவர் எழுதிய 'கிரீன் பீல்டு ஹில்' (Greenfield Hill) என்னும் நீண்டதொரு கவிதையும், தேசிய உணர்வுகள் பிரதிபலிக்கிற சிறப்பு மிக்க கவிதைகளாகும். குறிப்பாக, டிமோதி டிவைட் தம்முடைய கவிதையில், கானக்டிக்கட் மாநிலத்தின் இயற்கையைப் பற்றியும், அங்குவாழ் மனிதர்களைப் பற்றியும் வெகுவாகப் புகழ்ந்து பாடினர். இவ்வகையில், நாட்டையும், நாட்டு மக்களையும் புகழ்பாடுகிற கவிதைகள் தொடர்ந்து எழுதப்பட்டன. எனினும், குடியரசு ஆட்சி முறைகளின் சிறப்புகளையும் உயர்வுகளையும் வெகுவாகப் போற்றிப் புகழ்ந்தவர் பிலிப்ஃபெரனே (Philiph Freneau) என்பவர் ஆவார். அவரே அந்தத் தலைமுறையின் மிகச்சிறந்த கவிஞராகக் கருதப்பட்டார்.

**நூல்கள்**

வரலாற்று நூல்களும், அமெரிக்கத் தலைவர்களின் வாழ்க்கை வரலாற்று நூல்களும் பல எழுதப்பட்டன. வரலாற்று நூல்களில்,

அமெரிக்க ஐக்கிய நாட்டுக் குடியரசினையும், அதன் சாதனைகளையும், பெரிதும் பாராட்டி அதன் ஆசிரியர்கள் போற்றினர். மேலும், அமெரிக்க ஐக்கிய நாட்டு, அமெரிக்கத் தலைவர்களையும், அவர்களின் வீரச்செயல் களையும், திறமைகளையும், வியந்து புகழ்ந்தனர். மாஸன் எல். வீம்ஸ் (Mason L. Weems) என்பவர். 1800ஆம் ஆண்டில் எழுதிய 'லைஃப் ஆஃப் வாஷிங்டன்' (Life of Washington) என்னும் நூலும், இதனை மிஞ்சுகிற வகையில், ஜான் மார்ஷல் (John Marshall) என்பவர், 'லைஃப் ஆஃப் வாஷிங்டன்' (Life of Washington) என்னும் நூலினை, ஐந்து பெரிய பிரிவு தொகுதிகளில் (Volumes) எழுதினர். இந் நூலில், ஜார்ஜ் வாஷிங்டனின் திறமைகளையும், சாதனைகளையும், போற்றி பாராட்டினர். பெடரலிஸ்டு கட்சியின் தந்தையாக ஜார்ஜ் வாஷிங்டன் விளங்குவதை உறுதிபடுத்தினர்.

**செய்தித்தாள்கள் :**

செய்தித்தாள்களின் வளர்ச்சியும், வெகுவாக உயர்ந்தது. அவை களின் எண்ணிக்கையானது ஆண்டுதோறும் பெருகியபடியே இருந்தன. 1730ஆம் ஆண்டில் சுமார் நாற்பது செய்தித்தாள்கள் வெளிவந்தன. ஆனால், 1815ஆம் ஆண்டில் சுமார் 350 செய்தித்தாள் கள் வெளிவந்தன. இந்த எண்ணிக்கைப் பெருக்கமானது, செய்தித் தாள்களின் வளர்ச்சியினைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. மேலும் இக் காலத்தில்தான், முதன்முதலாக, அரசியல் சார்புடைய செய்தித் தாள்களும் வெளிவரலாயின. பெரும்பாலான செய்தித்தாள்கள் வார மொருமுறை வெளிவந்தன. 1784ஆம் ஆண்டில் 'பென்சில்வேனியா பாக்கட்' (Pennsylvania Packet) என்ற செய்தித்தாளானது நாள் தோறும் வெளிவரத் தொடங்கியது. இதனைத் தொடர்ந்து பல நாளேடுகள் வெளிவரலாயின. பெரும்பாலான செய்தித்தாள்களின் ஆசிரியர்கள், அரசியல் கட்சிகளின் சார்புடையவர்களாயிருந்த காரணத்தினால் ஒவ்வொருவரும், தங்களுடைய பத்திரிகைகளில், செய்திகளுக்குக் கொடுத்த முக்கியத்துவத்தினைவிட, எதிர்கட்சி யினரைத் தாக்குவதற்குக் கொடுத்த முக்கியத்துவம் அதிகமா யிருந்தது.

**இதழ்கள்:**

செய்தித்தாள்கள் வளர்ந்ததைப் போல இக் காலத்தில் இதழ்கள் வளரவில்லை. 1815ஆம் ஆண்டில் பாஸ்டன் நகரில், அச்சிடப்பட்டு வெளிவந்த 'நார்த் அமெரிக்கன் ரெவ்யூ' (North American Review) என்னும் இதழ் குறிப்பிடத் தகுந்ததாகும்.

**நுண்கலைகள்**

**ஓவியங்கள் :** தீட்டப்பட்ட ஓவியங்கள், நாட்டினையும் அதனுடைய தலைவர்களையும், புகழ்பாடுகிற வகையில் இருந்தன.

ஜார்ஜ் வாஷிங்டன், மற்றும் உரிமைப் போரில் ஈடுபட்ட தலைவர்கள் ஆகியவர்களை வரைந்த கில்பர்ட் ஸ்டுவர்டின் (Gilbert Stuart) ஓவியங்கள் மிகச் சிறந்ததெனக் கருதப்பட்டன. ஜான் டிரம்பெல் (John Trumbell), சார்லஸ் வில்ஸன் பீல் (Charles Willson Peale) ஆகிய இருவரும் அந்தத்தலைமுறையின் மிகச் சிறந்த ஓவியர்கள். இவர்களின் ஓவியங்கள் தேசியப்பற்றினைப் பிரதிபலித்தன.

**கட்டடக்கலை :**

கட்டடக்கலையில், ரோமானிய முறைகள் விரும்பி ஏற்றுக் கொள்ளப்பட்டன. இதற்குக் காரணம், பண்டைய ரோமானியக் குடியரசுகளோடு, தங்கள் குடியரசினையும் இணைத்து வைத்துப் பார்ப்பதில் அமெரிக்கர்களுக்கு ஒரு பெருமையும் நிறைவும் இருந்ததேயாகும். 1789ஆம் ஆண்டில், ரிச்மாண்டில் கட்டப்பட்ட, அரசாங்கக் கட்டடத்திற்கும், 1818ஆம் ஆண்டில் கட்டப்பட்ட வர்ஜீனியா பல்கலைக்கழகக் கட்டடத்திற்கும், பண்டைய ரோமானியக் கட்டடப்பாணியில் திட்டமொன்றினை தாமஸ் ஜெபர்ஸன் அளித்தார். பொதுவாக, ரோமானியக் கட்டடக்கலை முறைகளில், அமெரிக்கர்களின் ரசனைகளுக்கு ஏற்ப, மாற்றங்களைச் செய்து புதிய புதிய கட்டடங்களை அமெரிக்கர்கள் கட்டிக்கொண்டனர். இம் முறையிலேயே, தலைநகரான வாஷிங்டனில் கட்டப்பட்ட அரசாங்கக் கட்டடத்தினை, மேஜர்பயரிஎல்பானென்ட் (Major Pierrel' Enfant) என்னும், பெயருடைய, பிரெஞ்சுக் கட்டடக்கலை நிபுணர் திட்டமிட்டுக் கட்டி முடித்தார்.

ஆனால் 1820ஆம் ஆண்டிற்குப் பின் ரோமானியக் கட்டடக்கலையின் மீது அமெரிக்கர்கள் கொண்ட மோகம் குறைந்து வரலாயிற்று. ரோமானியக் கட்டட முறைகளோடு பண்டைய கிரேக்கப் பாணியில் அமைந்த கட்டட முறைகளை அமெரிக்கர்கள் விரும்பினர்.

இசையிலும், நாடகத்திலும், குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய அளவிற்கு முன்னேற்றங்கள் எதுவும் நிகழ்ந்துவிடவில்லை. ஆங்காங்கே இசைக்குழுக்கள் இருந்தன என்பதனைத் தவிர இசையில் வேறு முன்னேற்றங்கள் இல்லை. நடிப்பது, தரக்குறைவான, வெறுக்கத்தக்க செயல் என்கிற எண்ணம், இன்னும் மக்களிடையே தொடர்ந்து நிலவி வந்ததால் நாடகமன்றங்கள் வளரவில்லை, இருப்பினும் வில்லியம் டன்லப் (William Dunlop) என்பவரால் நாட்டுப்பற்றுமிக்க நாடகங்கள் நடத்தப்பட்டன.

# 14. ஆன்ட்ரூ ஜாக்ஸன் 1829—37

## இடர்ப்பாடான காலம்

ஜேம்ஸ் மன்ரோவின் பதவிக் காலத்தில் (1817-1825) கட்சிப் பூசல்கள் ஓரளவு மறைந்திருந்தமையால் அவ்வாண்டுகள் 'நல்லுறவு காலம்' என்றழைக்கப்பட்டது. மன்ரோ 1825-ல் ஓய்வு பெற்ற தோடு அந் நல்லுறவு காலமும் முற்றுப்பெற்றது. அடுத்து வந்த ஆண்டுகளை 'இடர்ப் பாடான காலம்' (Era of hardfeelings) என வரலாற்றுசிரியர்கள், குறிப்பிட்டுள்ளனர். பொருளாதார அடிப்படையில் இவ்வாண்டுகளில் வகுப் புணர்ச்சி (Sectionalism) தோன்றலாயிற்று. அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஒவ்வொரு நிலப்பகுதியிலும் ஒரு வகையான பொருளாதார அடிப்படை நிலை உருவாகியது. கிழக்கு மாநிலங்கள் தொழில் துறையில் வெகுவாக முன்னேறி தொழில் துறையாளர்களை அடிப் படையாகக் கொண்ட பொருளாதார நிலையை உருவாக்கியிருந்தன. மேற்கே, பரந்து கிடந்த



**ஆன்ட்ரூ ஜாக்சன்**
*7-வது குடியரசுத் தலைவர்*
*(1829 - 1837)*
*மக்களாட்சிக் கட்சி.*

செழிப்பான நிலப்பரப்பில், விவசாயத்தை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார நிலை நிலவிற்று. தென் மாநிலங்களில் பருத்தித் தோட்ட பண்ணையாளர்களை முதன்மையாகக் கொண்ட பொருளாதார நிலை வளர்ந்தது.

மேற்கூறப்பட்ட பொருளாதார நிலைகளை அடிப்படையாகக் கொண்டே அந்தந்த நிலப்பகுதியில், அரசியல் கோட்பாடுகளும் வளர்ந்திருந்தன. கிழக்கு மாநிலங்களில் ,தொழிற்றுறையில் ஈடுபட்டிருந்த தொழிலாளர்கள் தீவிர சமூக சீர்திருத்தங்களை உரிமையுடன் கேட்கலாயினர். மேற்கே எல்லைப்புறத்தில் வாழ்ந்தவர்களும் குடியாட்சியில் சிறந்த பயிற்சி பெறலாயினர். இவ்விரு பகுதி மக்களும் ஜெபர்சனின் அரசியற் கொள்கைகளை மீண்டும் செயல்முறைக்குக் கொண்டுவர விரும்பினர். ஆனால், தென் மாநிலங்களில் பண்ணையாளர்கள் உயர்குடி ஆட்சியையே ஆதரித்தனர். அவர்களுக்குக் குடியாட்சியில் நம்பிக்கையேக் கிடையாது. இப்படிப் பொருளாதார அடிப்படையில் நிலவிய வேறுபாடுகளும், அரசியல் கோட்பாடுகளின் அடிப்படையில் உருவாகியிருந்த வேறுபாடுகளும் நாட்டில் இடர்ப்பாடான காலத்தைத் தொடங்கி வைத்தன.

## 1824ஆம் ஆண்டுத் தேர்தல்

பொருளாதார அடிப்படையிலும், அரசியல் அடிப்படையிலும் நாடே இரு கூறுகப் பிரியவிருப்பதைக் கட்சிகளின் அமைப்பில் புதியதாகக் காணப்பட்ட மாற்றங்களிலிருந்து அறிய முடிந்தது. இம் மாற்றங்கள் நல்லுறவு காலத்திலேயே நிகழ்ந்தன. மன்ரோவின் ஆட்சிக் காலத்தில் கூட்டாட்சிவாதிகளின் கட்சி மறைந்த அதே நேரத்தில் தேசியக்குடியரசுக்கட்சி என்னுமொரு கட்சியும் தோன்றியது. 1824-ல் தேசியக்குடியரசுக்கட்சியில் ஒற்றுமைப் படுத்த முடியாத அளவுக்குப் பல பிளவுகள் இருந்தன. அப் பிளவுகளின் விளைவாகக் குடியரசுத் தலைவர் பதவிக்கு நான்கு பேர் போட்டியிடலாயினர். அவர்கள் முறையே : (1) தென்னசியைச் சேர்ந்த ஆன்ட்ரூ ஜாக்ஸன் (Andrew Jackson ), (2) கென்டக்கியைச் சேர்ந்த ஹென்றி கிளே (Henry Clay), (3) ஜார்ஜியாவைச் சேர்ந்த வில்லியம் கிராபோர்டு (William Crawford), (4) மசாசூசெட்ஸைச் சேர்ந்த ஜான் குவின்சி ஆடம்ஸ். முந்தைய தேர்தல்களில் இருந்ததை விட இத் தேர்தலில் வேட்பாளர்களிடையே போட்டி கடுமையாக இருந்தது. ஜாக்ஸனுக்கு 99 வாக்குகளும், ஆடம்ஸுக்கு 84 வாக்குகளும், கிராபோர்டுக்கு 41 வாக்குகளும், கிளேவிற்கு 37 வாக்குகளும் கிடைத்தன. இவர்களில் யாருக்கும் விதிப்படி வேண்டிய பெரும்பாலான வாக்குகள் கிடைக்கவில்லை. எனவே, அதிக வாக்குகள் பெற்ற முதல் மூவருள் ஒருவரைக் குடியரசுத் தலைவராகத்தேர்ந்தெடுக்கப் பிரதிநிதிகள் மன்றத்திற்கு உரிமை தரப்பட்டது. ஹென்றி கிளே

தமது ஆதரவாளர்களையெல்லாம் ஆடம்ஸிற்காக வாக்களிக்கச் சொல்லி, இறுதியில் ஆடம்ஸுக்கு வெற்றியைத் தேடித் தந்தார். ஆனால், ஜாக்சனே, மக்களனைவராலும் விரும்பப்பட்டார். அடுத்த தேர்தலில் அவருக்கு எப்படியேனும் அப் பதவியைத் தேடித்தர வேண்டுமென ஜாக்சனின் நண்பர்கள் கங்கணங்கட்டிக் கொண்டனர்.

ஜாக்சனைச் சார்ந்தவர்கள் அவரை மையமாகக் கொண்டு ஒரு கட்சியை உருவாக்கினார்கள். கல்ஹூன் (Calhoun), கிராபோர்டு, வான்பியூரன் (Van Buren) ஆகியோர் ஆட்சிப் பொறுப்பிலிருந்தோருக்கு எதிராகக் கூடி இயங்கினர். தங்களை மக்களாட்சியினர் (Democrats) என்று கூறிக் கொண்டு, தாங்கள் ஜெபர்சனின் அடிப்படைக் கொள்கைகளை ஏற்றுக் கொள்வதாகவும் கூறினர். ஆட்சிப் பொறுப்பிலிருந்த கட்சியைத் தேசியக் குடியரசுக் கட்சியினர் என்றழைத்தனர். ஏனெனில், ஆடம்ஸ், கிளே ஆகியோரது கொள்கைகளும், திட்டங்களும் தேசிய நோக்குடையனவாய் அமைந்திருந்தன.

### பயனற்ற ஆட்சி (A futile administration) 1825-1826

ஜான்குவின்சி ஆடம்ஸ் இரண்டாவது குடியரசுத் தலைவரான ஜான் ஆடம்ஸின் மூத்த புதல்வராவார். அவர் பிரான்சிலும் ஹாலந்திலும் கல்வி பயின்று பின்னர் ஹார்வர்டு (Harvard) பட்டதாரியானார். பாஸ்டனில் வழக்குரைஞராகப் பணியாற்றினார். 1809 முதல் 1814 வரை ருஷ்யாவில் தூதுவராக இருந்தார். கெண்ட் உடன்படிக்கையை வரைவதில் சிறந்த பங்கேற்றார்: சில ஆண்டுகள் பிரிட்டனில் தூதுவராக விளங்கினார்; மன்ரோவின் ஆட்சியில் வெளியுறவு செயலாளராகப் பணி புரிந்தார்; மன்ரோ கொள்கையை வகுப்பதில் மகத்தான இடம் பெற்றார். இப்படி வெளியுறவுத் துறையில் சிறந்த அனுபவம் பெற்றிருந்தாரே தவிர, உள்நாட்டு ஆட்சித்துறையில் போதிய அனுபவம் அற்றவராயிருந்தார். தந்தையைப் போலவே நயமற்றவராய், தம்மை உயர்வாகக் கருதிக் கொண்டு இருந்தமையால் அரசியல்வாதிகள் யாரும் அவரை விரும்பவில்லை. ஆனால், ஆடம்ஸ் ஓர் இக்கட்டான நிலையில் பதவியேற்றமை குறிப்பிடத் தக்கதாகும். உண்மையாகவும், திறமையாகவும் ஆட்சி புரிய விரும்பியும், ஜாக்சனின் ஆதரவாளர்கள் காட்டிய எதிர்ப்பு ஆடம்ஸுக்குப் பெருந் தொல்லையாக இருந்தது. நாட்டு முன்னேற்றத்திற்காகப் பல நல்ல தேசிய திட்டங்களைத் தமது ஆட்சிக் காலத்தில் செயலாக்க முனைந்தார். ஆனால், அதற்கான நிறுவனங்களைச் சரிவர உருவாக்கவில்லை. காரணம், கட்சிப் பூசல்களே எனலாம்.

காங்கிரஸும் ஆடம்ஸின் தேசிய திட்டங்களுக்கு ஆதரவு தரவில்லை. சாலைகள் போடுவது, கால்வாய்கள் வெட்டுவது, போர்க் கப்பல்கள் கட்டுவது, கல்விக்கூடங்களை நிறுவுவது, அறிவியல் ஆராய்ச்சிகளை மேற்கொள்வது, வான்கோளங்களின் ஆய்வியலுக்

காக ஆய்வுக் கூடங்கள் அமைப்பது, நிறுவை அளவை முறைகளை சீராக்குவது, காப்புரிமைப் பட்டயச் சட்டங்களைத் திருத்துவது, உள் துறை ஆட்சிப் பிரிவை ஏற்படுத்துவது போன்ற தேசிய திட்டங் களுக்கான செலவுத் தொகையைக் கூட்டரசு வருவாயிலிருந்து அளிக்க சட்டமாமன்றம் மறுத்தது. தென் அமெரிக்காவில் 1826-ல் நடை பெற்ற பனமா மாநாட்டிற்குப் (Panama Congress) பிரதிநிதிகள் அனுப்புவது குறித்து, செனட் குடியரசுத் தலைவரோடு கருத்து வேறு பாடு கொண்டது. செரோக்கி (Cherokee) இந்தியர்களை அடக்கு வதில் ஜார்ஜியா சட்டமன்றம் குடியரசுத் தலைவருடைய ஆணையை மதியாது செயற்பட்டது. மன்ரோ தமது கொள்கையை வெளிப்படுத்தியதை அடுத்து, பிரிட்டனுக்கும், அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குமிடையே இருந்த சிக்கல்களைத் தீர்த்து வைக்க ஆடம்ஸ் முனைந்தார். ஆனல், பிரிட்டிஷ் வெளியுறவு அமைச்சர் கானிங் ஒத்துழையாது போகவே தொடர்ந்து சிக்கல்கள் இருந்தன.

## 1828-ஆம் ஆண்டுத் தேர்தல்

ஆடம்ஸ் தமது முதல் பதவிக் காலத்தின் இறுதியிலேயே நாட்டின் வெவ்வேறு காரணங்களுக்காக வெறுக்கப்பட்டு வந்தார் அவரது உயர்குடி ஆட்சிக் கொள்கைகளை மேற்கு எல்லைப்புறத்தில் வாழ்ந்தவர்கள் வெறுத்தனர். தென் மாநிலத்தவர்கள் தங்களது மாநில உரிமைகளில் ஆடம்ஸ் தலையிடுவதை விரும்பவில்லை. கிழக்கு மாநிலங்களிலிருந்த தொழிலாளர்கள் அரசியலில் அதிக உரிமைகள் கோரலாயினர். ஆடம்ஸ் இவர்களின் ஆதரவையெல்லாம் இழந்தார். மீண்டும் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டார். ஆனல், போதிய விளம்பரம் செய்யவில்லை. அதற்கு மாருக ஜாக்சனும் அவரது ஆதரவாளர்களும் நன்முறையில் விளம்பரம் செய்து மக்களைக் கவர்ந்தனர். இறுதியில், ஜாக்சனே வெற்றி பெற்ருர். ஜாக்சனுக்கு 178 வாக்குகளும், ஆடஸுக்கு 83 வாக்குகளும் கிடைத்தன. இருவருக்குமிடையே மனக்கசப்பு உச்சநிலையை அடைந்ததால் பதவியேற்க ஜாக்சன், வாஷிங்டன் நகர் வந்து சேர்ந்ததும் மரபுப்படி ஆடம்ஸைப் போய்ப் பார்க்கவில்லை ; ஆடம்ஸும் பதவியேற்பு விழாவன்று ஜாக்சனுடன் வீதியில் வலம்வர மறுத்துவிட்டார்.

## ஜாக்சனது வெற்றிக்குரிய காரணங்கள்

**(1) ஐரோப்பாவில் குடியாட்சி இயக்கங்கள் :-** நெப்போலியனது வீழ்ச்சிக்குப் பிறகு நடைபெற்ற வியன்ன மாநாட்டில் மெட்டர்னிச் (Metternich) தலைமையில் புரட்சிக் கருத்துகளுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்கப்பட்டு மீண்டும் முடியாட்சி தலைமை இடத்தைப் பெற வழி வகுக்கப்பட்டது. நெப்போலியனல் கைப்

பற்றப்பட்ட நாடுகளெல்லாம் முறைப்படி அரசு செலுத்த உரிமை பெற்றவர்களுக்குத் (Principle of Legitimacy) திருப்பி அளிக்கப் பட்டது. இப் பிற்போக்கான (Reactionary) கொள்கை நிலைத்திருக்க வில்லை. மீண்டும் ஐரோப்பாவில் புரட்சிகளும், மக்களாட்சிக்கான இயக்கங்களும் தலைதூக்கலாயின. கிரேக்கர்கள் உரிமைப் போரிட்டனர். பெல்ஜியததில் புரட்சியேற்பட்டது. மற்றும் பிரான்சில் ஜூலை புரட்சி நிகழ்ந்தது. இப் புரட்சி இயக்கங்கள் அமெரிக்கரிடத்துக் குடியாட்சிக் கருத்துக்களை அழுத்தமாகப் பதிய வைத்தது எனலாம்.

**(2) எல்லைப்புற வாக்காளர்களின் ஆதரவு** - 1828ஆம் ஆண்டு தேர்தல் நடைபெற்றபோது பதினொரு மாநிலங்கள் ஏற்கனவேயிருந்த பதின்மூன்று மாநிலங்களோடு கூட்டாட்சியினுள் சேர்த்துக் கொள்ளப் பட்டிருந்தன. இப் புதிய பதினொரு மாநிலங்களும் மேற்கே குடி பெயர்ந்தவர்களால் உருவானவை. அங்குக் குடியேறிய முதன் முயற்சியாளர்களெல்லாம் இந்தியப் பழங்குடியினரோடு வாழப் பழகி தங்களைத் தாங்களே ஆட்சி செய்து கொள்ள கற்றுக் கொண்டமை யால் அவர்களிடையே மக்களாட்சி உணர்வு அதிகமாயிருந்தது. அரசாங்கத்தின் கட்டுப்பாட்டையோ வரிகளையோ அவர்கள் விரும்ப வில்லை. இப் புதிய மாநிலங்களில் வாக்குரிமை சொத்தின் அடிப் படையிலல்லாது வயதுவந்த ஆண்கள் அனைவருக்கும் வழங்கப் பட்டிருந்தது. எனவே, அவர்கள் ஒருமுகமாக எல்லைப்புற வேட்பாளரான ஜாக்சனுக்கே தங்களது வாக்கினை அளித்தனர்.

**(3) தொழிலாளர்களின் ஆதரவு** - பழைய பதின்மூன்று மாநிலங் களில் தொழிற்சாலைகள் பல புதியதாக ஆரம்பிக்கப்பட்டிருந்தன. சிறப்பாக 1812ஆம் ஆண்டுப் போருக்குப் பிறகு பெருமளவில் நாடு தொழில்மயப்படுத்தப்பட்டது. இதன் விளைவாக வேலைவாய்ப்பு கள் அதிகமாயின. ஐரோப்பாவிலிருந்து ஆயிரக்கணக்கில் மக்கள் குடிபெயர்ந்து வந்தனர். தொழிற்சாலைகளிலும், துறைமுகங் களிலும் தொழிலாளர்களின் எண்ணிக்கை அதிகரித்தது. நடுத்தர வகுப்பாளரும் சமுதாயத்தில் உருவாயினர். இவர்களெல்லாம் அரசியலில் பங்குபெற விரும்பி வாக்குரிமை கேட்டனர். பல கிழக்கு மாநிலங்களில் சொத்துரிமைத் தகுதி நீக்கப்பட்டுத் தொழிலாளர்களுக் கெல்லாம் வாக்குரிமை அளிக்கப்பட்டது. மக்களாட்சிபற்றி ஜாக்சன் கொண்டிருந்த கருத்துகள் அவர்களைக் கவர்ந்தன எனவே, அவர்களுடைய வாக்குகளும் ஜாக்சனுக்குக் கிடைத்தன

**(4) பொதுமக்களிடையே மதிப்பு** - ஜாக்சன் ஒரு சிறந்த வீரர். 1812ஆம் ஆண்டுப் போரில் சிறப்புற படைத்தளபதியாகப் பணியாற்றி, அலபாமாவில் தொல்லை தந்து வந்த கிரீக்ஸ் (Creeks) இந்தியப் பழங்குடியினரைத் தோற்கடித்து ஒடுக்கினர். நியூ ஆர்லியன்ஸிலும் பிரிட்டிஷ் துருப்புக்களை எதிர்த்துப் போராடி மாபெரும் வெற்றி பெற்றார். இவ்வெற்றிகளால் தென் மாநிலங்களிலும்

ஜாக்சனது புகழ் உச்ச நிலையிலிருந்தது. அவர்களுடைய ஆதரவு இரு பதவிக் காலங்களிலும் அவருக்குக் கிடைத்தது.

**புதிய மக்களாட்சி (New Democracy)**

ஆன்ட்ரூ ஜாக்சன் இளம்வயதிலே அமெரிக்கப் புரட்சியில் கலந்து கொண்டார். சட்டக் கல்லூரியில் பயின்று, பட்டம் பெற்று வழக்குரைஞராக வாழ்க்கையை ஆரம்பித்தார். பின்னர் தென்னசி (Tennesse) மாநிலத்தின் தலைமை நீதிமன்றத்தில் நீதிபதியாகப் பணியாற்றினர். 1812ஆம் ஆண்டுப் போர் துவங்கிய காலையில் ஜாக்சன் படைத்தளபதியாக நியமிக்கப்பட்டார்; திறமையுடன் போர்புரிந்து புளோரிடாவைக் கைப்பற்றி மங்காப் புகழடைந்தார். சில காலம் புளோரிடாவின் இராணுவ ஆளுநராக ஆட்சி புரிந்தார்; இப்படி மாபெரும் வீரரென மக்களனைவராலும் போற்றப்பட்டார். மக்கள்தலைவராகத் திகழ்ந்த ஜாக்சனது வெற்றி அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் ஒரு புரட்சி இயக்கத்தை ஏற்படுத்தியது. அப் புரட்சி இயக்கம் 'புதிய மக்களாட்சி' அல்லது 'ஜாக்சனது மக்களாட்சி' (Jacksonian Democracy) என்று அழைக்கப்படுகிறது ஜாக்சனது வெற்றி உயர்குடி பிறப்பாளரது ஆட்சி செல்வாக்கின் வீழ்ச்சியையும், நாட்டில் அரசியலிலும் பொருளாதாரத்திலும் மக்கள் சம உரிமைகளைப் பெறுவதற்கான முயற்சியின் முதல் வெற்றியையும் சுட்டிக்காட்டியது எனலாம். இவ்வகையில் ஜாக்சனது மக்களாட்சி இரு வேறு நிலைகளில் செயற்பட்டதாகக் கொள்ளலாம். ஒன்று, சமுதாயத்தில் சிறப்புரிமைகள் பல பெற்று உயரிய இடத்தைப் பெற்றிருந்தவர்களமீது கட்டுப்பாடுகள் விதிக்கப்படுதல்; மற்றொன்று பொதுமக்கள்மீது விதிக்கப்பட்டிருந்த தடைகளை அகற்றுதல் ஆகும். ஒரு வகையில் அமெரிக்காவிலும், பிரான்சிலும் நடைபெற்ற புரட்சிகளின் கோட்பாடுகளுக்கு விளக்கம் காணும் வகையில் இயக்கம் ஏற்பட்டதாகக் கொள்ளலாம். ஜாக்சன் அப் புதிய இயக்கத்தின் தலைவராகத் திகழ்ந்தார்.

**மக்கள் தலைவர் ஜாக்சன்**

சாதாரண மக்களின் இன்ப துன்பங்களில் மிகுந்த இரக்கம் கொண்டவர் ஜாக்சன். இக் குணம் படைத்த குடியரசுத் தலைவர்கள் வெகு சிலரே. அத்தகைய இரக்கக் குணத்திற்குக் காரணம் ஜாக்சனது பிறப்பும் வளர்ப்புமேயாகும். அவர் இளம் வயதில் ஏழ்மையில் உழன்றவர்; தந்தை இறந்துபோக தாய், வீட்டுவேலை செய்து வளர்த்தார். நல்ல உணவு, போதிய உடை இல்லாமல் நோய்கள் பல அவரை வாட்டின. இப்படித் தாழ்மையும், இகழ்ச்சியும் அனுபவித்துக் கொண்டே ஜாக்சன் வளர்ந்தார். பிற்காலத்தில் ஏழைகள் பால் காட்டிய இரக்கக் குணம் இளமைக்காலத் தாழ்மை உணர்ச்சி

காரணமாகவே எனலாம். ஜாக்சனது இரு சகோதரர்கள் உரிமைப் போரில் உயிர் நீத்தனர்.

மேற்கு எல்லைப்புறச் சூழ்நிலையில் வாழ்ந்த ஜாக்சனுக்கு ஏற்பட்டிருந்த சில கொடூரமான அனுபவங்களிலிருந்து கிழக்கு மாநில வர்த்தகர்கள்மீது தீவிரமான அவநம்பிக்கை உண்டாயிருந்தது. தென்னசியில் வழக்குரைஞராகப் பணியாற்றியபோது போதிய வருவாயின்மையால் வாணிகத்திலும் ஈடுபட நேரிட்டது. அச் சமயம் ஜாக்சன் ஒரு முறை அநியாயமாகப் பெரு வணிகர்களாலும், கிழக்கிலிருந்த நிதியாளர்களாலும் வஞ்சிக்கப்பட்டுப் பெருங்கடனாளி யானார். மேற்குப் பகுதி வாணிகம் பெரும்பாலும் கிழக்குப் பகுதி பெரு வணிகர்களின் பிடியில் சிக்குண்டு கிடந்தது. பிலடெல்பியா விலும், நியூயார்க்கிலும் இன்பமாய்ச் செல்வச் செழிப்பில் வாழ்ந்த நிதியாளர்கள் கையில் தென்னசி போன்ற மேற்புறங்களில் நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த உழைப்பவர்களை அழிப்பதற்கான சக்தி இருப்பதை ஒரு பெரிய அநீதியாக ஜாக்சன் கருதினார்.

ஜாக்சனுக்குச் சாதாரண மனிதனிடம் மிகுந்த நம்பிக்கை யிருந்தது. அவனுடைய வலிமை அவரைக் கவர்ந்தது. மேற்கு எல்லைப்புறத்தில் வாழ்ந்த ஜாக்சன் அரசியல், பதவி, செல்வாக்கு ஆகியவையெல்லாம் கல்லூரி பட்டம் பெற்றவர்கள், உயர்குடி பிறப்பாளர்கள், செல்வந்தர்கள் ஆகியோருக்கு மட்டுமே உரியவை என்பதை ஏற்றுக்கொள்ளவில்லை. 'முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்' என்ற முதுமொழிக்கிணங்க சாதாரண எளிய மனிதனும் கடும் உழைப்பால் உயரிய இடத்தைப் பெறலாம் என்பது அவரது கருத்து. பொது மனிதனிடம் நம்பிக்கை, அரசியலில் அனைவருக்கும் சம உரிமை, பொருளாதார முன்னேற்றத்தில் அனைவருக்கும் வாய்ப்பு ஆகியவை ஜாக்சனின் அடிப்படைக் கொள்கைகள் எனலாம்.

**ஜாக்சன் பதவியேற்றல்**

மேற்கு எல்லைப்புறத்தைச் சேர்ந்த ஒருவர் குடியரசுத் தலைவரது பதவியைப் பெற்றது இதுவே முதல் முறையாகும். ஜாக்சனின் பதவியேற்பு விழா அமெரிக்க வாழ்க்கை முறையில் ஒரு புது யுகத் தின் துவக்கமாகக் கருதப்படுகிறது. பதவியேற்பு விழாவுக்குப் பல நாள்கள் முன்னதாகவே அரசியல்வாதிகளும், பதவி வேண்டுவோரும் தலைநகரில் கூடிவிட்டனர். தங்களுடைய தலைவர் குடியரசின் தலைவராகப் பதவியேற்பதைக் காண மேற்கிலிருந்து ஐந்நூறு மைல் தொலைவிலிருந்தெல்லாம் மக்கள் வந்தார்கள். "ஜாக்சன் வாழ்க" என்ற முழக்கம் செய்து கொண்டு அவர்கள் வீதி வழியே அலை மோதிச் சென்றபோது உயர்குடிப்பிறப்பாளர்கள் அருவருப்புடன் ஒதுங்கினார்கள் என்று நிகழ்ச்சிகளை நேரில் கண்ட ஒருவர் கூறியுள் ளார். குடியரசுத் தலைவரது இருப்பிடமான வெள்ளை மாளிகை

(White House), பதவிபேற்பு விழா அன்று பரப்பரப்பாகக் காட்சி யளித்தது. அங்கிருந்த இருக்கைகளையும், விரிப்புகளையும் சேற்றுக் காலணியோடு வந்து எல்லைப்புறவாசிகள் பாழ்படுத்தியதாகச் சொல்லப்படுகிறது.

**குடியரசுத் தலைவரின் முதன்மை**

அமெரிக்க அரசியலமைப்பு, செயல்முறைக்கு வந்ததிலிருந்து குடியரசுத் தலைவரது தகுநிலை சற்று ஐயக்கண்ணோட்டத்தோடு பார்க்கப்பட்டு வந்தது. ஏனெனில், உரிமைப்போருக்கு முன் மாநில ஆளுநர்களும் குடியேறிகளால் அவ்விதமே நடத்தப்பட்டு வந்தனர். மாநில ஆளுநர்கள், இங்கிலாந்திலிருந்து மன்னரால் நியமிக்கப்பட்டுப் வந்தனர். அவர்கள் அரசரின் சார்பில் குடியேற்றங்களைக் கட்டு படுத்தி ஆண்டு வந்தனர். அரச சின்னமாகவே ஆளுநர் விளங்கியதை மக்கள் வெறுத்தனர். அந் நிலையை உரிமைபெற்ற பின்னரும் குடியரசுத் தலைவரது பதவியைப் பொறுத்த மட்டிலும் தொடர்ந்து இருந்தது. இந்நிலையை மாற்றிச் சட்டமன்றம், நீதித்துறை—ஆகியவற்றைக் காட்டிலும் குடியரசுத் தலைவர் பதவிக்கு உயரிய இடத்தைத் பெறச் செய்யவேண்டுமென ஜாக்சனும் உறுதி பூண்டார். அதற்கேற்றாற் போல ஜாக்சனும் பொதுமக்களின் பிரதிநிதியாகத் திகழ்ந்தார் எனவே இக் குறிக்கோளை நிறைவேற்றும் பொருட்டு நீதித் துறையினை யும், காங்கிரஸையும், அவற்றின் தகுதியையும் எதிர்க்கத் துணிந் தார்.

**இந்தியர் மீது நடவடிக்கை**

ஜார்ஜியா மாநிலத்திற்கும் வொர்சஸ்டர் (Georgia vs. Worcester) என்பவருக்குமிடையே நடந்த வழக்கில் (1832) தலைமை நீதி மன்றத் தால் கூறப்பட்ட தீர்ப்பினை ஜாக்சன் எதிர்த்தார். இதனால் நீதித் துறையோடு மோத அவருக்கு ஒரு வாய்ப்பு கிட்டியது. ஜார்ஜியா மாநிலத்தில் செரோக்கீஸ் (Cherokees) என்றழைக்கப்படும் இந்தியப் பழங்குடியினர் ஏராளமாக வாழ்ந்தனர். வாஷிங்டன் அவர்களுடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டதன்படி காங்கிரஸில் அவர் களுக்கு ப்பிரதிநிதித்துவம் அளிப்பதாக வாக்களித்திருந்தார். ஆனால் பின்னர் அவ்வாக்கு செயல்முறைக்குக் கொண்டு வரப்படவில்லை. செரோக்கீஸ் மேற்கத்திய நாகரிக முறைகளைப் பின்பற்றி கிறிஸ்து வத்தைத் தங்களது சமயமாக மேற்கொண்டனர். தங்களது நிலையினை ஒப்புக்கொள்ளச் செய்ய ஓர் அரசியலமைப்பையும் உருவாக்கி யிருந்தனர். இந் நிகழ்ச்சிகளை ஐயப்பாட்டோடு கண்ட ஜார்ஜியா மாநிலம், மாநிலச் சட்டங்களை செரோக்கீஸ்மீது செயல்படுத்தியதோடு, அவர் களது உறைவிடங்களை வெள்ளையர் குடியேற்றங்களுக்காகவும் திறந்து விட்டது. இதனைக் கண்டித்து ஒரு கிறித்துவப் பாதிரியார் வழக்குத் தொடுத்தார். செரோக்கீஸ் வாழுமிடங்களில் உள்ள வெள்ளையர்கள் ஓர்

அடையாளச் சீட்டைப் பெற வேண்டுமென்றும் ஜார்ஜியா மாநிலத்திற்குப் பற்றுறுதி தெரிவித்து வாக்குமூலம் எடுக்க வேண்டுமென்றும் என்றிருந்த சட்டத்தை இப் பாதிரியார் எதிர்த்தார். ஜார்ஜிய உயர் நீதிமன்றத்தில் நடைபெற்ற வழக்கில் பாதிரியார் தோற்றுப்போய் தண்டனை பெற்றார். அவர், தலைமைநீதிமன்றத்திற்கு முறையீடு செய்தார். அங்கு, பாதிரியார் வெற்றி பெற்றார். செரோக்கீஸ்மீது திணிக்கப்பட்ட ஜார்ஜியா மாநில சட்டம் செல்லுபடியாகாதென்று அறிவிக்கப்பட்டது. பல காலமாக இந்தியப் பழங்குடியினரை வெறுத்து வந்த ஜாக்ஸன் தலைமைநீதிமன்றத்தின் தீர்ப்பை ஏற்க மறுத்தார்; செரோக்கீஸ் உரிமைகளை ஏற்றுக் கொள்ளாது அவர்களை மேற்குப்புற எல்லைப்பகுதிக்குக் குடி பெயரச் செய்தார். இதனால் இந்தியர்களோடு புளோரிடாவில் செமினோல் போரும் (The Seminole War *1835—1843*), வடமேற்கில் ஒரு போரும் (*1832*) நடைபெற்றது. இவற்றின் விளைவாக இந்தியப் பழங்குடியினரைக் கவனிக்க ஓர் அலுவலகம் ஏற்படுத்தப்பட்டது. அது சற்றேறக் குறைய ஒரு நூறு உடன்பாடுகளை இந்தியர்களோடு செய்து கொண்டது.

### பாங்கினை அழித்தல்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் பாங்கு காங்கிரஸால் *1816*ஆம் ஆண்டு ஒரு பட்டயதுடன் உருவாக்கப்பெற்றது. அப் பட்டயம் இருபது ஆண்டுக் காலத்திற்குத் தரப்பட்டிருந்தமையால் *1836*-ல் அது (புதுப்பிக்கப்படவேண்டியதாயிற்று. ஜாக்சன் பாங்கின் பட்டயத்தைப்) புதுப்பிக்கக் கூடாதென முடிவு செய்தார். வெகு நாள்களாக அவருக்குப் பாங்கின்மீது வெறுப்பு இருந்து வந்தது. பாங்கு ஒரு சில குறிப்பிட்ட கிழக்குப் பகுதி செல்வந்தர்களின் தனியுரிமையாக இருந்ததோடு அவர்களை மேன்மேலும் பணக்காரர்களாக்கவே பணியாற்றியது. இருப்பினும் மொத்தத்தில் நாட்டிற்கு நன்மையே ஏற்பட்டது. நிக்கலோஸ் பிடில் (Nicholas Biddle) என்பவரின் தலைமையில் சீரிய முறையில் இயங்கி வந்தது: ஆனால் நிக்கலோஸ் பிடில் தேர்தலில் ஜாக்ஸனுக்கு எதிராகச் செயலாற்றியிருந்தார். ஜாக்ஸன் இரண்டாவது முறையாகக் குடியரசுத் தலைவர் பதவிக்கு *1832* ஆம் ஆண்டுத் தேர்தலில் போட்டியிட நேரிட்டது. அத் தேர்தலில் நிக்கலோஸ் பிடில் பாங்கின் பட்டயத்தைப் புதுப்பிப்பதா வேண்டாமா என்ற கேள்வியினடிப்படையில் ஜாக்ஸனைப் போட்டியிட அறைகூவல் விடுத்தார். காங்கிரஸ் பாங்கின் பட்டயத்தைப் புதுப்பிக்கும் வகையில் ஒரு சட்டவரைவை இயற்றி, குடியரசுத் தலைவருடைய ஒப்புதலுக்கு அனுப்பியது. ஜாக்ஸன் தமது மறுப்பாணையை (veto) பயன்படுத்தி அச் சட்டவரைவைத் தள்ளுபடி செய்தார். இதற்குள் *1832*ஆம் ஆண்டுத் தேர்தலில் ஜாக்ஸன் மகத்தான வெற்றி பெற்று இரண்டாம் முறையாகக் குடியரசுத் தலைவர் பதவிக்கு வந்தார். இம் மாபெரும் வெற்றியை

மக்கள் தம்முடைய கொள்கைகளுக்குத் தந்த ஆதரவாக ஜாக்ஸன் விளக்கங் கூறினர். அமெரிக்க ஐக்கிய நாட்டின பாங்கியிலிருந்த அரசாங்க வைப்பு நிதியையெல்லாம் திரும்பப் பெற்று அவற்றை மாநில பாங்குகளில் சேமித்து வைத்தார். இச் செய்கையால் தானுக பாங்கு வீழ்ச்சியுற்றது.

## செல்லுபடியற்றதாக்கும் கோட்பாட்டின்மீதான விவாதம்

சில மாநிலங்கள் காங்கிரஸால் இயற்றப்பட்ட காப்புவரிச் சட்டங்களைச் செல்லுபடியற்றதாக்க முனைந்து செயல்பட்டன. 1828-லும் 1832-லும் இயற்றப்பட்ட காப்புவரிச்சட்டங்களின்படி தன் மாநில மக்கள் தங்களுக்கு வேண்டிய இறக்குமதிப் பொருள்களைக் காப்புவரியால் காக்கப்பட்ட வடகிழக்கு மாநிலங்களிலிருந்தே பெறவேண்டிய நியதி ஏற்பட்டது. இதனைத் தென் மாநிலங்கள் வெறுத்தன. அவர்கள் நேரடியாக இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்யப்படும் பருத்திக்குப் பண்ட மாற்றாக எளிய விலைக்குப் பொருள்களை இறக்குமதி செய்து கொள்ள விரும்பினர். ஆனால், அதற்குக் காப்புவரி சட்டங்கள் இடந்தரவில்லை. தென் கரோலினு மாநிலம் இதனைக் கண்டிக்க ஒரு மாநாட்டினைக் கூட்டியது. அம் மாநாட்டில் கூட்டாட்சி அரசின் அதிகாரத்தைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தென் கரோலினு மாநிலத்தைச் சேர்ந்த குடியரசுத் துணைத் தலைவர் ஜான் கான்ஹூன் (John C. Calhoun) இத்தீர்மானத்தை முன்னின்று நிறைவேற்றினர். மாநிலங்களுக்கே முழு அதிகாரம் உண்டு என்ற கொள்கையை உருவாக்கியவரும் அவரேயாவார். "மாநிலங்களெல்லாம் ஒன்றுகூடி கூட்டாட்சி அரசுக்கு அதிகாரங்களை வழங்கியுள்ளன. கூட்டாட்சி அரசு அவ்வதிகாரங்களை மீறிச் சட்டங்களை இயற்றினுல் அவற்றைச் செல்லுபடியாகாதவையென எடுத்துக்கூற மாநிலங்களுக்கு உரிமை உண்டு" என்று கால்ஹூன் சொன்னர். இதனடிப்படையில் 1832ஆம் ஆண்டு இயற்றப்பட்ட காப்புவரிச்சட்டம் தென்கரோலினு மாநிலத்தில் செல்லுபடியாகாதெனு அறிவிக்கப்பட்டது.

நாட்டின் தேசிய உணர்விற்கு ஊறுவிளைப்பதாகச் செல்லுபடியற்றதாக்கும் கோட்பாடு வளர்ந்து வருவதைக் கண்ட ஜாக்சன் சினங்கொண்டார். நாட்டின் ஒருமைப்பாட்டினைக் காக்கவும், காங்கிரஸின் அதிகாரத்தை நிலைப்படுத்தவும் உறுதி பூண்டார். தென் கரோலினுவை, படை வலிமை கொண்டு இணங்கச் செய்ய, காங்கிரசில் அடக்கியாளும் சட்டம் (Force Act) ஒன்றை இயற்றச் செய்தார். அதே நேரத்தில், ஜாக்சன் தென் கரோலினுவுக்கு விட்டுக் கொடுக்கும் வகையில் 1833ஆம் ஆண்டுக் காப்புவரிகளின் தொகையைக் கணிசமாகக் குறைத்தார். உடனே, தென் கரோலினு மாநிலமும் கூட்டாட்சி அரசுக்கு எதிராக நடத்திவந்த இயக்கத்தைக், கைவிட்டுப் புதிய காப்புவரிச் சட்டத்தை ஏற்றுக்கொண்டது. ஜாக்சன்

உறுதிப்பாட்டோடு செயலாற்றியமையால் கூட்டாட்சி அரசின் மதிப்பும் செல்வாக்கும் உயர்ந்ததோடு நாட்டின் ஒருமைப்பாடும் காப்பாற்றப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

**உள்நாட்டு முன்னேற்றம்**

உள்நாட்டுப் போக்குவரத்து முன்னேற்றத்திற்காகக் கூட்டாட்சி அரசு முன்வந்து நிதியுதவி செய்ய வேண்டுமெனச் சில ஆண்டுகளாகக் கருதப்பட்டது. மாடிசன் போன்ற முந்தைய குடியரசுத் தலைவர்கள் நாட்டினை ஒருங்கே இணைக்க சாலைகளும், கால்வாய்களும் அமைக்கப்பட வேண்டுமென வலியுறுத்தி வந்தனர். ஜான் குவின்சி ஆடம்ஸ் தமது ஆட்சிக்காலத்தில் உள்நாட்டு முன்னேற்றத்திற்காகக் கூட்டாட்சி அரசின் நிதியைப் பயன்படுத்த விரும்பியும் காங்கிரஸ் தடையாகக் குறுக்கே நின்றது. ஆனல் 1830ஆம் ஆண்டுக் காங்கிரஸ் கென்டக்கியில் லெக்சிங்டனிலிருந்து மேஸ்வில் வரை ஒரு சாலையமைக்க நிதியொதுக்கி ஒரு சட்டவரைவை இயற்றியது. அதற்கு மேஸ்வில் சாலை சட்டவரைவு (Maysville Road Bill) என்று பெயர். இந்த சாலையினை அமைக்க பங்குதாரர்கள் கொண்ட ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தவும் வழிவகை செய்யப்பட்டிருந்தது. ஜாக்சன் மேற்கு மாநிலத்தைச் சார்ந்தவராயிருந்த போதிலும் இந்தத் திட்டத்தை எதிர்த்தார். நியூயார்க், பென்சில்வேனியா போன்ற மாநிலங்களில் போக்குவரத்துக்கான வசதிகளை அந்தந்த மாநிலங்களே தங்களின் நிதியிலிருந்து செய்து கொண்டன. இதனை அம் மாநில உறுப்பினர்கள் எடுத்துக் கூறி கூட்டாட்சி அரசின் நிதியினை மாநில சாலை திட்டங்களுக்காகப் பயன்படுத்தக் கூடாதென ஜாக்சனிடம் முறையிட்டனர். அவரும், அதற்கிணங்க மேஸ்வில் சாலை சட்டவரைவிற்கு ஒப்புதல் தர மறுத்து விட்டார்.

மேஸ்வில் சாலை திட்டத்திற்கு ஒப்புதல் தர மறுத்தமைக்கு ஜாக்சன் விளக்கம் கூறினர். மேஸ்வில் சாலை ஒரு மாநிலத்தினுள் அமைக்கப்பட வேண்டிய சாலையாகும். எனவே, அதற்கான செலவுத் தொகையை அம் மாநில அரசே ஏற்றுக் கொள்ள வேண்டுமென்றார். அப்படி மாநிலங்களில் சாலைகளை அமைக்கக் கூட்டாட்சி அரசு பொறுப்பேற்க வேண்டுமானல் அதற்கேற்ப அரசியலமைப்பில் திருத்தங்களைக் கொண்டு வர வேண்டுமென்றும் ஜாக்சன் கூறினர். இதனல் மேற்கு மாநிலங்களில் ஜாக்சன் தமது செல்வாக்கினை இழந்தார். இருப்பினும் கிழக்கு, தெற்கு மாநிலங்கள் இவரின் முடிவை வரவேற்றன. இவரது முடிவு உள்நாட்டு முன்னேற்றத்தைப் பெரிதும் தடை செய்தது என்று சொல்வதற்கில்லை. இம் முடிவுக்கு மாருக ஜாக்சன் பல திட்டங்களுக்கு பின்னர் இசைவு தந்தார். ஜான் குவின்சி ஆடம்ஸ் முன்னேற்ற திட்டங்களுக்காகக் கூட்டாட்சி நிதியிலிருந்து $ 702,000 ஓர் ஆண்டில் செலவிட்டார்; ஆனல் ஜாக்சனே $ 1,323,000 ஓர் ஆண்டில் செலவிட்டிருந்தார்.

**பணவீக்கமும் மக்கள் பீதியும்-1837**

ஜாக்சனது இரண்டாவது பதவிக் காலத்தின் இறுதியில் திடீரென நாட்டில் பணப்புழக்கம் அதிகமாகி நாட்டின் செல்வ நிலையில் பெரும் முன்னேற்றம் காணப்பட்டது. அம் முன்னேற்றத்தின் அடிப் படையில் குறைபாடுகள் இருந்தமையால் விரைவில் நாட்டின் பொருளாதார நிலையில் மந்தம் ஏற்படலாயிற்று. இதற்கான காரணங்களுள் முதன்மையானது ஜாக்சன் அமெரிக்க ஐக்கிய நாட்டு பாங்கினை அழித்தமையாகும். கூட்டாட்சி அரசின் நிதியிருப்புகளைத் திரும்பப் பெற்று மாநில பாங்குகளில் சேமித்து வைத்தார். பாங்கினை மூடும்படி நேரிட்டமையால் அப் பாங்கு பொதுமக்களுக்கு அளித்திருந்த கடன்களைத் திருப்பிப்பெற வேண்டியதாயிற்று. மக்கள் தாங்கள் பெற்றகடன்களை அடைக்க மாநில பாங்குகளில் கடன் பெறலாயினர். இதனால் பணப் புழக்கத்தில் திடீரெனச் சுருக்கம் ஏற்பட்டது. இச் சுருக்கம் வணிகர்களைப் பெரிதும் பாதித்தது. இந் நிலையை மாற்ற மாநில பாங்குகள் சுறுசுறுப்புடன் இயங்கலாயின.

கூட்டாட்சி அரசின் நிதித்தொகை மாநில பாங்குகளில் வைக்கப் பட்டமையால் மாநில பாங்குகளின் ஆதார நிதி நிலைமை உறுதிப் படுத்தப்பட்டது. எனவே இப் பாங்குகள் வாணிக ஊகத்திற் கேற்றாற்போல (Speculation) தங்களது தொழிலைப் பெருக்கலாயின. கூட்டாட்சியின் பாங்கு இப்பொழுது இவைகளைக் கட்டுப்படுத்த இல்லாது போனமையால் இம் மாநில பாங்குகள் தங்களது விருப்பம் போல் காகிதப் பணத்தை அச்சிட்டுப் புழங்குமாறு செய்து வந்தன. 1829-ல் 329 மாநில பாங்குகளே இருந்தன. ஆனால், 1837-ல் 788-ஆக அவற்றின் எண்ணிக்கை உயர்ந்திருந்தது. அதேபோல அவ்வாண்டுகளுக்கிடையே காகிதப் பணப் புழக்கம் $ 48 மில்லியனி லிருந்து $ 149 மில்லியனாகவும் அளிக்கப்பட்ட கடன் தொகை $ 137 மில்லியனிலிருந்து $ 525 மில்லியனாகவும் உயர்ந்திருந்தது.

தெற்கு, மேற்கு மாநிலங்களில் இத்திடீர் செல்வப் பெருக்கைச் சிறப்புறக் காண முடிந்தது. மக்கள்தொகை பெருக்கத்தாலும், சாலைகளும் கால்வாய்களும் அமைக்கப்பட்டுப் போக்குவரத்து வசதிகள் பெருகியதாலும் நிலங்களின் விலை வெகு வேகமாக உயர்ந் தது. மக்களும் கடன்மேல் கடன் பெற்று நிலங்களை வாங்குவதில் ஆர்வங் கொண்டனர். மாநில அரசுகளும் வருங்கால முன்னேற் றத்தை மனதிற் கொண்டு சாலைகள் அமைக்கவும், கால்வாய்கள் வெட்டவும், இரயில் பாதைகள் போடவும் ஏராளமாகச் செலவிட்டன. இவற்றால் உடனடியாகப் பலனேதும் ஏற்படவில்லை. இவற்றிற் கெல்லாம் மாநிலப் பாங்குகள் பாதுகாப்பற்ற காகிதப் பணததை ஏராளமாக அச்சிட்டு வழங்கி வந்தன. வெளிநாட்டு நிதியாளர்களும் ஏராளமாக முதலீடு செய்யலாயினர்.

ஜாக்சனும் அவரது ஆலோசகர்களும் திடீர் செல்வப் பெருக்கைக் கண்டு நாட்டில் நிலவிய பணவீக்கத்தையும், பாதுகாப்

பற்ற காகிதப் பணத்தையும் கட்டுப்படுத்தும் வகையில் நாணய சுற்றறிக்கை (The SpecieCircular 1836) ஒன்றை வெளியிட்டனர். அதன்படி கூட்டாட்சி அரசுக்குச் சொந்தமான நிலங்களை விற்றுவந்த அலுவலகங்கள் விற்கப்படும் நிலத்திற்கான தொகையை நாணய மாகவே பெறவேண்டுமெனக் கட்டளை பிறப்பிக்கப்பட்டது. இதனால் காகிதப் பணத்தின் மதிப்புத் திடீரெனக் குறையலாயிற்று. வெளி நாட்டு நிதியாளர்கள் காகிதப் பணத்தைப் பெற மறுத்தனர். மாநில பாங்குகள் நாணயங்களைத் தர மறுத்தன; சில தங்களது கதவுகளை மூடின. இதனால் கடைகள் மூடப்பட்டன; தொழிற்சாலைகள் வேலைகளை நிறுத்தின; தொழிலாளர்கள் வேலையிழந்தனர்; நாட்டில் வேலை யில்லாத் திண்டாட்டம் பெருகிற்று. தென் மாநிலங்களில் பருத்தி யின் விலை குறைந்துபோய் வாங்குவாரற்றுத் தேங்கிக் கிடந்தது. இந் நிலையில் ஜாக்சனது இரண்டாவது பதவிக் காலம் முடிவுற்றது. சில ஆண்டுகள் கழித்து காங்கிரஸ் கருவூலச் சட்டம் (Independent Treasury Act 1840) ஒன்றை இயற்றி, கூட்டாட்சி அரசின் நிதியினைக் கவனித்துக் கொள்ள மாநிலந்தோறும் கருவூலங்களைத் தோற்று வித்தது. காகிதப் பணமும் கூட்டாட்சி அரசால் அச்சிடப்பட்டுப் புழக்கத்திற்குக் கொண்டு வரப்பட்டது. இவற்றால் நிதி நிலைமை ஓரளவு சீரடைந்தது.

### வெளிநாட்டுக் கொள்கை

ஜாக்சனது பதவிக்காலத்தில் வெளிநாட்டுறவில் சிறப்பான நிகழ்ச்சிகள் ஏதும் நிகழவில்லை. இருப்பினும் ஜாக்சன் சில நயமற்ற முறைகளைக் கையாண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு நன்மைகளைத் தேடித்தந்தார். பிரிட்டனுக்குத் தெரிவித்துவிட்டு பிரிட்டிஷ் மேற் கிந்தியத் தீவுகளுடன் நேர் தொடர்பு கொண்டு வாணிக உரிமைகளை அமெரிக்க வணிகர்களுக்குப் பெற்றுத் தந்தார். பிரெஞ்சுப் புரட்சியை அடுத்து நடைபெற்ற போர்களின்போது பிரான்சால் கைப்பற்றப் பட்ட அமெரிக்கக் கப்பல்களுக்கான இழப்பீடைத் தரும்படி ஜாக்சன் பிரெஞ்சு அரசைக் கேட்டார். முதலில் பிரெஞ்சு அரசு இழப்பீடு தர மறுத்தது. அதைக் கண்ட ஜாக்ஸன் அமெக்காவிலிருந்த பிரெஞ்சு உடைமைகளைக் கைப்பற்றத் தமக்கு உரிமையளிக்கும்படி காங்கிரஸை வேண்டினர். இதனையறிந்தபிரெஞ்சு அரசு உடனே இழப்பீடு அளித்தது. இப்படி மிரட்டல் வழி அரச தந்திரம் (Shirt Sleeve Diplomacy) மூலம் ஜாக்சன் அமெரிக்காவுக்குச் சில நன்மைகளைத் - தேடித் தந்தார். மெக்ஸிகோ அரசுக்குட்பட்ட டெக்சாஸ் (Texas) மாநிலத்தில் மெக்ஸிகோ அரசை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்தார்கள். மெக்ஸிகோ அரசு அமெரிக்க ஐக்கிய நாட்டின் நடுநிலைமைக் கொள்கையை நம்பவில்லை. அமெரிக்காதான் கலகக்காரர்களைத் தூண்டிவிட்டிருக்கக்கூடும் என ஐயப்பாடு எழுந்தது. இவ் ஐயப்பாடு பின்னர் உறுதியாயிற்று. டெக்சாஸைக்

கைப்பற்ற ஜாக்சன் திட்டமிடாவிட்டாலும் டெக்சாஸ் மாநிலத்தின் கிளர்ச்சியையும், பின்னர் அது மெக்ஸிகோவிலிருந்து பிரிந்து தனிக் குடியரசாகிய போதும் உடனே அமெரிக்க அரசின் ஒப்புதலைத் தெரிவித்தார்.

## ஆட்சி முறையில் குடியாட்சித் தத்துவங்கள்

ஜாக்சன் வெற்றிபெற்றுப் பதவியேற்றதும் தம் கட்சியின் ஆதரவாளர்க்குப் பதவி ஆதாயம் வழங்கும் வழக்கத்தைக் (Spoils system) கடைப்பிடித்தார். ஆட்சித்துறையில் செயலாற்ற கல்வியறிவோ, நெடுநாளையப் பயிற்சியோ தேவையில்லை என ஜாக்சன் கருதினர். ஆட்சித்துறையில் கிழக்கு மாநிலத்தவர்களது உரிமைக்குரலை ஒடுக்க உறுதி பூண்டார். அலுவலகங்களின் பணியாளர்களைப் பல ஆண்டுகள் வேலையிலிருக்கச் செய்வதன்மூலம் அவர்கள் தொண்டுமனப் பான்மையை இழக்கின்றனர் என்றும், சட்ட திட்டங்களுக்கு அடிமையாகி விடுகின்றனர் என்றும், எனவே அவர்களை மாற்றவேண்டுமென்றும் ஜாக்சன் கூறினர். ஆட்சித் துறையில் உயர்பதவிகளை வெற்றி பெற்ற கட்சியின் ஆதரவாளருக்கு அளிக்கும் பழக்கத்தைப் புகுத்தினர். இதனுல், ஆட்சித்துறைமீது ஒரு குறிப்பிட்ட கூட்டத்தினரது கட்டுப்பாட்டினைத் தகர்த்தெறிய முடிந்தது. இம் மாற்றங்களோடு பதவிவகிக்க சமயத்தகுதியும், சொத்துரிமைத் தகுதியும் நீக்கப்பட்டது. இம் மாற்றங்களின் விளைவாக வாக்குரிமை பெறுவதற்கிருந்த சொத்துரிமைத் தகுதியும் நீக்கப்பட்டது. வயது வந்த ஆண்கள் அனைவரும் வாக்குரிமை பெற்றனர்.

## ஜாக்சன் ஆற்றிய தொண்டு

ஜாக்சன் நிருவாகத்துறைக்கு ஓர் உயரிய இடத்தைப் பெற்றுத் தந்தமை அவராற்றிய பணிகளுள் தலையாயதாகும். இன்றைக்கு அமெரிக்கக் குடியரசுத் தலைவரது பதவி எவ்வளவு சிறப்புடையதாக அமைந்துள்ளதோ அதற்கான அடிப்படையை நிறுவிய பெருமை ஜாக்சனையே சாரும். வாஷிங்டனும், ஜெபர்சனும் குடியரசுத் தலைவர்களாகப் பணியாற்றியபோது அவர்களுக்குப் பெரும் மதிப்பு அளிக்கப்பட்டது. ஆனல், அம் மதிப்பு தனிப்பட்ட தலைவர்கள் என்ற முறையில் அவர்களுக்கு அளிக்கப்பட்டதேயொழிய அவர்களது பதவிக்காக அன்று. மாடிசன் ஆட்சிக் காலத்திலெல்லாம் காங்கிரசே அரசின் அதிகாரம் மிக்க அங்கமாக நினைத்துப் பணியாற்றியது. ஆனல், ஜாக்சன் பதவிக் காலத்தில் காங்கிரஸ் பெற்றிருந்த உயரிய இடத்தை ஜாக்சன் கைப்பற்றி குடியரசுத்தலைவரது பதவிக்கு அரசியலமைப்பில் உயரிய இடத்தைப் பெற்றுத் தந்தார். தம்முடைய உறுதிப்பாட்டாலும், அதிகார மனப்பான்மை கொண்ட உள்ளப்பாங்காலும், மக்களது ஆதரவாலும், குடியரசுத் தலைவர் பதவியினை வலிமை மிக்கதோர் அங்கமாக உருவாக்கினர். மக்களால்

நேரடியாக முதலாவதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவர் என்ற முறையில், தம்மை மக்களின் பிரதிநிதியாக ஜாக்சன் பெருமையுடன் கருதினார். குடியரசுத் தலைவருக்கிருந்த தள்ளுரிமை அதிகாரத்தையும் அதிக அளவில் அவர் பயன் படுத்தினார். அவருக்கு முன்பிருந்த ஆறு குடியரசுத் தலைவர்களும் ஒன்பது முறைதான் தள்ளுரிமை அதிகாரத்தைப் பயன்படுத்தியிருந்தனர். ஆனால் ஜாக்சனோ தமது இரண்டு பதவிக் காலத்தில் பன்னிரண்டு முறை அவ்வதிகாரத்தைக் கையாண்டிருந்தார். பொதுமக்கள் குடியாட்சியில் கொண்டிருந்த பேரார்வத்திற்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வலிமைக்கும் ஜாக்சன் சின்னமாக விளங்கினார்.

அமெரிக்க ஐக்கிய நாட்டு பாங்கினை அழிக்க ஜாக்சன் கையாண்ட முறைகளைக் கண்ட காங்கிரஸ், குடியரசுத்தலைவரை வெகுவாகக் கண்டித்தது. கூட்டாட்சி அரசின் வைப்புநிதியினை அகற்ற அவருக்கு அதிகாரம் கிடையாது என ஒரு தீர்மானத்தை செனட் இயற்றியது. ஆனால், ஜாக்சனோ அதற்குத் தகுந்தாற்போல உரிய விடையளித்துத் குடியரசுத் தலைவரின் அதிகாரங்களுக்குப் புதிய விளக்கம் தந்தார். பல நாள்களுக்குச் செனட்டில் குடியரசுத் தலைவருடைய அதிகாரங்கள் மீது விவாதம் நடந்தது. ஜாக்சன் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட அரசரெனவும், வெறுக்கத்தக்க, பொறுப்பற்ற கேடு விளைவிக்கக்கூடிய கொடுங்கோலன் எனவும், ஆட்சித் துறையின் எல்லாப் பிரிவுகளிலும் தலையிடுகிறார் எனவும் பலர் பலவாறு குற்றம் சாட்டினர். உறுப்பினர்கள் மிகைப்படுத்தியே பேசியிருந்தனர். ஆனால், குடியரசுத் தலைவரது பதவி உயரியதொன்றாக மாற்றியமைக்கப்பட்டது மறுக்க முடியாத ஒன்றாகும்

# 15. தேசிய உணர்வின் ஆரம்பம்

1812ஆம் ஆண்டுப் போருக்குப் பின் அமெரிக்க ஐக்கிய நாட்டின குடிமக்கள் தங்களது வெற்றி குறித்துப் பெருமிதத்துடன் ஒற்றுமையோடு இருந்தனர். நாட்டின் முன்னேற்றத்தில் கண்ணுங்கருத்துமாய் ஈடுபடலாயினர். ஆனால் இந்நிலை ஏறத்தாழப் பத்து ஆண்டுகளே நீடித்தது. தேசிய ஒற்றுமையின் வளர்ச்சி மிக மெதுவாகவே இருந்தது. இடையிடையே பிரிவினைச் சக்திகளும், வட்டார உணர்வும் தலைதூக்கியமையால் நாட்டின் ஒற்றுமையை நிலவுவதில் பல இடர்ப்பாடுகள் தோன்றின.

கெண்ட் உடன்படிக்கையை அடுத்த சில ஆண்டுகளுக்குக் கட்சிகளின் அடிப்படையிலான அரசியல் வழக்கிலிருந்து ஒழிந்திருந்தது. எனவே அரசியலிலும் பூசல்களும், பிரிவினைகளும் இல்லாதிருந்தன. அதனால்தான் அவ்வாண்டுகளை நல்லுறவு காலம் என்றழைத்தனர். கூட்டாட்சிவாதிகள் அரசியலில் செல்வாக்கிழந்து வலிமையற்றவர்களாக இருந்தபோதிலும் அவர்கள் வகுத்துச் சென்றுவிட்டிருந்த பல கொள்கைகளை அவர்களுக்குப் பின்னர் வந்த குடியரசுக் கட்சியினர் பின்பற்றினர். தேசிய உணர்வைக் குடிமக்கள் பெறுவதற்காக வலிமை மிக்க மைய ஆட்சியைக் கூட்டாட்சிவாதிகள் நிறுவுவதில் ஓரளவு வெற்றி கண்டனர். குடியரசுக் கட்சியினர் வலிமை மிக்க மைய ஆட்சியை வெறுத்தனர். ஆனால், ஜெபர்சன் காலத்தில் அவர்கள் பதவிக்கு வந்தபோது நாட்டின் நலன்கருதி கூட்டாட்சிவாதிகள் உருவாக்கிவிட்டுச் சென்றிருந்த அதே கொள்கைகளைக் கடைப்பிடித்தனர். அமெரிக்க ஐக்கிய நாட்டினை வலிமை மிக்க நாடாக்குவதிலும், பொருளாதாரத்தில் பிற நாடுகளின் உதவியின்றித் தனித்துத் தன்னிறைவு பெறவும், தேசிய ஒற்றுமையை நிறுவுவதிலும், பிரிவினைச் சக்திகளை ஒழிப்பதிலும் குடியரசுக் கட்சியினர் நாட்டங் கொண்டனர். கூட்டாட்சிவாதிகள் நாட்டினைத் தொழில்மயமாக்குவதில் ஆர்வங்காட்டினர். இதனால்

வேளாண்மையின் முன்னேற்றம் தடைபடுகிறதென எதிர்க்கட்சியினர் கூறினர். ஆனால், கூட்டாட்சிவாதிகள் அப்படி நினைக்கவில்லை. ஆலைத்தொழிலும், வேளாண்மையும் ஒன்றுக்கொன்று உதவுகின்ற வகையில் முன்னேற வேண்டும் என்பதே அவர்கள் கொள்கை. பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் வகையில் இரண்டாவது பாங்கும் நிறுவப்பட்டது. அமெரிக்க ஆலைத்தொழிலை 'வெளிநாட்டுப் போட்டியினின்றும் காப்பதற்காகக் காப்புவரிகளும் விதிக்கப்பட்டன. உள்நாட்டு முன்னேற்றத்திற்காகச் சாலைகள் அமைக்கவும், கால்வாய்கள் வெட்டவும் கூட்டாட்சி அரசு பணம் செலவழித்தது.

## தொழிற் புரட்சி

1812ஆம் ஆண்டுப் போருக்குப் பின் அமெரிக்க ஐக்கிய நாட்டில் தோன்றிய தேசிய உணர்வு வெறும் மெய்ப்பாட்டுணர்வின் (sentiment) அடிப்படையில் தோன்றியதாகக் கொள்ளக் கூடாது. அது புதிய பொருளாதார நிலைமைகளையும் அடிப்படையாகக் கொண்டிருந்தது. அப் புதிய பொருளாதார நிலைமைகள், இங்கிலாந்தில் ஏற்பட்டு, பின்னர் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும், பிறநாடுகளுக்கும் பரவிய தொழிற்புரட்சியை ஒட்டியே உருவாகியிருந்தன. மனிதனே எல்லாத் தொழில்களையும் தன் கையால் செய்வது என்பது மாறி, இயந்திரங்கள் அவற்றைச், செய்வது என்ற முறை ஏற்பட்டது. வீடுகளிலிருந்த தொழிற்கூடங்கள் மறைந்து பெருமளவிலான ஆலைத்தொழிற்கூடங்கள் ஏற்பட்டன. இத்தகைய மாற்றங்களையே 'தொழிற்புரட்சி' என்றழைக்கின்றோம்.

தொழிற்புரட்சி முதலாவதாக நெசவுத்தொழிலில் மாற்றங்களைக் கொண்டு வந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் பல புதிய கண்டுபிடிப்புகளால் துணி உற்பத்தியில் மாபெரும் மாற்றங்கள் ஏற்பட்டன. ஜேம்ஸ் ஹார்க்ரீவ்ஸ் (James Hargreaves) கண்டுபிடித்த நூற்பு இயந்திரமும், கார்ட்ரைட் (Cart wright) அமைத்த விசைத்தறியும் துணி உற்பத்தியைப் பன்மடங்காகப் பெருக்கின. இவ்வியந்திரங்களை இயக்குவதற்கு முதலில் நீர்விசை மட்டுமே பயன்படுத்தப்பட்டது. எனவே, தொழிற்சாலைகள் ஆரம்பத்தில் நீரோடைகளுக்கருகில் அமைக்கப்பட்டன. ஆனால், நீர்விசை எப்போதும் ஒரே அளவாகக் கிடைப்பது அரிதாயிருந்தது. கோடைகாலத்தில் இல்லாமலும் போயிற்று. இந்த இடர்ப்பாடுகளை நீக்க நீராவிச் சக்தியைப் பயன்படுத்தும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. சுரங்கவேலைக்கும், செய்பொருள் உற்பத்திக்கும், தேவையான தொழில், முறைகளுக்கும் பயன்படுமாறு ஜேம்ஸ்வாட் (James Watt) ஒரு நீராவி இயந்திரத்தைக் கண்டுபிடித்தார். இக் கண்டுபிடிப்புகளால் புதுத் தொழில்கள் பல தோன்றின. பரந்த தொழிற்பட்டணங்களும் தோன்றலாயின.

துணி உற்பத்தியில் ஏற்பட்ட மேற்கூறிய மாற்றங்கள் அனைத்தும் இங்கிலாந்தில் ஏற்பட்டவையாகும், ஆனால், நூல் நூற்பதற்கு வேண்டிய பஞ்சைப்பருத்தியினின்று பிரித்தெடுக்கும் பஞ்சு இயந்திரம் (Cotton gin) அமெரிக்காவில் எலிவிட்னி (Eli Whitney) என்பவரால் 1793ஆம் ஆண்டுக் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த ஒரு கண்டுபிடிப்பைத் தவிர ஏனையவையெல்லாம் பிரிட்டிஷாரால் மட்டுமே கண்டுபிடிக்கப்பட்டிருந்தன. இப் புதிய இயந்திரங்களைப் பிற நாட்டார் அறிந்து கொள்ளாது இருக்க அவற்றின் ஏற்றுமதியை பிரிட்டிஷ் அரசு தடை செய்தது. தொழிலாளர்கள் நாட்டைவிட்டு வெளியேறுவதையும், இயந்திரங்களின் வரைபடங்கள் அனுப்பப் படுவதையும் பிரிட்டன் கட்டுப்படுத்தியது. எனவே துவக்கத்தில் பிரிட்டன் புதிய கண்டுபிடிப்புகளின் மீது தனியுரிமை கொண்டாடிற்று. அதற்கேற்றாற்போல் பிரிட்டனில் ஏராளமான மூலதனமும், தொழிலாளர்களும், இரும்பும், நிலக்கரியும் இருந்தன. மற்றும் கச்சாப்பொருள்களை அளிக்கவும், செய்பொருள்களை வாங்கவும் பிரிட்டன் எண்ணிறந்த குடியேற்ற நாடுகளைப் பெற்றிருந்தது. ஆகவே ஆரம்ப காலத்தில் பிரிட்டிஷ் ஆலைஅதிபர்கள் பிறநாட்டுப் போட்டிகளின்றித் தனியுரிமை கொண்டாட முடிந்தது.

### அமெரிக்காவில் தொழிற்புரட்சி

அமெரிக்க உரிமைப்போரின்போது பொருள்களை உற்பத்தி செய்வதில் அமெரிக்கரிடையே ஊக்கம் பிறந்தது. ஆனால் அடுத்த கால் நூற்றாண்டுக்கு அதிக முன்னேற்றம் ஏற்படவில்லை. போதிய மூலதனம் இன்மையும், தொழிலாளர்கள் அதிக ஊதியம் கேட்டமையாலும் அமெரிக்க உற்பத்தியாளர்கள் ஆர்வமில்லாதிருந்தனர். உரிமைபெற்ற பின் பல ஆண்டுகள் பிரிட்டிஷார் கையே ஓங்கியிருந்தது. மேலும் அமெரிக்கர் வேளாண்மையில் தங்களது கவனத்தை அதிகம் செலுத்தினர். பிரெஞ்சுப் புரட்சியின்போது ஐரோப்பாவில் அமெரிக்க உணவுப் பொருள்களுக்கு அதிகத் தேவை இருந்தது. மலிவான விலையில் நிலம் ஏராளமாகக் கிடைத்தமையால் பலர் விவசாயத்தில் ஆர்வத்தோடு ஈடுபட்டனர். எனவே, விவசாயத் துறையில் சிறந்த முன்னேற்றமிருந்தது. செய்பொருள்கள் பெருமளவில் இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. இந் நிலை 1812ஆம் ஆண்டுப்போரின் விளைவாக மாற ஆரம்பித்தது.

### உள்நாட்டுத் தொழிலுக்கு ஊக்கம்

பிரிட்டன், அமெரிக்கத் துறைமுகங்களை முற்றுகையிட்டமையாலும்,அமெரிக்க அரசு ஏற்றுமதிதடைச் சட்டத்தை இயற்றியமையாலும், பின்னர் அமெரிக்க அரசு உறவின்மைக் கொள்கையைப் பின்பற்றியதாலும்,ஐரோப்பாவுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் இடையே வாணிகம் பெரிதும் தடைப்பட்டது. செய்பொருள்களை

இறக்குமதி செய்வது முற்றிலும் நிறுத்தப்பட்டது. அதனை ஈடுகட்ட அமெரிக்க ஐக்கிய நாட்டிலேயே பொருள் உற்பத்தி செய்ய உற்பத்தி யாளர்கள் மும்முரமாக ஈடுபடலாயினர். வேளாண்மைப்பொருள் களின் ஏற்றுமதியும் கணிசமாகக் குறைந்தது. அதனால் வேளாண்மைத் தொழிலிலும் மந்த நிலைமை ஏற்பட்டது. எனவே பணம்படைத்தோர் செய்தொழிலில் ஈடுபடலாயினர். நாட்டு மக்களுக்குத் தேவையான அன்றாடப் பொருள்களைச் செய்ய ஆங்காங்கே சிறு தொழிற்சாலைகள் தோன்றின. அயல்நாட்டு சரக்குகளின் இறக்குமதி தடை செய்யப்பட்டிருந்தமையால் நாட்டினுள் செய்யப்பட்ட பொருள்கள் நன்கு விற்பனையாயின. வேளாண்மையைக் காட்டிலும் பொருள்கள் உற்பத்தியில் அதிக ஊதியம் கிடைப்பதைக் கண்ட பெரு நிலக்கிழார்களும் சிறு தொழில் களில் தங்களது செல்வத்தை முதலீடு செய்யலாயினர்.

## தொழிற்சாலை முறையின் தோற்றம்

பிலடெல்பியாவில் 1775-லிருந்தே நூற்பு இயந்திரம் இயங்கி வந்தது. மசாசூசெட்ஸில், பிவர்லி (Beverly) என்னுமிடத்தில் 1787-ல் பஞ்சாலை நிறுவப்பட்டது. ரோடு ஐலண்டில் சாமுவேல் ஸ்லேட்டர் (Samuel Slater) என்பவர் நெசவாலை ஒன்றை நிறுவினர். அதில் புதிய நெசவுக்கருவிகளைப் பயன்படுத்தியிருந்தார். ஸ்லேட்டர் ஏற்கனவே இங்கிலாந்தில் ரிச்சர்டு ஆர்க்ரைட் (Richard Arkwright) என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட நீர்ச்சட்டத்தைக் (Water frame) கண்டறிந்தவர். அமெரிக்காவிற்கு வந்த ஸ்லேட்டர் அந்த இயந்திரத்தின் அமைப்பை நினைவிலிருந்து அப்படியே உருவாக்கிப் பயன்படுத்தலானர். பிரான்சிஸ் லோவெல் (Francis C. Lowell) என்பவர் 1814ஆம் ஆண்டு விசைத்தறியை அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குக் கொண்டு வந்தார். அவர் மசாசூசெட்ஸில் வால்தம் (Waltham) என்னுமிடத்தில் இயந்திரங்கள் கொண்டு ஒரே இடத்தில் நூற்புத் தொழிலையும், நெசவுத்தொழிலையும் நடத்தினர். இதுவே தொழிற்சாலையின் தோற்றமெனக் கொள்ளலாம். இதனை யொட்டி நியூஇங்கிலாந்தில் விரைவில் பலவகையானப் பொருள் களைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன. நியூ இங்கி லாந்தில் நீர் விசையும், மூலதனமும் பெருமளவில் கிடைத்தமையால் தொழிற்சாலைகள் நிறுவுவது எளிதாயிருந்தது. வடக்கு மாநிலங் களிலும், மத்திய மாநிலங்களிலும் தொழிற்சாலைகள் தோன்றின. பென்சில்வேனியாவில் நிலக்கரியும், இரும்பும் ஏராளமாகக் கிடைத்தன.

## குடியரசுக் கட்சி தேசிய உணர்வை வலுப்படுத்தல்

கூட்டாட்சிவாதிகள் கொண்டிருந்த பல அடிப்படைக் கொள்கை களைக் குடியரசுக் கட்சியினர் மேற்கொண்டனர். ஆகவே, கூட்டாட்சி

வாதிகள் செய்வதறியாது குடியரசுக் கட்சியினர் ஆரம்பத்தில் கொண்டிருந்த பிற்போக்கான கொள்கைகளைப் பின்பற்றலாயினர். மாநில உரிமைகளுக்காகவும், வலிமை பொருந்திய மைய ஆட்சிக்கு எதிராகவும், கூட்டாட்சிவாதிகள் இயங்கலாயினர். அதற்கு மாறாகக் குடியரசுக் கட்சியினர் கூட்டாட்சி அரசின் அதிகாரங்களைக் கூட்டவும், தேசியஉணர்வை நாட்டுப்பற்றுணர்வோடு இணைக்கவும் முயன்றனர்.

குடியரசுக் கட்சியினருள் ஒரு சிறுபான்மையினர் பழமை வாதிகளாகவே இருந்தனர். பழைய மாநில உரிமைக் கோட்பாட்டினை யும், தேசிய உணர்வின் இயக்கத்திற்கு மாறாகவும் அவர்கள் வாதிட்ட னர். அவர்களைப் பழைய கோட்பாட்டினர் என்றழைத்தனர். ஜான் டெய்லர் (John Taylor) ஜான் ராண்டால்ப் (John Randolph) ஆகியோர் அப் பிரிவில் இருந்தனர். தேசிய உணர்வு கொண்டவர்கள்தான் குடியரசுக்கட்சியில் பெரும்பான்மையராயிருந்தனர். அவர்களை யெல்லாம் இளைய குடியரசுவாதிகள் என்றழைத்தனர். ஏனெனில் அவர்களின் தலைவர்களாய் இருந்த கிளே (Clay), கால்ஹுன் (Calhoun) ஆகியோரெல்லாம் இளம்வயதினராயிருந்தனர். குடியரசுக் கட்சியின் பழமைவாதிகள் கூட்டாட்சிவாதிகளோடு சேர்ந்துகொண்டு தேசியபாங்குக் கொள்கைக்கு எதிராகவும், காப்புவரி திட்டத்திற்கு மாறாகவும், உள்நாட்டு முன்னேற்றத் திட்டங்களை எதிர்த்தும் வாக்களிக்கலாயினர்.

### அமெரிக்க அமைப்பு முறை (American System)

தேசியத் திட்டங்களுக்காக தேசியப் பற்றுணர்வோடு வாதாடியவ ஹென்றி கிளே ஆவார். அவர் வர்ஜீனியா மாநிலத்தைச் சார்ந்த ஒரு சிறந்த வழக்குரைஞராவார். கென்டக்கி மாநில சட்டமன்றத்தில் உறுப்பினராகவும், பின்பு சட்டமன்றத் தலைவராகவும், காங்கிரஸின் பிரதிநிதிகள்சபையின் உறுப்பினராகவும், செனட் சபையின் உறுப்பினராகவும், பணியாற்றியிருந்தார். கெண்ட் உடன் படிக்கையைத் தீட்டுவதிலும் பொறுப்பேற்றிருந்தார். ஜான் குவின்சி ஆடம்ஸ் குடியரசுத் தலைவராகப் பணியாற்றியபோது வெளி நாட்டுறவு அமைச்சராயிருந்தார். இப்படிச் சிறந்த அனுபவம் பெற் றிருந்த கிளேயின் திட்டங்களை வயது முதிர்ந்த முன்னாள் குடியரசுத் தலைவர்களான மாடிசன், மன்ரோ ஆகியோர் ஐயப்பாட்டுடனேயே நோக்கினர். முன்பு அலெக்சாண்டர் ஹாமில்டன் கடைப்பிடித்த அதே கொள்கைகளைத்தான் இப்பொழுது கிளே பின்பற்றினார். ஹாமில்டன் சமூகத்தில் உயர்வகுப்பாரிடையேமட்டும் தமது திட்டங் களுக்கு ஆதரவு தேடினார். ஆனால், கிளே, அமெரிக்க மக்கள் அனைவரின் ஆதரவையும் வேண்டினார். வேளாண்மையிலீடுபட்டிருந்த தெற்கு மேற்கு மாநில மக்களின் ஒத்துழைப்போடு தேசியத்தன்மை வாய்ந்த திட்டங்களை உருவாக்கினார். அதற்கு 'அமெரிக்க அமைப்பு முறை' என்று பெயர் சூட்டப்பட்டது. தென் கரோலினாவைச் சார்ந்த ஜான்

கால்ஹூனும் கிளேவுக்குப் பெரும் ஆதரவாக இருந்தார். முன்பு வணிகர்களின் நலத்தைப் பாதுகாத்த, கூட்டாட்சிவாதிகளின் முதுகெலும்பெனத் திகழ்ந்த நியூ இங்கிலாந்து இப்பொழுது குறுகிய வகுப்புணர்ச்சியோடு தேசிய திட்டங்களை எதிர்க்கலாயிற்று. அதன் தலைவராக டேனியல் வெப்ஸ்டர் (Damiel Webster) என்பவர் காங்கிரஸில் கிளேயின் திட்டங்களைக் கடுமையாக எதிர்த்து வாதாடினர்.

### நாட்டு இராணுவத்தை வலுப்படுத்தல்

1812ஆம் ஆண்டுப் போரினுல் ஒரு சிறந்த பாடத்தை அமெரிக்கர் கற்றிருந்தனர். நாட்டுப்பாதுகாப்புமுறையிலிருந்த குறைகள் நன்கு வெளிப்பட்டன. வெளிநாட்டு எதிரிகளின் தாக்குதலினின்று நாட்டைக் காக்கவும், எல்லைப்புறங்களிலிருந்த எதிரிகளின் தாக்குதலைத் தகர்த்தெறியவும் வலிமை மிக்க இராணுவம் இன்றியமையாதது என்பதை உணர்ந்தனர். ஒரு பெரிய படை நாட்டிற்குத் தேவையில்லை என்ற குடியரசுகட்சியினரது பழைய கொள்கை முற்றிலும் தவறானதென்பதும் தெளிவாயிற்று. வலிமை மிக்கப் படை, மக்களது உரிமைகளைப் பறிக்கும் வகையில், ஆட்சிப் பொறுப்பிலுள்ளோரால் பயன்படுத்தப்பெறும் எனத் தொன்று தொட்டு இருந்து வந்த அச்சம் இப்பொது அகன்றுவிட்டது. அந்த அச்சத்திற்கு மாருக அமெரிக்கரின் உரிமைகளைப் பாதுகாக்கத் திறமை வாய்ந்த படை கட்டாயம் தேவை என்ற நிலை ஏற்பட்டுவிட்டது. இதனையுணர்ந்த மாடிசன் காங்கிரஸின் இசைவோடு 10, 000 வீரர் கொண்ட ஒரு நிலையான படையைக் கூட்டினர். ஜேக்கப் பிரவுன் (Jacob Brown) என்பவரை வடபகுதி தளகர்த்தராகவும், ஆன்ட்ரூ ஜாக்சனைத் தென்பகுதி தளகர்த்தராகவும் நியமித்தார். கடற்கரையோரப் பகுதிகளின் பாதுகாப்புக்காக கரையோரக் காவல் படை வலுப்படுத்தப்பட்டது. போர்க்கப்பல்கள் சில கட்டப்பட்டன. காங்கிரஸும் தாராளமாக நிதியொதுக்க முன்வந்தது. தேசிய தலைவர்கள் நாட்டின் எல்லைபுறக் காவல் நிலையங்களையும், குடியிருப்புகளையும் பாதுகாப்பதில் அதிகம் கவனம் செலுத்தியமை குறிப்பிட்டதாகும்.

### தேசியத்தன்மை வாய்ந்த நடவடிக்கைகள்

**(1) இரண்டாவது பாங்கு நிறுவப்படல்** - ஹாமில்டனுல் தோற்றுவிக்கப்பட்ட பாங்கின் பட்டயம் 1811- ல் முடிவுற்றது. அதனை காங்கிரஸ் புதுப்பிக்காது விடவே மாநிலங்களில் பாங்குகள் பல தோன்றின. 1811 ஆம் ஆண்டு 88 பாங்குகளே இருந்தன ; 1816 - ல் அவற்றின் எண்ணிக்கை 246 ஆக உயர்ந்தது. இவற்றின் கட்டுப்பாடற்ற நடவடிக்கைகளால் நாட்டின் நிதி நிலைமை பெருங்குழப்பத்திலிருந்தது. எனவே, நாட்டில் நிலவிய பண

வீக்கத்தைக் கட்டுப்படுத்தவும், முறையற்ற பாங்கு நடவடிக்கைகளை ஒடுக்கவும் இரண்டாவது அமெரிக்க ஐக்கிய நாட்டு பாங்கினை உருவாக்குவதற்கான பட்டயத்தை, காங்கிரஸில் இயற்றுவதற்காக கிளேவும், கால்ஹுனும் பெரு முயற்சி செய்து வெற்றி கண்டனர். அதற்கான மூலதனத்தில் ஐந்தில் ஒரு பங்கைக் கூட்டாட்சி அரசு செலுத்திற்று. எஞ்சிய ஐந்தில் நான்கு பங்கினை 31,000 பேர் முன் வந்து அளித்தனர். இந்த இரண்டாவது பாங்கு அமைப்பிலும் வேலையிலும் ஹாமில்டனால் தோற்றுவிக்கப்பட்ட முதல் பாங்கு போலவே இருந்தது. ஆனால், முதல் பாங்கின் மூலதனம் பத்து மில்லியன் டாலராக இருந்தது. ஆனால், இரண்டாவது பாங்கின் மூலதனம் முப்பத்தைந்து மில்லியன் டாலராக உயர்ந்திருந்தது. இரண்டாவது பாங்கு பணத்தாளை அச்சிட்டு வழங்கியமையால் மாநில பாங்குகளின் பணத்தாள் கட்டுப்படுத்தப்பட்டு உரிய மதிப்புடன் புழக்கத்திலிருந்தன.

**(2) காப்புவரிகள் விதித்தல்** - ஹாமில்டன் 1791-ல் பரிந்துரைத்து ஏற்றுக் கொள்ளப்படாத அதே காப்புவரிதிட்டத்தை இப்பொழுது குடியரசுக் கட்சியிலிருந்த இளந்தலைவர்கள் செயற் படுத்தினர். 1812ஆம் ஆண்டுப் போரின் விளைவாக. உள்நாட்டி லேயே பலவகைப் பொருள்கள் உற்பத்தி செய்யப்படலாயின. நியூ இங்கிலாந்தில் தொழிற்சாலைகள் பல நிறுவப்பட்டன. போர் முடிவுற்றதும் உற்பத்தியாளர்கள் பிரிட்டிஷ் வணிகர்களின் போட்டியி லிருந்து தங்களைக் காத்தருள கூட்டாட்சி அரசை வேண்டினர். மேற்கு மாநிலங்களில் வாழ்ந்த குடியானவர்களும் தாங்கள் விளைவித்த பொருள்களுக்குப் பாதுகாப்பு அளிக்குமாறு வேண்டினர். அவர்களது வேண்டுகோளுகிணங்க காங்கிரஸ் 1816-ல் காப்பு வரிகளை விதித்தது. இறக்குமதி செய்யப்படும் பருத்தி, கம்பளத்துணிகள்மீது அதிக மாக வரி விதிக்கப்பட்டது. இக் காப்பு வரிகளை டேனியல் வெப்ஸ்டர் கடுமையாக எதிர்த்தார். புதிய இங்கிலாந்தைச் சார்ந்த கப்பல் வணிகர்களின் தலைவராகத் திகழ்ந்தார். இக் காப்புவரிகளால் கப்பல் போக்குவரத்துக் குறையுமென அவர்கள் அஞ்சினர். ஆனால் கால்ஹுன் தீவிரமாகக் காப்புவரித் திட்டத்தை ஆதரித்தார். சில ஆண்டுகளில் தெற்கு மாநிலங்களிலும் உற்பத்திப் பெருக்கம் ஏற்படு மென்றும், பிற பகுதிகளில் ஏற்படும் தொழிற்சாலைகளால் தென் மாநில உணவுப்பொருள்களுக்குத் தேவை ஏற்படுமென்றும் கால்ஹுன் நம்பினர். ஆனால், வியக்கத்தக்க முறையில்பத்தொன்ப தாம் நூற்றுண்டின் இறுதியில் கால்ஹுனும், வெப்ஸ்டரும் தங்களது கொள்கைகளைத் தலைகீழாக மாற்றிக் கொண்டனர்.

**உள்நாட்டுச் சீர்திருத்தத் திட்டங்கள்**

அமெரிக்க ஐக்கிய நாட்டில் தேசிய உணர்வும், ஒற்றுமையும் வேறு சில தேசியத் திட்டங்களாலும் நன்கு வெளிப்படுத்தப்பட்டது.

1812ஆம் ஆண்டுப் போரின் போது போதிய நல்ல சாலைகள் நாட்டில் இல்லாமையின் குறைபாட்டைப் பலரும் உணர்ந்தனர். அதனால், இராணுவ நடவடிக்கைகள் பெரிதும் பாதிக்கப்பட்டன. அலெகனி மலைக்கப்பாலுள்ள பகுதியில் ஏராளமானபேர் போய்க் குடியேறி யிருந்தனர். அவர்கள் தங்களது செய்பொருள்களை விற்பனைக்கு எடுத்துச் செல்ல மிசிசிபியையும் அதன் துணையாறுகளையும் நம்பி யிருந்தனர். எனவே, அப்பகுதி மக்களெல்லாம் மேற்குப் பகுதியை யும் கிழக்குப் பகுதியையும் இணைக்கும் வகையில் சீரான சாலைகளை யும், கால்வாய்களையும் அமைக்கும்படிக் கேட்கலாயினர்.

முதல் தேசிய சாலை நிறுவுவதற்காக காங்கிரஸ் 1806-லேயே நிதியுதவி அளித்தது. அச் சாலைக்குக் கம்பர்லாந்து சாலை என்று பெயர். பின்வந்த ஆண்டுகளில் காங்கிரஸ் மேன்மேலும் நிதியுதவி யளித்துக் கம்பர்லாந்து சாலையை மிசிசிபி ஆறுவரை நீட்டித்தது. 1817 - ல் மேலும் பல தேசிய சாலைகளை அமைக்கவும், கால்வாய் களை வெட்டவும், கால்ஹுன் போன்ற தீவிரவாதிகள் $81,500,000நிதி யுதவியளிக்கும் வகையில் ஒரு மிகையூதிய சட்டவரைவை (Bonus Bill) இயற்றினர். ஆனால், அதனைக் குடியரசுத் தலைவர் மாடிசன் தள்ளுபடி செய்துவிட்டார். சாலைகள் அமைக்கவும் கால்வாய்கள் வெட்டவும் பணம் செலவிட கூட்டாட்சி அரசுக்கு அரசியலமைப்பில் அதிகாரம் தரப்படவில்லையென மாடிசன் காரணம் கூறினர். இதனைக் கண்டித்து கால்ஹுன் உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாட்டின்படி கூட்டாட்சி அரசுக்கு மேற்கூறிய பணிகளுக்குப் பணம் செலவிட உரிமையுண்டு என வாதாடினர். ஏனெனில் "நாட்டுப் பாதுகாப்புக்காகவும், மக்களின் பொதுநலனுக்காகவும், வரிகளை விதிக்க காங்கிரஸிற்கு அரசியலமைப்பு உரிமை தந்துள்ளது. நாட்டுப் பாதுகாப்புக்காப்பிற்கும், மக்களின் பொதுநலனுக்கும் சீரிய முறையில் போக்குவரத்து வசதியளிக்க சாலைகளும், கால்வாய்களும் இன்றியமையாதவை. எனவே அவற்றிற்காக நிதியொதுக்க காங்கிரஸிற்கு உரிமையுண்டு" எனத் திறம்பட கால்ஹுன் எடுத்துரைத்தார்.

இப்படிக் குடியரசுத்தலைவருக்கும், காங்கிரஸ் உறுப்பினர் களுக்குமிடையே,கருத்து வேறுபாடு தோன்றவே பல மாநில அரசு களும், தல ஆட்சி மன்றங்களும், நிதியாளர்களும் தாங்களே பணம் செலவழித்துச் சாலைகள் அமைத்தனர்; கால்வாய்கள் வெட்டினர். அவற்றுள் குறிப்பிடத்தக்கது ஈரி கால்வாயாகும் (Erie canal). இக் கால்வாய் நியூயார்க் மாநிலத்தில் டிவிட் (De Witt) என்பவர் ஆளுநராயிருந்தபோது வெட்டப்பட்டது. 1817ஆம் ஆண்டு வேலை ஆரம்பிக்கப்பட்டு 1825ஆம் ஆண்டு முடிவுற்றது. ஈரி கால்வாய் அதே பெயர் கொண்ட ஏரியையும் கிழக்கே அட்லாண்டிக் பெருங் கடலோடு சேரும் ஹட்ஸன் ஆற்றையும் இணைத்தது. இதனால்

அட்லாண்டிக் கரையோரத்திலிருந்து ஐம்பெரும் ஏரிகள் வரை ஒரு பெருவழி அமைந்தது இதனால், பண்டமேற்றிச் செல்வதற்கானக் கட்டணத்தொகை 80 சதவீதம் குறைந்தது. ஐம்பெரும் ஏரிகளை யொட்டி பவல்லோ (Buffalo), கிளீவ்லண்ட் (Cleveland), டெட்ராய்ட் (Detroit ) ஆகிய நகரங்கள் முக்கியத்துவம் பெறலாயின. ஈரி கால்வாயின் கரையிலிருந்த ரோச்செஸ்டர் (Rochester) என்னும் நகரத்தில் பல மாவு ஆலைகள் (Flour-mills) தோன்றின. இக்கால்வாயைப் போலவே பல முக்கியமான கால்வாய்கள் வெட்டப்பட்டன. வெல்லண்டு கால்வாய் (Welland Canal), ஒண்டோரியோ ஏரியையும் (Lake Ontario) ஈரி ஏரியையும் இணைத்தது. இது கனடாவால் வெட்டப்பட்டது. மிச்சிகன் மாநிலத்தால் சூ கால்வாய் (Soo Canal) வெட்டப்பட்டது.

## தேசிய உணர்வை வளர்ப்பதில் நீதித்துறையின் பங்கு

காங்கிரஸில் 1812ஆம் ஆண்டுப்போருக்குப் பின் காணப்பட்ட தேசிய உணர்ச்சியானது, நீதித்துறையாலும் தீவிரமாகப் பேணி வளர்க்கப்பட்டது. ஹென்றி கிளே, பொருளாதார அடிப்படையிலான தேசியத் திட்டங்களை உருவாக்கி அமெரிக்க ஐக்கிய நாட்டை வலிமை மிக்கதாக்கப் பாடுபட்டார். அதேபோல் தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியான ஜான் மார்ஷலும் தமது தீர்ப்புக்களின்மூலம் தேசிய உணர்வை உறுதிப்படுத்த முயன்று வெற்றியும் பெற்றார்.

ஜான் மார்ஷல் வர்ஜீனியா மாநிலத்தில் 1755-ல் பிறந்தார். வில்லியம்மேரி கல்லூரியில் சட்டக்கல்வி பயின்று வழக்குரைஞரானார்; அமெரிக்கப் புரட்சியில் கலந்து கொண்டார்; வர்ஜீனியா மாநில சட்டமன்றத்தின் உறுப்பினராகவும், பின்னர் அரசியலமைப்பை ஏற்றுக்கொள்வது குறித்து வாதிட கூட்டப்பட்ட வர்ஜீனியா சிறப்பு மாநாட்டின் உறுப்பினராகவும் தொண்டாற்றினார். ஜார்ஜ் வாஷிங்டன், முதல் குடியரசுத் தலைவராகப் பணியேற்றபோது ஜான் மார்ஷலுக்கு நியாயத்துறைத் தலைவர் (Attorney - Ceneral ) பதவியை அளித்தார். ஆனால், மார்ஷல் அதனையேற்கவில்லை. பிரான்சுக்குச் சென்று அமெரிக்க அமைச்சராகப் பணி புரிய மறுத்த போது, x, y, z,— குழுவின் ஓர் உறுப்பினராக மார்ஷல் சென்று வந்தார்; பின்பு காங்கிரஸின் உறுப்பினராக 1799-1800-ல் பணி புரிந்தார். ஜான் ஆடம்ஸ் குடியரசுத் தலைவராக இருந்தபோது மார்ஷல் 1800 முதல் 1801வரை வெளிநாட்டுறவு அமைச்சராகத் திகழ்ந்தார். 1801ஆம் ஆண்டு தலைமைநீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்டார். அப் பதவியில் 1835-ல் இறக்கும் வரையில் மிகவும் சிறப்பான முறையில் பணியாற்றினார்.

ஜான்மார்ஷல் வர்ஜீனியா மாநிலத்தைச் சேர்ந்தவராயிருந்தும், தாமஸ் ஜெபர்சனின் நெருங்கிய உறவினராக இருந்தும் அவர்

ஹாமில்டனது கொள்கைகளையே பெரிதும் விரும்பி ஆதரித்தார் ; கூட்டாட்சிவாதிகளின் கொள்கையில் அழுத்தமான பற்றுடையவர். அவர் பதவியேற்றபோது கூட்டாட்சி நீதிமன்றம் வலிமையற்றதாய், மதிக்கப்படாமல் இருந்து வந்தது. இந் நிலையை மாற்றிப் கூட்டாட்சி நீதிமன்றத்தை ஆற்றலும், மேன்மையும் படைத்த ஒரு தீர்ப்புமன்றமாக மாற்றியமைத்த பெருமை ஜான் மார்ஷலையே சாரும். காங்கிரஸையும், குடியரசுத் தலைவரையும் காட்டிலும் மதிப்புமிக்க ஓர் அங்கமாக நீதித்துறையை அரசியலமைப்பில் மார்ஷல் இடம்பெறச்செய்தார். அவருடைய பழக்க வழக்கங்களிலும், நடத்தையிலும் மார்ஷல் தற்பெருமையற்றவராய்த் திகழ்ந்தார்; எல்லோரும் சம உரிமைகள் பெற வேண்டும் என்ற கொளிகையைக் கொண்டிருந்தார். இருப்பினும் நடைமுறையில் பாஸ்டனிலும், நியூயார்க்கிலும் வாழ்ந்த பெருவணிகர்களையே ஆதரித்தார். சிறந்த அறிவாற்றலோடு, நினைவிலிருந்து நீங்காதபடி அவர் தந்த தீர்ப்புகள் அவரது இரண்டு முக்கியமான கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டிருந்தன. அக் கொள்கைகளாவன (1) கூட்டாட்சி அரசுக்கே இறைமைத்தன்மை உரியது. (2) தனி நபரின் சொத்துப் புனிதத்தன்மை வாய்ந்தது

தலைமை நீதிபதியாகப் பணியாற்றியவர்களுள் ஜான் மார்ஷல் ஒரு சிறந்த நீதிபதியாவார். சட்டக்கலையில் சிறந்த அறிஞராகத் திகழாவிட்டாலும் தம்முடைய தெளிவான, வலிமைமிக்க வாதிடும் திறமையால் தலைமைநீதிமன்றத்தில் செல்வாக்கு மிக்கவராய்த் திகழ்ந்தார். அவர் தலைமைநீதிபதியாகப் பணியாற்றிய முப்பத்தைந்து ஆண்டுகளில் வழங்கப்பட்ட 1,106 தீர்ப்புகளில் ஜான் மார்ஷல் 519 தீர்ப்புக்களை எழுதினர் ; எட்டே முறைதான் சிறுபான்மை எண்ணிக்கையோடு தீர்ப்புக் கூறியிருந்தார். அவர் எழுதிய தீர்ப்புகள் எளிய நடையில் அமைந்திருந்த போதிலும் படிப்போரின் எண்ணத்தில் மறுக்க முடியாத உண்மை என்னும் முத்திரையைப் பெற்றன. அவற்றில் அவருடைய ஆழ்ந்த அறிவையும், ஆராய்ச்சித் திறனையும் நன்கு காணலாம். தம்முடைய தீர்ப்புகளில் அவர் வழக்கமாகத் தர்க்கரீதியில் முதலில் வாதத்திற்குரிய கருத்துகளை நிறுவுவார் ; பின்னர் ஐயப்பாட்டிற்குரியவைகளை வாதிட்டு எதிர்ப்பவர்களைத் தகர்த்தெறிவார்; இறுதியில் பொருத்தமான மேற்கோள்களோடும், எடுத்துக்காட்டுக்களோடும் தம்மூடைய முடியான தீர்ப்பைக் கூறுவார்.

தலைமைநீதிமன்றத்தில் தன்னிகரில்லாத் தலைவராய்த் திகழ்ந்த மார்ஷல் ஒற்றுமை உணர்ச்சியை வளர்த்து நீதிபதிகள் இடையே கருத்து வேற்றுமைகள் இல்லாமற் செய்து சிறப்புற நீதித்துறையை நடத்தினர். அவர் ஒரு சிறந்த நீதிபதி மட்டுமல்லர் ; திறமைவாய்ந்த ஆசியல் மேதையுமாவார். அவரது பதவிக்காலத்தில் ஏறத்தாழ ஐம்பது வழக்குகள் அரசியலமைப்பைச் சார்ந்தவையாக இருந்தன.

அவை அனேகமாக எல்லா அங்கங்களோடும் சம்பந்தப்பட்டவை யாயிருந்தன. அவ்வழக்குகளையெல்லாம் தமது முதிர்ச்சி பெற்ற அரசியல்தத்துவத்தினடிப் படையில் சிறப்புறத் தீர்த்து வைத்தார். எனவே, அவருடைய நீண்ட பதவிக்காலம் முடிவுற்றபோது நாடு முழுவதும் நீதிமன்றங்கள் அரசியலமைப்பினுக்கு விளக்கங்கண்ட போது, பெரும்பாலும் மார்ஷலின் விளக்கம் பெற்றதாகவே இருந்தது. அவர் தம்முடைய தெள்ளறிவினால் அரசியலமைப்பைப் புது அச்சில் வார்த்துக் கொடுத்ததாகக் கருதினால் அது மிகையாகாது.

## கூட்டாட்சி நீதிமன்றத்தின் கீர்த்தியை நிலைநாட்டல்

ஜான் மார்ஷலின் பதவிக் காலத்தில்தான் தலைமைநீதி மன்றத்திற்கே உரித்தான நீதிமறுஆய்வு (Judicial Review) அதிகாரம் உறுதியாக நிலைநாட்டப்பட்டது. அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட சிக்கல்களையெல்லாம் தீர்த்து வைக்கும் பொறுப்பு தலைமைநீதிமன்றத்தைச் சார்ந்திருந்தது. கூட்டாட்சிக் காங்கிரசும், மாநிலச் சட்டமன்றங்களும் இயற்றும் சட்டங்கள் அரசியலமைப்பு நெறிக்கு உட்பட்டனவா அல்லது புறம்பானவையா என்று கூறும் அதிகாரம் தலைமைநீதிமன்றத்திற்கு உண்டு. இதனையே நீதிமறுஆய்வு என்பர். ஆனால், ஒரு சட்டம் இயற்றப் பட்டவுடன் அஃது அரசியலமைப்பு நெறிக்கு உட்பட்டதா, முரணானதா என்பதை உடனே கூறும் கடமை தலைமைநீதிமன்றத்திற்குக் கிடையாது. இயற்றப்படும் சட்டங்கள் அனைத்தும் மறுபரிசீலனை செய்கின்ற இரண்டாம் மன்றமாகவும் தலைமைநீதிமன்றம் அமையாது. சட்ட மன்றங்களால் இயற்றப்படும் சட்டங்களின் நுணுக்கங்களை யாராவது அதன் பார்வைக்குக் கொண்டு வந்தால் நீதிமன்றம் பரிசீலனை செய்யும். அரசியலமைப்பிற்கு உட்பட்டு நாட்டின் சட்டதிட்டங்கள் உள்ளனவா என்பதைத் தலைமை நீதிமன்றம் சீர்தூக்கிப் பார்க்கும். இப் பணியை ஒருசிலவழக்குகளின் மூலம் கண்டறியலாம்

## மார்பரிக்கு எதிராக மாடிசன் (Marbury Vs. Madison) 1803

மார்பரிக்கு எதிராக மாடிசன் நடத்திய வழக்கில் 'காங்கிரஸிற்கு கூட்டாட்சி நீதிமன்றங்களின் வேலைகளையும், சட்ட ஆட்சி எல்லையை (Jurisdiction ) வரையறுக்கவும் அதிகாரம் கிடையா'தெனத் தலைமை நீதிபதி தீர்ப்புக் கூறினார். 'சிறப்பாக அரசியலமைப்புக்கு விளக்கம் காணும் பணி முழுக்கமுழுக்க தலைமை நீதிமன்றம் ஒன்றுக்கே உரியதாகும் என்றும், சட்டமன்றங்கள் இயற்றும் சட்டங்களை மறு பரிசீலனை செய்ய உரிமை உண்'டென்றும் ஜான் மார்ஷல் ஆணித்தர மாகக் கூறினார்.

**பிளெச்சருக்கு எதிராக பெக் (Fletcher vs. Peck) 1810**

பிளெச்சருக்கு எதிராக பெக் நடத்திய வழக்கில் தலைமை நீதிமன்றம் ஜார்ஜியா மாநில சட்டமன்றத்தில் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தை அரசியலமைப்பிற்கு முரணானதெனத் தள்ளுபடி செய்தது. ஜார்ஜியா சட்டமன்றத்தால் 1795-ல் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி நிலம் விற்கப்பட்டது. அதே சட்ட மன்றம், நிலம் விற்கப் பட்டதில் ஊழல்கள் இருந்தமையால் 1796-ல் சட்டப்படி விற்ற நிலங்களை எடுத்துக் கொள்ள ஒரு சட்டம் இயற்றியது. இதனால் பாதிக்கப்பட்டவர்கள் இவ்வழக்கைத் தலைமைநீதிமன்றத் திற்குக் கொண்டு வந்தனர். 'ஏற்கனவே ஒப்பந்தப்படி மாற்றிக் கொள்ளப்பட்ட சொத்துரிமையை, ஜார்ஜியா சட்டமன்றம். மற்றொரு சட்டத்தின் மூலம் பறிப்பது அரசியலமைப்பில் சொத்துரிமைக்கு அளிக்கப்பட்ட உத்தரவாதத்திற்கு நேர்மாறாக உள்ளது' என்று மார்ஷல் தீர்ப்புக்கூறி அச் சட்டத்தைத் தள்ளுபடி செய்தார்.

**மார்ட்டினுக்கு எதிராக ஹண்டரின் குத்தகைக்காரர் (Martin vs. Hunter' s Lessee) :** 1816 : மார்ட்டினுக்கு எதிராக ஹண்டரின் குத்தகைக்காரர் நடத்திய;வழக்கில் தலைமை நீதிமன்றம், கீழ் நீதி மன்றங்களில் தரும் தீர்ப்புக்கள் அரசியலமைப்புக்கு முரணாக அமைந்தால் அத் தீர்ப்புகளைத் தள்ளுபடி செய்ய உரிமை உண்டென்ற நியதியை நிறுவிற்று. இவ்வழக்கில் வர்ஜீனியா மாநிலம் ஓர் அயலாருக்கு முதலில் விற்ற நிலத்தைப் பின்னர்ப் பறித்துக் கொண்டது. இதனைத் தலைமைநீதிமன்றம் கண்டித்து 1813-ல் தீர்ப்பு வழங்கிற்று. ஆனால், வர்ஜீனியா மாநிலம் அத் தீர்ப்பை ஏற்க மறுத்தது. எனவே 1816 - ல் தலைமைநீதிமன்றம் மீண்டும் வர்ஜீனியாவைக் கண்டித்து இத் தீர்ப்பை வழங்கிற்று. இப்படிக்கீழ் நீதிமன்றங்களிலிருந்துவரும் தீர்ப்புகளையெல்லாம் ஒரு முகப் படுத்தவும் தலைமைநீதிமன்றத்தின் ஒரு பணியாகும்.

**கூட்டாட்சி அரசின் இறைமையை வலியுறுத்தல்**

தேசிய உணர்வு வளர்ந்துவந்த அந்நாளில் கூட்டாட்சி அரசின் அதிகாரமும், பணிகளும், பொறுப்புகளும் பெருகிக் கொண்டே யிருந்தன. கூட்டாட்சி அரசின் இப் புதிய நிலையை உறுதிப்படுத்து வதில் ஜான் மார்ஷலும் தமது பணியைச் செவ்வனே செய்தார். கூட்டாட்சி அரசின் சட்டங்களையும், மாநில சட்டங்களையும் மறு பரிசீலனை செய்யும்போது தலைமைநீதிமன்றம் "உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாட்டினை" ஏற்றுக்கொண்டு கூட்டாட்சி அரசு அதன் அதிகாரங்களைச் செவ்வையாகப் பயன்படுத்த உதவிற்று.

**மேக்குலோக்கு எதிராக மேரிலண்டு (McCulloch vs. Maryland)** 1816 : மேக்குலோக்கு எதிராக மேரிலண்டு நடத்திய வழக்கில் தலைமைநீதிமன்றம் கூட்டரசுக்கு ஆதரவான முறையில் தீர்ப்பு

அளித்தது. சட்டமன்றம் இரண்டாவது அமரிக்க ஐக்கிய நாட்டு பாங்கினை நிறுவ ஒரு பட்டயத்தை வழங்கிற்று. அதன்படி பாங்கின் கிளை ஒன்றுமேரிலண்டிலுள்ள பால்ட்டிமோர் என்னுமிடத்தில் நிறுவப்பட்டது. மேரிலண்டு மாநிலம் அக் கிளையின்மீது வரிகளை விதித்தது. பாங்கு வரி செலுத்த மறுக்கவே வழக்கு தொடரப்பட்டு இறுதியில் தலைமைநீதிமன்றத்துக்கு வந்தது. கூட்டாட்சி அரசுக்கு பாங்குகளைத் துவக்கும் அதிகாரத்தை வெளிப்படையாக அரசியலமைப்பு வழங்கவில்லையென்றாலும், காங்கிரஸ் (ஒரு பாங்கினைத் துவக்க உள்ளடங்கிய அதிகாரத்தை பெற்றுள்ளது எனத் தலைமை நீதிமன்றம் கருதியது; ஏனெனில் காங்கிரஸ்) வரிகள் திரட்டலாம், கடன்பெறலாம், அதற்காக அதிகாரத்தைச் செலுத்தலாம் என்ற அரசியலமைப்பின் விதி, இச் செயலுக்குப் போதிய ஆதாரமாகும் எனத் தலைமைநீதிமன்றம் விளக்கங்கூறிற்று.

**கிப்பனுக்கு எதிராக ஆக்டன் (Gibbons vs. Ogden 1824):** கிப்பனுக்கு எதிராக ஆக்டன் தொடர்ந்த வழக்கில் மார்ஷல் பரந்த செயல்விளைவுடைய ஒரு தீர்ப்பை வழங்கினர். ‘நாட்டில் பல்வேறு மாநிலங்களுக்கிடையே நடைபெறும் வாணிகத்தைக் கட்டுப்படுத்த சட்டமன்றத்திற்கே அதிகாரம் உண்டு’ என்று கூறினர்; மற்றும், ‘போக்குவரத்துக்குப் பயன்படும் ஆறுகளைக் கட்டுப்படுத்த மாநில அரசுகளுக்கு உரிமையில்லை’ என்றும் கூறினர். நியூயார்க் துறைமுகத்தைப் பராமரிப்பது குறித்து அதனைப் பகிர்ந்துகொண்ட நியூயார்க், நியூஜெர்ஸி மாநிலங்களிடையே கருத்து வேறுபாடு தோன்றிற்று. அதன் பேரில், இவ்வழக்கு தொடரப்பட்டது. அதன் பேரில், மார்ஷல் ‘நாட்டின்வாணிகத்தைப் பெருக்குவதற்கான துறைமுகங்களையும், நீர்நிலைகளையும் கட்டுப்படுத்தும் அதிகாரம் கூட்டாட்சி அரசையே சாரும்’ எனத் தீர்ப்பு கூறினர். இத் தீர்ப்பு மாநில உரிமைகளைப் பெரிதாகக் கொண்டவர்களுக்குப் பெரும் ஏமாற்றத்தைத் தந்தது.

**சொத்துரிமைக்குப் பாதுகாத்தளித்தல்**

பல மாநிலங்களில் தீவிரக்கருத்துகளைக் கொண்ட மக்களாட்சிக் கட்சியினர் பெரும்பான்மையோடு இருந்தனர். தனிப்பட்ட நபர்களின் சொத்துரிமைக்கு ஊறுவிளைவிக்கக் கூடிய வகையில் சட்டங்கள் இயற்றப்படுவதை மார்ஷல் கூர்ந்து ஆராய்ந்தார். சொத்துரிமையைக் காக்கும் வகையில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த சில தீர்ப்புக்களை மார்ஷல் வழங்கினர்.

**டார்ட்மவுத் கல்லூரிக்கு எதிராக உட்வார்டு (Dartmouth College vs. Woodward)** *1819 :* அமெரிக்க உரிமைப்போருக்கு முன்பே, நியூஹாம்ப்ஷர் குடியேற்றஅரசு டார்ட்மவுத் கல்லூரிக்கு ஒரு பட்டயத்தை வழங்கியிருந்தது. திடீரென 1819-ல் நியூஹாம்ப்ஷயர் அரசு டார்ட்மவுத் கல்லூரியை ஒரு மாநில நிறுவனமாக மாற்றி

யமைப்பதற்காக முன்பு அளிக்கப்பட்ட பட்டயத்தைத் திரும்பப்பெற ஒரு சட்டத்தை இயற்றியது. இதனை டார்மவுத் கல்லூரி எதிர்த்து வழக்குத் தொடர்ந்தது. அவ்வழக்கில், 'முன்பு அளிக்கப்பட்ட பட்டயம் ஒரு ஒப்பந்தத்திற்கு சமம் என்றும், அதனை ஹாம்ப்ஷயர் மாநிலம் மீறுவது தவறு,' என்றும் மார்ஷல் தீர்ப்புக் கூறினர். இத் தீர்ப்பின் அடிப்படையில் பின்னர் வர்த்தக நிறுவனங்கள் (Corporations) தங்களை நன்கு பாதுகாத்துக் கொண்டன,

**கிரெய்குக்கு எதிராக மிஸௌரி** (Craig vs. Missouri) 1830-கிரெய்குக்கு எதிராக மிஸௌரி நடத்திய வழக்கில், நிதியாளர்களுக்குப் பங்கம் விளைவிக்கக் கூடியதாகவும், நாட்டில் பணவீக்கத்தை உண்டு பண்ணக்கூடியதாகவும் மிஸௌரி சட்டமன்றம் இயற்றிய ஒரு சட்டத்தை மார்ஷல் செல்லுபடியாகாதெனத் தள்ளுபடி செய்தார்.

இப்படி, பலவகையிலும் மார்ஷல் கூட்டாட்சி அரசுக்கு வலிமை பூட்டி அதை உயிருள்ள, வளரும் ஒரு நிறுவனமாக மாற்றியமைத்தார். காவல் பணியை (Police Power) அரசுபின்னர் மேற்கொண்ட போது சொத்துரிமையும், ஒப்பந்தங்களையும் கட்டுப்படுத்தும் வகையில் பல சட்டங்கள் மார்ஷல் மறைந்த பிறகு இயற்றப்படுவதைத் தலைமைநீதிமன்றம் அனுமதித்தது. தேசிய அடிப்படையில் அரசியலமைப்புக்கு மார்ஷல் விளக்கங் கண்டார். அஃது அவர் அமெரிக்கக் கூட்டாட்சி அமைப்புமுறைக்கு ஆற்றிவிட்டுச்சென்ற அழியாத பணியாகும்.

நல்லுறவு காலத்தின்போது அமெரிக்க ஐக்கிய நாட்டின் தேசிய உணர்வை மக்களிடையே பரப்பிய பெருமை கிளே, மார்ஷல், மன்ரோ ஆகிய முப்பெரும் அரசியல் மெய்ஞ்ஞானிகளையே சாரும். கிளே தமது அமெரிக்கஅமைப்புமுறையின்மூலம் பொருளாதாரத்தில் தேசிய உணர்வை உருவாக்கினர். மார்ஷல் மறக்கமுடியாத தமது தீர்ப்புகளின்மூலம் வலிமைபொருந்திய தேசிய அரசை நிறுவினர். மன்ரோ வெளிநாட்டுறவில் தேசியக் கொள்கையொன்றை அமைத்துத் தந்தார். இவ்வகையில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் உரிமையும், பாதுகாப்பும் ஆணித்தரமாக நிறுவப்பட்டது.

# 16. மேற்குநோக்கி விரிவடைதல்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் 1812 ஆம் ஆண்டுப் போரையடுத்த ஐம்பது ஆண்டுகளில் நிகழ்ந்த ஒரு மிக முக்கியமான நிகழ்ச்சி மேற்குப் பகுதியில் மக்கள் குடியேறுவதும், மேற்கு எல்லைப் புறத்தில் முன்னேற்றம் காண்பதுமாகும்; இவ்விரிவடைதல் காரணமாக உள்நாட்டிலும், வெளிநாட்டுறவிலும் பல சிக்கல்கள் தோன்றின. இதனால், மெக்ஸிகோவுடன் போர் மூண்டது; ஸ்பெயினுடனும் பிரிட்டனுடனும் மனத்தாங்கல் ஏற்பட்டது. எல்லாவற்றிற்கும் மேலாக இவ்விரிவால், பிரிவினைப் போக்கும், அடிமைமுறையைப் பற்றிய மாபெரும் சிக்கலும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் உடனடியாக உதித்தது.

**மேற்கு நோக்கிக் குடிபெயரக் காரணங்கள்**

(1) துணிச்சலான வீரமுடைய வாழ்க்கையை விரும்புவோர்க்கு எல்லைப்புறம் நல்லதொரு வாய்ப்பையளித்தது. இந்த எல்லைப்புறம் அமெரிக்கரது வாழ்க்கையையே உருவாக்கியது என்று சொன்னால் அது மிகையாகாது. மேற்கு எல்லைப்புறத்தில் மக்கள் தொகை நெருக்கமே கிடையாது. ஒரு சதுர மைலுக்கு ஆறுபேரே வாழ்ந்தனர். அங்கு வாழ்பவர்கள் காடுகளை அழித்து, நிலத்தைப் பக்குவப்படுத்தி வீடுகள் கட்டிவாழ்ந்தனர். அட்லாண்டிக் பெருங்கடல் பகுதியிலிருந்து ராக்கி மலைப்பகுதியை நோக்கி மக்கள் முன்னேறிச் செல்லுகையில் அவர்களுடைய குணங்களில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. அமெரிக்கச் சமூக முன்னேற்றத்தில் எல்லைப் பகுதி (Frontier) என்பது நாட்டுப்படத்திலுள்ள ஒரு கோடாகத் திகழாமல் அஃது ஒருவாழ்க்கைமுறையைக் (Frontier-life) குறிப்பிடுகிறது. மக்களிடையே தன்முயற்சியை ஊக்குவித்தது; அரசியலிலும் பொருளாதாரத் துறையிலும் குடியாட்சிக் கருத்துகளை வளர்த்தது; நடத்தையில் ஒரு வகையான முரட்டுத் தன்மையை உண்டாக்கிற்று; பழமையில் கொண்டிருந்த பற்று

முறிந்தது ; கூட்டாட்சி அரசிடம் மரியாதை ஏற்படுத்திய அதே நேரத்தில் தலஆட்சியைப் பொறுத்தமட்டில் சுயநிருணயத்தை உருவாக்கியது.

(2) மேற்கு எல்லைப்புறத்தில் செழிப்பான நிலம் மிக மலிவான விலைக்கு வாங்க மக்களுக்கு வாய்ப்பு இருந்தது. 1820-ல் ஓர் ஏக்கரின் விலை 1. 25 ஆக விளங்கிற்று. பழைய குடியேற்றங்களில் வாழ்ந்த விவசாயிகள் நிலப்பசி கொண்டிருந்த நேரத்தில் மக்கள் குடியேறாத நிலப்பகுதி கணக்கற்ற அளவில் மேற்குப்புறத்தில் இருந்தது. போரின்போது எல்லைப்பகுதிகளில் போர் புரிந்த வீரர்கள் அப் பகுதியின் மேன்மையினைக் கண்டு சென்று விளம்பரப் படுத்தினர். மக்கள் குடியேறாத செழிப்பான நிலம் வேளாண்மைக்கு மிகச் சிறப்புடையதாகும் என்பதனைப் பலரும் உணர்ந்தனர்.

(3) கிழக்குப் பகுதியில் வாழ்ந்த சமுதாயத்தினர் மக்களிடையே அரசியல், சமூக, சமய, பொருளாதார - நிலைகளில் வேறுபாட்டை ஏற்படுத்திக் காழ்ப்புணர்ச்சியை வளர்த்துவிட்டிருந்தனர். இவற்றிலிருந்து விடுபட்டு உரிமையோடு வாழ மக்கள் மேற்குப் பகுதிக்குக் குடிபெயரலாயினர். மேற்கிலிருந்த பொருளாதார வளமும் சிறந்த சமூக வாழ்நிலையும் மக்களைப் பெரிதும் கவர்ந்தன. 1812ஆம் ஆண்டுப் போரையடுத்து ஏற்பட்ட பொருளாதாரக் குலைவினால் மக்களுக்குச் சொல்லொணாத் துன்பமேற்பட்டது. புதிய சூழ்நிலைகளுக்கேற்பத் தங்களை மாற்றியமைத்துக் கொள்ள முடியாமல் திகைத்தனர். வெளிநாட்டு வாணிகத்தின்மீது அரசு பல கட்டுப்பாடுகளை விதிக்காமையால் வடபகுதியில் வாழ்ந்த கப்பல் உரிமையாளர்களும், வணிகர்களும் நொடித்துப் போயினர். மாலுமிகளும் கடல்கடந்த வாணிகத்தில் ஈடுபட்டிருந்த பிறரும் வேலையிழந்தனர். அப்பொழுதுதான் தோன்றியிருந்த தொழிற்சாலைகள் எல்லோருக்கும் வேலை வாய்ப்பை அளிக்கவில்லை. குறிப்பாகப் புதிய தொழிற்சாலைகளில் பெண்களும் சிறுவர்களுமே வேலைக்கு அமர்த்தப்பட்டனர். புதிய இங்கிலாந்து குடியானவர்களும் மலைப்பாங்கான நிலப்பகுதியை விட்டகன்று விளைச்சல்மிக்க மேற்குப் பகுதிக்குச் செல்ல விரும்பினர்.

(4) மேற்கு நோக்கிக் குடிபெயருவோரின் தொகை ஏராளமான அந்நியர்களின் வருகையாலும் அதிகரித்தது. ஐரோப்பாவில் நெப்போலியப் போர்களால் இன்னலுற்ற மக்கள் பலர்புதிய உலகிற்கு வந்தனர். அவர்களை மேற்கு எல்லைப்பகுதி கரம்நீட்டி வரவேற்றது.

(5) பழைய மாநிலங்களில் பொருளாதார வாய்ப்புகள் குன்றிய நேரத்தில் மேற்குப் பகுதி புதியபுதிய வாய்ப்புகளைத் தேடித்தந்தது. இந்தியப் பழங்குடியினர் வாழ்ந்த நிலப்பகுதிகளைச்

சிறிதுசிறிதாகக் கூட்டாட்சி அரசு வாங்கி அந்நிலங்களைப் புதிதாகக் குடிபெயருவோருக்கு அளித்தது. தென்மேற்கில் ஜாக்சன் பெற்ற வெற்றியாலும், வடமேற்கில் ஹாரிசன் பெற்ற வெற்றியாலும், இந்தியப் பூர்வீகக் குடியினர் அடக்கி ஒடுக்கப்பட்டனர். நாளடைவில் அப் பகுதியிலிருந்தும் விலகிப் போயினர். எனவே மக்கள் அச்சமின்றிக் குடியேறுவதற்கான நல்ல சூழ்நிலை உருவாகியிருந்தது.

(6) போக்குவரத்து வசதிகளும் நன்முறையில் அதிகரித்தமையால் புதுவழிக் காண்போர் மேற்குப் பகுதிக்கு எளிதில் செல்ல முடிந்தது. 1818ஆம் ஆண்டு, முதல்தேசியசாலை ஓகியோ நதி வரை அமைக்கப்பட்டது. எனவே, ஓகியோ மாநிலம்வரை மேற்கு நோக்கிச் செல்லுவது மிக எளிதாயிற்று. அதேசமயத்தில் நீராவிப் படகுகளும், புழக்கத்திற்கு வந்தன. ஓகியோ நதியில் 1811-லிருந்தே படகுகள் சென்றன. 1820-லிருந்தே மிசிசிபி ஆற்றிலும், அதன் கிளையாறுகளிலும் நீராவிப் படகுகள் சரக்குகளை ஏற்றிச் செல்லலாயின. ஈரிக்கால்வாய் வெட்டி முடிந்ததும் வடமேற்குப் பகுதிக்குக் குடியேறுபவர்கள் எளிதில் செல்ல முடிந்தது

### மூன்றுஎல்லைப்புறங்கள் (The Three Frontiers)

எல்லைப்புறம் என்று சொன்னால் பொதுவாக மேற்கு எல்லைதான் மனதில் தோன்றுகிறது. ஆனால், வரலாற்றின் துவக்கத்திலிருந்து கூர்ந்துநோக்கினால் மூன்று எல்லைப்புறங்களைக் காணலாம். அட்லாண்டிக் கரையோரப்பகுதி முதலில் எல்லையாக இருந்தது. பதின்மூன்று குடியேற்றங்களும் அங்கு நிறுவப்பெற்றன. நியூ இங்கிலாந்தின் மக்கள் தொகை பெருகவே முதல் எல்லையிலிருந்த மெயின் மாநிலத்துக்கு (Maine) நாற்பதாயிரம் பேர் குடிபெயர்ந்தனர். அவர்கள் வசித்த மெயின், உரிமைப்போருக்குப் பின்னர் ஒரு தலைமுறை காலத்திற்கு எல்லைப்பகுதியாக இருந்துவந்தது. இரண்டாவது எல்லைப்பகுதி அப்பலேச்சியன் (Appalachian) மலைப் பகுதியிலிருந்து உற்பத்தியாகிக் கிழக்கு நோக்கிப் பாயும் நதிகளின் மேட்டுநிலத்தில் இருந்தது. நிறுவப்பட்ட குடியேற்றங்களிலிருந்து மக்கள் நியூயார்க்கிற்கு மேற்கேயும், பென்சில்வேனியாவிலிருந்த வியோமிங் (Wyoming) பள்ளத்தாக்கிற்கும், பிட்ஸ்பர்க்கிற்கும், (Pittsburg) தென்னசியின் கிழக்குப் பகுதிக்கும், ஜார்ஜியாவின் மேட்டுநிலத்திற்கும் இடம் பெயர்ந்தனர். 1800ஆம் ஆண்டுக்குப் பிறகு மிசிசிபிநதிப் பள்ளத்தாக்கும், ஓகியோ நதிப் பள்ளத்தாக்கும் மூன்றாவது பெரிய எல்லைப்பகுதிகளாயின. இரண்டு மில்லியன் ஏக்கர் நிலத்தைக் காங்கிரஸிடமிருந்து பெற்ற ஓகியோ கம்பெனி நூற்றுக்கணக்காகக் குடிபெயர்ந்து செல்பவர்களைத் தன்பால் ஈர்த்தது. நில ஊக வாணிகஞ் செய்யும் மற்றொரு குழு சின்சினாட்டி (Cincinnati) என்ற பகுதியைக் குடிபெயர நிறுவிற்று. கெண்டக்கி

யிலும் தென்னசியிலும் திரள்திரளாக மக்கள் வந்து குடியேறிக் கொண்டேயிருந்தனர்.

வடமேற்கேயும் தென்மேற்கேயும் மக்கள் தொடர்ந்து குடியேறிக் கொண்டேயிருந்தனர். அப் பகுதிகளில் குடியேறிய மக்கள் ஆரம்பத்திலிருந்தே பெரும்பாலும் தங்களைத் தாங்களே ஆட்சிபுரிந்து கொள்பவர்களாக விளங்கினர். அட்லாண்டிக் கரையோரமான முதல் எல்லைப் பகுதிக்கும் ஐரோப்பாவுக்கும் இணைப்பு அதிகமாகவிருந்தது. இரண்டாவது எல்லைப்பகுதி, கரையோரக் குடியிருப்புகளோடு ஓரளவு தொடர்புற்றிருந்தது. ஆனல், மூன்ருவது எல்லைப்பகுதியான மிசிசிபி பள்ளத்தாக்கு தனித்தியங்கும் தன்மையைப் பெற்றிருந்ததோடு கிழக்குப் பகுதியோடு தொடர்புகொள்ளாது மேற்குப் பகுதியை நோக்கியே முன்னேறிற்று. உரிமைப்போர் முடிவுற்றதும் இருந்த பதின்மூன்று மாநிலங்களோடு 1821-க்குள் பின்வரும் மாநிலங்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக் கொள்ளப்பட்டன.

1792 கென்டக்கி
1796 தென்னசி
1803 ஒகியோ
1812 லூசியானு
1816 இந்தியானு
1817 மிசிசிபி
1818 இலினய்
1819 அலபாமா
1820 மெயின்
1821 மிஸுரி

**எல்லைப்புறக் குடியிருப்பாளர்கள்**

எல்லைப்புறத்தில் பலவகைப்பட்ட மக்கள் குடியேறினர் அவர்களை மூன்று நிலைகளில் மூன்று பிரிவினர்களாகத் தொகுக்கலாம். துவக்கத்தில் சென்ற முன்னேடிகள் வேடர்களும், கண்ணிப் பொறி முதலியன வைத்து மிருகங்களையும் பறவைகளையும் பிடிப்பவர்கள். இவர்கள் பெரும்பாலும் திருமணமாகாதவர்கள் ; முரட்டு வாழ்க்கையை நடத்துபவர்கள் ; கோடாரி, துப்பாக்கி, பொறி, மீன் பிடிக்கும் கண்ணி — ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் திறமை வாய்ந்தவர்கள் ; புதுப்பாதையைக் குறிப்பிட்டு அறிவதில் வல்லவர்கள் ; மண் குடிசைகள் அமைத்தும், மர வீடுகள் கட்டியும் வாழ்ந்த அவர்கள், சில பயிர்களைப் பயிர் செய்து மிகவும் இரங்கத் தக்க நிலையில் இருந்தனர். அவர்கள், செவ்விந்தியர்களோடு சண்டையிட்டு அவர்களை விரட்டியகற்றி அடுத்த கூட்டத்தார் முன்னேற வசதியளித்தனர். முன்னேடிகளில் இரண்டாம் வகையினர், வேட்டை

யாடியதோடு வேளாண்மைத் தொழிலிலும் ஈடுபட்டனர். அவர்கள் பல வசதிகள் கொண்ட மரத்தால் கட்டப்பட்ட வீடுகளில் வாழ்ந்தனர்; ஓடைநீரைப் பருகாமல் கிணறுவெட்டித் தூய ஊற்றுநீரை அருந்திஞர்கள். சுறுசுறுப்பான மக்கள் சுற்றிலுமிருந்த காடுகளை அழித்து விரைவில் தானியங்கள், பழவகைகள், காய்கறிகள் முதலியவற்றை விளைவிக்கக் கூடிய தோட்டங்களை அமைத்தனர். வேட்டையாடி மான் இறைச்சி, வான்கோழி முதலியன பெற்றும், மரக்கிளைகளிலிருந்து தேன்பெற்றும், ஓடைகளில் மீன்பிடித்தும் வீட்டில் மாடு, பன்றி முதலியன வளர்த்தும் அவர்கள் வாழ்வை வளமாக்கிக் கொண்டனர்; தங்களுடைய தனிமையையும் மறந்தனர். சற்று அதிகமாக ஊக்கமும் துணிச்சலும் கொண்டவர்கள் முதலில் மலிவான விலையில் மேற்குப் பகுதியில் ஏராளமான நிலத்தை வாங்கிஞர்கள். பின்னர் நில விலை உயர்ந்ததும் தக்க தருணம் பார்த்து விற்றுவிட்டு மேலும் மேற்கே நகர்ந்தார்கள். இவ்வாறு அவர்கள் மிக முக்கியமானவர்களான மூன்ருவது பிரிவினர் வந்து குடியேறுவதற்கான வசதிகளைச் செய்தளித்தனர். இறுதியாக எல்லைப்புறத்திற்குச் சென்று குடியேறிய மூன்ருவது வகையினருள் குடியானவர்களுக்கு மட்டுமல்லாமல் மருத்துவர்கள், வழக்குரைஞர்கள், (கடைக்காரர்கள், செய்தித்தாள்) ஆசிரியர்கள், சமயக் குருமார்கள் இயந்திர வேலையாள்கள், அரசியல்வாதிகள், நிலஊக வணிகர்கள் ஆகியோரும் அடங்கியிருந்தனர். சமூகத்தைச் சுறுசுறுப்பாக வளர்க்கக் கூடிய வசதிகள் அனைத்தையும் அவர்கள் பெற்றிருந்தனர். அவர்களுள் மிகவும் முக்கியமானவர் வேளாண்மைத் தொழிலை மேற்கொண்டவர் ஆவர். அவர்கள், தங்களது வாழ்நாள் முழுவதையும் அங்கேயே கழிப்பதெனத் திட்டமிட்டு வந்தனர். எனவே, ஆயுள் முழுவதும் தங்குவதற்காகச் செங்கல்லால் சீரான வீடுகளையும், பெரிய தானியக்களஞ்சியங்களையும், வேலித்தடுப்புகளையும் கட்டிக்கொண்டு வாழ்ந்தனர். உயர்தர எருதுகள் கொண்டு நிலத்தை நன்கு உழுது நல்ல விதைகளிட்டுச் சிறப்புறப் பயிர் செய்தார்கள். சிலர் மாவாலை, மரமறுக்கும் ஆலை, சாராயத் தயாரிப்புச் சாலை ஆகியவற்றையும் நிறுவினர். நல்ல சாலைகள் அமைத்து ஆலயம், கல்விக்கூடங்கள் முதலியனவும் கட்டினர். நாளாவட்டத்தில் பட்டணங்கள் தோன்றியதும் பாங்கு முதலாளிகளும், பெரிய வணிகர்களும், நில வணிகர்களும் பெரும் செல்வந்தர்களாயினர். சுருங்கக் கூறிஞல் இம் மூன்ருவது வகையான எல்லைப்புற மக்கள் அமெரிக்க நாகரிகத்தின் விளக்குநர்களாக விளங்கினர் எனலாம்.

**எல்லைப்புற வாழ்க்கையின் தன்மை**

புதிய மேற்குப் பகுதியில் பல்வகைப்பட்ட மக்கள் வாழ்ந்தனர். அவர்கள் எல்லோரிடத்தும் தனித்தன்மை, மக்களாட்சி மனப்பான்மை ஆகிய இரு சிறப்பான குணங்களைக் காணலாம். 1830-ல்

பாதிக்கு மேற்பட்ட அமெரிக்கர்கள் புதிய சூழ்நிலையில் பிறந்து வளர்ந்தமையால் அவர்களிடத்து ஐரோப்பிய மரபொழுக்கங்களைக் காண்பது அரியதாயிருந்தது. மேற்குப்புறத்தில் வாழ்ந்த மக்கள் தங்களது வாழ்க்கைக்குத் தங்களையே நம்பியிருந்தனர். துணிவு, ஆபத்து நேரத்தில் பதற்றமின்மை, சுயநம்பிக்கை, புதியது புனையும் திறன் ஆகிய நற்குணங்களையெல்லாம் அவர்களிடையே காண முடிந்தது. கடும்உழைப்பினை உட்கொண்ட தனித்தன்மை பொருந்திய எல்லைப்புறக் குடிமகன் சமூக உறவிலும் அரசியல் கோட்பாட்டிலும் மக்களாட்சி மனப்பான்மையுடனேயே வாழ்ந்தனர்.

எல்லைப்புறத்தில் சொத்துரிமை அடிப்படையில் உயர்வு தாழ்வு என்ற நிலை இல்லாமலிருந்தமையால் சமூகத்திலும், அரசியலிலும் சம நிலை மனப்பான்மை உருவாகியிருந்தது. பொருளாதார வாய்ப்புகளிலும் சமஉரிமை அனைவருக்கும் கிடைத்தமையால் தானாக சமூகத்திலும், அரசியலிலும் சமத்துவம் ஏற்படுத்த தலைவர்கள் விரைவிலேயே முன்னுக்கு வரமுடிந்தது. கடலோரமும் ஒருவகை எல்லையாகத் திகழ்ந்தமையால் ஒரு சில புதிய பண்புகளையும் அமெரிக்கர் பெற்றனர். சிறிய கலங்களில் சிறுசிறு குழுவினர் சென்று வந்தமையாலும், மீன்பிடிப்பதிலும், திமிங்கில வேட்டையிலும் இருவர்இருவராக ஈடுபட்டமையாலும் அவர்களிடையே சிறந்த ஒற்றுமை மனப்பான்மை வளர்ந்தது. துணிவு, முயற்சி தனிப்பட்ட ஆற்றல் வளம் ஆகிய நற்பண்புகளெல்லாம் அவர்களிடத்து மிகுந்திருந்தது.

எல்லைப்புறம் சில தீய பண்புகளையும் அமெரிக்கரிடையே உண்டாக்கியது. போதிய கல்விக்கூடங்களும், தொழுவதற்கான ஆலயங்களும் இல்லாதிருந்தமையால் எல்லைப்புற மக்களிடையே அறிவுத்திறனும், கலையுணர்வும், தெய்வீகப்பண்பாடும் குறைந்தே காணப்பட்டன. விரும்பத்தகாத மனிதப் பண்பியலுடன் அவர்கள் வாழ்ந்தனர். அவர்கள் பெரும்பாலும் கட்டுப்பாடற்றவர்களாயும், பொறுமையற்றவர்களாயும் தன்னம்பிக்கையில் உயர்வு கொண்டும், அமைதி குலைந்தும் காணப்பட்டனர், எல்லைப்புற வீரர்கள் போதிய பயிற்சி பெற மறுத்தமையாலும், படைத்தலைவர்களுக்குப் பணிந்து போக மறுத்தமையாலுமே 1812ஆம் ஆண்டுப் போரில் பல தோல்விகளை அடைய நேரிட்டது. எல்லைப்புற பயிற்சிபெற்ற மக்கள் அவசரமாக அனுபவமற்றமுறையில் இயங்கினர். இத் தீய பண்புகளுக்கெல்லாம் மேலாக எல்லைப்பற வாழ்க்கையில் குற்றப்பழியுடைமைக் குணம் அதிகமாக மக்களிடத்து காணப்பட்டது வருந்தற்குரியதாகும். கட்டுப்பாடற்ற உணர்ச்சிகளை வளர்த்துவிட்டிருந்த அவரகள் ஒரு சிறு பிணக்கைக்கூட கைக்கலப்பாலோ துப்பாக்கிமுனையிலோ தீர்ப்பதையே வழக்கமாகக் கொண்டனர்.

**மேற்குப்புற குடிபெயர்ச்சிக்குக் கூட்டாட்சி அரசின் பங்கு**

குடியேற்றங்களாக விளங்கிய காலத்தில் வெவ்வேறு முறையில் நிலம் பகிர்ந்தளிக்கப்பட்டது. விருப்பப்படி குடியேறிவிட்டுப் பின்னர் அளவாய்வுக் கூறுகள் பதிவு செய்யப்படுவதை (Indiscriminate location and Survey) தெற்கு மாநிலங்களில் வாழ்ந்தவர்கள் விரும்பினர். நியூ இங்கிலாந்தில் வாழ்ந்தவர்கள் முதலில் நிலத்தை முறையாக அளந்து குடியிருப்புக்களாகப் பிரித்தபின். குடியேறுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். தென்மாநிலத்தவர் பின்பற்றிய முறையில் பல குறைபாடுகள் இருந்தன. எனவே நேசக்கூட்டாட்சி அரசு, நியூஇங்கிலாந்து முறையைப் பின்பற்றி நில ஆணை ஒன்றை 1785ல் பிறப்பித்தது. அதன்படி, புதிய நிலப் பகுதிகள் விற்கப்படும்முன்னர் அவை சீராக அளக்கப்பட்டு குடியிருப்புக்களாகப் பிரிக்கப்பட வேண்டும் என்ற விதி செயல் முறைக்கு வந்தது.

கூட்டாட்சி அரசு நிறுவப்பட்டபின் 1796-ல் நில விற்பனைக் கொள்கையில் சிறிது மாற்றமேற்படுத்தப்பட்டது. நிலச் சட்டத்தின் படி ஏக்கரின் குறைந்த விலை இரண்டு டாலராக நிருணயிக்கப் பட்டது. 1800-ல் ஒருவர் வாங்க வேண்டிய குறைந்த அளவு நிலப்பரப்பு 320 ஏக்கராகக் குறைக்கப்பட்டது. நிலம் வாங்குவோர் நிலத்திற்கான தொகையை நான்கு ஆண்டுகளில் தவணை முறையில் செலுத்தவும் வசதியளிக்கப்பட்டனர். 1804-ல் ஒருவர் வாங்க வேண்டிய குறைந்த அளவு நிலப்பரப்பு 160 எக்கராகக் குறைக்கப் பட்டது. 1800ஆவது ஆண்டுக்கும் 1820ஆம் ஆண்டுக்கு மிடையே பத்தொன்பது மிலியன் ஏக்கர் நிலம் பொதுமக்களுக்கு விற்கப்பட்டது. 1820-ல் தவணை முறையில் பணம் செலுத்த அளிக்கப்பட்டிருந்த வசதி நிறுத்தப்பட்டது. ஆனால், ஒருவர் வாங்க வேண்டிய குறைந்த அளவு நிலப்பரப்பு 80 ஏக்கராகக் குறைக்கப் பட்டதோடு குறைந்தவிலையும் $1·25 ஆக நிருணயிக்கப்பட்டது.

மேற்குத் திசையிலிருந்த நிலங்களை அரசு அளந்து விலைக்கு விற்க ஏற்பாடு செய்வதற்கு முன்னர், சட்டப்படி பட்டயமேது மில்லாது, பலபேர் உரிமையின்றிப் பொதுநிலத்தில் வாழ்ந்து வந்தனர் (Squatters). அவர்கள் நிலையாக அந் நிலங்களில் வாழ விரும்பினர். நிலத்தைத் திருத்தியமைத்து வாழத் தகுதியுடையதாக மாற்றியமைத்திருந்ததால், தங்களது உழைப்புக்கு ஊதியமாக அந் நிலங்களைக் குறைந்த அளவு விலைக்கு விற்கவேண்டுமென அரசை வேண்டினர். ஆனால், விதிமுறைப்படி அந் நிலங்களை ஏலம் வழிவிற்றால் குறைவு விலைக்கு மேலாக விற்கப்படும் என்பது உறுதி. எனவே, உரிமையின்றி, பொதுநிலத்தில் வாழ்ந்தவர்க ளெல்லாம் முற்படுவிலைக்கோள் உரிமையைப் (Pre-emption) நாடினர். அவர்களது வேண்டுதலுக்கிணங்க காங்கிரஸும் முற்படுவிலைக்

கோள் உரிமைச் சட்டம் ஒன்றை (Pre-emption Act) 1841-ல் இயற்றியது. அதன்படி, உரிமையின்றிப் பொதுநிலத்தில் வாழ்ந்தவர் களுக்கு 160 ஏக்கர் வாங்கவும், பின்பு குறைவு விலைத்தொகையைக் கட்டவும் இசைவு தரப்பட்டது.

மற்றொரு வகையிலும் கூட்டாட்சி அரசு பொதுநிலத்தை விற்க வழிவகை செய்தது. நெடுநாளாக விலைக்கு வாங்கப்படாத நிலங் களின் விலையைப் படிப்படியாகக் குறைப்பதென முடிவு செய்து 1854-ல் காங்கிரஸ் ஒரு சட்டத்தை இயற்றியது. அச் சட்டப்படி முப்பதாண்டுகளாக விலைக்கு வாங்கப்படாமலிருந்த நிலத்தின் விலை ஓர், ஏக்கர் பன்னிரண்டரை சென்ட் என நிருணயிக்கப்பட்டது.

## இந்தியப் பழங்குடியினர் அகற்றப்படல்

எல்லைப்புற மக்கள் தொடர்ந்து இந்தியப் பழங்குடியினர் வாழ்ந்து வந்த நிலப்பகுதிகளில் அத்துமீறிப் புகுந்து குடியேறினர். இந்தியர்கள் தங்களது உணவுக்கும் உடைக்கும் நம்பியிருந்த நிலங்களையெல்லாம் எல்லைப்புற மக்கள் அழித்துவிட்டனர். இந்தியர்கள் தங்களைக் காத்துக்கொள்ள முயன்றபோதெல்லாம் போர்கள் மூண்டன. அப் போர்களில் சில மனத்தை உருக்கும் கொடூரத் தன்மை வாய்ந்தன வாய் இருந்தன. தெற்கே கிரீக்(Creek) பழங்குடியினரை ஆன்ட்ரூ ஜாக்சன் கொன்று குவித்தார் ; அதேபோல புளோரிடாவில் செமினோல் (Seminoles) பழங்குடியினரையும் அடக்கினார். இந்தியா னாவில் (Indiana) இந்தியர்களது தலைவரான தேக்கும்சேவும் கொல்லப்பட்டார்.

மேற்குப்பகுதியில் ஏராளமான இந்தியர்கள் வாழ்ந்தமையால் அங்கு வெள்ளையர்கள் குடிபுக முடியாதென நெடுநாளாகக் கருதப் பட்டு வந்தது. ஆனால், அவர்களை மிசிசிபி நதிக்கு அப்பாலுள்ள சமவெளிப் பகுதிக்கு அகற்றவேண்டுமென மன்ரோ திட்டமிட்டார். அதனை ஜாக்சன் தீவிரமாகச் செயலாக்கினார். இந்தியர்களது நிலங் களைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக அவர்களுக்கு மேற்குப் புறத்தில் நிலத்தை அளிக்கக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் காங்கிரஸ் ஒரு சட்டத்தை இயற்றியது. இம் முறையில் வடக்கே இருந்த இந்தியர்கள் எளிதில் அப்புறப்படுத்தப் பட்டனர். ஆனால் தெற்கே இருந்த இந்தியர்கள் அப்புறப்படுத்து வதற்குக் கடும் எதிர்ப்பு தெரிவித்தனர். அதன் விளைவாக அவர்கள் பலவிதமான துன்பத்திற்காளாயினர். அவர்களிற் சிலர் இறுதிவரை அங்கேயே இருந்து போராடி மடிந்தனர். எஞ்சியோர் உணவின்றி, பலவித நோய்களுக்காளாகி நடந்தும், வண்டிகளில் பயணம் செய்தும் மேற்குப் பகுதிக்குச் சென்றனர். 1840ஆம் ஆண்டுக்குள் அனேக மாக மிசிசிபிக்குக் கிழக்கே இருந்த எல்லா இந்தியர்களும் மேற்கே சென்றுவிட்டனர்.




## மேற்குநோக்கி விரிவடைதலில் இரண்டாவது கட்டம் 1840-1850

அமெரிக்க உரிமைப்போரின் இறுதியில் கையெழுத்திடப்பட்ட வெர்ஸேல்ஸ் உடன்படிக்கையின்படி (1783) அமெரிக்க ஐக்கிய நாட்டின் மேற்கு எல்லையாக மிசிசிபி ஆறு அமைந்தது. தெற்கு எல்லையில் ஸ்பானியர்களுக்குச் சொந்தமான புளோரிடா இருந்தது. லூசியானுப் பகுதியை 1803-ல் விலைக்கு வாங்கியதன் பயனாக மேற்கு எல்லை மிசிசிபி ஆற்றங்கரையிலிருந்து ராக்கி மலைகளுக்கு நகர்ந்துசென்றது.

வடக்கு மாநிலங்களில் வாழ்ந்த மக்கள் மேற்குநோக்கி முன்னேறுவதில் அதிக இடர்ப்பாடின்றி எளிதில் செல்ல முடிந்தது. ஆனால், தெற்கு மாநிலத்தவர்கள் முன்னேற்றத்தைத் தடுக்கும் வகையில் ஸ்பானியர்களுடைய புளோரிடாவும்; மெக்ஸிகோவும் எல்லைகளாக இருந்தன. ஐரோப்பாவில் பேரரசுக் கொள்கையினரால் பின்பற்றப் பட்ட முறைகளை அமெரிக்க ஐக்கிய நாடும் பின்பற்றித் தனக்கேற் பட்டிருந்த இடர்ப்பாடுகளைக் களைந்தது. அமெரிக்கக் குடிமக்களை ஏராளமாகப் புளோரிடாவில் குடிபெயரச் செய்து, அவர்களைக் கலகம் விளைவிக்கச் செய்து, 1819-ல் புளோரிடாவை ஸ்பெயின் விட்டுக் கொடுக்கும்படி விடாத்தொல்லை கொடுத்துப்பெற்றது.

வட அமெரிக்கக் கண்டம் முழுவதும் கண்டறியப்பட்டு நிலப்படங் கள் வரைவதற்கு முன்னாலேயே, இறைவன் திருவுளப்படி எவ்வளவு பரப்பில் குடியேற முடியுமோ அவ்வளவும் தமக்கே

சொந்தம் என அமெரிக்கர் உறுதி பூண்டனர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் பரப்பினை விரிவாக்க வேண்டுமென்னும் கோட்பாடுடையவர் களது பேரவா 1840ஆம் ஆண்டினையடுத்த பத்தாண்டுகளில் உச்ச நிலையை அடைந்தது எனலாம். அவ்வாண்டுகளில் அமெரிக்காவின் ஆட்சிப்பரப்புக்கு ஒரு மில்லியன் சதுர மைல் கூட்டப்பட்டு நாட்டின் எல்லை மேற்கே பசிபிக் கடலோரத்தை எட்டிற்று. இதனால் அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஆட்சியினுள் அதிக வளமுள்ள நிலங் களும் அழகிய இயற்கைத் தோற்றமுள்ள இடங்களும் இணைந்தன.

**டெக்ஸாஸ் கைப்பற்றப்படுதற்கான காரணங்கள்**

வலிமையற்றிருந்த மெக்ஸிகோவிடமிருந்து டெக்ஸாஸையும் கலிபோர்னியாவையும், தென்மேற்குப் பகுதியையும் அமெரிக்கா கைப்பற்றியதோடு அதன் மேற்குப் பகுதி திட்டவட்டமாக வரையறுக் கப்பட்டது. இப் பகுதிகளை அமெரிக்கா கைப்பற்றியமை நெறியற்ற செயலெனச் சில வரலாற்றாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

டெக்ஸாஸ், மெக்ஸிகோ குடியரசின் ஒரு பகுதியாகும். அது பரப்பளவில் ஜெர்மனியைப் போல் இருந்தது. ஆனால், அங்கு வாழ்ந்த மக்கள் தொகை மிகவும் குறைவாக இருந்தது. கால்நடை வளர்ப்போரும், வேடர்களுமே மிகுந்திருந்தனர். டெக்ஸாஸில் முந்நூறு குடும்பங்களைக் கொண்ட ஓர் அமெரிக்கக் குடியேற்றத்தை நிறுவ மோஸஸ் ஆஸ்டின் (Moses Austin) என்பவர் 1812-ல் ஸ்பானிய அதிகாரிகளிடமிருந்து ஒரு பட்டயம் பெற்றார். மோஸஸ் ஆஸ்டின் இறந்த பிறகு அவருடைய புதல்வரான ஸ்டீபென் ஆஸ்டின் (Stephen F. Austen) தந்தை துவக்கியிருந்த பணியை மேற் கொண்டு குடியேற்றமொன்றை நிறுவினார், 1822-ல் மெக்ஸிகோ ஸ்பெயினிடமிருந்து சுதந்திரம் பெற்றதும் ஸ்டீபென் புதிய மெக்ஸி கோவின் அதிகாரிகளிடமிருந்தும் ஒப்புதலைப் பெற்றார். 1830 ஆம் ஆண்டில் டெக்ஸாஸில் இருபதாயிரம் அமெரிக்கக் குடும்பங்கள் இருந்தன. டெக்ஸாஸில் வாழ்ந்த அமெரிக்கர் மெக்ஸிகோ அரசுக்குப் பற்றுறுதி காட்டாது அமெரிக்க ஐக்கிய நாட்டின்மீதே பற்றுறுதி கொண்டிருந்தனர். இதனைக் கண்ட மெக்ஸிகோ அரசு ஐயப்பாடுற்று, ஒரு வேளை அமெரிக்கா அப் பகுதியைக் கைப்பற்றத் திட்டமிடக்கூடும் என அஞ்சி, மேலும் அமெரிக்கர் வந்து குடியேறு வதைத் தடை செய்தது.

அமெரிக்கப் பொருள்கள் தடையேதுமின்றி டெக்ஸாஸில் விற்பனையாயின. அதுபோல டெக்ஸாஸிலிருந்து பொருள்கள் அமெரிக்காவுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. இதனைக் கண்ட மெக்ஸிகோ அரசு ஏற்றுமதி இறக்குமதி வரிகளை விதித்தது. இதனால் இரு நாடுகளுக்கிடையேயான வாணிகம் பாதிக்கப்பட்டது. இதை யடுத்து 1829-ல் மெக்ஸிகோ அரசு அடிமைமுறையைத் தனது

நாட்டில் ஒழித்து ஒரு சட்டத்தை இயற்றியது. அதனால் டெக்ஸாஸில் அடிமைகளை ஏராளமாக வேலைக்கு வைத்திருந்த அமெரிக்கர் சின முற்றனர். மற்றொரு சீர்திருத்தத் திட்டத்தின்படி மெக்ஸிகோ அரசு டெக்ஸாஸ் மாநிலத்தை கோஹூலியா (Coahul a) என்ற வேறொரு மாநிலத்தின் ஒரு பகுதியாக மாற்றியமைத்தது. இதனால் அப் புதிய மாநிலத்தில் வாழ்ந்த அமெரிக்கர் சிறுப்பான்மையினராயினர். அமெரிக்கக் குடிமக்களெல்லாம் ஒன்றுகூடித் தங்களுடைய வாணிக உரிமைகளை மீண்டும் தரும்படியும், அடிமைமுறையைத் தொடர்ந்துகொள்ளவும், சுய ஆட்சி உரிமைகள் வேண்டுமெனவும் மெக்ஸிகோ குடியரசுத் தலைவரான சாண்டா ஆனவை (Santa Anna) வேண்டினர். இவ்வேண்டுகோளை அவர் ஏற்க மறுத்தமையால் டெக்ஸாஸைச் சார்ந்த அமெரிக்கர் புரட்சியிலிறங்கினர்.

டெக்ஸாஸ் மக்களின் தலைவராகத் தளபதி சாம் ஹஸ்டன் (Sam Houston) போரிலிறங்கி, மெக்ஸிகோ படைகளை சான் ஜேசிண்டோ (San Jacinto) என்ற இடத்தில் நடந்த போரில் தோற்கடித்தார். 1836-ல் டெக்ஸாஸ் மக்கள் தங்களை ஒரு சுதந்திர நாடாக அறிவித்ததோடு தங்கள் மாநிலத்தை அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் ஒரு மாநிலமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டினர். டெக்ஸாஸை அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக் கொண்டால், ஒரு வேளை மெக்ஸிகோவுடன் போர் மூளுமென அஞ்சி ஜாக்ஸன் அவ் வேண்டுகோளை நிராகரித்தார். மற்றும் டெக்ஸாஸ் அடிமை முறையைக் கொண்டிருந்தமையை அமெரிக்க வடமாநிலத்தவர்கள் எதிர்த்தனர். இந்நிலையில் டெக்ஸாஸ் ஒரு தனித்த குடியரசாக விளங்கலாயிற்று. தனித்தியங்கிய டெக்ஸாஸ் குடியரசு பிரிட்டனுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளலாயிற்று. டெக்ஸாஸில் விளைந்த பருத்தியெல்லாம் பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. அதே போல டெக்ஸாஸ் தனக்கு வேண்டிய செய்பொருள்கள் அனைத்தையும் பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்தது. பிரிட்டிஷ் நாட்டுப் பேராளர் (Consul) டெக்ஸாஸைப் பிரிட்டனுக்குச் சொந்தமாக்கத் திட்டமிட்டார். இதனைக் கண்ட அமெரிக்கக் குடியரசுத் தலைவர் (Tyler) (1841-1845) டெக்ஸாஸை அமெரிக்க ஐக்கிய நாட்டோடு இணைக்க முடிவு செய்தார். 1843-ல் டெக்ஸாஸைக் கைப்பற்ற வேண்டும் என்ற கொள்கையைப் பெரிதும் ஆதரித்த கால்ஹூனை வெளியுறவு அமைச்சராக டெய்லர் நியமித்தார். கால்ஹூன், டெக்ஸாஸ் அரசுடன் அதற்கான ஓர் உடன்படிக்கையைத் தயார்செய்து அதனை காங்கிரஸில் நிறைவேற்றச் சமர்ப்பித்தார். ஆனால், செனட் சபை அவ்வுடன்படிக்கையை நிராகரித்தது.

இதற்கிடையில், 1844ஆம் ஆண்டு அடுத்த குடியரசுத் தலைவர் பதவிக்கான தேர்தல் நடைபெற்றது. அத்தேர்தலில் டெக்ஸாஸைக் கைப்பற்றுவதா, கூடாதா என்ற சிக்கலின் பேரில் வேட்பாளர்கள்

போட்டியிட்டனர். விக்குக் கட்சியைச் சார்ந்த ஹென்றி கிளே, டெக்ஸாஸைக் கைப்பற்றக் கூடாதென வாதாடினர். மக்களாட்சிக் கட்சியைச் சார்ந்த ஜேம்ஸ் போக் (James K. Polk) டெக்ஸாஸைக் கைப்பற்ற வேண்டுமென வாதாடினர். இறுதியில் ஜேம்ஸ் போக் வெற்றி பெற்றார். டெய்லர் இவ்வெற்றியைத் தமது கொள்கையின் வெற்றியாகக் கொண்டு தமது பதவிக் காலம் முடியும்முன் டெக்ஸாஸை அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் இணைக்க முடிவு செய்தார்; டெக்ஸாஸைக் கைப்பற்றுவதெனக் கூறும் ஒரு கூட்டுத்தீர்மானத்தைத் காங்கிரஸில் கொண்டுவந்து ஒப்புதல் பெற்றார். இக் கூட்டுத் தீர்மானம், டெய்லர் பதவியினின்று ஓய்வு பெற மூன்று நாள் முன்னர் தான் இயற்றப்பட்டது. டெக்ஸாஸும் இறுதியில் அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் இணைவதற்கான விதிமுறைகளை ஏற்றுக்கொண்டு, 1845-ல் ஓர் அரசியலமைப்பை உருவாக்கி, பின்னர் அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் இணைந்தது.

### ஆரிகான் பகுதியைக் கைப்பற்றுதல்

1844ஆம் ஆண்டுத் தேர்தல் நடைபெற்றபோது டெக்ஸாஸ் பகுதியையும், ஆரிகான் (Oregon) பகுதியையும் கைப்பற்றுவதென மக்களாட்சிக் கட்சியினர் தங்களது கொள்கை விளக்க அறிவிப்பில் கூறியிருந்தனர்; ஆனால், மக்களாட்சிக் கட்சியினருக்குள் அடிமை முறைபற்றிக் கருத்து வேறுபாடு இருந்தது. இறுதியில் டெக்ஸாஸில் அடிமைமுறையை வைத்துக் கொள்ளலாம் என்றும், ஆரிகானில் அடிமைமுறையை வைத்துக் கொள்ளக் கூடாதெனவும் முடிவு செய்தனர். இம்முடிவினடிப்படையில் மக்களாட்சிக் கட்சியின் வேட்பாளர் ஜேம்ஸ் போக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவர் பதவியேற்கு முன்னரே டெய்லர் காங்கிரஸில் ஒரு கூட்டுத்தீர்மானத்தின் வழியாக டெக்ஸாஸை அமெரிக்காவோடு இணைத்தார். எனவே, போக் பதவியேற்றதும் ஆரிகான் பகுதியைக் கைப்பற்றுவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டார்.

அமெரிக்க ஐக்கிய நாடு, ஆரிகான் நிலப்பகுதிமீது பலவகையிலும் உரிமை கோரியது. அமெரிக்க உரிமைப் போர் முடிவுற்றதும் ராபர்ட் கிரே (Robeat Gray) என்னும் தளபதி கொலம்பியா ஆற்றுப் பள்ளத்தாக்கில் ஆய்வுப் பயணங்கள் (1788-1792) மேற்கொண்டிருந்தார். ஆடம்ஸ்-ஒனிஸ் உடன்படிக்கைப்படி (1819) ஸ்பெயின் 42° குறுக்கையளவு கோட்டிற்குமேல் உரிமை கொண்டாடுவதில்லை என ஒப்புக் கொண்டது. 1824-ல் ருஷ்யாவும் தனக்குச் சொந்தமான அலாஸ்காவின் தெற்கு எல்லையை 54° 40' குறுக்கையளவுக்குக் கீழ் நீட்டிப்பதில்லை என உறுதி கூறிற்று. இந் நிலையில இங்கிலாந்து, ஆரிகான் நிலப்பகுதிமீது உரிமை கொண்டாடத் துவங்கியது. ஆங்கிலப் பயணத் தலைவர் குக் என்பவர், 1778ஆம்

ஆண்டே அப் பகுதியில் ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டிருந்தார். மற்றும் முதல் குடியேற்றங்கள் நிறுவப்பட்ட காலத்தில் ஹட்சன் குடா கம்பெனி ஆரிகான் பகுதியில் ஒரு வாணிக நிலையத்தை நிறுவி யிருந்தது. அமெரிக்க ஐக்கிய நாடும், பிரிட்டனும் ஆரிகான் மீதான உரிமைச் சிக்கலைத் தீர்ப்பதற்காக, 1818-ல் கூடிப் பேசி 49° குறுக்கையளவைப் பசிபிக் கடலோரம் வரை எல்லைக் கோடாக ஏற்றுக் கொண்டன.

ஆரிகான் நிலப்பகுதியில் குடியேற்றங்களை நிறுவ அமெரிக்க ஐக்கிய நாடு சீரிய முயற்சிகளை மேற்கொள்ளவில்லை. 1824-ல் ஆரிகானில் வாழ்ந்த இந்தியப் பழங்குடியினர், செயின்ட் லூயி (St, Louis) நகரத்திற்குச் சென்று, அங்கு வாழ்ந்த அமெரிக்க சமயப் பரப்பாளர்களை, தங்களது ஊருக்கு வந்து, சமய அறிவைப் புகட்டும் படி வேண்டினர். அவ்வேண்டுகோளை சமயப்பரப்பாளர்களும் ஏற்று ஆரிகானுக்குச் சென்று கிறித்துவ சமயக் கருத்துகளைப் பரப்பி வந்தனர். அவர்களைத் தொடர்ந்து ஆய்வுப்பயண வீரர்கள் சென்றனர். ஒரு சிலர் அப்பகுதியின் இயற்கை வளத்தைப் பற்றியும், சிறந்த தட்ப வெட்ப நிலை பற்றியும் அமெரிக்க மக்களுக்கு எடுத்தியம்பினர். ஆரிகானின் நல்லியல்புகளைக் கேட்டு மகிழ்ந்த பல அமெரிக்கர் அப் பகுதிக்குக் குடிபெயரலாயினர்.

ஆரிகானின் வட எல்லையை 54°.40° குறுக்கையளவுக்கு நீட்டிக்க வேண்டுமென மக்களாட்சிக் கட்சியினர் 1844-ல் நடைபெற்ற தேர்தல் கொள்கை விளக்க அறிவிப்பில் வாதிட்டனர். அதை யொட்டி "ஐம்பத்து நான்கு நாற்பது, இல்லையெனில் போர்" (Fifty - four forty or fight) என்ற போர்க்குரல் நாடெங்கிலும் ஒலித்தது. தேர்தலில் மக்களாட்சிக் கட்சியின் வேட்பாளரான ஜேம்ஸ் போக் வெற்றி பெற்றார். அவர், ஆரிகான் பகுதியைக் கைப் பற்றி அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் இணைக்க உறுதி பூண்டார் ஜேம்ஸ் போக்கின் தூண்டுதலின் பேரில் காங்கிரஸ் இங்கிலாந்திற்கு ஓர் அறிக்கையை அனுப்பியது. அவ்வறிக்கையில் ஆரிகான் பகுதி மீதான கூட்டுஉரிமையை இங்கிலாந்து முடித்துக்கொள்ள வேண்டு மென அமெரிக்கா அறிவித்தது. மற்றும் அப் பகுதிமீது அமெரிக்கச் சட்டங்கள் செயற்படுத்தப்படும் என்றும், அங்குக் குடிபெயரும் அமெரிக்கருக்கு அரசு பாதுகாப்பளிக்குமென்றும், காங்கிரஸ் முடிவு செய்தது. இப்படி ஆரிகான் பகுதிமீதான உரிமை குறித்து அமெரிக்காவுக்கும், பிரிட்டனுக்குமிடையே போர் மூளக்கூடியது சூழ்நிலை உருவாயிற்று. ஆனால், பிரிட்டன் போரிலிறங்க விரும்ப வில்லை; அமெரிக்காவுடன் உடன்பாடு செய்து கொள்ள விரும்பிற்று. 1847ஆம் ஆண்டு ஏற்பட்ட உடன்படிக்கையின்படி 49° குறுக்கை யளவு அமெரிக்க-பிரிட்டிஸ் நிலப்பரப்புகளின் எல்லையாக ஏற்றுக்கொள்ளபட்டது. வான்கூவர் (Vancouver) தீவு மட்டும்

பிரிட்டனுக்கும் அளிக்கப்பட்டது. கொலம்பியா ஆற்றினைப் போக்கு வரத்துக்குப் பயன்படுத்தவும் பிரிட்டனுக்கு உரிமை தரப்பட்டது.

### மெக்ஸிகோ போரும் (1846 - 1848), கலிபோர்னியா, நியூ மெக்ஸிகோவைக் கைப்பற்றலும்

மெக்ஸிகோ ஆட்சிக்குட்பட்ட கலிபோர்னியாவில் பெரும்பாலும் இந்தியப் பழங்குடியினரே வாழ்ந்து வந்தனர். ஸ்பானியர்கள் ஒரு சில குடியேற்றங்களை நிறுவி கிறித்துவ சமயத்தைப் பரப்பியிருந் தனர்; சில கல்விக்கூடங்களையும் நிறுவியிருந்தனர், கலிபோர்னியா வுக்கும் மெக்ஸிகோ நகருக்குமிடையே நீண்டதூரமாகையால் போக்குவரத்து வசதியற்ற அந் நாளில் மெக்ஸிகோ அரசு கலிபோர்னியாவைக் கட்டுப்பாட்டுடன் ஆள இயலவில்லை. கலிபோர்னியாவில் தங்கம் கண்டு பிடிக்கப்பட்டதும் அமெரிக்கர்கள் பெருமளவில் சென்று குடியேறலாயினர். அமெரிக்க மக்கள் தொகை நாளடைவில் பெருகிற்று. கலிபோர்னியாவை அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் இணைக்கத் திட்டமிட்டு, அங்கு வாழ்ந்த அமெரிக்கக் குடிமக்கள் மெக்ஸிகோ அரசுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யலாயினர். கலிபோர்னியாவில் அமெரிக்க நாட்டுப் பேராளராக இருந்த லர்க்கின் (Lurkin) என்பவர் கிளர்ச்சியாளர்களை ஊக்கு வித்ததோடு அவர்களுக்கு அமெரிக்க அரசின் உதவி அளிப்பதாகவும் வாக்களித்தார். ஆனல் கிளர்ச்சியாளர்களெல்லாம் எளிதில் அடக்கி ஒடுக்கப்பட்டனர். அதன் பின் அமெரிக்கா, கலிபோர்னியாவை விலைக்கு வாங்க முயற்சித்தது. மெக்ஸிகோ அரசு விற்க மறுத்து விட்டது.

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஜேம்ஸ் போக் அமைதியான முறையில் கலிபோர்னியாவைப் பெறவே விரும்பினர்; மெக்ஸிகோ அரசுடன் நல்லுறவு கொள்ள முயற்சித்தார். ஆனல், மெக்ஸிகோ அரசு, அமெரிக்க ஐக்கிய நாடு டெக்ஸாஸைக் கைப்பற்றியதையே அநீதியான செயலெனக் கூறி, டெக்ஸாஸ் அமெரிக்காவோடு இணைந்ததை ஏற்றுக்கொள்ள மறுத்தது. அதனலேயே கலிபோர்னி யாவையும் விலைக்கு விற்க இசையவில்லை. அதன்பேரில் ஜேம்ஸ் போக் சிறப்புத் தூதராக ஜான் சிலிடல் (Jhon Silidel) என்பவரை மெக்ஸிகோவிற்கு அனுப்பினர். ரியோ கிராண்டு (Rio Grande) நதியை மெக்ஸிகோவிற்கும் அமெரிக்காவிற்கும் இடையேயான எல்லையாகக் கொள்ளவும், கலிபோர்னியாவையும் நியூமெக்ஸி கோவையும் அமெரிக்காவிற்கு விட்டுக்கொடுப்பதற்காக இருபத்தைந்து மில்லியன் டாலரை அளிக்கவும், நியூ மெக்ஸிகோவை மட்டும் விட்டுக்கொடுப்பதனல் ஐந்து மில்லியன் டாலரை அளிக்கவும், ஜான் சிலிடல் கருத்துத் தெரிவித்தார். மெக்ஸிகோவில் ஏற்பட்ட புரட்சிகளிலும், கலகங்களிலும் பல அமெரிக்கக் குடி மக்கள் உயிரிழந்தனர் : சிலர் தங்களது உடைமைகளை இழந்திருந்

தனர். குடிமக்கள் கோரிய இழப்பீடுகளையும் அளிக்க அமெரிக்க அரசு ஒப்புக்கொண்டது. ஆனால் மெக்ஸிகோவில் அப்பொழுதிருந்த அரசியல் குழப்ப நிலையில் சிலிடலின் பணி மிகவும் கடுமையானதாக இருந்தது. மெக்ஸிகோவில் அமெரிக்க ஐக்கிய நாட்டின்மீதான கசப்புணர்வு உச்சநிலையில் இருக்கவே, மெக்ஸிகோவின் இரண்டு குடியரசுத் தலைவர், ஜேம்ஸ் போக் அனுப்பிய தூதுவரைக் கண்டு பேச மறுத்தனர். டெக்ஸாஸை அமெரிக்கா வஞ்சித்துத் திருடிக் கொண்டதாகவும், அமெரிக்கக் மெக்ஸிகோவின் ஒற்றுமையையே குலைப்பதாகவும் தேசியப்பற்றுமிக்க மெக்ஸிகோவினர் கருதினர். அவர்கள் அமெரிக்காவின்மீது போர்தொடுக்கவும் வேண்டினர்.

## மெக்ஸிகோ போர்

அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஜேம்ஸ்போக், மெக்ஸிகோவுடன் போர்தொடுப்பதென முடிவு செய்தார். நடைமுறையில் டெக்ஸாஸின் தென் எல்லை நியூஸெஸ் (Nueces) ஆறாக இருந்த போதிலும், ரியோ கிராண்டு ஆறே தென் எல்லை என ஜேம்ஸ்போக் அறிவித்தார். நியூஸெஸ் ஆற்றுக்கும் ரியோகிராண்டு ஆற்றுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி வாதத்திற்குரியதாக இருந்தது. தளபதி சாக்கரி டெய்லர் (Zachary Taylor) என்பவரது தலைமையில் அவ் வாதத்திற்குரிய பகுதியைக் கைப்பற்ற ஒரு படையை ஜேம்ஸ் போக் அனுப்பினர். அப் படை மெக்ஸிகோ படையுடன் மோதிற்று. இருதரப்பாருக்குமிடையே, ரியோகிராண்டு நதி முகத்துவாரத்தில் இரு போர்கள் நிகழ்ந்தன. அவற்றில் மெக்ஸிகோ படையினர் தோல்வியுற்றனர். சில அமெரிக்க வீரர்களும் உயிரிழந்தனர். இச் செய்தி குடியரசுத் தலைவரை எட்டும் முன் அவர் போர் தொடுப்பதற்கான ஒரு தீர்மானத்தை காங்கிரஸின் சட்டமாமன்றத்தின் இசைவு பெறுவதற்காக அனுப்பினர். அதற்குள் அமெரிக்க மண்ணில் அமெரிக்க வீரர்கள் தாக்கப்பட்டுக் குருதி சிந்தியமையால் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் மெக்ஸிகோவுக்கும் இடையே போர் நிலை நிலவுவதாக முடிவு செய்யப்பட்டது. காங்கிரஸில், இம் முடிவு எடுக்கப்பட்டபோது எந்த இடத்தில் உண்மையாகக் குருதி சிந்தப் பட்டது என்பதை உறுதி செய்வதற்கான தீர்மானம் ஒன்றை (Spot Resolution) ஆப்பிரகாம்லிங்கன் கொண்டு வந்தார். அத் தீர்மானத்தைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளாத நிலையிலிருந்தது. 1846-ல் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும் மெக்ஸிகோவிற்குமிடையே போர்மூண்டது.

மெக்ஸிகோ அரசுதான் அமெரிக்காவின்மீது வலுச்சண்டை தொடுத்துள்ளது என்ற குடியரசுத் தலைவரின் கருத்துரையைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டது ; உடனே, ஐம்பதாயிரம் வீரர்கள் கொண்ட ஒரு படையைத் திரட்ட பத்து மில்லியன் டாலர் நிதியுதவி அளித்தது. தெற்கு, மேற்கு மாநிலங்கள் இப் போரை மிகுந்த

ஆர்வத்தோடு வரவேற்றுக் கூட்டாட்சி அரசுக்குத் தங்களது ஆதரவை நல்கின. ஆனல், வடகிழக்கு மாநிலங்கள் வாளாயிருந்தன. நியூ இங்கிலாந்திலுள்ள அடிமை ஒழிப்புக் கோட்பாட்டினர் கூட்டாட்சி அரசின் கொள்கைகளைக் கடுமையாகக் கண்டித்தனர்.

ஜேம்ஸ் போக் தமது தளபதிகள்மீது மிகவும் ஐயப்பாடுடைய குறுகிய மனப்பான்மையுடைய அரசியல்வாதிபாவார். தளபதி சாக்கரி டெய்லரின் தலைமையில் ஒரு படை தெற்கே அனுப்பப் பட்டது. அப் படையும் மெக்ஸிகோ தளபதி சான்ட் ஆன (Santa Anna) தலைமையின் கீழ் வந்த படையும் பியூன விஸ்டா (Buena Vista) என்னுமிடத்தில் மோதின. டெய்லரிடத்து ஐந்தாயிரம் பேர் கொண்ட படை மட்டுமே இருக்க, சாண்ட ஆனவிடம் இருபத்தை யாயிரம் பேர் கொண்ட படை இருந்தது. டெய்லர் ஒரு கணவாயில் தஞ்சம் புகுந்து தமது போர்த் திறமையினலும், அமெரிக்க வீரர்கள் சிறந்த பயிற்சி பெற்றிருந்தமையாலும் மெக்ஸிகோ படையினரை படுதோல்வி அடையச் செய்தார் (பிப்ரவரி 1847). (டெய்லரின் புகழைக் கண்டு பொருமையுற்ற ஜேம்ஸ் போக், தளபதி) கியர்னி (S. W. Kearney) என்பவரின் தலைமையில் ஒரு படையை மேற்குப் பகுதிக்கு அனுப்பினர். இப் படை முதலில் மெக்ஸிகோ படைகளை நியூமெக்ஸிகோவில் சாண்டாபீ (Santa Fe) என்னுமிடத்தில் தோற் கடித்தது; அடுத்து மேற்கே போய் மற்ருெரு மெக்ஸிகோ படையினை லாஸ்ஏஞ்சல்ஸில் (LosAngeles) தோற்கடித்தது. இப்படி கியர்னியின் படைகள் கலிபோர்னியாவைச் சென்றடைவதற்குள்ளாக அங்கிருந்த அமெரிக்கர், தளபதி ஜான் பெர்மான்டு (John W. Fermont) என்பவரின் தலைமையில் அமெரிக்க ஆட்சியை நிறுவிவிட்டிருந்தனர். ஜேம்ஸ்போக் மற்ருெரு படையை வின்பீல்டு ஸ்காட் (Winfield Scott) என்பவரின் தலைமையில் கடல்வழியாக மெக்ஸிகோ நகரைத் தாக்க அனுப்பினர். இப் படை வீரர் குரூஸில் (Vera Gruz) இறங்கி, கடுந்தாக்குதலுக்குப் பிறகு அத் துறைமுகப் பட்டினத்தைக் கைப்பற்றியது. அங்கிருந்த மலைத்தொடர்களை யெல்லாம் கடந்து சென்று மெக்ஸிகோ நகரை முற்றுகையிட்டது. இறுதியில் மெக்ஸிகோ படையினர் தோற்கடிக்கப்பட்டுச் சின்ன பின்னமாக்கப்பட்டனர். 1847 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் மெக்ஸிகோ அரசு சரணடைந்தது.

**கூடலுப் ஹிடால்கோ உடன்படிக்கை** (**Treaty of Cuadaluph Hidalgo**)

உடன்படிக்கையின் விதிமுறைகளை முடிவு செய்ய ஜேம்ஸ் போக் வெளிநாட்டுத்துறையின் தலைமை அலுவலரான நிக்கோலஸ் டிரிஸ்ட் (Nicholas P. Trist) என்பவரை மெக்ஸிகோவிற்கு அனுப்பினர். அவர், மெக்ஸிகோ அரசின் ஆணையர்களோடு கலந்து பேசி ஓர் உடன்படிக்கையைத் தீட்டினர். அதன்படி மெக்ஸிகோ

அரசு ரியோகிராண்டு நதியை டெக்ஸாஸின் எல்லையாக ஏற்றுக் கொண்டது. மற்றும் அமெரிக்காவிடமிருந்து பதினைந்து மில்லியன் டாலரைப் பெற்றுக்கொண்டு கலிபோர்னியாவையும், நியூ மெக்ஸிகோவையும் தந்திட மெக்ஸிகோ ஒப்புக்கொண்டது. அமெரிக்கக் குடிமக்களுக்கு, மெக்ஸிகோ அரசு தரவேண்டிய இழப்பீட்டுத் தொகையை அமெரிக்க அரசே அளிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வுடன்படிக்கையை 1848ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் செனட்சபை உறுதி செய்தது.

மெக்ஸிகோ போரின் விளைவாக அமெரிக்க ஐக்கிய நாடு கலிபோர்னியாவையும், நியூமெக்ஸிகோவையும் பெற்றது. இவற்றோடு டெக்ஸாஸ் உள்ளடங்க ஒன்பது இலட்சம் சதுர மைலுக்கும் அதிகமான நிலப்பரப்பு அமெரிக்காவிற்குக் கிடைத்தது. அமெரிக்காவின் மேற்கு எல்லை பசிபிக் பெருங்கடலை எட்டியது. "மெய்ம்மை காட்டு அமைவு நோக்கக் கோட்பாடு", (Doctrine of Manifest Destiny) வெற்றிகரமாகச் செயலாக்கப்பட்டு இப்பொழுது உச்ச நிலையை அடைந்தது எனலாம். இதனால், பசிபிக் பெருங்கடலை அடுத்த நாடுகளோடு அமெரிக்கா தொடர்புகொண்டு தனது வாணிகத்தைப் பெருக்கிக்கொள்ளலாயிற்று.

இப் போரினால் நியூமெக்ஸிகோவில் குடியேறிய இந்தியப் பழங் குடியினர் பெரிதும் பாதிக்கப் பெற்றனர். முதலில் அவர்கள் கிழக்குப் பகுதியிலிருந்து வெளியேற்றப்பட்டனர். அப்பொழுது அவர்கள் நியூ மெக்ஸிகோ பகுதியில் குடியேறினர். நியூமெக்ஸிகோ, அமெரிக்கர் ஆட்சியின்கீழ் வந்ததும் மீண்டும் இந்தியர்கள் அப் பகுதியை விட்டு வெளியேற வேண்டியதாயிற்று. இந்தியப் பழங்குடியினரைப் போலவே கிழக்கு மாநிலங்களில் அமெரிக்க மக்களால் வெறுக்கப் பட்டு, வெளியேற்றப்பட்ட ஒரு கிறித்துவச்சமயப் பிரிவினரான மார்மானியர்கள் (Mormons) கலிபோர்னியாவை ஒட்டிய பாலைவனப் பகுதியில் குடியேறி வாழ்ந்து வந்தனர். அமெரிக்கா அந் நிலப் பகுதியினைப் பெற்றமையால் மார்மானியர்கள் வாழ்க்கையும் பாதிக் கப்பட்டது. மார்மானிய சமயப் பிரிவினர் ஒரு சில வியத்தகு கோட் பாடுகளைக் கொண்டிருந்தனர். எடுத்துக்காட்டாகக் கிறித்துவ சமயக் கோட்பாடுகளுக்கு மாறாக ஒருவன் பல மனைவிகளை மணக்க அவர்கள் இசைந்தார்கள். இதனால், அவர்கள் மக்களால் வெறுக்கப் பட்டனர்.

மெக்ஸிகோபோர், மீண்டும் அடிமைமுறைபற்றிய சிக்கலை எழுப்பியது. மெக்ஸிகோவிடமிருந்து பெற்ற பகுதிகளைக் கட்டுப் படுத்துவதில் வடமாநிலங்களும், தென்மாநிலங்களும் போட்டியிட லாயின. அடிமைமுறையை ஏற்காத வடக்குமாநிலங்கள் மெக்ஸிகோ விடமிருந்து பெற்ற நிலங்களில் அடிமைமுறையைக் கொள்ளக் கூடாதென்றும், அடிமைமுறையை ஏற்ற தென்மாநிலங்

கள் அடிமைமுறையைக் கொள்ளலாமென்றும் வாதாடின. இந்தச் சிக்கலே பின்னர் உள்நாட்டுப் போருக்குக் காரணமாயிருந்தது.

கலிபோர்னியாவை அமெரிக்கா பெற்றதன்விளைவாக அங்கு ஏராளமான அமெரிக்கர் சென்று குடியேறினர். விரைவில் இரயில் பாதைகள் அமைக்கப்பட்டன. நியூமெக்ஸிகோவின் தென்எல்லை ஓரமாகக் கலிபோர்னியாவை இணைக்கும் வகையில் ஓர் இரயில்பாதையமைக்க மெக்ஸிகோநாட்டுக்குச் சொந்தமான நிலம் சிறிது தேவைப்பட்டது. மெக்ஸிகோவில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அமைச்சராகப் பணியாற்றிய ஜேம்ஸ் காட்ஸ்டன் (James Gadsden) என்பவர் 1853-ல் நன்முறையில் பேசி பத்துமில்லியன் டாலருக்கு 54,000 சதுர மைல்களை விலைக்கு வாங்கினார். கிலா (Gela River) ஆற்றுப் பள்ளத்தாக்கிலிருந்த அப் பகுதிக்கு "காட்ஸ்டன் வாங்கிய நிலம்" (Gadsden Purchase) என்ற பெயர் சூட்டப்பட்டது. அதன்வழியே பின்னர் இரயில்பாதை போடப்பட்டது.

**மேற்குநோக்கி விரிவடைந்ததன் விளைவுகள்**

அமெரிக்க ஐக்கிய நாட்டு வரலாற்றில், எல்லைப்புறத்தின் முக்கியத்துவம் பற்றி பிரெடரிக் ஜாக்சன் டர்னர் (Frederick Jackson Turner) என்ற வரலாற்றாசிரியர் சிறந்ததொரு ஆய்வுக்கட்டுரை ஒன்றினை அமெரிக்க வரலாற்றுக் கழகத்தில் 1893-ல் வழங்கினார். ஐரோப்பிய நாகரிகத்தினின்றும் முற்றிலும் வேறுபட்ட அமெரிக்க நாகரிகத்தினைப் படிப்படியாக வளர்த்ததில் எல்லைப்புறமே மையக் கூறாக விளங்குகிறது என டர்னர் கூறினார். அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஒவ்வொரு பகுதியும் ஓர் எல்லைப்புற முன்னேற்ற நிலையைத் தாண்டியே வளர்ந்துள்ளது. ஒவ்வொரு எல்லைப்புறத்திலும், மக்கள் வாழத்தொடங்கியபோது நாகரிக முதிர்ச்சியற்ற நிலைக்கு முதலில் செல்ல நேரிட்டது. பின்னர் அந்தந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப நாகரிகம் வளர்ச்சியுறலாயிற்று. இந்த வாழ்க்கை முறையில் ஒவ்வொரு எல்லையிலும் ஐரோப்பியமரபுப் பழக்கவழக்கங்கள் மறக்கப்பட்டு, அமெரிக்கச் சூழ்நிலையை ஒட்டிய புதிய பழக்கவழக்கங்கள் வளரலாயின.

எல்லைப்புறத்தில் ஐரோப்பாவின் பல பகுதிகளிலிருந்தும், பிற நாடுகளிலிருந்தும் வந்து வாழ்ந்த மக்கள் ஒரு புதிய தேசிய உணர்வைப் பெற்றனர். தங்களது வாழ்க்கைக்கு ஐரோப்பாவை நம்பியிருப்பதையும் குறைத்துக்கொண்டனர். எல்லைப்புறத்தில் வாழ்ந்தவர்கள் நாட்டின் ஒற்றுமையை வலுப்படுத்தியதோடு கூட்டாட்சி அரசுக்கு மேலும் கூடுதலான அதிகாரங்களை அளிப்பதையே விரும்பினர். மேலும், எல்லைப்புறம் தனித்தன்மையை வளர்த்ததோடு மக்களாட்சி மனப்பான்மையினையும் குடியாட்சி நிறுவனங்களையும் வளர்த்தது.

மற்றொரு வகையிலும் எல்லைப்புறம் அமெரிக்கக் குடியாட்சியை வளர்த்துள்ளமையை டர்னர் விளக்கியுள்ளார். கிழக்கு மாநிலங்களிலுள்ள நகர்ப்புறங்களில் வாழும் மக்களிடையே மனக்குறை ஏற்பட்டபொழுதெல்லாம், அவர்கள் தப்பிச்சென்று வாழ வகையளிக்கும் வகையில் எல்லைப்புறம் ஒரு காப்பமைவுக் கருவியாகத் (Safety-valve) திகழ்ந்தது என டர்னர் விவரித்துள்ளார். முதலாளிகள் தொழிலாளர்களைக் கொடுமைப்படுத்தியபோதும், மக்களது உரிமைகளை அரசியல் சூழ்நிலை தடைப்படுத்தியபோதும், சமூக நிலையில் பெருங்குழப்பங்கள் ஏற்பட்டபோதும், மக்கள் தப்பிச்சென்று உரிமைகள் நிரம்பிய எல்லைப்புறத்தில் வாழ வழியேற்பட்டது. ஆனால், நகர்ப்புறத் தொழிலாளி எல்லைப்புற குடியானவனாகி மாறினான் என்று சொல்வதற்கில்லை. வழக்குரைஞர், செய்தித்தாள் ஆசிரியர் போன்ற பிறர் மேற்கு நோக்கிச் சென்றது மறுக்க முடியாத உண்மையாகும்.

குடியேற்றகாலம் முதலாக இன்றுவரை, சமூக ஆராய்ச்சியாளர்களிடையே ‘எவ்வகையில் மேற்கு நோக்கி விரிவடைந்தமை அமெரிக்க நாகரிகத்தை மாற்றியமைத்துள்ளது’ என்பதுபற்றி இருவகையான கருத்துகள் உள்ளன. மக்களாட்சி முறையை ஆதரித்தவர்கள், எல்லைப்புறமானது ஒரு புதிய, சிறப்பு மேம்பட்ட சமூகத்தை உருவாக்கிற்று என்றும், அங்குக் கையூட்டு, ஊழல் பழக்கவழக்கங்கள் இல்லையென்றும், பழைய உலகின் கொடுமைகள் காணவில்லையென்றும் கூறுகின்றனர். பழமைவாதிகள், அதற்கு மாறாக, எல்லைப்புறச் சமூகத்தில் உயர்ந்த பண்பாடு காணப்படவில்லையென்றும், மக்கள் தனித்தன்மையைப் பெரிதாகக் கொண்டாடியதாகவும், அதிகமாக லௌகீகத்தில் ஈடுபட்டதாகவும், (சட்டங்களுக்கு மதிப்பு தராது வன்முறையில் ஈடுபட்டதாகவும்) குறை கண்டுள்ளனர். ஆனால், நடைமுறையில் என்ன நிகழ்ந்ததென்று கூர்ந்து நோக்கினால் உண்மையை இருவேறுபட்ட கூற்றுகளுக்கிடையே காணலாம். எல்லைபுறத்திற்குச் சென்று குடியேறியவர்கள் தங்களது மூல நாகரிகத்தின் முக்கியமான நிறுவனங்களை எடுத்துச் சென்றனர், அங்குப்போய் குடியேறிய சில ஆண்டுகளில் கல்விக்கூடம், ஆலயம். பல்கலைக்கழகம், சட்டமன்றம், அச்சுக்கூடம், செய்தித்தாள், பிரதிநிதிகள் அடங்கிய அரசு முதலியன நிறுவினர். எல்லைப்புறக் குடியேற்றங்களில் துவக்கத்தில் ஒழுங்கின்மையும், பண்பாட்டில் குறைபாடுகளும் காணப்பட்டன. ஆனால், அவையெல்லாம், காடாகக் கிடந்த நிலத்தில் ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்கும்போது ஏற்பட்ட பெருமுயற்சியில் இடைமாறுபட்டுக் காலஞ்சார்ந்த பண்புகளேயாம்.

# 17. அமெரிக்கப் பண்பாட்டில் மறுமலர்ச்சி

**சீர்திருத்தங்கள் தோற்றுவித்த பரப்பரப்பும் கொந்தளிப்பும் :**

உரிமைப் போருக்கும், உள்நாட்டுப் போருக்கும் இடைப்பட்ட காலத்தில் அமெரிக்க சமுதாயமானது மிகுந்த பரப்பரப்பும், கொந்தளிப்பும் மிக்கதாய் காணப்பட்டது. இதற்குக் காரணம் அன்றைய அமெரிக்க அரசியல், பொருளாதாரம், சமூகம், மதம், கல்வி இலக்கியம், இயல், இசை, நாடகம் ஆகியவற்றின் தொடர்பாக உருவான பல சீர்திருத்தக் கொள்கைளும், குறிக்கோள்களுமேயாகும். வேறுவகையில் சொல்வதானல், சிந்தனை ஓட்டமும், தீர்க்கதரிசனமும், நிரம்பிய சீர்திருத்தவாதிகள், அமெரிக்கப் பண்பாடு, மறுமலர்ச்சியுற மேற்கொண்ட அறிவுபூர்வமான், ஆக்கபூர்வமான, புத்துணர்வுமிக்க நடவடிக்கைகளே அன்றைய அமெரிக்காவினைக் கொந்தளிப்பும் பரப்பரப்பும் மிக்கதாய்ச் செய்தன.

**பாமர மனிதனைப் போற்றிய அரசியல்**

அமெரிக்க அரசியலும், ஆட்சியும் இக் காலக் கட்டத்தில், பாமர மனிதர்களின் கைகளுக்கு முழுமையாக மாறியது. பாமர மக்களால், பாமரமக்களுக்காக, அரசு இயங்கியது. எனவே, பாமரமக்களின் தேவைகளையும், நோக்கங்களையும், இயல்புகளையும், நிறைவுசெய்யும் வகையில் ஆட்சிமுறைகள் திருத்தி அமைக்கப்பட்டுத் தீவிரப்படுத்தப் பட்டன. இதன்காரணமாக சமத்துவம், சுதந்திரம், உரிமைகள் இன்ன பிறவும் முழுமையான அள்வில் பாமரமக்களுக்குக் கிடைத்தன.

குடியேற்றக் காலத்திலிருந்து அமெரிக்க மக்களில் ஒரு பகுதியினர், குறிப்பாக எல்லைவாழ்மக்கள், வாழ்க்கையோடும், இயற்கையோடும், இந்தியர்களோடும், விலங்குகளோடும் போராடுவது மிகச் சாதாரண நிகழ்ச்சியாகும். இதன்காரணமாகத் துணிவு, பொறுமை, சகிப்புத்தன்மை, சுயநம்பிக்கை, அறியாமை, முரட்டு

தன்மை, கடுஞ்சினம், பழிவாங்கும் இயல்பு, தயவுதாட்சண்யம் இன்மை என எல்லாமே அவர்களின் குணப்பண்புகளாயிருந்தன. இப்படிப்பட்ட குணக்கலவைகள் அவர்களிடையே குரூரமானதொரு தனித்தன்மையினை வளர்த்தன.

மேலும், குடியேற்றகாலந்தொட்டு, தொற்றித் தொடர்ந்து வருகிற பிரபுத்துவ நாகரிகத்தின் சாயல்களும், சாரல்களும் அழிக்கப்பட்டு அனைவருக்கும் பொருளாதார வாய்ப்புகள் கிடைக்க வழிசெய்யப் பட்டது. இதன்விளைவாகப் பாமரமக்களின் தனிவாழ்வில் வளமும் வசதியும், பொதுவாழ்வில் பங்கும், பாங்கும் பெருக அன்றைய அரசியல் முக்கிய காரணமாயிருந்தது.

**வளரும் பொருளாதாரம்**

**(a) நகரங்களின் வளர்ச்சி**

அமெரிக்க ஐக்கிய நாட்டில், மக்கள் உழைப்பின் காரணமாகச் செல்வமும் பெருகி வளர்ந்து வருகிற காலமாக இருந்த இக் காலத்தில் மக்கள்தொகை நாளுக்குநாள் பெருகியது. உள்நாட்டு மக்களின் இனப்பெருக்கத்தாலும் ஐரோப்பிய நாடுகளிலிருந்து குறிப்பாக ஜெர்மனி, ஸ்காட்லாந்து, அயர்லாந்து, ஸ்காண்டிநேவியா நாடுகள், ஹங்கேரி, கிரீஸ் ஆகிய நாடுகளிலிருந்து, மக்கள் அலைஅலையாக வந்து குடியேறியதாலும், மக்கள்தொகையானது தொடர்ந்து பெருகியபடியே இருந்தது. 1830-ஆம் ஆண்டில் 12,800,000 என இருந்த மக்கள் தொகை 1850-ஆம் ஆண்டில் 23,200,000 எனப் பெருகியது. இதில் 2,000,000 பேர் அயல்நாடுகளிலிருந்து வந்தேறியவர்கள்.

அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குள் ஐரோப்பிய நாட்டவர்கள் குடியேறு வதற்கு காரணங்கள் பல இருந்தன. அப்போது ஐரோப்பிய நாடு களில் நிலவிய அடக்குமுறை அரசியல், சகிப்புத் தன்மையற்ற மத விவகாரங்கள் வேலைவாய்ப்புகளைப் பறித்துக் கொண்ட, தொழில் - விவசாய புரட்சிகள், வர்க்கபேதம் பாராட்டும் சமூக அமைப்பு, ஏழ்மை, வாழ்வின்மை, வாய்ப்பின்மை ஆகியவைகளும், அமெரிக்காவின் வளமான பூமி, சுதந்திரமான அரசியல், சுயசார்புள்ள மதம், சமத்துவம் நிரம்பிய சமூகம், தொழில் வாய்ப்புகள், நம்பிக்கை யூட்டும் மறுவாழ்வு ஆகியவைகளாகும். பொதுவாக, பொருளாதார காரணங்களினால் உந்தப்பட்டுக் குடியேறியவர்களே அதிகம்.

குடிபெயர்ந்தவர்களில் பெரும்பகுதியினர் கிராமவாசிகள். இவர்கள் மினிசோட்டா, சிக்காகோ, பிலடெல்பியா, நியூயார்க். பால்டிமோர், பாஸ்டன் நகரங்களில் வாழ்வைத் துவங்கினர். அவர் களுடன், அமெரிக்கக் கிராமப்புறமக்கள் நகரங்கள் அளித்த வாழ்வு, வசதி, வாய்ப்பு, கவர்ச்சி எனப் பல்வேறு காரணங்களுக்காகக் கிராமங்களை விட்டு நகரங்களில் வந்து குடியேறினர். இன்னும் நகரங்

களில் வளர்ந்து வரும் தொழில் நிறுவனங்கள் உற்பத்தி - பங்கீடு - வர்த்தகமுறைகள் என்பனவற்ருல் கவரப்பட்டு வியாபாரிகள், முதலீடுசெய்பவர்கள் தொழிலில் ஈடுபட்டவர்கள், பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவர்கள், தரகர்கள் எனப் பல்லோரும் நகரங்களில் குழுமினர். மேலும், நகரங்கள் பெருகுவதற்கு, வளர்ந்துவரும் போக்குவரவுச் சாதனங்கள், தொழில் - விவசாய முன்னேற்றம் உயர் கல்விமுறை ஆகியவைகளும் காரணமாயின.

இவ்விதமாக வெவ்வேறு காரணங்களினுல் உந்தபட்டு, நகரங்களுக்குப் பெருமளவில் வந்துசேர்ந்த மக்கள் நகரங்களின் தோற்றத்தையே மாற்றியமைத்தனர்; அதோடுகூட அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் துணை செய்தனர்.

இருப்பினும், இப் பெருங்கூட்டத்தினர், பலவகையான பிரச்சனைகளையும் தோற்றுவித்தனர். நகரங்களில் இடவசதிகாரணமாய் அளவு கடந்த நெரிசல் உண்டாயிற்று. வீட்டுவசதி அனைவருக்கும் கிடைக்கவில்லை. மிகக் குறைவான இடங்களில் காற்றும், வெளிச்சமும் இல்லாத இடங்களில் கழிவுப்பொருள்கள் அப்புறப்படுத்த வசதிஇல்லாத காரணத்தினுல் தேக்கமுற்று நாறிக் கிடக்கும் இடங்களில் மக்கள் வசிக்க நேர்ந்தது,

மேலும் குடிசைப் பகுதிகள் நகரங்களைச் சுற்றி காளான்கள் போல் எண்ணற்றுப் பெருகின. அவைகளின் அமைப்பும், சுற்றுப்புறமும், ஆரோக்கியத்தின் எதிரிகளாயிருந்தன. இருப்பினும் தொழிலாளர்கள் தங்கள் குடும்பங்களுடன் வேறுவழியின்றி அவ்விடங்களில் வாழ்ந்தனர்.

இவர்களுக்குச் சேவைசெய்யவும், இவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்கவும், இவர்களின் உடல்நலன்களைப் பாதுகாக்கவும், தொழிற்சங்கங்களும் மனிதாபிமானத்தோடுகூடிய இயக்கங்களும் இக்காலத்தில் தோன்றின.

### போக்குவரத்தில் புரட்சி

நாட்டின் பொருளாதார வளர்ச்சியினை ஊக்குவிப்பதில், போக்குவரத்து முக்கிய பங்கு வகித்தது. கச்சாப்பொருள்கள் விளையும் பகுதிகளோடு, பொருள்கள் உற்பத்தியாகும் தொழிற்பேட்டைகளைப் பிணைப்பதும், தொழிற்பேட்டைகளுடன், விற்பனைப் பகுதிகளை சேர்த்து வைப்பதும் விற்பனை பகுதிகளோடு மக்கள் வாழும் இடங்களை நெருக்கமாக இணைத்து வைப்பதும், பொருளாதார முன்னேற்றத்திற்கு இன்றியமையாததாகும். இதன் அடிப்படையில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் நீர், நிலவழிகளில் முன்னேற்றம் ஏற்பட்டது. அவைகளில் செல்லத்தக்கப் புதிய வாகனங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இவைகள் அமெரிக்கப் பொருளாதாரத்தை வளர்க்கப் பெரிதும்

உதவின. அதுமட்டுமல்லாமல், மேற்குப் பகுதியானது விரிவடையவும் அமெரிக்க வணிகம் வளரவும் அவைகள் காரணமாயிருந்தன.

**கால்வாய்கள்**

கால்வாய்களை வெட்டிப் படகுகளின் மூலமாக ஏராளமான பொருள்களை எடுத்துச் செல்லத் தொடங்கினர். அதனால், தூரம், நேரம், செலவு, விபத்து, அழிவு ஆகிய எல்லாமே பெருமளவில் குறைந்தன. 1825ஆம் ஆண்டு ஈர்ரி கால்வாய்க் கட்டிமுடிக்கப்பட்டது. இதனால், இதுவரை புறக்கணிப்புச் செய்யபட்டு வந்த ஓஹியோ, இன்டியானா, இல்லினாய் ஆகிய மாநிலங்களின் வடபகுதிகள் முக்கியத்துவம் பெறத்தொடங்கின. அதேநேரத்தில் அந்தக் கால்வாயானது நியூயார்க் நகரத்தினை மேற்குப்பகுதிகளின் முக்கிய நுழைவாயிலாகவும் மாற்றியது. இதனை தொடர்ந்து கால்வாய்களைப் பல்வேறு பகுதிகளிலும் வெட்டி நாட்டின் பல பகுதிகளை - குறிப்பாக கிழக்கு, மேற்குப்பகுதிகளை - பிணைப்பதில் வேகமும், போட்டியும் ஆர்வமும் பிறந்தன. மிகக் குறுகிய காலத்தில் (1833 - 34) கிழக்குப் பகுதியிலுள்ள பெரிய ஏரிகள் (Great Lakes) மிஸிஸிபி நிதி பள்ளத்தாக்குடன் கால்வாய்கள் மூலம் இணைக்கப்பட்டுவிட்டன. 1850ஆம் ஆண்டில் போக்குவரத்துக்குப் பயன்பட்ட கால்வாய் வழிகளின் மொத்த நீளம் 3,200 மைல்கள் ஆகும். இதனால், சில நகரங்கள் வியாபார ரீதியில் வளர்ந்து முக்கியத்துவம் பெற்றன. உதாரணமாக, எல்லைப்புறத்தில் ஒரு சிறிய கிராமமாக இருந்த கிளீவ்லாந்து 1850-ல் ஒரு முக்கிய துறைமுகப்பட்டினமாக மாறியது. மேற்குப்பகுதி நோக்கி மக்கள் நகர்வதற்குக் கால்வாய்கள் பெரிதும் பயன்பட்டன.

**நீராவிப்படகுகளும், கப்பல்களும்**

போக்குவரத்துக்குக் கால்வாய், ஆறுகள், ஆகியவை பயன்பட்டதோடு கடலும் பயன்பட்டது. இதற்கு வாய்ப்பாக நீராவிப் படகுகளும், வேகமாகச் செல்லும் கப்பல்களும் கண்டுபிடிக்கப்பட்டன. இக் கப்பல்கள், போக்குவரத்தில் புரட்சியினை உண்டாக்கின. அவை தொலைதூரப் பகுதிகளுக்கு மிக அதிக அளவில் பொருள்களை ஏற்றிக் கொண்டு மிகக் குறைந்த காலத்தில் போய்ச்சேர்ந்தன. 1840ஆம் ஆண்டில் அலைகடலில் வேகமாகச் செல்லும் கப்பல்கள் (Clipper ship) கண்டுபிடிக்கப்பட்டு, கட்டிமுடிக்கப்பட்டன. அவை ஏராளமான பொருள்களையும் ஆள்களையும் ஏற்றிக்கொண்டு அட்லாண்டிக் கடலினை பதினொரு நாள்களில் கடந்தன. இதனால் அட்லாண்டிக் பகுதி கடல் வாணிகம் பெருகியது.

**இரயில் பாதைகள்**

1840ஆம் ஆண்டில் முன்பாக, இரயில்பாதைகள் சோதனைக் கட்டத்திலேயே இருந்து வந்தது. அதற்குப் பின், இரயில் பாதைகள்

நாடெங்கிலும் வேகமாகப் போடப்பட்டன. இரயில் பாதைகள் வழியே, பொருள்களைக் கொண்டு செல்வது, கால்வாய்களைக் காட்டிலும் வசதி மிக்கதாய் இருந்தது. விவசாயப் பண்ணைகளும், தொழிற்சாலைகளும் இரயில் பாதைகளை உள்நாட்டுவாணிகத்திற்குப் பெரிதும் பயன் படுத்தின. 1850ஆம் ஆண்டில் போக்குவரத்திற்குப் பெரிதும் பயன் பட்ட இரயில் பாதைகளின் மொத்த நீளம் 9,000 மைல்களாகும்.

**தொழில்**

தொழிலுற்பத்தி முறையில் உழைப்பைக் குறைக்கும் இயந்திரங்களைப் பல பயன்படுத்தி குறைவானக் காலத்தில் மலிவான முறையில் அதிக பொருள்களைத் தயாரிக்கதொடங்கினர். அமெரிக்கத் தொழில், இயந்திரரீதியில் வளர்ந்ததற்கான காரணங்கள் பலவாகும். அவைகளில் முக்கியமானவை, கால்வாய் வழிகள், இரயில் பாதை கள், கடல்வழிகள் ஆகியவை இணைத்து வைத்த புதிய வர்த்தக நிலையங்களும், புதியபுதிய உற்பத்தி இயந்திரங்களின் கண்டுபிடிப்பு களும் மக்கள் தொகைப் பெருக்கமும் ஆகும்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பருத்தி ஒரு முக்கிய காரணமாகும். பருத்தியினை உற்பத்தி செய்வதில் தென் பகுதி மாநிலங்கள் முன்னிலையில் நின்றன. அப் பருத்தியினை வட கிழக்கு பகுதி மாநிலங்கள், வாங்கி, துணிகளாக நெய்தன. பருத்தி விளைச்சலில் முழுமையாக ஈடுபட்ட தென்பகுதி மாநிலங்கள் இயந்திரப் பொருள்களை, வடகிழக்கு மாநிலங்களிலிருந்தும், உணவுப் பொருள்களை மேற்குப் பகுதியிலிருந்தும் பெற்றன.

**சில புதிய இயந்திரங்களின் கண்டுபிடிப்புகள் :**

1836-ல் ஜோசப் ஹென்றி என்கிற அமெரிக்க விஞ்ஞானி 'மின்காந்தத்தினை'க் கண்டுபிடித்தார். இது குறைந்த அளவு மின்சாரத்தினைக் கொண்டு அதிக அளவில் காந்தசக்தியினை உற்பத்தி செய்வதற்கு உதவியது. 1837ஆம் ஆண்டில் சாமுவல்மோர்ஸ் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்ட 'மின் தந்திமுறை' செய்தி தொடர்புகளில் மாபெரும் புரட்சியை உண்டாக்கியது. 1839ஆம் ஆண்டு சார்லஸ்குட்யியர் (Charles Gudyear) என்பவர் கண்டு பிடித்த 'வால்கனைஸ் ரப்பர்' அடுத்த சில ஆண்டுகளில் பேருந்து வாகனங்களின் உற்பத்தியினைப் பெருக்கியது. 1846-ல் இலியாஸ் ஹவ் (Elias Howe) கண்டுபிடித்த தையல்இயந்திரம் உடை தயாரிக்கும் தொழிலை தீவிரப்படுத்தியது. 1846-ல் ரிச்சர்ட் எம். ஒ, (Richard M. Hoe) என்பவர் கண்டுபிடித்த 'சுழலும் அச்சு இயந்திரம்' அறிவுவளர்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டது. மேலும் 'துணி துவைக்கும் இயந்திரம்' (Washing Machine) குளிர்சாதனப் பெட்டி ஆகியவை புதிய கண்டுபிடிப்புகளாகும்.

நியூஇங்கிலாந்து பகுதியில் இயந்திரங்களைக் கொண்டு துணி நெய்யும் தொழிற்சாலைகள் பெருகின. பென்சில்வேனியாவிலும் மற்ற நடுப்பகுதி மாநிலங்களிலும் இரும்புத் தொழிற்சாலைகள் வேகமாக வளர்ந்தன. நிலக்கல்சத்தற்ற நிலக்கரியைக் கொண்டு இரும்பை உருக்குதல் நடைமுறைக்கு வந்தபின் இரும்பின் உற்பத்தி இரட்டிப்பாயிற்று. மேற்குப் பகுதி நகரங்களில், குறிப்பாக சிக்காகோ, செயின்ட்லூயி, சின்சினட்டி ஆகிய நகரங்கள் கால்நடைகள், தானியங்கள், மாவுப்பொருள்கள் ஆகியவைகளை உற்பத்தி செய்தன. இவ்விதமாக அந்தந்தப் பகுதிகளின் வசதிகளுக்கு ஏற்பத் தொழில்களும் அமைந்தன. பெரும்பாலான தொழிற்சாலைகள் தனிப்பட்டவர்களின் மூலதனத்தைக் கொண்டோ பங்குதாரர்களைச் சேர்த்துக் கொண்டோ சொந்தமுறையில் சிறிதளவில் அமைந்திருந்தன.

1840-ல் சுமார் 1200 பருத்தி ஆலைகள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் இருந்தன. பருத்தியுடன் கம்பளி உற்பத்தியும் பெருகியது. 1850-ல் வடபகுதி மாநிலங்களில் சுமார் 1500 கம்பளித் தொழிற்சாலைகள் இருந்தன. இத் தொழிற்சாலைகள் தனிப்பட்டவர்களின் உடைமையாக இருந்தன. பெரும்பாலும் சிறிய அளவில் குறைந்த இயந்திரங்களைப் பயன்படுத்தி அக்கம்பக்கத்துக் கிராமப்புறமக்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டு செயற்பட்டன. நியூ இங்கிலாந்து பகுதியில் தோல்தொழிற்சாலைகள், தோல்பொருள்களை உற்பத்தி செய்தன. அறுவடை முடிந்த காலத்தில், அல்லது பயிர் செய்ய முடியாத பனிக்காலங்களில், விவசாயிகள், தோல்பொருள்களை உற்பத்தி செய்வதில் ஈடுபட்டனர்.

### தொழிற்சங்கங்கள்

இயந்திரரீதியான உற்பத்திமுறை பெருகப்பெருக பல புதிய பிரச்சினைகள் உருவாயின. அவைகளில் மிக முக்கியமானது தொழிலாளிகளின் நலன் சார்பான பிரச்சனைகளாகும். தொழிற்சாலைகளில் பல்வேறு பின்னணிகளைக் கொண்ட தொழிலாளர்கள் வேலை செய்து வந்தனர். முதலாவதாக, இயந்திரரீதியான உற்பத்தி முறை தோன்றியபின் சிறு அளவில் தொழில்களைச் செய்து வந்தவர்கள் நசிந்து, நிலைதாழ்ந்து போயினர். இதனால் முதலாளிகளாக இருந்தவர்கள் பலர் வேறுவழியின்றி, தொழிலாளர்களாய்ப் பெரிய பெரிய தொழிற்சாலைகளில் வேலைசெய்ய ஆரம்பித்தனர். அவர்களின் நிலை, நிபந்தனைகள் ஏதுமின்றி எவ்வளவு வேண்டுமானாலும உழைக்கத் தயாராய் இருந்த குடியேறிகளால் மேலும் மோசமாகியது. இரண்டாவதாக, அயல்நாடுகளிலிருந்து பிழைப்பைத்தேடி வருகிறவர்கள் — ஆண், பெண், குழந்தைகள் உட்பட அனைவரும் பெரிய தொழிற்சாலைகளில் தொழிலாளிகளாய் நிபந்தனைகள் எதுவுமின்றி வேலை செய்தனர். அவர்களின் பெருங்கூட்டம் தொழிற்சாலைகளுக்கு மலிவாக, ஏராளமான தொழிலாளர்களை அளித்தது.

ஆனல், இந்தப் பெருங்கூட்டமே தொழிலாளர்களின் நலன் கெடுவதற்கும் காரணமாயிருந்தது. மூன்ருவதாக, இயந்திர ரீதியான உற்பத்தி முறையில் பெரியபெரிய தொழில் நிறுவனங்கள் மட்டுமே நிலைத்திருக்க முடியும் என்பது நடைமுறையில் நிருபிக்கப் பட்டுவிட்டது. எனவே, உற்பத்திரீதியில் போட்டிகள் நாளுக்குநாள் வளர்வதைத் தவிர்க்கமுடியவில்லை. உற்பத்திமுறையில் இருந்த கடுமையான போட்டியும், தொழிலாளர்களைப் பெரிதும் பாதித்தது. சிறிய அளவில் உற்பத்திமுறையிருந்தபோது, முதலாளி - தொழிலாளிகளிடையே நிலவிய நெருக்கமான, ஆரோக்கியமான உறவுகள் இப்போது முறியத்தொடங்கின. நான்காவதாக, இந்த உற்பத்தி முறையானது சமூகத்தில், தொழிலாளி - முதலாளி என இருந்த இரண்டு வர்க்கங்களை, ஒன்றினுக்கொன்று நேர்எதிரான வர்க்கமாகத் தோற்றுவித்தது.

மனிதத் தன்மையற்றநிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டுச் சகித்துக் கொள்ள முடியாத சூழ்நிலைகளில் தொழிலாளிகள் பொறுமையுடன் தொடர்ந்து உழைத்து வந்தனர். மிகக் குறைந்த ஊதியத்திற்கு நாளொன்றுக்குப் பதினைந்துமணி நேரத்துக்கு குறையாமல் குழந்தைகள், பெண்கள் உள்பட தொழிலாளிகள் கடுமையாக உழைத்தனர். ஆரோக்கியமற்ற சூழ்நிலைகளில், போதுமான காற்ரேட்டமும் வெளிச்சமும் இல்லாமலிருக்கிற தொழிற்சாலை களிலும், மிகுந்த வெம்மையும், இரைச்சலும் தகுந்த பாதுகாப்பும் இல்லாத அபாயகரமான இயந்திரங்களை உடைய தொழிற்சாலை களிலும் வேலை செய்து விபத்துகளால் இறந்தவர்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும் கூடியது. அதுமட்டுமில்லாமல், தொழில்நிலையில் தோன்றிய நோய்களும் மரணத்துக்குக் காரணமாயிருந்தன. தொழிலாளர்கள் செய்கிற தவறுகளுக்கும், அவர்களின் திறமையற்ற தன்மைக்கும் கடுமையான முறையில் தண்டிக்கப்பட்டனர்.

இக் காலத்தில் 'தொழிலாளர்களின் பாதுகாப்பு' என்பது தெரியாத ஒன்று. சமூகமோ அரசோ அவர்களைப் பாதுகாக்க முன்வராத நிலையில் தொழிலாளர்களே தங்கள் நலன்களை காத்துக் கொள்ளும் முயற்சிகளை மேற்கொண்டனர்.

1825ஆம் ஆண்டுமுதல், வயதின் அடிப்படையில் ஆண்கள் அனைவருக்கும், ரோடுஐலண்டு தவிர மற்ற எல்லா மாநிலங்களிலும் வாக்குரிமை வழங்கப்பட்டிருந்தது. இதனைப் பயன்படுத்திக் கொண்டு தொழிலாளிகள் தங்கள் நலன்களைக்காத்துக்கொள்ளத் திட்டமிட்டனர். அனுபவத்தைப் பெறுவதற்கு உதவினர்; வழிகாட்டினர்; தூய சட்டமன்றங்களுக்குத் தங்களின் பிரதிநிதிகளை அனுப்பி வைத்துத் தங்களின் நலன்களைத் காப்பதற்கு ஏற்றவகையில் சட்டங்களை இயற்றிக் கொள்ள விரும்பினர். இந்த நோக்கத்தின் அடிப்படையில்

1827ஆம் ஆண்டில் பிலடெல்பியாவிலுள்ள நடுத்தரவர்க்கத் தொழிலாளிகளும், சிறு வியாபாரிகளும் ஒன்று சேர்ந்து, உழைப்பாளர் களின் கட்சி ஒன்றினைத் (Mechanics Union of Trade Association) தோற்றுவித்தனர். இதனைத் தொடர்ந்து, பதினைந்து மாநிலங்களில் இம்மாதிரியான உழைப்பாளர்களின் கட்சி (Working Men's Party) ஏற்பட்டது. அவைகள் இணைந்து கட்டுக்கோப்புடன் செயற்பட்டன.

**அவைகளின் கோரிக்கைகள் :** நாளொன்றுக்கு, பத்துமணிநேர வேலைத்திட்டம், கடன் காரணமாக விதிக்கப்படுகிற சிறைத் தண்டனையையொழித்தல், இலவசக்கல்வி வழங்குதல் ஆகியவை களாகும்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் இம் மாதிரியான அரசியல் கட்சிகளும் அவைகளின் கோரிக்கைகளும் எடுபட வாய்ப்பில்லாத காலம் அது. ஏனெனில், முதலாவதாக வளமான புதிய பூமி அளித்த, அளவு கடந்த வாய்ப்புகள் காரணமாக, மக்கள் வாய்ப்புகளைத் தேடி இடம்விட்டு இடம் பெயர்ந்தார்களே ஒழிய ஒரேஇடத்தில் நிலையாக இருந்து கொண்டு, ஒன்றுபட்டு வர்க்கரீதியாகவோ, இயக்கபூர்வமாகவோ போராட வேண்டுமென்கிற உணர்வு அவர்களிடம் தோன்றவில்லை. இரண்டாவதாக, சமுதாயஞ் சார்ந்த சட்டங்களை இயற்ற அதிகாரமற்ற நிலையில் அரசு இருந்தது. எனவே, அரசியல் ரீதியாகத் தொழிலாளர் களின் நலன்களைக் காத்தல் என்பது இயலாத காரியமாக இருந்தது. எனினும், பின்னாளில் இந்த உழைப்பாளர்கட்சியின் கோரிக்கைகள் சிலவற்றைக் குடியரசுக் கட்சியானது ஏற்றுக்கொண்டது.

**தொழிற்சங்கங்கள்**

இவ்விதமாக அரசியல் வழியே பெறமுடியாத சீர்திருத்தங்களைத் தொழிற்சங்கங்கள்மூலம் பெறமுடியும் என்று நம்பி, தொழிற் சங்கங்களை நாடுமுழுவதும், தொழிலாளர்கள் தோற்றுவித்துக் கொண்டனர். எல்லாவகையான தொழிலைப்புரிபவர்களும் தங்களுக் குரிய வகையில் அமைத்துக் கொண்டனர். 1837ஆம் ஆண்டில் வடக்குப் பகுதியிலுள்ள பன்னிரண்டு நகரங்களில் அமைந்திருந்த தனித்தனித் தொழிற்சங்கங்கள் ஒன்றாக, இணைந்து செயற்பட ஆரம்பித்தன. இவ்விதமாக நம்பிக்கையுடன் செயற்பட்டுக் கொண்டு வருகிற தொழிற்சங்கங்களும், இயக்கங்களும் முடங்கிச் செயலற்றுப் போகும் வகையில் 1837ஆம் ஆண்டில் உருவான பொருளாதாரச் சீர்கேடுகள் உருவாயின.

இந்நிலையில் சேவை மனம் கொண்ட சீர்திருத்தவாதிகள், தொழிலாளிகளின் அவலநிலையினைப் போக்க முயற்சிகளை மேற் கொண்டனர். ஜார்ஜ் ஹென்றி ஈவாஸ் (George Henry Evas) என்பவர் தேசீய சீர்திருத்தசங்கம் ஒன்றை (National Reform Association) ஒன்றை நிறுவினர். குடியேற்ற மக்களுக்கு இலவசமாய்

நிலம் வழங்க அரசினை வற்புறுத்தினர். இத் திட்டத்தினை நியூயார்க் ட்ரிபியூன் (NewYork Tribune) என்கிற செய்தித்தாள் வெகுவாக ஆதரித்து, மக்களின் ஆதரவினைத் தேடியது. அதற்கேற்ப 1862-ல் குடியிருப்புச்சட்டம் (Homstead Act) நிறைவேற்றப்பட்டது.

காலப் போக்கில் தொழிலாளிகளின் நலனில் எல்லோருக்குமே அக்கறை பிறந்தது. அரசும் அவர்கள் நலனைச் சமுதாயஞ் சார்ந்த நடவடிக்கைகளாகக் கருதித் தொழிலாளர்களைப் பாதுகாக்கும் வகையில் சட்டங்கள் இயற்றியது. 1847-ல் நியூஹாம்ஷயர் மாநிலம் நாளொன்றுக்குப் பத்துமணிநேர வேலைத்திட்டத்தை ஏற்றுக் கொண்டது. பின்னர், மற்ற மாநிலங்களும் இதன்வழியே சட்டங்களை இயற்றின. 1840ஆம் ஆண்டு வடபகுதி மாநிலச்சட்ட மன்றங்கள் கடன்காரணமாக வழங்கப்பட்ட சிறைத்தண்டனையை ரத்துசெய்தது. மேலும், தொழில் நிலைமை குறித்தும், தொழிற்சாலைகளில் ஏற்படும் விபத்துகள் குறித்தும் பாதுகாப்பு அளிக்கவும் சில மாநில அரசுகள் சட்டம் இயற்றின.

இவ்விதமாகக் காலப்போக்கில் தொழிலாளர்களின் நலனைப் போற்றிக்காப்பதில் மத்திய, மாநில அரசு பொறுப்பேற்று ஆவன செய்துவந்தது.

**வேளாண்மைப் புரட்சி**

போக்குவரத்தில் ஏற்பட்ட புரட்சிகரமான மாறுதல்கள் அட்லாண்டிக் பகுதிகளில் மிஸிஸிபி நதிப் பகுதியினைக் களஞ்சிய மாக்கிற்று. மேலும் 1846-ல் இங்கிலாந்தில் தானியங்களின்மீது போடப்பட்டிருந்த தீர்வை நீக்கப்பட்டது. இதன்காரணமாக உலகநாடுகள் ஏராளமான அளவில் தானியப் பொருள்களை இங்கிலாந்தில் இறக்குமதி செய்தன. அமெரிக்க ஐக்கிய நாடும் முதன் முறையாகத் தானியங்களை ஏற்றுமதி செய்யத் தொடங்கியது. இவ்வித மாக உள்நாட்டு வெளிநாட்டுத் தேவைகளை ஈடுசெய்யும் பொருட்டு விவசாய உற்பத்தியில் தீவிரமாக ஈடுபட்டனர்.

இதற்கு ஆதரவாக, வளமிக்க மேற்குப் பகுதிகளில், மக்கள் சென்று குடியேறத் தொடங்கினர். கிழக்குப் பகுதியிலிருந்து, ஈர்ரி கால்வாய் வழியே, மிக்சிகன், ஐயோவா, விஸ்கான்சின் ஆகிய பகுதி களில் குடியேறினர். 1850ஆம் ஆண்டிற்குள் மிசிசிபி நதியின் கிழக்குப் பகுதிகள் முழுவதுமாகக் குடியேறினர். இவ்விதமாக வளமிக்க மேற்குப்பகுதிகளில் குடியேறியவர்கள், விவசாயப் பொருள்களைப் பெருமளவில் உற்பத்தி செய்தனர்.

விவசாயப் பொருள்களை உற்பத்தி செய்யும் முறையிலும் முன்னேற்றம் கண்டனர். அந்தந்தப் பகுதிகளில் சிறப்பாக விளையும்

பொருள்களை விளைவிப்பதில் அக்கறையும் தீவிரமும் காட்டினர். உதாரணமாக நியூயார்க்கிலிருந்து விஸ்கான்ஸின் வரையிலும் உள்ள பகுதிகளில் மேற்குப் பகுதியானது, கோதுமைவிளையும் பகுதியாயிற்று. ஓஹியோவிலிருந்து, இல்லினுய் வரை உள்ள பகுதிகளில் கால்நடைப்பண்ணைகளும் மக்காச்சோளப் பயிர்களும் மிகுந்து காணப்பட்டன. கென்டக்கியிலிருந்து மிஸ்ஸௌரி வரையிலும் உள்ள பகுதிகளைப் புகையிலை ஆக்கிரமித்துக் கொண்டது. இவ்விதமாக அந்தப் பகுதியில் விளையக் கூடிய சிறப்புப் பொருள்களை விளைவித்து, விவசாயப் பண்ணைப் பொருள்களின் விளைச்சலைப் பெருக்கினர்.

### விஞ்ஞான பூர்வமான வேளாண்மை

விவசாயப் பண்ணை பொருள்களின் விளைச்சல் மேலும் அதிகரிக்க அப்போதிய சில கண்டுபிடிப்புகள் பெரிதும் பயன்பட்டன. இக் காலத்தில் விஞ்ஞானிகள் வேளாண்மைக்கு உதவும் இயந்திர கருவிகளை தொடர்ந்து கண்டுபிடித்தனர். இதன்காரணமாய் மேன் மேலும் பல புதிய பகுதிகள் வேளாண்மைக்கு உகந்ததாக மாறின. சில கண்டுபிடிப்புகள் 1837-ல் இல்லினுயைச் சேர்ந்த ஜான் டீரே (John Deere) என்பவர் எஃகுக் கலப்பினையும், 1831ஆம் ஆண்டில் வர்ஜினியாவைச் சேர்ந்த சைரஸ் ஹால் மெக்கார்னிக் (Cyres Hall Moccronic)' அறுவடைக் கருவியினையும், 1836-ல் மெயினைச் சேர்ந்த ஜான் என்பவரும், இரான்பட்ஸ் (Hiranpatts) என்பவரும் சேர்ந்து 'தாளடித்துப் புடைக்கும் பொறியைக்கண்டுபிடித்தனர். இவ்விதமான புதிய கண்டுபிடிப்புகள், விளைச்சலைப் பெருக்கப் பெருமளவில் உதவி செய்தன.

### சமூகம்

அமெரிக்கப் பண்பாடு மறுமலர்ச்சியுற்று 'வருகிற இக் காலக் கட்டத்தில், சமூகத்தில், மனிதனுக்கு ஏற்படக் கூடிய பிரச்சனைகளைப் பற்றிய கவனம் அதிகமாகியது. இதன்காரணமாக மனிதர்களை மேம் படுத்தி முழுமைப்படுத்துகிற திட்டங்களும் சீர்திருத்தங்களும் தோன்றின.

### மதுவிலக்கு இயக்கம்

மது அருந்தும் பழக்கம் ஏறக்குறைய எல்லோரிடமும் மாற்றிக் கொள்ளமுடியாத அளவிற்கு வளர்ந்துவிட்டிருந்த காலமது. சாதாரண வருவாயினை உடைய உழைப்பாளிகள் மதுவிற்குச் செல விட்டது அவர்களின் வருவாயைக் காட்டிலும், அதிகமாயிருந்தது. இந்த மது, குடிப்பழக்கம். அவர்களை நிரந்தரமாக தரித்திரர்களாயும் பரம்பரைக் கடனாளிகளாயும் மாற்றியது.

அளவுக்குமீறிய குடியின் காரணமாக அல்லலுற்றுக் கிடக்கும் அவர்களை அந்தக் கொடிய பழக்கத்திலிருந்துமீட்டுப்புது வாழ்வு பெறச் செய்தல் வேண்டுமென்று சீர்திருத்தவாதிகள் பொறுப்புடன் முயற்சி செய்யலாயினர். குடிசெய்யும் கொடுமைகளையும், கேடுகளையும் அனுபவித்த பெண்கள், சீர்திருத்தவாதிகளுக்குப் பக்கபலமாயிருந் தனர். இந்தத் தூய புனிதநற்பணிக்குஇவான்ஜெலிஸ்டுகளும் பலத்த ஆதரவு அளித்தனர். இன்றும் இலக்கியப் படைப்பாளிகள், பத்திரிக்கையாளர்கள் என அனைவரும் சமுதாயத்தின் மிகப் பெரிய எதிரியான குடிப்பழக்கத்தினைத் தாக்கினர்.

1826ஆம் ஆண்டில் அளவுக்குமீறிக் குடிப்பதைத் தடுப்பதற்குச் சங்கம் (American Society for the Promotion of Temperance) ஒன்றினை, பாஸ்டன் நகரில் லிமான் பீச்சர் (Lyman Beecher) என்பவர் தோற்றுவித்தார். இதனைத் தொடர்ந்து நாட்டின் பல பகுதிகளிலும் மதுக்குடிக்கும் அளவினைக் குறைக்கும் சங்கங்கள் தோன்றின.

**இச் சங்கங்களின் திட்டங்கள் :** மதுகுடிக்கும் அளவினைப்படிப் படியாகக் குறைத்துப் பின்னர் அறவே அப் பழக்கத்தினைப் போக்கிவிட வேண்டுமென்றும் வட்டார ரீதியாக முதலில் இதனைச் செயற்படுத்தி வெற்றிகண்டு, பின்னர் தேசிய அளவில் விரிவுபடுத்துதல் வேண்டும் என்பதாகும். ஆனால், 1840ஆம் ஆண்டிற்குப் பின்னர் பூர்ண மதுவிலக்கு வேண்டுமென்பது இவைகளின் கொள்கையாயிற்று.

கொடிய இக் குடிப் பழக்கத்திலிருந்து மக்களை மீட்க வெவ்வேறு வழிமுறைகளை மேற்கொண்டனர். வாஷிங்டனில் இருந்த குடியைக் குறைக்கும் சங்கமானது குடிப்பழக்கத்தை விட்டொழித்துத் திருந்திய வர்கள் மூலமாக குடிகாரர்களைத் திருத்த முயன்றன. குடிப்பழக்கத் தினை நிறுத்தியவர்கள் தங்களின் சொந்த கசப்பான - சோகமான அனுபவங்களை வெளிப்படையாகக் கூறி, குடித்துக் கெட்டழிபவர்களை திருத்தமுயன்றனர். அவர்கள் மது அருந்துபவர்களை திருத்தும் ஆர்வத்தில் இனிக் குடிப்பதிலலை என உறுதிமொழிகளைப் பெற்றனர். பட்டுத்தெளிந்து, திருந்திய அவர்களின் முயற்சி பாராட்டுதலுக்குரிய தாகும்.

குடிக்குறைப்பு- ஒழிப்புப் பிரச்சாரங்கள், பிரசுரங்கள், நூல்கள், பத்திரிக்கைகள் ஆகியவைமூலம் தொடர்ந்து நடைபெற்றது. டிமோதி ஷாய் ஆர்தர் (Timothy Shay Arthur) எழுதிய 'மது அருந்தும் அறையில் பத்து இரவுகள்' (Ten Nights in a Bar Room) என்னும் நாவல் குறிப்பிடத்தக்கதாகும்.

இக் குடியொழிப்பு இயக்கத்தில் பெண்களின் பங்கும் தீவிரமும் அதிகமாயிருந்தது. ஆண்களின் முகச்சுளிப்பையும் பொருட்படுத் தாமல் பொதுவாழ்வில் - சேவையில் முதன்முறையாகப் பெண்கள்

பங்கேற்றது இதன்மூலமேயாகும். பெண்களும் சங்கங்களை அமைத்துக் குடித்தடுப்பு இயக்கத்தில் 'தீவிரமாகச் செயற்பட்டனர்.

இவ்விதமாக அறிவுரைகள், முறையீடுகள் ஆகியவைமூலமாக குடிப்பவர்களைத் திருத்துவது இயலாது என்கிற நிலையில், சட்ட ரீதியான மதுவிலக்கினைச் சீர்திருத்தவாதிகள் விரும்பினார்கள். 1846ஆம் ஆண்டில் மெயின் மாநிலம் பூரண மதுவிலக்குச் சட்டத்தினை இயற்றியது. இதனைத் தொடர்ந்து பன்னிரண்டு மாநிலங்களில் இம் மாதிரியான சட்டங்கள் இயற்றப்பட்டன. பின்னாளில் இச் சட்டங்கள் கைவிடப்பட்டன.

சீர்திருத்தவாதிகளின் நோக்கம் முழுமையாக நிறைவேறவில்லை யென்றாலும் அவர்களின் இயக்க பூர்வமான முயற்சிகள் பாராட்டு தலுக்குரியன.

**பெண்களின் உரிமை**

மாறிவருகிற அமெரிக்கச் சமூகத்தில் பெண்களுக்குரிய பங்கினை, உரிமையினைப் பெறப் பெண்கள் போராடினர். இதுவரை ஆண் வர்க்கம் அவர்களுக்கு இழைத்த கொடுமைகள் - தீங்குகள் ஆகியவைகளை எதிர்க்கலாயிற்று. 'ஆணுக்குப் பெண் சமம்' என்கிற கொள்கையின் அடிப்படையில் எல்லாவகையான உரிமைகளுக் காகவும் போராடினர்.

தொழிற்புரட்சி உருவாக்கிய புதிய சூழ்நிலைகள் பெண்களுக்கு வேலைவாய்ப்புகளை அளித்தன. மேலும், ஆண் துணையை இழந்த ஆதரவற்ற குடும்பங்களில் உள்ள பெண்கள், போதியவருவாய் இல்லாத குடும்பங்களில் உள்ளபெண்கள், அனைவரும்சம்பாதித்தலைத் தவிர்க்க முடியாத குடும்பங்களில் உள்ள பெண்கள் எனப் பலவகை யான பொருளாதார நெருக்கடிகளினால், பெண்கள் உந்தப்பட்டு, தொழிற்சாலைகளில் எல்லா வேலைகளையும் செய்யத் தயாராய் இருந் தனர். தொழிற்சாலைகளில் கணக்குகளை எழுதவும், காரியதரிசிகளாக இருக்கவும் அவர்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். பொறுமை யுடனும், பொறுப்புடனும், புன்சிரிப்புடனும் அவர்களுக்கு அளிக்கப் பட்ட வேலைகளைத் திறமையுடனும செய்யப் பழகிக்கொண்டு வரலாயினர்.

இவ்விதமாக வேலைவாய்ப்புகளினால் மட்டுமின்றி பெண்கள் பொதுவாழ்விலும் சேவையிலும் பங்குகொள்ள அடிமையொழிப் பும், குடியொழிப்பும் நல்ல வாய்ப்பினை அளித்தன. இச் சீர்திருத்த இயக்கங்களில் ஆணுக்குச் சமமாய் நின்று சேவை புரிந்தனர். இவ்விதமாக அவர்கள் மெல்ல மெல்ல வளர்ந்து, மேலும் பல பொதுப் பணிகளில் பங்கேற்று வரலாயினர். இந் நிலையில், 1841ஆம்

ஆண்டில், இலண்டனில் நடந்த உலக அடிமைத்தன எதிர்ப்பு மாநாட்டில் பெண் பிரதிநிதிகள் அனுமதிக்கப்படவில்லை. அமெரிக்காவின் பிரதிநிதிகளாய்ச் சென்ற லுக்ரிஷியாமாட் (Lucretia Mott), எலிசபெத் ஸ்டான்டன் (Elizabeth Stanton) என்ற இரு பெண்களும், இம் மாநாட்டில் பங்குபெற அனுமதிக்கப்படவில்லை.

அதன்பின்னர், சமுதாயத்தில் பெண்களுக்குரிய பங்கினைப் பெற, இயக்க பூர்வமாகச் செயற்படலாயினர். 'ஆணுக்குச் பெண் எவ்வகையிலும் தாழ்ந்தவள் அல்லள்' என்பதனை வலியுறுத்தினர். 1848ஆம் ஆண்டில் நியூயார்க்கில், 'முதலாம் பெண்களின் உரிமைப் பேரவை' (First Women's Rights Convention) ஒன்றை மேலே குறிப்பிட்ட அந்த அந்த இரண்டு பெண்களும் கூட்டினர். இப்பேரவையில் மாறிவருகிற பெண்களின் நிலைமையைப்பற்றியும், முக்கியத்துவத்தைப்பற்றியும் சமத்துவத்தைப்பற்றியும், பெண்களின் வாக்குரிமையினைப்பற்றியும் எடுத்துரைத்தனர். மேலும் காலங்காலமாய் ஆண்வர்க்கம் பெண்வர்க்கத்தின்மீது கொண்டுள்ள ஆதிக்கத்தினையும் பெண்வர்க்கத்திற்கு இழைக்கப்படுகிற கொடுமைகளையும் கண்டித்தனர். அதோடுகூட நியாயமற்ற விவாகரத்துச் சட்டங்கள் அளிக்கப்பட்ட அளவான கல்வி, வேலைவாய்ப்புகள், வாக்குரிமைகள் சார்பான கோரிக்கைகளையும் எழுப்பி, பெண்களின் உரிமைகளைப் பிரகடனப்படுத்தினர். இதுபோன்று பெண்களின் பேரவை நடெங்கிலும் நடத்தப்பட்டுக் கோரிக்கைகள் எழுப்பப்பட்டன.

இவ்விதமாகப் பெண்கள் தங்கள் உரிமைகளுக்காக இயக்கபூர்வமாக போராடிய போதும்கூட 1860ஆம் ஆண்டுக்கு முன்பாக அவர்கள் விரும்பியபடி ஆணுக்குச் சரிசமமாய் உயரமுடியவில்லை. எனினும், அப்படியொரு விழிப்பு, நோக்கம், இயக்கம் உருவாகியிருந்தது பாராட்டுதலுக்குரியவைகளாகும்.

**ஊனமுற்றோரின் நலன்**

ஊனமுற்றோருக்கும், மனநோய் கொண்டவருக்கும் புனர்வாழ்வு அளிப்பதைப் பிறவியின் பயனாகக் கருதி அவர்களுக்குத் தொண்டு செய்ய, கருணை உள்ளம் கொண்ட சில சீர்திருத்தவாதிகள் இக் காலக் கட்டத்தில் வாழ்ந்தனர்.

தாமஸ் எச். காலன்டெட் (Thomas H. Gallendet) என்னும் பெயருடையவர், பிலடெல்பியாவிலுள்ள ஒரு வியாபாரியின் மகன். இவர் பாரிஸ் நகரிலுள்ள ஆபே சிக்கர்டு (Abbe Sicard) என்பவரிடம் ஊமை, செவிடர்களுக்கு வழங்கும் கல்விமுறையினைப் பயின்று அமெரிக்கா திரும்பிவந்து அதன் அடிப்படையில், கானக்டிக்கட்

மாநிலத்திலுள்ள, ஹார்ட்போர்டு என்னுமிடத்தில் முதன்முதலில் ஊமை, செவிடர்களுக்கான பள்ளி ஒன்றை ஆரம்பித்தார்.

பாஸ்டன் நகரத்தைச் சேர்ந்த சாமுவேல் கிரிட்லேஹொ (Sammuel Gridley Howe) என்பவரும் அவருடைய நண்பர் மைக்கேல் அனக்னுஸ் (Micheal Anagnos) என்பவரும் சேர்ந்து குருடர்களுக்கான பள்ளி (Perkins Institute for the Blind) ஒன்றினைத் தொடங்கினர்கள்.

**மனநோயுற்றோரின் நலன்**

சித்தம்கலங்கியவர்களின் பேச்சுகளையும், செய்கைகளையும் பொறுத்துக்கொள்ளவோ புரிந்துகொள்ளவோ தேவையான மனப் பக்குவமும் உறுதியும் மக்களிடையே வளராதிருந்த காலத்தில் மனநோய்க்கு ஆளானவர்களைக் குற்றவாளிகளைப்போலக் கருதி, அவர்களை அடக்கவும், பணியவைக்கவும், அவர்களை விலங்கிட்டும், நிருவாணமாக்கியும், இரும்புச்சங்கலியால் அடித்தும், சித்திரவதை செய்தும், சிறைசெய்தும் கொடுமைப்படுத்தினர்.

இவ்விதம் மனநோய்க்கும், மற்றவர்களின் கொடுமைக்கும் ஆளானவர்கள்பால் அன்பும் இரக்கமும் கொண்டு, அவர்களுக்கு இழைக்கும் கொடுமைகளிலிருந்து அவர்களைக் காத்துக் குணப்படுத்தும், சீர்திருத்த முயற்சியினை நியூஇங்கிலாந்தைச் சேர்ந்த டோரோதி லிண்ட்டி (Dorothea Lynde Di) என்னும் பெயருடைய பெண்மணி மேற்கொண்டார். தமது 33 வயதுமுதல், மனநோய்க்கு ஆளானவர்களுக்காக, வாழ்நாள் முழுவதையும் தம்மை அர்ப்பணித்துக்கொண்டு, சேவை செய்தார்.

அவர் அமெரிக்காவின் எல்லாப் பகுதிகளுக்கும் சென்று மனநோய்க்கு ஆளானவர்களின் அவலநிலையினைக் கண்ணுற்று வருந்தினர். தென்பகுதி மாநிலங்களுக்குத் துணிச்சலுடன் சென்று திரும்பிய பெண் சீர்திருத்தக்காரர் அவர் ஒருவரே. மனநோய்க்கு ஆளானவர்களை மனிதத்தன்மையுடன் நடத்தும்படி மக்களுக்கு அவர் இயம்பினர். 1843ஆம் ஆண்டில் தம்நினைவுகளைத் தொகுத்து எழுதி மசாசூசெட்ஸ் சட்டமன்றத்திற்கு அனுப்பிவைத்தார். அதனைப் படித்தவர்கள் மனநோய்க்கு ஆளானவர்களின் கதியை உணர்ந்து அதிர்ச்சி அடைந்தனர். அமெரிக்க ஐக்கியநாட்டு அரசினைத் தூண்டி 'செயின்ட் எலிசபெத்' என்னும் பெயருடைய மருத்துவமனையினை மனநோய்க்காரர்களைக் குணப்படுவதற்காக ஏற்படுத்தினர். சிறையிலிடப்பட்ட மனநோய்க்காரர்கள் மருத்துவமனைக்கு மாற்றப்பட்டனர்.

இவ்விதமாக ஊனமுற்றதனுல் வாழ்க்கையை இழந்தவர்கள், மூளைகுழம்பியதால் நினைவு இழந்தவர்கள் போன்றவர்களுக்குப் புது

வாழ்வு—புனர்வாழ்வு அளித்த அந்தச் சீர்திருத்தவாதிகள் உண்மையில் அதிசயப்பிறவிகளே.

**தண்டனைகளில் சீர்திருத்தம் ;**

மனிதத்தன்மை சட்டத்தொகுப்புகளிலும் ஊடுருவியது. தெரிந்தோ தெரியாமலோ குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பதில்கூட, மனிதத்தன்மை இருத்தல் வேண்டுமென்று சீர்திருத்தவாதிகள் நினைத்தனர். இதன்விளைவாக, சவுக்கடி, பொதுஇடங்களில் தூக்கிடுதல் போன்ற கொடிய தண்டனைகள் ஒழிக்கப்பட்டன. தவறு செய்தவர்களைத் தனிமைப்படுத்தி தண்டிக்கிற இடமே சிறைகளாகும். ஆனால் நிலைமை மிகக்கேவலமாய் இருந்தது. சிறைகளைச் சீர்செய்யவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. தியோடர் பார்க்கர் (Theodre Parker) என்பவர் இதில் அக்கறை எடுத்துக்கொண்டு இது தொடர்பான சீர்திருத்தத்திற்காகப் பிரசாரம் செய்தார்.

**கல்வி**

குடியேற்றக்காலத்தில், மக்கள் வாழ்க்கையோடு போராடிக் கொண்டிருந்த காரணத்தினாலும், போதிய கல்விவசதி கிடைக்காத காரணத்தினாலும், கல்விக்கு அவ்வளவாக முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. பெரும்பாலும், வசதிமிக்கவர்கள், கல்வியின் பயனை உணர்ந்தவர்கள் தங்களுடைய சுயமுயற்சியினாலும், பொறுப்பினாலும் தங்களுடைய விருப்பங்களுக்கு உகந்த வகையிலும், தங்களுக்கு விருப்பமான பாடங்களையும், தங்கள் வீட்டுப்பிள்ளைகளுக்குத் தனிப்பட்ட முறையில் கல்வியினை அளித்துவந்தனர். இம் முறையானது குடியேற்றக்காலத்திற்குப் போதுமானதாயும், பொருத்தமானதாயும் இருந்தது. ஆனால், சீரிய முறையில் செம்மையுற்றுக்கொண்டு, வளர்ந்துவரும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு நல்லதொரு கல்வி திட்டம் இன்றியமையாததாகும். ஏனெனில், சுதந்திரமான, மக்களாட்சியானது நீடித்து நல்லமுறையில் செயற்படக் கல்வியறிவு பெற்ற மக்கள் — வாக்காளர்கள் — மிகவும் அவசியமாகும். அதோடுகூட, வர்க்கபேதமற்ற சமுதாயம் உருவாகவும் கல்வி மிகவும் பயன்படும். இவ்விதமாகப் பலவகையிலும் உதவும் கல்வியினை வளர்க்கவும், அதனை அனைவரும் பெறத் தேவைப்படுகிற சீர்திருத்தங்கள் தோன்றின.

இச் சீர்திருத்தங்களினால், ஆரம்பக்கல்வி இலவசமாயிற்று ; கல்லூரிப்படிப்பின் அளவு பெருகியது ; பெண்கள், முதியோர் நீக்ரோக்கள் ஆகியோரின் கல்வி வளரலாயிற்று ; மேலும் கல்விமுறையானது ஆரம்பக்கல்வி, உயர்தரக்கல்வி, கல்லூரி — பல்கலைக்கழகக் கல்வி என வகைப்படுத்தப்பட்டு வழங்கப்பட்டது.

ஆரம்பக்கல்வியானது, ஏறக்குறைய, புறக்கணிப்புச் செய்யப்பட்டு வந்த ஒரு விஷயமாகும்; மேற்குப் பகுதி மாநிலங்களில், ஆரம்பக் கல்வி இருந்துவந்தபோதிலும், திருப்தியளிக்கக் கூடிய அளவில் இல்லை : இங்கேயும் அங்கேயுமாக, குவேக்கர்களும், செல்வந்தர்களும், வசதியற்ற குடும்பங்களில் உள்ள பிள்ளைகளுக்கு, இலவசமாய் ஆரம்பக்கல்வியினை அளிக்க ஏற்பாடு செய்துவந்தனர். எனினும், பெருகிவரும் மக்கள்தொகைக்கு, ஈடுசெய்யக் கூடிய அளவிற்கு ஆரம்பக் கல்வியானது இல்லை.

இக் குறையினைப்போக்கும்விதத்தில், 1837ஆம் ஆண்டில் மசாசூசெட்ஸைச் சேர்ந்த ஹோரஸ் மான் (Horace Mann) என்னும் பெயருடைய சீர்திருத்தவாதி ஒருவர், கல்விவாரியம் (State Board of Education) உருவாகப் பெரிதும் முயற்சி செய்தார். பின்னர் அவர் மாசாசூசெட்ஸில் உருவான கல்விவாரியத்திற்குச் செயலாளராக, பல ஆண்டுகளுக்கு இருந்து தொண்டாற்றினர். மான் செயலாளராக இருந்த காலத்தில், கல்விமுறையில், பல சீர்திருத்தங்களை ஏற்படுத்தினர். அவற்றில் முக்கியமானவை சில; (1) பள்ளிகளின்மீது அரசினது கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டன. (2) பொதுப்பள்ளிகள் பல துவங்கப்பட்டன. (3) பள்ளிகளுக்கான நிதி ஒதுக்கீடுகள் அதிகரிக்கப்பட்டன. இவ்விதமாக இதுவரையிலும் புறக்கணிப்புச் செய்யப்பட்டுவந்த ஆரம்பக்கல்வியானது வடபகுதியில் முழுவதும் பிரபலமானது. கல்லூரிப்படிப்பினைப் பொறுத்தமட்டில், அவருடைய சீர்திருத்தங்களை மற்றப் பகுதிகளிலுள்ள மாநிலங்களும் விரைவிலேயே பின்பற்றின. அதன்காரணமாக நாடெங்கிலும் அரசின் ஆதரவு பெற்ற ஆரம்பப்பள்ளிகள் துவங்கப்பட்டன. 1850ஆம் ஆண்டிற்குள் ஆரம்பப்பள்ளிகளைத் தொடங்கி நடத்தும் பொறுப்பு, அரசினைச் சேர்ந்தது என்கிற கொள்கை வடபகுதி முழுவதுமே ஏற்றுக்கொள்ளப்பட்டது.

நீக்ரோ சிறுவர் - சிறுமியர்களுக்கும் கல்வி அளிப்பதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1822ஆம் ஆண்டில், பிலடெல்பியாவில், நீக்ரோக்களுக்கானப் பள்ளிக்கூடம் ஒன்று தொடங்கப்பட்டது. அந் நிலையில் நீக்ரோக்களும் முற்போக்குச் சிந்தனையாளர்களும் நீக்ரோக்களுக்கெனத் தனியாகப் பள்ளிக்கூடங்கள் அமைவதையே விரும்பினர். அடிமை ஒழிப்பானது தீவிரமடைந்த காலத்தில் நீக்ரோ சிறுவர் சிறுமியர்களைத் தனியே பிரித்து வைத்துக் கல்வி போதிக்கும் முறையானது கடுமையான விமரினத்திற்கு ஆளாகியது. 1855ஆம் ஆண்டில், மசாசூசெட்ஸ் மாநிலத்தில், முதன்முதலாக அரசினரின் ஆரம்பப்பள்ளிகளில் இனம், மதம், நிறம் என்கிற வேறுபாடுகளைப் பாராமல் எல்லாரும் சேர்ந்து கல்வி பெற ஏற்பாடு செய்யப்

பட்டது. இதனைத் தொடர்ந்து மற்ற வடக்கு மாநிலங்களிலும் இம் முறையானது மெல்லமெல்ல நடைமுறைக்கு வந்தது. இருப்பினும் நீக்ரோ சிறுவர் சிறுமியரைத் தனியாகப் பிரித்துவைத்துக் கல்வி போதிக்கும்முறை சில இடங்களில்தொடர்ந்து இருந்துவந்தது .

பொதுவாகப் பள்ளிக்கூடங்களில் நல்ல குணங்களை—உழைப்பு, முயற்சி, தன்னம்பிக்கை, சிக்கனமாயிருத்தல் போன்ற குணங்களை—ஊக்கிவளர்க்கிற வகையில் பாடங்கள் இருந்தன.

கல்லூரிப்படிப்பின் அளவும் தரமும், இக் காலத்தில் வேகமாய் வளர்ந்து வரலாயிற்று. நாடெங்கிலும், குறிப்பாக வடபகுதி மாநிலங்களில் பல புதிய கல்லூரிகளும், பல்கலைக்கழகங்களும் தோன்றலாயின. மேற்குப் பகுதிகளில் மட்டும் 1860ஆம் ஆண்டிற்குள் சுமார் இருபது பல்கலைக்கழகங்கள் தோன்றின என்பது குறிப்பிடத் தகுந்ததாகும். பெண்களின் உயர்கல்விக்கும், முக்கியத்துவம் அளிக்கப்பட்டது; பெண்களுக்கென்று, தனிப்பட்டமுறையில் கல்லூரிகள் தோற்றுவிக்கப்பட்டன. மவுண்ட் ஹோலியோக் கல்லூரி, (Mt. Holyoke College) பெண்களுக்கென்று தோற்றுவிக்கப்பட்டதாகும். சில கல்லூரிகளில், ஆண்களும், பெண்களும் சேர்ந்து பயிலும் முறை ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஓபர்லின் கல்லூரி (Oberlin College) இவ்வகையைச் சேர்ந்ததாகும். கல்லூரிகளில், பொதுவாக, இலக்கியம், அறிவியல், சட்டம், மருத்துவம் போன்ற பாடங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.

முதியவர்களின் கல்விக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. ஆங்காங்கே நூலகங்கள் ஏற்படுத்தப்பட்டன. நூலகங்களைவிட முக்கியமானது, சொற்பொழிவுமன்றங்களை ஏற்படுத்தியது ஆகும். 1826ஆம் ஆண்டில் மசாசூசெட்ஸில் உள்ள மில்பரி (Millbury) என்னுமிடத்தில் முதன்முதலாகச் சொற்பொழிவுமன்றம் ஒன்று நிறுவப்பட்டது. அதனைத் தொடர்ந்து, பல்வேறு இடங்களில், இம்மாதிரியான சொற்பொழிவுமன்றங்கள் நிறுவப்பட்டன. 1834ஆம் ஆண்டில், பதினைந்து மாநிலங்களிலுமாகச் சேர்ந்து, சுமார் மூவாயிரம், மன்றங்கள் நிறுவப்பட்டிருந்தன.

அம் மன்றங்களுக்குப், பிரபலமான, சிறந்த பேச்சாளர்களை அழைத்துச் சொற்பொழிவுகள் நிகழ்த்தச்செய்தனர். அம் மன்றங்களில், அரசியல், பொருளாதாரம், இலக்கியம், சமயம், அறிவியல், விவசாயம், தொடர்பான புதிய செய்திகள், முறையாகச் சொல்லப்பட்டன; விளக்கமாக விவாதிக்கப்பட்டன. சுருங்கச் சொல்லின் மக்களைக் குடியாட்சி அரசியல்முறைக்குப் பயிற்சி அளிக்கும் பாசறையாக, அம் மன்றங்கள் விளங்கின.

நாட்டின் கல்வி வளர்ச்சியில், திருச்சபைகளும், முழுமையாக ஈடுபட்டன. அவை சமயச்சார்பான ஆன்மீகத் தொடர்பான விவகாரங்களை மக்களிடையே பரப்பின. அதோடு மக்களுக்கு நீதிநெறிகளையும், புனிதமார்க்கங்களையும் போதிக்க, பல்வேறு சங்கங்களைத் திருச்சபைகள் தோற்றுவித்தன. 'அமெரிக்கன் பைபிள் சொசைட்டி' (American Bible Society) 'அமெரிக்கன் சண்டே ஸ்கூல் யூனியன்' (American Sunday School Union) ஆகியவை மேற்கூறிய காரணங்களுக்காக ஏற்படுத்தப்பட்டவைகளேயாகும்.

தென்பகுதி மாநிலங்களில், கல்வியில் முன்னேற்றமோ விரிவோ ஏற்படவில்லை; அதன்காரணமாக, கல்வியானது இன்னமும் செல்வமும், வசதியும் உடைய வீட்டுப்பிள்ளைகளுக்கு மட்டுமே கிடைத்தது; தென்பகுதியின் பொருளாதார—சமூகப் - பண்பாட்டு வாழ்க்கைமுறைகளின் காரணமாக கல்விக்குரிய முக்கியத்துவம் அளிக்கப்படவில்லை. எனவே, கல்வியானது மிகவும் பின் தங்கிய நிலையில் இருக்க வேண்டியதாயிற்று. தென்பகுதி மாநிலங்களில், வடகரோலினா, கென்டக்கி ஆகிய மாநிலங்களில் மட்டுமே பொதுக்கல்விமுறை நிலவியிருந்தது. ஏற்கெனவே நிறுவப்பட்ட கல்லூரிகள் தொடர்ந்து செயற்பட்டு வந்தன.

இவ்விதமாக, அக் காலக் கட்டத்தில், அமெரிக்க ஐக்கிய நாட்டில் கல்வியின் பயனை உணர்ந்து, அது மேம்பட்டு வளர்வதற்கு, அரசுகள், திருச்சபைகள், செல்வந்தர்கள் எனப் பல முனைகளிலிருந்து ஆதரவு பெருக்கெடுத்தோடியது. அக் கல்வியின் நற்பயனால் அமெரிக்கச் சமூகம் பண்பட்டு, பரிமளிக்கத் தொடங்கியது.

**மதம்**

அக் காலத்தில் தோன்றிய ஆன்மீகப்போக்குகளும், - சமய உணர்வுகளும்கூட தனிமனிதனையே மையமாகக் கொண்டிருந்தன. அதில் 'மெய் விளக்கக் கோட்பாடு' (Transcendentalism) என்பதும் ஒன்றாகும்.

கடவுள்மீது நம்பிக்கையற்றும், சமயஉணர்வுகளைப் புறகணித்து விட்டும், வாழத்தெரியாத, துணியாத மக்கள் நிரம்பிய அக் காலத்தில், வாழ்வுப்போராட்டத்திலிருந்த எல்லையற்ற அச்சுறுத்தல்களும், அபாயங்களும் மக்களை ஆண்டவனிடம் பூரணமாகச் சரணடையச் செய்தன. அந் நிலையில் மக்களுக்கு ஆண்டவனிடம், பக்தி, நம்பிக்கை, பயம் போன்ற உணர்வுகளே மேலோங்கி நின்றன.

இவ்விதமாக மக்களிடையே வளர்ந்து கிடக்கிற இந்த அச்சம் கலந்த பக்தி உணர்வுகள் காரணமாக ஆண்டவனிடத்தில் தங்களை

நிரந்தரமாக ஒப்படைத்துவிட்டு, 'நடப்புகள் எல்லாவற்றிற்கும் ஆண்டவனே பொறுப்பு' என்று நம்பி ஆண்டவனிடம் சுமைகளை இறக்கிவிட்டு மக்கள் இருந்துவந்த அக் காலத்தில், 'ஆண்டவனின் அருள் அனைவருக்கும் கிடைக்காது என்றும், அவரால் தேர்ந்தெடுக்கப் படுகிற சிலருக்கு மட்டுமே அந்தப் பாக்கியம் கிட்டும் என்றும், மற்றபடி ஒவ்வொருவரின் வாழ்க்கையும், அவர்களின் வினைப்பயனுக்கேற்ப, முன்கூட்டியே நிருணயிக்கப்பட்டு விடுகிறதென்றும், தீயவினை செய்த வர்கள் தண்டனைக்கு உள்ளாவார்கள் என்றும், தண்டனையிலிருந்து விடுபெற்று அருளைப்பெற ஆண்டவனிடம் சரணடைதல் வேண்டு மென்றும் கால்வினிஸ்டுகள் (Calvinists) பிரச்சாரம் செய்தனர்.

கால்வினிஸக்கொள்கைக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் 'மனிதர்களை அச்சுறுத்திப் பிணைத்து வைக்கிற, சமயமென்னும் சங்கிலியை உடைத்தெறிந்து அவர்களை விடுவிக்கிற வகையிலும், அவர்களின் அறியாமையை வளர்த்து அவர்களைச் சுரண்டுகிற திருச் சபையினரின் பிடியிலிருந்து அவர்களைக் காக்கிற வகையிலும், ஆன்மீக விவகாரங்களிலும் சீர்திருத்தங்கள் தோன்றின. அவைகளில் 'மெய்விளக்கக் கோட்பாடும்' ஒன்றாகும்.

'மெய்விளக்கக்கோட்பாடு' கொள்கையினை முழுமையாக ஏற்றுக் கொண்டவர் ரால்ப் வால்டோ எமர்சன் (Ralph Waldo Emerson) என்பவராவார். அவர் ஓர் இலக்கிய மேதை. அமெரிக்கக் குடியரசின் தீர்க்கதரிசியாக, ஜெபர்ஸனும், அதன் வீரப்புருஷராக ஜேக்ஸனும், அதன் மதகுருவாக எமர்சனும் விளங்கினார்கள். 1836 ஆம் ஆண்டில் எமர்சன் எழுதிய 'இயற்கை' (Nature) என்னும் புத்தகம், 'மெய் விளக்கக் கோட்பாட்'டின் பைபிள் ஆகும். 1820ஆம் ஆண்டிலிருந்து 1860ஆம் ஆண்டுவரைக்கும் உள்ள இடைப்பட்ட காலத்தில் உருவான இலக்கியங்கள் பலவும் 'மெய்விளக்கக்கோட்பாட்'டினைப் பற்றியே இருந்தன. அதன் கொள்கைகளைப் பரப்ப 'டயல்' (Dail) என்கிற பத்திரிக்கையும் நடத்தப்பட்டது. மெய்விளக்கக்கோட்பாடு சார்பாக எழுந்த இலக்கியங்கள் அக் காலத்தின் சமயரீதியான புத்துணர்வு களைப் பிரதிபலித்தன.

'மெய்விளக்கக்கோட்பாடு' தனிமனிதத்தன்மைகளை ஏற்றுக் கொள்கிற - அங்கீகரிக்கிற ஆன்மீகக் கொள்கையினை உடையது. 'ஒவ்வொரு மனிதனும் இயல்பாகப் பிறப்பிலேயே நல்லவன் என்றும், தனிமனிதனின் தூயப்பண்புகளுக்கு, மீறிய புனிதம் வேறொன்றும் இல்லை என்றும், ஒவ்வொரு மனிதனிடத்திலும், தெய்வீகத்தன்மை வாழ்கிறது என்றும், எனவே மனிதனும் தெய்வமாகலாம் என்றும் உணர்த்தியது. மேலும், ஒவ்வொருவரிடமுள்ள தெய்வத்தன்மையைப் போற்றி வளர்த்து அதனை முழுமைபெறச் செய்தால், அங்கே ஒரு

மகாத்மா உருவாகக்கூடும் என்றும் உணர்த்தியது. ஒவ்வொருவரும் தங்களின் மனச்சாட்சிக்கு உண்மையாயிருத்தல் வேண்டும் என்றும், அதன் குரலுக்குச் செவிசாய்க்கவேண்டும் என்றும், இப்படிப்பட்டவர்கள் வாழ்கிற சமூகத்தில் மக்களாட்சியானது முழுமை பெறும் என்றும் எடுத்துச் சொன்னது.

தனிமனிதனின் ஆன்மாவிற்கு, உள்ளுணர்வுக்கு, முடிவான உண்மைகளை உணர்ந்துகொள்ளும் ஆற்றல் இயல்பாகவே உண்டு என்றும், அந்த உள்ளுணர்வின் வெளிப்பாடே மெய்விளக்கமாகும் என்றும், அனுபவங்கடந்த அந்த அறிவின் மூலத்துவத்தை, ஆராய்ச்சியினைக் காரணங்களோடு-ஆதாரங்களோடு விவரிக்கவோ, விளக்கவோ முடியாது என்றும் கூறியது.

தனிமனிதத் தூயபண்புகளை மதிக்கிற, மனிதனில் தெய்வத்தைக் காணுகிற இக் கோட்பாடு சமயவிவகாரங்களில் எந்தவிதக் கட்டுப்பாடுமின்றி மக்கள் இருத்தல் வேண்டும் என்று போராடியது. இக் கோட்பாடானது தொழிலாளர்கள் மேற்கொண்ட புரட்சிகளுக்கு ஆதரவாயிருந்தது. மேலும், அடிமைத்தன ஒழிப்பில், ஊக்குவிக்கும் சக்தியாக இருந்தது.

அரசியல்ரீதியாகத் தனிமனிதனின்மீது கொண்ட நம்பிக்கையின் விளைவு மக்களாட்சி என்பதுபோல, ஆன்மீகவிவகாரங்களில் தனி மனிதத்தன்மைகளின்மீது கொண்ட நம்பிக்கையின் பிரதிபலிப்பே மெய்விளக்கக்கோட்பாடாகும். 1776ஆம் ஆண்டில், தனிமனிதனை அரசியல் தளைகளிலிருந்து விடுவித்தவை, சுதந்திரமும் மக்களாட்சியும் என்றால், சமயக்கட்டுப்பாடுகளிலிருந்து மக்களை விடுவிக்கவந்தது மெய்விளக்கக்கோட்பாடாகும்.

**சிந்தனைகள்**

அக் காலத்தில் ஏராளமான இலக்கியங்களும், செய்தித்தாள்களும், இதழ்களும், நூல்களும் வெளிவருவதற்கான வாய்ப்புகளும் வசதிகளும் பெருகி இருந்தன. அவைகளின் பெருக்கம், அந்த நேரத்திய சிந்தனை வெள்ளத்தின் வடிகால்களேயாகும். பாமரமக்களை உயர்த்துகிற புனிதப்பணியில் சிந்தனைகளனைத்தும் ஒரு முனைப்பட்டு,சங்கமித்துப் போயிருந்த இக்காலத்தில்பெருகிய,இலக்கியங்கள்,செய்தித்தாள்கள் ஆகியவைகள் அனைத்தும் பாமர மனிதர்களுக்கே அர்ப்பணிக்கப் பட்டிருந்தன. அதாவது அவைகளின் கருப்பொருள்கள் பாமரமக்களை மையமாகவோ பாமரமக்களைச்சுற்றியோ இருந்தன என்பதாகும்.

முதலாவதாகத் தொழிற்புரட்சி விளைவித்த செல்வமும் ஓய்வும், வசதியும், மக்களை இலக்கியம், இயல், இசை, நாடகம் போன்ற அறிவுபூர்வமான, உணர்ச்சியூட்டுகிற கலாச்சார விவகாரங்களில் ஈடுபடுத்தின. இரண்டாவதாக, கல்விச்சார்பாகச் செய்யப்பட்ட, சீர் திருத்தங்கள் நல்லமுறையில் பரவி, பலன்தந்ததோடு நில்லாமல், மக்களிடையே அறிவுப்பசியினை உண்டாக்கியிருந்தது. மூன்றாவதாக நகரங்களின் வளர்ச்சிக்கு அடையாளச் சின்னங்களாக நிகழ்ந்த, நூலகங்கள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் முதலானவை அறிவைத் தேடிச்செல்வோருக்குப் புகலிடமாயிருந்தன. இவை களெல்லாம் கலாச்சாரரீதியில் அமெரிக்காவின் புத்துணர்வு இயக்கத்துக்குக் காரணங்களாயும், விளைவுகளாயுமிருந்தன.

**செய்தித்தாள்கள்:**

மக்கள் விரும்பி, வாங்கிப்படிக்கக் கூடிய விலையில் பல செய்தித் தாள்கள் வெளிவந்தன. 1833ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட 'நியூயார்க் சன்' (NewYork Sun) என்னும் செய்தித்தாளின் விலை ஒரு பென்னியாகும். ஒரு பென்னி விலையில் வெளிவந்த முதல் செய்தித் தாள் அதுவேயாகும். அது மக்களிடையே நல்ல ஆதரவினைப் பெற் றிருந்தது. அஃது ஆங்காங்கே நடைப்பெற்ற கொலை, கொள்ளை, ஆண் பெண் தொடர்பான செய்திகள் ஆகியவைகளைப் பற்றிச் சுவையாக வும், கவர்ச்சியாகவும் வெளியிட்டது. பரபரப்பூட்டும் செய்திகளையும் சுவையூட்டும்தகவல்களையும் 'நியூயார்க்ஹெரால்டு'(NewYork Herald) என்னும் செய்தித்தாள் வெளியிட்டது. இதனை முன்மாதிரியாகக் கொண்டு, வெளிவந்த 'நியூயார்க் ட்ரிபியூன்' (NewYork Tribune) என்னும் செய்தித்தாளானது, தேசிய அளவில் பரவி, பிரபலமா யிருந்தது. 1851ஆம் ஆண்டில் வெளிவந்த "நியூயார்க் டைம்ஸ்" (NewYork Times) தரமான செய்திகளை, எந்தவிதமான உள்நோக்க மும் இன்றி, உள்ளதை உள்ளபடியே வெளியிடுவதில் முன்மாதிரியாக விளங்கியது. செய்தித்தாள்கள் அனைத்துமே, பொதுவாக, தேசியப் பிரச்சினைகளையும், தேவைகளையும், சீர்திருத்தங்களையும் தலையங்கங் கள், கட்டுரைகள், விமரிசனங்கள் ஆகியவைமூலமாக அலசின.

**இதழ்கள்**

நூற்றுக்கணக்கில், இதழ்கள், மக்களின் ரசனைகளுக்கேற்ப வெளிவந்தன. இலக்கியம், சமயம், தொடர்பான இதழ்களும் வெளி வந்தன. **'டயல்'** (Dial), 'அட்லாண்டிக் மந்த்லி' (Atlantic Monthly) "சதர்ன் லிட்டரரி மெஸெஞ்ஞர்" (Southern Literary Messenger) ஆகியவை இலக்கியச் சார்புடைய இதழ்களாகும். பெண்களுக்கென தனியே சில இதழ்கள் வெளிவந்தன. அவைகளில் "ஹார்ப்பர்ஸ் மந்த்லி மாகஸைன்" (Harpers Monthly Magazine) என்கிற இதழும்

'கோடேஸ் லேடிஸ் புக்' (Godey's Lady's Book) என்கிற இதழும் மிகவும் பிரபலமாயிருந்தன. படங்களுடன் கூடிய இதழ்களும் வெளி வந்தன. மேலும், அப்போது வெளிவந்த இதழ்களில், மிகவும் குறிப்பிடத்தகுந்தவை 'கிரஹம்ஸ் மாகஸைன்' (Graham's Magazine) என்னும் இதழும் 'நிக்கர் போக்கர்' (Nicker-Poker Magazine) என்னும் இதழும் ஆகும். பொதுவாக, இதழ்கள் அனைத்தும், வாரத்திற்கு ஒருமுறையோ திங்களுக்கு இருமுறையோ ஒரு முறையோ வெளிவந்தன.

**நூல்கள்**

அமெரிக்க இலக்கியங்கள் வளர்ச்சியுற்ற காலங்களிலேயே இக் காலமானது உன்னதமாகத் திகழ்ந்தது. இலக்கியப்படைப்பில் அதற்கு முன்பு இருந்திராத வேகமும் தரமும் இக் காலத்தில் காணப்பட்டது. 1830-ஆம் ஆண்டுவரை ஐரோப்பாவில் வெளியிடப்பட்டு, அமெரிக்காவில் இறக்குமதி செய்யப்பட்ட நூல்களின் அளவானது சுமார் எழுபது விழுக்காட்டிற்கு இருந்தது. அப்போது அமெரிக்கா விலும் நூல்கள் அச்சிடப்பட்டு வெளியாயின. ஆனால்,மிகக் குறைவாக இருந்தது. அதற்குக்காரணம் என்னவெனில், அமெரிக்க எழுத்தாளர் களில் குறிப்பிட்டுச் சொல்லும் அளவிற்குப் புகழ்பெற்று யாரும் இல்லாததும், பிரபலமான ஆங்கில எழுத்தாளர்களின் நூல்கள் மலிவான விலைக்குக் கிடைத்ததும், நூல் வெளியிடுவோர் ஆங்கிலேய எழுத்தாளர்களின் நூல்களை அமெரிக்காவில்அச்சிட்டு வெளியிட்டதும் ஆகும். புதிதாக இலக்கிய முயற்சிகளில் ஈடுபட்டுள்ள எழுத்தாளர் களுக்கு மக்களிடையே ஆதரவு கிடைக்கவில்லை.

ஆனால் அந் நிலை வெகுவிரைவிலேயே மாறியது. அமெரிக்க இலக்கியப் படைப்பாளிகள் பலர் தோன்றினர். அதன் காரணமாக 1830-ஆம் ஆண்டில் இறக்குமதியான நூல்களின் அளவு எழுபது விழுக்காடு என இருந்தது. 1840-ஆம் ஆண்டில் முப்பது விழுக்காட்டிற்கும் குறைந்தது மேலும், அக் காலத்தில் படைக்கப்பட்ட இலக்கியங்கள், இலக்கிய உலகில் நிரந்தரமாக வைத்துப் போற்றக் கூடியனவாயும் இருந்தன.

இலக்கியங்கள் வளர்ச்சியுற்ற இக் காலத்தில் தொடக்கத்தில், நடுப் பகுதி மாநிலங்கள் இலக்கியங்களை உருவாக்குவதில் முன்னணியில் நின்றன. வாஷிங்டன் இர்விங் (Washington Irwing) 'அஸ்டோரியா' '(Astoria)', 'லைப் ஆப் வாஷிங்டன்' (Life of Washington) என்னும் நூல்களை எழுதினர். ஜேம்ஸ் கூப்பர், 'லெதர் ஸ்டாக்கிங் டேல்ஸ்' (Leather Stocking Tales) என்னும் நூலை எழுதினர். ஹெர்மன் மெல்வினுடைய (Hermane Melvile) 'மாபிடிக்' (Moby Dick) என்னும் நூலும், வால்ட் விட்மனுடைய (Walt Whitman) 'லீவ்ஸ்

ஆஃப்கிராஸ்' என்னும் நூலும் நடுப்பகுதி மாநிலங்களுக்குப் பெருமையைத்தேடித்தந்த உன்னதமான படைப்புகளாகும். வில்லியம் கல்லன் பிரைன்ட் (William Cullen Bryant) என்பவர் கவிதைகளை எழுதினர்.

தென் மாநிலங்களின் எழுத்தாளர்களில் வில்லியம் கில்மோர்சிம்ஸ் (William Gilmore Simms) என்பவர் மிகவும் பிரபலமான எழுத்தாளர் ஆவார். அவர் நூற்றுக்கு மேற்பட்ட நாவல்கள், சிறுகதைகள், கவிதை என வகைவகையாய் எழுதிக்குவித்தார். ஆனல், அவரைவிட மிகவும் புகழ்பெற்ற இலக்கியப் படைப்பாளி எட்கர் ஆலன்போ (Edgar Allen Poe) என்பவராவார்.

இலக்கிய உலகில் கொடிகட்டிப் பறந்தது, நியூஇங்கிலாந்து மாநிலமேயாகும். பாஸ்டன் நகரம் இலக்கியப் படைப்புகளுக்கு மையமாக விளங்கியது. இங்கு உயர்நோக்கமும், புனிதமும் ஆரோக்கியமும் நிரம்பிய நல்ல பல நூல்கள் படைக்கப்பட்டன.

நியூ இங்கிலாந்து பகுதியின் தலைசிறந்த இலக்கிய மேதையாக விளங்குபவர், மசாசூசெட்ஸைச் சேர்ந்த ரால்ப் வால்டோ எமர்சன் (Ralph Waldo Emerson) என்பவராவார். அவர் மற்ற எல்லா எழுத்தாளர்களின் அபிமானியாகத் திகழ்ந்தவர்; தேசியஇலக்கியங்களை வளர்த்தவர்; மனிதனை மையமாகக் கொண்ட சமயத்தினை ஏற்றுக் கொண்டவர்; மனிதனில் இறைவனைக் கண்டவர்; மனிதனும் தெய்வமாகலாம் என்ற கொள்கையினைக் கொண்டவர். அவருடைய கொள்கையினைப் பரப்ப உருவான இலக்கியங்கள் பலவாகும்.

அடுத்ததாக, நத்தானியல் ஹாவ்த்ரோன் ( Nathannial Hawthrone) என்பவர் மிகவும் புகழ்பெற்று விளங்கினர். அவர், 'மனித இனம்,பாவத்தின், குற்றங்களின் இருப்பிடமானவை' என்கிற கொள்கையினைக் கொண்டவர்; 'மனிதனின் தனித்தன்மையை' மறுப்பவர்; 'சாத்தானின் வாரிசு மனிதன்' ; 'தீயவைகளின் இருப்பிடம் மனிதன்' போன்ற கொள்கைகளை வலியுறுத்துவனவாய் அவரின் படைப்புகள் இருந்தன. ஸ்கார்லெட் லெட்டர்(Scarlet Letter) அவுஸ் ஆப் செவன் கேபிள்ஸ் (House of Seven Cables) இவை இரண்டு நூல்களும் முக்கியமாகும்.

கவிதை எழுதுபவர்களில் ஜேம்ஸ்வாட்ஸ் வொர்த்லாங் ஃபெல்லோ (James Wordsworth Longfellow), ஜேம்ஸ் கிரீன் லீஃப் விட்டியர் (James Greenleaf Whittier) என்பவரும் முக்கியமானவர்கள்.

கட்டுரை எழுபவர்களில் ஆலிவர் வென்டல் ஹோல்ம்ஸ் (Oliver Wendell Holmes) என்பவரும் ஜேம்ஸ் ரஸ்ஸல்லோவெல் (James Russell Lowell) என்பவரும் சிறப்பானவர்கள்.

வரலாற்று ஆசிரியர்களும் பலர் இருந்தனர். அவர்களில் சிலர் ஜார்ஜ் பான்கிராப்ட் (John Bancroft) என்பவர் தேசீய உணர்வுகளைப் பிரதிபலிக்கும் முறையில் பன்னிரெண்டு பிரிவுபடிகளில் (Volumes) அமெரிக்க வரலாற்றினை எழுதினர்.

வில்லியம் பிரஸ்காட் (Willam Prescott) ஸ்பானிஷ் பேரரசினைப் பற்றி எழுதிப் புகழடைந்தார். ஜான் எல். மாட்லி, (John L. Motley) டச்சு ரிப்பப்ளிக் தோன்றிய வரலாற்றை எழுதினர். பிரான்சிஸ் பார்க்மன் (Francis Parkman) என்பவர் வடஅமெரிக்காவின் பொருட்டு இங்கிலாந்தும், பிரான்சும் செய்த போரினை வீரகாவியமாக் கினர்.

இசைக்கலை மெல்லமெல்ல வளர்ந்துவரலாயிற்று. தனிப்பட்ட முறையிலும், குழுக்களாயும் இசை அமைப்பாளர்கள் தோன்றினர். 1840-ல், இசைக்குழுக்கள் பல தோன்றலாயின. பொதுவாகப் பக்திப் பாடல்களும், நாட்டுப் பாடல்களும் புனையப்பட்டு அவற்றிற்கு இசை அமைக்கப்பட்டுப் பாடப்பட்டன. லோவெல் மாஹன் (Lowell Mahan) என்பவர் பக்திப்பாடல்களைப் புனைந்தார். ஸ்டீபன் கோலின்ஸ் ஃபாஸ்டர் (Stephen Collins Foster) என்பவர் பழம்பெரும் நாட்டுப் பாடல்களுக்கு இசை அமைத்தார். இவ்விதமாகப் பாமரமக்களுக்கு உகந்த வகையில், அவர்கள் விரும்புகிற வகையில் இசை வளர்ந்து வந்தது.

**நாடகம்**

வேஷமணிந்து, நாடகம்நடித்தல்பற்றி நிலவிவந்த எண்ணங் கள் மெல்லமெல்ல இக் காலத்தில் மாறியது. இதுவரை யிலும், நாடகத் தொழிலானது, தாழ்வானது, இழிவானது என்று எண்ணி வந்தனர். இப்போது மக்களிடையே நாடகங்களுக்கு நல்ல வரவேற்பு இருந்தது. பொதுவாக ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் ஐரோப்பிய நாடகக் குழுவினரால்,நாடெங்கிலும் நடத்தப்பட்டுவந்தன. அடிமைஒழிப்புஇயக்கம் தீவிரம் அடைந்துவந்த காலத்தில், ஹாரியெட் பீச்சர் ஸ்டொவ் (Harriet Peecher Stowe) என்பவர் எழுதிய அங்கிள் டாம்ஸ் கேபின் (Uncle Tom's Cabin) என்னும் நாவலானது நாடக வடிவமாக அமைக்கப்பட்டு மிகுந்த வரவேற்புகளுக்கிடையே அமெரிக்க நடிகர்களால் ஆர்வத்துடன் நடிக்கப்பட்டது: இவ்விதமாக நாடகமானது மெல்லமெல்லப் பிரபலமடைந்து வந்தது.

**ஓவியம்**

ஓவியக்கலையானது, அமெரிக்கத்தன்மைகளும் காட்சிகளும், நிரம்பிய வகையில் சிறப்புடன் வளர்ந்து வரலாயிற்று. பொதுவாக ஓவியர்கள் இயற்கையின் அழகுகளையும், சூழ்நிலைகளையும் பெரும் பாலும் வரைந்தனர். அமெரிக்க மலைகள், ஆறுகள், தோட்டங்கள்,

காடுகள், ஆகியவைகளைக் கவர்ச்சியாகவும், இனிமையாகவும் வரைந்தனர்.

ஓவியத்துடன், சிற்பக்கலையும், கட்டடக்கலையும் வளர்ந்துவந்தன. ஆனால், ஒரு வித்தியாசம். ஓவியக்கலையில் தேசியத் தன்மைகள் மிளிர்ந்தன. ஆனால், சிற்பகலையிலும், கட்டடக்கலையிலும், பண்டைய முறைகள் (Classical) மேற்கொள்ளப்பட்டன. கட்டடங்களில் - தேசீய மாளிகைகளிலிருந்து சாதாரண தோட்டவீடுகள்வரை-கோதிக் (Gothic) முறைகளில் மாறுதல்கள் செய்யப்பட்டுக் கட்டப்பட்டன.

### அறிவியல்

அறிவியல் வளர்ச்சியில், இயற்கை தாவர இயலுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. அதாவது புவியியல், உயிரியல் ஆகியவைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. 1818 ஆம் ஆண்டில் பெஞ்சமின் சில்லிமன் என்பவர் (Benjamin Silliman) முதலாவது, அறிவியல் சார்பான பத்திரிக்கை ஒன்றினைத் தொடங்கினர். இவ்விதமாக அறிவியல் வளர்ச்சியும் இக் காலத்தில் இருந்தது.

### அடிமை ஒழிப்பு இயக்கம்

அடிமைகள், அமெரிக்கச் சமூகத்தில்-குறிப்பாக, தெற்குப் பகுதிகளில் தவிர்க்க முடியாத ஒரு நிறுவனமாக இருந்தார்கள். தெற்குப் பகுதி வாழ்க்கைமுறைகளுக்கு அவர்கள் மிகப்பெரிய சக்தியாக, ஊன்றுகோலாக, நடமாடும் சொத்தாக இருந்தனர்.

இந்த அடிமைமுறையானது, அமெரிக்கச் சமூகத்தில், வெகுவாகப் போற்றிப் பாராட்டப்படுகிற சுதந்திரம்,சமத்துவம்,மக்களாட்சி,இன்ன பிறவற்றிற்கும், களங்கம் விளைவிப்பதாய், கரைப்படுத்துவதாய் இருப்பதாக மனிதாபிமானம் மிக்க சீர்திருத்தவாதிகள் கருதலாயினர். எனவே, இந்த அடிமைமுறையினை ஒழிக்கத் தீவிரமாகச் செயற்பட்டனர். இதோடுமட்டுமல்லாமல் அமெரிக்கச் சுதந்திரம், மக்களாட்சி, சமத்துவம் ஆகியவை எல்லாம் முழுமையும் செழுமையும் பெறுவதற்கு ஒரு குறையாய், ஒரு தடையாய் இருக்கிற இந்த அடிமைத்தனத்தை அடியோடு நீக்கிவிட விரும்பினர்கள். இவ்விதமாகச் சீர்திருத்தவாதிகள் நிறைந்த வடபகுதிகளில் அடிமைத்தனத்தை அடியோடு அழித்தொழித்துவிட வேண்டும் என்கிற வேகம் இருந்தது. இதற்கு நேர்மாருகப் பிற்போக்கு நிரப்பிய தென்பகுதிகளில் அடிமைத்தனத்தை ஆசையோடு அரவணைத்துக் காக்கிற ஆர்வமும் இருந்தது. இவ்விதமாக நாட்டின் இருதரப்பினரும், அடிமைத்தனத்தை ஒழிப்பதிலும், காப்பதிலும் முனைந்திருந்தனர். எனினும், இறுதியில் மனிதாபிமான மிக்கவர்கள் அடிமைத்தனத்தை ஒழிப்பதில் வெற்றி கண்டனர்.

இவ்விதமாக, அடிமைத்தனஒழிப்புஇயக்கம், இக் காலக் கட்டத்தில் உருவாக்கிய கொந்தளிப்பும், பதற்றமும், மற்றச் சீர் திருத்தங்களினுலும், இயக்கங்களினுலும் உருவான கொந்தளிப்பு களையும் பதற்றங்களையும் காட்டிலும் அளவுகடந்து இருந்தது.

# 18. வகுப்புணர்ச்சியும் அடிமை முறையும்

## (Sectionalism and Slavery)

அமெரிக்க ஐக்கிய நாட்டில், 1850ஆம் ஆண்டுக்கும் 1860ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட பத்தாண்டுக் காலத்தில், தென்மாநிலங்களுக்கும் வடமாநிலங்களுக்குமிடையே அமைதியற்ற உறவுநிலை இருந்துவந்தது. என்றாவது ஒருநாள் இருவகுப்பாருக்குமிடையே கட்டாயம் மோதல் நிகழ்ந்தே தீரும் எனத் தலைவர்கள் அனைவரும் உணர்ந்தனர். நாட்டின் எதிர்காலம் என்ன ஆகுமோ என்ற அச்சம் ஆண்டுக்காண்டு அதிகரித்துக்கொண்டே வந்தது. அடிமைமுறை மீதான கருத்து மாறுபாடு மெக்ஸிகோ போருக்குப் பிறகு தீவிரமாகியது. இக் கருத்து மாறுபாடானது அமெரிக்காவின் பொருளாதார, அரசியல் சமுக அடிப்படைகளில் ஆழமாக வேரூன்றியிருந்தது.

நில இயல் அமைப்பும், மனித இயல்புகளும் சேர்ந்து அமெரிக்க ஐக்கிய நாட்டை வடக்கு, தெற்கு என இருபெரும் பிரிவுகளாகப் பிரித்துவிட்டது. நிலஇயல் அடிப்படையில் வடபகுதியும் தென் பகுதியும் பெருமளவில் வேறுபட்டன. வேறுபட்ட தட்பவெப்பநிலைகளும், நிலவளமும், ஆறுகளின்போக்கும், துறைமுகங்களின் அமைப்பும் இருவேறு பகுதிகளையும் வேறுபட்ட பொருளாதார முயற்சிகளில் ஈடுபடச் செய்தன. இரு பகுதிகளிலும் வட்டார உணர்வு மிகுந்த, வலிய சண்டை செய்யமுனையும் நோக்குடைய மக்கள் இருந்தனர். அவர்கள் பல நாடுகளிலிருந்தும் வந்து குடியேறியவர்கள்; பல இனத்தைச் சேர்ந்தவர்கள். இவ்வேறுபாடுகளால் நாளடைவில் வட பகுதியில் வாழ்ந்த மக்களுக்கும் தென்பகுதியில் வாழ்ந்த மக்களுக்குமிடையே தாங்கள் வேறுபட்டவர்கள் என்ற உணர்வு தீவிரமாக வளர்ந்துவிட்டது. இருபகுதிகளிலும் வாழ்ந்த மக்கள், கூட்டாட்சி அரசில் அதிக இடங்களைக் கைப்பற்றி, (கட்டுப்

படுத்த முனைந்தனர். கூட்டாட்சி அரசினை வடபகுதி மக்கள்) கட்டுப் படுத்துவதன்மூலம் தங்களுக்கு வேண்டிய பொருளாதார சூழ்நிலையை உருவாக்கிக் கொள்ள விரும்பினர். அவர்கள் தங்களது தொழிலுக்குப் பாதுகாப்பளிக்கக் காப்புவரிகளையும், வாணிகத்தைச் சிறப்புற நடத்த மையப்பாங்கு முறையினையும், கூட்டாட்சி அரசின் செலவில் உள்நாட்டு முன்னேற்றத் திட்டங்களைச் செயலாக்கவும் விரும்பினர். தென்மாநிலங்களில் அடிமைமுறை ஒழிக்கப்பட்டால் தான் நாட்டில் சமத்துவம் ஏற்படும் என்று கருதினர்.

தென்பகுதி மக்கள் கூட்டாட்சி அரசைக் கட்டுப்படுத்துவதன் மூலம் அடிமைமுறையைக் காத்துக் கொள்ளலாமென்றும் மாநிலங் களுக்குத் தன்னாட்சி உரிமை அதிகமாகக் கிடைக்குமென்றும் சுங்க வரிகளைக் குறைக்கலாமென்றும் எண்ணினர். மேற்குப்பகுதியில் வாழ்ந்த மக்களும் கூட்டாட்சி அரசைக் கட்டுப்படுத்துவதன்மூலம் நிலத்தை இலவசமாகப் பெறலாமென்றும், குறைந்த செலவில் கூட்டாட்சி அரசின் உதவியோடு விவசாயத்தில் முன்னேற்றங் காணலாமென்றும் நம்பினர்.

இப்படி வேறுபட்ட நோக்கத்தோடு ஒவ்வொரு பகுதியிலும் வாழும் மக்கள் வட்டார வகுப்புணர்ச்சியை வளர்த்தனர். அடிமை முறைவாத அடிப்படையில், தென்மாநிலத்தவர்களெல்லாம் வட மாநிலத்தவர்களுக்கெதிராக ஒன்று கூடினர். வட மாநிலத்தவர்கள் அடிமைமுறையை ஒழிக்க வேண்டுமென்று வாதாடி, அச் சிக்கலைப் பெரிதாக்கி, அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக் கொள்ளப்படும் புதிய மாநிலங்களிலெல்லாம் அடிமைமுறையை ஏற்றிக்கொள்ளாதவாறு செய்து, தங்கள் வலிமையைப் பெருக்கி கொள்ள முற்பட்டனர். இப்படி அடிமைமுறையை ஒரு கருவியாகப் பயன்படுத்திக்கொண்டு கூட்டாட்சி அரசைக் கட்டுப்படுத்துவதையே இருபகுதியினரும் குறிக்கோளாகக்கொண்டனர். எனவே அடிப் படை சிக்கல் யாதெனில் கூட்டாட்சி அரசை யார் கட்டுப்படுத்துவது என்பதேயாகும்.

## அடிமைமுறையின் அமைப்பு

பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதிக்குள் அடிமைமுறை, பிரிட்டிஷ் குடியேற்றங்கள் அனைத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு நிறுவனமாகச் சிறப்புற வளர்ந்திருந்தது. ஆப்பிரிக்காவின் கரை யோரப் பகுதிகளிலிருந்து நீக்ரோக்கள் வன்முறையில் பிடிக்கப் பட்டுவந்து மேற்கிந்தியத் தீவுகளில் விற்கப்பட்டனர். அங்கிருந்து நீக்ரோக்கள் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு இறக்குமதி செய்யப் பட்டனர். அடிமைகளிலேயே இரண்டுவகையினரிருந்தனர்—ஒரு

வகையினர் நிலக்கிழார்களின் வீடுகளில் எடுபிடிவேலை செய்தனர் ; மற்றொரு வகையினர் பண்ணைத்தோட்டங்களிலும், வயல்களிலும் வேலை செய்தனர். வீடுகளில் வேலை செய்த அடிமைகளின் வாழ்க்கை வயல்களில் வேலைசெய்த அடிமைகளின் வாழ்க்கையைக் காட்டிலும் சற்று நன்முறையில் அமைந்திருந்தது. தோட்டங்களில் வேலைக்க மர்த்தப்பட்ட நீக்ரோஅடிமைகள் தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரு மேற்பார்வையாளரின் கட்டுப்பாட்டில் விடப்பட்டனர். அடிமைகளிடமிருந்து உயர்ந்த அளவு எவ்வளவு வேலை வாங்கமுடிகிறது என்பதன் அடிப்படையில் மேற்பார்வையாளரின் திறமை பண்ணை முதலாளியால் அளவிடப்பட்டது. எனவே, மேற்பார்வையாளர்கள் இரக்கமற்றமுறையில் அடிமைகளைச் சித்திரவதை செய்து கடுமையாக வேலை வாங்கினர்.

### அடிமைமுறையைத் தடைப்படுத்துவதற்கான முயற்சிகள்

முற்போக்குவாதிகள் துவக்கத்திலிருந்தே அமெரிக்க ஐக்கிய நாட்டில் அடிமைகளை அடிமைத்தனத்தினின்றும் விடுவிக்கப் போராடி வந்தனர். குவேக்கர்கள் முதன்முதலாக அடிமைமுறையைக் கணடித்துக் குரலெழுப்பினர். காங்கிரஸில் குவேக்கர்கள் தங்களது செல்வாக்கினைப் பயன்படுத்தி, வடமேற்குப் பகுதியில் அடிமை முறை ஏற்றுக்கொள்ளப்படக்கூடாதென வடமேற்கு ஆணையில் (1787) அறிவிக்கச் செய்தனர். அரசியலமைப்பிலேயே அடிமை முறை ஒழிப்புக்கான கட்டுப்பாட்டைக் கொண்டுவருவதில் குவேக்கர்கள் மாபெரும் வெற்றி கண்டனர். 1808ஆம் ஆண்டுக்குப் பிறகு அடிமை வாணிகம் தடை செய்யப்பட்டது. 1817ஆம் ஆண்டுத் துவங்கப்பெற்ற அமெரிக்கக்குடியேற்றக் கழகம் நீக்ரோக்களுக்கு விடுதலையளித்து அவர்களை லைபீரியாவில் (Liberia) நிறுவப்பட்ட குடியேற்றத்திற்கு அனுப்பி உரிமையாக வாழச் செய்யும் பணியில் ஈடுபட்டது. இம் முயற்சிகளின் விளைவால் 1820-க்குள் அடிமை முறை பல வடக்கு மாநிலங்களினின்று சட்டப்பூர்வமாக ஒழிக்கப்பட்டிருந்தது.

### அடிமைமுறையைத் தொடர்வதற்கான வாதங்கள்

அடிமைமுறை நாட்டுக்குகந்த ஒரு நிறுவனம் எனத் தென் மாநிலத்தவர்கள் வாதிடலாயினர். எலிவிட்னியால் 1793-ல் கண்டுபிடிக்கப்பட்ட பஞ்சு இயந்திரம் இவ்வாதத்திற்கு நல்லதொரு அடிப்படையை நல்கியது. பஞ்சு இயந்திரத்தினால் பருத்திக்காயிலிருந்த விதைகளை எளிதில் அகற்றிப் பஞ்சினைப் பிரிக்க முடிந்தது. அடிமைகள் கைகளால் வெகுநேரம் செய்த இந்த வேலையை இயந்திரம் குறுகிய நேரத்தில் செய்து முடித்தது. இந்தப் பஞ்சு இயந்திரக் கண்டு பிடிப்பால் பருத்திக்குப் பெருமளவில் தேவை ஏற்பட்டது. எனவே

பருத்தி விளைவிப்பது மேன்மேலும் ஊதியத்தைத் தரக்கூடிய பயிர்த்தொழிலாயிற்று. அத்துடன் தென்மாநிலங்களில் உற்பத்தி செய்யப்பட்ட சர்க்கரைக்கும், புகையிலைக்கும் அதிகத் தேவை ஏற்பட்டது. செழிப்பான நிலமோ ஏராளமாகக் கிடந்தது. அவற்றில் வேலைசெய்ய அடிமைகள் மேன்மேலும் தேவைப்பட்டனர். ஒரு நிறுவனமாக விளங்கிய அடிமைமுறை சிறந்த ஊதியத்தை அளிக்கக் கூடியதாய் விளங்கிற்று.

தென்மாநிலங்களிலிருந்த எழுத்தாளர்களெல்லாம் அடிமை முறையை ஆதரித்து எழுதினர். அடிமைமுறையை ஏற்றுக் கொள்வதற்கான விவாதங்களில் பைபிளிலிருந்தெல்லாம் மேற்கோள் எடுத்துக்காட்டினர். வாழ்க்கையில் ஏழ்மை என்பதும், சமத்துவ மின்மை என்பதும் இறைவனால் முடிவு செய்யப்பட்டது என்று அவர்கள் கூறினர. பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிமைகள் இன்றியமையாதவர்கள் என்றும், அடிமைகளால் வெள்ளையர்களுக்குப் பல நன்மைகள் ஏற்படுகின்றன என்றும், தென்மாநிலத்தவர்கள் எடுத்தியம்பினர். அடிமைமுறையை ஆதரித்து எழுதிய எழுத்தாளர் களுள் சிறந்தவர்களாகத் தாமஸ் டியூ (Thomas R. Dew 1802—46) என்பவரும், ஜார்ஜ் பிட்ஸ்ஹியூ (George Fitzhugh 1806—81) என்பவரும் கருதப்படுகின்றனர். அவர்கள் தாழ்த்தப்பட்ட நீக்ரோ மக்களுக்கு முறையாக உணவளித்துக் காப்பாற்றுவதை வெள்ளையர் களின் கடமையெனக் கூறினர். வெள்ளைக்கார எசமானர்களின் கண்காணிப்பில் நீக்ரோக்கள் சுகமாக வாழ்ந்தனர் என்றும், அவர் களிடையே கிறித்துவசமயம் நன்முறையில் பரப்பப்பட்டதென்றும், அவர்கள் போதிய உணவு, உடைபெற்று எவ்விதக் கவலைகளுமின்றி வாழ்ந்தனர் என்றும் தென்மாநிலத்தவர்கள் பரிந்து பேசினர். மற்றும், வெள்ளையர்கள், காட்டுமிராண்டிகளான நீக்ரோக்களுக்குக் கல்வியறிவு புகட்டியும், பிறபழக்கவழக்கங்களைக் கற்றுக்கொடுத் தும் அவர்களை நாகரிகமுள்ளவர்களாக மாற்றியமைப்பதில் அமெரிக்கச் சமூகத்திற்குப் பெரும் தொண்டாற்றுகின்றனர் என்றும் வாதிடப்பட்டது. வடமாநிலங்களில் விளங்கிய 'தலையிடா முதலாளித்துவத்தை' அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரத்தை விட அடிமைமுறையிலான பொருளாதாரமே சிறந்ததென்றும், வடக்கேயுள்ள கூலிமுறையைவிட அடிமைமுறை மேலானது என்றும் அவர்கள் கூறினர்.

### அடிமைமுறையை எதிர்ப்போரின் அறப்போர்

வடக்கு மாநிலங்களில் அடிமைமுறைக்குக் கடுமையான எதிர்ப்புத் தோன்றி வளர்ந்திருந்தது. அடிமைமுறையை ஒழிக்க விரும்புவோரும், அதைவிட அதிகமாக, புதுஇடங்களில்

அம் முறையைப் பரவவிடக்கூடாது என்று நினைப்போரும் வடக்குப் பகுதியில் வலுவடைந்தார்கள். அங்குப் பல அடிமைஎதிர்ப்புக் கழகங்கள் தோன்றின. அவற்றின் கிளைகள் அடிமைமுறையைக் கொண்டிருந்த மாநிலங்களில் நிறுவப்பட்டன. அடிமைமுறையைக் கண்டித்து வெளியிடப்பட்ட செய்தித்தாள்களில் தலையாயதாக காரிசன் (Garrison) நடத்திய 'லிபரேடர்' (Liberator) விளங்கிற்று. அச் செய்தித்தாள் 1831ஆம் ஆண்டு முதல் 1866ஆம் ஆண்டுவரை வெளியிடப்பட்டது. ஒவ்வொரு இதழிலும் அடிமைமுறையை ஒழிக்க வேண்டுமெனக் கட்டுரைகள் வெளியிடப்பட்டன. அடிமைநிலை அடியோடு ஒழிய வேண்டுமெனக் காரிசன் வாதிட்டார். 1852-ல் ஹாரியெட் பீச்சர் ஸ்டொவ் (Harriet Beecher Stowe) எழுதிய 'அங்கிள் டாம்ஸ் கேபின்' (Uncle Tom's Cabin) என்னும் புத்தகம், அடிமைமுறை எதிர்ப்பைப் பெரிதும் ஊக்குவித்தது. இப் புத்தக மானது உலகிலேயே அதிகமாக விற்பனையான புத்தகங்களுள் ஒன்று. இப் புத்தகம் அமெரிக்காவிலும் வெளிநாடுகளிலும் பெரும் பரபரப்பை ஊட்டியது. தப்பியோடிய நீக்ரோக்களின் அனுபவங்களை அடிப்படை யாகக்கொண்டு எழுதப்பட்டது இந்நூல். அதில் உள்ளத்தை உருக்கும் வகையில் ஒன்றுமறியா நீக்கிரோக்கள், வெள்ளையர்களால் கொடுமைப்படுத்தும்முறை வருணிக்கப்பட்டிருந்தது. சின்சினட்டியில் வசித்துவந்த திருமதி ஸ்டொவ், கென்டக்கி பண்ணைகளுக்கு அடிக்கடி சென்று அடிமைகளின் இடர்ப்பாடுகளை ஊன்றிக் கவனித்து வந்தார். அவரது புத்தகத்தில் பல நல்ல பண்ணைமுதலாளிகளையும் மனமாரப் பாராட்டியிருந்தார். அடிமைகளைக் கொடுமையாக நடத்தும் மேலாளர்களில் சிலர் வடமாநிலங்களைச் சேர்ந்தவர்களாயும் இருந்தனர். அடிமைமுறையிலிருந்து கொடுமைத்தன்மையினைப் பிரிக்கமுடியாது என்றும், ஒரே நாட்டில் ஒரு பக்கம் உரிமை பெற்ற சமூகமும், இன்னொரு பக்கம் அடிமைச் சமூகமும் இருப்பது அடிப்படையில் முரணானது என்றும், அவற்றை இயற்கையாக இணைப்பது முடியாததொன்றாகும் என்றும் திருமதி ஸ்டொவ் இப் புத்தகத்தில் விளக்கியிருந்தார். இப் புத்தகம் வெளியிடப்பட்ட சில ஆண்டுகளுக்குள் இருபதுக்கும் மேலான மொழிகளில் பெயர்க்கப் பட்டது. பிரிட்டிஷ் பேரரசில் இலட்சத்திற்கும் மேலான படிகள் விற்பனையாயிற்று. திரைப்பட வடிவில் இப் புத்தகம் எண்ணற்ற உள்ளங்களைத் தொட்டது. வடபகுதி இளைஞர்கள், வருங்கால வாக்காளர்கள் அதைப் படிதது மனக்கிளர்ச்சி பெற்றனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்து வட பகுதியில் ஏராளமான ஐரோப்பியர் வந்துகுடியேறினர். அதன் விளைவாக வடக்கில் 1830ஆம் ஆண்டுக்குப் பிறகு ஆலைத்தொழிலில் திடீர் வளர்ச்சி ஏற்பட்டது. இரயில்பாதைகள் வெகு விரைவில்

அமைக்கப்பட்டன. அதனால், வடக்குப் பகுதியும், மேற்குப் பகுதியும் நன்கு இணைக்கப்பட்டன. ஆனால், தென்பகுதியிலோ போதுமான இரயில்பாதைகள் அமைக்கப்படவில்லை. இதனைக்கண்ட தென் மாநிலத்தவர்கள் தெற்குப் பகுதியானது புறக்கணிக்கப்பட்டு, தனிப் படுத்தப்படுகிறது என்று குற்றஞ் சாட்டினர். வடக்கு மாநில மக்கள் பலர் நீக்ரோக்கள் தப்பியோடுவதற்கு உடந்தையாக இருந்தார்கள். இரயில்பாதையில் இரவுநேரத்தில் சரக்கு வண்டிகளில் பதுங்கிப் பலர் வெளியேறினர். கடற்கரையோரத்தில் வசிக்கும் சிலர் கப்பல்களில் தப்பி வெளியேறினர். சிலர் இரவுநேரத்தில் துருவ விண்மீனைக் குறியாகக்கொண்டு வடக்குப்புறமாக நடந்து, ஓகியோ நதியை அடைந்து, கனடா செல்ல உதவி பெற்றனர். வேறு சில அடிமைகள் அப்பலேச்சியன் மலையோரமாகப் பென்சில்வேனியாவை அடைந்தனர். வடக்கு மாநிலங்களில் தப்பியோடிய அடிமைகளுக்காகத் தஞ்ச மளிக்கும் நிலையங்கள் பல ஏற்பட்டன. இப்படித் தப்பியோடுவதற் கான வழிகளைச் 'சுரங்க இரயில்பாதை' (Underground Railroad) என்றழைத்தனர்.

### மிஸௌரி சமரச இணக்கம்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் முந்தையக் குடியரசுத் தலைவர்கள் அடிமைமுறையின் கொடுமையை அறிந்திருந்ததோடு அது குறித்துக் கவலையும் அடைந்திருந்தார்கள். ஆனால், அதில் அவர்கள் அதிக கவனம் செலுத்தவில்லை. அடிமைமுறையை எதிர்த்து, வடபகுதி மக்கள் கிளர்ச்சி செய்துவந்ததால் தானாகவே அடிமைமுறையை மெதுவாகவும், சிறிதுசிறிதாகவும் உறுதியாகவும் அகற்றக்கூடிய ஒரு திட்டத்தை வகுக்க முடியும் என்று வாஷிங்டன் நம்பினர். மாடிசன்-மன்ரோ ஆகிய இருவரும் இதேபோன்ற நம்பிக்கையைத்தான் கொண்டிருந்தனர். ஆனால் அடிமைமுறையை ஒழிக்கும் வகையில் குறிப்பிட்டுச் சொல்லும்படியாக எத்தகையதொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. 1787-ல் இயற்றப்பட்ட ஒரு சட்டம் வட மேற்குப் பகுதியில் அடிமைமுறையைத் தடை செய்தது. 1808-ல் ஆப்பிரிக்க அடிமைவாணிகம் நிறுத்தப்பட்டது. இதனையொட்டி நாட்டிலுள்ள அடிமைகளெல்லாம் தாமாகவே விடுதலையடைந்து விடுவார்கள் என்றே பலரும் கருதினர்கள். ஆனால், அதற்கு மாறாக நிலைமை மேலும் மோசமாகியது. தென் மாநிலங்களிலிருந்த பருத்திப் பண்ணை முதலாளிகள் அடிமைமுறை நீடிக்க வேண்டுமெனப் பிடிவாத மாக வற்புறுத்தி வந்தனர்.

மேற்குப் பகுதியில் வேகமாக மக்கள் குடியேறியபோது வட பகுதியின் உரிமையோடு விளங்கிய சமூகமும், தென்பகுதியின் அடிமைச்சமூகமும் ஒன்றோடொன்று போராட நேரிட்டது. வட

பகுதியினர் அடிமைமுறையை எதிர்த்தனர் ; தென்பகுதியினர் மேற்கிலும் அதைப்புகுத்த விரும்பினர். இந்த இருதரப்பாருக்கு மிடையே, காங்கிரஸில் அதிலும் சிறப்பாக செனட் சபையில் சமநிலை இருக்கும்படியாகப் பார்த்துக் கொள்வது அரசியல்வாதிகளின் கடமை யாயிற்று. இல்லாவிட்டால் ஒன்று மற்றதை மிஞ்சிவிடக்கூடும். 1818-ல் இலினய் அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக் கொள்ளப்பட்டபோது அடிமைமுறையை ஏற்றிருந்த மாநிலங்கள் பத்தாகவும், அடிமைமுறையைத் தடைசெய்த மாநிலங்கள் பதினொன்றாகவும் இருந்தன. அலபாமா, அடிமைமுறையை ஏற்றுக் கொண்ட மாநிலமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டபோது இருதரப் பாருக்கிடையே சமநிலை ஏற்படுத்தப்பட்டது. அடுத்து, மிஸௌரி அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர விரும்பிற்று. வடமாநிலத்தவர் களெல்லாம் ஒன்றுகூடி மிஸௌரி ஓர் அடிமைமுறையை ஏற்ற மாநிலமாகச் சேர்த்துக் கொள்ளப்படுவதைக் கண்டித்தனர். சட்ட மாமன்றத்தில் மிஸௌரியைச் சேர்த்துக் கொள்வதற்கான ஒரு சட்ட வரைவு கொண்டுவரப்பட்டது. அதனையொட்டிக் கடும்விவாதம் நடந்தது. நியூயார்க் பிரதிநிதியான டால்மேட்ஜ் (Tallmadge) என்பவர் அச் சட்ட வரைவுக்கு ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்தார். அத் திருத்தத்தின்படி மிஸௌரியினுள் மேலும் நீக்ரோக்களை அனுமதிக்கக் கூடாதென்றும், படிப்படியாக அங்கு அடிமைமுறை ஒழிக்கப்பட வேண்டுமென்றும் கூறப்பட்டது. மிஸௌரி அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக்கொள்ள அடிமை முறையை ஏற்காத மாநிலமாக இருக்கவேண்டுமென விவாதிக்கப்பட்டது. மன்ரோ, குடியரசுத் தலைவராக, இருந்த இச் சமயத்தில் நாடு முழுவதுமே இச்சிக்கல் விவாதிக்கப்பட்டது. ஒரு மாநிலத்தை அனுமதிப்பதும், அனுமதிக்க மறுப்பதும் காங்கிரஸின் அதிகாரத்திற்குட்பட்டது என டால்மேட்ஜ் திருத்தத்தை ஆதரித்தவர்கள் கூறினர். எனவே, அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேருவதற்கான விதிமுறைகளை வகுக்க காங்கிரஸிற்கு உரிமையுண்டு எனக் கூறப்பட்டது. மிஸௌரி போன்ற புதிய மேற்கு நிலங்களில் அடிமைமுறையைப் புகுத்தினால், வடக்கு மாநிலத்தவர்கள் தங்களுக்கு நிலம் கிடைக்காமற் போகுமென்றும், கூட்டாட்சி அரசியலமைப்பில் ஐந்தில் மூன்று பங்கு அடிமைகளுக்கு வாக்குரிமை தரப்பட்டிருந்தமையால், நாளடைவில் நீக்ரோக்களின் பெருக்கத்தால் பிரதிநிதிகள் சபையில் தெற்குப் பகுதியினர் செல்வாக்கைப் பெறக்கூடுமென்றும் அஞ்சினர்.

அமெரிக்க ஐக்கிய நாடு உரிமைபெற்று அரசியலமைப்பைத் தீட்டியபோது எவ்விதக் கட்டுப்பாடுமின்றி மாநிலங்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டன, ஆனால். புதிய மாநிலங்களைச் சேர்த்துக் கொள்ள மட்டும் காங்கிரஸ் ஏன் விதிமுறைகளை வகுக்கவேண்டுமெனத் தென்

மாநிலத்தவர்கள் வாதிட்டனர். மேலும் மிஸுரி போன்ற மேற்கு மாநிலங்கள் லூசியானப் பகுதியைச் சேர்ந்தவை. லூசியானப் பகுதி கூட்டாட்சி அரசால் மக்களனைவரின் வரிப்பணத்தைக் கொண்டு வாங்கப்பட்டது. எனவே, அப் பகுதியில் அடிமைமுறையைத் தடுப்பதன்மூலம் தென்மாநிலத்தவர்கள் அப் பகுதிக்குச் செல்வது தடுக்கப்படுகிறது எனக் குற்றஞ்சாட்டினர். மற்றும் அடிமை வாணிகம் நிறுத்தப்பட்டமையால் எதிர்காலத்தில் அடிமைகளின் தொகை பெருகுவதற்கு வாய்ப்பில்லை என்றும் எடுத்துக் கூறினர். அடிமைகளின் எண்ணிக்கை குறையக்குறைய அவர்களின் மதிப்பும், அதிகரிக்கும், அதனால், பண்ணை முதலாளிகள் அவர்களை நன்முறையில் பாதுகாப்பர் என்றும் வாதாடினர்.

இந் நிலையில் 1819ஆம் ஆண்டு மெயின் மாநிலம் அடிமைமுறையை ஏற்காத மாநிலமாக அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர விண்ணப் பித்தது. பிரதிநிதிகள் மன்றம் உடனே மெயினை சேர்த்துக்கொள்ள வாக்களித்தது. அடுத்து, செனட்சபையில் மெயினை அடிமைமுறையை ஏற்காத மாநிலமாகவும், மிஸுரியை அடிமைமுறையைக் கொண்ட மாநிலமாகவும், லூசியானாவின் மேற்குப் பகுதியில் அடிமைமுறை தடுக்கப்படவேண்டுமெனவும் வாக்களிக்கப்பட்டது. இதனைத் தீர ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டது. அக் குழு ஒரு சமரச இணக்கத்தை ஏற்படுத்தியது. அதன்படி மெயின் அடிமைமுறையை ஏற்காத மாநிலமாகவும், மிஸுரி அடிமைமுறையை ஏற்றுக்கொண்ட மாநில மாகவும் அனுமதிக்கப்பட்டது. லூசியானப் பகுதியின் வழியாகச் செல்லும் 36° 30′ குறுக்கையளவுக்கோடு அடிமைமுறையை ஏற்ற, ஏற்காத நிலப்பகுதியினைப் பிரிக்கும் கோடாக வரையறுக்கப்பட்டது. இதுவே மிஸுரிசமரச இணக்கமெனப்படும். இதனால் இருபிரிவினருக்கு மிடையே சமநிலை ஏற்பட்டது.

இதற்குள்ளாக மிஸுரி மாநிலம் 1820-ல் ஒரு புதிய ஏற்பாட்டைச் செய்தது. அதன்படி மிஸுரியினுள் நீக்ரோக்களும், நீக்ரோவுக்கும் வெள்ளையருக்கும் பிறந்தவர்களும் (Mulattos) நுழைவது தடுக்கப்பட்டது. இதனை வடக்கு மாநிலங்கள் கண்டித்தன. ஏனெனில், அரசியலமைப்பில் தரப்பட்ட உரிமைப்படி ஒரு மாநிலத்திலுள்ள மக்கள் வேறொரு மாநிலத்திற்குச் செல்ல உரிமை உண்டு. அதனை இவ்வேற்பாடு தடைசெய்யும் வகையில் உள்ளது. நீக்ரோக்களும், நீக்ரோவுக்கும் வெள்ளையருக்கும் பிறந்தவர்களும் அமெரிக்க நாட்டின் குடிமக்கள் என்றவகையில் அவர் களுக்குச் சம உரிமைகள் உண்டு என்றும் கூறப்பட்டது. அதன் பேரில் மிஸுரி மாநிலம் அவ்வேற்பாட்டைக் கைவிட்டது. அரசியலமைப்புக்கு முரணாகச் சட்டமேதும் இயற்றுவதில்லை என மிஸுரி மாநிலச்

சட்டமன்றம் உறுதி கொடுத்த பிறகு, அஃது அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக் கொள்ளப்பட்டது. வடபகுதிக்கும் தென் பகுதிக்குமிடையே சமநிலை இருக்கவேண்டுமென்ற கொள்கையடிப் படையில் மிஸௌரி சமரச இணக்கம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இப்போது (1820) அடிமைமுறையை ஏற்ற மாநிலங்களின் எண்ணிக்கை பன்னிரண்டாகவும், அடிமைமுறையை ஏற்காத மாநிலங்களின் எண்ணிக்கையும் பன்னிரண்டாகவும் இருந்தது. குடியரசுத் தலைவர் ஜேம்ஸ்போக் ஆட்சிக்காலத்தில், டெக்ஸாஸ் அடிமைமுறையை ஏற்ற மாநிலமாகவும், ஆரிகான் அடிமைமுறையை ஏற்காத மாநிலமாகவும் சேர்த்துக்கொள்ளப்பட்டுச் சமநிலை காக்கப்பட்டது.

### 1850ஆம் ஆண்டுச் சமரச இணக்கம்

மெக்ஸிகோவிடமிருந்து கைப்பற்றப்பட்ட பகுதிகளில் அமெரிக்கர் குடியேற முயற்சித்தபோது மீண்டும் அடிமைமுறை பற்றிய சிக்கல் எழுந்தது. கலிபோர்னியாவையும், மெக்ஸிகோவை யும் கைப்பற்றுவதற்காகக் காங்கிரஸ் 1846-ல் நிதியொதுக்கிய போது வடக்குமாநில உறுப்பினரான டேவிட் வில்மாட் (David Wilmot) என்பவர் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். மெக்ஸிகோவிடமிருந்து போரிலோ விலைக்கோ பெறப்படும் நிலப்பகுதியில் அடிமைமுறையைத் தடைசெய்யவேண்டும் என அத் தீர்மானம் கூறிற்று. அப்பொழுது பதவியிலிருந்த குடியரசுத் தலைவரான ஜேம்ஸ்போக்கின் ஆட்சியில் தென்மாநிலத்தவர்கள் அதிகச் செல்வாக்குடன் விளங்கினர். இதனை மறைமுகமாகக் கண்டிக் கும் வகையிலேயே இத் தீர்மானம் கொண்டு வரப்பட்டது. உடனே காங்கிரஸில் கடுமையான விவாதம் தோன்றிற்று. உடனே சபையில் நிறைவேற்றப்பட்ட இத் தீர்மானம் செனட் சபையில் நிராகரிக்கப்பட்டது. தென்மாநில உறுப்பினர்கள் வடக்குமாநில உறுப்பினர்களின் திட்டங்களைக் கண்டு ஐயமுற்றனர். அவர்களில் "நெருப்பு உண்போர்," (Fire Eaters) எனப்படுவோர் உடனே பிரிவினை கோரவேண்டுமென்றும் கூறினர்.

மிஸௌரி சமரச இணக்க எல்லைக்கோட்டைப் பசிபிக் பெருங்கடல் வரை நீட்டித்தால் நியூமெக்ஸிகோவும், கலிபோர்னியாவும் தென் பகுதிக்குள் அடங்குவதைத் தெற்கு மாநிலத்தவர்கள் சுட்டிக் காட்டினர். எனவே, அவ்வெல்லைக்கோடு பசிபிக்பெருங்கடல் வரை நீட்டப்பட வேண்டும் எனக் கோரினர். கலிபோர்னியாவில், தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதும் பல வடமாநிலத்தவர்கள் அங்குச் சென்று குடியேறியிருந்தமையால் பலவடபகுதியினர் அக் கோரிக்கையை ஏற்க மறுத்தனர். மெக்ஸிகோவிடமிருந்து பெற்ற நிலப்பகுதியில் எழுந்த

இச் சிக்கலைத் தீர்க்கப் பல கருத்துகள் தெரிவிக்கப்பட்டன. ஒரு சிலர் அப் புதிய பகுதியில் அடிமைமுறையைப் புகுத்துவதா கூடாதா என்பதுபற்றி முடிவுசெய்ய நீதிமன்றங்களிடம் அச் சிக்கலை ஒப்படைக்கவேண்டுமென்றனர். மாநிலமாவதற்குத் தகுதி பெறும் சமயம், அங்கு வாழும் மக்களே அடிமைமுறையை ஏற்பதா இல்லையா என முடிவு செய்ய வேண்டுமென ஒரு சிலர் கூறினர். வேறு சிலர் தங்கள் அடிமைகளை அப் பகுதிக்கு அழைத்துச் செல்லும் நிலக்கிழார்களுக்குக் காங்கிரஸ் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென வாதாடினர்.

புதிய பகுதிகளில் அடிமைமுறை இருக்கவேகூடாது என்று வடபகுதித் தீவிரவாதிகள் கருதினர். தென்பகுதித் தீவிரவாதிகளோ புதிய நிலங்கள் எல்லாவற்றிலும் அடிமைகளை வைத்துக்கொள்ள இடமளிக்க வேண்டும் என்றனர். இத் தீவிரவாதிகளுக்கிடையே சில மிதவாதிகளும் இருந்தனர். அவர்களுள் சிறந்தவர்களாக விளங்கியவர்கள் ஹென்றி கிளே (Henry Clay) என்பவரும், ஸ்டீபன் டக்லாஸ் (Stephen A. Douglas) என்பவருமாவர். அவர்கள் இச் சிக்கலுக்கு மாற்றுக் காண முயன்றுகொண்டிருக்கும் சமயத்தில் கலிபோர்னியாவும், வடக்கு மெக்ஸிகோவும் அடிமைமுறையை ஏற்காத அரசியலமைப்பை உருவாக்குவதில் முனைந்து அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர 1850-ல் விண்ணப்பித்தன. அப் பகுதிகளை மாநிலங்களாகச் சேர்த்துக்கொள்வதுபற்றிய வினா எழவே, அடிமைமுறைமீதான சிக்கலை உடனடியாகத் தீர்த்துவைப்பது இன்றியமையாததாயிற்று. எனவே, இச் சிக்கலுக்குத் தீர்வுகாண மிதவாதிகள் முனைந்து இறுதியாக ஹென்றிகிளே, செனட்சபையில் ஐந்து கருத்துகளை வெளியிட்டார். அந்த ஐந்து கருத்துகளாவன: (1) கலிபோர்னியாவை அடிமைமுறையை ஏற்காத நாடாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும்; (2) அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைநகராகிய கொலம்பியா மாவட்டத்தில் அடிமைமுறை தொடர்ந்தபோதிலும் அடிமைவாணிகம் தடை செய்யப்பட வேண்டும்; (3) தப்பியோடும் அடிமைகளைப் பிடித்து, அவர்களது எசமானர்களிடம் ஒப்படைக்க அப்போதிருந்ததைவிடச் செயல்திறம் மிக்க சட்டங்களை (Fugitive Slave Law) காங்கிரஸ் இயற்ற வேண்டும்; (4) நியூமெக்ஸிகோவின் ஒரு பகுதியை டெக்சாஸ் கேட்காதிருக்குமேயானால், 1845-க்கு முன் டெக்ஸாஸால் பெறப்பட்ட பொதுக்கடனை அமெரிக்க ஐக்கிய நாடு திருப்பியளிக்க முன்வர வேண்டும்; (5) நியூமெக்ஸிகோவிலும், உடா (Utah)விலும் தல ஆட்சி அரசு நிறுவப்பட வேண்டும்; அவை பின்னர், அவற்றின் விருப்பப்படி அடிமைமுறையைக கொண்டோ கொள்ளாமலோ அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேர்த்துக் கொள்ளப்படல் வேண்டும். இந்த ஐந்து கருத்துகளி

னடிப்படையில் இருதரப்பாருக்குமிடையே சமரச உடன்பாடு ஏற்பட்டது. இதற்கு 1850ஆம் ஆண்டு உடன்பாடு என்று பெயர் ஏற்பட்டது.

1850ஆம் ஆண்டுச் சமரச உடன்பாட்டினை, அடிமைமுறையைப் பெரிதும் ஆதரித்த கால்ஹூன் போன்ற தலைவர்களும், அடிமை முறையைத் தீவிரமாக எதிர்த்த சீவர்டு (Seward), சேஸ் (Chase) போன்ற தலைவர்களும் எதிர்த்தனர். வெப்ஸ்டர் (Webster) போன்ற வடபகுதி பழமைவாதிகளும், தென்மாநிலத்தைச் சார்ந்த மிதவாதிகளும் இவ்வுடன்பாட்டை வரவேற்றனர். அடிமைமுறை பற்றிய வினாவுக்கான இறுதி விடையாக இவ்வுடன்பாட்டைக் கொள்ள வேண்டுமென வடபகுதி, தென்பகுதி அரசியல்வாதிகள் வற்புறுத்தினர். அடிமைமுறைபற்றிய விவாதத்தினால் நாட்டில் வாணிகம் தடைப்படுவதைக்கண்டு வருந்திய வணிகர்களும், இவ்வுடன்பாடு நாட்டில் ஒற்றுமையை நிறுவியதாகப் பாராட்டிப் போற்றினர். இவ்வுடன்பாடு ஒன்றையும் சாதிக்கவில்லையென்பதை நுண்புலமிக்கப் பார்வையாளர்கள் நன்குணர்ந்தனர்.

### அடிமையைத் துரத்திப் பிடிக்கும் சட்டம்

ஒரு சில ஆண்டுகளுக்கு இந்த ஒப்பந்தம் எல்லாச் சிக்கல்களையும் தீர்க்கக் கூடியதாகத் தோன்றிற்று. விக்குக் கட்சியினரும், மக்களாட்சிக் கட்சியினரும் அதைப் பெரும்பாலும் முழுமனதோடு ஆதரித்தனர். ஆனால், உள்ளுக்குள் புகைச்சல் இருந்துகொண்டுதான் இருந்தது. எசமானிடமிருந்து தப்பியோடும் நீக்ரோக்களைப் பிடித்துத்தருவதுபற்றிய சட்டத்தை வடக்கு மாநிலத்தவர்கள் சினத்தோடு நோக்கினர். இச் சட்டப்படி தப்பியோடிய நீக்ரோக்களைப் பிடித்து ஒப்படைப்பது கூட்டாட்சி அரசைச் சார்ந்த காவலர்களுடைய பொறுப்பாயிற்று. அதற்கு வடக்குப்பகுதிகளில் வாழ்வோரும் ஒத்துழைக்க வேண்டுமென்று கோரப்பட்டது. நியாய மன்றங்கள் அவற்றில் தலையிடக்கூடாது என்றும் கூறப்பட்டது. ஆனால், இதற்கெதிராக அடிமைகள் தப்பியோட வட மாநிலத்தவர்கள் உடந்தையாக இருந்தார்கள்.

இதற்கிடையே வடமாநிலத்தவர்களெல்லாம் ஒன்று கூடி தங்களது தொழில் உற்பத்தியைக் காக்கும் வகையில் காப்புவரிகளை விதிக்கும்படி காங்கிரஸை வேண்டினர். மேற்குப்பகுதியில் நெடுநாளாகக் குடியிருந்த குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் 160 ஏக்கர் நிலம் இலவசமாக வழங்குவதற்கான குடியிருப்புச் சட்டம் (Homestead Law) ஒன்று இயற்றப்பட வேண்டுமென்றும், நாட்டின் பல பாகங்களை இணைக்க இரயில்பாதைகள் அமைக்கப்பட வேண்டுமென்றும் வடமாநில உறுப்பினர்கள் கேட்டனர். அவர்களது திட்டங்களை

யெல்லாம் காங்கிரஸில் தென்மாநில உறுப்பினர்கள் முழுமூச்சாக எதிர்த்தனர். இதனைக் கண்டு வெகுண்ட வடமாநில மக்கள் மேலும் தீவிரமாக அடிமைமுறையை எதிர்க்கலாயினர். தப்பியோடிவந்த அடிமைகளைப் பொதுக்கூட்டமேடைகளில் ஏற்றி, அவர்கள் பட்ட துன்பங்களையெல்லாம் விவரிக்கச் சொல்லி, அதன்மூலம் அடிமை முறை மீதான வெறுப்புணர்ச்சியை வளர்த்தனர்.

தென் மாநிலத்தவர்கள் அடிமைமுறையை விரிவாக்குவதில் ஈடு பட்டனர். அடிமைகள் மிகுந்திருந்த மேற்கிந்தியத்தீவு நாடுகளான கியூபாவையும், நிக்கராகுவாவையும் கைப்பற்ற மறைமுகமாகத் திட்டமிட்டனர். அடிமைமுறையை ஒரு நிரந்தர நிறுவனமாக்கத் தென்பகுதியினர் திட்டமிடுவதைக் கண்டித்து வடமாநிலத்தவர்கள் கூக்குரல் எழுப்பினர்.

## கான்சாஸ் - நெப்ராஸ்கா சட்டம் - 1854

இலினாய் மாநிலத்தைச் சேர்ந்த செனட்சபை உறுப்பினரான ஸ்டீபன் டக்லாஸ் அடிமைமுறை குறித்து ஒரு புதிய திட்டத்தைக் கொண்டு வந்தார். அதன்படி அடிமைமுறையை ஏற்பதா அல்லது விலக்குவதா என்பதனை அந்தந்தப் பகுதி மக்கள் தாங்களாகவே முடிவு செய்ய வேண்டும் என்றார். இத் திட்டத்தைத் தெரிவித்ததில் டக்லாஸ் சில குறிக்கோள்களை மனதில் கொண்டிருந்தார். மனிதாபி மானப் பண்புகள்மீது நேர்மையுணர்வு கொள்ளாத அவர், தென் மாநிலங்களைச் சார்ந்த மக்களாட்சிக் கட்சியினரது ஆதரவை தமக்குக் குடியரசுத்தலைவர் பதவித் தேர்தலில் பெறவிரும்பினார். எனவே, தென்பகுதியினரை மகிழ்விக்கும் வகையில் அடிமை முறையை ஏற்பது குறித்தும் ஒதுக்குவது குறித்தும் முடிவு செய்ய மக்களுக்கே முழுஉரிமையும் அளிக்க வேண்டுமென்று பொதுமக்கள் சார்ந்த இறைமைத்தன்மையை (Popular Sovereignty) வலியுறுத்தினார். அதேநேரத்தில், தாம் இலினாய் மாநிலத்தைச் சேர்ந்தவராயிருந்தமையால் வடபகுதி மக்களையும் மகிழ்விக்க விரும்பினார். அதற்காக மேற்கில் சிக்காகோவையும், செயின்ட் லூயியையும் இணைக்கும்வகையில் இரயில் பாதைகளை அமைக்கக் கூட்டாட்சி அரசு முன்வரவேண்டும் என வாதாடினார.

நாட்டிணைப்பு இரயில்பாதை திட்டத்தில், ஒரு மத்திய இரயில் பாதை கான்சாஸ்கா-நெப்ராஸ் நிலப்பகுதி வழியாக அமைக்க வேண்டிய நிலையேற்கப்பட்டது. அடிமைமுறையைக் கடுமையாக எதிர்த்த வடமாநிலத்தவர்கள் அடிமைமுறையைக் கொண்டுள்ள ஒருநிலப்பகுதி வழியே அந்த இரயில் பாதை செல்லக்கூடாது என்று

கண்டனம் தெரிவித்தனர். இந்தச் சிக்கலைத் தீர்க்கவே ஸ்டீபன் டக்லாஸ் கான்சாஸ் — நெப்ராஸ்கா சட்டத்தைக் கொண்டு வந்தார். அச் சட்டத்தின்படி கான்சாஸும், நெப்ராஸ்காவும் இரு பகுதிகளாக 40° குறுக்கையளவுக் கோட்டில் பிரிக்கப்பட வேண்டும் என்று சொல்லப்பட்டது. தென்பகுதி கான்சாஸ் என்றும், வட பகுதி நெப்ரஸ்கா என்றும் அழைக்கப்பட்டது. இந்தச் சட்டத்தில் மேலும் இரு முக்கிய கருத்துகள் கூறப்பட்டிருந்தன. (1) கான்சாஸ் நெப்ராஸ்கா — ஆகிய இரு புதிய மாநிலங்களிலும் அடிமைமுறை குறித்த எல்லாச் சிக்கல்களையும் அம் மாநில மக்களே தங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட முறையான பிரதிநிதிகள்மூலம் தீர்த்துக் கொள்ள வேண்டும். (2) மிஸௌரி சமரச இணக்கம் இரத்து செய்யப் பட்டது. ஏனெனில், கான்சாஸ், நெப்ராஸ்கா பகுதிகள் 36° 30′ குறுக்கையளவு கோட்டிற்கு வடக்கே இருந்தன. மற்றும் நாட்டின் எப் பகுதியிலும் அடிமைமுறையை விலக்க காங்கிரஸுக்கு அதிகாரம் கிடையாது என்றும் தெளிவுற இச் சட்டத்தில் கூறப்பட்டது. சுருங்கச் சொன்னால், அடிமைமுறைபற்றி முடிவு செய்வதற்கான இறைமைத்தன்மை பொதுமக்களையே சார்ந்தது என்ற கருத்து இச் சட்டத்தின்மூலம் செயல்முறைக்கு வந்தது எனலாம்.

கான்சாஸ், நெப்ராஸ்கா — ஆகியவற்றைப் பிரித்ததன்மூலம் கான்சாஸில் அடிமைமுறை ஏற்றுக் கொள்ளப்படுமென்றும், நெப் ராஸ்காவில் வடமாநிலத்தவர்களின் செல்வாக்கு அதிகமாயிருந் தமையால் அங்கு அடிமைமுறை விலக்கப்படுமென்றும் ஸ்டீபன் டக்லாஸ் கருதினர். ஆனால், இச் சட்டத்தின் விளைவாக, முன்பு 1820-ல் அடிமை முறை விலக்கப்பட்டிருந்த லூசியானாவின் பெரும் பகுதியில், இப்போது அடிமைமுறை புகுத்த வழிவகுக்கப்பட்டது. இதனால், மீண்டும் வகுப்புவாதஉணர்வு வெறியாக மாறி நாட்டில் தலைவிரித்தாடலாயிற்று. வடமாநிலத்தவர்களும் தென் மாநிலத்தவர்களும் காழ்ப்புணர்ச்சியோடு ஒருவரையொருவர் நோக்க லாயினர். இச் சட்டத்தை அடிமைஎதிர்ப்பு செய்தித்தாள்கள் கடுமையாகக் கண்டித்தன. டக்லாஸின் கொடும்பாவிகள் கோபத் துடன் கொளுத்தப்பட்டன. நெப்ராஸ்கா அடிமைகளைக் கொண்டு வேலை செய்யத் தகுதியற்ற நிலப்பகுதியாக இருந்தமையால் அங்கு அடிமைமுறையினைப் புகுத்தத் தென்மாநிலத்தவர்கள் முயற்சி செய்யவில்லை. ஆனால் கான்சாஸில் அடிமைமுறையைப் புகுத்த முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மிஸௌரியிலிருந்து நிலக்கிழார்கள் தங்களது அடிமைகளுடன்வந்து குடியேறலாயினர். கான்சாஸில் வட பகுதியைச் சார்ந்தவர்களும் குடியேறியிருந்தனர். அவர்கள் உடனே அடிமைஎதிர்ப்புக்கழகங்களை அமைத்து அடிமைமுறையை

புகவொட்டாது தடுக்க முயற்சித்தனர். அடிமைஎதிர்ப்பாளர்கள் நிறுவனங்களை நிறுவி: வடமாநிலத்தவர்க்குக் குடியிருப்புகளை நிதியுதவியோடு (அமைத்துத் தரலாயினர். இருதரப்பாரும் தல ஆட்சி நிறுவனங்களை) அமைத்துக்கொண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் சேருவதற்காகக் காங்கிரஸிடம் விண்ணப்பித்தனர். இருவகுப்பாருக்குமிடையே அடிக்கடி மோதல்கள் ஏற்பட்டன. ஒருவரது உடைமைகளை மற்றொருவர் பறிக்கலாயினர். படுகொலை களும் செய்யப்பட்டன. இப்படி கான்சாஸில் இரத்தம் பெருக் கெடுத்து (Bleeding Kansas) ஓடியமை, வரவிருந்த உள்நாட்டுப் போரைக்குறிப்பாக உணர்த்திற்று எனலாம்.

## குடியரசுக்கட்சியின் தோற்றம்

அடிமைமுறைமீதான சிக்கலை, 1850ஆம் ஆண்டுச் சமரச உடன் பாடோ 1854ஆம் ஆண்டு இயற்றப்பட்ட கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டமோ, இறுதியாகத் தீர்த்துவைக்கவில்லை. எனினும், இவற்றால் மக்களாட்சிக் கட்சியினர் தேர்தல்களில் குடியரசுத்தலைவர் பதவியைக் கைப்பற்ற முடிந்தது. கடும்தேர்தல் போராட்டத்திற்குப் பிறகு, 1852-ல் நடைபெற்ற தேர்தலில் நியூஹாம்ஷயரைச் சார்ந்த மக்களாட்சி கட்சியின் வேட்பாளர் தளபதி பிராங்களின் பியர்ஸ் (Franklin Pierce), விக்குக் கட்சி வேட்பாளரான வின்பீல்டு ஸ்காட்டைத் தோற்கடித்தார். ஸ்காட், மெக்ஸிகோ போரில் வெற்றிகள் பல தேடித்தந்தவர். எனவே மக்கள் நன்றியுடன் வாக்களிப்பர் என நினைத்தார். ஆனால், பியர்ஸ். தாம் 1850ஆம் ஆண்டுச் சமரச இணக்கத்தை மதித்து நடப்பதாக வாக்குறுதியளித்துப் பெரும்பான்மையான வாக்குகளைப் பெற்று வெற்றியடைந்தார். எனவே, வாக்காளர்கள் 1850ஆம் ஆண்டுச் சமரச இணக்கத்தை ஏற்றுக் கொண்டதாகக் கருதப்பட்டது.

பியர்ஸ் அடிமை எதிர்ப்பாளர்களோடு அதிகம் நட்பு கொண்டி ருந்தமையால், 1856ஆம் ஆண்டுத் தேர்தலில் மீண்டும் குடியரசுத் தலைவர் பதவிக்கு, மக்களாட்சிக் கட்சியினர் வேட்பாளராக அவரை நியமனம் செய்யவில்லை. பியர்ஸுக்குப் பதிலாக பென்சில்வேனி யாவைச் சார்ந்த ஜேம்ஸ் பிக்கனன் (James Buckanan) என்பவர் வேட்பாளராக நியமிக்கப்பட்டு வெற்றிபெற்றார். அவர் இறைமைத் தன்மை பொதுமக்களைச் சார்ந்தது என்றும் எல்லாவற்றிற்கும் மேலாக நாட்டின் ஒற்றுமை காக்கப்பட வேண்டுமென்றும் கூறி வந்தார். அவரது வெற்றி 1854-ல் இயற்றப்பட்ட கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டத்தை மக்கள் ஆமோதித்ததாகக் காட்டிற்று.

கான்சாஸ்—நெப்ராஸ்கா சட்டம் அமெரிக்க அரசியல் கட்சிகளிடையே பூசல்களையும், பிளவுகளையும் ஏற்படுத்தியது. அச் சட்டத்தின்படி வடபகுதியிலும் அடிமைமுறை புகுத்தப்படுவதற்கான வழிமுறைகள் இருப்பதைக் கண்ட வடமாநிலத்தவர்கள் கோபமுற்றனர். ஆகவே, அடிமைமுறையை ஒழிப்பதென கங்கணம் கட்டிக்கொண்டு செயலாற்ற முனைந்தனர். இதனால், அரசியல் கட்சிகளிடையே சில மாறுதல்கள் ஏற்பட்டன. (1) மக்களாட்சிக் கட்சியினருள்ளேயே வடபகுதி மக்களாட்சிக் கட்சியினர் என்றும் தென்பகுதி மக்களாட்சிக் கட்சியினர் என்றும் பிளவு ஏற்பட்டது. (2) விக்குக்கட்சியினுள்ளும் பிளவு ஏற்பட்டது. அடிமை முறையை எதிர்ப்போர் நெஞ்சங்கோடா விக்குகள் (conscience Whigs) என்றும் அடிமை முறையை ஆதரித்தோர் பஞ்சு விக்குகள் (Cotton Whigs)என்றும் பெயர் பெற்றனர். முக்கியமான இவ்விரு கட்சிகளில் பிளவு ஏற்பட்டபோது இரண்டு வேறு கட்சிகளும் தோன்றின. அவையாவன (1) நில உரிமையினர் (Free Soilers) கட்சி (2) அமெரிக்கக் கட்சி (American Party) இவ்விருகட்சிகளும் சின்னாள் கழித்து மறைந்துபோயின.

இப்படிப்பட்ட அரசியல் சூழ்நிலையில் ஒரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி நிகழ்ந்தது. அதுவே குடியரசுக்கட்சியின் தோற்றமாகும். நிலஉரிமையினரையும், வடபகுதி மக்களாட்சிக் கட்சியினரையும் மையக்கருவாகக் கொண்டு குடியரசுக்கட்சி உருப்பெற்றது. இக் கட்சி ஒரு குறுகிய வகுப்புணர்வோடு தோன்றிற்று எனலாம். அமெரிக்க ஐக்கிய நாட்டின் எந்தப் பகுதியிலும் அடிமைமுறை இருக்கக்கூடாது என்பதே அக் கட்சியின் தலையாய கொள்கையாக அமைந்தது. குடியரசுக் கட்சி மேற்கின் நடுப்பகுதியில் முதலாவதாகச் செல்வாக்குப்பெற்றது.

## 1856ஆம் ஆண்டுத் தேர்தல்

கான்சாஸ் சிக்கல் 1856-ல் உச்சநிலையை அடைந்தபோது குடியரசுக்கட்சி அவ்வாண்டு நடந்த தேர்தலில் தமது வேட்பாளரைக் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடச் செய்தது. கான்சாஸ் நெப்ராஸ்கா சட்டத்தைக் குடியரசுக் கட்சி கடுமையாகத் தாக்கிற்று. குடியரசுக் கட்சியின் உறுப்பினர்கள் வடபகுதியில் மட்டும் இருந்தமையாலும், முதன்முதலாகக் குடியரசுத் தலைவர் தேர்தலில் போட்டியிட்டமையாலும் குடியரசுக்கட்சியின் வேட்பாளரான ஜான் பிரிமாண்டுக்கு (John C. Fremont) 114 வாக்குகள் மட்டுமே கிடைத்தன. மக்களாட்சிக் கட்சியைச் சார்ந்த ஜேம்ஸ் புக்கனனுக்கு 174 வாக்குகள் கிடைத்துக் குடியரசுத் தலைவரானார். இவ்வகையில் குடியரசுக்கட்சியினர் வலிமைமிக்க ஓர் எதிர்க்கட்சியினராக

வளர்ந்துவிட்டமையால் மக்களாட்சிக் கட்சியினர் பயந்துபோய்க் கூட்டாட்சியினின்றும் விலக நினைத்தனர். வேறுபட்ட சமூகக் கருத்துகளும், பொருளாதார அடிப்படைகளும் வடக்கு தெற்கு மாநிலத்தவர்களிடையே நிலவியமையால், அவ்விரு பகுதியினரையும் இணைப்பதற்கான ஒவ்வொரு முயற்சியும் பயனற்றதாயிற்று.

## டிரெட் ஸ்காட் வழக்குத் தீர்ப்பு - 1857 :

அமெரிக்க ஐக்கிய நாட்டு வரலாற்றிலேயே முக்கியமானதொரு தீர்ப்பைத் தலைமை நீதிமன்றம் டிரெட் ஸ்காட் வழக்கில் வழங்கிற்று. டிரெட் ஸ்காட் (Dred Scott) என்னும் அடிமை, மிஸௌரி மாநிலத்தைச் சார்ந்த ஒரு பண்ணைமுதலாளியிடத்துப் பணியாற்றி வந்தான். பின்னர், அவனது முதலாளி அவனை அடிமைமுறை இல்லாத இல்லினாய் மாநிலத்திற்கு அழைத்துச் சென்று வாழ்ந்தார். பிறகு, இல்லினாயிலிருந்து வடக்கே சென்று குடியேறினார். மிஸௌரி சமரச இணக்கத்தின்படி அங்கெல்லாம் அடிமைமுறை தடுக்கப்பட்டிருந்தது. எனவே, அங்கு வாழ்ந்த அடிமைமுறை எதிர்ப்பாளர்களெல்லாம் ஒன்றுகூடி டிரெட் நெடுநாள்களாக அடிமைமுறை தடுக்கப்பட்ட நிலப்பகுதியில் வாழ்ந்தமையால் அவன் அடிமைத்தனத்தினின்றும் விடுவிக்கப்பட வேண்டுமெனக் கோரி ஒரு வழக்கைத் தொடர்ந்தனர். அவ்வழக்கு இறுதியாகத் தலைமை நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டது. விசாரணைக்குப் பின் தலைமைநீதிபதி ரோஜர் டேனி (Roger B. Taney) வரலாற்றுச் சிறப்புமிக்கத் தீர்ப்பினை வழங்கினார். அத் தீர்ப்பில் ஒரு நீக்ரோவோ ஒரு நீக்ரோவின் சந்ததியினரோ அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடியுரிமையைப் பெற முடியாது என்றும், அதனால் ஸ்காட் இவ்வழக்கினை நீதிமன்றங்களுக்குக் கொண்டு வர அருகதையற்றவன் என்றும் கூறப்பட்டது. இத் தீர்ப்பினைக் காட்டிலும் அத்துடன் இணைத்துச் சொல்லப்பட்ட சில கருத்துகளே குறிப்பிடத் தக்கனவாம். அரசியலமைப்பின் ஐந்தாவது திருத்தத்தின்படி தனிப்பட்ட குடிமகனின் சொத்துரிமைக்குப் பாதுகாப்பளிக்கப்பட வேண்டுமென்றும், காங்கிரஸிற்கு அமெரிக்க ஐக்கிய நாட்டின் எந்தப் பகுதியிலும் அடிமைமுறையைத் தடைசெய்ய உரிமை கிடையாதென்றும், அதனால் மிஸௌரி சமரச உடன்பாடு அஃது இயற்றப்பட்ட நாளிலிருந்தே செல்லுபடியாகாதென்றும் கருத்து வழங்கப்பட்டது.

நீதித்துறை, அடிமைமுறைமீதான சிக்கலை நன்முறையில் தீர்த்துவைப்பதற்குப் பதிலாக, எரியும் தீயில் நெய்யை ஊற்றுவது போல இச் சிக்கலை மேலும் ஊக்குவித்து வளர்த்தது. இத் தீர்ப்பு தென்மாநிலத்தவர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியினைத் தந்தது. நாடு முழுவதும் அடிமைகளாகிய அவர்களது சொத்துக்குச் சட்டபூர்வமாகப்

பாதுகாப்பளிக்கப்பட்டது. அடிமைமுறையைச் சட்டபூர்வமாக ஒழிக்க வேண்டும் என்ற கொள்கையினைக் கொண்டிருந்த குடியரசுக் கட்சி மேலும் தீவிரமாகச் செயலாற்ற முனைந்தது.

**லிங்கன் - டக்லாஸ் வாதங்கள் - 1858**

டிரெட் ஸ்காட் வழக்குத் தீர்ப்பினையொட்டி நாடெங்கிலும் இரு தரப்பாருக்குமிடையே விவாதங்கள் நிகழ்ந்தன. அவற்றுள் மிகச் சிறந்தவையாகக் கருதப்படுபவை குடியரசுக்கட்சியைச் சார்ந்த ஆபிரகாம் லிங்கனுக்கும், மக்களாட்சிக் கட்சியைச் சார்ந்த ஸ்டீபன் டக்லாஸுக்குமிடையே நிகழ்ந்த விவாதங்களாகும். "குடியரசின் தந்தையர்களால் வகுக்கப்பட்ட இலட்சியங்களின் அடிப்படையில்தான் எல்லாத் தேசியச் சட்டங்களும் இயற்றப்படவேண்டும். கட்டுப் படுத்தப்பட வேண்டிய, இறுதியில் ஒழிக்கப்பட வேண்டிய, அமைப்பு அடிமை முறை" என்று ஆபிரகாம் லிங்கன் கூறினர். அடிமைமுறை அந்தந்த மாநில மக்களுடைய சிக்தல் அன்று ; அமெரிக்க ஐக்கிய நாட்டு மக்கள் அனைவரும் அக்கறைகொண்ட சிக்கல் அஃது என்றும் லிங்கன் சொன்னர். "தனக்குள்ளேயே பிளவுண்டு கிடக்கும் நாடு நிலைக்கமுடியாது. பாதி அடிமையாகவும், பாதி உரிமையோடும் இந்த ஆட்சி நிலையாக இருக்க முடியாது. ஒன்று, அடிமைமுறை தடுக்கப்பட்டுப் பொது மக்களது உறுதிப்பாட்டால் சிறிதுசிறிதாக ஒழிக்கப்பட வேண்டும் ; இல்லையெனில், அடிமை முறை நாடு முழுவதிலும், பழைய, புதிய, தெற்கு, வடக்கு ஆகிய எல்லா மாநிலங்களிலும் பரப்பப்பட வேண்டும்" என்று லிங்கன் பேசினர். அடிமை முறையை ஏற்காத மாநிலங்களைக்கூட அடிமைமுறையைக் கட்டாயமாக ஏற்கச் சொல்லும் வகையில் டிரெட் ஸ்காட் வழக்குத் தீர்ப்பு அமைந்துள்ளதாக லிங்கன் எடுத்துரைத்தார். இதற்கு விடையளிப்பதுபோல் டக்லாஸ் தமது கருத்துகளை வெளியிட்டார். அடிமைமுறையை ஏற்பதா இல்லையா என்பதை முடிவு செய்யும் இறைமைத் தன்மை பொதுமக்களையே சார்ந்துள்ளது என்ற தமது கொள்கையினை மீண்டும் மீண்டும் டக்லாஸ் வலியுறுத்தினர். அடிமை முறைபற்றி முடிவு செய்வதற்கான பொதுமக்களது இறைமைத் (தன்மை டிரெட் ஸ்காட் வழக்கின் தீர்ப்பினல் தள்ளுபடி செய்யப் படுவதை லிங்கன் எடுத்துக் கூறினர். எப்படியெனில் பொது மக்களது இறைமைத்) தன்மைப்படி ஒரு மாநிலத்தில் அடிமை முறைமீது தடைவிதித்தால் அது டிரெட் ஸ்காட் வழக்கின் தீர்ப்புக்கு முரணுக அமையும் ; ஏனெனில், அத் தீர்ப்பில் நாடு முழுவதும் சட்டபூர்வமாக அடிமைமுறைக்குப் பாதுகாப்பளிக்கப்பட வேண்டியது கூட்டாட்சி அரசின் பொறுப்பு எனக் கூறப்பட்டது இதற்கும் டக்லாஸ் விடையளித்தார். இவ்விவாதம் இலினுயிலுள்ள, பிரிபோர்ட் (Freeport) என்னுமிடத்தில் நடைபெற்றது. அங்கு

டக்லாஸ் தந்த விளக்கத்திற்கு பிரிபோர்ட் கோட்பாடு எனப் (Freeport Doctrine) பெயர் தரப்பட்டது. ஒரு மாநிலத்தில் "சட்டபூர்வமான" அடிமைமுறை இருக்கலாம்; ஆனால், அதனைப் பாதுகாக்கும் முறையில் மேற்கொள்ள வேண்டிய சட்டங்களை இயற்ற அம் மாநில மக்களுக்கே இறைமைத்தன்மை" உள்ளது என டக்லாஸ் விளக்கந் தந்தார். இவ்விளக்கத்தைக் கேட்ட தென்மாநிலத்தவர்கள் டக்லாஸ்மீது நம்பிக்கையிழந்தனர்.

## 1860ஆம் ஆண்டுத் தேர்தல்

வடக்கு மாநிலத்தைச் சார்ந்த அடிமைமுறை எதிர்ப்பாளர்களின், தூண்டுதலினால் ஜான் பிரவுன் (John Brown) என்னும் வெறியன் வர்ஜீனியாவில் வாழ்ந்துவந்த நீரோக்கள், கலகஞ் செய்வதற்காக, வர்ஜீனியாவில் ஹார்ப்பர்ஸ் பெரி (Harpers Ferry) என்னுமிடத்தி லிருந்த வெடிமருந்துக் கிடங்கினைச் சூறையாடி, வெடிமருந்துகளை நீக்ரோக்களுக்கு அளித்தான். அதற்குள், கூட்டாட்சி அரசுப் படையினர் பிரவுனைக் கைதுசெய்தனர். பின்னர் நீதி விசாரணைக்குப் பிறகு பிரவுன் தூக்கிலிடப்பட்டான் (டிசம்பர் 1859). இந் நிகழ்ச்சி வடக்கு, தெற்கு மாநிலத்தவர்களிடையே இருந்த வெறுப் பினை மேலும் அதிகப்படுத்தியது. இச் சூழ்நிலையில் 1860ஆம் ஆண்டுத் தேர்தல் நடந்தது.

புதியதாகத் தோன்றிய குடியரசுக் கட்சியின் ஒப்பற்ற தலைவ ராகத் திகழ்ந்த ஆபிரகாம்லிங்கன் குடியரசுத் தலைவர் பதவிக்கு அக் கட்சியின் வேட்பாளராக நியமிக்கப்பட்டார். மக்களாட்சிக் கட்சி யினர் ஸ்டீபன்டக்லாஸைத் தங்களது வேட்பாளராக நியமித்தனர். அடிமைமுறையில் தீவிர பற்றுக் கொண்ட தென்மாநிலத்தவர்கள், தனியே மக்களாட்சிக் கட்சியைச் சாந்த ஜான் பிரிக்கின்ரிட்ஜ் (John C. Breckinridge) என்பவரை வேட்பாளராகவும், பழைய விக்குக் கட்சியினர் ஜான் பெல் (John C. Bell) என்பவரை வேட்பா ளராகவும் நியமித்தனர். குடியரசுக் கட்சியினர் அடிமைமுறையை அகற்றவேண்டும் என்ற கொள்கையைக் கொண்டிருந்ததோடு, வணிகர்கள் ஆதரவைப்பெறக் காப்புவரிகள் விதிப்பதாகவும், விவசாயிகளின் ஆதரவைப் பெறக்குடியிருப்புச்சட்டம் இயற்றுவதா கவும் தேர்தல் அறிக்கையில் வாக்களித்தனர். அடிமைமுறை இல்லாத வடக்கு மாநிலங்களில் லிங்கனுக்கும் டக்லாஸுக்குமிடையே தான் கடும்போட்டி இருந்தது. அதேபோல் தெற்கில் பிரிக்கின் ரிட்ஜுக்கும் பெல்லுக்குமிடையேதான் மோதல் கடுமையாக இருந்தது. இறுதியில் லிங்கன் 180 வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார். பிரிக்கின்ரிட்ஜுக்கு 72 வாக்குகளும், பெல்லுக்கு 39 வாக்குகளும், டக்லாஸுக்கு 12 வாக்குகளுமே கிடைத்தன.

ஆபிரகாம் லிங்கனுக்குக் கிடைத்த வெற்றி, வட மாநிலத்தவர்களுக்கு தென் மாநிலத்தவர்கள்மீது கிடைத்த வெற்றியாகக் கருதப்பட்டது. எனவே, தென்மாநிலத்தவர்கள் கூட்டாட்சி அரசினின்று பிரிந்து செல்வதைத் தவிர வேறு வழியேதும் இல்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

# 19. உள்நாட்டுப்போர்
## (The Civil War)
## (1861 - 1865)

ஆபிரகாம்லிங்கனின் வெற்றியையடுத்து, அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஒற்றுமையை அழிக்கத்தக்க வகையில் 1861ஆம் ஆண்டு உள்நாட்டுப்போர் ஒன்று துவங்கியது. ஆனால், நற்பயனாக அப் போரின் இறுதியில் நாட்டின் ஒற்றுமை நிலைநாட்டப்பட்டது. அத்துடன் புதிய அமெரிக்காவையும் அப் போர் உருவாக்கியது.

**உள்நாட்டுப் போருக்கான காரணங்கள் :**

**(1) தென்மாநிலங்களின் தனித்தியங்கும் தன்மை** - இயற்கை யன்னை ஏனோ அமெரிக்க ஐக்கிய நாட்டை முற்றிலும் வேறுபட்ட இரண்டு பகுதிகளாகப் பிரித்துவிட்டாள். மாறுபட்ட தட்பவெப்ப நிலைகளும், நிலவளமும் அப் பகுதிகளில் இருந்ததோடு, அங்குக் குடியேறியவர்களும் வேறுவேறு இனத்தவர்களாக வேறுபட்ட பண்பாட்டினையும் உருவாக்கிவிட்டிருந்தனர். தென்மாநிலத்தவர்கள் பெரும்பாலும் வன்மையாளர்களாயும், தனித்தியங்கும் நோக்குடைய வர்களாயும், அரசியலில் தங்களது மாநிலங்களே முதலிடத்தைப் பெறவேண்டும் என்ற விருப்புடையவர்களாயும், விளங்கினர். உள்நாட்டுப்போர் துவங்கும்வரை தென்மாநிலத்தவர்கள் கூட்டாட்சியினுள் இருக்கக் காரணம் அவர்கள் அதுவரை கூட்டாட்சி அரசைக் கட்டுப்படுத்துவதில் வெற்றி கண்டதேயாகும். உரிமை பெற்றபின் எழுபத்திரண்டு ஆண்டுகளில், ஐம்பது ஆண்டுகளுக்குக் கூட்டாட்சி அரசைத் தென்மாநிலத்தவர்கள் கட்டுப்படுத்தியிருந்தனர். அவர்களுடைய கோரிக்கைகள் சரிவர நிறைவேற்றப்படாத பொழுதெல்லாம் கூட்டாட்சியினின்று பிரிந்துபோவதாக மிரட்டி வந்தனர். ஜாக்சன் குடியரசுத் தலைவராக இருக்கும்பொழுது எழுந்த செல்லுபடியற்றதாக்கும் கோட்பாட்டின்மீதான சிக்கல் குறித்தும். பின்னர் அடிமைமுறைபற்றியதான சிக்கல் குறித்தும், கூட்டாட்சி

யினின்று பிரிந்துபோகத் தென்மாநிலங்கள் எண்ணிவந்தன. தென் மாநிலங்களின் தனித்தன்மை வடமாநிலத்தவர்களது தேசிய உணர்வுக்கு முரணாக அமைந்திருந்தது.

**(2) வேறுபட்ட பொருளாதாரம்** - வடமாநிலத்தவர்களில் பெரும்பாலோர் தொழிலதிபர்களாகவும், வணிகர்களாகவும் இருந்தனர். தென் மாநிலத்தவர்கள் பொதுவாக வேளாளர்களாகவும் உயர்குடிப்பிறப்பாளர்களாகவும் இருந்தனர். வடபகுதியிலிருந்த தொழிற்சாலைகள் தன்னம்பிக்கை பெற்ற தொழிலாளர்களைக் கொண்டிருந்தது. தென்பகுதி பண்ணையார்கள் நீக்ரோ அடிமைகளது உழைப்பையே நம்பியிருந்தனர். வடபகுதி, செய்பொருள்களை உற்பத்தி செய்தது. தென்பகுதி கச்சாப்பொருள்களை விளைவித்தது. வடமாநிலத்தவர்கள் தங்களைச் சுரண்டிப் பிழைப்பதாகத் தென மாநிலத்தவர்கள் நினைத்துவந்தனர். பருத்தி, புகையிலை, அரிசி, ஆகியவற்றை விளைவித்த தென்மாநிலத்தவர்கள் அவற்றிற்கான நேர்மையான விலையைப் பெறமுடியாது தவித்தனர். அதே நேரத்தில் காப்புவரிகளால் பாதுகாப்புப் பெற்ற வடமாநிலத்தவர்கள் செய்பொருள்களை அதிக விலைக்கு விற்றுப் பெரும் ஊதியம் பெற்றனர். மேலும் வடபகுதியினரது தொழிற்சாலைகளெல்லாம் காப்புறுதி செய்யப்பட்டிருந்ததால் அவர்களுக்குப் பெருமிழப்பு ஏற்பட்டதே கிடையாது. இப்படி இருபகுதியினருக்குமிடையே நிலவிய வேறுபட்ட பொருளாதாரநிலையும் உள்நாட்டுப்போருக்குக் காரணமாக இருந்தது.

**(3) அடிமை முறைபற்றிய சிக்கல்** - அடிமைமுறையை ஏற்பது பற்றியும், ஒழிப்பது பற்றியும் தொடக்கத்திலிருந்தே தென் மாநிலத்தவர்கட்கும், வடமாநிலத்தவர்களுக்குமிடையே கருத்து வேறுபாடு இருந்தது. அச் சிக்கலை மையமாக வைத்துக்கொண்டு கூட்டாட்சி அரசினைக் கைப்பற்றுவதில் தென்மாநிலத்தவர்களும் வடமாநிலத்தவர்களும் போட்டியிட்டனர். 1820-ல் கையெழுத்திடப்பட்ட மிஸௌரி சமரச உடன்பாட்டின்படி இருபகுதியினரிடையே சமநிலை நிறுவப்பட்டது. இருப்பினும் மிஸௌரி உடன்பாட்டால் தென்பகுதியினர் வெற்றிப்பெற்றதாக வடபகுதியினர் கருதினர். அதுமுதல் சமநிலையை மாற்றும் வகையில் மாற்றங்கள் நிகழலாயின. மிஸௌரி சமரச உடன்பாட்டில் குறிப்பிட்டிருந்த மிஸௌரி பகுதியானது, வடக்கே இருந்த போதிலும் அங்கு அடிமைமுறை அனுமதிக்கப்பட்டது. அடுத்து டெக்ஸாஸ் அடிமைமுறையை ஏற்ற மாநிலமாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டபோது தென்பகுதியினர் வலிமை பெற்றனர். 1850ஆம் ஆண்டில் ஏற்பட்ட சமரச உடன்பாட்டின்படி கலிபோர்னியாவில் அடிமைமுறை தடுக்கப்பட்ட போதிலும், தப்பியோடிய அடிமைகள் சட்டம் (Fugitive Slave Law) நாடு முழுவதிலும் பிறப்பிக்கப்

பட்டமை தென்பகுதியினருக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும். இவற்றிற்கெல்லாம் மேலாக கான்சாஸ்-நெப்ராஸ்கா சட்டமும், டிரெட் ஸ்காட் வழக்குத் தீர்ப்பும் அடிமைமுறையை உறுதிப்படுத்தின.

தென்பகுதியினரும் வடபகுதியினர்மேல் சிறிது சினங்கொண்டிருந்தனர். எனெனில் 1850ஆம் ஆண்டுக்கும், 1860ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட பத்தாண்டுக் காலத்தில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள் காரணமாக, தென்மாநிலத்தவர்கள் கூட்டாட்சி அரசில் சிறுபான்மையினராயினர். அந்தப் பத்தாண்டுக் காலத்தில் ஆரிகன், கலிபோர்னியா, மினஸோட்டா (Minnesota) ஆகிய மூன்று மாநிலங்கள் அடிமைமுறையை ஏற்காத மாநிலங்களாக அனுமதிக்கப்பட்டிருந்தன. இதனால் வடபகுதியினருக்குப் பெரும்பான்மை கிடைத்தது. மேலும் வடக்கில் அடிமைமுறை ஒழிப்புக்கான முயற்சிகள் தீவிரமாக நடைபெற்று வந்தமையைக் கண்ட தென்பகுதி பீதியுற்றது. சுரங்கஇரயில்பாதைத்திட்டங்கள்மூலம் ஏராளமான அடிமைகள் தப்பிச்சென்றனர். தப்பியோடிய அடிமைகளைக் காப்பாற்ற சொந்த விடுதலையுரிமைச் சட்டங்கள் (Personal Liberty Laws) இயற்றப்பட்டன.

**(4) குடியரசுக்கட்சியின் தோற்றம்** - விக்குக்கட்சி நாளடைவில் பிளவுண்டு போக, அப் பிளவுண்ட கட்சியின் ஒரு பகுதியிலிருந்து குடியரசுக்கட்சி புதியதொரு கட்சியாகயாக உருப்பெற்று எழுந்தது. குடியரசுக் கட்சி, ஏற்கனவே அடிமைமுறையைக் கொண்டிருந்த மாநிலங்களிலிருந்து அடிமைமுறையை ஒழிக்க விரும்பவில்லை. அது கோரியதெல்லாம் மேலும் அடிமைமுறை பரவவொட்டாமல் தடுக்கப்பட வேண்டுமென்பதேயாம். மாநிலங்களாக அமைக்கப் பெறாத பகுதிகளில் அடிமைமுறை புகுத்தப்படக் கூடாது எனக்கோரி வந்த வடபகுதியினரின் கட்சியாகக் குடியரசுக்கட்சி தோன்றலாயிற்று. 1858-ல் நடைபெற்ற தேர்தலில் காங்கிரஸில் பல இடங்களைக் குடியரசுக்கட்சி கைப்பற்றிற்று. 1860ஆம் ஆண்டில், குடியரசுத் தலைவர் பதவியையே குடியரசுக்கட்சி பெற்றது. குடியரசுக்கட்சியின் வேட்பாளர் தேர்வுக்கான கட்சிப் பெருங்குழு (Republican Convention) ஒருமனதாக ஆபிரகாம் லிங்கனைத் தனது வேட்பாளராகத் தேர்ந்தெடுத்தது. அடிமைமுறையை எதிர்த்த லிங்கன் மேற்குப் பகுதியின் தலைவராகத் திகழ்ந்தார். குடியரசுக்கட்சி வடபகுதியினரது ஆதரவையும் மேற்குப் பகுதியினரது ஆதரவையும் பெறுவதற்காகத் தனது தேர்தல் அறிக்கையில் முறையே காப்பு வரிகளை விதிக்கவும், இலவசக் குடியிருப்புச் சட்டத்தை இயற்றவும் வாக்களித்தது. வகுப்புநலன் கருதி போட்டியிட்டுக் குடியரசுக் கட்சி பெற்ற வெற்றியானது வடமாநிலத்தவர்கள் தென்மாநிலத்தவர்கள் மீது பெற்ற வெற்றியாகக் கொள்ளப்பட்டது.

**அமெரிக்கச் சுதந்திர அமைப்பிற்குச் சோதனை**

**தென்பகுதி பிரிந்து செல்லுதல் (Secession)**

உள்நாட்டுப் போருக்கு உடனடியான காரணம் தென்கரோலினு கூட்டமைப்பிலிருந்து விலகியதேயாகும். தேர்தலுக்கு முன்பே, லிங்கனது வெற்றி நாட்டினைத் துண்டிக்கும் எனத் தென்கரோலினு அறிவித்திருந்தது. தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்டதும் தென் கரோலினு ஒரு சிறப்புக் கூட்டத்தைக் கூட்டிற்று. அச் சிறப்புக் கூட்டத்திற்கு வந்திருந்த மாநில உறுப்பினர்களெல்லாம் ஒருமனதாகத் தென்கரோலினு செய்ததுபோல அமெரிக்கக் கூட்டாட்சி அரசினின்று பிரிந்து செல்வதெனத் தீர்மானித்தனர். புளோரிடா, அலபாமா, மிசிசிபி, ஜார்ஜியா, லூசியாஞ, டெக்ஸாஸ் ஆகிய மாநிலங்கள் கூட்டாட்சியிலிருந்து விலகின. லிங்கன் போருக்கான அறைகூவல் விடுத்ததும் வடகரோலினு, வர்ஜீனியா, தென்னசி, அர்க்கன்சாஸ் (Arkansas) ஆகிய நான்கு மாநிலங்களும் விலகின. இவ்வகையில் மொத்தம் பதினேரு மாநிலங்கள் பிரிந்து சென்றன. பிரிந்து சென்ற மாநிலங்களின் பிரதிநிதிகள் அலபாமாவிலுள்ள மான்ட்கோமெரி (Montgomery) என்னுமிடத்தில் ஒன்றுகூடி ஒரு மகாநாட்டை நடத்தினர். அவர்கள் ஒரு புதிய கூட்டரசை (Union) நிறுவ முடிவுசெய்தனர்; அதன் தலைநகராக வர்ஜீனியாவிலுள்ள ரிச்சுமாண்டு (Richmond) என்னுமிடம் தேர்ந்தெடுக்கப்பட்டது. அவர்கள் ஒரு புதிய அரசியலமைப்பையும் வகுத்தனர். இந்த அரசியலமைப்பில் சில முக்கிய வேறுபாடுகள் காணப்பட்டன. குடியரசுத் தலைவரது பதவிக்காலம் ஆருண்டுக் காலமெனவும், ஒருவர் ஒருமுறைமட்டுமே பதவி வகிக்கலாமெனவும் கூறப்பட்டிருந்தது. அடிமைமுறை ஏற்றுக்கொள்ளப்பட்டது. காங்கிரஸிற்கு வரி விதிக்கவும், நிதி திரட்டவும், படை அமைக்கவும் அதிகாரம் தரப் பட்டது. காங்கிரஸில் சட்டங்கள் இயற்றும்போது அந்தந்தத் துறைச் செயலாளரும், பிற அலுவலர்களும் உடனிருந்து கருத்துத் தெரிவிக்க அனுமதிக்கப்பட்டனர். ஜெபர்சன் டேவிஸ் (Jefferson Davis) குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கூட்டாட்சியினின்று பிரிந்து செல்வதால் பல நன்மைகளைப் பெறலாமென தென் மாநிலத்தவர்கள் நினைத்தனர்; தங்களுடைய உரிமையை நிறுவ முடியுமென உறுதி கொண்டிருந்தனர். வட பகுதியில் வணிகர்களும், ஆலைத்தொழிலாளிகள் மட்டுமே வாழ்ந் தமையால் அவர்களைப் போரில் எளிதில் தோற்கடித்துவிடலாமென்று தென்மாநிலத்தவர்கள் கருதினர். தென்பகுதியில் வாழ்ந்தவர்கள் வீரம் மிக்கவராய்த் திகழ்ந்தனர் என்றும் கருதினர். தென் மாநிலங்களின் பருத்தியைப் பெரிதும் இறக்குமதி செய்த இங்கிலாந்தும், பிரான்சும் தங்கள் சார்பில் போரிடாவிட்டாலும், வடபகுதியினர் உதவிக்குச் செல்லமாட்டார்கள் எனத் தென் பகுதியினர் எதிர்பார்த்தனர். அடிமைமுறையை ஏற்ற மாநிலங்

கள் கூட்டாட்சியிலிருந்து பிரிந்துவிட்டமையால், தென் பகுதி மிசிசிபி நதியினைப் போக்குவரத்துக்குப் பயன்படாத வகையில் அடைக்க முடியுமென்றும், அதன் விளைவாக மேற்குப்பகுதி தனது சரக்குகளை ஏற்றுமதி செய்வது தடுக்கப்படுமென்றும், அதனுல் வடபகுதி பொருளாதாரம் நசித்துப் போகுமெனவும், தென்மாநில அரசியல் வாதிகள் கருதினர். உள்நாட்டுப்போரில் வெற்றி பெறுவதன் மூலம் சீரும், செல்வமும் மிக்க கூட்டாட்சியைத் தென்பகுதியில் நிறுவ முடியுமென்றும், அங்குக் காப்புவரிகளின் தொல்லை இல்லாமலிருக்குமென்றும், பருத்தியை உயர்விலைக்கு விற்க முடியுமென்றும், செய்பொருள்களைக் குறைந்த விலைக்கு வாங்க முடியுமென்றும், வாணிகம் வளர்ச்சியுலும் என்றும் மத்திய அமெரிக்காவிலும், மேற்கிந்தியத் தீவுகளிலும் மேலும் நிலப்பகுதிகளைக் கைப்பற்ற முடியுமென்றும் ஆப்பிரிக்க அடிமைவாணிகத்தை உயிர்ப்பிப்பதன்மூலம் மலிவான உழைப்பாற்றல் பெருகுமென்றும் தென்மாநிலத்தவர்கள் எதிர் பார்த்தனர்.

**ஆபிரகாம் லிங்கன்**

ஆபிரகாம்லிங்கன் தலைசிறந்த அமெரிக்கக் குடியரசுத்தலைவர்களுள் ஒருவராகக் கருதப்படுகிருர். அவர் 1809ஆம் ஆண்டு, கென்டக்கியில், ஓர் ஏழைத் தச்சருக்கு, மரக்கட்டைகளால் கட்டப்பட்ட ஒரு வீட்டில் பிறந்தார். 1812ஆம் ஆண்டுப் போருக்குப் பிறகு மேற்குச் சமவெளி வெள்ளையர்களுக்குக் குடியேற வசதியுள்ள பகுதியாக மாற்றப்பட்டபோது, லிங்கன் குடும்பத்தினர் அங்குச் சென்று குடியேறினர். தேக்கும்சேவின் தலைமையில் அமைக்கப்பட்டிருந்த இந்தியப் பழங்குடியினரது கூட்டமைவு தோற்கடிக்கப்பட்டு, 1815-ல் டெட்ராய்ட் உடன்படிக்கையில் (Treaty of Detroit) கையெழுத்திட்டனர். அதன்படி அவர்கள் வாழ்ந்துவந்த இலினுய், இந்தியானு நிலப்பகுதிகள் வெள்ளையர் குடியேற்றத்திற்காகத் திறந்துவிடப்பட்டது.



**ஆபிரகாம் லிங்கன்**
16-வது குடியரசுத் தலைவர்
குடியரசுக் கட்சி

உடனே சாரைசாரையாக வெள்ளையர்கள் போய் அங்குக் குடியேறலாயினர். அவ்விதம் இந்தியானாவில் குடியேறியவர்களுள் லிங்கன் குடும்பமும் ஒன்றாகும். லிங்கன் சிறுயைனாக இருக்கும்போதே தாயை இழந்தார். அவருடைய தந்தை பல குழந்தைகளைக் கொண்ட ஒரு விதவையை மறுமணம் செய்து கொண்டார். இளமைப்பொழுதில் சில ஆண்டுகளை இந்தியானாவில் செலவிட்டு, பின்பு இலினாயிலுள்ள ஸ்பிரிங்பீல்டு (Springfield) என்னுமிடத்தில் லிங்கன் குடும்பத்தினர் வாழலாயினர். லிங்கன் மிகவும் அருவருக்கத்தக்க உடல்வனப்பைப் பெற்றிருந்த போதிலும், வியக்கத்தகு வலிமையுடையவராகத் திகழ்ந்தார். ஒரு தச்சனாகத் தமது வாழ்க்கையை அவர் தொடங்கினார். மரங்களை வெட்டுவதும், மரவீடுகளைக் கட்டுவதும், ஆற்றில் படகுகளுக்கு வழிகாட்டுவதும் அவரது தொழிலாக இருந்தது. இலினாயில் இந்தியப் பழங்குடியினரோடு நடைபெற்றப் போரில் (Black Hawk War - 1832) ஒரு படை வீரராகப் பணியாற்றினார். வீட்டிலுள்ளவர்களோடு லிங்கன் நகைச் சுவையோடு பேசுவார்; குழந்தைகளுக்குப் புதியபுதிய குட்டிக் கதைகளைச் சொல்லுவார்; பிராணிகளிடத்து மிகவும் அன்பாக இருப்பார்; இயற்கையன்னையின் எழிலைக்கண்டு மட்டற்ற மகிழ்ச்சியடைவார்; கூச்ச சுபாவமுடையவராகவும், வெட்கி ஒதுங்குகிற தன்மையுடையவராகவும் இருந்தபோதிலும் காரியத்தில் கண்ணாகவே இருப்பார்; பைபிளையும் ஷேக்ஸ்பியரது நாடகங்களையும் விரும்பிப் படிப்பார்; பல மைல்கள் நடந்து சென்றும் புத்தகம் கடன் வாங்கி வந்து ஓய்வு நேரத்தில் படிப்பார். சட்டமும், அரசியலும் பயின்று முடித்த லிங்கன் 28-ஆவது வயதில் ஸ்பிரிங்பீல்டில் வழக்குரைஞராகத் தமது வாழ்க்கையைத் தொடங்கினார். அவ்வூரார் லிங்கனது கூரிய அறிவையும், ஒருபாற்கோடாமையும், வழக்குகளைத் தீர ஆராயும் முறையினையும் கண்டு வியந்தனர்.

வழக்குரைஞராக மக்களது நன்மதிப்பைப் பெற்ற லிங்கன் இலினாய் மாநிலச் சட்டசபையில் எட்டு ஆண்டுகள் உறுப்பினராகப் பணியாற்றினார். காங்கிரஸின் பிரதிநிதிகள் சபையில் 1844 - முதல் 1846 வரை உறுப்பினராக இருந்தார். விக்குக் கட்சியினர் அவருக்குச் சிறப்புமிக்கதோர் இடத்தை (அரசியலில் தராமல் போகவே) அரசியலிலிருந்து ஓய்வு பெறுவதென லிங்கன் நினைத்தார். ஆனால், அடிமைமுறை மீதான சிக்கல் மீண்டும் எழுப்பப்படவே லிங்கன் அரசியலில் தொடர்ந்து ஈடுபட முடிவு செய்தார்.

புதியதாகத் தோற்றுவிக்கப்பட்ட குடியரசுக்கட்சியில் ஓர் உறுப்பினராக லிங்கன் சேர்ந்தார். 1858ஆம் ஆண்டு நடைப்பெற்ற செனட் சபை தேர்தலில் குடியரசுக் கட்சியின் வேட்பாளராக லிங்கன் போட்டியிட்டார். அவரையெதிர்த்து மக்களாட்சிக்கட்சியின்

வேட்பாளராக ஸ்டீபன் டக்லாஸ் போட்டியிட்டார். இருவரும் அச் சமயத்தில் நாட்டில் தலைசிறந்த அரசியல்வாதிகளாகத் திகழ்ந்தனர். டக்லாஸ் புகழின் உச்சநிலையிலிருந்தார்; ஆனால், லிங்கனோ அப் பொழுதுதான் அரசியலில் அறிமுகமாயிருந்தார். டக்லாஸ் தலை சிறந்த பேச்சாளரென மக்களின் மனதைக் கவர்ந்திருந்த அச் சமயத்தில்தான் லிங்கன் மேடைகளில் பேச ஆரம்பித்திருந்தார். இருவரும் கென்டக்கியில் ஏழைக்குடும்பத்தில் பிறந்து, பின்னர் மேற்கே குடியேறினர். இளமையில் இருவரும் பல இடர்ப்பாடுகளை அனுபவித்திருந்தனர். இருவரும் ஒரே பெண்ணைக் காதலித்தனர். அரசியலைத் தவிர பிறவற்றில் இருவரும் நெருங்கிய நண்பர்களாகவே பழகினர். டக்லாஸ் தமது சொல்வன்மையாலும் பொருட் செறிவாலும் கேட்போரைக் கவர்ந்தார்; லிங்கன் திறமையாக வாத முறையில் பேசி உண்மையை உணர்த்துவதில் சிறந்தவராகத் திகழ்ந்தார். குடியரசுத்தலைவர் பதவியைப் பெறவேண்டுமென்ற பேரவா இருவரிடத்தும் இருந்தது. அடிமைமுறையைப்பற்றி வாதாட லிங்கன் பலமுறை டக்லாஸீக்கு அறைகூவல் விடுத்தார். டக்லாஸீம் அவற்றை ஏற்றுத் திறம்பட வாதாடினர். இவ்வாதங் கள் நாடு முழுவதிலும் ஆர்வத்துடன் படிக்கப்பட்டன. லிங்கன் ஆற்றிய சொற்பொழிவுகள் அவருக்குத் தேசிய புகழைத் தேடித் தந்தன. அவருடைய ஆங்கிலநடை எடுப்பானதாகவும், எளிதில் புரியக்கூடியதாயும் அமைந்திருந்தது. அவருடைய சொற்பொழிவு களில் ஆழ்ந்த கருத்துகளிருந்தன. லிங்கன், இறப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்பு இரண்டாவது பதவியேற்பு விழாவில் நிகழ்த்திய சொற்பொழிவில், "யாரிடமும் மனக்காழ்ப்புக் கொள்ளாது, அனைவ ரிடத்தும் மன்பதை அன்பு கொள்க" (With malice toward none, with charity for all) என்று அறிவுரை கூறினர். இச்சொற்றொட ருக்கு எடுத்துக்ககாட்டாகவே லிங்கன் தமது வாழ்க்கையை நடத்தினர்.

செனட் சபைக்கான தேர்தலில் டக்லாஸ் வெற்றிபெற்றபோதும், லிங்கன் ஒரு தேசியத் தலைவரானர். 1860ஆம் ஆண்டு குடியரசுக் கட்சி, லிங்கனைக் குடியரசுத்தலைவர் பதவிக்கு வேட்பாளராக நியமித்தது. லிங்கனது மாபெரும் வெற்றியைக் கண்ட தென் மாநிலத்தவர்கள் பிரிந்துசென்று உள்நாட்டுப்போருக்கு ஆயத்த மாயினர்.

### இருதரப்பாருடைய வலிமை ஒப்பீடு

1861-ல் போர் மூண்டபோது இருதிரப்பாரும் எளிதில் வெற்றுபெற்றுவிடலாமென எதிர்பார்த்தனர். வடபகுதியினர் படை வலிமையிலும், வளப்பத்திலும் தென்பகுதியினரைக் காட்டிலும் மேம் பட்டவர்களாயிருந்தனர். வட பகுதியில் இருபத்துமூன்று மாநிலங் கள் இருக்க, தென்பகுதியில் பதினேரு மாநிலங்களே இருந்தன.

வடக்கு மாநிலங்களின் மக்கட்தொகை 22 மில்லியனாக இருந்தது. தெற்கு மாநிலங்களின் மக்கட்தொகையான 9 மில்லியனில், மூன்றரை மில்லியன்பேர் நீக்ரோ அடிமைகளாவர். இருப்பினும் தென் மாநிலங்கள் ஒற்றுமையாக இருந்ததுபோல வடக்கு மாநிலங்கள் ஒற்றுமையாக இல்லை.

இராணுவ அடிப்படையில் ஒப்பிடும்போது தென்மாநிலத்த வர்களே அதிக வலிமை பெற்றிருந்தனர். தென்மாநில மக்கள் வேட்டையாடுவதிலும், குதிரையேற்றத்திலும் நல்ல ப்யிற்சி பெற்றி ருந்தமையால், அவர்களை எளிதில் பயிற்றுவித்துப் படையில் சேர்க்க முடிந்தது. பல இராணுவ அதிகாரிகள் ஏற்கனவே மெக்ஸிகோ போரில் நல்ல அனுபவம் பெற்றிருந்தனர். அவர்களிடையே பல சிறந்த தளபதிகளும் இருந்தனர். அவர்களுள் சிறப்புமிக்கவர்கள் ராபர்ட் லீ (Robert E. Lee) என்பவரும் ஸ்டோன்வால் ஜாக்சன் (Stonewall Jackson) என்பவருமாவர். வர்ஜீனியா மாநிலத்தைச் சார்ந்த இருவரும் போர் ஆரம்பித்ததும் கூட்டாட்சி அரசுப்படை யினின்று விலகி தென்பகுதியினர் பக்கம் இருந்து போரிட முற்பட் டனர். இதனால் வட பகுதியினருக்குத் துவக்கத்தில் பேரிழப்பு ஏற்பட்டது எனலாம். கூட்டாட்சி அரசின் முதற்பெரும் படைத் தலைவராய்ப் பணியாற்றிய வின்பீல்டு ஸ்காட், குதிரை மீது ஏறுவதற் குக்கூட போதிய வலிமையற்றவராய் இருந்தார். யூலிஸஸ் கிராண்ட் (Ulysses S. Grant) படைகளின் தலைமைப்பொறுப்பை 1864-ல் ஏற்கும் வரை லிங்கன் மனக்குறையுடனேதான் போரை நடத்தினர்.

தென்மாநிலங்கள் கூட்டாட்சி அரசினின்று பிரிந்து சென்றமை யால் கூட்டாட்சி அரசுதான் தென்பகுதிக்கு வலியசென்று போரிட நேரிட்டது. அப்படி வலிந்து மேற்சென்று தாக்குகிற போர் அதிகப் பணச்செலவுடையதாகவும் இருந்தது. அதற்கு மாறாகத் தென் மாநிலத்தவர்கள் தாக்குதலை எதிர்த்துநின்று தங்கள் நிலப்பகுதி யிலேயே போரிடும் நிலையில் இருந்தனர். அதனால்தான் விக்ஸ்பர்க் கிலும் (Vicksburg), கெட்டிஸ்பர்க்கிலும் (Gettysburg) படுதோல்வி யடைந்த பிறகும் போரினை மேலும் இரண்டு ஆண்டுகளுக்குத் தென் மாநிலத்தவர்கள் நீட்டிக்கமுடிந்தது.

பொருளாதார வளத்தைபொறுத்தமட்டில் வடக்கு மாநிலத்த வர்கள் பல நன்மைகளைப் பெற்றிருந்தனர். அங்குத் தொழிற் சாலைகள் மிகுந்திருந்தன. பெரும்பாலான வெளிநாட்டு வாணிகம் வடபகுதி வணிகர்களால் கட்டுப்படுத்தப்பட்டது. தென்மாநிலத்த வர்கள் உற்பத்தி செய்ததைப் போன்று, பத்து மடங்கு அதிகமாக வடமாநிலத்தவர்கள் செய்பொருள்களை உற்பத்தி செய்தனர். கடல் கடந்த வெளிநாடுகளின் உறவும் வடபகுதியினரால் கட்டுப்படுத்தப்

பட்டது. தென்மாநிலப் பொருளாதாரம விவசாயத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தமையால், செய்பொருள்களையெல்லாம் ஐரோப்பாவினின்று இறக்குமதி செய்யவேண்டிய நிலை அங்கு ஏற்பட்டது.

கூட்டாட்சி அரசிடம் கருவூலத்துறை இருந்ததோடு, (வழுவற்ற) சீர்மிக்க பணத்தாள்முறையும் போர்த்துவக்கத்தில் . இருந்தது. இதற்கு மாறாகத் தென்மாநிலக் கூட்டரசிடம் (Confederacy) முறையான நிதிவசதி இல்லாதிருந்தது. வடமாநிலத்தவர்களுக்கு ஏராளமாகத் தங்கமும், வெள்ளியும் மேற்குப் பகுதியிலிருந்து வந்து கொண்டேயிருந்தன. தென்மாநிலத்தவர்களிடையேயிருந்த சிறிது பணமும் அயல்நாடுகளிலிருந்து போர்க்கருவிகளை வாங்கச் செலவிடப்பட்டது. வரிகள் விதித்தும், கடன்பத்திரங்கள் வழங்கியும் தாள்பணம் வெளியிட்டும் இரு அரசுகளும் தங்களது நிதிநிலையை வலுப்படுத்திக்கொண்டன. கூட்டாட்சி அரசு 450 மில்லியன் டாலருக்குத் தாள்பணம் அச்சிட்டு வழங்கிற்று. இதனால் நாட்டில் பணவீக்கம் அதிகமாகி விலைவாசி ஏறிற்று. அதனால் போர்ச் செலவும் அரசுக்குப் பன்மடங்காகப் பெருகியது. தாள்பண வெளியீட்டால் ஒரு டாலரின் மதிப்பு 39 சென்டாகத் தாழ்ந்தது.

வெளிநாட்டுறவைக் கூட்டாட்சி அரசு கட்டுப்படுத்தியமையால், ஐரோப்பிய நாடுகளோடு வடபகுதி எளிதில் தொடர்பு கொள்ள முடிந்தது. பிரிட்டனிலிருந்தும், பிரான்சிலிருந்தும் உதவிகிட்டுமெனத் தென்மாநிலத்தவர்கள் நினைத்தனர். ஆனால், அவர்கள் நினைத்தபடி அந் நாடுகள் உதவமுன்வரவில்லை. அப்படியே ஒருவேளை பிரிட்டனும், பிரான்சும் தெற்கு மாநிலங்களுக்கு உதவ முன் வந்திருந்தாலும், அவர்கள் தென்பகுதியினரோடு தொடர்புகொள்ள வொட்டாமல் வடபகுதியினரது கப்பற்படை தென்துறைமுகங்களை முற்றுகையிட்டிருந்தது. ஆபிரகாம்லிங்கனின் முயற்சியால்தான் ஐரோப்பிய நாடுகள் தென்பகுதியினருக்கு உதவாமல் நடுநிலைமை வகுத்தன. அடிமைமுறையை எதிர்த்த வடபகுதி மக்களோடு பிரிட்டிஷார் ஒத்த உள்ளுணர்வீடுபாடு கொண்டிருந்தனர். அயல் நாடுகளின் உதவி கிடைக்காததாலும், ஆள்வலிமை இல்லாததாலும், பொருளாதாரவளம் குறைவாக இருந்தமையாலும் தென்பகுதி வலிமை குன்றிய நிலையில் இருந்தது.

பணமுடை காரணமாக வடபகுதி மக்களும், தென்பகுதி மக்களும் பெரிதும் இடர்ப்பாடுற்றனர். பணவீக்கத்தால் பொருள்களின் விலை உயர்ந்தது. ஆனால், ஊதியமோ உயரவில்லை. எனவே, தொழிலாளர்களின் வாங்குந் திறன் தாழ்ந்த நிலையை அடைந்தது. குறிப்பிட்ட ஊதியத்தைப் பெறும் சமயகுருமார்கள், ஆசிரியர்கள் அரசாங்க ஊழியர்கள் ஆகியோர் பெரிதும் அல்லலுற்றனர்.


உள்நாட்டுப் போர் நிகழ்ந்த இடங்கள்
நியூயார்க்
பென்சில்வேனியா
கெட்டிஸ்பர்க்
ஆன்டியெடம்
பிரெடெரிக்ஸ்பர்க்
ரிச்மாண்ட்
அப்போமடாக்ஸ்
ஐயோவா
ஒஹியோ
மிஸௌரி
கென்டக்கி
டென்னசி
வட கரோலினா
தென் கரோலினா
அர்க்கன்சாஸ்
சார்ல்ஸ்டன்
சவான்னு
மெக்ஸிகோ வளைகுடா
அட்லாண்டிக் பெருங்கடல்

இவற்றிற்கெல்லாம் மேலாக மக்கள் இராணுவத்தில் கட்டாயமாகப் பணிபுரிய நேரிட்டது. பணம்படைத்த செல்வந்தர்கள் குறிப்பிட்ட தொகையை அளித்துவிட்டுக் கட்டாய இராணுவ சேவையிலிருந்து விதிவிலக்குப் பெற்றனர். ஆனால், ஏழைகள் கட்டாயம் போரில் ஈடுபட நேரிட்டது. "பணம் படைத்தவர்களின் போரில் ஏழைகள் போராட வேண்டியுள்ளது" (Rich man's War and poor man's fight) என்ற குரல் நாட்டில் ஒலித்தது.

**போரின் போக்கு**

அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் மிகவும் நெருக்கடியான நேரத்தில் குடியரசுத் தலைவர் பதவியை ஆபிரகாம்லிங்கன் ஏற்றார். பதவியேற்றபின் ஒரு மாதக்காலம் என்ன செய்வதென்று தெரியாமல் லிங்கன் திகைத்திருந்தார். பிரிந்துசென்ற தென்மாநிலங்கள்மீது வன்முறையைக் கையாண்டால் போர் உருவெடுப்பது உறுதி. உள்நாட்டுப்போர் என்பது இரட்டிப்பான துன்ப நிகழ்ச்சியாகும்! ஒரேகுடும்பத்தைச் சேர்ந்தவர்கள் ஒருவரையொருவர் கொலை செய்வதற்கு ஒப்பாகும். "நியூயார்க் டிரைபியூன்" (New York Tribune) என்ற செய்தித்தாளின் ஆசிரியரான ஹோரஸ் கிரீலி (Horace Greely) போன்ற அரசியல் அறிஞர்கள் பிரிந்துசென்ற தென்மாநிலங்களை அப்படியே விட்டுவிடச் சொன்னார்கள். அப்படி நிகழவிடுவதை லிங்கனால் எண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை. மாநிலங்கள் பிரிந்துசெல்ல அனுமதித்தால் நாட்டின் ஒற்றுமை சிதறுண்டு போகும்; அமெரிக்க ஐக்கிய நாடு என்பது பெயரளவில் தான் இருக்கும் என்று லிங்கன் கூறினார். அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலுள்ளதைப் போல் நாளாவட்டத்தில் சிறுசிறு நாடுகள் தோன்றி, சக்திச் சமநிலையைக் காப்பதற்காக அடிக்கடி போராடிக் கொண்டிருக்குமெனவும் அஞ்சினார். எனவே, எப்படியாவது கூட்டாட்சி அரசைக் காப்பாற்ற வேண்டும் என்று லிங்கன் உறுதிபூண்டார். தென்மாநிலங்களிலிருந்த அடிமைமுறையில், தாம் தலையிடப் போவதில்லையென்றும், அப்படியே தலையிட விரும்பினாலும் அரசியலமைப்பு அதற்கு இடந்தரவில்லையென்றும் தென்மாநிலத் தலைவர்களுக்கு லிங்கன் வாக்குறுதி தந்தார்.

1861-ல் கூட்டாட்சிஅரசுக்குச் சொந்தமான போர்ட் சம்டர் (Fort Sumter) என்ற படைத்தளத்தைத் தென்கரோலினா தாக்கியதும் போர் தவிர்க்கமுடியாததாகிவிட்டது. உடனே, நடவடிக்கைகள் எடுக்க லிங்கன் முதலில் தயங்கினார். பின்னர் அடிப்படைத் தளத்தைக் காத்து நின்ற தளபதியான ராபர்ட் ஆண்டர்சனுக்குப் (Robert Anderson) போதுமான உணவுப்பொருள்களையும், போர்க் கருவிகளையும் கப்பல்வழியே லிங்கன் அனுப்பினார். தெற்குப்

படைகள் ஏப்ரல் மாதம் 12ஆம் நாள் கடுமையாகத் தாக்கவே ஆண்டர்சன் சரணடைந்தார். லிங்கன் உடனே படைதிரட்ட ஏற்பாடுகள் செய்யத்தொடங்கினர். கூட்டாட்சி அரசுக்குப் பற்றுறுதி காட்டுகின்ற மாநிலங்களெல்லாம் மூன்று மாதத்திற்குப் பணியாற்ற 75,000 போர்வீரர்கள் கொண்ட ஒரு படையைத் திரட்டித்தரவேண்டுமென லிங்கன் பொதுஅறிவிப்பு ஒன்றை ஏப்ரல் 15 ஆம் நாள் விடுத்தார். கூட்டாட்சி அரசு மூன்று குறிக்கோள்களைச் செயலாற்ற முனைந்தது. முதலாவதாக, தென் மாநிலங்களின் தலைநகரான ரிச்மாண்டைக் கைப்பற்றுவது; இரண்டாவதாகத் தென்மாநிலங்களின் துறைமுகங்களை முற்றுகை யிடுவது; மூன்றாவதாக, மிசிசிபி ஆற்றை வடபகுதியினரது போக்கு வரத்துக்குத் திறந்துவிடுவது.

ரிச்மாண்டைக் கைப்பற்றுவதற்காக, ஜூலை (1861) மாதம் ஒரு படை அனுப்பப்பட்டது. அதனைத் தெற்குப்படைகள் புல் ரன் (Bull Run) என்னுமிடத்தில் தோற்கடித்தன. கூட்டாட்சி கப்பற் படைகொண்டு தென்மாநிலத் துறைமுகங்களை முற்றுகையிட்டு மேலும் தீவிரமாகப் போருக்கு ஆயத்தங்கள் செய்தது. 1862 ஆம் ஆண்டு வடக்குப்படைகள் தென்மாநிலங்களைக் கிழக்குப் பகுதி யிலும் மேற்குப் பகுதியிலும் தாக்கின. மேற்கே, வடக்குப் படைகள் ஷிலோ (Shiloh) என்ற இடத்தில் மாபெரும் வெற்றி பெற்றன. ஆனல், அப் போரில் இருதரப்பினருக்கும் பேரிழப்பு ஏற்பட்டது. கூட்டாட்சிப் படையினர் 63,000 பேரில் 13,000 பேர் உயிரிழந்தனர். இவ்வெற்றிக்குப் பிறகு வடக்குப் படைகள் ரிச்மாண்டை நோக்கிச் சென்றன. ஆனல், இரண்டாம் முறையாக புல்ரன் என்னுமிடத்தில் வடக்குப் படைகளைத் தெற்குப் படைகள் தளபதி லீயின் தலைமையில் தோற்கடித்தன. அடுத்து, தெற்குப்படைகள் பென்சில்வேனி யாவைத் தாக்குவதற்காகச் சென்றபோது ஆன்டிகயேடம் (Antietam) என்னுமிடத்தில் வடக்குப படைகளால் தோற்கடிக்கப்பட்டன.

1863ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதியன்று, அமெரிக்க வரலாற்றில் சிறப்புமிக்க விடுதலைப் பேரறிக்கையை (Emancipation Proclamation) லிங்கன் வெளியிட்டார். அப் பேரறிக்கை எல்லா அடிமைகளையும் அடிமைத்தனத்திலிருந்து விடுவித்தது. நாட்டின் படையில் சேருமாறு அவர்களனைவரும் அழைக்கப்பட்டனர். உள் நாட்டுப் போரின் உடனடிக்காரணம் கூட்டாட்சியில் பிளவு ஏற்பட்டது தான் என்ற போதிலும், அதன் அடிப்படைக் காரணம் அடிமைகளுக்கு வாழ்வளிக்க முயன்றதுதான் என்பதனை லிங்கன் விளக்கினர். இதனல் லிங்கன் நாட்டின் ஒப்புயர்வற்றத் தலைவராக மதிக்கப் பட்டார். வடக்குப்படைகள் மேற்குப் பகுதியில் கென்டக்கி ,தென்னசி

ஆகிய மாநிலங்களின் பகுதிகளைக் கைப்பற்றின. இதனையடுத்து வடக்குப் படைகள், தெற்கு நோக்கிப் படையெடுத்தபோது, தளபதி லீ வடக்குப் படைகளை பிரடெரிக்ஸ்பர்க் (Fredericksburg — 1862 டிசம்பர்) என்னுமிடத்திலும், பின்பு சான்சலர்ஸ்வில் (Chancellors - ville-1853 மே) என்னுமிடத்திலும் தோற்கடித்தார். இவ்வெற்றி களால் ஊக்கம்பெற்ற லீ மீண்டும் முன்னேறத் திட்டமிட்டுப் பென்சில்வேனியாவின்மீது படையெடுத்துச் சென்றார். கெட்டிஸ் பர்க் என்னுமிடத்தில் பெருஞ்சண்டை நிகழ்ந்தது. வடக்குப்படை களின் தளபதியாகத் திகழ்ந்த ஜார்ஜ் ஜி மீடு ( George G. Meade ) தெற்குப்படைகளின் தளபதியான லீயைத் தோற்கடித்துப் பின்வாங்கச் செய்தார் (1863 - ஜூலை). இத் தோல்விக்குப் பிறகுத் தெற்குப் படைகள் வடபகுதியை எட்டிப்பார்க்கமுடியவில்லை. இப் போரில் மடிந்த வீரர்களது நினைவுச்சின்னத்தைப் பின்னர் லிங்கன் திறந்துவைத்துச் சிறப்புமிக்கச் சொற்பொழிவு ஒன்றை நிகழ்த்தினர் (1863- நவம்பர் 19)

மிசிசிபி நதியைக் கட்டுப்படுத்துவதில் கூட்டாட்சி அரசு பல வெற்றிகளைப் பெற்றது. 1863 ஆம் ஆண்டு வடபகுதியினரின் படைத்தலைவரான கிராண்ட், மிசிசிபி பள்ளத்தாக்கு வழியே சென்று தெற்குப் படைகளை விக்ஸ்பர்க் என்னுமிடத்தில் தோற்கடித்தார். அப் போரில் தென்பகுதியினருடைய சிறந்த தளகர்த்தருள் ஒருவரான ஸ்டோன்வால் ஜாக்சன் இறந்தார். விக்ஸ்பர்க் வெற்றியால் வட பகுதியினர் மிசிசிபி நதியினைத் தங்களது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்ததோடு அர்க்கன்சாஸ், லூசியானா, டெக்ஸாஸ் ஆகிய மாநிலங்களைத் தென்மாநிலக் கூட்டரசினின்று பிரிக்கமுடிந்தது. அதனால் கிழக்கேயிருந்த பிரிவினை ஆதரவாளர்கள் மேற்கிலிருந்து படைகளையும், இராணுவத் தேவையான பொருள்களையும் பெற முடியவில்லை. மேலும் வடபகுதியினர், கப்பற்படையைப் பயன் படுத்தி நியூ ஆர்லியன்ஸ் துறைமுகத்தைக் கைப்பற்றியமையால், வெளிநாடுகளுக்கும் தென்பகுதி நாடுகளுக்கும் இடையே நடை பெற்றுவந்த வாணிகம் அறவே தடைப்பட்டது. இதனால் தென் பகுதி மக்கள் பெருந்துன்பத்திற்காளானார்கள். இறுதியாக, வடக்குப் படைகளின் தளபதி கிராண்ட், ரிச்மாண்டைக் கைப்பற்ற முனைந்தார். ஷெர்மன் (Sherman) என்ற மற்றொரு வடபகுதி படைத் தலைவர் ஜார்ஜியாவிலுள்ள அட்லாண்டாவைக் (Atlanta) கைப்பற்றி சாவன்னா (Savannah), சார்ல்ஸ்டன் ஆகிய இடங்களைக் கைப் பற்றினர். இதற்கிடையில் கிராண்ட், பீட்டர்ஸ்பர்க் என்னு மிடத்தைக் கைப்பற்றினர். அதனால், லீ, ரிச்மாண்டை விட்டு வெளி யேறத் தீர்மானித்தார். அப்போது கிராண்ட் அவரை அப்போமட்டாக்ஸ் (Appomattox) என்னுமிடத்தில் தோற்கடித்துச் சரணடையச் செய்தார் (1805 ஏப்ரல்). அத்துடன் போர் முடிவுற்றது.

**போரின் விளைவுகள் :**

உள்நாட்டுப்போர் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் நடைபெற்றது. குறிப்பாகத் தென்பகுதியில் ஏராளமான பேர் மடிந்தனர் ; உடைமைகள் பாழாக்கப்பட்டன. தெற்குப்பகுதியிலிருந்த வளமான வயல்களெல்லாம் அழிவுண்டன; பல நகரங்கள் தீக்கிரையாயின; பல பண்ணைகள் கேட்பாரற்றுக்கிடந்தன. தென்மாநிலங்களின் நிதிநிலைமை ஒழுங்கற்ற முறையிலிருந்தது. கூட்டாட்சி அரசும் தென்மாநிலங்களுக்குப் போருக்காகப் பேரளவில் பொதுக் கடனைப் பெற்றிருந்தன. இப் போரினால் அரசியலிலும், சமூகத்திலும் பொருளாதாரத்திலும் பல மாற்றங்கள் ஏற்பட்டன.

**(1) அரசியல் விளைவுகள்;**

அமெரிக்க உள்நாட்டுப்போர், அமெரிக்க ஐக்கிய நாட்டில் நிறுவப்பட்டிருந்த கூட்டாட்சி அரசை அழியவொட்டாமல் பாது காத்தது ; அக் கூட்டாட்சி அரசுக்கு அழிவற்ற தன்மையை அளித்தது. தென்மாநிலங்கள் கூட்டாச்சியினின்று பிரிந்து செல்லாம் என்று நினைத்தன. ஆனால், அது முடியாது என்பதனை உள்நாட்டுப்போர் எதிர்மறையாக முடிவு செய்தது. பிரிந்து சென்ற மாநிலங்கள் தோற்கடிக்கப்பட்டு மீண்டும் கூட்டாட்சிக்குள் கொண்டுவரப்பட்டன. உள்நாட்டுப்போருக்குப் பிறகும் பல தலைவர்கள் மாநில உரிமைகள்பற்றியும், பிரிந்துசெல்லும் உரிமை பற்றியும் வாயளவில் பேசினர்களே ஒழிய, பிரிந்துசெல்ல யாரும் முயலவில்லை. இவ்வகையில் அமெரிக்க ஐக்கிய நாடு, அழிக்க முடியாத மாநிலங்களைக் கொண்ட, அழிவற்ற தன்மையைப் பெற்றது. கூட்டாட்சி அரசும் மாநிலங்களின் அரசுகளும் தத்தம் எல்லைக்குள் உயரிடத்தைப் பெறவேண்டும் என்ற நியதி ஏற்றுக்கொள்ளப் பட்டது.

கூட்டாட்சி அரசின் கரங்கள் வலுப்படுத்தப்பட்டமையால், வெளி நாட்டுறவில் ஏற்பட்ட நெருக்கடியை உடனடியாக அமெரிக்கா தீர்க்க முடிந்தது. குடியரசுத் தலைவர் ஜேம்ஸ் மன்ரோவால், 'மன்ரோ கோட்பாடு 1823- ல் வெளியிடப்பட்டது. உள்நாட்டுப்போரின் போது அக் கோட்பாட்டுக்கு அறைகூவல் விடுப்பதுபோல ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. மெக்ஸிகோ அரசு பிரிட்டனிட மிருந்தும், பிரான்சிடமிருந்தும் பெற்றிருந்த கடனைத் திருப்பி யளிக்காததால், அவ்விரு நாடுகளும் மெக்ஸிகோவிற்கு ஒரு படையை அனுப்பத்திட்டமிட்டன. பிரிட்டன் பின்பு அத் திட்டத்தைக் கைவிட்டது. ஆனால், பிரான்சுமட்டும் தனியே படையனுப்ப, தக்க தருணம் பார்த்துக் கொண்டிருந்தது. உள்நாட்டுப்போர் நடை பெற்ற சமயம் மூன்றும் நெப்போலியன், பிரான்சின் பேரரசராகய

திகழ்ந்தார். அவர் தென்மாநிலங்களுக்கு உதவிசெய்ய முன்வந்து அவற்றிக்காகப் போர்க்கப்பல்களையும், துப்பாக்கிப்படகுகளையும் பிரான்சில் கட்டுவித்தார். தென்மாநிலங்களுக்காகக் கடனும் திரட்டலானர். பிரான்சிலிருந்த கத்தோலிக்கர்களை மகிழ்விக்கும் பொருட்டும், மெக்ஸிகோவிலிருந்த கத்தோலிக்கர்களுக்குப் பாது காப்பளிக்கும் பொருட்டும், மூன்றும் நெப்போலியன் மெக்ஸிகோவில் ஒரு பிரெஞ்சுப் பேரரசை நிறுவத்திட்டமிட்டார். அதன்படி ஒரு படையை அனுப்பி மெக்ஸிகோவைக் கைப்பற்றி மாக்ஸிமிலியன் (Maximilian) எனப்படும் ஆஸ்திரிய இளவரசரை அரியணை யிலேற்றினர். அமெரிக்க ஐக்கிய நாடு உள்நாட்டுப்போரில் ஈடுபட்டிருந்தமையால், மெக்ஸிகோ மக்களுக்கு உதவமுடியாது போயிற்று. போர்முடிவுற்றதும் லிங்கன் ஒரு படையை மன்ரோ கோட்பாட்டின்படி மெக்ஸிகோ எல்லைக்கு அனுப்பினர். உடனே மெக்ஸிகோ மக்கள், ஜாரெஸ் (Jaurez) என்பவரின் தலைமையில் கிளர்ச்சியுற்றெழுந்து, பிரஞ்சுப்படைகளைத் தோற்கடித்து மாக்ஸ்மிலியனைக் கொன்று, மூன்றும் நெப்போலியனது திட்டங்களைத் தகர்த்தெறிந்தனர். இஃது அமெரிக்க ஐக்கிய நாட்டின் மன்ரோ கோட்பாட்டுக்குக் கிடைத்த ஒரு பெரும் வெற்றியாகும்.

உள்நாட்டுப்போர் முடிவுற்றதும் நாட்டின் புனரமைப்புப் பணி தொடங்கிற்று. பிரிந்துசென்ற மாநிலங்கள் போரில் தோல்வி யுற்றன. பிரிந்துபோன தென்மாநிலங்களை மீண்டும் கூட்டாட்சி அரசினுள் சேர்த்துக் கொள்வதுபற்றிக் கருத்து வேறுபாடு தோன்றிற்று. தென்மாநிலங்கள் பிரிந்து செல்லவே உரிமை கிடையாது என லிங்கன் கூறினர். ஆனல், தீவிரவாதிகள் தெற்கு மாநிலங்களைப்போரில் கைப்பற்றிய நாடுகளைப்போலத் தண்டித்து அடக்கியாளவேண்டுமென்று கூறினர். துவக்கத்தில் மிதவாதிகளது கட்டுப்பாட்டில் புனரமைப்பு வேலை மேற்கொள்ளப்பட்டது. ஆனல், லிங்கன் மறைவிற்குப் பிறகு தீவிரவாதிகள் தங்கள் விருப்பம் போலப் புனரமைப்பு வேலையை மேற்கொண்டனர்.

உள்நாட்டுப்போரின் விளைவாக அரசியல் கட்சிகளில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. உள்நாட்டுப்போருக்குமுன் மக்களாட்சிக் கட்சி வடக்குப் பகுதியிலும், தெற்குப் பகுதியிலும் பொதுமக்களின் பாராட்டுதலைப் பெற்றிருந்தது. போருக்குப் பிறகு, குடியரசுக கட்சி தென்மாநிலங்களில் செல்வாக்குப் பெற்று நீக்ரோக்களையும், பற்றுமிக்க வெள்ளையர்களையும் உறுப்பினர்களாகஏற்றுக்கொண்டது. புனரமைப்பு வேலை முடிவுற்ற பிறகு மீண்டும் மக்களாட்சிக் கட்சி தனது செல்வாக்கைத் தென்மாநிலங்களில் நிலைநாட்டியது. நாளா வட்டத்தில் மக்களாட்சிக் கட்சிக்கு முழு ஆதரவையும் அளிப்பதில் தென்பகுதி உறுதியாயிருந்தது.

**(2) சமூக விளைவுகள்** - உள்நாட்டுப்போரினால் சமூகத்தில் நீக்ரோக்களின் வாழ்க்கை நிலையில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. 1863ஆம் ஆண்டு, லிங்கன் அடிமைமுறையை ஒழித்து ஒரு பேரறிக்கையை வெளியிட்டார். அதன்படி, நீக்ரோக்கள் முழு உரிமைபெற்ற குடிமக்களாயினர். ஆனால், அவர்களுக்கு வேலை வாய்ப்புகளும், சமூகத்தில் பாதுகாப்பும் சரிவர அளிக்கப்படவில்லை. எனவே, கூட்டாட்சி அரசு உரிமைபெற்ற நீக்ரோக்களுக்கு மறுவாழ்வு அளிப்பதற்காக "விடுவிக்கப்பட்டோரின் பணிமனை"களை Freedman's Bureau) நிறுவியது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்புக்குக் கொண்டுவரப்பட்ட பதினான்காவது திருத்தின்படி நீக்ரோக்களுக்குக் குடியுரிமை வழங்கப்பட்டது; பதினைந்தாவது திருத்தத்தின்படி அவர்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது.

**(3) பொருளாதார விளைவுகள்** -அமெரிக்க ஐக்கிய நாட்டில் பெருவாரி வர்த்தகம் (Big Business) தோன்றியமை உள்நாட்டுப் போரின் ஒரு முக்கிய விளைவாகும். உள்நாட்டுப்போரினால் போர்த் தளவாடங்களும், கருவிகளும், பருத்தியாடைகளும், உணவுப் பொருள்களும் ஏராளமாகத் தேவைப்பட்டன. அவற்றின் தேவை நாளுக்குநாள் பெருகிக்கொண்டே சென்றது. அத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகத் தொழிற்சாலைகளெல்லாம் தங்களது வளவாய்ப்புகளை இணைத்துப் பெரும்வணிகஉரிமைக்குழுக்களை (Corporation ) நிறுவின. தொழிலாலைகளெல்லாம் உற்பத்தி முறைகளைச் செவ்வையாக்கிப் பெருமளவிலான பொருட்படைப்பில் (Mass Production) ஈடுபட்டன. இத்தகைய தொழில் மாற்றங்களால் வேலைவாய்ப்புகளும் அதிகரித்தன. அதேநேரத்தில் மேற்கில் மேலும் பல சுரங்கங்கள் வெட்டப்பட்டன; புதிய ஆலைகள் நிறுவப்பட்டன; பரந்த நிலப்பரப்புகளில் பயிர்த்தொழில் மேற்கொள்ளப்பட்டது. வேளாண்மை அடிப்படையிலான கோட்பாடுகளைக் கொண்டிருந்த தென்மாநிலங்கள், போரில் தோற்கடிக்கப் பட்டமையால் அக் கோட்பாடுகளை அவை கைவிடலாயின. எனவே உள்நாட்டுப் போரினால் அலெக்ஸாண்டர் ஹாமில்டன், ஹென்றி கிளே ஆகியோர் வகுத்த கோட்பாடுகள் தாமஸ் ஜெபர்சன், ஆண்ட்ரூ ஜாக்சன் ஆகியோர் வகுத்த கோட்பாடுகள்மீது வெற்றி கொண்டன எனலாம்.

உள்நாட்டுப்போரில் வடபகுதியில் திடீர் தொழிற்பெருக்கம் ஏற்பட்டது. காங்கிரஸில் வடபகுதியே மேம்பட்ட செல்வாக்கைப் பெற்றிருந்தது. ஏனெனில் உள்நாட்டுப் போரின்போது தென்பகுதி காங்கிரஸில் இடம் பெறாதிருந்தது. அத் தருணத்தை வட மாநிலத்தவர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். தங்களது தொழில்களைப் பாதுகாக்கக் காப்புவரிகளையும் இரயில்பாதை அமைப்

பதற்கான சட்டங்களையும், பாங்கு சம்பந்தப்பட்ட சட்டங்களையும் இயற்றிக் கொண்டனர். பல புதிய காப்புவரிகள் விதிக்கப்பட்டன. பசிபிக் கரையோரத்தை இணைப்பதற்கான இரயில்பாதைத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. 1863ஆம் ஆண்டு, ஒரு தேசிய பாங்குச் சட்டம் இயற்றப்பட்டுப், போர்ப்பத்திரங்களை விற்கும்பணி பாங்கிடம் விடப் பட்டது. இதனால் கூட்டாட்சி அரசில் நிலையான நிதிநிலைமை நிலவிற்று.

பெருவாரி வர்த்தகவளர்ச்சியோடு நாட்டில் முதலாளி தொழிலாளி போராட்டமும் தொடங்கிற்று. உள்நாட்டுப்போரின் விளைவாகச் செய்பொருள்களின் தேவை அதிகரித்ததால் அவற்றின் விலையும் உயர்ந்தது. விலையுயர்வு 117 சதவீதம் எனக் கணக்கிடப் பட்டுள்ளது. மாபெரும் ஊதியத்தைப் பெற்ற முதலாளிகள் தொழிலாளிகள் உழைப்புக்கூலியை அதற்கேற்றாற்போல அதிகப் படுத்தவில்லை. 43 சதவீதமே உழைப்புக்கூலி கூடுதலாகக் கொடுக்கப்பட்டது. எனவே, கூடுதல்கூலி கேட்டுத் தொழிலாளிகள் கிளர்ச்சி செய்யலாயினர்; அதன்பொருட்டுத் தொழிற்சங்கங்கள் அமைக்கலாயினர். இவ்வகையில் உள்நாட்டுப்போரின் விளைவாக முதலாளி - தொழிலாளி போராட்டம் அமெரிக்க ஐக்கிய நாட்டில் தொடங்கிற்று.

**அமெரிக்கக் கூட்டாட்சிக்கு ஆபிரகாம்லிங்கன் ஆற்றிய தொண்டு**

ஆபிரகாம் லிங்கனின் தளரா முயற்சியினால் கூட்டாட்சி அரசு உள்நாட்டுப்போரில் வெற்றி பெற்றது. அதனால் கூட்டாட்சி பாது காக்கப்பட்டது. அதுவே, லிங்கன் செய்த தொண்டுகளுள் தலையாய தாகும். கூட்டாட்சி அரசின் அரசியலமைப்பு ஏற்றுக்கொள்ளப்பட்ட நாளிலிருந்து, இறைமைத்தன்மை குறித்துக் கூட்டாட்சி அரசுக்கும், மாநில அரசுகளுக்குமிடையே கருத்து வேறுபாடு இருந்து வந்தது. தேசியவாதிகள் கூட்டாட்சிக்குத்தான் இறைமைத்தன்மை உரிய தாகும் என்று வாதிட, மற்றொரு சாரார் மாநிலங்களிடத்துத்தான் இறைமைத்தன்மை உறைய வேண்டுமென வாதிட்டனர். கூட்டாட்சி யினின்று பிரிந்துசெல்ல மாநிலங்களுக்கு உரிமையில்லை என லிங்கன் கூறினர். கூட்டாட்சி அரசைக் காப்பதற்காகவே போரிலீடு பட்டாரேயொழிய, அடிமைகளுக்கு உரிமை வழங்குவதற்காக அன்று என்பதனை லிங்கன் 1862-ல் எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு தெளிவுறக் குறிப்பிட்டிருந்தார். "இந்தப் போரில் என்னுடைய தலையாய குறிக்கோள் கூட்டாட்சியைக் காப்பதேயன்றி, அடிமைகளை உடைமையாக வைத்திருக்கும் வழக்கத்தைக் காப்பாற்றுவதையோ அழிப்பதையோ அன்று. ஓர் அடிமையைக்கூட விடுவிக் காமல் கூட்டாட்சியைக் காப்பாற்ற முடிந்தால், நான் அதைச் செய்வேன்; எல்லா அடிமைகளுக்கும் சுதந்திரம் கொடுத்து அதைக்

காப்பாற்ற முடிந்தால் நான் அதைச் செய்வேன்; சில அடிமைகளுக்குச் சுதந்திரம் கொடுத்து சிலரை அந் நிலையிலேயே விட்டுவைத்து அதைக் காப்பாற்ற முடிந்தால் நான் அதையும் செய்வேன்."

லிங்கன் அடிமைமுறையையும் ஒழித்தார்; மனிதஇனநலப் பற்றின் அடிப்படையிலும், அரசியல் சூழ்நிலை அடிப்படையிலும் அடிமைமுறையை ஒழிப்பதென உறுதி கொண்டார்; 1863-ல் அடிமைகளுக்கு உரிமை அளித்து "விடுதலைப் பேரறிக்கை"யினை வெளியிட்டார். இதனை நிலைநாட்டும் வகையில் 1865-ல் அரசியலமைப்புக்குப் பதின்மூன்றாவது திருத்தத்தைக் கொண்டு வந்தார். அதன்படி அமெரிக்க ஐக்கிய நாட்டின் எந்தப் பகுதியிலும் அடிமை முறையைப் பின்பற்றுவது தடை செய்யப்பட்டது.

உள்நாட்டுப்போரினால், தென்மாநிலங்கள் அடைந்திருந்த துயரங்களைப் போக்குவதற்கு, மிதமான புனரமைப்புக் கொள்கையை லிங்கன் வெளியிட்டார். போரால் சீர்குலைந்திருந்த தென்பகுதியைப் பழிவாங்கும் நோக்கம் எள்ளளவும் லிங்கனிடம் கிடையாது. கூட்டாட்சி அரசை வலுப்படுத்த வேண்டுமென்றால், நடந்தவற்றை மறப்பதோடு, பழிவாங்கும் எண்ணத்தையும் கைவிடவேண்டுமென்று தமது செயலாளர்களிடம் அவர் கூறினார். ஆனால், அத்தகைய பெருந்தன்மையான கொள்கையைச் செயலாக்க லிங்கன் வாழவில்லை. 1865ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் 14 ஆம் நாள், லிங்கன் ஒரு நாடக அரங்கில் இருக்கும்போது தென் பகுதியைச் சேர்ந்த வெறியன் ஒருவனால் சுடப்பட்டார். மறுநாள் அவரது உயிர் பிரிந்தது. அத்துடன் மிதமான, சமரசமான புனரமைப்புக் கொள்கையும் காங்கிரஸால் கைவிடப்பட்டது.

அமெரிக்க குடியரசுத் தலைவர்களுள் ஆபிரகாம் லிங்கன் மிகவும் சிறந்தவராவார். வாய்மை, ஒடுக்கப்பட்ட மக்களிடம் இரக்கம், தாராளகுணம், துணிவுடன் செயல்படும் ஆற்றல், மக்களை மனமார நேசித்தல், வருமுன் உரைத்தல் - ஆகிய பல நற்குணங்களையும் லிங்கன் ஒருங்கே பெற்றிருந்தார். அவரது உணர்ச்சிமிக்க கருத்துச் செறிவுள்ள பேச்சுகள் இன்று உலக இலக்கியத்தில் ஒரு பகுதியாகி விட்டன. லிங்கனின் 'கெட்டிஸ்பர்க்' உரை மக்களைச் சிந்திக்க வைத்தது. இஃது ஆங்கிலச் சொற்பொழிவுகளிலே (இலக்கியத்திலே) தனியோர் இடத்தைப் பெற்று விளங்குகிறது. அவர் சுட்டுக் கொல்லப்பட்ட போது மக்களடைந்த துயரைப் பின்வருமாறு ஜேம்ஸ் ரஸ்ஸல் லோவல் (James Russell Lowell) என்ற கவிஞர் வருணித்துள்ளார் "தாங்கள் முன்பின் கண்டிராத ஒருவரின் மரணத்தைக் குறித்து பெருவாரியான மக்கள் கண்ணீர்வடித்த இந் நிகழ்ச்சியைப்போல இதற்கு முன்பு கண்டதே இல்லை. அவருடன் தங்கள் நட்புறவு என்ற பண்பே போய்விட்டது போல அவர்கள் வருந்தினர்கள். எதிர்காலம்

இருண்டு விட்டது போலத் துயருற்றார்கள். அன்று அறிமுகமில்லாத வர்கள் சந்தித்துக் கொண்டபோது அவர்கள் முகத்தில் தோய்ந் திருந்த துயரத்தைப்போல இதற்கு முன் எப்போதும் இருந்ததில்லை. மனிதகுலமே ஓர் அன்புருவான மனிதரை இழந்து விட்டது." எளிய நிலையிலிருந்து உன்னதப் புகழுக்கு உயர்ந்த ஆபிரகாம் லிங்கனுடைய வாழ்க்கை வரலாறு அனைவருக்கும் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும் ஒளிவிளக்காகும்.

# 20. புனரமைப்பு

## (Reconstruction)

மாநிலங்களுக்கிடையே நிகழ்ந்த போரினால், கூட்டாட்சியை அழிக்க முடியாதென்றும், கூட்டாட்சி அரசு ஓர் ஒப்பந்தக்குழு அல்ல என்றும் உறுதி செய்யப்பட்டது. துணிவுமிக்க குடியரசுத் தலைவராகத் திகழ்ந்த லிங்கன் மாநிலங்கள் பிரிந்துசெல்வதை அனுமதிக்க மறுத்தார். வலிமை மிக்கவராயும், அறிவுக்கூர்மையுடையவராயும் தலைமைத் தளபதியாகப் பொறுப்பேற்றிருந்த அவர் உள்நாட்டுப் போரினை வெற்றிகரமாக முடித்தார்; அப்படிக் கூட்டாட்சி அரசினைக் காப்பாற்றியதன் மூலம் உலகிலேயே சிறந்த மக்களாட்சி அங்கு மலர வழிவகுத்தார்.

உள்நாட்டுப்போரின் கொடூரமான நிகழ்ச்சிகளால் வடக்கு, தெற்கு மாநிலத்தவர்களிடையே வகுப்புவாத உணர்ச்சி மிகவும் பெருகியிருந்தது. அந் நிலையில் பகைமையை மறந்து புனரமைப்பு வேலையில் ஈடுபடுவதென்பது அரசியல் தலைவர்கள் கருதியதுபோல அவ்வளவு எளிதான செயலாக அமையவில்லை. போருக்குப்பின் ஏற்பட்ட அமைதியால் வடக்கிலும், தெற்கிலும் முற்றிலும் மாறுபட்ட வாழ்க்கைமுறைகள் உருவாயின. தென்மாநிலங்களில் போர் முடிந்து ஒரு தலைமுறைக்குப் பின்தான் முறையான மாநில ஆட்சியமைப்பையும், தலஆட்சி நிறுவனங்களையும் நிறுவமுடிந்தது. வட பகுதியினரோடு நல்லுறவை வளர்க்கவும், கலகம் விளைவித்த மக்கள் சமூகத்தில் தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்கவும் பல ஆண்டுகளாயின.

போருக்குப்பின் தென்பகுதியில் நடைபெற்ற புனரமைப்பு வேலையை நான்கு கட்டங்களில் காணலாம். அவை: (1) லிங்கன் மேற்கொண்ட புனரமைப்பு; (2) ஜான்சன் மேற்கொண்ட புனரமைப்பு: (3) காங்கிரஸ் செயலாக்கிய புனரமைப்பு; (4) தென்

மாநிலத்தலைவர்களே மேற்கொண்ட புனரமைப்பு. புனரமைப்பு வேலையை மேற்கொள்வதில் முக்கியமாக இருவகையான சிக்கல்கள் இருந்தன : ஒன்று அரசியல் சம்பந்தப்பட்டது; மற்றொன்று சமூகத்தைப்பற்றியது. பிரிந்துசென்ற மாநிலங்களை மீண்டும் எவ்வகையில் கூட்டாட்சியினுள் சேர்த்துக் கொள்வது என்பது அரசியல் சிக்கலாகும். விடுதலை பெற்ற நீக்ரோவின் முன்னேற்றத்திற்கான வழிமுறைகளை வகுப்பதுபற்றியும், தென்மாநிலங்களின் பொருளாதார நிலையைச் சீர்திருத்தியமைப்பதுபற்றியும் சமூகச் சிக்கல்கள் எழுந்தன.

கூட்டாட்சி அரசின் புனரமைப்புக் கொள்கைகள் பல காரணக் கூறுகளால் பாதிக்கப்பட்டன. அரசியலமைப்பு முதல் காரணக் கூறாக இருந்தது. பிரிந்துசென்ற மாநிலங்களை எப்படிக் கூட்டாட்சியினுள் சேர்த்துக் கொள்வது என்பதுபற்றி அரசியலமைப்பில் ஒரு விளக்கமும் தரப்படவில்லை. உள்நாட்டுப்போர் துவங்குமுன், கூட்டாட்சியிலிருந்து பிரிந்துசெல்லத் தங்களுக்கு உரிமையுண்டு எனத் தென்மாநிலங்கள் வாதிட்டன. அப்படிப் பிரிந்து போக உரிமையில்லை என வடமாநிலங்கள் வாதிட்டன. லிங்கனே பிரிந்துசென்ற நிலை என்ற ஒன்று நிலவவில்லை என்றார். ஆனால், போரின்போது தென் மாநிலங்கள் இரண்டு குடியரசுத் தலைவர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்தது மறுக்க முடியாததாகும். போர்முடிந்த பிறகும் வடக்கு, தெற்கு மாநிலங்கள் பழையபடி வாதிட்டன.

குடியரசுக் கட்சியினரது போக்கும் புனரமைப்பு வேலையைப் பாதித்தது எனலாம். கூட்டாட்சி அரசில், குடியரசுக் கட்சியே மேம்பட்ட நிலையை வகிக்கவேண்டுமென அக்கட்சியினர் முடிவு செய்தனர். தென்மாநிலங்களிலும் குடியரசுக் கட்சியின் கட்டுப்பாட்டிலான அரசுகளையே நிறுவத் திட்டமிட்டனர். அதற்காக அங்கு ஆட்சியை எதிர்த்தவர்களுடைய வாக்குரிமையைப் பறிக்கவும் தயங்கவில்லை.

சில சமூகச் சூழ்நிலை காரணக்கூறுகளும் புனரமைப்புத் திட்டங்களைத் தடைப்படுத்தின. வடபகுதியிலிருந்த தீவிரவாதிகள் விடுதலை பெற்ற நீக்ரோவுக்கு மறுவாழ்வளிப்பதில் அதிக நாட்டங் கொண்டனர். ஆனால், அவர்களது விருப்பத்திற்குமாறாகச் சில நிகழ்ச்சிகள் தென்பகுதியில் நடந்தன. நியூ ஆர்லியன்ஸில் ஓர் இனக் கலவரம் ஏற்பட்டது. சில தென்மாநிலங்கள், கறுப்பர்விதிகளை (Black Codes) இயற்றி நீக்ரோக்களை அதே அடிமைமுறையில் வைத்திருக்கலாயின. அடிமைமுறை மாற்றுருவத்தில் தென் பகுதியில் வருவதைக் கண்ட வடபகுதியினர் அச்சங்கொண்டனர். எனவே, நீக்ரோக்களின் முன்னேற்றத்திற்கு வேண்டிய சட்டங்களை இயற்ற வடமாநிலத்தவர்கள் உறுதிபூண்டனர்.

பொருளாதாரக் காரணக்கூறுகளாலும் புனரமைப்பு வேலை இடர்ப்பாடுற்றது எனலாம். வடபகுதியைச் சார்ந்த தீவிரவாதிகள், தென் மாநிலங்களைத் தண்டித்துக் கூட்டாட்சியின் காங்கிரஸிலிருந்து வெளியேற்ற வேண்டுமென வாதிட்டனர். அப்படித் தென்மாநில உறுப்பினர்களை வெளியேற்றிவிட்டால் எதிர்ப்பின்றிக் காப்புவரிச் சட்டங்களை இயற்றவும், இரயில்பாதைத் திட்டங்களை வகுக்கவும், வடபகுதிவாழ் மக்களுக்கு மேற்கு நிலங்களை வழங்கவும் முடியுமென நினைந்தனர்.

உள்நாட்டுப்போர் முடியும் முன்னரே காங்கிரஸ் உறுப்பினர்கள், பிரிந்துசென்ற மாநிலங்களை எவ்வகையில் கூட்டாட்சியினுள் சேர்த்துக் கொள்வது என்பதுபற்றி விவாதித்தனர். ஒரு சிலரே சமரச முறையில், பிரிந்து சென்ற மாநிலங்களோடு தொடர்புகொள்ள நினைத்தனர். தென்பகுதியினர் சட்டத்திற்குப் புறம்பாகப் பிரிந்து சென்றமையால், அவர்களைக் கடுமையான தண்டனைக்குட்படுத்த வேண்டுமெனப் பெரும்பான்மையினர் விரும்பினர். எதிரியிடமிருந்த கைப்பற்றப்பட்ட பகுதியை ஆளுவதுபோலத் தென் பகுதியை ஆள வேண்டுமென நினைத்தனர். தேவைப்பட்டால் இராணுவ உதவியோடு அத்தகைய ஆட்சியை நிறுவச் சட்டமாமன்றத்திற்கு அதிகாரம் உண்டு என்றும் வாதாடினர்.

## லிங்கனது புனரமைப்புத் திட்டம்

உள்நாட்டுப்போர் நடந்துகொண்டிருக்கும்போதே புனரமைப்புக் கொள்கையினை லிங்கன் வகுக்கலானார்; தென்மாநிலங்களுக்குக் கூட்டாட்சியினின்று பிரிந்து செல்ல உரிமையில்லை என்றார். லிங்கன் மிகவும் நிதானமாகவே செயலாற்றினார். அவர் மூன்று முக்கிய கொள்கைகளைத் தென்பகுதியின் புனரமைப்புக்காக வகுத்தார். அவை :(1) கூட்டாட்சிப் படையினர்க் கைப்பற்றிய தென்மாநிலங்களில் தற்காலிக அரசுகளை நிறுவுதல் : (2) ஒரு சில தென்மாநிலத் தலைவர்களைத் தவிர ஏனைய குடிமக்கள் அனைவருக்கும் பொது மன்னிப்பு அளித்தல் : (3) கிளர்ச்சி செய்த மாநிலங்களில் பத்துச் சதவீத வாக்காளர்கள் பற்றுறுதி வாக்குப்பிரமாணம் எடுத்துக் கொண்டால், அம் மாநிலங்களைக் கூட்டாட்சியினுள் சேர்த்துக் கொள்ளல். மேற்சொல்லப்பட்ட இரண்டாவது கொள்கையினைச் செயலாக்க லிங்கன் 1863 ஆம் ஆண்டில் "பொதுமன்னிப்பு, மற்றும் புனரமைப்புப் பேரறிக்கை" (Proclamation of Amnesty and Reconstruction) ஒன்றினை வெளியிட்டார். லிங்கனது மூன்றாவது கொள்கையைப் பத்துச்சதவீதத் திட்டமென்றும் அழைத்தனர்.

## லிங்கனின் திட்டங்களைக் காங்கிரஸ் எதிர்த்துரைத்தல்

காங்கிரஸில் குடியரசுக் கட்சியைச் சார்ந்த தீவிரவாதிகளே பெரும்பான்மையினராயிருந்தனர். அவர்களின் தலைவர்களாகப் பென்சில்வேனியா மாநிலத்தைச் சேர்ந்த தேடியஸ் ஸ்டீவெனும் (Thaddeus Stevans). ஒகியோ மாநிலத்தைச் சேர்ந்த பெஞ்சமின் வேடும் (Benjamin wade) திகழ்ந்தனர்; லிங்கன் பின்பற்றிய மிதமான கொள்கைகளைக் கண்டு சினமுற்றனர்; தென்மாநிலங்களைத் தண்டிக்காது விட்டுவிடுவாரோ என்றும் அஞ்சினர். எனவே, அவர்கள் ஒரு சட்டத்தை இயற்றமுயன்றனர். அதற்கு வேடு - தேடியஸ் சட்ட வரைவு என்று பெயர். ஒரு தென்மாநிலத்திலுள்ள வெள்ளைய குடிமக்களில் பெரும்பான்மையினர் பற்றுறுதி வாக்கெடுத்தால்தான் அம் மாநிலம் மீண்டும் கூட்டாட்சி அரசினுள் சேர்த்துக் கொள்ளப் படல் வேண்டுமென அச் சட்டவரைவு கூறிற்று. தென்மாநிலக் கூட்டரசின் அலுவலர்களுக்கும், படைவீரர்களுக்கும் வாக்குரிமை தரக்கூடாது என்றும் அச் சட்டவரைவில் கூறப்பட்டது. லிங்கன் இச் சட்டவரைவைத் தள்ளுபடி செய்தார். காங்கிரஸின் உரிமையை லிங்கன் அவமதிக்கிறார் என்று காங்கிரஸ் கூறி, வேடு-தேடியஸ் பேரறிக்கை என்ற ஒன்றினை வெளியிட்டது. அதற்குள்ளாக 1865-ல் லிங்கன் கொல்லப்பட்டார்.

## ஆண்ட்ரு ஜான்சனின் புனரமைப்புத் திட்டங்கள்

ஆபிரகாம் லிங்கன் உயிர்நீத்ததும், குடியரசின் துணைத் தலைவராய்இருந்த ஆண்ட்ரு ஜான்சன், குடியரசுத் தலைவர் பதவியை யேற்றார். தென்னசி மாநிலத்தவரான ஜான்சன் தேசிய மக்களாட்சிக் கட்சியைச் சேர்ந்தவர். குடியரசுத் தலைவர் பதவிக்கு வேண்டிய பயிற்சியை அவர் பெற்றிருக்கவில்லை. ஆனால், நாட்டின் புனரமைப்புச் சிக்கலோ கடினமானதாக இருந்தது. லிங்கனைப் போல் பொதுமக்களின் ஆதரவை ஜான்சன் பெறவில்லை. எனவே காங்கிரஸுடன் அடிக்கடி மோதநேரிட்டது. லிங்கன் வகுத்துச் சென்றிருந்த புனரமைப்புத் திட்டங்களை ஜான்சன் அப்படியே பின்பற்றினர். பொதுமன்னிப்புப் பேரறிக்கை, ஒன்றினை ஜான்சன் வெளியிட்டார். ஒரு சில தலைவர்கள், அலுவலர்கள் தவிர ஏனைய தென்பகுதியினர் அனைவருக்கும் மன்னிப்பு வழங்கப்பட்டது. முன்பு தென்மாநிலக் கூட்டரசிலிருந்த ஏழுமாநிலங்களில் தற்காலிக அரசுகளை ஜான்சன் நிறுவினர். அங்கு வாழ்ந்த பற்றுறுதி கொண்ட வெள்ளைய குடிமக்கள், மாநிலச் சட்டசபைக்கான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க அனுமதிக்கப்பட்டனர். அச் சட்டமன்றங்கள் பிரிவினை ஆணைகளை இரத்து செய்யவும், கூட்டரசின் கடன்களைத் தள்ளுபடி செய்யவும் பதின்மூன்ருவது அரசியல் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளவும் கோரப்பட்டன. 1865ஆம் ஆண்டின் இறுதியில்,

காங்கிரஸ் கூடியபோது, ஜான்சனின் திட்டபடி டெக்ஸாஸ் தவிர ஏனைய தென்மாநிலங்கள் கூட்டாட்சி அரசினுள் சேரத் தயாராக இருந்தன.

குடியரசுத் தலைவர் ஜான்சனின் இசைவோடு நிறுவப்பெற்ற தற்காலிகத் தென்மாநில அரசுகள் தேர்ந்தெடுத்து அனுப்பிய பிரதிநிதிகளையும், செனட்சபை உறுப்பினர்களையும் ஏற்றுக்கொள்ள காங்கிரஸ் மறுத்துவிட்டது. காங்கிரஸிலிருந்து குடியரசுக் கட்சியின ரெல்லாம் ஒன்றுகூடிப் புனரமைப்புத் திட்டங்களை வகுக்கப் பதினைந்து பேர் அடங்கிய ஒரு கூட்டுக்குழுவினை அமைத்தனர். அக் குழுவுக்கு அரசியல் புனரமைப்பின் பல கோணங்களையும் நன்றாக ஆராய்ந்து காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டிய புதிய திட்டங்களைப் பரிந்துரை செய்ய அதிகாரம் அளிக்கப்பட்டது.

## கறுப்பர் விதிகள் (The 'Black Codes'')

ஆண்ட்ரூ ஜான்சன் வகுத்திருந்த திட்டங்களைச் செயலாக்க முடியாதபடி சில நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. தென்மாநிலங்களில் புதியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்றங்கள் ஆட்சிப் பொறுப்பையேற்றதும் நீக்ரோக்களை வேறு படுத்தும் வகையில் சட்டங்களை இயற்றின. அச் சட்டங்கள் பொதுவாக எப்படி நீக்ரோக்களை நடத்துவது என்பதுபற்றிய விதிமுறைகளைக் குறிப்பிட்டன. நீக்ரோக்கள் ஆயுதம் தரிக்கக்கூடாது என்றும் முறைகாண் ஆயத்தில் (Jury) பணிபுரியக்கூடாது என்றும், வாக்குரிமையைப் பயன்படுத்தக்கூடாது என்றும், வேலைசெய்யாது திரிந்தால் கைது செய்யப்படுவரென்றும் அச் சட்டங்கள் கூறின.

கறுப்பர்விதிகளுக்குக் கடுமையான எதிர்ப்பு வடபகுதியில் தோன்றிற்று. அடிமைமுறையை வேறுவகையில் கொண்டுவர தென்பகுதியினர் முயற்சிக்கின்றனர் எனக் குற்றஞ்சாட்டப்பட்டது. மேலும் காங்கிரஸிற்குத் தென்மாநிலங்களால் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்ட பிரதிநிதிகள்சபை உறுப்பினர்களையும், செனட் சபை உறுப்பினர்களையும் குடியரசுக் கட்சியினர் அடியோடு வெறுத்தனர். ஏனெனில், காங்கிரஸிற்கு அனுப்பப்பட்ட உறுப்பினர்கள் பலர் பழைய தென்மாநிலக் கூட்டரசின் தலைவர்களாய்த் திகழ்ந்தார்கள் என்பதனாலேயாம். ஜான்சனின் புனரமைப்புக்கான அரசியல் திட்டங்களையெல்லாம் எதிர்த்தவர்களைத் செய்தித்தாள் ஆசிரியர்கள் 'தீவிரவாதிகள்' எனப் பெயரிட்டு அழைத்தனர். ''தென்மாநில வெள்ளையர்கள் பற்றுறுதிபற்றவர்களைத்தான் தேர்ந்தெடுப்பார்கள். அதனால், உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை நாம் நீக்ரோக்களிடம் ஒப்படைக்க வேண்டும்'' எனக் குடியரசுக் கட்சியிலிருந்த தீவிரவாதிகள் கருதினர்.

## தீவிரவாதிகளது செயல்நோக்கம்

குடியரசுக் கட்சியிலிருந்த தீவிரவாதிகள் தீட்டிய திட்டங்கள் உயர்ந்த ஒழுக்க நடத்தை சார்புடையனவாகவும் இருந்தன ; அதே சமயத்தில் கட்சி அடிப்படையிலான தன்னல நோக்குடையன வாகவும் அமைந்திருந்தன. அத்தகைய செயல்நோக்கத்தை அவர்கள் பெற்றிருந்தமைக்குப் பல காரணங்கள் உண்டு. அவை யாவன; தென்பகுதியில் வாழ்ந்த நீக்ரோக்களின் வாழ்க்கை நலனைப் பாதுகாக்க வேண்டுமென்ற மனிதஇனநல விருப்பம்; தென்பகுதியினரது செல்வாக்கினைக் காங்கிரஸினின்று அகற்றுவதன் மூலம் தங்களது வாணிகமுறைகளுக்கு வேண்டிய சட்டங்களை இயற்றிக் கொள்ளலாம் என்ற வடபகுதியில் வாழும் தொழிலதிபர் களது நம்பிக்கை ; பிரிந்துசென்ற கூட்டரசின் அரசியல்வாதிகள் விரைவில் தென்மாநிலங்களில் ஆட்சிப்பெறுப்புக்கு வந்து விட்டமையைக் கண்டு சீற்றம். தென்பகுதியில் குடியரசுக் கட்சியினைப் பரப்பவேண்டுமென்ற குடியரசுக் கட்சித் தலைவர்களின் உறுதிப்பாடு; குடியரசுத் தலைவர் காங்கிரஸின் அதிகாரங்களைப் பறித்துவிடுவாரோ என்ற அச்சம்; எல்லாவற்றிற்கும் மேலாக, ஆன்ட்ரூ ஜான்சன் குடியரசுத் தலைவர் பதவிக்கு அருகதையற்றவர் என காங்கிரஸ் உறுப்பினர் நினைத்து அவர்மீது கொண்டிருந்த வெறுப்பு உணர்வு.

மேற்கூறிய செயல்நோக்கோடு, காங்கிரஸிலிருந்த குடியரசுக் கட்சியின் தீவிரவாதிகள் செயலாற்ற முனைந்தனர். எவ்வளவு காலத்திற்குக் கூட்டாட்சி அரசி நீக்ரோக்களுக்குப் பாதுகாப்பளிக்க வேண்டுமோ அதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். நீக்ரோவின் வாழ்க்கை நிலையை உரிமைபெற்ற குடிமகனது நிலைக்கு உயர்த்தப் படும் வரையில், கூட்டாட்சி அரசு அவர்களுக்கு ஆவன செய்யும் என்று மறைமுகமாகக் கூறப்பட்டது

## விடுவிக்கப்பட்டோரின் பணிமனைச் சட்டவரைவு—1866

*(Freed men's Bureau Bill)*

உள்நாட்டுப்போரின்போது போர்த்துறையின் (War Depart-ment) ஓர் அங்கமாக நிறுவப்பட்ட விடுவிக்கப்பட்டோரின் பணிமனையின் கால எல்லையை நீட்டிக்க, காங்கிரஸ் முதலாவதாக நடவடிக்கைகளை மேற்கொண்டது. சில தென்மாநிலங்கள் கறுப்பர் விதிகளை இயற்றி நீக்ரோக்களை இரண்டாந்தரக் குடிமக்களாக்க முயன்றன. அத்தகைய முயற்சியைத் தடுப்பது இன்றியமையாத தாயிற்று. விடுவிக்கப்பட்டோரின் பணிமனை சட்டவரைவை ஜான்சன் தள்ளுபடி செய்தார். அதன்பேரில் காங்கிரஸ், குடியரசுத்

தலைவரின் தள்ளுரிமைமீது இரண்டாம்முறையாக அச் சட்ட வரைவை இயற்றிச் சட்டமாக்கியது. விடுவிக்கப்பட்டோரின் பணிமனையின் கிளைகள் தென்மாநிலங்கள் முழுவதிலும் நிறுவப்பட்டன. பகைமையுணர்வு கொண்ட சமுதாயத்தில் வாழும் நீக்ரோக்களின் பொதுஉரிமைகளைக் காக்கவும், நீக்ரோக்கள் வேலைக்கு அமர்த்தப் படும் முறையினைக் கண்காணிக்கவும் இப் பணிமனைகள் பொறுப் பேற்றன. மேலும் இப் பணிமனை தேவைப்பட்ட நீக்ரோக்களுக்கு உணவுப்பொருள்களைப் பங்கிட்டுத் தந்தது ; இலவச மருத்துவ உதவியளித்தது ; மருத்துவக்கூடங்களைக் கட்டியது ; கல்விக் கூடங்களை அமைத்தது.

மேற்சொல்லப்பட்ட துன்பம் துடைக்கும் பணிகளைத் தென்பகுதி வெள்ளையர்கள் வெறுத்தனர். வெள்ளையர்கள் அவற்றை வெறுக்கக் காரணம் அப்பணிமனை அலுவலர்கள் நீக்ரோக்களின் சார்பாக, பற்றுர்வமிக்கவர்களாக இருந்ததோடு, அவர்கள் வெள்ளையர்கள் மீது நீக்ரோக்கள் வெறுப்புணர்ச்சியை வளர்க்க ஊக்குவித்தனர். இருப்பினும் இறுதியாக விடுபட்டோரின் பணிமனை 1872-ல் மூடப் பட்டபோது அது மகத்தான பணிகளை ஆற்றியிருந்தது.

### பொதுஉரிமைகள் சட்டம்—1866 (Civil Rights Act)

நீக்ரோக்களுக்கு எல்லாவற்றிலும் சமத்துவம் அளிப்பதற்காகக் காங்கிரஸ் பொதுஉரிமைகள் சட்டத்தை இயற்றியது. குடியரசுத் தலைவர் ஜான்சன் இச் சட்டத்திற்கும் தம் இசைவையளிக்க மறுத்துத் தள்ளுபடி செய்தார். அதன்பேரில் காங்கிரஸ் இரண்டாவது முறை அச் சட்டத்தை இயற்றிச் செயல்படுத்தலாயிற்று. நீதி மன்றங்களில் வெள்ளையர்களையும் நீக்ரோக்களையும் சமமாகக் கருத இச் சட்டம் வழி வகுத்தது. இச் சட்டம் மாநிலங்களின் உரிமைகளில் தலையிடுவதால் அரசியலமைப்புக்கு முரணாக உள்ளதெனத் தலைமை நீதிமன்றம் கூறி, அதனை இரத்து செய்தது. அதனால், காங்கிரஸ் பதினான்காவது திருத்தத்தை அரசியலமைப்புக்குக் கொண்டு வந்தது. அத் திருத்தத்தின்படி நீக்ரோக்களுக்குச் சமக்குடிமை உரிமைகள் வழங்கப்பட்டன. "அமெரிக்க ஐக்கிய நாட்டில் பிறந்தவர் களும், குடியுரிமை பெற்ற அனைவரும் அவர்கள் வாழும் மாநிலத்தின் குடிமக்களாகவும், அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடிமக்களாவும் கருதப்படுவர்." என அத் திருத்தத்தில் கூறப்பட்டது. மேலும், சில விதிகளும் அத் திருத்தத்தில் குறிப்பிடப்பட்டிருந்தன. எந்தத் தென்மாநிலமாவது நீக்ரோக்களுக்கு வாக்குரிமையை அளிக்க மறுத்தால், அம் மாநிலத்தின் பிரதிநிதித்துவம் காங்கிரஸின் இரு சபைகளிலும் குறைக்கப்படும் என்றும், காங்கிரஸால் மன்னிக்கப்

பட்டாலொழிய தென்மாநிலக் கூட்டரசுத் தலைவர் பதவியிலிருக்க முடியாது என்றும், பழைய கூட்டரசின் கடன்கள் திருப்பித்தரப் படாது என்றும் அத் திருத்தத்தில் கூறப்பட்டது. தென்னசிமாநிலம் இத் திருத்தத்தை உடனே ஏற்றுக் கொண்டமையால், அம் மாநிலம் கூட்டாட்சியினுள் சேர்த்துக் கொள்ளப்பட்டது (1896). காங்கிரஸ் இப்படியெல்லாம் செயலாற்றுவது அதற்குத் தரப்பட்ட அதிகாரத்தை மீறுவதாகும் என ஜான்சன் கூறினர். ஜான்சனுடைய அறிவுரையின்பேரில், பிற தென்மாநிலங்கள் இத்திருத்தத்தை ஏற்றுக் கொள்ள மறுத்தன. இருப்பினும் நான்கில் மூன்று பங்கு மாநிலங்கள் இந்தப் பதினன்காவது திருத்தத்தை ஏற்றுக் கொண்டதும், 1868ஆம் ஆண்டு அது செயலுக்கு வந்தது.

## புனரமைப்புச் சட்டம் 1867 (The Reconstruction Act)

குடியரசுத் தலைவரின் கடுமையான எதிர்ப்புக்கிடையே காங்கிரஸ் புனரமைப்புக்கான திட்டங்களை வகுத்துச் செயலாக்கியது. புனரமைப்புச் சட்டத்தின்படி, பத்துத் தென்மாநிலங்கள் ஐந்து இராணுவ மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு இராணுவ மாநிலத்திற்கும் ஒரு தளபதி நியமிக்கப்பட்டார். புனரமைப்புத் திட்டங்களைச் செயலாக்க, அத் தளபதிக்கு உதவியாக ஒரு வலுவான படையும் நியமிக்கப்பட்டது. இவ்வகையில் தென்மாநிலங்களில் பொதுச்சட்டத்திற்குப் பதிலாக இராணுவச் சட்டம் திணிக்கப் பட்டது. தென்மாநில மக்கள் கைப்பற்றப்பட்ட எதிரிகளைப் போல் நடத்தப்பட்டனர்.

புனரமைப்புச் சட்டம் நீக்ரோக்களுக்கும், பற்றுறுதி கொண்ட வெள்ளையர்களுக்கும் வாக்குரிமையை அளித்தது. பழைய தென் மாநிலக் கூட்டரசின் தலைவர்களுக்குத் தற்காலிகமாக வாக்குரிமை தடை செய்யப்பட்டது. இவ்வகையில் தங்களுடைய மாநிலங்களின் அரசியலமைப்பைத் தீட்டுவதில் நீக்ரோக்கள் சிறந்த வாய்ப்பினைப் பெற்றனர். மேலும் மாநில அலுவலகங்களிலும், தேசிய அரசின் அலுவலகங்களிலும் நீக்ரோக்கள் பணிபுரியவும் புனரமைப்புச் சட்டம் வகை செய்தது. பதினன்காவது அரசியலமைப்புச் சீர்திருத்தத்தை ஏற்றுக்கொண்டால்தான் பழைய தென்மாநிலக் கூட்டரசின் மாநிலங்கள் மீண்டும் கூட்டாட்சியினுள் அனுமதிக்கப் படும் என்றும் திட்டவட்டமாக அறிவிக்கப்பட்டது.

## சந்தவர்ப்பவாதிகளது ஆட்சி

புனரமைப்புச் சட்டத்தைத் தென்மாநிலத்தவர்கள் கடுமையாக வெறுத்தனர். ஆயினும் வன்முறையில் அவர்கள்மீது அச் சட்டம் திணிக்கப்பட்டது. பல மாநிலங்களில் புதிய சட்டசபைகளும்,

அரசுகளும் இயங்கலாயின. அவற்றில் நீக்ரோக்கள் பெரும்பான்மையினராய் இருந்தனர். ஆனால்,அவர்கள் போதிய கல்வியறிவு பெருதவர்களாயும், ஆட்சிமுறை பற்றிய அனுபவம் பெருதவர்களாயும் இருந்தனர். இச் சந்தர்ப்பத்தினைக் குடியரசுக் கட்சியினைச் சார்ந்திருந்த வெள்ளையர்களும் (Scalawags), ஊதியம் பெறுவதற்காக வடபகுதியிலிருந்து தென்பகுதிக்கு வந்த அரசியல்வாதிகளும் (Carpet baggers) தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டனர். இவர்கள் தன்னலத்திற்காக நீக்ரோக்களை ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டனர். இதனால் தென்மாநிலங்களின் ஆட்சியில் பல சீர்கேடுகள் மலிந்தன; கையூட்டும், ஊழலும் பெருகின; வெள்ளையர்கள்மீது கடுமையான வரிகள் விதிக்கப்பட்டன. அவ்வரிப்பணமோ பல வழிகளிலும் வீணாகச் செலவிடப்பட்டது. இவற்றையெல்லாம் எதிர்க்கத் தென்பகுதியினர் வலிமையற்றிருந்தனர். ஏனெனில் நாடு முழுவதிலும் அரசுப் படைகள் ஆட்சியினருக்கு உறுதுணையாக இருந்தன. அவ்வாண்டுகளைப் பலர் தென்புகுதியின் இருண்டகாலமெனக் கருதினனர்.

மேற்கூறிய பல குறைபாடுகள் இருந்தபோதிலும் பல நன்மைகள் தென்பகுதியினருக்கு ஏற்பட்டமையையும் மறக்க முடியாது. நீதிமன்றங்கள், தலஆட்சி நிறுவனங்கள், கல்விக் கூடங்கள், மருத்துவ மனைகள் ஆகியவையெல்லாம் செம்மையாக நிறுவப்பட்டன. இவற்றையெல்லாம் தன்னலத்திற்காகச் செய்தனர் என்றாலும் இறுதியில் அனைவரும் பயன்பெற்றனர். பழைய நிலமானிய அடிப்படையிலான சமூகம் மறைந்து மக்களாட்சிமுறை மலரத் தென்பகுதி மாற்றியமைக்கப்பட்டது.

### ஜான்சன்மீது அரசியல் குற்றச்சாட்டு

தங்களது தீவிரத் திட்டங்களை ஒருவேளை குடியரசுத் தலைவர் தடுத்துவிடுவாரோ என்று அஞ்சிய காங்கிரஸ் 'அலுவல் பதவிக் காலச் சட்டம்' (The Tenure of Office Act-1867) என்ற ஒன்றினை இயற்றிற்று. செனட்டின் இசைவு பெருமல், குடியரசுத் தலைவர் குறிப்பிட்ட அலுவலர்களைப் பதவியினின்று விலக்கக்கூடாது என அச் சட்டம் கூறியது. ஜான்சன் வேண்டுமென்றே தீவிரவாதிகளைச் சார்ந்திருந்த தமது போர்ச்செயலாளரான எட்வின் ஸ்டாண்டனை (Edwin M. Stanton) பதவியினின்று விலக்கினர். இச்செய்கை சட்டத்திற்கு முரணானது எனக் கூறி காங்கிரஸ், ஜான்சனைப்பதவியினின்று விலக்கக் குற்றம் சாட்டியது. செனட் மன்றத்தில் ஜான்சன் விசாரிக்கப்பட்டார்; இறுதியில் குற்றச்சாட்டினின்றும் விடுவிக்கப் பட்டார்.

**பதினைந்தாவது திருத்தம்**

இறுதியாக, காங்கிரஸ் அரசியலமைப்புக்குப் பதினைந்தாவது திருத்தத்தைக் கொண்டுவந்தது. அதுவரை இயற்றியிருந்த சட்டங்கள் நீக்ரோவுக்கு வாக்குரிமையை உறுதியாக அளிக்கும் வகையில் அமையவில்லை. எனவே, காங்கிரஸிலிருந்த தீவிரவாதிகள் பதினைந்தாவது சீர்திருத்தத்தை இயற்றினர். இனம், நிறம், முன்பிருந்த அடிமைவாழ்வுநிலை ஆகியவற்றின் அடிப்படையில் அமெரிக்க ஐக்கிய நாட்டு மக்களின் வாக்குரிமையைக் கூட்டாட்சி அரசோ மாநில அரசோ தடைசெய்யக்கூடாது என அத் திருத்தத்தில் கூறப்பட்டது.

**தென்மாநிலங்கள் அதிகாரங்களை மீண்டும் பெறல்**

தென்பகுதியில் வாழ்ந்த வெள்ளையர்கள் மீண்டும் அதிகாரங்களைப் பெறச் சட்டத்திற்குட்பட்ட முறைகளைக் கையாள முடியாது என்பதனை உணர்ந்தனர். எனவே, வன்முறைகளைக் கையாளத் தொடங்கினர்கள்: நீக்ரோக்களைத் தங்களது வாக்குரிமையைத் தேர்தல்களில் பயன்படுத்த முடியாதவாறு கொடூரமான முறைகளில் தடுத்தனர். வெள்ளையர்கள் பல இரகசியக் கழகங்களைத் துவக்கினர். அவற்றுள் மிகவும் அஞ்சத்தக்கதாக விளங்கியது 'கூ க்லக்ஸ் கிலேன்' (Ku Klux Klan) என்ற கழகமாகும். இக் கழகத்தின் உறுப்பினர்கள் நீண்ட வெள்ளை அங்கி அணிந்து, முகமுடிகளுடன் இரவில் நடமாடினர். குதிரைகளில் ஏறிச் சென்று நீக்ரோக்களையும், அவர்களை ஆதரித்த வெள்ளையர்களையும் அச்சுறுத்தினர். தேர்தல் நடக்கும் இடங்களை அணுகவொட்டாதபடி நீக்ரோக்கள் தடுக்கப்பட்டனர். பதவியிலிருந்த நீக்ரோக்கள் சித்திரவதை செய்யப்பட்டனர். அல்லது கொல்லப்பட்டனர். இவற்றைக்கண்ட கூட்டாட்சி அரசு கூக்லக்ஸ் கிலேன் சட்டம் ஒன்றையும், படைச் சட்டம் (Force Act) ஒன்றையும் இயற்றியது. ஆனால், இச்சட்டங்களால் தென்பகுதியில் பலனேதும் ஏற்படவில்லை. இரகசியக் கழகங்களின் நடவடிக்கைகளால் வடபகுதி வெள்ளையர்கள் (Carpet baggers) வெளியேற நேர்ந்தது. சிறிது காலத்திற்கெல்லாம் மக்களாட்சிக் கட்சியினர் தென்பகுதியில் மீண்டும் தங்களுடைய செல்வாக்கை நிறுவினர்.

அரசியலமைப்பின் பதினைந்தாவது திருத்தத்தை மீறுதபடி நீக்ரோவின் வாக்குரிமையினைத் தடைசெய்யும் பல சட்டங்கள் தென்மாநிலச் சட்டசபையில் இயற்றப்பட்டன. பெரும்பான்மையான நீக்ரோக்களுக்குச் சொத்துகள் இல்லாததால் வாக்குரிமை பெறச் சொத்துத் தகுதி கோரப்பட்டது. இதனால் சில ஏழை வெள்ளை

யர்களும் பாதிக்கப்பட்டனர். அதன்பேரில் பாட்டனுர்விதியும் (Grand father clause ). எழுத்தறிவு சோதனையும் (Literacy test ) வாக்குரிமையை நிருணயிக்கக் கொண்டுவரப்பட்டது. பாட்டனுர் விதிப்படி 1867ஆம் ஆண்டுக்குமுன் ஒருவருடைய தந்தையோ பாட்டனே வாக்குரிமை பெற்றிருந்தால் அவருக்கும் வாக்குரிமை யளிக்கப்பட்டது. எந்த ஒரு நீக்ரோவின் தந்தைக்கும் பாட்டனுருக் கும் வாக்குரிமை இருந்ததில்லை என்பது குறிப்பிடத்தக்க தாகும். எழுத்தறிவுச் சோதனைப்படி ஒருவர் வாக்குரிமை பெற அரசியலமைப்பு அல்லது பைபிள் ஆகியவற்றின் சில பகுதிகளைப் படித்துக் காண்பிக்க வேண்டும். பெரும்பான்மையான நீக்ரோக் களுக்கு எழுதவோ, படிக்கவோ தெரியாது. இவ்வகையிலும், நீக்ரோக்களின் வாக்குரிமை தடை செய்யப்பட்டது.

**நீக்ரோக்களின் பொது உரிமைகள் பறிக்கப்படல்**

படைவலிமை கொண்டு நிறைவேற்றப்பட்ட புனரமைப்புத் திட்டங்கள், பல தீங்குகளை நீக்ரோக்களுக்கு இழைத்துவிட்டுச் சென்றன. துவக்கத்தில் வடபகுதியிலிருந்து வந்த குடியரசுக் கட்சியைச் சார்ந்த அரசியல்வாதிகளின் பேராசைக்கு நீக்ரோ பலியானன்; பின்பு இனவெறிக்குப் பலியானன். பதினன்கு, பதினைந்தாவது அசியலமைப்புச் சீர்திருத்தங்களால் நீக்ரோ பெற்ற உரிமைகளைச் சிறிதுசிறிதாகத் தென்மாநிலச் சட்ட மன்றங்கள் பறிக்கலாயின. கறுப்புநிற நீக்ரோக்களை வெள்ளையர் கள் தங்களுக்கு ஒப்பாக மதிக்கவில்லை. ஒப்பாக மதிக்காததால் அவர்களை ஒதுங்கியே வாழச் செய்தனர். அதற்காக இனஒதுக்கல் சட்டங்களை (Jim Crow Laws) இயற்றினர். நீக்ரோக்கள் குடியிருப்பதற்கென்று தனித்தெருக்களும், அவர்களுடைய பிள்ளை களுக்கெனத் தனிப்பள்ளிகளும் ஏற்படலாயின. உடலுழைப்பு வேலைகள் மட்டுமே நீக்ரோக்களுக்குத் தரப்பட்டது. உள்நாட்டுப் போருக்குமுன் எந்தநிலையில் நீக்ரோக்கள் இருந்தனரோ அதே நிலைமைக்கு அவர்கள் 1875ஆம் ஆண்டளவில் திரும்பினர்.

தென்மாநிலங்களில் மீண்டும் வெள்ளையர்கள் பதவிக்கு வந்ததும் அவர்கள் பொருளாதாரப் புனரமைப்பு வேலையில் ஈடு பட்டனர். சில பெருநிலக்கிழார்கள் தங்களது பண்ணைகளை விற்று விட்டு வாணிகத்தில் ஈடுபட்டனர். நீக்ரோக்கள் பழையபடி பண்ணைகளில் விவசாயத் தொழிலாளிகளாயினர். தென்மாநிலங் களிலும் தொழிற்சாலைகள் தோன்றி வடபகுதியினரோடு போட்டி யிடலாயின. தென்பகுதி முழுவதும் மக்களாட்சிக் கட்சி நன்கு வேரூன்றியது. 1876 ஆம் ஆண்டின் தேர்தலில்போட்டி கடுமையாக இருந்தது. குடியரசுக்கட்சியின் வேட்பாளரான ரூதர்போர்டு

ஹேஸும் (Rutherford B. Hayes) மக்களாட்சிக் கட்சியின் வேட்பாளரான சாமுவேல் டில்டனும் (Samuel J. Tilden) சம வாக்குகள் பெற்றனர். தென்பகுதியிலுள்ள கூட்டாட்சிப் படைகளை விலக்கிக்கொள்வதாக உடன்பாடு செய்துகொண்டமையால் ஹேஸ் குடியரசுத் தலைவரானர். அதன்படி 1877ஆம் ஆண்டு தென் மாநிலங்களிலிருந்து படைகள் விலகின. அத்துடன் கூட்டாட்சி அரசின் புனரமைப்பு வேலையும் முற்றுப்பெற்றது.

# 21. பெரும் வாணிக வளர்ச்சி
# (Rise of Big Business)

பத்தொன்பதாம் நூற்றூண்டின் பிற்பகுதியில் அமெரிக்க வரலாற்றின் மைய நிகழ்ச்சி அப்பொழுது ஏற்பட்ட பொருளாதார வளர்ச்சியாகும். 1860ஆம் ஆண்டிலிருந்து 1900 ஆண்டுக்குள்ளாக வியத்தகுமுறையில் எல்லா வகையான தொழில்களும் வளர்ச்சியுற்றிருந்தன. இரயில்பாதையின் மொத்த நீளம் 30,000 மைல்களிலிருந்து 1,93,000மைல்களாக வளர்ந்திருந்தது. உற்பத்தித்துறையில் ஈடுசெய்யப்பட்டிருந்த முதல்தொகை ஓராயிரம் மில்லியன் டாலரிலிருந்து, பத்தாயிரம் மில்லியன் டாலாக உயர்ந்திருந்தது. தொழிலாளர்களின் எண்ணிக்கையும் 1.3 மில்லியனிலிருந்து, 5 3 மில்லியனுகப் பெருகியிருந்தது. ஓர் ஆண்டிற்குச் செய்பொருள்களின் மதிப்பும் இரண்டாயிரம் மில்லியன் டாலரிலிருந்து, பதின்மூன்ருயிரம் மில்லியன் டாலராக உயர்ந்திருந்தது. தொழில்துறையில் சிறப்புற முன்னேறியிருந்ததுபோலவே, விவசாயத்துறையிலும் நன்முறையில் வளர்ச்சியுற்றிருந்தமையால் அமெரிக்க ஐக்கிய நாடு உலகிலேயே செல்வமும், வலிமையும் மிக்க நாடாக இருபதாம் நூற்றூண்டின் துவக்கத்தில் திகழ்ந்தது. அதே நேரத்தில் அமெரிக்க மக்களது சமூகஅமைப்பிலும் வாழும் முறையிலும் பல அடிப்படை மாற்றங்கள் ஏற்பட்டன. அதன் விளைவாகப் பல சிக்கல்கள் தோன்றின. அச் சிக்கல்களைத் தீர்த்து வைக்கவேண்டிய பொறுப்பு, பின்வந்த சந்ததியினரிடம் ஒப்படைக்கப்பட்டது.

### தொழில்வளர்ச்சிக்கான அடிப்படைக் காரணங்கள்

அமெரிக்காவின் பொருளாதாரம் வெகுவாக மாறுதல் அடைந்தமை இயற்கைதான். இருப்பினும், அரசின் கொள்கைகளும் ஓரளவு அம் முன்னேற்றத்திற்குத் துணையாயிருந்தன. அமெரிக்கத்

தொழில் முன்னேற்றத்திற்கான அடிப்படைக் காரணங்கள் ஏழு. அவை; (1) அமெரிக்காவில் பலவகைப்பட்டக் கச்சாப்பொருள்கள் ஏராளமாக இருந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை தங்கம், வெள்ளி, ஈயம், செம்பு, இரும்புத்தாது, நிலக்கரி, எண்ணெய் முதலியனவாம். (2) ஏராளமாகக் கிடைத்த பல்வகை கச்சாப் பொருள்களையும் செய்பொருள்களாக மாற்றியமைக்கப் புதிய தொழில்துறை முறைகளும், புத்தாக்கப்புனைவுகளும், அறிவியல் கண்டுபிடிப்புகளும் அமெரிக்காவில் திகழ்ந்தன. புதிய கண்டு பிடிப்புக்களுக்காக ஒரு காப்புரிமைச்சீட்டு வழங்கும் அலுவலகமும் (Patent Office) தோற்றுவிக்கப்பட்டது. (3) பொருளாதார வளர்ச்சிக்குத் துணைபுரியும்வகையில் நீர்வழியாகவும், இரயில்பாதை மூலமாகவும் போக்குவரத்துவசதிகள் பெருகிக் கொண்டே இருந்தன. (4) மக்கள் தொகை பெருக்கத்தால் உள்நாட்டிலும் செய்பொருள் களுக்கு அதிகத் தேவை இருந்தது. அதேபோல் அயல்நாட்டு வாணிகக் களங்களிலும் அமெரிக்கப் பொருள்களுக்குத் தேவை அதிகமாக இருந்தது. (5) பிற நாடுகளிலிருந்து வந்து குடியேறு பவர்கள் தொகை நாளுக்குநாள் பெருகிக் கொண்டேயிருந்தமையால் சொற்பக் கூலிக்கு வேலைசெய்ய நிறைய ஆள்கள் கிடைத்துகொண்டே யிருந்தனர். குறிப்பாக ஜெர்மனி, ஸ்காண்டிநேவியா, ரஷ்யா, போலந்து, பொஹீமியா, ஹங்கேரி, இத்தாலி ஆகிய ஐரோப்பிய நாடுகளிலிருந்து நூற்றுக்கணக்கானபேர் வந்து அமெரிக்காவில் குடிபுகுந்தனர். (6) அமெரிக்க ஐக்கிய நாட்டி னுள்ளேயே தொல்லை தருகிற வகையில் மாநிலங்களுக்கிடையேயும், வெவ்வேறு பகுதிகளுக்கிடையேயும் இருந்துவந்த சுங்கச்சாவடிக ளெல்லாம் மறைந்துபோயின. அயல்நாடுகளின் போட்டியை எதிர்க்கும் வகையில் கூட்டாட்சி அரசு காப்புவரிகளையும் விதித் திருந்தது. அத்தோடு அரசு நேரிடையாகவும், மறைமுகமாகவும் ஊக்கத்தொகையளித்துத் தொழில்முன்னேற்றத்தை ஊக்குவித்தது. (7) பெருந்தொழிற்சாலைகளை நிறுவுவதற்குத் தேவையான மூலதனம் உள்நாட்டிலும் இருந்ததோடு, வெளி நாடுகளிலிருந்தும் கிடைத்தது. பல ஐரோப்பியச் செல்வந்தர்களும், வணிகர்களும் அமெரிக்காவில் பெருமளவில் முதலீடு செய்தனர்.

**நிலக்கரிச் சுரங்கங்கள்**

நிலக்கரி, எண்ணெய், இரும்பு மற்றும் மின்சாரம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டே தொழிற்புரட்சி ஏற்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாட்டிலேயே பெருமளவில் நிலக்கரிச் சுரங்கங்கள் பென்சில் வேனியா, மாநிலத்தின் வடகிழக்குப் பகுதியில் உள்ளன. அச் சுரங்கங்களில் ஏராளமாகக் கெட்டியான நிலக்கரி வகை உள்ளன. அதற்கு நிலக்கல் சத்தற்ற நிலக்கரி (Anthracite) என்று பெயர்.

இந்த வகை நிலக்கரி நாட்டின் பிற பகுதிகளில் கிடையாது. ஆனால், நிலக்கீல் அடங்கிய நிலக்கரி (Bituminous) வகைகள் நாட்டில் ஏராளமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அப்பலேச்சியன் மலைத் தொடரை அடுத்துள்ள சமவெளிப் பகுதியிலும், மத்திய மாநிலங் களிலும், மேற்கு எல்லைப்புற மாநிலங்களிலும் நிலக்கீல் அடங்கிய நிலக்கரிச் சுரங்கங்கள் ஏராளமாக உள்ளன. 1850ஆம் ஆண்டளவில் இரும்பை உருக்குவதற்குப் பெஸ்ஸமர் முறை (Bessemer Process) நாடெங்கிலும் பின்பற்றப்பட்டதால் நிலக்கரிக்கு அதிகமான தேவை ஏற்பட்டது. நிலக்கீல் சத்தற்ற நிலக்கரிச் சுரங்கங்கள் விரைவில் இரயில்பாதைப் போக்குவரத்து நிறுவனங்கள் கையில் சிக்கின. நிலக்கீல் அடங்கிய நிலக்கரிச் சுரங்கங்கள்மட்டும் சிறுசிறு உற்பத்தியாளர்களால் கட்டுப்படுத்தப்பட்டு வந்தன. பத் தொன்பதாம் நூற்றாண்டின் கடைசி நாற்பதாண்டுகளில், நிலக்கீல் சத்தற்ற நிலக்கரியின் உற்பத்தி பத்து மில்லியன் டன்னிலிருந்து அறுபது மில்லியன் டன்னாக உயர்ந்தது. நிலக்கீல் அடங்கிய நிலக்கரியின் உற்பத்தி ஆறு மில்லியன் டன்னிலிருந்து, இருநூறு மில்லியன் டன்னாக உயர்ந்தது. 1910ஆம் ஆண்டளவில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஆண்டொன்றுக்கு ஐந்நூறு மில்லியன் டன் நிலக்கரி வெட்டியெடுக்கப்பட்டது. அப்படி இருந்தும் 'இதுவரை நாட்டின் நிலக்கரி இருப்பளவில் ஒரு சதவீதமே வெட்டியெடுக்கப்பட்டுள்ளது.

## இரும்பு, எஃகு உற்பத்தி

1860-ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் தேலிரும்பின் (Pig-iron) உற்பத்தி எண்ணூறு ஆயிரம் (800,000) டன்னாக இருந்தது; எஃகு உற்பத்தியே கிடையாது. 1900ஆம் ஆண்டளவில் தேலிரும்பின் உற்பத்தி பதினான்கு மில்லியனாக உயர்ந்தது. அவ்வுற்பத்தியில் பதினோரு மில்லியன் தேலிரும்பு, எஃகு இரும்பாக மாற்றப்பட்டது. இவ்வுற்பத்தித் தொகையானது, தொழில் துறையில் வெகுவாக முன்னேறியிருந்த பிரிட்டன், ஜெர்மனி-ஆகிய இரு நாடுகளின் கூட்டு உற்பத்தித் தொகையைவிடக் கூடுதலாக இருந்தது.

உள்நாட்டுப்போருக்குப் பிறகு சுப்பீரியர் ஏரியைச் சுற்றியுள்ள பகுதியில் இரும்புத்தாதுக்கள் ஏராளமாகக் கண்டுபிடிக்கப்பட்டன. குறிப்பாக மினஸோட்டாவில் மெஸாபி (Mesabi) மலைச்சாரல் பகுதி யில் இரும்புக்கனிச் சுரங்கங்கள் பல வெட்டப்பட்டன. ஆனால், அப் பகுதியில் நிலக்கரி கிடைக்காததால், வெட்டியெடுக்கப்பட்ட இரும்புக்கனி பென்சில்வேனியாவிலிருந்த உலைக்களங்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டது. இவ்வகையில் பிட்ஸ்பர்கிலும், பென்சில் வேனியாவிலுள்ள நகரங்களிலும் கனரகத் தொழிற்சாலைகள் வளர்ச்சி பெறலாயின. ஓகியோ, மற்றும் நடுமேற்கு மாநிலங்களிலும் எஃகு உற்பத்தித் தொழிற்சாலைகள் நிறுவப்பட்டன.

மேற்கூறியபடி ஐம்பெரும் ஏரிகளைச் சுற்றிலுமுள்ள பகுதிகளில் இரும்புத்தாது, நிலக்கரி, சுண்ணாம்புக்கல், விறகு ஆகியவை யெல்லாம் ஏராளமாகக் கிடைத்தன. ஆகையால், பல வகையான தொழிற்சாலைகள் அங்குத் தோன்றலாயின. ஆனால், கனமான தாதுப் பொருளை இரயில்பாதை வழியாக அனுப்புவது கடினமாக இருந்ததோடு, கட்டணத் தொகையும் கூடுதலாக இருந்தது. எனவே நீர்வழி ஒன்று இன்றியமையாததாயிற்று. சுப்பீரியர், உறியூரான், ஈரி ஏரிகளை இணைக்கும் வகையில் கால்வாய் வெட்டத்திட்டமிட்டு வெற்றி பெற்றனர். 1855ஆம் ஆண்டுக் கப்பல்போக்குவரத்து ஐம்பெரும் ஏரிகளில் துவங்கியது. பல இடங்களில் கப்பல் துறைகள் கட்டப்பட்டன. விரைவில் பல மில்லியன் டன் தாதுப்பொருள்கள் கப்பல்கள்மூலம் குறைந்த கட்டணத்தில் தொலைவிலுள்ள ஆலைகளுக்கு அனுப்பப்பட்டன.

## ஆன்ட்ரூ கார்னேகி (Andrew Carnagie)

அமெரிக்க ஐக்கிய நாட்டின் எஃகு உற்பத்தித் தொழிலில், தலை சிறந்து விளங்கிய தொழிலதிபர் ஆன்ட்ரூ கார்னேகியாவார். கார்னேகி குடும்பத்தினர் ஸ்காட்லாந்திலிருந்து வந்து, பிட்ஸ்பர்க்கில் 1848-ல் குடியேறினர். அப்போது ஆன்ட்ரூ கார்னேகிக்கு வயது பதின்மூன்று. அவர் முதலில் ஒரு பஞ்சாலையில் வேலைக்கு அமர்ந்தார். பிறகு பென்சில்வேனிய இரயில்பாதை நிறுவனத்தில் பணியாற்றினார். 1864-ல் பிட்ஸ்பர்கில் இரும்பு உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டார். நேர்மை, தனிநய நுட்பம், உழைப்பு, இனிமை - ஆகிய பல நற்குணங்கள் அவரிடமிருந்தன. அவர் தமது சேமிப்பையெல்லாம் பெரிய நிறுவனங்களின் பங்குகளில் ஈடு செய்திருந்தமையால் ஆண்டு தோறும் நல்ல ஊதியம் கிடைத்தது. அதைக் கொண்டு சீரிய முறையில் தமது எஃகுத் தொழிலைப் பெருக்கினர். இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில், கார்னேகி எஃகு நிறுவனம் அமெரிக்க ஐக்கிய நாட்டில் உற்பத்தி செய்யப்படும் எஃகில் கால் பங்கினை உற்பத்தி செய்தது. சில ஆண்டுகளில் பல நிலக்கரிச் சுரங்கங்கள். உலைக்களங்கள், சுண்ணாம்புக்கல் இருக்கைகள், இரும்புத் தாதுச் சுரங்கங்கள், தாதுப்பொருள் ஏற்றிச் செல்லும் கப்பல்கள், இரயில் பாதைகள் - ஆகியவற்றின் உரிமையாளராகக் கார்னேகி திகழ்ந்தார். அவரது தொழிலாளர் கொள்கை மிகவும் கடுமையானதாக இருந்தது. தொழிலாளர்களை நீண்டநேரம் வேலைசெய்யச் சொல்லி குறைவான கூலியைக் கொடுத்தார்; தொழிலாளர்சங்கங்களைக் கடுமையாக எதிர்த்தார். ஆனல், செல்வம் சேர்ப்பதற்காகக் கார்னேகி ஒருபோதும் தீய செயல்களில் ஈடுபட்டதில்லை. 1901ஆம் ஆண்டு, கார்னேகி தமது நிறுவனங்களையெல்லாம் இணைத்து, "அமெரிக்க ஐக்கிய நாட்டு எஃகு கூட்டுரிமைக்குழு" என்ற பெயரினைத் தந்தார்.

அதே ஆண்டில் வாணிகத் தொழிலினின்று ஓய்வு பெற்றார்; தாம் ஈட்டிய பெருஞ்செல்வத்திலிருந்து பெருந்தொகைகளைப் பொது நூலகங்கள் துவக்கவும், கல்வியைப் பரப்பவும், உலக அமைதியைக் காக்கவும் அளித்தார்.

### எண்ணெய்

தொழிற்சாலைகளுக்கு வேண்டிய சக்தியை அளிக்கும் மற்றோர் அடிப்படைப் பொருள் எண்ணெய். அமெரிக்க ஐக்கிய நாட்டில் எண்ணெயும் ஏராளமாகப் பூமிக்கடியிலிருந்தது. இப்பொழுதும் ஏராளமாக உள்ளது. அத்தகைய எண்ணெய் வளத்தை 1860-க்கு முன் அமெரிக்கர் அறிந்திலர். அவர்கள் அறிந்திருந்ததும், பயன் படுத்தியதும் திமிங்கில எண்ணெய்தான். அதன் விலையும் மிக அதிகமாகும். ஆனால், சில ஆண்டுகளில் வேதியல் வல்லுநர்கள் குறைந்த விலையில் சிறந்த எரிபொருளான மண்ணெண்ணெயைக் (Kerosene) கண்டுபிடித்தனர். நிலத்தினடியிலிருந்து கிடைக்கும் தூய்மையற்ற எண்ணெயை (Crude Oil) தூய்மைப்படுத்திப் பெட்ரோலியத்தை வடித்தெடுக்கவும் வழிமுறைகள் கண்டுபிடிக்கப் பட்டன. விரைவில் தூய்மையற்ற எண்ணெயிலிருந்து கல் லெண்ணெய் (Gasoline), இரசகற்பூரத் தைலம் (Naphta), சாம்பிராணி எண்ணெய் (Benzene), கன்மெழுகு (Paraffin) போன்ற பல முக்கியப் பொருள்கள் வடித்தெடுக்கப்பட்டன. இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் உலகச்சந்தைகளில் அமெரிக்காவின் எண்ணெய்க்கு அதிகத் தேவையிருந்தது.

### ஜான் ராக்பெல்லர் (John D. Rockfeller)

எண்ணெய் வாணிகத்தைச் சிறப்புற நடத்திய தொழிலதிபர் ஜான் ராக்பெல்லர் ஆவார். கார்னேகியைப் போல் ஒரு சிறந்த தொழிலதிபராகவும், அருட்பண்பாளராகவும் ராக்பெல்லர் திகழ்ந்தார். ராக்பெல்லர் ஓகியோ மாநிலத்தைச் சேர்ந்தவர். துவக்கத்தில் ஒரு நிறுவனத்தில் கணக்கராகப் பணிபுரிந்தார்; நிலத்தினடியில் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டதும், அதனைத் தூய்மைப்படுத்தும் எளியமுறை ஒன்றினைக் கண்டுபிடித்தார்; தமது தம்பியுடன் சேர்ந்து எண்ணெய் 'ஆலை ஒன்றை நிறுவினார்; பெற்ற ஊதியத்தைக் கொண்டு ஆங்காங்கேயுள்ள எண்ணெய் நிலையங்களை ஒவ்வொன்றாக வாங்கி, எல்லாவற்றையும் இணைத்து, "ஸ்டாண்டர்டு எண்ணெய் வாணிகக் கூட்டு நிறுவனம்" (Standard Oil Trust 1881) எனப் பெயரிட்டார். தனியுரிமை (monopoly) பெற்ற முதல் நிறுவனமாக அது திகழ்ந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில், அமெரிக்காவிலிருந்த எண்ணெய் வாணிகத்தில் 90 சதவீதத்தை ராக்பெல்லர் கட்டுப்படுத்தியிருந்தார். பெயரளவில்

கூட போட்டியில்லாது போகவே அவர் விருப்பப்படியெல்லாம் விலைகளை உயர்த்தினர். ஸ்டாண்டர்டு எண்ணெய் நிறுவனம் சில ஆண்டுகளில் பல இரயில்பாதைகளையும் இரும்புத்தாதுச் சுரங்கங்களையும், செப்புச் சுரங்கங்களையும் மற்றையத் தொழிலாலைகளையும் தனக்கே உரிமையாக்கிக் கொண்டது. ராக்பெல்லரும், கார்னேகியைப் போலவே வாணிகத்திலிருந்து ஓய்வுபெற்று, இறுதி முப்பதாண்டுகளை மருத்துவம், அறிவியல், கல்வி-ஆகியவற்றின் வளர்ச்சிக்காக நிதியளித்துத் தொண்டாற்றுவதில் செலவிட்டார்.

**மின்சாரம்**

அமெரிக்க ஐக்கிய நாட்டில் இயற்கையன்னை கணக்கிட முடியாத அளவிற்குத் தன்னுள்ளே நீர்விசையை அடக்கிக் கொண்டுள்ளாள். முந்நூறு மில்லியன் மக்கட்தொகை கொண்ட அந் நாட்டின் தொழில் தேவைகளுக்கு வேண்டிய சக்தியை, அங்குள்ள நீர்நிலைகள் குன்றாது அளித்துவருகின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஒளிபெறவும், ஆலைகளை இயக்கவும், செய்தி இணைப்புக்கும் மின்சாரம் மேன்மேலும் தேவைப்பட்டது. இங்கிலாந்தில் மைக்கல் பாரடே (Michael Faraday) போன்றவர்களும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஜோசப் ஹென்றி (Joseph Henry) போன்ற அறிவியல் அறிஞர்களும் நடத்திய ஆராய்ச்சிகளின் விளைவாக மின்சார உற்பத்தி பெருகலாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே ஒளிபெற மின்சாரத்தைப் பயன்படுத்தும்முறை தெரிந்திருந்தது. ஆனால், மின்சாரவிளக்குகளைச் (Bulb) செய்யப் பயன்படுத்தப்பட்ட இழைக்கம்பி நீடித்து உழைக்காது, விலையும் அதிகமானதாக இருந்தது. தாமஸ் ஆல்வா எடிசன் (Thomas Alva Edison) விலை மலிவான, நீடித்து உழைக்கக் கூடிய இழைக்கம்பிகளைப் பொருத்தி விளக்குகளைச் செய்யும் முறையைக் கண்டுபிடித்தார் (1879). 1882ஆம் ஆண்டு நியூயார்க் மாநகரத்தில் எடிசன் மின்சார நிறுவனம் ஒன்று நிறுவப்பட்டு, அம் மாநகரில விளக்குகள் எரிய மின்சாரம் உற்பத்தி செய்யப்பட்டு அளிக்கப்பட்டது. மின்சார ஆற்றலைப் போக்குவரத்துக்குப் பயன்படுத்தும் வகையில் ஒரு கண்டுபிடிப்பை பிராங்க் ஸ்பிரேகு (Frank J, Sprague) வெளியிட்டார். 1887ஆம் ஆண்டு வர்ஜீனியாவிலுள்ள ரிச்மாண்டில் முதல் மின்சார ஊர்தி தெருக்களில் ஓடிற்று.

**பிற கண்டுபிடிப்புகள்**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைசி நாற்பதாண்டுகளில், அமெரிக்க ஐக்கிய நாட்டின் காப்புரிமை வழங்கும் அலுவலகம் 6,76,000 காப்புரிமைகளை வழங்கியிருந்தது. இதனின்றும் எவ்வளவு

புதிய கண்டுபிடிப்புகள் நிகழ்ந்தன என்பதனை அறியலாம். மின்சாரச் சக்தி தொழிற்சாலைகளில் பயனுக்கு வந்த பிறகும், எஃகுத் தொழில் வளர்ச்சியடைந்த பிறகுமே இப் புதிய கண்டுபிடிப்புக் களெல்லாம் மக்களுக்குப் பயன்படும் வகையில் புழக்கத்திற்குக் கொண்டு வரப்பட்டன. மெக்ஸிகோ போர்மூள்வதற்கு முன்னமேயே சாமுவெல் மார்ஸ் (Samuel F. B. Morse) மின்சாரத் தந்திமுறைக் கான அடிப்படைகளைக் கண்டுபிடித்திருந்தார். நியூபவுண்டு லாந்தையும், அயர்லாந்தையும் இணைத்து 1866ஆம் ஆண்டு, முதல் அட்லாண்டிக் கடல்வழித் தந்திக் கம்பி வடம் (Cable) போடப்பட்டது 1876ஆம் ஆண்டில் ஸ்காட்லாந்திலிருந்துவந்து குடியேறிய அலெக்சாண்டர் கிரஹாம் பெல் (Alexander Graham Bell) தொலை பேசிக் கருவியைச் செய்து காண்பித்தார். அதன்பயனாக இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் 13,55,000 தொலைபேசிகள் அமெரிக்காவில் பயன்படுத்தப்பட்டன. இத்தகைய கண்டுபிடிப்பு களால் வாணிகம் ஊக்கம் பெற்றது. பெண்கள் அதிகமான அளவில் தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் வேலை செய்யலாயினர். அலுவலகங்கள் அதிகரித்தமையால் உடலுழைப்பற்றத் தொழிலாளர் கள் (White-collar workers) எண்ணிக்கை பெருகிற்று. தொலை பேசி ஒவ்வொரு அலுவலகத்திற்கும். கடைக்கும் இன்றியமையாத சாதனமாயிற்று.

ஷோல்ஸ் (Sholes) என்பவரும், கிளிடன் (Glidden) என்பவரும் இணைந்து முயன்று தட்டெழுத்துப் பொறியை (Typewritter) உருவாக்கினர். 1873-லிருந்து தட்டெழுத்துப்பொறியை அமெரிக்கர் பயன்படுத்தலாயினர். ஒஹியோ மாநிலத்தைச் சார்ந்த ஓர் இளம் பொறியியல்வல்லுநர் 1878-ல் வில்விளக்கினைக் கண்டு பிடித்தார். விரைவில் நகரங்களின் தெருக்களில் வில்விளக்குகள் (Arc lamp) பொருத்தப்பட்டன. திரைப்படம் காட்டும் கருவியினை எடிசன் கண்டுபிடித்தார். இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தி லிருந்து திரைப்படங்கள் திரையிடப்படலாயின. இத் திரைப் படங்கள்மூலம் அமெரிக்கமக்களுடைய பழக்கவழக்கங்களையும், வாழ்க்கைமுறைகளையும் உலகின் பல பாகங்களிலிருந்தோரும் காண முடிந்தது. இதையொட்டி வானொலியும் மகத்தான மாற்றத்தைச் சமூகத்தில் கொண்டுவந்தது. முதல் உலகப்போருக்குப்பின் ஒவ்வொரு வீட்டிலும் வானொலிப் பெட்டி ஒலித்தது.

தொலைபேசி, மின்விளக்கு, திரைப்படம், வானொலி ஆகிய புதிய கண்டுபிடிப்புகள் மக்களுக்கு மட்டற்ற மகிழ்வினை ஊட்டியதோடு, வாழ்க்கைமுறையினையும் வளப்படுத்தின. அமெரிக்காவின் அகன்ற நிலப்பரப்பில் ஆங்காங்கே தனித்து வாழ்ந்த மக்கள் தங்களது தனிமையினை மறக்கலாயினர். அமெரிக்க மக்களது

சமூகப் பழக்கவழக்கங்கள் தரப்படுத்தப்பட்டன. மேற்கூறிய சாதனங்களுக்கு அதிகத் தேவை ஏற்பட்டமையால், திட்டமிடப்பட்ட பெரிய அளவில் அவற்றை உற்பத்தி செய்ய நேரிட்டது. அதற்காகப் பெருமளவில் முதலீடு செய்யப்பட்ட தொழிற்சாலைகள் தோன்றின. இவ்வகையில் வாணிகம் பெருமளவில் ஊக்கம் பெற்றது.

## இரயில்பாதைகளின் வளர்ச்சி

உள்நாட்டுப் போரையடுத்த முப்பதாண்டுகளில் வியத்தகு முறையில் இரயில்பாதைகள் ஆறுமடங்கு பெருகின. அதனையொட்டி இரயில் போக்குவரத்துத் திட்ட அமைப்புகளும் செம்மை பெறலாயின. இரயில்பாதைகளை அமைக்கவும், இரயில் எஞ்சின்கள் செய்வதற்கும், இரயில்பெட்டிகளைக் கட்டுவதற்கும் பெரியபெரிய தொழிற்சாலைகள் தோன்றின. அவற்றால் எஃகு உற்பத்தியும், நிலக்கரி வெட்டியெடுப்புத் தொழிலும் வெகுவாக வளர்ச்சியுற்றன. இரயில்பாதைகள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பல பகுதிகளையும் இணைத்தமையால், மேற்குப் பகுதியில் மக்கள் விரைவில் குடியேறினர்; மேலும் புதிது புதிதாகச் செய்யப்பட்ட செய்பொருள்களின் விற்பனைக்கு நாடு முழுவதிலும் சந்தைகள் ஏற்பட்டன. கச்சாப்பொருள்களைக் கிடைக்குமிடத்திலிருந்து தொழிற்சாலைகளுக்கு எடுத்துச் செல்லவும் செய்பொருள்களைத் தொழிற்சாலைகளிலிருந்து சந்தைகளுக்கு எடுத்துச் செல்லவும் இரயில் வண்டிகள் ஓயாமல் ஓடலாயின.

உள்நாட்டுப்போர் துவங்கும் முன்னரே, கிழக்கு எல்லையையும், மேற்கு எல்லையையும் இணைக்கும்படியாக நாட்டின் குறுக்கே இரயில் பாதையொன்று அமைக்கவேண்டுமெனக் கிழக்குப்பகுதி வணிகர்கள் கோரிவந்தனர். அப்படியொரு இரயில்பாதை நாட்டின் குறுக்கே அமைந்தால் அது வடபகுதிவாழ் மக்களுக்கே பயனளிப்பதாய் அமையுமெனக் கருதிய தென்மாநிலத்தவர்கள் அத் திட்டத்தை எதிர்த்தனர். 1862-ல் காங்கிரஸில் தென்பகுதி உறுப்பினர்கள் இடம்பெறாது இருந்தபோது நாட்டின் குறுக்கே ஓர் இரயில்பாதை அமைப்பதற்கான திட்டத்தை காங்கிரஸ் வகுத்தது. நெப்பிராஸ்காவிலிருந்து (Nebraska) கலிபோர்னியாவை இணைக்கும் வகையில் ஓர் இரயில்பாதையை அமைப்பதற்கான பட்டயம் பசிபிக் கூட்டிணைவு நிறுவனத்திற்கு (Union Pacific Company) வழங்கப் பட்டது. அந்நிறுவனத்திற்கு இரயில்பாதை செல்லும் நிலமும் அவ்வழியிலுள்ள மரங்களை இலவசமாகப் பயன்படுத்தவும், அவ் வழியிலுள்ள தாதுப்பொருள்களை எடுத்துக்கொள்ளவும், கட்டப் படும் ஒரு மைல் நீளமுள்ள இரயில்பாதைக்கு ஈடாகப் பத்து சதுர மைல் நிலமும் பெற உரிமையளிக்கப்பட்டது. இவ்வுரிமைகளை அளித்ததோடு அந்நிறுவனத்திற்குக் கடன் தந்துதவவும் காங்கிரஸ்

முன்வந்தது. சமநிலத்தில் கட்டப்படும் ஒரு மைல் நீளமுள்ள இரயில்பாதைக்குப் பதினாறாயிரம் டாலரும், மேட்டுநிலத்தில் அமைக்கப் படும் ஒரு மைல் நீளமுள்ள பாதைக்கு முப்பத்திரண்டாயிரம் டாலரும், மலைப்பகுதியில் போடப்படும் ஒரு மைல் நீளமுள்ள பாதைக்கு நாற்பத்தெட்டாயிரம் டாலரும் கடனாகத் தந்துதவ காங் கிரஸ் முன்வந்தது. அதே நேரத்தில் கலிபோர்னியாவிலிருந்து துவக்கப் பட்டுக் கிழக்கு நோக்கி ஓர் இரயில்பாதையை அமைக்க, கலிபோர்னியா வில் மத்திய பசிபிக் நிறுவனம் (Central Pacific) ஒன்று ஏற்படுத்தப் பட்டது.

நாட்டின் கிழக்கு - மேற்குப் பகுதிகளை இணைக்கும் இரயில் பாதைக்கான வேலை 1867-ல் துவக்கப்பட்டது. அயர்லாந்திலிருந்தும் சீனாவிலிருந்தும் ஏராளமான கூலிகள் வேலைக்கு வந்து அமர்ந்தனர். பாலைவனங்கள் வழியாகவும், மரங்களடர்ந்த காடுகளூடேயும், செங்குத்தான மலைகளைக் குடைந்தும், இரயில்பாதையை அமைப்பதில் நூற்றுக்கணக்கானபேர் அல்லும்பகலும் அயராது உழைத்தனர். இத் திட்டத்தை மேற்கொண்டவர்கள் பலவகைப்பட்ட பொறியியல் சிக்கல்களையெல்லாம் களைந்து நன்முறையில் செயலாற்றினர். அதற்கேற்றவாறு அவர்கள் பெரும் ஊதியத்தையும் பெற்றார்கள். பசிபிக் கூட்டிணைவு நிறுவனத்தில் முக்கிய பங்குதாரர்களாக இருந்த 'கிரெடிட் மொபீலியர்' (Credit Mobilier) என்ற நிறுவனத்தினர். இரயில்பாதை அமைக்க உண்மையில் செலவான தொகையைப் போன்று பல மடங்கு ஊதியம் பெற்றனர். கலிபோர்னியாவி லிருந்து கிழக்கு நோக்கித் துவக்கப்பட்ட இரயில்பாதையும், நெப்பிராஸ்காவிலிருந்து மேற்கு நோக்கித் துவக்கப்பட்ட இரயில் பாதையும் 1869ஆம் ஆண்டு, மே மாதம், பத்தாம் நாளன்று உட்டா விலுள்ள (Utah) ஆக்டன் (Ogden) என்னுமிடத்தில் சந்தித்தன. இரு பாதைகளையும் இணைக்கும் வகையில் இறுதியாக ஒரு வெள்ளியிலான முளை அடிக்கப்பட்டது. இவ்வகையில் நாட்டின் குறுக்கே முதல் இரயில்பாதை அமைக்கப்பட்டது. அதே போல 1890ஆம் ஆண்டுக்குள், பன்னிரண்டு இரயில்பாதைகள் மிஸிஸிபி ஆற்றுப் பகுதியையும் பசிபிக் கடலோரத்தையும் இணைக்கும் வகையில் அமைக்கப்பட்டன. அவற்றுள், ஐந்து இரயில் பாதைகள் கீழ்த் திசைப்பகுதிகளையும், மேற்றிசைப் பகுதிகளையும் இணைத்து நாட்டின் குறுக்கே சென்றன. அப் பாதைகளை ஒரு சில வலிமையும், கூர்மதியும் மிக்க துணிவாண்மைக்காரர்கள் கட்டுப்படுத்தினர். அவர்கள் பழி பாவங்களுக்கு அஞ்சாத வகையில் மேலாண்மை பெறு வதற்காக எப்பொழுதும் போட்டியிட்டுக் கொண்டேயிருந்தனர்.

புதிய இரயில்பாதைகள் அமைக்கப்பட்ட அந்த ஆண்டுகளில் இரயில் பயணம் விரைவானதாகவும், பாதுகாப்பு மிக்கதாகவும், வசதி கள் நிறைந்ததாகவும், குறைந்த கட்டணமுடையதாகவும் மாறிற்று.

1864-ல் தூங்குவதற்கான படுக்கைகள் கொண்ட பெட்டியை ஜார்ஜ் புல்மேன் (George M. Pullman)என்பவர் கட்டினார். இரயில் காற்றுத் தடையை (Air-brake) ஜார்ஜ் வெஸ்டிங்ஹவுஸ் (George Westinghouse) என்பவர் 1868-இல் கண்டுபிடித்தார். அடுத்த இருபது முப்பது ஆண்டுகளில் நாடுமுழுவதும் இரயில்பாதைகள் ஒரே சீரான முறையில் (Standard gauge) அமைக்கப்பட்டன. இருப்புப் பாதைகளை அமைக்க எஃகுத் தண்டவாளங்கள் பயன்படுத்தப் பட்டன. இரயில் வண்டிகள் பாதுகாப்புடன் செல்வதற்குச் சைகை முறைகளும் அமைக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதி நாற்பதாண்டுகளில் ஒரு சரக்கு வண்டி ஏற்றிச் செல்லும் எடை 15,000 பவுண்டிலிருந்து 100,000 பவுண்டாக உயர்ந்தது. எடைக்கட்டணமும் ஒரு மைலுக்கு இரண்டு டாலரிலிருந்து 73 சென்டாகக் குறைந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்திலிருந்தே குதிரையால் இழுக்கப்படாத வண்டி ஒன்றினைக் கட்டுவிப்பதில் பலர் ஈடுபட்டனர். நீராவிச் சக்தி கொண்டும், மின்சாரச் சக்தி கொண்டும், பிற எரிபொருள்கள் கொண்டும் ஊர்திகளுக்கு இயக்க சக்தியைத் தர முயன்றனர். இறுதியாக 1877-ல், பெட்ரோல் கொண்டு இயங்கக் கூடிய ஓர் ஊர்தியை, நியூயார்க்கைச் சார்ந்த ஜார்ஜ் செல்டன் (George B. Selden,என்பவர் அமைத்தார். ஆனால் 1903-க்குப் பிறகுதான் மக்கள் பயனுக்கு பெட்ரோல் ஊர்தி வந்தது. விரைவில் ஹென்றி போர்டு (Henry Ford) புகழ்மிக்க 'T' வடிவ ஊர்தியினை ('T' Model) அமைத்து விற்கலானார். 1910ஆம் ஆண்டுக்குள் அமெரிக்காவில், மோட்டார் கார்கள் (Cars) செய்யும் நிறுவனங்கள் அறுபது இருந்தன.

## தனியார் நிறுவனங்களும் அரசு வரையறை விதிமுறைகளும் (Private Enterprise and Public Regulation)

உள்நாட்டுப்போரையடுத்த இருபத்தைந்து ஆண்டுகளில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் வாணிகம் வியத்தகு முறையில் பன்மடங்கு பெருகியது. தனிப்பட்டவர்களது முயற்சிக்கு நல்லாதரவு அளிக்கும் வகையில் அமைந்திருந்த பொருளாதார கோட்பாடே அத்தகைய முன்னேற்றத்திற்கு அடிப்படையான காரணமாகும். ஆனால், நாளாவட்டத்தில் எல்லையற்ற அளவுக்குத் தனியுரிமைகளைப் பெற்ற நிறுவனங்களும், இரயில்பாதை நிறுவனங்களும் பொதுமக்களுக்குத் துன்பம் விளைவிக்கும் வகையில் முறைகேடான செயல்களில் ஈடுபடலாயின. இவற்றைக் கண்டிக்க அரசியலமைப்பு செயலற்றதாக இருந்தது. எனவே பொதுமக்கள் நன்மைக்காக வாணிகநிறுவனங்களைக் கட்டுப்படுத்தக் கூட்டாட்சி அரசு

நடவடிக்கைகள் எடுக்கலாயிற்று. உயர்ந்த காப்புவரிகளால் பாதுகாப்புப் பெற்ற தொழில் துறையில் நிதி அடிப்படையில் நிறைய ஏற்றத் தாழ்வுகள் தோன்றின. உயர்ந்த காப்புவரிகளை விதிக்க வேண்டும் என்ற கோரிக்கையைக் கொண்டவர்கள் தொடர்ந்து காங்கிரஸில் தங்களுக்குச் சாதகமான சட்டங்களை இயற்றிக் கொண்டனர். இவற்றால் பெருந்தொல்லைக்குள்ளானவர்கள் பொது மக்களேயாவர்.

### வாணிகக் கூட்டு நிறுவனங்கள் (Trusts)

பல தொழிற்சாலைகள், ஒன்றுசேர்ந்து தங்களது வளங்களை இணைத்து ஒரு கூட்டுநிறுவனத்தை நிறுவுவதன்மூலம் பல நன்மைகளைப்பெறலாமென உணர்ந்தன. அப்படி அமைக்கப்பட்ட கூட்டு நிறுவனங்கள் தங்களுக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு பொருள்களின் விலையை நிருணயிக்கவும், நாட்டின் எப் பகுதியில் பொருளாதார வளப்பத்திற்கேற்ப இணைந்து செயல்படலாமென்பதை நிருணயிக்கவும் முற்பட்டன. 1900-ஆம் ஆண்டில் தங்களுக்குள் போட்டி போட்டுக்கொண்டு 5000 நிறுவனங்கள் இயங்கி வந்தன. பின்னர் அவையெல்லாம் ஒன்றோடொன்று பிணைந்து 300 கூட்டுநிறுவனங்களாக உருவெடுத்தன. ஒவ்வொரு கூட்டு நிறுவனமும் ஒரு துறையில் போட்டியிடுவாரின்றி முழுத் தனியுரிமை பெற்று வாணிகம் நடத்தி வந்தன. தேசிய அளவில் இயங்கிய அக் கூட்டுநிறுவனங்களின் தலைவர்கள், பழிபாவங்களுக்கு அஞ்சாதவர்களாக, செல்வத்தைப் பெறுவதிலேயே நாட்டமுடையவர்களாக இருந்தனர். அக் கூட்டு நிறுவனங்களுள் முனைப்பானவைகளாகத் திகழ்ந்தவை யு. எஸ். ஸ்டீல் கார்ப்பரேஷன் (U. S. Steel Corporation), அமெரிக்கன் ஷுகர் ரிபைனிங் கம்பெனி (American Sugar Refining Company), புல்மேன் பாலஸ் கார் கம்பெனி (Pullman Palace Car Company), இன்டர்நேஷனல் ஹார்வஸ்டர் கம்பெனி (International Harvester Company), யு. எஸ் ரப்பர் கம்பெனி (U. S. Rubber Company), அமால்கமேட்டட் கம்பெனி (Amalgamated Company), ஆகியவையாகும். இக் கூட்டுநிறுவனங்கள் தனியுரிமையை நன்கு வளர்த்து விட்டன. அதனால், பல கேடுகள் விளைந்தன. போட்டியில்லாதிருந்தமையால் விலைகள் உயர்த்தப்பட்டன. ஆனல், தொழிலதிபர்கள் தாங்கள் வாங்கிய பொருள்களுக்குக் குறைந்த தொகையைத் தான் அளித்தனர்; மற்றும் தொழிலாளர்களுக்குக் குறைந்த கூலிதான் கொடுத்தனர். மேலும் வாணிகத்தில் ஊழலும் மலிந்து காணப்பட்டது. தனியுரிமைக் கூட்டு நிறுவனங்களின் வளர்ச்சியால் சிறு வணிகர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டனர்; சிறு தொழிலதிபர்களும் நொடித்துப் போயினர். தொழிலாளர்கள், தொழிற்சங்கங்களில் உறுப்பினராகச் சேருவதைக் கூட்டுநிறுவனங்கள் எதிர்த்தன.

தங்களுக்குச் சில சலுகைகளைப் பெறுவதற்காகக் காங்கிரஸ் உறுப்பினர்களுக்குக் கையூட்டு அளிக்கவும் கூட்டுநிறுவனங்களின் அதிபர்கள் தயங்கவில்லை.

## கூட்டுநிறுவனங்களைக் கட்டுப்படுத்த சட்டமியற்ற வேண்டுதல்

கூட்டு நிறுவனங்களில் கேடுகள் வளர்ந்து வருவதைக் கண்ட குடியானவர்களும், தொழிலாளர் தலைவர்களும், சமூகச்சீர்திருத்த வாதிகளும் கண்டனம் தெரிவிக்கலாயினர். கூட்டுநிறுவனங்களை யெல்லாம் கூட்டாட்சி அரசு கட்டுப்படுத்தி, வரையறை விதிமுறை களை வகுக்க வேண்டுமென மக்கள் கோரலாயினர். தொடக்க காலத்தில் இருந்த சிறு தொழில்முறையிலும், பங்காண்மைக் கூட்டு வாணிகத்திலும், (தனிப்பட்ட உரிமையாளர் வாணிகத்திலும்) அத்தகைய கேடுகள் இல்லாமையை மக்கள் குறிப்பிட்டனர். பெரிய கூட்டுநிறுவனங்கள் தனியுரிமையை வளர்த்தமை யால், அவற்றைச் சிறுசிறு நிறுவனங்களாகப் பிரிக்கவேண்டு மென்றும், அப்போதுதான் வாணிகத்தில் போட்டியிருக்குமென்றும் சீர்திருத்தவாதிகள் இடையறாது வலியுறுத்தி வந்தனர். கூட்டு நிறுவனங்கள் நியாயமற்ற முறையில் பொருளீட்டுவதைச் செய்தித் தாள்களும், பிற இதழ்களும் வெளிப்படையாக வெளியிட்டன. கூட்டு நிறுவனங்களை எதிர்த்து ஓர் அரசியல்கட்சியும் தோன்றிற்று. குடியானவர்கள் தங்களுடைய குறைகளைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு, தேசியப் பண்ணைக்காவலர் படையை(Nation granger) உருவாக்கினர். குடியரசுத் தலைவர் கிளீவ்லண்டு (Cleveland) காங்கிரஸில் பேசுகையில் "சட்டம் காட்டிய வழியில் எச்சரிக்கை யோடு இயங்கி, சமுதாயத்திற்குச் சேவை செய்ய வேண்டிய கூட்டு நிறுவனங்கள், மக்களின் எசமானர்களாகிக் கொண்டிருக்கின்றன" என்று கவலையுடன் குறிப்பிட்டார். நாட்டின் இரு பெரும் கட்சிகளும் தனியுரிமையை ஒருமுகமாக எதிர்த்தன.

## மாநிலங்கள் சட்டமியற்றல்

மக்களுடைய வேண்டுகோளுக்கிணங்க மாநிலச் சட்டமன்றங்கள் கூட்டுநிறுவனங்களைக் கட்டுப்படுத்தும் வகையில் சட்டங்கள் இயற்றலாயின. பண்ணைக்காவலர்களின் தூண்டுதலினாலும், பல்வேறு குடியானவர் கட்சிகளின் வற்புறுத்தலினாலும் மேற்கத்திய மாநிலங்கள் சரக்குகளையும், பயணிகளையும் ஏற்றிச்செல்வதற்கான உயர்ந்த அளவு கட்டணத்தை நிருணயித்துச் சட்டங்கள் இயற்றின. கட்டணங்கள் பட்டியலைத் தயாரிப்பதற்காக இலினாய் மாநிலம் ஒரு குழுவை நியமித்தது. விஸ்கான்சின், மினஸோட்டா, அயோவா ஆகிய மாநிலங்கள் நேரடியாகக் கட்டணங்களை வரையறைசெய்து

சட்டங்களை வெளியிட்டன. இரயில்பாதை நிறுவனத்தினரது மோசடி வழக்கங்களைக் கண்டிக்க, சட்டங்களை இயற்ற உரிமையளிக்கும்படி மாநிலங்களின் அரசியலமைப்புகளில் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. மத்திய வடக்குப் பகுதியிலிருந்த மாநிலங்களின் செல்வாக்குப் பெற்றிருந்த பண்ணைக்காவலர்களும் கூட்டு நிறுவனங் களைக் கண்டித்துச் சட்டங்கள் இயற்றுவதில் வெற்றிகண்டனர். இதற்கிடையே குடியானவர்கள் தங்களைக் காத்துக்கொள்ள கூட்டுறவுப் பண்ட சாலைகளையும், தானியக் கிடங்குகளையும் பாங்குகளையும், தொழில் ஆலைகளையும், காப்பீட்டுநிறுவனங்களையும் நிறுவினர்.

## மாநிலங்கள் இயற்றிய சட்டங்களை நீதித்துறை மறுஆய்வு செய்தல்

வாணிகக் கூட்டுநிறுவனங்களின் நெறியற்றமுறைகளால் மக்களுக்கு இடர்ப்பாடுகள் மிகுந்து வந்தன. திறமையின்மையினு லும், ஊழலாலும் கூட்டுறவுச் சங்கங்கள் சரிவர நடைபெறவில்லை. மாநிலச் சட்ட மன்றங்கள் கட்டணங்களை நிருணயித்து சட்டமியற்றிய போது, தங்களுடைய உரிமைகள் பறிக்கப்படுகின்றனவென்று இரயில் பாதை நிறுவனத்தினர் நீதி மன்றங்களில் முறையிட்டனர். ஆனால் நீதிமன்றங்கள் மக்கள் நலன் கருதி, நிறுவனங்களுக்கு எதிராகவே தீர்ப்பு வழங்கின. ஒரு தனிப்பட்ட நிறுவனத்தினரது சொத்து, பொது மக்கள் நன்மைக்காக விதிக்கப்படும் கட்டுப்பாடுகளுக்கு அத்தனிப்பட்ட நிறுவனம் இணங்க வேண்டுமென்று ஒரு தீர்ப்பில் தலைமை நீதிமன்றம் விளக்கம் கூறியது. மன்னுக்கு எதிராக இலினாய் தொடுத்த வழக்கில், (Munn vs. Illinois) தலைமை நீதிமன்றம், இலினாய் மாநிலச்சட்டமன்றத்தால், தானியக் கிடங்கு களில் தானியத்தைப் பாதுகாத்து வைப்பதற்கான உயர்ந்த கட்டணத் தொகையை நிருணயித்து இயற்றப்பட்ட சட்டத்தைச் சரியானதென்று கூறித் தீர்ப்பு வழங்கியது. அச் சட்டத்தினால் தானியக் கிடங்கு உரிமையாளர்களின் சொத்துரிமைகள் பாதிக்கப்பட வில்லை என்றும் தலைமை நீதிமன்றம் கூறிற்று (1876). பொது நலன் அல்லது பயனைப் பாதிக்கும் நிலையைச் சீர்படுத்தும் அதிகாரம் அரசுக்கு உண்டென்றும் கூறப்பட்டது.

வாணிகக் கூட்டுநிறுவனங்களைக் கட்டுப்படுத்துவதற்காக மாநிலச்சட்ட மன்றங்கள் இயற்றிய சில சட்டங்களைத் தலைமை நீதி மன்றம் சட்டத்துக்கு முரணானவையெனத் தள்ளுபடி செய்தது. அவ்வகையில் ஒரு தீர்ப்பு 1886-இல் தலைமை நீதிமன்றம் வாபாஷ் கட்டண வழக்கில்(Wabash Rate Case) வழங்கியது. அவ் வழக்கில் இலினாய் மாநிலச்சட்டமன்றம், இரயில்பாதைக் கட்டணங்களை அம் மாநிலம் வழியாகச் செல்லும் நீள அளவைப் பொருத்தமட்டும் நிருணயிக்கப்பட்டிருந்தமை, அரசியலமைப்புக்கு முரணான செயல்

எனத் தள்ளுபடி செய்யப்பட்டது. பல மாநிலங்கள் வழியாகச் செல்லும் இரயில்பாதைகளின் கட்டணங்களை நிருணயிக்கும் பொறுப்பு காங்கிரஸையே சாரும் என்றும் கூறப்பட்டது. எனவே மாநிலச் சட்டமன்றங்கள் அந்த மாநிலத்தைப் பொறுத்தமட்டில் நடைபெறும் வாணிகத்தைமட்டுமே கட்டுப்படுத்தலாம் என்ற நியதியும் ஏற்பட்டது. கட்டணத்தொகையை வரையறுத்து இதற்குமுன் இயற்றப்பட்ட சட்டங்களெல்லாம் பயனற்றவையாயின.

வாபாஷ் கட்டண வழக்குத் தீர்ப்பிற்குப் பிறகு கூட்டு நிறுவனங்களைக் கட்டுப்படுத்த கூட்டாட்சி அரசு முன்வர வேண்டுமென மக்கள் கோரினர். அதன் விளைவாக செனட் சபை இரண்டு குழுக்களைநியமித்தது. (1) இரயில்பாதைக் கட்டணங்களைக் குறைக்கத் தனியார் நிறுவனங்களுக்குப் போட்டியாக அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசே சில இரயில்பாதைகளை அமைத்து, நடத்த வேண்டுமென 1874-ல் விண்டாம்குழு, (Windom Committee) கருத்துத் தெரிவித்தது. (2) மாநிலங்களுக்கிடையே சரக்குகளை ஏற்றிச் செல்வதற்கான கட்டணத்தொகையினைக் கூட்டாட்சி அரசு சட்டங்கள் இயற்றி, கட்டுப்படுத்த வேண்டுமெனக் கல்லாம் குழு (Cullom Committee) 1886-ல் பரிந்துரைத்தது.

**மாநில அரசுகளுக்கிடையேயான வாணிகச் சட்டம் 1887**

**(The interstate Commerce Act)**

மக்களுடைய கோரிக்கைகளுக்கிணங்கக் கூட்டாட்சி அரசு மாநில அரசுக்களுக்கிடையேயான வாணிகச் சட்டம்' ஒன்றை இயற்றியது. அச் சட்டப்படி ஐந்து உறுப்பினர்கள் கொண்ட மாநில அரசுகளுக்கிடையேயான வாணிகக் குழு ஒன்று அமைக்கப்பட்டது. இரயில் பாதை போக்குவரத்துக் கட்டணங்களைப் பொதுமக்கள் அறிந்து கொள்ளும் வண்ணம் அவற்றை வெளியிட வேண்டுமென்றும், அக் கட்டணங்கள் நியாயமானவையாக இருக்க வேண்டுமென்றும் அச் சட்டம் வலியுறுத்தியது. நிறுவனங்கள் கூட்டு ஒப்பந்தம் செய்து கொள்வதையும், வேண்டியவர்களுக்குக் கட்டணக்குறைப்பு தருவதையும் கப்பல் உரிமையாளர்களிடையே கட்டண வேறுபாடு இருப்பதையும் அச் சட்டம் தடுத்தது. கூட்டுநிறுவனங்களின் கணக்கு வைப்புமுறை, கட்டணப்பட்டியல், வாணிகமுறைகள் ஆகியவற்றை மேற் பார்வையிடவும், பொதுமக்களது குறையீடுகளைக் கேட்கவும் வாணிகக்குழுவுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. மேலும், அவ்வாணிகக் குழு, கூட்டாட்சி அரசுதொடுக்கும் வழக்குகளில் சட்டத்துறையின் தலைவருக்கு உதவிசெய்யவும் கேட்டுக் கொள்ளப்பட்டது. ஆனால், இச் சட்டம் பல ஆண்டுகள் செயற்படுத்தபடாமல் இருந்தது. அதற்கான காரணங்கள் பல. அவை;

(1) மாநில அரசுக்களுக்கிடையேயான வாணிகக்குழு தொடுத்த வழக்குகளில் பலர் சாட்சி சொல்ல முன் வரவில்லை; அவர்களைக் கட்டாயப்படுத்த குழுவுக்கு அதிகாரம் தரப்படவில்லை. (2) இக் குழு வழங்கிய தீர்ப்புகளில் மனநிறைவு பெருத எண்ணற்ற பேர் மேல் மன்றங்களுக்கு முறையீடு செய்தனர். (3) இரயில் பாதை நிறுவனங்களின் வழக்குரைஞர்கள் குழுவின் தீர்ப்பின்மீது முறையீடு செய்து பல முறை வெற்றி பெற்றனர். (4) மாநில அரசுக்களுக்கிடையேயான வாணிகச் சட்டத்திற்குத் தலைமை நீதிமன்றம் மிகக் குறுகிய விளக்கம் கண்டது. அதனல், குழுவின் செயல்களும் குறுகிய எல்லைக்கு உட்பட்டதாகவே அமைந்தது. எனவே, பொதுமக்கள் கூட்டு நிறுவனங்களின் தொல்லையிலிருந்து விடுபட, பல ஆண்டுகள் காத்திருக்க வேண்டியதாயிற்று. தியோடர் ரூஸ்வெல்ட் பதவிக் காலத்தில்தான் காங்கிரஸ் துணிந்து பல சட்டங்களை இயற்றியது.

## ஷெர்மன் கூட்டுநிறுவன எதிர்ப்புச்சட்டம் (1890)
## (Sherman Anti-Trust Act)

வாணிகக்கூட்டுநிறுவனங்களை எவ்வகையிலேனும் கட்டுப்படுத்த வேண்டுமெனக் கூட்டாட்சி அரசு உறுதி பூண்டது. அதற்காக ஓகியோ மாநிலத்தை சார்ந்த ஜான் ஷெர்மன் என்பவர், 1830ஆம் ஆண்டு ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தார். ஆகையால், அச் சட்டம் அவரது பெயராலேயே வழங்கப்பட்டது. அதன்படி வணிக ஒப்பந்தங்களும், கூட்டுகளும், இரகசியஉடன்பாடுகளும் தடை செய்யப்பட்டது. இச் சட்டம் இயற்றப்பட்டதும், வாணிகக் கூட்டு நிறுவனங்களெல்லாம் அழிந்தொழியும் எனப் பொதுமக்கள் நினைத்தனர். மாபெரும் கூட்டுநிறுவனங்களாக விளங்கிய ஸ்டாண்டர்டு எண்ணெய் நிறுவனம், சாராய நிறுவனம், சர்க்கரை நிறுவனம் ஆகியவற்றையெல்லாம் கூட்டாட்சி அரசு எளிதில் அடக்க இச் சட்டம் பெரிதும் உதவும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது.

ஷெர்மன் கூட்டுநிறுவனஎதிர்ப்புச்சட்டம் அனைவரும் எதிர்பார்த்ததைப் போலச் செயலாக்கம் மிக்கதாக விளங்கவில்லை. இச் சட்டம் இயற்றப்பட்டதும் பெரிய கூட்டுநிறுவனங்களெல்லாம் உடனே மறைந்தன. ஆனல் அவையெல்லாம் மீண்டும் வாணிகப் பங்குகளை வைத்திருப்பதற்கான நிலையங்களாக (Holding Company) வடிவெடுத்தன. தலைமை நீதிமன்றமும் இச் சட்டத்தை சீரிய முறையில் செயலாக்க முன்வரவில்லை. இச் சட்டம் இயற்றிய அடுத்த பத்தாண்டுகளில் முன்பிருந்ததைப்போல பல மடங்கு பெரிய அளவில் கூட்டுநிறுவனங்கள் தோன்றின. எனவே எதற்காக ஷெர்மன் சட்டம் இயற்றப்பட்டதோ, அதன் குறிக்கோளை அடையாமல் தோல்வியுற்றது.

பெரும் வாணிகத்தைக் கட்டுப்படுத்தமுடியாமல் போனதற்குக் காரணம், வாணிகம் எல்லையற்ற அளவுக்குப் பெருகியதோடல்லாமல், அதனூடே எண்ணிறந்த கடுஞ்சிக்கல்களும் நிறைய இருந்தமையே யாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டு மக்கள் பெரும் வாணிகத்தைக் கண்டு அஞ்சினர். அதேநேரத்தில் போற்றவும் செய்தனர். தனியுரிமை நிலையிலான வாணிகத்தின் இடர்ப்பாடுகளிலிருந்து தங்களைக் காத்துக்கொள்ள விரும்பிய மக்கள், அதேசமயம் பெருமளவிலான உற்பத்தியின் நன்மைகளை அடையவும், வீண் செலவுண்டாக்கும் இரட்டிப்பு வேலையைத் தவிர்க்கவும் விரும்பினார்கள். மக்கள் ஒருபுறம் வாணிகத்தில் தனி முயற்சிகளின் சிறப்புகளை உயர்வாகப் போற்றினர் ; மறுபுறம் கூட்டாட்சி அரசு வாணிகத்தைச் சட்டங்கள் இயற்றிக் கட்டுப்படுத்தவேண்டுமெனக் கோரினர். வாணிகக்கூட்டுநிறுவனங்களைத் தூய்மையாக்க விரும்பினார்களே ஒழிய, அவற்றை வேரோடு தகர்த்தெறிய மக்கள் விரும்பவில்லை. இதனையே குடியரசுத் தலைவர் தியோடர் ரூஸ்வெல்ட்டு "வாணிகக் கூட்டுநிறுவனங்களை ஒழித்துவிட வேண்டும் என்பது நமது கருத்தன்று; அத்தகைய பெரிய நிறுவனங்கள் தற்காலிகத் தொழில் முறை வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதவை ; எனவே நாம் அவற்றை அழிக்க முற்படவில்லை, ஆனால், அவற்றில் இடம்பெற்றுள்ள தீமைகளை ஒழிக்கவே முயற்சிக்கிறோம்", என்று கூறினர். 'பாலுக்கும் காவல்' 'பூனைக்கும் தோழன்' என்ற இந்த நோக்கு அச் சமயம் கேலி செய்யப்பட்டது.

## 22, வேளாண்மைப்புரட்சி

அமெரிக்க ஐக்கியநாட்டில், 1860-1910 ஆம் ஆண்டுகளுக்கு இடைப பட்ட காலத்தில் வேளாண்மைப் புரட்சிதோன்றி, துரிதகதியில் வளர்ந்து, பெரும்பயனையும், அதே நேரத்தில் பல புதிய பிரச்சினைகளையும் தோற்றுவித்தது. இப் புரட்சித் தோன்றியதற்குக் காரணங்கள் பலவாகும். பரந்துவிரிந்து கிடந்த செழிப்பான நிலம், அறிவியல் கல்வி தந்த புதிய வேளாண்மைக் கருவிகள், எளிமையான தீவிர சாகுபடி முறைகள், இரயில், கடல்வழி போக்குவரத்து வசதிகள், பெருகிய உள்நாட்டு, அயல்நாட்டு வர்த்தக நிலையங்கள் ஆகியவை கள் சிறப்பான காரணங்களாகும்.

**செழிப்பான—அளவில்லாத நிலம்**

உள்நாட்டுப்போரின் போது 1862 ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்ட குடியிருப்புச் சட்டத்தின்படி, மேற்குப் பகுதிகளில் குடியேறி, பண் படுத்தப்படாமல் பரந்துவிரிந்து கிடக்கிற செழிப்புமிக்க நிலங்களைப் பண்படுத்தி, வேளாண்மை செய்ய முன்வருவோருக்கு 64 ஹெக்டர் நிலம் இலவசமாக அளிக்கப்பட்டது ; இதன் காரணமாகவும், மேற்குப் பகுதிகளில் மக்கள் குடியேறுவது ஆண்டுதோறும் பெருகியது. அடுத்த இருபது ஆண்டுக் காலத்தில், இச்சட்டத்தின் மூலமாகச் சுமார், 2,24,00,000 ஹெக்டர் நிலம் இலவசமாக வழங்கப்பட்டது ; இதன் காரணமாக, 6,00,000 புதிய குடியிருப்புகளும், 3·5 மில்லியன் புதிய கால்நடைப் பண்ணைகளும் மேற்குப் பகுதிகளில், உருவாயின; அதோடு கூட, 60 மில்லியன் மக்கள் வேளாண்மையில் ஈடுபட்டனர் ; இவ்விதமாக, குடியிருப்புச்சட்டம் அளித்த வாய்ப்புகள், வேளாண்மையும் கால்நடைப்பண்ணைகளும், பெருகக் காரணமா யிருந்தன.

அடுத்ததாக, நாட்டின் மேற்குப்புற எல்லையானது, வெவ்வேறு காரணங்களினால், விரிவடைய விரிவடைய, செழிப்புமிக்க நிலம், அதிக

அளவில் விவசாயத்திற்குக் கிடைத்தது. இவ்விதமாக, அதிக அளவில் நிலம் கிடைத்ததன் காரணமாக, ஏற்கெனவே தொடர்ந்து விவசாயம் செய்யப்பட்டதால் சத்திழந்து போன நிலங்களை மீண்டும் எரு விட்டு, அவைகளைச் சக்திப்பெறச்செய்து, மீண்டும் அவைகளிலேயே பயிர்செய்வதைக் காட்டிலும், அல்லது எருபோட வசதியின்மை காரணமாக, சாரமிழந்த நிலங்களிலேயே வெறுவழியின்றி பொறுமையுடனும், தீவிரமாகவும் பயிர்செய்து குறைவான விளைச்சலைப் பெறுவதைக் காட்டிலும், மேற்குப் பகுதிகளில் மலிவாகக் கிடைக்கும், வளமான நிலத்தில், உழைப்பினைச் சிந்துவது பலனுள்ளதாக இருந்தது. இதன்காரணமாகப் பெரும்பாலான விவசாயிகள் சத்திழந்து வளங்குன்றிப்போன, தங்கள் நிலங்களை விட்டொழித்து மேற்குப் பகுதிகளில் குடியேறி, புதிய நிலங்களைப் பண்படுத்தி, பயிரிட்டு, விளைச்சலைப் பெருக்கினர். இவ்விதமாக, மேற்குப் புற எல்லைப்பகுதியின் விரிவு, விவசாயத்தினை வளர்த்து, விளைச்சலைப் பெருக்கியது.

அடுத்ததாக, விஞ்ஞானபூர்வமான விவசாயமுறைகளும், பண்ணைகளும் விளைச்சலை அதிக அளவில் பெருக்கின; முறையான ஆராய்ச்சிகளும், நவீன கண்டுபிடிப்புகளும் புதிய கருவிகளையும், முறைகளையும் இத்தொழிலுக்கு அளித்தன. நீராவி, எண்ணெய், மின்சாரம் போன்ற எரிசக்திகளைக் கொண்டு இயங்குகிற நவீன இயந்திரக் கருவிகள் வேளாண்மை-பண்ணைத்தொழில்களில் எல்லாக் கட்டங்களிலும் பயன்படுத்தப்பட்டன. அதாவது, நிலத்தை உழுது, பண்படுத்தி, எருவிட்டு, விதைத்து, பயிரிட்டு, அறுவடைசெய்து தாளடித்து, உமிபிரித்து, சுத்தப்படுத்தப்பட்ட தானியங்களை மூட்டைகளாகக் கட்டுவதற்குதவும் வகையில், வகைவகையாய்க் கருவிகள் பயன்படுத்தப்பட்டன. அதுபோலவே, கால்நடைகள்-புள்ளினங்கள் வளர்க்கும் இடங்களான பண்ணைகளிலும் இயந்திரக் கருவிகள் பயன்படுத்தப்பட்டன. இயந்திரக் கருவிகள், முட்டைகளை அடைகாத்துக் குஞ்சுகளைப் பொறித்தன; பசுக்களிடமிருந்து பாலைக் கறந்து அதிலிருந்து வெண்ணெயைப் பிரித்தெடுத்தன. இவ்விதமாக அறிவியல் அளித்த புதிய கருவிகளும் உற்பத்திமுறைகளும் பயிர்த் தொழிலையும், பண்ணைகளையும் பெரிதும் வளர்த்து உற்பத்தியினைப் பெருக்கின.

மேலும், விளைச்சலைப் பெருக்க, அறிவியலானது பல்வேறு வகைகளிலும் துணைசெய்தது: உதாரணமாக, சத்திழந்த நிலத்தை மீண்டும் சத்துள்ளதாக்கியது; குறைந்த அளவு பரப்புள்ள நிலத்தில் அமோக விளைச்சலை அளித்தது; பயிர்களை அழிக்கும் புழுபூச்சிகளைக் கொல்லும் மருந்துகளை அளித்தது; கால் நடைகளை ஆயிரக்கணக்கில் அழித்துக்கொண்டு, மின்னல் வேகத்தில் பரவும் நோய்க்கிருமிகளை

அதேவேகத்தில், அடியோடு அழிக்கும் கிருமிநாசினிகளை அளித்தது. இதன்காரணமாக, வேளாண்மை-பண்ணைத்தொழிலுக்கு நேர்ந்த கடுமையான சோதனைகள் மறைந்தன. இவ்விதமாக, அறிவியல் அளித்த வசதிகள் வேளாண்மையினையும், பண்ணைகளையும் காத்து வளர்த்து, விளைச்சலைப் பெருக்கின.

புதுவிதமான சோதனைகளும், கண்டுபிடிப்புகளும் தொடர்ந்து நிகழ்வதற்கு உதவும் வகையில், இவை தொடர்பான, கல்விக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. விவசாயக் கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் நாடெங்கிலும் ஏற்படுத்தப்பட்டன. மேலும், வேளாண்மை-பண்ணைத் தொடர்பான செய்தித்தாள்களும், இதழ் களும், பெருமளவில், வெளிவரத் தொடங்கின. இவைகளில் பெரும் பகுதி, தென்பகுதிகளிலிருந்து வெளிவந்தன. எல்லாவற்றிற்கும் உச்சக்கட்டமாக, 1862ஆம் ஆண்டில் முதன்முதலாக, நிருவாகத்தில், வேளாண்மைத்துறை எனத் தனியேயொரு துறையும் ஏற்படுத்தப் பட்டது. இத் துறையானது, வேளாண்மையினையும் பண்ணைகளையும் உரிய முறையில் ஊக்குவித்தது. அதாவது, இவைகள் சார்பாக நிகழ்த்தப்படும் சோதனைகளையும், கண்டுபிடிப்புகளையும் நடத்த உதவி செய்தது. மொத்தத்தில், இவை அனைத்தும், விளைச்சலைப் பெருக்குவதற்குப் பெரிதும் துணை செய்தன.

மேலும், வேறுசில காரணங்களினாலும், விளைச்சல் பெருகியது. அயல்நாடுகளிலிருந்து, அதிக விளைச்சலைக் கொடுக்கும், பயிர் வகைகள் இறக்குமதி செய்யப்பட்டுத் தீவிரமாகப் பயிரிடப்பட்டதாலும் மாதிரிப் பண்ணைகளை உருவாக்கி, அதன்வழியில் புதிய பண்ணைகள் உருவாக ஆதரவு அளிக்கப்பட்டதாலும், விவசாய-பண்ணைப் பொருள் கள் பெருகின.

நாடெங்கிலும் உருவான புதியபுதிய இரயில்பாதைகளும், கால் வாய்களும், மற்றும் கடல்வழிப் பாதைகளும், விளைச்சலைப் பெருக்கும் விளைநிலங்களையும், பண்ணைகளையும், உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகநிலையங்களோடு நெருக்கமாகப் பிணைத்தன. இதன் காரணமாக, விவசாயப் பொருள்களும், பண்ணைப் பொருள் களும் வர்த்தகப் பொருள்களாய் மாறின. இது விளைச்சலை மேலும் பெருக்குவதற்குத் தூண்டுகோலாயிருந்தது.

இவ்விதமாக, இந்த உற்பத்தி பெருக்கக் காலத்தின்போது அமெரிக்க ஐக்கிய நாட்டில் அதுவரை கண்டிராத அளவிற்குக் கோதுமை, சோளம், பார்லி, ஓட்ஸ், பருத்தி போன்ற, அடிப்படை பயிர்களின்விளைச்சல் பெருகியது. ஒரு சாதாரண குடியானவனின் தனிப்பட்ட விளைச்சல், உள்நாட்டுப்போருக்கு முன்பு இருந்த அளவினைவிட, இந்தக் காலத்தில் நான்கு மடங்காக உயர்ந்தது. கால்

நடைகள் வளர்க்கும் பண்ணைகள், பால், வெண்ணெய் உற்பத்திப் பண்ணைகள், இறைச்சி பதனிடும் பண்ணைகள் என எல்லாமே உற்பத்திசெய்யும் திறனில் பல மடங்கு பெருகின.

தொழிற்புரட்சியினல் விளைந்த பெருஞ்செல்வமானது, மேலும் வளர்ந்து மலையெனக்குவிய வேளாண்மைப் புரட்சியும் துணைசெய்தது. இன்னும் சொல்லப் போனல், இவ்விரண்டு புரட்சிகளுமே ஒன்றை ஒன்று சார்ந்து, வளர்ந்து, நாட்டின் செல்வத்தையும், உற்பத்தியையும் பெருக்கின. தொழில்-உழவு ஆகியவைகளிடையே நிலவிய சார்பு வாழ்க்கையானது, சில துறைகளில் மிகவும் வெளிப்படையாயிருந்தது. உதாரணமாக, நிலங்களில் விளையும் பருத்தியும், பண்ணைகளில் தயாராகும் கம்பளியும் இன்றி, இதுசார்பான தொழிற் சாலைகள் உருவாக முடியாது. இறைச்சி, பால்பொருள்கள் ஆகியவைகளைப் பக்குவப்படுத்தி டப்பாக்களில் அடைக்கும் தொழிற் சாலைகளுக்கு, பண்ணைகளில் வளர்க்கப்படும் கால்நடைகள் முக்கியம். பார்லியும், ஓட்ஸூம் இன்றி மதுவகைகள் இல்லை. தொழில் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள இலட்சக்கணக்கான மக்களுக்குப் பண்ணைகளில் விளையும் உணவுப்பொருள்கள் இன்றியமையாதவையாகும்.

இவ்விதமாக, அமெரிக்க வாழ்வில்-பொருளாதாரத்தில் பெரும் பொறுப்பும், பங்கும் கொண்டுள்ள வேளாண்மைக்கும், பண்ணைகளுக்கும், சில பிரச்னைகளும், சோதனைகளும், குறைகளும் தோன்றின.

**முதலாவது, சிறுபண்ணைகளின் தோற்றமாகும் :**

உள்நாட்டுப்போரின்போதும், புனரமைப்புக் காலத்திலும், ஏற்படுத்தப்பட்ட முற்போக்கான நிலவுரிமைச் சட்டங்கள், தெற்குப் பகுதிகளில், பரந்துவிரிந்து கிடந்த நிலங்களையும், பண்ணைகளையும் எண்ணற்ற அளவில் கூறுபோட்டு, வணிகர்கள், விவசாயிகள், வடபகுதிப் போர்வீரர்கள் காவலர்கள், போன்ருேர்க்கு வழங்கியது. இதன்காரணமாக, மிகப்பெரிய அளவில் பரந்துகிடந்த பண்ணைகளும், விளைநிலங்களும் சிறுசிறு துண்டுகளாகிவிட்டன. அத்துடன், நிலக்கிழாரின் எண்ணிக்கை சுருங்கி, நிலவுடைமை பெற்றவர்களின் எண்ணிக்கை பெருகியது. இவர்களுள் பலர், சொந்தமுறையில் பயிர்செய்ய இயலாத காரணங்களினல் நிலங்களைக் குத்தகைக்கு விட்டனர். நிலமில்லாதவர்களும், சாதாரண குடியானவர்களும், நிலங்களைக் குத்தகைக்கு எடுத்து, உழைத்து, பயிர்செய்து, விளைச்சலில் பங்கு பெற்றனர். இப்படிக் குத்தகைக்கு உழைக்கிற சிலரின் பொறுப்பற்ற சாகுபடி முறையினல், நிலம், சாரத்தை இழந்து வறண்டது. வறண்டுபோன நிலங்களைக், சத்துள்ளதாக்க நிலச்சொந்தகாரருக்கோ அதனைக் குத்தகைக்கு எடுத்தவருக்கோ பொருள் வசதியுமில்லை, அக்கறையும் இல்லை. முடிவில்

நிலம் வறண்டு, விளைச்சல் குறைய ஆரம்பித்தது. அதனுல் உழவுத் தொழிலில் ஈடுபட்டோர் வறுமையில் வாடலாயினர்.

**இரண்டாவது, விவசாயிகளின் தீராத பிரச்னைகள் :**

ஒருசில பயிர்கள்—குறிப்பாக (Cash Crops) முளையில் இருக்கும் போதே அதனுடைய விளைச்சலின் அளவை முன்கூட்டியே கணக்கிட்டு அவைகளை அடைமானமாகக் கொண்டு, அவைகளின்பேரில் கடன் வழங்கப்பட்டது. அதாவது, வங்கி நடத்துபவர்கள், சேமிப்பு கிடங்கு வைத்திருப்பவர்கள் முதலானோர், ஏழை விவசாயிகளுக்கு, விதை, ஏரு, விவசாயக் கருவிகள், தேவைப்பட்டால் ஆள்கள், பணம் என எல்லா வழிகளிலும் விளையப்போகும் பயிரின் அடைமானத்தின் பேரில் கடன் வழங்கினர். பொதுவாக வட்டிவீதம் அதிகமாயிருந்தது. எனினும், இவ்விதமாக வட்டிக்குக் கடன் கொடுப்பவர்கள் அதிகமாக இல்லை. இதன்காரணமாகக் கடன்கொடுக்க முன்வருபவர்கள் விதித்த கட்டுப்பாடுகள் அதிகமாயிருந்தன.

இவர்களிடம் கடன் வாங்குவதன் காரணமாக, விவசாயிகளுக்குப் பல சிக்கல்கள் தோன்றின. பருத்தியையும், புகையிலையையும், எப்போதும், எங்கேயும், நல்ல விலைக்கு விற்றுவிடமுடியும், என்கிற சூழ்நிலை அப்போது இருந்த காரணத்தினுல், கடன்கொடுக்க முன்வருகிறவர்கள் அப் பயிர் வகைகளின்மீதே கடன்கொடுக்க முன்வந்தனர். அவைகளைப் பயிரிடுவதையே இலாப நோக்கோடு வரவேற்றனர். அல்லது, அவைகளையே பயிரிடுமாறு கட்டாயப் படுத்தினர். இதன்காரணமாக ஒரே வகையான பயிர்களையே விளைவிக்க வேண்டிய கட்டாயத்திற்கும் நெருக்கடிக்கும், வசதியற்ற, வேறுவழியுமற்ற விவசாயிகள் ஆளானுர்கள். மாற்றுப்பயிர் முறைக்கு, ஆதரவும், ஊக்கமும் இல்லாத காரணத்தினுல், புகையிலை, பருத்தி போன்ற ஒரே வகையான பயிர்களை எல்லா இடங்களிலும் விளைவிக்கப்பட்டன. இதன்காரணமாக இவைகளின் விற்பனையில் தேக்கம் கண்டு, விலை சரிந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக நிலம் அதனுடைய சாரத்தை இழக்கலாயிற்று. இந் நிலையில் பெற்ற கடனைத் திருப்பித்தர இயலாத நிலையில், நிரந்தரக் கடனாளிகளாக விவசாயிகள் இருந்தனர். இரண்டாவதாக, பூச்சி அரிப்பு, புயல் வெள்ளம், வறட்சி எனப் பல காரணங்களினுல் எதிர்பார்த்த அளவிற்கு விளைச்சல் இல்லாத காலங்களில் வாங்கிய கடனை அடைக்க முடியாமல், அடுத்த விளைச்சலின்மீது நம்பிக்கை வைத்து, மேன், மேலும் அதிக வட்டிவீதத்திற்குக் கடன் வாங்கி, இறுதியில் நிலம் உள்பட எல்லாவற்றையும் இழந்து நின்றனர். பின்னர், தங்கள் சொந்த நிலங்களையே குத்தகைக்கு எடுத்துப் பயிர் செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாயினர்.

வேறொருவகையிலும் விவசாயிகள் சுரண்டப்பட்டு ஏழைகளாக்கப் பட்டனர். அமெரிக்கப் பண்ணைப்பொருள்கள் அயல்நாடுகளுக்கு, குறிப்பாக, ஐரோப்பிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. அமெரிக்காவைத் தவிர, கனடா, நியூசிலாந்து, பிரேசில், ருஷ்யா, ஆஸ்திரேலியா, அர்ஜென்டைன ஆகிய நாடுகளிலிருந்தும் பண்ணைப் பொருள்கள் ஐரோப்பிய நாடுகளில் இறக்குமதி செய்யப்பட்டன. எனவே, வியாபாரரீதியில் போட்டிகள் வளர்வதைத் தவிர்க்க முடியவில்லை. இதன்காரணமாக, அமெரிக்கப் பண்ணைப் பொருள்களின் விலையை, உற்பத்தி செய்தவர்கள் நிருணயம் செய்யமுடியவில்லை. மாறாக, வாங்குபவர்கள் நிருணயம் செய்தனர். அதேநேரத் அமெரிக்க விவசாயிகளுக்கு வேண்டிய கருவிகள் இயந்திரச் சாதனங்கள் ஆகியவைகளின் விலையை, விற்பவர்கள் நிருணயம் செய்தனர். எனவே, விவசாயிகள், அவர்கள் கேட்கிற விலைக்குத் தாங்கள் விளைவித்த பொருள்களைக் கொடுத்துவிட்டுத் தங்களுக்குத் தேவையான பொருள்களை அவர்கள் நிருணயிக்கும் விலைக்கு வாங்கிக் கொள்ளும் கட்டாயத்திற்கு ஆளானார்கள். சுருங்கச் சொல்லின், பாதுகாப்பில்லாத போட்டிகள் மிகுந்த இடங்களில் தங்களுடைய பொருள்களை மலிவாக விற்கவும் பாதுகாப்பும், கட்டுப்பாடுகளும், நிரம்பிய இடங்களில், தங்களுக்குத் தேவையான பொருள்களை வாங்கவும் வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானார்கள். விவசாயிகளின் குறைகளிலேயே மிகப் பெருங்குறை இதுவேயாகும்.

மேலும், விவசாய—பண்ணைப் பொருள்களுக்கு, வர்த்தகநிலையங் களில் நிலவும் தேவைகள் மதிப்பீடுகள் ஆகியவற்றை அறிந்து கொள்ளும் வாய்ப்போ வசதியோ இல்லாத நிலையில் விவசாயிகள், ஏற்கனவே தேக்கமுற்றுக் கிடக்கும் வர்த்தகநிலையங்களுக்காக மீண்டும், மீண்டும் தங்களுடைய விளைச்சலைத் தொடர்ந்து எடுத்துச் சென்று பெரும் நட்டத்திற்கு ஆளானார்கள்.

இந் நிலையில் தேக்கமும், விலைச்சரிவும் ஏற்பட்டு விவசாயிகள் அழிந்துகொண்டிருப்பதைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் அமெரிக் கப் பொருளாதாரச் சக்திகள், வேளாண்மைப் பொருள்களின் பெருக்கத்தினை மேன்மேலும் தூண்டிவிட்ட வண்ணமிருந்தன. இதன்காரணமாக, ஏற்கெனவே தேக்கமுற்றுக் கிடக்கும், வர்த்தக நிலையங்களில் விவசாயப் பொருள்கள் மேலும்மேலும் குவியலாயிற்று. இம்மாதிரியான நெருக்கடிகள், தொழிற்சாலைகளுக்கு நேருமேயானால் அவைகளைக் கட்டுப்படுத்தவும், நெறிபடுத்தவும், தேவையான வசதி களும், அரசின் ஆதரவும் தொழிற்சாலைகளுக்கு இருந்தன. இதற்கு காரணம், சட்டங்கள் இயற்றும், செயற்படுத்தும், ஆட்சி, நிருவாகம், ஆகிய துறைகளில் தொழிலதிபர்களின் ஆதிக்கமும், செல்வாக்கும் இருந்ததேயாகும். ஆனால், விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்கக் கூடிய வகையில் நிறுவனங்களும் இல்லை; அரசும் இல்லை. இந் நிலையில்

விவசாயிகளும், தங்களைத்தாங்களாகவே காத்துக்கொள்ளும் வசதியும், வழியும், சக்தியுமின்றி அல்லலுற்றுக் கிடந்தனர்.

இறுதியாக, விளைச்சல் பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லுவதிலும் பல தொல்லைகளை அவர்கள் அனுபவித்தனர். நாடெங்கிலும் இரயில்பாதைகள் போடப்பட்டு, அவைமூலம் பொருள்களை எளிதாக எடுத்துச் செல்ல வசதிகள் இருந்ததால், பெரும்பாலான விவசாயிகள் இரயில்போக்குவரத்தையே பெரிதும் நம்பியிருந்தனர். இரயில்பாதைகள், அப்போது தனிப் பட்டோரின் ஆதிக்கத்தில் இருந்து வந்ததால், கட்டணவீதங்கள் சலுகைகள் போன்றவைகள் சீராயில்லாமல், இடத்திற்கிடம் மாறுபட்டிருந்தன. இரயில்பாதைகள் மிகுந்திருந்த இடங்களில் சலுகைகள் அதிகமாகவும், கட்டணங்கள் குறைவாகவும் இருந்தன, ஆனால், போட்டிகள் இல்லாத இடங்களில் அமைந்த இரயில்பாதைகளில், இதற்கு நேர்மாறாக இருந்தது. இவ்விடங்களில் தொலைதூரக் கட்டணங்களைவிடக் குறுகிய தூரக் கட்டணங்களே அதிகமாயிருந்தன.

அதுமட்டுமல்லாமல், சேமிப்புக்கூடங்கள் இல்லாமற் போனதும், வர்த்தகத்தரகர்களின் மோசமான பேரமும், விவசாயிகளுக்கு மேலும் தொல்லையைக் கொடுத்து நஷ்டத்தையும் ஏற்படுத்தியது. சுருங்கச் சொல்லின் உழைப்பிற்கும், உற்பத்திக்கும் விவசாயி தனிப்பட்ட முறையில் பொறுப்பேற்றான். ஆனால், அவன் விளைவித்த பொருளை விற்பதற்கும், பங்கீட்டிற்கும் வேறு யார்யாரோ பொறுப்பேற்றார்கள். இதன்காரணமாக விவசாயிகள் நிரந்தரமாக ஏய்க்கப்பட்டனர்; ஏமாற்றப்பட்டனர்; ஏழைகளாய் ஆக்கப்பட்டனர்.

இவ்விதமாக எல்லா நெருக்கடிகளுக்கும், ஈடுகொடுத்து, ஆதரவற்று, சோர்வடைந்து, இருக்கிற விவசாயிகள் முடிவில் இயக்கப்பூர்வமாக இணைந்து செயற்பட ஆரம்பித்தனர்.

**கிராஞ்ச்** *(வேளாண்மையின் காப்பாளர்)* :

விவசாயிகளை ஆதரிக்கிற ஒரு தற்காப்பு அமைப்பே கிராஞ்ச் ஆகும். விவசாயிகளுக்கு நேருகிற பலவகையான தொல்லைகளிலிருந்தும் அவர்களைக் காத்தல் இதன் நோக்கமாகும். இதனை 1867ஆம் ஆண்டு ஆலிவர் எச் கெல்லி (Oliver H. Kelley) என்பவர், (அப்போது வாஷிங்டனில் இருந்த வேளாண்மைத்துறையில் குமாஸ்தாவாகப் பணியாற்றிக் கொண்டிருந்தார்) தோற்றுவித்தார். விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த இவரால் விவசாயிகள் படுகிற தொல்லைகளை நன்கு உணரமுடிந்தது. இவர் நாடு முழுவதும் சென்று விவசாயிகளின் நிலையினை நேரில் கண்டறிந்தார். விவசாயிகள் பொதுவாகத் தனிமைப்பட்டும், தொடர்பின்றியும், ஒருவரைவிட்டு

ஒருவர் ஒதுங்கியிருப்பதுவுமே அவர்களின் தொல்லைகளுக்கும், தோல்விகளுக்கும், தரித்திரத்திற்கும் காரணமாகும் என்கிற முடிவுக்கு இவர் வந்தார்.

இவ்விதமாக, சிதைந்து சிதறுண்டு போயிருக்கிற விவசாயிகளை ஒருங்கிணைக்கிற ஓர் அமைப்பு நாடு முழுவதும் இருத்தல் மிகவும் இன்றியமையாதது என்கிற முடிவில் "கிராஞ்சினை"த் தோற்றுவித்தார். விவசாயிகள் சகோதர உணர்வுடன், சமுதாய உறவுகளை வளர்த்துக் கொள்ளவும், அவர்தம் அறியாமையைப் போக்கி அறிவினைப் பெறவும் இவ்வியக்கம் உதவியது. மேலும், இயக்கப்பூர்வமாக ஒன்றுபடுத்தப் பட்ட விவசாயிகள், தங்களுக்குள்ள பொதுவான பிரச்னைகளைப் பகிர்ந்து கொள்ளவும், கூட்டாக இணைந்து, அப் பிரச்சினைகளுக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளவும் இந்த அமைப்பு பெரிதும் உதவும் என்று நம்பினர். அதோடுகூட, ஆங்காங்கே ஏற்படுத்தப்பட்டுள்ள கிராஞ்சுகள் மூலமாக அப் பகுதிவாழ் விவசாயக் குடும்பங்கள் ஒன்றுகூடி, ஒருவரையொருவர் புரிந்து கொண்டு, நட்பையும், உறவையும், ஒற்றுமையையும் வளர்த்துக் கொண்டு, விளையாட்டுகள், விழாக்கள் என நடத்திக்கொண்டு, மனமகிழ்வு பெறும் சமூகக் கூடமாக விளங்கும் என்றும் நம்பினர்,

மேலும், கிராஞ்சுகள் அறிவினை வளர்க்கிற கல்விக்கூடங்களாகவும் விளங்கும் என்றும் அவர் நம்பினர். அதாவது, வேளாண்மை தொடர்பான புதிய செய்திகள், சோதனைகள் கண்டுபிடிப்புகள், வர்த்தகநிலையங்களில் நிலவும் நிலவரங்கள் எனப் பிற செய்திகளும் இவ்வமைப்புகள்மூலம் பரவ வாய்ப்புகள் பிறக்கும் என நம்பினர். அதோடுகூட இச் சங்கங்களில் நூல்நிலையங்களை ஏற்படுத்தியும், சொற்பொழிவுகளை நிகழ்த்தியும் விவசாயிகளின் அறிவை வளர்த்து, அவர்களைத் தெளிவுபெறச் செய்யமுடியும் எனவும் நம்பினர்.

இவைகளின் அடிப்படையில், கிராஞ்சுகள் நாடெங்கிலும் தோற்றுவிக்கப்பட்டு நம்பிக்கையுடன் நல்ல முறையில் செயற்பட்டுக் கொண்டுவந்தன. இந் நிலையில் 1873ஆம் ஆண்டில் உருவான பொருளாதார மந்தநிலையானது பொதுவாக, கிராஞ்சுகளை மேலும் வலுவுடன் வளர்த்தன. இந்த கிராஞ்சுகளின் செயல்வேகமும், செல்வாக்கும் தென்பகுதிகளிலும், மேற்குப்பகுதிகளிலும் அதிக அளவில் இருந்தன. மினிசோட்டா: ஐவோவா, விஸ்கான்ஸின், இல்லினுயி, இன்டியானு, வடமேற்கில் மிஸிஸிபி, தெற்கில் கரோலினு ஆகிய இடங்களில் இவை மிகவும் பிரபலமாயிருந்தன.

கிராஞ்சுகள் விரைவிலேயே, வாங்குவோர்—நுகர்வோருக்கான கூட்டுறவு சங்கங்களைச் அமைத்துக்கொண்டன. வேளாண்மைக்கு வேண்டிய கருவிகளையும், பொருள்களையும், மற்றும் விவசாயிகளுக்கு

நாள்தோறும் தேவைப்படுகிற பொருள்களையும், உற்பத்திநிலையங்களிலிருந்து மொத்தமாக வாங்கி, இலாபநோக்கமின்றி சில்லறையில் இச் சங்கங்கள் விற்றன. அதுபோலவே தரகர்களினாலும், இரயில் பாதைகளினாலும் விளைந்த தொல்லைகளிலிருந்து விவசாயிகளைக் காக்கும், நோக்கத்தில் விளைச்சல் பொருள்களை மொத்தமாக விவசாயிகளிடமிருந்து வாங்கி, வணிகர்களுக்கும், வர்த்தகநிலையங்களுக்கும் அனுப்பிவைத்தன.

இவ்விதமாக, இக் கூட்டுறவுச்சங்கங்கள் விவசாயிகளுக்குப் பாதுகாப்பையும், ஆதரவையும் நல்லமுறையில் அளித்து வந்தன. எனினும், இக் கூட்டுறவுச்சங்கங்கள் எல்லாமே வெற்றியுடன் செயற்படவில்லை. மூலதனப்பற்றுக்குறை, பெரிய வர்த்தகநிலையங்களுடன் போட்டியிட முடியாமை, வணிகப்பயிற்சியின்மை, நிருவாகத் திறமையின்மை, வாங்குதல், விற்றல் ஆகியவைகளை முழு அளவில் செய்து கொள்ள முடியாமை போன்ற காரணங்களினால் இச் சங்கங்கள் தோல்வியுற்றன. மேலும் இரயில்கட்டணங்கள் வர்த்தகநிலையங்களின் விலைநிலவரங்கள், ஆகியவைகளைக் கட்டுப்படுத்தும் அளவிற்கு அதிகாரமும் வலிமையும் அற்றதாய் இருந்த காரணத்தினாலும் இச் சங்கங்கள் செயலற்றுப் போயின.

**கிராஞ்சுகள் அரசியலில் ஈடுபடுதல்**

விவசாயிகளின் முன்னேற்றக் கழகமாக கிராஞ்சுகள் செயற்படவேண்டுமென்கிற நோக்கத்தில் கெல்லி இதனைத் தோற்றுவித்தார் எனவே, கிராஞ்சுகளில் அரசியல்பேச்சுகளும், தலையீடுகளும் இல்லாமல் இப்பதையே அவர் விரும்பினர். ஆனால், காலப்போக்கில் கிராஞ்சுகள் அரசியலில் முழுமையாக ஈடுபடுவதைத் தடுக்க முடியவில்லை.

கிராஞ்சுகளில் கூடுபவர்களின் நோக்கம் எவ்வாறாயிருந்தாலும், அன்றாட நடவடிக்கைகள், நாட்டின்நடப்புகள் ஆகியவைகளைப் பற்றிய பேச்சுகள் எழும்போது, அரசியல் வழியே பேச்சுகளும் விவாதங்களும் திரும்புவதைத் தடை செய்ய முடியவில்லை. அதன் பின்னர், மாநில, மைய சட்டமன்றங்களில் உறுப்பினர்களாகி, கிராஞ்சுகளின் நடவடிக்கைளுக்கு, மேலும் ஊக்கமும், ஊட்டமும் அளிக்க வேண்டுமென்று உறுப்பினர்களில் சிலர் விரும்பினர். சங்கத்தின் நோக்கங்களுக்கும், நடவடிக்கைகளுக்கும் கட்டுபட்டவர்களைத் தேர்தல்களில் வேட்பாளர்களாக நிறுத்திவெற்றிபெறச் செய்து, சட்டமன்றங்களுக்கு இவர்கள் அனுப்பிவைக்கத் தொடங்கினர்

பின்னர் 1874ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில் கிராஞ்சுகள் மூன்றாவது அரசியல் கட்சியாக, பல்வேறு பெயர்களுடன் சீர்திருத்த

கட்சி, சர்வாதீன எதிர்ப்புக் கட்சி, சுயேச்சைகள் எனப் போட்டியிட்டு வெற்றி பெற்றன. இதன்காரணமாக மாநிலச் சட்டமன்றங்களில் கிராஞ்சுகளின் செல்வாக்கு ஓங்கி வளரலாயிற்று. இப்படியாக, தானுண்டு, தன் நிலம் உண்டு என்றிருந்த, விவசாயிகளும் அரசியலில் முழுமையாக ஈடுபட்டுதோடல்லாமல் தேசியத் தேர்த லிலும்பங்கேற்றது இதுவே முதல் தடவையாகும் என்பது குறிப்பிட தகுந்ததாகும்.

கிராஞ்சுகளின் கோரிக்கைகளை மதிக்கிற வகையில் இலினுயி, ஐவோவா, மினிசோட்டா, விஸ்கான்ஸின் ஆகிய மாநிலங்கள், இரயில் பாதைகள், சேமிப்புக்கிடங்குகள் ஆகியவைகளைக் கட்டுப்படுத்தும் வகையில் சட்டங்களை இயற்றின. ஆனால், இச் சட்டங்கள் வழக்கு மன்றங்களின் ஆய்வுக்கு அடிக்கடி ஆளாயின. இதன்காரணமாக கிராஞ்சு சட்டங்கள் நாளடைவில் நீக்கப்பட்டுவிட்டன.

அதோடுகூட கிராஞ்சுகளின் கூட்டுறவு, விநியோகமுறையில் ஏற்பட்ட தோல்வியாலும், அதிகாரமிக்க நிறுவனங்களின் எதிர்ப்புகள், போட்டிகள் ஆகியவைகளைச் சமாளிக்க முடியாமல் போனதாலும், முடிவில் செயலற்றுப்போனநிலையில் அவை மறைந்துவிட்டன.

கிராஞ்சுகள், தோல்வியுற்று மறைந்துபோனதால் ஆதரவற்றுப் போய்கிடக்கிற விவசாயிகள், வறட்சி, கடுமையான குளிர், கால்நடைகளின் அழிவு, கடன்வசதியின்மை, தானியங்களின் விலைச் சரிவு, தேக்கம், குத்தகை, அடைமானம், அதிக வட்டிக்கடன், ஆகியவை களின் காரணமாக மேலும் நசிந்துபோயினர் இந் நிலையில் விவசாயி களின் நலன்களைப் பெரறுப்புடனும், அக்கறையுடன் தொடர்ந்து காப்பதற்கு 1884ஆம் ஆண்டில் 'குடியானவர்களின் கூட்டமைப்பு,' (Farmers' Alliance Organization) ஒன்று உருவானது. இதனுடைய கொள்கைகளும், நடவடிக்கைகளும், அடிப்படையில் கிராஞ்சுகளை ஒத்திருந்தன. ஆனால், ஒரேயொரு வித்தியாசம். அதாவது இது தொடக்ககால முதலே, அரசியலில் ஈடுபடுவதைக் கொள்கையாகக் கொண்டிருந்தது. தரகர்கள், சேமிப்புக் கிடங்குகளை நடத்துபவர்கள், வங்கிகளை நடத்துபவர்கள், இரயில்பாதைகளை வைத்திருப்பவர்கள் ஆகியோர்மூலம் உருவாகிற இன்னல்களிலிருந்து விவசாயிகளைக் காப்பதற்கு அரசியல் ஆதரவும் ஈடுபாடும் மிகவும் அவசியம் எனக் கருதியது. மற்றப்படி, விவசாயக் குடும்பங்களிடையேநிலவவேண்டிய நட்பு, உறவு, ஒற்றுமை, விளையாட்டுகள், நூலகங்கள் ஆகியவைகளைக் குறித்து கிராஞ்சின் கொள்கைகளையே இதுவும் கொண்டிருந்தது.

மேலும், இந்த அமைப்பானது இரயில்பாதைகளை அரசு மேற் கொள்ளுதல் அல்லது அவைகளைக் கண்காணிக்கும் பொறுப்பினை யாவது அரசு மேற்கொள்ளுதல், செலவாணிப் பற்றாக்குறையை

நீக்குதல், சீரான வரிவிதிப்புக் கொள்கைகளை ஏற்படுத்துதல், தேசிய வங்கிகளை மூடுதல், வணிகச்சூதாட்டத்தை ஒழித்தல், தீர்வைகளைக் குறைத்தல் போன்றவைகளுக்காக அயராமல் போராடியது. இவைகளுக்கெல்லாம் உச்சமாக, நவீனமானதொரு திட்டத்தினையும் உருவாக்கியது. அது 'துணைக்கருவூலங்களை (Sub - Treasury) உருவாக்குதலேயாகும். இத் திட்டமானது, சேமிப்புக்கிடங்குகளை நாடெங்கிலும் அரசு ஏற்படுத்துதல் வேண்டுமென்றும், விவசாயிகள் தங்களுடைய அழுகாப்பொருள்களை அக்கிடங்குகளில் சேமித்து வைக்க அனுமதிக்கப்பட வேண்டுமென்றும், அவர்கள் சேமித்து வைக்கும் பொருள்களின்மீது, அன்றைய விலைநிலவரப்படி மதிப்பீடு செய்து, எண்பது விழுக்காட்டு அளவிற்குக் கடன் வழங்கவேண்டுமென்றும், பின்னர், விவசாயிகள் பொருள்களை விற்று முடித்த காலத்தில் கடனை அடைத்துவிட அனுமதிக்க வேண்டுமென்றும் கூறியது. இதனால் விவசாயிகள், அந்த நேரத்திய பொருளாதார நெருக்கடிகள் காரணமாக விளைச்சலை வந்த விலைக்கு விற்றுப் பெருத்த நஷ்டத்திற்கு ஆளாகி, அவதிப்படாமல், பொறுமையுடன் இருந்து விளைபொருளுக்கு நல்ல விலைகிடைக்கும்வரை காத்திருக்கும் வாய்ப்புகளைப் பெற முடியும் என நம்பியது. மேலும் குறைந்த வட்டிவீதத்தில் கடன் வசதி கிடைக்க வழியும் பிறக்கும் எனவும் நம்பியது. ஆனால், இத் திட்டத்தினை அப்போதைக்கு ஏற்றுக்கொள்ள முன்வராத அரசானது, இதனையே பின்னாளில் ஏற்றுக் கொள்வதைத் தவிர்க்க முடியவில்லை.

பாப்புலிஸம் : *(Populism)*

1891ஆம் ஆண்டில் பாப்புலிஸக் கட்சி தோன்றியது. இக் கட்சியானது விவசாயிகள், தொழிலாளிகள் ஆகியவர்களின் உரிமைகளைக் காக்கவும், அவர்களின் குறைகளைப் போக்கவும், நாட்டின் பொருளாதாரத்தில் ஆதிக்கம் கொண்டுள்ள முதலாளித்துவப்போக்கினை அடக்கவும் தோன்றியது.

இக் கட்சியானது, பல்வேறு கோரிக்கைகளைக் கொண்டிருந்தது. அரசு மேற்கொள்ள வேண்டிய புதிய பொறுப்புகளைப்பற்றியும், தனியார்த்துறைகளிடம் சிக்கிக்கொண்டிருக்கின்ற நாட்டின் பொருளாதாரச் சக்திகள் விடுபடவேண்டிய கட்டாயத்தினைப்பற்றியும் இதன் கோரிக்கைகளில் காணமுடிந்தது. மேலும் இரயில்பாதைகள், தொலைபேசி, தந்தி உள்ளிட்ட செய்தித்தொடர்புகள் அரசின் பொறுப்பில் இருத்தல் வேண்டுமென்றும், தனிப்பட்டவர்களின் ஆதிக்கத்தில் இருக்கும் வங்கிகளில் சேமித்துவைக்க விரும்பாதவர்கள், தங்களுடைய சேமிப்புகளை, அஞ்சல் அலுவகங்களில் சேமித்து வைக்க வழிசெய்ய வேண்டுமென்றும், அரசினால் வெளியிடப்படுகிற நெகிழும் தன்மையுள்ள செலாவணி ஏற்படவேண்டுமென்றும், வெள்ளிநாணயமுறை நிலவ வேண்டுமென்றும், அரசுக்கு நேரும்

செலவுகளுக்குச், செல்வந்தர்களிடமிருந்து அதிக அளவில் பணம் பெறும் வகையில் விகிதாச்சார வருமானவரிமுறை விதிக்கப்படல் வேண்டுமென்றும், அரசு, சேமிப்புக்கிடங்குகளையும் துணைக் கருவூலங் களையும் நிறுவுதல் வேண்டுமென்றும், அயலவர்க்கு நிலம் வழங்கப்படல் வேண்டுமென்றும் இக் கட்சி கூறியது.

இக் கட்சியில் யூனியன் தொழிற் கட்சிகள், பெண்வாக்குரிமையை ஆதரிப்பவர்கள், சோஷியலிஸ்டுகள், வெள்ளிநாணயமுறையை ஆதரிப்பவர்கள் எனப் பல்வேறு கொள்கைகளைக் கொண்டவர்களும் இருந்தனர். மொத்தத்தில் சாதாரண மக்களின் நலன்களைக் காக்கின்ற ஒரு கட்சியாக இது விளங்கியது.

1892ஆம் ஆண்டுத் தேர்தலில் இக் கட்சி தீவிரமாகப் பங்கு பெற்றது.

உரிமைபெற்ற முதலாளித்துவக்கும்பலை ஆட்சியிலிருந்து நீக்கும், அவர்களின் ஆதிக்கத்தினுல் விளைந்த சமுதாயக் கொடுமைகளைப் போக்கும், சமுதாயநீதியினை நிலைப்படுத்தும், சாதாரண மக்களின் கைகளுக்கு ஆட்சிப் பொறுப்புகளை மாற்றும் நோக்கத்துடன் தேர்தலில் தீவிரமாக இறங்கியது. அதன் வேட்பாளரான ஜெனரல் ஜேம்ஸ் பி வீவர் (James B. Weaver) இரண்டு மில்லியன் ஓட்டுகள் பெற்ருர். ஆனுல், தேர்தலில் வெற்றிபெறவில்லை.

பாப்புலிஸக் கட்சியானது, அடுத்த சில ஆண்டுகளில் காட்டுத் தீயென, ஆவேசத்தோடு நாட்டின் எல்லா பகுதிகளிலும் பரவியது. அதன் தலைவர்களும், சொற்பொழிவாளர்களும், உரிமையற்று, சுரண்டப்பட்டுக் கிடக்கிற விவசாயிகள் நசிந்துபோய்க் கிடப்பதற்குக் காரணமாய் இருந்தவர்களை வெகுவாகச் சாடினர்.

'அமெரிக்க நிதிக்கு உறைவிடமான, வால்தெரு, நாட்டை விலைக்கு வாங்கிக்கொண்டுவிட்டது. எனவே இந்த அரசு இனி மக்களுக்காக, மக்கள் நடத்தும், மக்கள் அரசு அன்று ; வால்தெருவிற்காக வால் தெருக்காரர்கள் நடத்தும், வால் தெருவின் அரசு இது' என்றும், 'நம் சட்டங்களை இயற்றும் நிறுவனம், அயோக்கியர்களுக்குப் பட்டாடை களையும், யோக்கியர்களுக்கு கந்தல்களையும் அளிக்கிறது' என்று இக் கட்சியினைச் சேர்ந்த மேரி எல்லன் லீஸ் என்பவள் பொரிந்து தள்ளினுள். இவளது ஆவேசமிக்க சொற்பொழிவு, சமுதாய அநீதி களையும் தீமைகளையும் அறவே ஒழித்துக்கட்ட மக்களைக் கொதித்து எழச்செய்தது.

அடுத்ததாக, இக்னேஷியஸ் டானெலி (Ignatius Donnelly) என்பவர் இக் கட்சியைச் சேர்ந்த சீர்திருத்தவாதிகளில் முதன்மை யானவர். இவர் ஆதரிக்காத சீர்திருத்தங்கள் இல்லை. அரசியல், சமுதாயம், பொருளாதாரம் என எல்லாவற்றிலும் சீர்திருத்தங்களை விரும்பியவர். இவர் பாப்புலிஸக்கட்சி வளர

பெரிதும் பாடுபட்டார்; தம்முடைய பொருள்பொதிந்த நகைச்சுவை மிக்கப் பேச்சுகளின் மூலம் மக்களைக் கவர்ந்து பாப்புலிஸக் கட்சிக்கு ஆதரவினைத் தேடினர்.

தென்கரோலினவைச் சேர்ந்த டில்மான் (Tillman) என்பவர் சரியான தீவிரவாதி. இவர் செனடர் பதவிக்காகத் தேர்தலில் போட்டியிட்டபோது, ஒரு தேர்தல்கூட்டத்தில் அப்போதையக் குடியரசுத் தலைவராயிருந்த கிளீவ்லண்டினைப் பல வகையில் பழித்து, பின்னர், "என்னை வாஷிங்டனுக்கு அனுப்பி வையுங்கள். என்னுடைய கவர்கோலினை அந்த கிளீவ்லண்டினுடைய கிழட்டுவிலாவில் குத்தி நிறுத்துகிறேன்' என்று ஆவேசமாகக் கூறினர்.

இவ்விதமாக, பாப்புலிஸக் கட்சியின் தலைவர்கள், ஆதரவாளர்கள் அனைவரும் கொழுந்துவிட்டு எரியும் தீப்பிழம்புகளாயிருந்தனர். கிளீவ்லண்டு, இரண்டாவதுமுறை, குடியரசுத் தலைவராயிருந்தபோது, தோன்றிய பொருளாதாரக் குழப்பங்கள் உச்சநிலையைத் தொட்டுக் கொண்டிருந்தன; பெரியபெரிய வியாபார நிலையங்கள் செயலற்றுப் போயின; வங்கிகள் நசிந்து போயின. தொழிற்சாலைகள் மூடப்பட்டன. இப் பொருளாதாரப் புயலால் தாக்குண்டு மக்கள் நசுங்கிப் போயினர். இவ்விதமாக, நாளுக்குநாள் காப்புநடவடிக்கைகள் ஏதுமின்றி விடப்பட்ட மக்களின் நிலைமை மோசமாகிக் கொண்டு வந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக நாணயச் செலாவணிப் பிரச்னையும் மக்களை வாட்டியது.

இந் நிலையில் 1896ஆம் ஆண்டுத் தேர்தல் நடைப்பெற்றது. பாப்புலிஸக் கட்சியும், தேர்தலில் போட்டியிட்டது. வெள்ளிநாணய முறைச் செயற்பட வேண்டுமென்கிற, அப்போதைய பிரச்னையையே தேர்தல் கொள்கையாக மேற்கொண்டது. வில்லியம் ஜென்னிங் பிரைன் (William Jenning Bryn) என்பவரை ஆதரித்தது. இவரே குடியரசுக்கட்சியின் வேட்பாளராயும் இருந்தார். இத் தேர்தலில் ரிப்பப்ளிக்கன்கட்சியின் வேட்பாளராய் இருந்த மெக்கன்லி என்பவரே தேர்ந்தெடுக்கப்பட்டார். பாப்புலிஸக்கட்சியின் ஆதரவாளரும், குடியரசுக்கட்சியின் வேட்பாளருமான பிரைன் தோல்வியுற்றூர்.

## மதிப்பீடு

தேசியப் பிரச்னைகளையும், கொள்கைகளையும், சீர்திருத்தங்களையும், மக்கள்முன்வைத்துப், வளர்ந்து வந்த இந்தப் பாப்புலிஸ இயக்கத்திற்குத் தேர்தல்களில் நேர்ந்த தோல்விகள் பெரிய சரிவினை உண்டாக்கியது. அதோடுகூட இவ்வியக்கமானது, அமெரிக்க அரசியல் - சமூகவாழ்வில் நிரந்தரமாகச் செயற்படவில்லை என்ற போதிலும் மேலும் அது செயற்பட்ட காலத்தில்கூட அதன் கோரிக்கை

கள் எடுபடவில்லை என்றபோதிலும் அஃது அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் முக்கிய இடம் பெறுகிறது.

இவ்வியக்கமானது, அமெரிக்கவாழ்வில் காலப்போக்கில் மலிந்துவிட்ட அரசியல், பொருளாதார, சமுதாயக் கொடுமைகளையும் அநீதிகளையும் படம்பிடித்துக் காட்டியது. அமெரிக்க மக்களிடையே, இவ்வியக்கம் தோற்றுவித்த விழிப்புணர்வானது பல சீர்திருத்தங்களுக்கே காரணமாயிற்று.

முதலாவதாக, ஒரு சில தனிப்பட்டவர்களின் ஆதிக்கத்தில், கட்டுப்பாட்டில் சிக்கிக்கிடந்த அமெரிக்கப் பொருளாதாரப் போக்குகளும், முறைகளும் உடனடியாக விடுவிக்கப்பட்டு, எல்லாருக்கும் பொதுவாகப் பயன்தரக்கூடிய வகையில் அவைகளில் திருத்தங்கள் செய்யப்படல் வேண்டும் என அனைவரையும் உணரச்செய்தது.

இரண்டாவதாக, உள்நாட்டுப்போருக்குப்பின், ஜனநாயக வழிமுறைகள் குறித்தும், நடைமுறையில் அதற்கு நேர்ந்துவிட்ட துரதிருஷ்டத்தினைப்பற்றியும், அதில் மண்டிவிட்ட ஊழல்களைப் பற்றியும், முதன்முறையாக மக்களுக்குத் தெளிவாகவும் புரியும்படியும் எடுத்துக்காட்டி, ஆவன செய்வதற்கு அவர்களைத் தூண்டியது.

மூன்றாவதாக, அமெரிக்க அரசியலில், அவ்வப்போது தோன்றி மறைந்த மற்ற மூன்றாவது கட்சிகளைப்போல (Third Party) இவ்வியக்கமும் பின்னாளில் வரவிருக்கின்ற சீர்திருத்தங்கள் பலவற்றினை முன்கூட்டியே சொல்லி அவற்றிற்காகப் போராடியது. எந்தெந்த சீர்திருத்தங்களுக்கெல்லாம் இவ்வியக்கம் போராடியதோ, அவை எல்லாம் அப்போதைக்கு மறுக்கப்பட்டபோதிலும், பின்னாளில் அவை ஏற்றுக்கொள்ளப்பட்டன. இவ்வகையில் இவ்வியக்கத்தின் தீர்க்கதரிசனத்தை மக்கள் பின்னாளில் உணர வாய்ப்புக் கிடைத்தது.

மொத்தத்தில் அமெரிக்க ஜனநாயக வழிமுறைகள் குறைகளைக் களைந்த நிலையில் ஆரோக்கியமாக வளரவும், பலனளிக்கவும், பொருளாதாரப்போக்குகள், தனியார்த்துறையிலிருந்து விடுபட்டு, எல்லோருக்கும் உதவவும், சமுதாயச் சீர்திருத்தங்கள் தோன்றவும் இவ்வியக்கம், வெகுவாகப் பாடுபட்டது.

# 23. அமெரிக்கா உலக வல்லரசாதல்

அமெரிக்க ஐக்கிய நாடு தனது தனித்திருத்தல் கொள்கையினை, உள்நாட்டுப்போர் முடிந்த பிறகு, சில ஆண்டுகள் பின்பற்றி வந்தது. அப்படித் தனித்திருந்த சில ஆண்டுகளில் பல சக்திகளின் விளைவாக நாட்டினுள் மகத்தான தொழில்முன்னேற்றம் ஏற்பட்டது ; அத்துடன் அமெரிக்காவை ஓர் உலக வல்லரசுநாடாக மாற்றுவதற்கான சக்திகளும் ஒருங்கே இயங்கின. அமெரிக்க மக்களும் படிப்படியாக உள்நாட்டு நிகழ்ச்சிகளில் அதிக ஆர்வங்கொண்டிருந்ததுபோல வெளிநாட்டு நிகழ்ச்சிகளிலும் மிகுந்த ஆர்வங் கொள்ளலாயினர். இத்தகைய மாற்றத்தால் பல விளைவுகள் ஏற்பட்டன. அவற்றுள் சிறப்பானவை, (1) வல்லரசுக் கொள்கையைப் பின்பற்றலாமா கூடாதா என்பதுபற்றி அரசியல் கட்சிகளிடையே வாதம் எழல், (2) சில பிற நாடுகளோடு உறவு நிலை முறிந்து போர்மூளல், (3) புதியதாகப் பெற்ற நிலப் பகுதிகளை எப்படி ஆட்சி செய்வது என்பதுபற்றி அரசியலமைப்பின் அடிப்படையில் எழுந்த சிக்கல் ஆகியவைகளாம்.

உள்நாட்டுப்போரையடுத்த முப்பதாண்டுகளில் சிறப்பான வெளி நாட்டுக் கொள்கை ஒன்றினை அமெரிக்க ஐக்கிய நாடு பின்பற்றவில்லை. அப்படியே வெளிநாடுகளோடு ஏதேனும் தொடர்பு இருந்தாலும். அது தற்செயலாக ஏற்பட்ட தொடர்பேயாகும். அடிமைமுறைமீதான சிக்கலைத் தீர்ப்பதிலும், புனரமைப்புத் திட்டங்களைச் செயலாக்குவதிலும், தொலை மேற்குப் பகுதியில் குடியேற்றங்களை நிறுவுவதிலும், தொழிற்சாலைகளை அமைப்பதிலும் நகரங்களை நிருமாணிப்பதிலும் மக்களுடைய கவனம் செலுத்தப் பட்டது. சுருக்கமாகச் சொன்னால் மக்கள் உள்நாட்டு முன்னேற்றத்தில் முழு மூச்சாக ஈடுபட்டிருந்தனர்.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிவரை மக்கள் ஐரோப்பிய நடவடிக்கைகளில் ஆர்வங்கொள்ளாமல் இருந்தனர். ஆனால், அந்

நூற்றுண்டு முடிவதற்குள்ளாகத் தென்அமெரிக்கா வோடும், தொலை கிழக்கு (Far East) நாடுகளோடும் அமெரிக்க உறவு கொள்ள வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. அதுமுதல் அமெரிக்கா ஒரு வல்லரசுநாடாக உலகஅரங்கில் திகழத்துவங்கியது. உலகின் பிற பகுதிகளில் நடக்கும் நிகழ்ச்சிகள் அமெரிக்க மக்களைப் பெரிதும் பாதிக்கலாயின.

## தனித்திருத்தல் கொள்கையின் முடிவுக்கான காரணங்கள்

அமெரிக்க ஐக்கிய நாடு வெளியுலகு நிகழ்ச்சிகளில் ஈடுபடுவதை அமெரிக்க மக்கள் சிலர் எதிர்த்தனர். அமெரிக்கா தொன்று தொட்டுக் கடைப்பிடித்துவரும் கொள்கைக்கு முரணாக உள்ளது என்றும் வாதிட்டனர். தனிப்பட்ட வகையில் குடியரசுத் தலைவர் களும், வெளிநாட்டுறவுச் செயலாளர்களும் அமெரிக்காவை ஐரோப்பிய - ஆசிய நிகழ்ச்சிகளில் ஈடுபடுத்தினர் என்றும் ஒரு சில அரசியல்வாதிகள் குற்றஞ்சாட்டினர். ஆனால் வரலாற்றுப் பின்னணியில் நோக்கினோமானால், தனித்திருத்தல் கொள்கையினைக் கைவிடுவதற்கான காரணத்தைப் பொருளாதாரமாற்றத்தின் அடிப் படையில் காணலாம். வேகமாக முன்னேறிய மேற்கத்திய நாகரிகம் தனித்திருத்தல் கொள்கையை நடைமுறைக்கு ஒவ்வாத கொள்கை யெனத் தெளிவாகச் சுட்டிக்காட்டியது. தொழிற்றுறை விஞ்ஞானத்தில் ஏற்பட்ட வளர்ச்சியால் உலகின் பல பகுதிகள் பின்னிப்பிணைக்கப்படலாயின; ஒன்றையொன்று சார்ந்து வாழும் நிலையும் உருவாயிற்று. இப்பொதுவான மாறுதலுக்கு அமெரிக்கா மட்டும் விதிவிலக்காக இருக்க முடியவில்லை. இம் மாறுதலே பின்னர் ஒருவகையான உலக ஒருமைப்பாட்டிற்கு வழிவகுத்தது.

முன்பு புதிய உலகில், பேரரசுக் கொள்கையைப் பின்பற்றிய ஐரோப்பிய நாடுகள் குடியேற்றங்களை நிறுவியது போலவே, பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் உலக நாடுகள் அனைத்தும் மூலப்பொருள்களுக்காகவும், செய்பொருள்களை விற்கச் சந்தைகளுக்காகவும் புதியதொரு பேரரசுக் கொள்கையைப் பின்பற்ற லாயின. கிரேட் பிரிட்டன் நீண்ட இடைவெளிக்குப் பிறகு மீண்டும் தனது பேரரசினை வலுப்படுத்த முனைந்தது. பிரான்சு, ஆப்பிரிக்காவில் குடியேற்றங்களை நிறுவுவதில் வெற்றிகண்டது. ஜெர்மனி ஐரோப்பாவில் வலிமை மிக்க நாடான பிறகு, பிற குடியேற்ற நாடு களைக் கைப்பற்றத் திட்டமிட்டது. ஜப்பான் வியத்தகு முறையில் சீனவை 1895-ல் தோற்கடித்து, தொலைக் கிழக்கில் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டிற்று. ஆனல், புதிய உலகில்மட்டும் ஐரோப்பியர்களைப் புகவொட்டாதபடி மன்ரோ கோட்பாடு தடுத்து நிறுத்தியது. இருப்பினும் தென்அமெரிக்கால் வடஅமெரிக்கா

செல்வந்தர்களும், ஐரோப்பியப் பெரு வணிகர்களும் முதலீடு செய்து பெரும் ஊதியம் பெற்று வந்தனர். ஐரோப்பிய- ஆப்பிரிக்க நிகழ்ச்சிகளில் விருப்பு — வெறுப்பற்ற நாடாக இருந்த அமெரிக்க ஐக்கிய நாடு, எப்படியோ தொலைகிழக்கு நாடுகளின் நிகழ்ச்சிகளில் ஆர்வங் கொள்ளலாயிற்று.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் அமெரிக்காவின் தொழில்வளமும், விவசாயவளமும் வரலாற்றில் முதன்முறையாக ஓர் உயர்ந்த அளவுக்குப் பெருகியிருந்தன. மேற்குப்பகுதி முழுவதையும் மக்கள் ஆராய்ந்து, குடியேறி, சிறந்த முறையில் சீர் திருத்தியமைத்திருந்தனர். குடியானவர்கள் மேன்மேலும் புதிய பகுதிகளைப் பெறுவதற்கு முடியாதவ்கையில் எல்லாப் பகுதிகளிலும் விவசாயம் செய்யப்பட்டு வந்தது. தொழிற்சாலைகளும் பெருமளவில் வளர்ச்சியுற்று உள்நாட்டுத் தேவைகளனைத்தையும் பூர்த்தி செய்தன. முதலீடு செய்பவர்களிடத்தும் நிறைய முதல் தேங்கிக் கிடந்தது. அமெரிக்கச் செய்பொருள்களை விற்கவும், அமெரிக்கநிதியைப் பல தொழில்களில் முதலீடு செய்யவும் வெளி நாடுகளில் நல்ல வாய்ப் பிருப்பதனை அமெரிக்கர் உணர்ந்தனர். கூட்டாட்சி அரசும் காப்பு வரிகளை விதித்து அமெரிக்கவர்த்தகத்திற்குச் சிறந்த பாதுகாப்பை யளித்தது. ஆகையால், 1880—1900 ஆகிய ஆண்டுகளுக்கிடையே அமெரிக்கா ஏற்றுமதி செய்த பொருள்களின் மதிப்பு 835 மில்லியன் டாலரிலிருந்து 1,400 மில்லியன் டாலராக உயர்ந்தது.

தனித்திருத்தல் கொள்கையினை வெளிநாட்டுறவில் பின்பற்றியதன் விளைவாக அமெரிக்கா பாதுகாப்பற்ற நிலையிலிருப்பதாக ஓர் உணர்வு பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் தோன்றிற்று. அந் நூற்றுண்டு முழுவதும் அட்லாண்டிக் பெருங்கடலைப் பிரிட்டன் கட்டுப்படுத்தியது. பசிபிக்பெருங்கடலில் எந்த நாடும் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டாதிருந்தமையால் அமெரிக்கா அப் பக்கம் திரும்பியது. 1811ஆம் ஆண்டுப் போருக்குப் பிறகு அமெரிக்கா விற்கும் பிரிட்டனுக்குமிடையே நல்லுறவு நிலவி வந்தது. ஆனல் பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் ஜெர்மனியும் ஜப்பானும் வலிமைமிக்க நாடுகளாக வளர்ந்து, சிறந்த கப்பற் படையுடன் பெருங்கடல்களில் நகர ஆரம்பித்ததும் ஐரோப்பாவின் சக்திச் சமநிலை பாதிக்கப்பட்டது. இதனைக் கண்ட அமெரிக்க ஐக்கிய நாடும் அச்சமடைந்தது.

## மெய்ம்மை காட்டுஅமைவு நோக்கத்திற்கு ஒரு புதிய விளக்கம்

**(A New vision of Manifest Destiny)**

மெய்ம்மை காட்டு அமைவு நோக்கத்திற்கு ஒரு புதிய விளக்கம் கண்ட ஒரு சில செல்வாக்கு மிகுந்த அரசியல்வாதிகள், அமெரிக்கப்

பேரரசு ஒன்றினை நிறுவ வேண்டுமென வற்புறுத்தலாயினர். சார்லஸ் டார்வின் ஆய்ந்து நிறுவிய உயிரினத் தோற்றக்கொள்கையினாலும், ருட்யார்டு கிப்ளிங் (Rudyard Kipling) போன்ற பேரரசுக் கொள்கையில் ஈடுபாடு கொண்ட எழுத்தாளர்களின் நூல்களாலும் ஊக்கம்பெற்ற அமெரிக்கர், தங்கள் நாடு உலக அரங்கில் தலைமை இடத்தை அடைய வேண்டுமெனப் பேரவா கொண்டனர். அவர்களுள் தியோடர் ரூஸ்வெல்ட், மசாசூசெட்ஸ் மாநிலத்தின் செனட் சபை உறுப்பினரான ஹென்றி கேபட் லாட்ஜ் (Henry Cabot Lodge), இந்தியானா மாநிலத்தின் செனட் சபை உறுப்பினரான ஆல்பர்ட் பீவரிட்ஜ் (Albert J. Beveridge) ஆகியோர் பேரரசுக் கொள்கைபற்றி அடிப்படையான தனிக்கருத்துப்போக்குடையவர்களாகச் சிறந்து விளங்கினர். அவர்கள், பேரரசுக் கொள்கையினைச் செயலாக்க முதல் நிலையாகக் கப்பற்படைத்தளங்களை உலகின் பல பகுதிகளிலும் நிறுவ வேண்டுமெனக் கூறிவந்தனர். இவ்வகையில் பொருளாதாரத் துணைக் கூறுகளைக் காட்டிலும் போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்த நோக்கங்களுக்காகவே அமெரிக்க ஐக்கிய நாடு தனது பேரரசுக் கொள்கையை உருவாக்கியது எனலாம்.

கடற்படைத் தளபதியும்,வரலாற்றாசிரியருமான ஆல்பிரட் தேயர் மேஹன் (Alfred Thayer Mahan) கடற்படையின் இன்றியமையாமை பற்றியும் அதனை விரிவுபடுத்தும் திட்டங்கள்பற்றியும், பல கட்டுரைகளையும் நூல்களையும் எழுதி வெளியிட்டிருந்தார். பிரிட்டிஷ் பேரரசின் வளர்ச்சிக்கும், வாணிகப் பெருக்கத்திற்கும், செல்வச் செழிப்புக்கும் பெருந்துணையாய் இருந்தது அந் நாட்டின் கப்பற்படையே என மேஹன் எடுத்துக் கூறினார். பிரிட்டன் வலிமை பொருந்திய கப்பற்படையைப் பெற்றிருந்தமையால், பிரிட்டிஷ் வணிகர்கள் துணிவுடன் உலகின் பல பகுதிகளுக்குச் சென்று வாணிக நிலையங்களை நிறுவியதோடல்லாமல், அப் பகுதிகளைக் கைப்பற்றி பிரிட்டிஷ் பேரரசினை ஏற்படுத்துவதிலும் வெற்றி கண்டனர். பிரிட்டனைப்போல அமெரிக்க ஐக்கிய நாடும் வலிமைமிக்க கப்பற்படையை உருவாக்க வேண்டுமென மேஹன் சொன்னார். பிரிட்டனுக்குப் போட்டியாக, அக் கப்பற்படை அமையாவிட்டாலும், ஸ்பெயின், ஜெர்மனி ஆகிய நாடுகளின் கப்பற்படைகளைவிடச் சிறப்புள்ளதாக அமெரிக்கக் கப்பற்படை அமையவேண்டும் என்றும் மேஹன் வலியுறுத்தினார். அவருடைய கருத்துகள் நாளாவட்டத்தில் பலருடைய கவனத்தையும் கவர்ந்தன. அமெரிக்கா சீரும் சிறப்பும் மிக்க நாடாகத் திகழ வேண்டுமானால் வெளிநாட்டு வாணிகம் மேன்மேலும் பெருக வேண்டுமென்றும், அதற்கு வெளிநாடுகளில் மேலும் பல வாணிக நிலையங்கள் ஏற்படல் வேண்டுமென்றும், அவ்வாணிக நிலையங்களைப் பாதுகாத்திடச் சிறந்த கப்பற்படை இன்றியமையாததென்றும் மக்கள் உணர ஆரம்பித்தனர்.


பசிபிக் பெருங்கடலில்
அமெரிக்கா (1890-1900)
ரஷ்யப் பேரரசு
அலாஸ்கா
கனடா
அமெரிக்கா
அலூசியன் தீவு (அ)
மங்கோலியா
ஜப்பான்
சீனா
ஹவாய்த் தீவு (அ)
வேக் தீவு (அ)
ஜான்ஸ்டன் தீவு (அ)
குவாம் (அ)
மார்ஷல் தீவு (அ)
கரோலின் தீவுகள் (அ)
பேக்கர் தீவு (அ)
சமோவா தீவு (அ)

அமெரிக்கா வலிமை குன்றிய நாடாக இருப்பதைக் கண்ட காங்கிரஸ் 1881-லிருந்து புதிய கப்பல்கள் கட்டுவதற்காக நிறைய நிதி ஒதுக்கலாயிற்று. அமெரிக்கக் கப்பற்படை விரைவில் விரிவாக்கப்பட்டு நவீனமானதாகவும் மாற்றப்பட்டது. எஃகினால் செய்யப்பட்ட சுழல்விசிறிகளைக் கொண்ட போர்க்கப்பல்கள் நீராவிச் சக்தியால் இயங்கலாயின. அமெரிக்கக் கப்பற்படை முதலில் நாட்டின் கரையோரங்களைப் பாதுகாப்பதற்காக வலுப்படுத்தப் பட்டது; பின்னர், பெருங்கடலில் எதிரிகளைத் தாக்குமளவுக்கு உரம் பெற்றதாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் அமெரிக்காவின் கப்பற்படை வலிமையில் பிரிட்டன், ஜெர்மனி ஆகிய இருநாடுகளுக்கு அடுத்தபடியாகச் சிறப்புடன் விளங்கிற்று. அமெரிக்கக் கப்பற்படையின் வளர்ச்சி, அமெரிக்காவின் வெளிநாட்டுக் கொள்கையை நிருணயிப்பதில் பெரும் மாற்றங்களைக் கொண்டு வந்தது.

## அலாஸ்காவைப் பெறுதல்

ஆன்ட்ரூ ஜான்சன் குடியரசுத் தலைவராகப் பணியாற்றிய சமயத்தில், அமெரிக்கா கடல்கடந்த நாடுகளில் தனது ஆதிக்கத்தை நிறுவுவதற்கான முயற்சியில் ஈடுபட்டது. அச் சமயம் வெளி நாட்டுறவுச் செயலாளராக இருந்தவர் சீவர்டு (Seward) என்பவராவார். மெய்ம்மைக் காட்டு அமைவு நோக்கக் கோட்பாட்டில் பற்றுக் கொண்டிருந்த சீவர்டு, அமெரிக்காவின் ஆதிக்கத்தைப் பசிபிக் பெருங் கடலுக்கு அப்பாலுள்ள இடங்களில் நிறுவ விரும்பினார். 1867-ல் சீவர்டு, ருஷ்யாவோடு ஓர் உடன்படிக்கையை ஏற்பாடு செய்து அலாஸ்காவை 72,00,000 (7.2 மில்லியன்) டாலருக்கு வாங்கினார். அதே ஆண்டில் பசிபிக் பெருங்கடலிலிருந்த மிட்வே தீவுகளையும் (Midway Islands) கைப்பற்றினார். அமெரிக்காவின் ஆதிக்கத்தைப் பெருக்குவதில் சீவர்டு காட்டிய ஆர்வத்தை அப்பொழுது மக்கள் புரிந்து கொள்ளவில்லை; ஆதரவும் தரவில்லை. ஏனெனில், அச் சமயம் மக்கள் புனரமைப்புப் பணியில் மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். சீவர்டு முயற்சிசெய்து பெற்ற நிலப்பகுதிகளின் முக்கியத்துவத்தைப் பின்வந்த தலைமுறையினர் நன்குணர்ந்தனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் நாட்டின் கப்பற் படையை வலுப்படுத்த வேண்டுமென வலியுறுத்தப்பட்டமையால், அமெரிக்கா, பசிபிக் பெருங்கடலில் சில கடற்படைத்தளங்களை நிறுவ முற்பட்டது. 1878ஆம் ஆண்டு சமோவா (Samoa) அரசுடன் அமெரிக்க ஐக்கிய நாடு ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டதன் விளைவாகப் பசிபிக் பெருங்கடலில் பேகோ பேகோ (Pago Pago) என்னுமிடத்தில் கப்பற்படைத்தளம் ஒன்றினை அமைக்க உரிமை

பெற்றது. இதனையடுத்து உடனே, ஜெர்மனியும் பிரிட்டனும் சமோவாவில் தத்தம் ஆதிக்கத்தை நிறுவ முனைந்தன. இவ்வகையில் மூன்று நாடுகள் சமோவாவைக் கைப்பற்றத் திட்டமிட்டமையால் ஒரு பெரும்போர் மூளுமென எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், நற்பயனாக மூன்று நாடுகளும் தங்களுக்குள் செய்து கொண்ட ஓர் ஒப்பந்தத்தின் விளைவாக, அப் பன்னாட்டுச் சிக்கல் தீர்த்துவைக்கப் பட்டது. அந்த ஒப்பந்தத்தின்படி மூன்று நாடுகளும் இணைந்து ஒரு கூட்டாட்சியைச் சமோவாவில் நிறுவ ஒப்புக்கொள்ளப்பட்டது. அதேநேரத்தில் பேகோபேகோவில் அமெரிக்கா பெற்ற உரிமைகளைப் பிற இரு நாடுகளும் உறுதிப்படுத்தின. இவ்வகையில் வெளிநாட்டுக் கொள்கையில் மெய்ம்மைக் காட்டுஅமைவுநோக்கக் கோட்பாட்டிற்குப் புதிய விளக்கம் காணும் முயற்சியில் அமெரிக்க ஐக்கிய நாடு முதல் வெற்றியைப் பெற்றது.

பசிபிக் பெருங்கடலில் பயன்மிகுந்த ஹவாய்த்தீவுகளை அமெரிக்கா கைப்பற்ற நெடுநாள்களாகத் திட்டமிட்டது. 1820ஆம் ஆண்டளவில் நியூஇங்கிலாந்திலிருந்து பல கிறித்துவச் சமயப் பரப்பாளர்கள் ஹவாய்த் தீவுகளுக்குச் சென்று கிறித்துவச் சமயத்தைப் பரப்பினர். உள்நாட்டுப்போருக்கு முன்னரே ஹவாய்த் தீவுகளைப் போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக அமெரிக்கர் கருதினர். ஹவாய்த்தீவுகளை வேறு நாட்டவர்கள் எவரும் கைப்பற்றாவண்ணம் அமெரிக்க ஐக்கிய நாடு காக்குமென, 1842-ல் வெளிநாட்டுறவுச் செயலாளர் வெப்ஸ்டர் (Webster) ஹவாய் மக்களுக்கு வாக்குறுதியளித்தார். 1875ஆம் ஆண்டில் அமெரிக்கா, ஹவாய்த்தீவுகளின் காப்பாட்சியை (Protectorate) ஏற்று ஓர் உடன்படிக்கையைச் செய்துகொண்டது. இரண் டாண்டுகள் கழித்து பேர்ல் ஹார்பரில் (Pearl Harbour) ஒரு கப்பல் தளத்தை அமைக்க அமெரிக்கா உரிமை பெற்றது.

அமெரிக்காவோடு உடன்படிக்கை செய்துகொண்ட பிறகு ஹவாய்த்தீவுகளில் சர்க்கரைத்தொழிற்சாலைகள் நன்முறையில் வளர்ச்சியடைந்தன. அமெரிக்க வணிகர்களும் பெருமளவில் முதலீடு செய்யலாயினர். பத்தாண்டுக் காலத்தில் சர்க்கரையின் உற்பத்தி ஐந்து மடங்காகப் பெருகியது. 1890ஆம் ஆண்டளவில் ஹவாய் இருபது மில்லியன் டாலர்கள் பெறுமானமுள்ள பொருள்களை அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு ஏற்றுமதி செய்தது. அமெரிக்காவின் வாணிக உறவு நிலையைப் பொறுத்தமட்டில் ஹவாய் ஒரு துணையுறுப்பாகக் கருதப்பட்டது.

லில்லியோகலானி (Queen Liliuokalani) என்ற பெயருடைய பூர்வீக அரசி ஒருத்தி 1891-ல் பட்டத்திற்கு வந்தாள். அவள்

அமெரிக்கக் குடிமக்கள் பெற்றிருந்த சலுகைகளைத் தடைப்படுத்த முயன்ருள். எனவே, அங்கு வாழ்ந்த மக்கள் எப்படியாவது ஹவாய்த்தீவுகளை அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் இணைத்துவிட வேண்டுமெனத் திட்டமிட்டனர். பெஞ்சமின் ஹாரிசன் (Benjamin Harrison) குடியரசுத் தலைவராய் இருந்த சமயம், கூட்டாட்சி அரசின் அலுவலர்கள் ஹவாயைக் கைப்பற்றுவதற்கான திட்டங்களை வகுக்கலாயினர் ஹவாயில் வாழ்ந்த அமெரிக்கர் 1893ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கிளர்ந்தெழுந்து, அரசாட்சியினைக் கைப்பற்றிட அமெரிக்க ஐக்கிய நாட்டின் உதவியை நாடினர். ஹோனலூலுவி லிருந்த (Honolulu) ஒரு போர்க்கப்பலிலிருந்து 160 கப்பற்படை வீரர்கள் உடனே ஹவாய்க்கு அனுப்பப்பட்டனர். காங்கிரஸ் ஹவாயைச் சட்டபூர்வமாகக் கைப்பற்றுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டிருந்த சமயத்தில் ஹாரிசன் பதவிக்காலம் முடிவுற்று, கிளீவ்லண்டு (Cleveland) குடியரசுத்தலைவரானுர். கிளீவ்லண்டு பேரரசுக் கொள்கையை எதிர்ப்பவராகையால் ஹவாய்க்கு அனுப்பிய உதவிகளையும் அதனைக் கைப்பற்றும் திட்டங்களையும் தடுத்து நிறுத்தினுர். ஆனுல், ஹவாயில் வாழ்ந்த அமெரிக்கர் தொடர்ந்து அரசினைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர். இதற்குள்ளாக கிளீவ்லண்டு ஓய்வுபெற்று மெக்கின்லி (Mckinley) குடியரசுத் தலைவரானுர். மெக்கின்லி பேரரசிக் கொள்கையில் ஈடுபாடுடையவர். எனவே, காங்கிரஸ் ஹவாய்த்தீவுகளைக் கைப்பற்றுவதற்கான தீர்மானத்தை 1898ஆம் ஆண்டு, ஜூலை மாதம் நிறைவேற்றிற்று. துவக்கத்தில் ஹவாய்த்தீவுகள் கூட்டாட்சி அரசின் நேர்முக ஆட்சிக்குள் கொண்டுவரப்பட்டன; பின்னர் மாநிலமாக மாற்றியமைப்பதற்கான வழிமுறைகளும் வகுக்கப் பட்டிருந்தன. இத் தீர்மானம் ஸ்பானியப்போர் நடைபெற்றுக் கொண்டிருந்த சமயம் இயற்றப்பட்டதால் இதற்குப் பெரும் வரவேற்பு மக்களிடையே காணப்பட்டது.

## அனைத்து அமெரிக்க உணர்வு (Pan Americanism)

அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெளிநாட்டுறவுக் கொள்கையில் அனைத்து அமெரிக்க உணர்வு என்ற ஒன்று உருவாயிற்று. இந்த அனைத்து அமெரிக்க உணர்வினை வெளியிட்டவர் ஜேம்ஸ் பிளெய்ன் (James G. Planie) என்பவராவார். அதனைச் சிறப்பாகப் பொருளாதாரத் தன்மையுடையதாக அவர் கருதினுர். கார்பீல்டு (Garfield) குடியரசுத்தலைவராக இருந்தசமயம் ஜேம்ஸ் பிளெய்ன் வெளிநாட்டுறவுச் செயலாளராகப் பணியாற்றி யிருந்தார். அனைத்து அமெரிக்க உணர்வினைப் பரப்புவதற்கான முயற்சிகள் சில காலம் ஒத்திவைக்கப்பட்டன. கிளீவ்லண்டு குடியரசுத்தலைவராகப் பதவியேற்றதும் அதற்கான முயற்சிகள்

மேற்கொள்ளப்பட்டன. 1889ஆம் ஆண்டு அனைத்து அமெரிக்க நாடுகள் மாநாடு ஒன்று வாஷிங்டனில் கூட்டப்பட்டது. அச் சமயம் பிளெய்ன் மீண்டும் வெளிநாட்டுறவுச் செயலாளராக பெஞ்சமின் ஹாரிசனிடத்துப் பணியாற்றினர். இந்த மாநாடு எவ்வகையிலும் அமெரிக்க வாணிக வளர்ச்சியின் பெருக்கத்திற்கு உதவவில்லை. செய்திகளைத் தங்களுக்குள் பரப்பிக்கொள்ள ஒரு செய்தி நிறுவனத் தன்மை பொருந்திய 'அனைத்து அமெரிக்கக் கூட்டமைவு' (Pan American Union) ஒன்றினை மாநாட்டில் நிறுவினர். வாணிகத் துறையில் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கும், தென்அமெரிக்க நாடுகளுக்குமிடையே ஒத்த அளவிலான காப்புவரிகளை விதிப்பதற்கான முயற்சியில் பிளெய்ன் ஈடுபட்டு வெற்றி கண்டார். பத்துத் தென் அமெரிக்க நாடுகளுடன் அமெரிக்கா, வர்த்தக உடன்பாடுகளைச் செய்துகொண்டது. அத்தகைய வர்த்தக உடன்பாடுகளைப் பின்னர் அமெரிக்கா, ஐரோப்பிய நாடுகளுடன் செய்து கொண்டது. 'அனைத்து அமெரிக்கக் கூட்டமைவின்' உறுப்பினர்கள் பெரும்பாலும் கூட்டமைவு நாடுகளுக்கிடையே நல்லுறவை நிறுவுவதில் மட்டுமே கவனம் செலுத்தினர். ஆனால், முதல் உலகப்போருக்குப் பிறகு உறுப்பினர்கள் தங்களுக்குள்ளே ஏற்பட்ட அரசியல், பொருளாதாரச் சிக்கல்களைக் கூடிப் பேசித் தீர்க்கலாயினர். இவ்வகையில் அமெரிக்க நாடுகளிடையே ஒற்றுமையுணர்வு ஏற்பட அனைத்து அமெரிக்கக் கூட்டமைவு வழிவகுத்தது.

## அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கிடையே தப்பெண்ணங்கள்

உள்நாட்டுப் போரின்போது, அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்குமிடையே நல்லுறவு முறிந்து கசப்புணர்வு ஏற்பட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் இருநாடுகளுக்குமிடையேயிருந்த நட்புறவு முற்றிலும் முறிவுற்ற நிலையில் இருந்தது. அமெரிக்கப் புரட்சியின் நினைவுகளும், 1812ஆம் ஆண்டுப் போரின் நினைவுகளும் பிரிட்டிஷாருடைய நினைவிலிருந்து நீங்காது இருந்தன. பிரிட்டனில் ஆட்சிப் பொறுப்பிலிருந்தோர் அமெரிக்காவின் உள்நாட்டுப்போரை வரவேற்றனர். பிரிட்டனுக்கெதிராக அமெரிக்க மக்கள் அயர்லாந்தியருக்கு உதவியும் புரிந்து வந்தனர்.

உள்நாட்டுப்போரின்போது வடபகுதியினருக்கும் உதவியளிக்காது, தென்பகுதியினருக்கும் உதவியளிக்காது பிரிட்டன் நடுநிலைமைச் சட்டங்களை இயற்றி நடுநிலை வகித்துவந்தது. ஆனால், தென்பகுதியினருக்காகப் போர் தொடங்குவதற்குமுன் கட்ட ஆரம்பிக்கப்பட்ட "அலபாமா" என்ற பெயருடைய கப்பல், போரின்போது பிரிட்டன் நடுநிலைமை வகித்தும், கட்டப்பட்ட இடத்திலிருந்து எப்படியோ தென்மாநிலங்களுக்காகக் கடத்திச்

செல்லப்பட்டது. அக் கப்பல் உள்நாட்டுப்போரின்போது வட மாநிலங்களின் கப்பல்கள் பலவற்றைத் தாக்கிச் சேதம் விளைவித்தது. அச் சேதங்களுக்கு இழப்பீடு கோரி அமெரிக்க ஐக்கிய நாடு, பிரிட்டன் மீது குற்றஞ்சாட்டிற்று. பிரிட்டன் பல ஆண்டுகள் இழப்பீடு அளிக்காமல் காலந்தள்ளி வந்தது. இறுதியில் பன்னாட்டுக் குழு ஒன்று "அலபாமா" சிக்கலை விசாரித்து, பிரிட்டனை இழப்பீட்டுத் தொகையாக 15.5 மில்லியன் டாலரை அமெரிக்காவுக்கு வழங்கச் சொல்லித் தீர்ப்பளித்தது (1872).

அமெரிக்க ஐக்கிய நாடு தனது பேரரசுக் கொள்கையில் முதல் நிலையாகக் கரீபியன் கடற்பகுதியில (Carbbean Sea) ஆதிக்கத்தை நிறுவுவதில் வெற்றிகண்டது. 1895-ல் தென்அமெரிக்கக் குடியரசான வெனிசூலாவுக்கும் (Venezuela) பிரிட்டிஷ் குடியேற்ற நாடான கியானாவுக்குமிடையே (Guiana) எல்லைத் தகராறு ஏற்பட்ட போது அமெரிக்கா துணிவோடு தலையிட்டுத் தனது வலிமையை வெளிப்படுத்திற்று. நெடுநாளாக வெனிசூலாவுக்கும் கியானாவுக்கு மிடையே எல்லைத் தகராறு இருந்து வந்தது. இந் நாடுகளின் நிலப் பரப்பிலும் திடீரெனத் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதும் எல்லைச் சிக்கல் தீவிரமாகியது. வெனிசூலாவின் பெரும்பகுதியை பிரிட்டன் தனக்குச் சொந்தமான நிலப்பகுதியெனக் கூறிக்கொண்டு எல்லையைத் தள்ளிப்போட முயன்றது. அதனால், வெனிசூலாவும் பாதிக்கு மேற்பட்ட கியானாவின் நிலப்பகுதிமீது சொந்தம் கொண்டாட முற்பட்டது. பிரிட்டன், வெனிசூலாவின் ஒரு பகுதியைக் கைப்பற்ற நினைத்ததோடு, கரீபியன் கடற்பகுதியைச் சார்ந்த மற்ற நாடுகளிலும் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டத் திட்டமிட்டது. இதனைக் கண்ட அமெரிக்க ஐக்கிய நாடு, பிரிட்டனுக்கு ஓர் எச்சரிக்கைவிட்டது. அமெரிக்காவின் வெளிநாட்டுறவுச் செயலாளரான ஓல்னி (Olnev) அந்த எச்சரிக்கைக் குறிப்பைத் தயாரித்தார். அதில் மன்ரோ கொள்கையின்படி வெனிசூலாவின் பாதுகாப்பில் அமெரிக்கா ஆழ்ந்த கவலை கொண்டுள்ளதென்றும், அமெரிக்கக் கண்டத்தில் அமெரிக்க ஐக்கிய நாடு முழுஇறைமைத்தன்மையையும் பெற்றுள்ளதென்றும் எல்லைச்சிக்கலை அமைதியானமுறையில் ஒரு குழுவிடம் ஒப்படைத்துத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றும் கூறப்பட்டது. இதனையொட்டி பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்குமிடையே ஒரு சமயம் போர் மூண்டுவிடக்கூடும் என அஞ்சப்பட்டது. குறுகிய பகட்டார வாரத் தேசியக் கொள்கையில் ஈடுபாடு கொண்ட சில அமெரிக்கர்கள் ஓல்னியின் அஞ்சாத் தன்மையைப் பாராட்டினர்.

ஓல்னியின் எச்சரிக்கைக் குறிப்பையடுத்த சில திங்களுக்குப் பின்னும் எல்லைச்சிக்கல் தீர்க்கப்படாமலே இருந்து வந்தது.

ஆப்பிரிக்காவில் நிலவிவந்த பல சிக்கல்களில் பிரிட்டன் ஈடுபட்டிருந்தமையால் வெனிசூலா சிக்கலிருந்து விடுவித்துக் கொள்ள விரும்பியது. எனவே, அமெரிக்காவின் கருத்துப்படி எல்லைச் சிக்கலை ஒரு நடுவர் குழுவிடத்து ஒப்படைக்க பிரிட்டன் இசைந்தது. அதேநேரத்தில் பிரிட்டன் அமெரிக்காவிடத்து ஓர் ஒப்பந்த விதியையும் வரையறுத்தது. அமெரிக்க ஐக்கிய நாடு, தென் அமெரிக்க நாடுகளில் பாதுகாப்பை மேற்கொண்டிருப்பதனுல் அவற்றின் நன்னடைத்தைக்கும் அமெரிக்க ஐக்கிய நாடே பொறுப்பேற்க வேண்டுமென பிரிட்டன் கோரியது. இந்தக் கோரிக்கையை அமெரிக்கா உடனடியாக ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், பின்னர் 1904ஆம் ஆண்டு தியோடர் ரூஸ்வெல்ட் பதவிக்காலத்தில் ஏற்றுக் கொண்டது.

வெனிசூலாவின் எல்லைத் தகராறு முடிவுற்றதால் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்குமிடையே நெருங்கிய நல்லுறவு வளரலாயிற்று. அதற்குக் காரணம் ஐரோப்பாவில் ஜெர்மனி வலிமைமிக்க நாடாக வளர்ச்சி பெற்று முன்னிலைக்கு வந்தமைமேயாகும். பிரிட்டன் தனது வலிமையைப் பெருக்கிக் கொள்ள அமெரிக்காவின் நட்பைப் பெற விரும்பிற்று. எனவே, கரீபியன் கடற்பகுதியில் அமெரிக்காவின் ஆதிக்கத்தை பிரிட்டன் ஏற்றுக்கொண்டது. இருபதாம் நூற்றுண்டின் துவக்கத்திலிருந்து பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் தங்களது படைகளை அமெரிக்கக் கண்டத்திலிருந்து படிப்படியாக விலக்கிக் கொண்டு, மன்ரோ கொள்கைக்குத் தங்களது இசைவைத் தெரிவித்தனர்.

### ஸ்பானிய-அமெரிக்கப் போர் — 1898 (The Spanish - American War)

பத்தொன்பதாம் நூற்றுண்டின் கடைசிப் பத்து ஆண்டுகளில் ஏறத்தாழ எல்லாப் பெரிய நாடுகளும் வலலரசுக் கொள்கையைப் பின்பற்றின. ஆப்பிரிக்கா முழுவதும் பங்குபோட்டுக்கொள்ளப் பட்டது. சீனுவையும் வல்லரசுகள் பகிர்ந்து கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருந்தன. அந்தந்த நாட்டின் பொருளாதார நிலையே பேரரசுக் கொள்கைக்கு அடிப்படைக் காரணமாக விளங்கியது. மக்கள்தொகைப் பெருக்கம், தொழில்முன்னேற்றம், செய்பொருள்களை விற்பதற்காகப் புதிய சந்தைகளின் தேவை — ஆகியவற்ருல் புதிய இடங்களில் தத்தம் ஆதிக்கத்தை நிறுவவும், அங்கு வலிமையைப் பெருக்கிக் கொள்ளவும் நாடுகள் போட்டியிட்டன. இம் முயற்சியில் தங்களது கப்பற்படையின் வசதிக்காகவும் பாதுகாப்பிற்காகவும் பல கடற்படைத்தளங்களைச் சங்கிலி கோத்தாற்போல நிறுவுவதிலும் சில நாடுகள் முனைந்தன.

சமயவாதிகள் கிறித்துவ சமயத்தின் நெறியை எடுத்துச் சொல்வது தமது கடமையென நினைத்தார்கள். பிற்போக்கான நாட்டாரை உயர்த்துவது வெள்ளையர்களின் கடமையெனச் சீர்திருத்தவாதிகள் கருதினார்கள்.

அலாஸ்காவைப் பணம் கொடுத்து விலைக்கு வாங்கியும், சமோவாவைக் கடற்படை அலுவலர்கள் முயற்சியால் பேசி ஒப்பந்தம் செய்து பெற்றும், தனது ஆதிக்கத்தைப் பெருக்கிவந்த அமெரிக்க ஐக்கிய நாடு, அடுத்து ஸ்பெயின்மீது போர் தொடுத்தும் தனது பேரரசுக் கொள்கையைச் செயலாற்ற முனைந்தது. அரசியல் வாதிகளும் செய்தித்தாள் ஆசிரியர்களும் மிகுந்த ஆர்வத்தோடு பேரரசுக்கொள்கையினை ஆதரித்தனர். கட்சி வேறுபாடின்றிக் குடியரசுக் கட்சியினரும் மக்களாட்சிக் கட்சியினரும், மேன்மேலும் நிலப்பகுதிகளைக் கைப்பற்ற வேண்டுமென்றும், நாட்டின் வாணிகத்தைப் பெருக்கவேண்டுமென்றும், அமெரிக்கா வலிமை மிக்க நாடாகத் திகழ வேண்டுமென்றும் ஒருமுகமாகக் கூறி வந்தனர். அரசின் கொள்கையிலும் மக்களது மனப்போக்கிலும் ஏற்பட்ட இத்தகைய மாற்றத்திற்கான காரணங்கள் பலவாகும். ஸ்பானிய, அமெரிக்கப்போருக்கு உடனடியான காரணம் கியூபாவில் 1895ஆம் ஆண்டு ஏற்பட்ட புரட்சியாகும். அப் புரட்சி அமெரிக்க மக்களின் கவனத்தைக் கவர்ந்ததோடு அவர்களது ஆதிக்க மனப்பான்மையையும் தூண்டிவிட்டது.

ஜெபர்சனது ஆட்சிக்காலத்திலிருந்தே கியூபாவின் நிகழ்ச்சி களில் அமெரிக்க ஐக்கிய நாடு ஆர்வங்கொண்டிருந்தது. ஒரு சிலர் கியூபாவை அமெரிக்கக் கூட்டாட்சி அரசின் செல்வாக்கிற்கு உட்பட்ட நாடாகவே கருதினர். அத் தீவை, ஸ்பெயின் கட்டுப்படுத்தி ஆட்சி செய்து வந்தமையால், மக்கள் அதிக அக்கறை காட்டாவிட்டாலும் அமெரிக்க அரசியல்வாதிகள் உள்ளத்தில் என்றுவது ஒரு நாள் கியூபாவைக் கைப்பற்ற வேண்டுமென்ற எண்ணம் இருந்துவந்தது. கியூபாவில் ஸ்பானிய ஆட்சியை எதிர்த்துப் பத்தாண்டுப் போர் (1868—1878) நடந்த சமயம், கியூபாவைக் கைப்பற்ற வாய்ப்புக் கிடைத்தும் அமெரிக்க ஐக்கிய நாடு வாளாவிருந்ததுமட்டுமல்லாமல் பெருந்தன்மையோடும் நடந்துகொண்டது. ஆனால், பத்தாண்டுப் போரையடுத்து எல்லாவகையான ஒழுங்கீனங்களும் கொடூரமான நிகழ்ச்சிகளும் கியூபா மக்களைத் துன்பத்திலாழ்த்தின. கியூபாவின் நிகழ்ச்சிகளில் அக்கறைகொண்டிருந்த அமெரிக்க மக்களுக்கு அத்தகைய சூழ்நிலை பெரும் இகழ்ச்சியைத் தந்தது. 1895ஆம் ஆண்டு அங்குப் புரட்சி மூண்டபொழுது அமெரிக்காவின் பெருமைக்குப் பெரும் இழுக்கு ஏற்பட்டது. புரட்சி துவங்கிய சில

நாள்களுக்கு எத் தரப்பினரையும் ஆதரிக்காது, அமெரிக்கா நடுநிலைமை வகித்து வந்தது. ஆனால், சில நாள்கள் கழித்து, அமெரிக்கா, ஸ்பெயினுக்கு எதிராகப் புரட்சியாளர்களை ஆதரிக்க முற்பட்டது. புரட்சியாளர்களை அமெரிக்க மக்களும் அரசும் ஆதரிக்கச் சில நியாயமான காரணங்களும் இருந்தன.

அமெரிக்க ஐக்கிய நாட்டில், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியாண்டுகளில், செய்தித்தாள்கள் பலவாகப் பெருகியிருந்தன. செய்திகளை வெளியிடும் முறையும் நுட்பமான முறையில் அமைந் திருந்தது. செய்தித்தாள்கள் தேசிய உணர்வை நன்கு வளர்த்தன. நியூயார்க் நகரத்திலிருந்து வெளியிடப்பட்ட செய்தித்தாள்களின் நிறுவனங்களிலிருந்து பிற செய்தித்தாள்கள் தங்களுக்கு வேண்டிய செய்திகளைப் பெற்றன. விரைவில் எல்லாச் செய்தித்தாள்களும் "அஸோஸியேட்டட் பிரஸ்" (Associated Press) செய்தி நிறுவனத்தின் நிலைவரியாளர்களாயின. இச் செய்தி நிறுவனம் மக்களை மகிழ்விப்பதற்காகக் கற்பனை மிகுந்த கொடூரமான செயல்களை அன்றாடம் வெளியிட்டு வந்தது. 1895ஆம் ஆண்டு முதல், 1898 ஆம் ஆண்டு வரை, தொடர்ந்து செய்தித்தாள்கள் கியூபாவில் ஸ்பானியர்கள் செய்துவந்த கொடுமைகளை விளக்கமாக வெளியிட்டுவந்தன. மனிதப் பண்பின் அடிப்படையிலாவது, அமெரிக்கா, கியூபாவின் புரட்சியில் தலையிட்டு, அங்கு வாழும் மக்களைக் காப்பாற்ற வேண்டுமென அமெரிக்க மக்கள் இரக்கங் கொள்ளும் ஒரு நிலையைச் செய்தித்தாள்கள் உருவாக்கிவிட்டன.

உள்நாட்டுப்போருக்குப் பிறகு, அமெரிக்காவின் பொருளாதாரம் கியூபாவுக்கு நெருங்கிய தொடர்புடையதாக வளர்ந்துவிட்டிருந்தது. அமெரிக்கச் செல்வந்தர்களும் வணிகர்களும், கியூபாவில் ஐம்பது மில்லியன் டாலர் அளவிற்கு முதலீடு செய்திருந்தனர். 1893ஆம் ஆண்டளவில் அமெரிக்கா, கியூபாவோடு நூறு மில்லியன் டாலர் பெறுமானமுள்ள வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்தது. அவ் வர்த்தகத்தில் பல்வகையான வணிகர்களும் கப்பல் உரிமையாளர்களும் பங்கேற் றிருந்தனர். சர்க்கரையை அடிப்படையாகக் கொண்ட கியூபாவின் பொருளாதாரத்திற்கு ஏற்றவாறு அமெரிக்க மக்கள் தங்கள் பொருளாதார உறவை நிலைநாட்டியிருந்தனர். கியூபாவில் நிகழ்ந்து வந்த புரட்சிக்கலகங்களின் விளைவாகச் சர்க்கரை உற்பத்தி பெரிதும் குறைந்தமையால், பொருளாதார வளர்ச்சியும் குன்றியது. அதனால், அமெரிக்கப் பொருளாதாரமும் பெரிதும் பாதிக்கப்பட்டது.

அமெரிக்க ஐக்கிய நாடு, உலக வல்லரசாகத் திகழ, முதலில் கரீபியன் கடற்பகுதியில் தனது ஆதிக்கத்தைச் சிறப்புற நிலைநாட்ட

விரும்பியது. அதற்காகக் கரீபியன் கடற்பகுதி முழுவதையும் தனது கட்டுப்பாட்டினுள் கொண்டுவரத் திட்டமிட்டது. பசிபிக் பெருங்கடலிலும் தொலைக் கிழக்கு நாடுகளிலும் ஆர்வங்கொண்டிருந்த அமெரிக்கா, பசிபிக் பெருங்கடலையும் அட்லாண்டிக் பெருங்கடலையும் இணைக்கும் கால்வாய் ஒன்றினை மையஅமெரிக்காவில் வெட்ட எண்ணங்கொண்டிருந்தது. அப்படி ஒரு கால்வாய் வெட்டினால், அக் கால்வாய் வழியாகச் சென்றுவரப் பாதுகாப்பு நிறைந்த நீர்வழியினையும் பெறவேண்டியது இன்றியமையாததாயிற்று. அமெரிக்காவுக்குச் சொந்தமான தொலைவிலிருந்த தீவுகளையும், கப்பற்படைத் தளங்களையும் பாதுகாக்க ஒரு பெரிய கப்பற்படையும் தேவைப்பட்டது. கப்பல்கள் ஆங்காங்கே தங்கவும், நீர்பெறவும், நிலக்கரி பெறவும் பல நிலையங்கள் தேவைப்பட்டன. அவ்வகையில் ஒரு நிலையத்தைக் கியூபாவிலும், கரீபியன் கடற்பகுதியிலிருந்த பிற நாடுகளிலும் நிறுவ அமெரிக்கா மும்முரமாகச் செயல்பட்டது.

குடியரசின் தலைவர் கிளீவ்லண்டு அமைதிக் கொள்கையைப் பின்பற்றியமையால், கியூபா சிக்கலில் தலையிட்டு எத்தரப்பினரையும் ஆதரிக்காது நடுநிலைமையை வகிக்கப் போவதாக அறிவித்தார். கிளர்ச்சியாளர்களை ஆதரித்துக் காங்கிரஸ் ஒரு தீர்மானத்தை இயற்றியும், கிளீவ்லண்டு அதனைச் செயலாக்க மறுத்துவிட்டார். இருப்பினும் கியூபாவில் புரட்சியாளர்களுக்கும் ஸ்பானியருக்கு மிடையே நல்லுறவை நிறுவுவதற்கான முயற்சிகளில், இடையீட்டாள ராகப் பணியாற்ற கிளீவ்லண்டு விருப்பம் தெரிவித்தார். ஆனால், கிளீவ்லண்டின் விருப்பத்தை ஸ்பானிய அரசு ஒதுக்கித் தள்ளியது. மேலும், ஸ்பானிய அரசு, அமெரிக்கா, புரட்சியாளருக்குச் சட்டத்திற்கு முரணாக நிதி, போர்க்கருவிகள், பிறபொருள்கள் முதலியன தந்துதவுவதையும் மறைமுகமாகக் கண்டித்தது. இச் சிக்கலைக் கிளீவ்லண்டு அப்படியே விட்டுவிட்டார்.

கிளீவ்லண்டையடுத்து குடியரசுக் கட்சியைச் சார்ந்த மெக்கின்லி குடியரசுத்தலைவரானார். குடியரசுக் கட்சியினர் தங்களது தேர்தல் அறிக்கையில் வாக்களித்திருந்தபடி ஓர் உறுதிமிக்க, உயிரோட்ட முடைய, உயர்வுபடுத்தும் வெளிநாட்டுக் கொள்கையைப் பின்பற்ற லாயினர். ஸ்பானிய அரசு, கியூபாமீதான ஆட்சியாற்றலை இழந்து விட்டதென்றும், அதனால் அங்கு வாழும் அமெரிக்கக் குடிகளது உயிரும் உடைமைகளும், சரிவரக் காக்கப்படவில்லை என்றும், உடன்பாட்டு நிபந்தனைகளைச் சரிவர நிறைவேற்றவில்லை என்றும், எனவே, அமெரிக்க ஐக்கிய நாடு தலையிட்டுத் தனது செல்வாக்கைப் பயன்படுத்தி அமைதியை நிறுவ வேண்டுமென்றும், இறுதியில் கியூபாவுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டுமென்றும் குடியரசுக்

கட்சியினர் மககளிடத்துப் பிரசாரம் செய்துவந்தனர். கியூபாவில் வாழ்ந்த மக்களின் துயரைத் துடைப்பதற்காக மட்டுமல்லாது, சில பொருளாதாரக் காரணங்களுக்காகவும், அமெரிக்கா தலையிடுவதை முறையான செயலென்று பிரசாரம் செய்தனர்.

வளர்ந்துகொண்டேவரும் பொதுமக்களின் கருத்தையறிந்த குடியரசுத்தலைவர் மெக்கின்லி, கியூபா சிக்கலைத் தீர்க்க உடனடியாக நடவடிக்கைகள் மேற்கொள்ளலானார். கியூபாவில் அமைதியை நிலைநாட்ட ஸ்பானிய அரசுடன் தொடர்புகொண்டு தாம் இடையீட்டாளராக உதவி செய்ய மெக்கின்லி விருப்பம் தெரிவித்தார். ஸ்பானிய அரசு, மெக்கின்லியின் கருத்தை ஏற்க மறுத்தது. ஆனால், கியூபாவில் நெடுநாளாக வேண்டப்பட்ட சில சீர்திருத்தங்களைச் செய்ய ஸ்பானிய அரசு முன்வந்தது. மக்களுக்குப் பெருங் கொடுமைகளை இழைத்த தளபதியான வெய்லர் (Weyler) பதவியினின்று விலக்கப்பட்டார். ஸ்பானிய ஆட்சியை எதிர்த்த கியூபா நாட்டு மக்களை ஒதுக்கி வைக்கும் குடியேற்றப் பகுதிகள் (Concentration Camps) மூடப்பட்டன. அக் குடியேற்றப் பகுதிகளில் மக்கள் விலங்குகளைப்போல் அடைக்கப்பட்டு நூற்றுக்கணக்கானபேர் பிணிகளால் மாண்டனர். ஸ்பானியக் குடிமக்கள் பெற்றிருந்த உரிமைகள் அனைத்தும் கியூபா மக்களுக்கு அளிக்கப்பட்டன. இவ்வகையில் தன்னாட்சி நிறுவுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

தன்னாட்சித் திட்டங்கள் கியூபா மக்களுக்கு மனநிறைவை அளிக்கவில்லை. அதற்குள்ளாகத் திடீரென அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் போரினைத் தவிர்க்க முடியாத ஒன்றாக மாற்றிவிட்டது. வாஷிங்டனில் ஸ்பானியத் தூதுவராகப் பணியாற்றிய சேனர் ட லோம் (Senor de Lome) என்பவர் தனி முறையில் ஒரு கடிதம் எழுதும்போது அமெரிக்கக் குடியரசுத் தலைவரைக் கடுஞ்சொற்களால் குறைகூறியிருந்தார். அக் கடிதம் எப்படியோ அஞ்சல் பிரிவிலிருந்து தப்பி, நியூயார்க் செய்தித்தாள் ஆசிரியரான வில்லியம் ரண்டால்ப் ஹெர்ஸ்ட் (William Randolph Hearst) கைக்குவந்தது. அவர் அதனை அப்படியே அச்சிட, அதனைப் படித்த அமெரிக்க மக்கள் மிகுந்த சீற்றங்கொண்டனர். ஸ்பானிய அரசு உடனே மன்னிப்புக் கேட்டுக்கொண்டதோடு ட லோமையும் பதவியினின்று விலக்கியது.

1898ஆம் ஆண்டு, பிப்ரவரி திங்கள், 15ஆம் நாள் அன்று "மெயின்" என்ற பெயருடைய அமெரிக்கப் போர்க்கப்பல், கியூபாவிலுள்ள ஹவானா (Havana) துறைமுகத்தில் தகர்த்தெறியப்பட்டது. அதனால், 260 அமெரிக்கர் உயிரிழந்தனர். இச் செய்தியை அமெரிக்க

மக்கள் கேட்ட மாத்திரத்தில் கொதித்தெழுந்தனர். "மெயின்" கப்பலை ஸ்பானியர்களே சதிசெய்து தகர்த்தெறிந்ததாகச் சொல்லப் பட்டது. அமெரிக்க அரசு அச் சம்பவத்தை விசாரிக்க ஒரு விசாரணைக் குழுவை நியமித்தது. நீர்மூழ்கி வெடிகுண்டு ஒன்றால் அக் கப்பல் தகர்த்தெரியப்பட்டதென அக் குழு முடிவு தெரிவித்தது. ஆனால், அதற்குக் காரணமானவர்கள் யார் என்பது உறுதிப்படுத்தப் படவில்லை. அப்படியிருந்தும் அந் நிகழ்ச்சிக்கு ஸ்பானியர்களே பொறுப்பு எனக் கருதப்பட்டது.

குடியரசுத்தலைவர் மெக்கின்லி தனிப்பட்டமுறையில் அமைதியையே விரும்பினாலும் மக்கள் விருப்பத்திற்கு மாறாக அவர் நடக்க விரும்பவில்லை. மேலும் 1900ஆம் ஆண்டுத் தேர்தலில் மெக்கின்லி குடியரசுத் தலைவர் பதவிக்கு மீண்டும் போட்டியிட விரும்பி யதால் மக்கள் ஆதரவைப் பெறுவதில் நாட்டங்கொண்டிருந்தார். புரட்சியாளர்களோடு இணங்கிப்போகச் சொல்லி ஸ்பானிய அரசை மெக்கின்லி வேண்டினார். அதுபற்றி அமெரிக்காவின் வெளி நாட்டுறவுத் துறை அலுவலர்கள், ஸ்பானிய அரசின் அலுவலர் களோடு மாட்ரிடில் (Madrid) முயன்று வந்தனர். ஸ்பானிய அரசும் கியூபாவில் சீர்திருத்தங்களைச் செய்துவந்தது. ஆனால், 1898ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் மெக்கின்லி திடீரெனத் தமது கொள்கையை மாற்றினார். கியூபா நிலைமையைப்பற்றிக் காங்கிரஸிடம் முறையிடப் போவதாக ஸ்பானிய அரசை எச்சரிக்கும் படி மாட்ரிடில் இருந்த தமது தூதுவருக்கு மெக்கின்லி செய்தி யனுப்பினார். அப்பொழுதிருந்த நிலையில் காங்கிரஸ் போர் தொடுப்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய இணங்காது என்பதனை அனைவரும் உணர்ந்திருந்தனர். ஐரோப்பிய நாடுகள் அனைத்தும் அஞ்சின. போப்பாண்டவர் அமைதிவழியைப் பின்பற்றி கியூபா சிக்கலுக்கு முடிவு காணச் சொல்லி வேண்டுகோள் விடுத்தார். கியூபா சிக்கல்பற்றிய போரில் அமெரிக்கா வெற்றிபெற்றால், அமெரிக்காவின் கடலாதிக்கம் பெருகிவிடுமென அஞ்சிய இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி ஆகிய நாடுகள் ஒன்றுகூடிப் போரைத் தவிர்க்க முயற்சித்தன. தன்னுடைய வலிமையற்ற நிலையை உணர்ந்த ஸ்பெயினும், அடக்குமுறை ஆட்சியினைக் கைவிடுவதாகவும், கியூபா வில் ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டுவதாகவும், கியூபா மக்களின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றுவதாகவும் அமெரிக்கக் குடியரசுத் தலைவருக்குச் செய்தியனுப்பியது.

ஸ்பெயின் விளக்கங்களை அமெரிக்க மக்களும்சரி, கூட்டாட்சி அரசும்சரி கேட்கும்நிலையில் இல்லை. போர் ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்டிருந்த அமெரிக்கர், போர் துவங்கும் நாளினை

ஆவலோடு எதிர்பார்த்தனர். இப் போரின்மூலம் புதிய கடல் கடந்த நாடுகளில் ஆதிக்கத்தை நிறுவவும், கூட்டாட்சி அரசு தக்க தருணத்தை எதிர்நோக்கியிருந்தது. ஏப்ரல் மாதம், பதினோராம் நாள், மெக்கின்லி காங்கிரஸிற்கு ஒரு வேண்டுகோளை விடுத்தார். போர்வெறிகொண்ட கட்சியினருக்கு அடிபணிந்த மெக்கின்லி கியூபா சிக்கலைத் தீர்ப்பதற்காகத் தமக்குப் போர் தொடுப்பதற்கான அதிகாரத்தை வழங்குமாறு வேண்டினார். கியூபாவிலுள்ள மக்களின் உரிமையை நிலைநாட்டவும், நிலையான சுதந்திர அரசாட்சியை நிறுவவும், இராணுவத்தைப் பயன்படுத்த குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் காங்கிரஸின் இரு சபைகளிலும் தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன. அத் தீர்மானங்கள் ஏப்ரல் மாதம், பத்தொன்பதாம் நாள், குடியரசுத்தலைவருக்கு அனுப்பப்பட்டன. மறுநாள், குடியரசுத்தலைவர், கியூபாவின் சிக்கலைத் தீர்ப்பதற்காக ஸ்பெயின்மீது போர் தொடுத்தார்.

கியூபாவை ஸ்பெயினின் கொடுங்கோலாட்சியிலிருந்து விடுவிக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காக, அமெரிக்கா ஸ்பெயின்மீது போர் தொடுத்தது. ஆனால், போரின் முதல் நிகழ்ச்சி தொலை கிழக்கில் நடைபெற்றது வியக்கத்தக்கதாகும். துணைச் செயலாளராகப் பணியாற்றிய தியோடர் ரூஸ்வெல்ட்டின் முயற்சியால் கப்பற்படைத் துறை, ஆசியப் போர்க்கப்பற்படைப் பிரிவின் தலைவர் தளபதி டுவீயை (Dewey) ஸ்பெயினுக்குச் சொந்தமான பிலிப்பைன்ஸ் (Phillippines) தீவுகளை முற்றுகையிட ஆணை பிறப்பித்தது. மேத் திங்கள் முதல் நாளன்று தளபதி டுவீ மணிலா வளைகுடாவில் (Manila Bay) இருந்த ஸ்பானியக் கடற்படையைத் தோற்கடித்தார். பல அமெரிக்கருக்குப் பிலிப்பைன்ஸ் தீவுகள் என்றால் எங்குள்ளது என்பது தெரியாது. குடியரசுத் தலைவர் மெக்கின்லியும் அத் தீவுகள் இரண்டாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ளதா என்று வினவினார். டுவீ பெற்ற வெற்றியை அமெரிக்கர் பெரியதாகக் கொண்டாடினர். மணிலாவுக்கு மேலும் படைகள் அனுப்பப்பட்டு இறுதியில் ஸ்பானியர் வெளியேற்றப்பட்டனர். மணிலா, அமெரிக்கர் உடைமையாயிற்று. இவ்வகையில், தற்செயலாக அமெரிக்கா தொலைக் கிழக்குப் பகுதியில் பெரும் பொறுப்பை ஏற்க நேரிட்டது. அமெரிக்க மக்களின் மகிழ்ச்சிக்கும் பாராட்டுதலுக்கும் எல்லையே இல்லை.

உள்நாட்டுப் போரையடுத்த முப்பதாண்டுகளில் அமெரிக்க இராணுவம் சரிவரப் பராமரிக்கப்படாமல் இருந்தது. ஸ்பானியப் போர் துவங்கும்முன், கப்பற்படை ஓரளவு பெருக்கப்பட்டிருந்தது. தரைப்படை போருக்கு ஆயத்தமற்றதாக இருந்தது. எனவே, போர்

மூண்டதும் தரைப்படை பெருக்கப்பட்டது. ஆனல், போதிய பயிற்சி யற்றவர்களாகவே படை வீரர்கள் விளங்கினர். எனினும், படையினர் ஆர்வத்தோடு போரிலிறங்கினர். கியூபாவை விடுவிக்கப் பெரும் படையொன்று அனுப்பப்பட்டது. கடற்படைத் தலைவர்கள் ஷீலி (Schley), மற்றும் சாம்சன் (Sampson) ஆகிய இருவரது தலைமையில் சென்ற படை, ஸ்பானியப் படையினைச் சாண்டியாகோ (Sandiago) என்னும் பட்டினத்தருகே தோற்கடித்தது. அமெரிக்கத் துருப்புகள் கியூபா தீவில் இறங்கி மூன்றுவாரச் சண்டைக்குப் பிறகு ஸ்பானியர் களைச் சரணடையச் செய்தன. அடுத்து, பியூர்ட்டரி கோவையும் (Puerto Rico) அமெரிக்கர் கைப்பற்றினர். பிற போர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அதிக இழப்பில்லாமல் அமெரிக்கா எளிதில் வெற்றி பெற்றது. முந்நூறுக்கும் குறைவான வீரர்களே மடிந்தனர். 'வீரர்கள் ஏதோ உல்லாசப்பயணத்திற்குச் செல்வது போலச் சென்று வெற்றிக் கொடிநாட்டினர்' என்று சிலர் கூறினர்.

**பாரிஸ் அமைதி உடன்படிக்கை**

போர் துவங்கியதும் தன் நிலை உணர்ந்த ஸ்பெயின், அமைதியை நிலைநாட்ட விரும்பி வாஷிங்டனிலிருந்த பிரெஞ்சுத் தூதுவர்மூலம் அமெரிக்கக் குடியரசுத்தலைவர் மெக்கின்லி கோரும் கோரிக்கைகளை அறிய முனைந்தது. அதன் பயனாக அமெரிக்காவுக்கும் ஸ்பெயினுக்கு மிடையே ஒரு முதற் குறிப்பு உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது. அதில் மூன்று நிபந்தனைகள் விதிக்கப்பட்டன அவை (1) கியூபா உரிமை பெற்ற நாடாகத் திகழ வேண்டும், (2) பியூர்ட்டரிகோ அமெரிக்காவுக்கு அளிக்கப்பட வேண்டும், (3) இறுதி உடன்படிக்கை கையெழுத்திடப்படும் வரையில் மணிலாவில் அமெரிக்கத் துருப் புகள் இருக்கவேண்டும். இந்தத் தற்காலிக உடன்படிக்கைக்குப் பிறகு, இரண்டு நாட்டுப் பிரதிநிதிகளும் பாரிஸில் கூடிப் பேசி ஒப்பந்தம் ஒன்றினைத் தீட்டினர்.

பாரிஸில் 1898ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்கள், கையெழுத்திடப் பட்ட ஒப்பந்தப்படி ஸ்பெயின், கியூபாவின்மீதான உரிமையைக் கைவிட்டது. மேலும் பிலிப்பைன்ஸ் தீவுகளையும், பியூர்ட்ட ரிகோவையும், பசிபிக் பெருங்கடலிலுள்ள குவாம் (Guam) என்ற தீவையும் அமெரிக்காவுக்காக விட்டுக்கொடுத்தது. இத் தீவுகளை யெல்லாம் ஏற்றுக்கொள்ள மெக்கின்லி முதலில் தயங்கினர். ஆனல், அவற்றை ஏற்றுக்கொள்ளச் சொல்லி தமக்குள் ஓர் உள்ளுணர்வு ஏற்பட்டதாகவும், அது கடவுளின் செயலென்றும், மெக்கின்லி பின்னர் மெத்தடிஸ்ட் சமய குருமார்கள் சிலரிடம் சொல்லியதாகக் கூறப்படுகிறது. அத் தீவுகளில் வாழும் மக்களுக்குக் கல்வியறிவு புகட்டி, கிறித்துவச் சமய அறிவையும் புகட்டி, அவர்களை நாகரிகம்

மிக்கவர்களாக மாற்றச்செய்வது அமெரிக்காவின் கடமையென்றும் மெக்கின்லி கூறினர். பிராடஸ்டண்டு திருச்சபையினர் தங்களுடைய சமயத்தைப் பரப்புவதற்கென்றே, புதிய இடங்களை அமெரிக்க அரசு கைப்பற்றுவதை ஆதரித்தனர். தொலைக்கிழக்குப் பகுதியில் அமெரிக்கா தனது ஆதிக்கத்தை நிலைநாட்டவும், வாணிகத்தைப் பெருக்கவும் பிலிப்பைன்ஸ் தீவுகளைச் சிறந்த தளமாகப் பெற்றது.

கியூபாவானது தற்காலிகமாக அமெரிக்க இராணுவ ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப்பட்டது. தளபதி லியனர்டு உட் (Leonard Wood) என்பவர் ஆளுநராக நியமிக்கப்பட்டார். இதற்குள்ளாக அரசியலமைப்பாண்மைச் சிறப்புக் குழு ஒன்று அமைக்கப்பட்டு ஓர் அரசியலமைப்பு வரையப்பட்டது. 1902ஆம் ஆண்டு ஒரு சில வரையறைகளோடு கியூபா தன்னாட்சி பெற்றது. அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் கியூபாவின் எதிர்கால உறவு முறையை விளக்கி, பிளாட் திருத்தம் (Platt Amendment) என்ற ஒரு சட்டம் இயற்றப்பட்டது. போர்த்துறைச் செயலாளராகப் பணியாற்றிய எலிஹு ரூட் (Elihu Root) என்பவர் அச் சட்டத்தை இயற்றி, 1901ஆம் ஆண்டு இராணுவ நிதியொதுக்கீடு சட்டவரைவுடன் இணைத்துச் சட்டமாக்கினர். பிளாட் திருத்தத்தில் கியூபாவைக் கைப்பற்றுவதற்கான காரணங்கள் சிறப்புற விளக்கப்பட்டிருந்தன.

அமெரிக்க ஐக்கிய நாட்டினை, ஓராண்டுக் காலத்தில் உலக வல்லரசாக மாற்றியமை ஸ்பானிய — அமெரிக்கப்போரின் தனிச் சிறப்பு ஆகும். அப் போரின் முடிவில் அமெரிக்கா இரண்டு மாபெரும் பொறுப்புகளை ஏற்க நேரிட்டது. அப் பொறுப்புகளை ஏற்றமையால் உலக அரங்கில் வருங்காலத்தில் அமெரிக்காவின் பங்கு தீர்மானிக்கப்பட்டது. (1) அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொருளாதாரமும் போர்வலிமையும் பிலிப்பைன்ஸ் தீவுகள் வரைக்கும் விரிவடைந்துவிட்டமையால், அமெரிக்கா, ஐரோப்பிய வல்லரசுகளுடனும் ஜப்பானுடனும் தொடர்புகொள்ள நேரிட்டது. இதன் விளைவாக அமெரிக்காவின் மேற்கு எல்லை சீனக் கடற்கரைக்கு நாளாவட்டத்தில் எட்டிவிட்டது எனலாம். (2) அடுத்து, அமெரிக்காவின் பொருளாதாரமும், போர்வலிமையும் கரீபியன் கடற்பகுதியிலும் நிறுவப்பட்டது. இதன் பயனாகவும் ஐரோப்பிய வல்லரசுகளுடன், குறிப்பாக ஜெர்மனியுடன், அமெரிக்கா தொடர்பு கொள்ள நேரிட்டது. அச் சமயம் ஜெர்மனி, தென் அமெரிக்காவில் தனது ஆதிக்கத்தை நிலைநாட்ட மும்முரமாக முயன்றுகொண்டிருந்தது.

**பேரசுக் கொள்கை எதிர்ப்பாளர்கழகம்**

ஸ்பானிய - அமெரிக்கப்போர் முடிவுற்றதும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் பேரரசுக் கொள்கையை எதிர்ப்பவர்கள் எண்ணிக்கை பெருகிற்று. அவர்களெல்லாம் ஒன்றுகூடி 1899ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள் ஒரு கழகம் அமைத்தனர். அமெரிக்க வரலாற்றில் அதற்குமுன் கண்டிராத அளவிற்குப் பல கட்சிகளைச் சார்ந்த அரசியல் தலைவர்கள் அக் கழகத்தில் சேர்ந்தனர். செனட் சபை உறுப்பினர்களாக ஹோர் (Hoar), எட்மண்டு (Edmunds), செயலாளரான ஷெர்மன் (Shelman), மன்றத் தலைவர் ரீடு (Read) ஆகிய குடியரசுக் கட்சியினரும், கிளீவ்லண்டு, பிரையன், பென் டில்மன் (Ben Tillman), ஜான் கார்லிஸில் (John G. Carlisle) போன்ற மக்களாட்சிக்கட்சியினரும், தொழிலாளர் தலைவர் சாமுவெல் கோம்பர்ஸ் (Samuel Gompers) தொழிலதிபர் ஆண்ட்ரூ கார்னேகி ஆகியோரும் அக் கழகத்தில் இடம்பெற்றனர்.

பேரரசுக்கொள்கை எதிர்ப்பாளர்கழகம் செய்தித்தாள்கள் வழியாகவும், துண்டுவெளியீடுகள் மூலமாகவும், பொதுக் கூட்டங்கள் நடத்தியும் அமெரிக்கப் படையினர் ஸ்பானியப் போரில் இழைத்த கொடுமைகளை மக்களுக்கு விளக்கிக் கூறிற்று. அமெரிக்காவும் ஐரோப்பிய நாடுகளைப் போன்று பேரரசுக் கொள்கை என்னும் விளையாட்டில் ஈடுபட்டிருப்பதைக் கண்ட அறிஞர் மார்க் டுவெயின் (Mark Twain) மிகவும் வருத்தப்பட்டார். அவர் அமெரிக்கக் கொடியில் வெள்ளை பட்டைகளுக்குப் பதிலாகக் கறுப்புப் பட்டைகளும், விண்மீன்களுக்குப் பதிலாக மண்டையோடுகளும் எலும்புகளும் வரையப்பட வேண்டுமெனக் கூறினார். பேரரசுக் கொள்கை எதிர்ப்பாளர்கள் முழுமனதுடன் ஒத்துழைத்துத் தங்கள் கழகத்தை ஒரு மூன்றாவது கட்சியாக உருவாக்கித் துணிகரப் போராட்டத்தில் இறங்க விரும்பவில்லை. எனவே, எதிர்ப்பாளர் கழகம் மக்கள் ஆதரவைப் பெறவில்லை. தனித்திருத்தல் கொள்கையினை விட்டொழித்த நிலையில் அமெரிக்க மக்கள் தங்கள் நாட்டை உலக வல்லரசாகக் காண்பதில் பெருமிதம் கொண்டனர்.

**பியூர்ட்டரிகோ**

ஸ்பானிய — அமெரிக்கப்போர் துவங்கும் முன்னரே பியூர்ட்டரிகோவிற்கு ஸ்பெயின் உரிமை அளித்துவிட்டிருந்தது. எனவே, அங்கு வாழ்ந்த மக்களின் உரிமைகளை நிலைநாட்டுவதற்காக அமெரிக்கா அங்குத் தலையிட்டுக் கைப்பற்றியமையால், அம் மக்களின் உரிமைகள் நடைமுறையில் தடைப்படுத்தப்பட்டன எனலாம். பியூர்ட்டரிகோவிற்கு 1776ஆம் ஆண்டுக்கு முன்பு எத்தகைய ஆட்சி

முறை பதின்மூன்று குடியேற்றங்களில் இருந்ததோ அதுபோன்ற ஆட்சிமுறை அமைக்கப்பட்டது. அமெரிக்கக் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்ட ஓர் ஆளுநரும், அவருக்கு உதவியாக ஓர் ஆலோசனைக் குழுவும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் கொண்ட ஒரு சட்டமன்றமும் கொண்ட ஆட்சிமுறை பியூர்ட்டரிகோவில் நிறுவப்பட்டது. 1917ஆம் ஆண்டு இயற்றப்பட்ட ஜோன்ஸ் சட்டப்படி (Jones Act) பியூர்ட்டரிகோ மக்களுக்கு அமெரிக்கக் குடியுரிமை வழங்கப்பட்டது. மற்றும் ஆளுநருடைய ஆலோசனைக் குழுவுக்குப் பதிலாக மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் கொண்ட மேலவை ஒன்று அமைக்கப்பட்டது. எனினும், பியூர்ட்டரி கோவின் சட்டமன்றங்களில் இயற்றப்படும் சட்டங்களைத் தள்ளுபடி செய்ய அமெரிக்கக் குடியரசுத் தலைவர் உரிமை பெற்றிருந்தார்.

அமெரிக்காவின் ஆட்சியினால் பியூர்ட்டரிகோவில் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டபோதிலும், அமெரிக்கா மிகவும் வெற்றி கரமாக ஆண்டது என்று சொல்வதற்கில்லை. அமெரிக்கரின் முயற்சியால் இறப்போரின் எண்ணிக்கை குறைந்தது ; கல்வி புகட்டப்பட்டது; பொதுநலத் திட்டங்கள் பல வகுக்கப்பட்டு நிறை வேற்றப்பட்டன ; இவற்றின் விளைவாக மக்கள்தொகைப் பெருக லாயிற்று. அதனையொட்டிப் பல பொருளாதாரச் சிக்கல்கள் உருவாயின. மக்களுடைய வாழ்க்கைத்தரம் குறைவாகவே இருந்து வந்தது. சர்க்கரை உற்பத்தி செய்யும் அமெரிக்க வர்த்தக நிறுவனங்கள் பியூர்ட்டரிகோவில் நிலங்களைச் சொந்தமாக்கிக் கொண்டன. பியூர்ட்டரிகோ மக்கள் பெரும்பாலும் பண்ணைத் தோட்டங்களில் கூலிக்கு வேலை செய்தனர். அவர்களுக்கு மிகவும் குறைவான கூலியே தரப்பட்டது. சர்க்கரை வாணிகத்தில் மந்தம் ஏற்பட்டபோதெல்லாம் ஏழைக் கூலிகள் அவதியுற்றனர். 1930ஆம் ஆண்டளவில் ஏற்பட்ட பொருளாதார மந்தத்தின்போது பியூர்ட்டகோவில் 60 சதவீத மக்கள் வேலையில்லாதிருந்தனர்.

## பிலிப்பைன்ஸ் தீவுகள்

பிலிப்பைன்ஸ் தீவுகளில் அமெரிக்கா நன்முறையில் அரசாட்சியினை நிறுவியிருந்தது. துவக்கத்தில் அமெரிக்கா சற்று கொடுமையாக நடந்து கொண்டமையால் பிலிப்பைன்ஸ் மக்கள் எமிலியோ அகினல்டோ (Emilio Aguinaldo) என்பவரின் தலைமையில் கலகம் செய்தனர். உடனே, தளகர்த்தர் ஆர்த்தர் மெக்கார்தர் (Arthur Mcarthur) தலைமையில் 70,000 அமெரிக்க வீரர்கள் பிலிப்பைன்ஸுக்கு அனுப்பப்பட்டனர். கிட்டத்தட்ட மூன்றாண்டுகள் கடுமையாகச் சண்டையிட்டு, மெக்கார்தர் கலகக் காரர்களை அடக்கி ஒடுக்கினர். 1901ஆம் ஆண்டு பிலிப்பைன்ஸ்

மக்களுக்குத் தன்னாட்சி வழங்கப்பட்டது. முதல் ஆளுநராக வில்லியம் ஹோவர்டு டாப்டு (William Howard Taft) என்பவர் நியமிக்கப்பட்டார். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் கொண்ட சட்டமன்றம் ஒன்றும் நிறுவப்பட்டது. மக்களிடையே கல்வியறிவு பரப்பப்பட்டதோடு, பொதுச்சுகாதாரநலமும் உயர்த்தப் பட்டது. பொருளாதார அடிப்படையில் பிலிப்பைன்ஸ் தீவுகள் பயனற்றவையாகவே இருந்தன. தொலைக்கிழக்கு நாடுகளோடு தொடர்பு கொள்ள, ஒரு சிறந்த தளமாகப் பிலிப்பைன்ஸ் பயன் படும் என்ற நோக்கமும் சரிவர நிறைவேறவில்லை.

## சீனாவில் நுழைவுச்சலுகை

## (The Open Door in China)

சீனாவுக்கும் ஜப்பானுக்குமிடையே 1894-1895-ல் நடை பெற்ற போரில் சீனா படுதோல்வியடைந்தமையால், சீனாவின் வலிமை குன்றிய நிலையினை உலக நாடுகள் நன்கு உணர்ந்தன. ஜப்பான் தனது அரசியல், பொருளாதார ஆதிக்கத்தைச் சீனப் பேரரசில் நிறுவிவிடக் கூடும் என அஞ்சிய ஐரோப்பிய நாடுகள் போட்டியிட்டுக் கொண்டு தத்தமக்கு வாணிகச் சலுகைகளைப் பெறவும், சில நிலப் பகுதிகளில் ஆதிக்கத்தை நிலைநாட்டவும் விரைந்தன. தொலைக் கிழக்கு நாடுகளின் வாணிகத்தைப் பற்றிய செய்திகளிலும், அரசியல் உறவு பற்றிய சிக்கல்களிலும் அமெரிக்க ஐக்கிய நாடு வழக்கமாக ஒத்துழைப்புக் கொள்கையையே கடைப்பிடித்து வந்தது. தொலைக் கிழக்கு நாடுகளின் இறைமைத்தன்மையைப் போற்றிய அமெரிக்கா, பிறநாடுகள் அந் நாடுகளையோ அவற்றின் பகுதிகளையோ கைப் பற்றுவதை எதிர்த்து வந்தது. தொலைக் கிழக்கு நாடுகளில் அனைவருக்கும் வாணிக உரிமைகள் சமமாக வழங்கப்பட வேண்டும் என்று அமெரிக்கா கூறிவந்தது. பேரரசுக் கொள்கையைப் பின்பற்றிய பிறநாடுகள் அமெரிக்காவின் கருத்துகளை ஏற்றுக் கொள்ளாது, சீனாவின் இயற்கைவளத்தைச் சுரண்டுவதிலும், துறை முகங்களைக் கைப்பற்றுவதிலும் மும்முரமாக ஈடுபட்டன.

அகன்ற நிலப்பரப்பும், உயர்ந்த மக்கள்தொகையும் கொண் டிருந்த சீனாவைப் பெயரளவில் மஞ்சு மரபினைச் சார்ந்த (Manchu Dynasty) அரசர்கள் ஆண்டுவந்தனர். பீக்கிங்கிலிருந்த மைய அரசுக்கு, மாநிலங்கள் பற்றுறுதி கொள்ளாது விருப்பப்படி இயங்கி வந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிரிட்டன், பிரான்சு, ருஷ்யா, ஜப்பான் ஆகிய நாடுகள் சீனாவின் எல்லைப்புற பகுதிகளில் தங்களது ஆதிக்கத்தை நிலைநாட்டி, காப்பாட்சியாளர் களாக விளங்கின. இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் சீனாவின்

மையப் பகுதிகளையும் அந் நாடுகள் கைப்பற்ற முனைந்தன. அரசியல் ஆதிக்கம் பெயரளவில் சீன அலுவலர்களிடத்து இருந்தது. பிற நாட்டவர்கள் முதலீடு செய்வதிலும், பொருளாதாரத்தைக் கட்டுப் படுத்துவதிலும் முழு உரிமை பெற்று விளங்கினர்; நாளாவட்டத்தில் சீனவைத் தங்களது குடியேற்றப் பகுதிகளாக மாற்றக்கூடும் என்றும் எதிர்ப்பார்க்கப்பட்டது.

பிலிப்பைன்ஸ் தீவுகளைப் பெற்றபின் அமெரிக்கா, சீனவோடு வாணிகத்தொடர்பு கொள்ள நல்வாய்ப்பினைப் பெற்றது. பிற நாடுகளுக்குச் சீன எண்ணிறந்த சலுகைகளை அளித்தமையால், அமெரிக்கா தனது வர்த்தகம் பாதிக்குமென அஞ்சியது. அதிலும் சிறப்பாக அமெரிக்கா, மஞ்சூரியாவில் மிகுந்த அக்கறை கொண் டிருந்தது. அமெரிக்க ஐக்கிய நாட்டைப்போல பிற நாடுகளும் சீன துண்டாக்கப்படுவதைக் கண்டு கவலை கொண்டன. நெடு நாள்களாகத் தொலைக்கிழக்கில் பல சிறப்புரிமைகளை அனுபவித்து வந்த பிரிட்டனும், பிறநாடுகள் சீனவோடு உரிமை கொண் டாடுவதைக் கண்டு அச்சமுற்றன. அமெரிக்க ஐக்கிய நாடு விரும்பியதைப்போல, தானும் நுழைவுச்சலுகைகளைப் பெற விரும்பி, 1823ஆம் ஆண்டிலேயே பிரிட்டன், அமெரிக்காவோடு இணைந்து கூட்டறிக்கை ஒன்றினை வெளியிட முயற்சித்தது. கட்டுப்பாடு மிகுந்த ஒப்பந்தங்களைத் தவிர்க்கவேண்டும் என்ற கொள்கையில் ஈடுபாடு கொண்ட மெக்கின்லி, பிரிட்டனோடு இணைந்து ஒரு கூட்டுக்கொள்கை அறிவிப்பை வெளியிட மறுத்து விட்டார். பிறகு, பிரிட்டன் நுழைவுச்சலுகை பெறும் எண்ணத்தைக் கைவிட்டது. சீனவின் சந்தையினைப் பங்கிட்டுக்கொள்வதில் பிரிட்டன், பல நாடுகளோடு ஒப்பந்தங்கள் செய்து கொண்டது. மேலும், 1902ஆம் ஆண்டு பிரிட்டன், ஜப்பானுடன் ஓர் உடன் படிக்கை செய்து கொண்டது.

வெளிநாட்டுறவுச் செயலாளரான ஜான் ஹே (John Hay) சீனவின் வாணிகத்தில் சமஉரிமை கோரி குறிப்பு ஒன்றினை 1899ஆம் ஆண்டு ஐரோப்பாவின் பெரிய நாடுகளுக்கு அனுப்பினர். அதில் அந்தந்த ஐரோப்பிய நாடுகள் உரிமைபெற்றிருந்த சீனவின் பகுதிகளில் ஒரேமாதிரியான வாணிகச் சலுகைகளைப பிற நாடு களுக்குச் சமமாக அளிக்க வேண்டுமெனக் கோரப்பட்டது. இத்தகைய நுழைவுச்சலுகைக் கோரிக்கையினைச் செயற்படுத்த ஜான் ஹே அதிகார பூர்வமாக நடவடிக்கைகள் மேற்கொள்ளலானர். சீனவோடு வாணிகத்தொடர்பு கொள்ளவும், அங்கு முதலீடு செய்யவும் அமெரிக்கர் எல்லாவிதமான உரிமைகளையும் பெற வேண்டுமென்பதே அவரது குறிக்கோளாகும். சீனவின் நிலப்பகுதியில் தனது

ஆதிக்கத்தைச் செலுத்த விரும்பாத அமெரிக்கா, நுழைவுச் சலுகையினை மட்டுமே பெறவிரும்பியதால். வேறு வழியின்றி ஜான் ஹே அக் குறிப்பினை வெளியிட்டார். அக் குறிப்பினை ஏற்று உடனடியாகப் பிற நாடுகள் விடையளிக்கவில்லை. இருப்பினும் அந் நாடுகள் ஒப்பந்தம் தெரிவித்து விடையளித்ததாக ஜான் ஹே கூறிக் கொண்டார்.

அமெரிக்க ஐக்கிய நாடு, தனது நுழைவுச் சலுகையினைப் பெற ஒரு நல்ல வாய்ப்பினை அளிக்கும் வகையில், சீனாவில் சில நிகழ்ச்சிகள் நடைபெற்றன. சீன-ஜப்பானியப் போரில் சீனா தோல்வியுற்றமையால், சீன அரசு உள்நாட்டில் பல சீர்திருத்த வேலைகளில் ஈடுபட்டது. சீர்திருத்தக் கருத்துகளை அரசின் அலுவலர்கள் சிலரும், சீனாவின் நாட்டுத் தலைவியாகத் திகழ்ந்த டவேஜர் அரசியும் (Empress Dowager) எதிர்த்தனர். எனவே, முன்னேற்றத் திட்டங்கள் அனைத்தும் தடைப்பட்டன. வெளிநாட்டுக்காரர்கள் தங்களுடைய நாட்டின் இயற்கைவளத்தையும், செல்வத்தையும் சூறையாடுவது கண்ட சீனமக்களில் குறிப்பிட்ட சிலர் ஒன்றுகூடி, வெளிநாட்டினரை வெளியேற்றத் திட்டமிட்டனர். அவர்கள் ஒன்று கூடி மறைவான கழகம் ஒன்றை அமைத்தனர். அயல்நாட்டினர்க்கு எதிரிடையான அச் சீனக்கழக உறுப்பினர்கள் பாக்ஸர் (Boxer) என அழைக்கப்பட்டனர். அவர்கள், அரசிக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யத் திட்டமிட்டு அதன்படி 1900 ஆண்டு, மேத் திங்கள் சீனாவின் வடபகுதியில் பாக்ஸர்கள் கிளர்ந்தெழுந்து நூற்றுக் கணக்கான வெளிநாட்டவர்களைக் கொன்றனர். டியன்ட்ஸின் (Tientsin) என்னுமிடத்திலிருந்த வெளிநாட்டவர் குடியேற்றத்தையும், பீக்கிங்கிலிருந்த வெளிநாட்டவரது தூதுவரகங்களையும் பாக்ஸர்கள் முற்றுகையிட்டனர்.

பாக்ஸர் கலகம் மூண்ட உடனே வெளிநாட்டு அரசுகள் படை வீரர்களை விரைந்தனுப்பின. அமெரிக்கா, பிலிப்பைன்ஸிலிருந்து தளபதி சாபி (Chaffee) என்பவரின் தலைமையில் 2500 படை வீரர்களைச் சீனாவுக்கு அனுப்பிற்று. டியன்ட்ஸினும், பீக்கிங்கும் பாக்ஸர்களின் முற்றுகையினின்றும் மீட்கப்பட்டன. ஓராண்டுக் கழித்து சீனா வெளிநாட்டவர்களுடன் பாக்ஸர் கூட்டுஒப்பந்தத்தைச் (Boxer Protocol) செய்து கொண்டது. வெளிநாட்டவர்களைத் தாக்கிக் கொலைசெய்தவர்களைத் தண்டிக்கச் சீனஅரசு ஒப்புக் கொண்டது. மேலும் இழப்பீடாக வெளிநாட்டவர்களுக்கு 333 மில்லியன் டாலர் அளிக்க இசைந்தது. அத் தொகையில் 24 மில்லியன் டாலர் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குக் கிடைத்தது. அமெரிக்க அரசு அத் தொகையில் பாதிக்குமேல் சீன அரசுக்கே

திருப்பியளித்தது. சீன அரசு அத் தொகையினை மூலதனமாகக் கொண்டு சீனமாணவர்களை அமெரிக்காவிலுள்ள கல்லூரிகளில் மேற் படிப்புக்கு அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டது.

அமெரிக்க ஐக்கிய நாடு சீனாவில் நுழைவுச் சலுகையை மட்டும் பெற்றதோடல்லாமல், சிதைந்து போன சீனப்பேரரசின் ஒருமைப் பாட்டினைக் காக்கும் பொறுப்பையும் பெற்றது. இவ்வகையில் சீனாவின் உள்நாட்டு அரசியலில் அமெரிக்கா தலையிட செனட் சபையோ பொதுமக்களோ கூட்டாட்சி அரசுக்கு எத்தகைய உரிமையினையும் வழங்கவில்லை. சீனப்பேரரசினைக் காக்கும் பொறுப்பினை அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற பிற ஐரோப்பிய நாடுகளின் துணைகொண்டுதான் ஏற்றுக்கொண்டு செயலாக்கியது.



கரீபியன் கடற்பகுதி நாடுகள்

கட்டுப்படுத்தும் ஒப்பந்தங்களை எதிர்த்த அமெரிக்க ஐக்கிய நாடு தனது அரசியல் கோட்பாடுகளுக்கு மாறாக, சீனாவில் பிற நாடு களுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள நேரிட்டது. துவக்கத்தில் நுழைவுச் சலுகை பெறுவதற்காகமட்டுமே அமெரிக்கா, பிரிட்டனுடன் பாதுகாப்புத் திட்டங்களை வகுத்தது. ஆனால், சற்றும் எதிர்பாராத வகையில் சீனாவின் உள்நாட்டு அரசியலில் அமெரிக்கா பங்கு கொள்ள நேரிட்டது.

அமெரிக்காவின் நுழைவுச்சலுகைக்கொள்கை சில வழிகளில் பயன்மிக்கதாகவும் இருந்தது. சீனாவை ஒரு சில ஆண்டுகளுக்குச் சிதறுபடாமல் அக் கொள்கை காத்தது. மேலும் உலக அரங்கில் அமெரிக்காவின் புகழ் உயரவும் வழிசெய்தது. எல்லாவற்றிற்கும்

மேலாக, சீனவைப் பொறுத்தமட்டில் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்குமிடையே ஏற்பட்ட உடன்பாட்டினல், இருநாடுகளும் ஒன்றுக்கொன்று ஆதரவாக உலகஅரங்கில் உறவுகொண்டன. புதிய உலகில், அதிலும் சிறப்பாகக் கரீபியன் கடற்பகுதியில், அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஆதிக்கத்தைப் பிரிட்டன் ஆதரித்தது. அதுபோலவே தொலைக்கிழக்குப் பகுதியில் பிரிட்டனின் ஆதிக்கத்தையும், கொள்கையையும் அமெரிக்கா ஒருமனதாக ஆதரித்தது. இந் நல்லுறவால் இருநாடுகளுக்குமிடையே நெடுநாள்களாக இருந்துவந்த சிக்கல்கள் சில எளிதாகத் தீர்க்கப்பட்டன.

## கரீபியன் கடற்பகுதியில் அமெரிக்கா

சீனவைக் காட்டிலும் அமெரிக்காவுக்கு அருகாமையிலிருந்த கரீபியன் கடற்பகுதியில், அமெரிக்க ஐக்கிய நாடு தனது நலனைப் பேணுவதில் துணிந்து படை வலிமையைப் பயன்படுத்திற்று. தனது படை வலிமையை எல்லாச் சமயத்திலும், (நல்ல வகையில் நல்ல குறிக்கோளுக்காக அமெரிக்கா பயன்படுத்திற்று எனச் சொல்லுவதற்கில்லை. இருபதாம் நூற்றுண்டின் துவக்கத்தில்), பல முறை அமெரிக்கா முழுஉரிமை பெற்ற குடியரசுகளின் உள்நாட்டு அரசியலில் காரணமின்றித் தலையிட்டது. இதனைக் கண்ட தென் அமெரிக்க நாடுகள் அமெரிக்க ஐக்கிய நாட்டின்மீது பகைமை உணர்ச்சி கொண்டன. தென்பகுதியிலிருந்த பிற நாடுகளை மதித்து, கட்டுப்படுத்தும் ஆற்றலோடு அமெரிக்க ஐக்கிய நாடு நடந்துகொண்டிருக்குமேயானல், மேலும் வெற்றிகரமாகத் தன்னுடைய கொள்கைகளை அமெரிக்கா செம்மையாகச் செயலாக்கியிருக்க முடியும்.

மெக்கின்லியின் மறைவுக்குப் பிறகு 1901ஆம் ஆண்டு தியோடர் ரூஸ்வெல்ட் குடியரசுத் தலைவர் பதவியை ஏற்ருர். ரூஸ்வெல்ட், வெளிநாட்டுக் கொள்கையில் படைவலிமையைக் காட்டி, பிற நாடுகளை இணங்க வைக்கும் முறையைப் பின்பற்றினர். இதனைச் சிறப்பாக அவர் பனமாக் கால்வாய் வெட்டுவதற்கான உரிமையைப் பெற்ற முறையில் காணலாம்.

### பனமாக்கால்வாய்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் பேரரசுக் கொள்கையைப் பரப்பியவர்கள் பனமாக் பூசந்தியில் அமெரிக்காவால் வெட்டப்பட்டுப் பராமரிக்கப்படுகிற கால்வாய் ஒன்று கட்டாயம் தேவை என ஓயாது வலியுறுத்தி வந்தனர். அப்படிப்பட்ட கால்வாய் ஒன்றினை வெட்ட 1850ஆம் ஆண்டு கையெழுத்திடப்பட்ட கிளேட்டன்-பல்வர் உடன்

படிக்கை (Clayton-Bulwer Treaty) தடையாக இருந்துவந்தது. ஏனெனில் அந்த உடன்படிக்கையின்படி, பனுமா பூசந்தியில் ஒரு கால்வாய் வெட்டப்பட்டால், பிரிட்டனுடன் இணைந்தே அதனைக் கட்டுப்படுத்த வேண்டுமென்றும், அக் கால்வாய் நடுநிலைமையாக்கப் பட்டு, போர்க்காலத்திலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் எதிரிகளும் பயன்படுத்தத் திறந்துவிடப்பட வேண்டுமென்றும் சொல்லப் பட்டிருந்தது. இதற்கிடையே பனுமாக்கால்வாய் ஒன்றினை வெட்டுவதற்கான உரிமையைக் கொலம்பியா குடியரசுனின்று ஒரு பிரெஞ்சு நிறுவனம் 1881ஆம் ஆண்டு பெற்றது. அந் நிறுவனம் ஒரு சில மைல்களை வெட்டிவிட்டு, போதிய நிதியில்லாதுபோகவே அத் திட்டத்தைக் கைவிட்டது.

ஸ்பானிய—அமெரிக்கப் போருக்குப் பிறகு, கரீபியன் கடற் பகுதியில் அமெரிக்க ஐக்கிய நாடு இடர்க்காப்புறுதி பெற்று விளங் கியது. மேலும் பசிபிக் பெருங்கடலை இணைக்கும் வகையில் ஒரு கால்வாய் கட்டாயம் தேவை என்பதனையும் அமெரிக்கர் உணர்ந்தனர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெளிநாட்டுக் கொள்கையில் தனக்குகந்த சில மாற்றங்களைக் கண்ட பிரிட்டனும் தனது பழைய உரிமைகளை விட்டுக்கொடுக்க முன்வந்தது. அதன் விளைவாக அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்குமிடையே 1901ஆம் ஆண்டில் ஹேஃபான்ஸ்போட் உடன்படிக்கை (Hay-Pauncefote Treaty) கையெழுத்திடப்பட்டது. அவ்வுடன்படிக்கையின்படி அமெரிக்காவிற்கு ஒரு கால்வாய் வெட்ட இசைவு தரப்பட்டது. அமைதிக் காலத்தில் அக் கால்வாய் வழியாக எல்லா நாட்டுக் கப்பல்களும் ஒரே மாதிரியான கட்டுப்பாடு களோடு செல்ல அமெரிக்கா அனுமதிக்க வேண்டுமென்று கோரப் பட்டது. அமெரிக்காவும் அக் கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டது. வெட்டப்போகும் கால்வாயினைப் பனுமா வழியாக வெட்டுவதா அல்லது நிக்காராகுவா (Nicaragua) வழியாக வெட்டுவதா என்பது பற்றி வினு எழுந்தது. செவ்வையாக ஆராய்ந்து பார்த்த பிறகு பனுமா வழியாகவே கால்வாயினை வெட்ட காங்கிரஸ் ஒரு தீர்மானத்தை இயற்றியது. இந்தப் பனுமா வழியினைப் பிரெஞ்சு நிறுவனத்தினர் வரவேற்றனர். ஏனெனில் அமெரிக்காவால் வெட்டப் படும் திட்டத்திற்கு தனது உரிமைகளையும், சொத்தினையும் விற்று விடலாம் எனப் பிரெஞ்சு நிறுவனம் கருதிற்று.

கால்வாய் வெட்டப்படவிருந்த (பனுமா, கொலம்பியா குடியரசின் ஒரு பகுதியாய் விளங்கிற்று. எனவே பனுமா வழியாகக்) கால்வாய் வெட்டுவதற்கான உரிமையைப்பெற கொலம்பியா அரசுடன் அமெரிக்கா ஓர் உடன்பாட்டினை 1903ஆம் ஆண்டு செய்துகொண்டது. அதற்கு ஹேஃஹெரன் உடன்பாடு (Hay-Herran Treaty) என்று

பெயர். அவ்வுடன்பாட்டின்படி அமெரிக்க ஐக்கிய நாடு, கொலம்பியா விற்குப் பத்து மில்லியன் டாலர் பணமாக அளிக்க ஒப்புக்கொண்டது. மேலும், பனமா நிலப்பகுதிக்குக் குத்தகைப் பணமாக 2,50,000 டாலர் அளிக்கவும், பிரெஞ்சு நிறுவனத்தின் உரிமைகளைப் பெற அந் நிறுவனத்திற்கு நாற்பது மில்லியன் டாலர் அளிக்கவும் அமெரிக்கா இசைந்தது. இவ்வுடன்பாடு கொலம்பியாவின் செனட் சபைக்கு ஒப்புதல் பெறுவதற்காக அனுப்பப்பட்டது. உடன்பாட்டின் உட்பிரிவுகள் மனநிறைவை அளிக்கவில்லையெனக் கொலம்பியாவின் செனட்சபை அவ்வுடன்பாட்டினை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. எனவே, வேறொரு புதிய உடன்பாட்டினைக் கொலம்பியாவோடு செய்து கொள்ள அமெரிக்கா முயன்றிருக்கலாம். அல்லது கால்வாயினைப் பனமா வழியாக வெட்டுவதற்குப் பதிலாக நிக்கராகுவா வழியாக வெட்ட முயன்றிருக்கலாம். ஆனால், சீற்றங் கொண்ட ரூஸ்வெல்ட் இம் மாற்றுமுறைகளைப் பின்பற்ற மறுத்தார். பனமாவில் ஒரு புரட்சியை நேரிடையாக ரூஸ்வெல்ட் தூண்டிவிடா விட்டாலும், பனமாமக்கள் கொலம்பியாவினின்று பிரிந்துசெல்ல புரட்சி செய்தால், தாம் ஆதரவு தரக்கூடுமென ரூஸ்வெல்ட் மறை முகமாகக் கூறிவந்தார். பனமா புரட்சி செய்து கொலம்பியாவி னின்று பிரிந்தால் தங்களது நிறுவனத்திற்குப் பெரும் ஆதாயம் கிட்டும் என நினைத்த பிரெஞ்சு நிறுவனமும், பனமா மக்களைப் புரட்சிப் பாதையில் செல்லத் தூண்டிற்று. அதன்படியே பனமா மக்களும் கிளர்ச்சியுற்றெழுந்து தங்களை ஒரு சுதந்திரக் குடியரசாக அமைத்துக் கொண்டனர். பனமாக் குடியரசை அமெரிக்க ஐக்கிய நாடும் உடனே அங்கீகாரம் செய்தது. கொலம்பியா மீண்டும் பனமாவைத் தனது ஆட்சிக்குள் கொண்டு வரமுடியாமலிருக்க அமெரிக்கப் போர்க்கப்பலொன்று புரட்சி துவங்கும் முன்னரே பனமா பகுதிக்கு அனுப்பப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடு பனமாக் குடியரசுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டது. அவ்வொப்பந்தப்படி, பனமாக் கால்வாய் வெட்டுவதற்கான நிலப் பகுதியைக் குத்தகைக்கு 99ஆண்டுகளுக்குப் பெற்றது. மேலும், அப் பகுதியில் ஒழுங்கினைப் பராமரிக்கவும் அமெரிக்கா உரிமை பெற்றது. பழைய பிரெஞ்சு நிறுவனம் நாற்பது மில்லியன் டாலர் பெற்றது. பனமாக் கால்வாய் வெட்டுவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு, 1914ஆம் ஆண்டு முதல் கப்பல் அக் கால்வாயின் வழியே மிதந்து சென்றது. கிழக்கே கோலோனில் (Colon) துவங்கி மேற்கே பனமாவரை வெட்டப்பட்ட அக் கால்வாயின் நீளம் 51 மைல்கள். அது வெட்டப்படுவதற்கான மொத்தச் செலவு 373,600,000 டாலராகும்.

**ரூஸ்வெல்ட் துணை முடிவு (The Roosevelt Corollary)**

பனமாக் கால்வாய் வெட்டப்பட்ட பிறகு, கரீபியன்கடற்பகுதியில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொறுப்பு அதிகரித்தமையால், அப் பகுதியினைப் பாதுகாக்க அமெரிக்கா நடவடிக்கைகளை மேற் கொண்டது. கரீபியன் கடற்பகுதியில் அமெரிக்காவின் பகைவர்கள் தளங்களை அமைக்காதவாறு பார்த்துக் கொள்ள அமெரிக்கா நாட்டங் கொண்டது. இதன் அடிப்படையில்தான், மன்ரோ கொள்கைக்கு இணைப்பாக ரூஸ்வெல்ட் துணைமுடிவு 1904ஆம் ஆண்டு வெளியிடப் பட்டது. கரீபியன் கடற்பகுதியிலும், மைய அமெரிக்காவிலும் இருந்த சிறுசிறு குடியரசு நாடுகளில் வல்லாட்சியாளர்களே பதவி வகித்தனர். அந் நாடுகளில் அடிக்கடி புரட்சிகள் நிகழ்ந்தன: அப்போதெல்லாம் அங்கு வாழ்ந்துவந்த வெளிநாட்டுமக்கள் பெருந் தொல்லைக்கு ஆளாயினர். வல்லாட்சியாளர்களால் ஆளப்பட்ட நாடுகள், முன்பு பெரும்பாலும் ஐரோப்பிய நிதியாளர்களிடமிருந்து பெற்றக் கடன்களைத் திருப்பித்தரத் தவறின. எனவே ஐரோப்பிய வல்லரசுகள், தத்தம் குடிமக்களுடைய உரிமைகளைப் பேணுவதற்காக அச் சிறு நாடுகளின் ஆட்சியில் படை வலிமையோடு தலையிடலாயின. அனைத்துநாடுகள் சார்ந்த சட்ட நெறிப்படி அப்படித் தலையிடுவது சரியென ஏற்றுக்கொள்ளப்பட்டது. எடுத்துக்காட்டாக, டாமினிக்கா குடியரசு சரிவரக் கடன்தொகைகளைத் திருப்பித் தராமையால் 1904ஆம் ஆண்டு பிரான்சு, இத்தாலி, பெல்ஜியம் ஆகிய நாடுகள் படைகொண்டு மிரட்டிக் கடன்தொகைகளைப் பெறத் திட்டமிட்டன. இவ்வகையில் கடனைத் திருப்பிப் பெறுவதற்கென படைவலிமையைப் பயன்படுத்தத் திட்டமிடும் ஒரு நாடு, தனது ஆதிக்கத்தினை நிலை நாட்ட, தளங்களையும் அமைக்க முயற்சிக்கக்கூடும் என அஞ்சப் பட்டது. அத்தகைய இடர்ப்பாடான நிலையினைத் தவிர்க்க வேண்டி எந்த நாடாவது அமெரிக்கக் கண்டங்களிலிருந்த நாடுகளில் (தலையிட விரும்பினால் அந்த நாடு அமெரிக்க ஐக்கிய நாட்டின் வழியாகத்தான்) தலையிட வேண்டுமென, அமெரிக்க ஐக்கிய நாடு அறிவித்தது. இந்த அறிவிப்பானது, எந்த அமெரிக்க நாட்டையும் பிற நாடுகள் படை வலிமையால் கட்டாயப்படுத்தக்கூடாது எனப் பல ஆண்டுகளுக்கு முன்பே அறிவிக்கப்பட்ட மன்ரோ கொள்கைக்கு, இணையாக அமைந்தது. இக் கருத்து, ரூஸ்வெல்ட்டால் வெளியிடப்பட்டமையால் இதற்கு "ரூஸ்வெல்ட் துணை முடிவு" எனப் பெயர் தரப்பட்டது.

ரூஸ்வெல்டின் கொள்கையினைப் பொதுவாகப் ஐரோப்பிய நாடுகள் குறைகூறின. முதலீடு செய்வதற்கு மட்டும் செல்வந் தர்களை ஊக்குவித்துவிட்டு, கடனைமட்டும் திருப்பிப் பெற உரிமை கோர முடியாது என்ற ரூஸ்வெல்டின் கொள்கை விளக்கத்தை

பன்னாட்டுச் சட்ட அடிப்படையில் ஏற்றுக்கொள்ள முடியாத நிலை இருந்து வந்தது. ரூஸ்வெல்ட் நினைத்ததுபோலத் தலையிடும் உரிமையினை விட்டுக்கொடுக்கப் பிற நாடுகள் இசையவில்லை. ஜெர்மனியும், பிரான்சும் படைவலிமை கொண்டு தென்அமெரிக்க நாடுகளில் தங்களது உரிமைகளை நிறுவத் திட்டமிட்டமையால்தான், ரூஸ்வெல்ட் தனது கொள்கையினை வெளியிட்டார். ஆனால், தென்அமெரிக்க நாடுகள், ஐரோப்பிய நாடுகளின் தலையீட்டையோ அமெரிக்க ஐக்கிய நாட்டின் எதிர்ப்பையோ பொருட்படுத்தாமல் இருந்து வந்தன.

ரூஸ்வெல்ட் துணை முடிவுக் கொள்கையினை முதன்முறையாகச் செயல்படுத்த, அமெரிக்க ஐக்கிய நாடு ஒரு வாய்ப்பினை 1905ஆம் ஆண்டு பெற்றது. டாமினிக்காக் குடியரசு தான் வாங்கிய கடன்களைத் திருப்பித்தர இயலாத நிலையில் இருந்தது. எனவே அமெரிக்க ஐக்கிய நாடு, டாமினிக்காவின் நிதிநிலையினைக் கட்டுப்படுத்த முனைந்தது. வெளிநாட்டுக் கடன்தொகையினைக் கணிசமாகக் குறைத்த பின்னர், வெளிநாட்டுக் கடன் கணக்கு ஐரோப்பிய பாங்குகளிலிருந்து அமெரிக்க ஐக்கிய நாட்டு பாங்குக்கு மாற்றப்பட்டது. அமெரிக்க அலுவலர்கள் வரியினைத் திரட்டி, ஒரு பகுதியை டாமினிக்க அரசுச் செலவுக்கு அளித்துவிட்டு, மற்றொரு பகுதியை வெளிநாட்டுக் கடன்களை அடைக்கப் பயன்படுத்தினர். இவ்வகையில் நிதிநிலைமைக் கட்டுப்பாட்டினைத் தவிர, பிற துறைகளில் டாமினிக்கா முழு உரிமையுடன் திகழ்ந்தது. இப்படி ரூஸ்வெல்ட் துணை முடிவுக் கொள்கையினால் டாமினிக்காவுக்குப் பல நன்மைகள் ஏற்பட்டன.

ரூஸ்வெல்ட் தமது பதவிக் காலத்தில், துணைமுடிவுக்கொள்கையினடிப்படையில் இரண்டாவதாகக் கியூபாவில் தலையிட்டார். 1906ஆம் ஆண்டு கியூபாவில் புரட்சியாளர்கள் கலகம் விளைவித்தமையால் அமெரிக்கா தனது படைகளை அனுப்பியது. அமெரிக்கப் படைகள் 1909ஆம் ஆண்டு வரை அங்கு இருந்தன. ரூஸ்வெல்டின் இரண்டாவது பதவிக்காலத்தின்போது (1905-1909) தென் அமெரிக்க நாடுகளுடன் கொண்ட உறவு நன்முறையில் விளங்கியது. அந் நல்லுறவுக்குக் காரணமாக இருந்தவர் ஹேயை அடுத்து வந்த எலிஹுரூட் (Elihu Root) என்ற பெயருடைய வெளிநாட்டுறவுச் செயலாளர் ஆவார். அமெரிக்க வரலாற்றில் சிறப்பு மிக்க செயலாளர்களில் ரூட்டும் ஒருவராவார். தென்அமெரிக்க நாடுகளின் நட்பைப் பெரிதும் போற்றியவர் அவர். அதனால்தான், அவர் ரூஸ்வெல்டின் 'வல்லரசுக் கோலை' (Big Stick) உறுதியான கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்.

தென்அமெரிக்க நாடுகளுடனான உறவுமுறையில் 1909ஆம் ஆண்டுக்குப் பிறகு டாப்ட் (Taft) குடியரசுத் தலைவர் பதவியேற்ற

திலிருந்து சில மாற்றங்கள் ஏற்பட்டன. பிலண்டர் நாக்ஸ் (Philander Knox) என்பவர் வெளிநாட்டுறவுச் செயலாளராகப் பணியாற்றினர். டாப்டும், நாக்ஸும் டாமினிக்காவில் அமெரிக்கா நிதிநிலைமைக் கட்டுப்பாட்டினைச் செலுத்தியது போலப் பிற கரீபியன் கடற்பகுதி நாடுகளிலும் (நிதிநிலைமையை ஏற்கத் திட்டமிட்டனர். ஒரு நாட்டின்) நிதிநிலைமையைக் கட்டுப்படுத்துவதன்மூலம் அந்த நாட்டில் அமெரிக்க ஐக்கிய நாடு தனது ஆதிக்கத்தை நிறுவுவதோடு, அந்த நாட்டின் செல்வவளத்தையும் ஒழுங்கையும் உயர்த்த முடியும் என இருவரும் கூறினர். இவ்வகையில் அரசியல் ஆற்றலை உயர்த்துவதற்காகப் பணத்தைக் கருவியாகப் பயன் படுத்தும் அரசியல் கொள்கைக்கு "டாலர் அரசியல் செயலாட்சி நயம்" (Dollar Diplomacy) என்ற பெயர் தரப்பட்டது. டாலர் அரசியல் செயலாட்சி நயத்தை, நாக்ஸ் கடுமையாகப் பின்பற்றிச் செயலாக்க முற்பட்டார்.

நாக்ஸ் பதவியேற்ற சமயம், நிக்கராகுவாவில் ஒரு புதிய அரசு பதவியேற்றிருந்தது. டாலர் அரசியல் செயலாட்சி நயத்தை நாக்ஸ் அங்குத் திணிக்க முனைந்தார். (நிக்கராகுவா அரசு பல ஐரோப்பிய நாடுகளினின்றும் கடன் வாங்கியிருந்தது. அவற்றைத் திருப்பித் தராமலிருந்ததால் ஐரோப்பிய நாடுகள் தலையிடக் கூடுமென அமெரிக்கா அஞ்சியது). நிக்கராகுவாவில் பதவியேற்றிருந்த புதிய அரசு அந் நாட்டின் கடன்தொகையினையெல்லாம் அமெரிக்க பாங்கு களின் நிதி உதவிகொண்டு அடைத்தாலொழிய அமெரிக்க ஐக்கிய நாடு அந்த அரசினை அங்கீகரிக்காது என நாக்ஸ் அறிவித்தார். நிக்கராகுவாவும் வேறுவழியின்றி அமெரிக்க ஆட்சியை ஏற்றுக் கொண்டது. சுங்கவரிகளைத் திரட்ட நாக்ஸ், அமெரிக்க அலுவலர்களை நியமித்தார். நிக்கராகுவா அரசின் நிதியைக் குறைவாகவே வைத்திருந்தால்,அதனைக் கிளர்ச்சி செய்து கைப்பற்ற எவருக்கும் ஆர்வமிராது என்ற நோக்கத்தோடு அமெரிக்கா சுங்கவரியின் ஒரு சிறுபகுதியை மட்டுமே அதற்கு அளித்தது.

நிக்கராகுவாவில் அமெரிக்காவின் தலையீடு இருபது ஆண்டு களுக்கு நீடித்தது. அமெரிக்க ஐக்கிய நாட்டுடன் நட்பு உறவினைக் கொண்ட அரசுகளையே நிக்காரகுவாவில் அமெரிக்கக் கப்பற்படை யினர் பதவியிலிருக்கச் செய்தனர். குறிப்பிட்ட சில ஆண்டுகளுக்கு ஒரு முறை தேர்தல் நடந்தபோதிலும், அவற்றில் யார்யார் வெற்றி பெறுவது என்பதனை முன்கூட்டியே அமெரிக்க அலுவலர்கள் நிருண யித்தனர். எனவே, நிக்கராகுவாவினை அமெரிக்கா வெற்றிகரமாக ஆட்சி புரிந்தது என்று சொல்வதற்கில்லை. ஆனால், அமெரிக்கா ஒரு சில நன்மைகளைப் பெற்றது. ஒரு கால்வாய் வெட்டுவதற்கான

நிலப்பகுதியை மூன்று மில்லியன் டாலருக்கு நிக்கராகுவாவிட மிருந்து பெற்றது. மேலும் கடற்படைத் தளங்களைக் கரீபியன் கடற் பகுதியில் 'கிரேட் கார்ன்' (Great Corn), 'லிட்டில் கார்ன்' (Little Corn) ஆகிய தீவுகளிலும், பசிபிக்பெருங்கடல் பக்கம் பொன்ஸகா வளை(Fonseca Bay)குடாவிலும் அமைக்க அமெரிக்கா உரிமை பெற்றது.

உட்ரோ வில்சன் (Woodrow Wilson) டாப்டையடுத்து குடியரசுத் தலைவராக 1913ஆம் ஆண்டு பதவியேற்றார். வில்சன் பேரரசுக் கொள்கையைக் கடுமையாக எதிர்ப்பவர். அமெரிக்க ஐக்கிய நாடு ஓர் அடி நிலத்தைக்கூட இனியும் கைப்பற்ற முயற்சிக்காது என்று வில்சன் ஒருமுறை அறிவித்திருந்தார். பொருளாதார நலனுக்கு ஒரு நாட்டின் வெளிநாட்டுக் கொள்கை அமையக் கூடாது என்றும் அவர் வலியுறுத்தினர். அண்மையிலுள்ள நாடுகளைப் பாதுகாப்பது, அமெரிக்க ஐக்கிய நாட்டின் நெறிமுறை சார்ந்த கடமையாகும் என்றும், அதன் பொருட்டு அமெரிக்கா மூத்த சகோதரன்போல நடந்துகொள்ள வேண்டுமென்றும் வில்சன் கருதினர். இத்தகைய உயர்ந்த கோட்பாடுகளைக் கொண்டிருந்த போதிலும், வில்சனது பதவிக் காலத்தில் அமெரிக்கா பல முறை பல நாடுகளின் உள்நாட்டு அரசியலில் தலையிட்டது. ரூஸ்வெல்ட் காலத்திலும், டாப்ட் காலத்திலும் தலையிடுவதைவிட எண்ணிக்கை யில் அமெரிக்காவின் தலையீடு வில்சன் பதவிக்காலத்தில் கூடுத லாகவே இருந்தது. இப்படிக் கொள்கைக்கு முரணாக வில்சனின் செயல் அமைந்தமை அனைவருக்கும் விளங்காத ஒரு புதிராகவே இருந்து வந்தது. அப்படி அவர் செயலாற்றியமைக்கு ஒரு காரணம் முதல் உலகப் போரின் (1914) துவக்கம் எனலாம். அப் போரில் ஜெர்மனி ஒரு வேளை வெற்றி பெற்றுவிட்டால் கரீபியன் கடற் பகுதியில் அமெரிக்காவுக்கு எதிர்ப்புத் தோன்றக்கூடும் என அஞ்சினர். பெரும்பாலும் கரீபியன் கடற்பகுதியில் அமெரிக்காவின் திட்டங்களை வெளிநாட்டுறவுத்துறையும், கப்பற் படைத் துறையும் சேர்ந்தே தீட்டினமையால் வில்சன் அவற்றிற்கு முழுப்பொறுப்பாளி யாகமாட்டார். அவர் வேறு பல முக்கியச் சிக்கல்களில் தம் கருத்தைச் செலுத்தினர்.

1915ஆம் ஆண்டு புரட்சியாளர்கள் கலகம் விளைவித்தமையால், ஹைதியில் (Haiti) அமைதியும் ஒழுங்கும் குலைந்திருந்தன. ஹைதி குடியரசுத் தலைவர் தமக்கு எதிரிகளாக இருந்த இருநூறு பேரை ஈவிரக்கமின்றிக் கொன்று குவித்தார். அதனைக் கண்டு வெகுண்ட பொதுமக்கள் கொதித்தெழுந்து, குடியரசுத் தலைவரை தலைநகரின் வீதி ஒன்றில் தாக்கி உடலைச் சின்னாபின்னமாக்கிக் கொன்று

விட்டனர். உடனே ஹைதியை அமெரிக்கக் கப்பற் படையினர் கைப் பற்றி, 1934 ஆம் ஆண்டு வரை தங்களது கட்டுப்பாட்டினுள் வைத்திருந்தனர். அந் நாட்டு மக்களைக் கொண்ட ஒரு சிறு அரசு ஹைதியில் இயங்கிற்று. ஹைதி குடியரசுக்கு ஒரு புதிய அரசிய லமைப்பும் அளிக்கப்பட்டது. கப்பற்படைத் துறையின் துணைச் செயலாளர் ஒருவர் அந்த அரசியலமைப்பைத் தீட்டினார். ஆனால் நடைமுறையில் அதிகாரம் கப்பற்படையினரிடத்துதான் இருந்து வந்தது. இருப்பினும் அமெரிக்கரது ஆட்சியினால் ஹைதி மக்கள் பல நன்மைகளைப் பெற்றனர். நாடு முழுவதும் சாலைகள் நன்கு அமைக்கப்பட்டன; கல்வியறிவு மக்களிடையே பரப்பப்பட்டது; மக்களது உடல்நலநிலையும் சிறப்புற்றிருந்தது. அமெரிக்காவின் ஆட்சியை எதிர்த்தவர்களெல்லாம் கடுமையாகத் தண்டிக்கப் பட்டனர்; அவர்களுடைய உரிமைகள் பல பறிக்கப்பட்டன.

டாமினிக்கக் குடியரசும் 1916ஆம் ஆண்டு அமெரிக்காவால் கைப்பற்றப்பட்டது. அங்கு நிதிநிலைமை குறித்து டாமினிக்க அரசுக்கும், அமெரிக்க அலுவலர்களுக்குமிடையே மோதல் ஏற்பட்டு முட்டுக்கட்டை நிலை உருவாயிற்று. எனவே அமெரிக்கக் கப்பற் படையினர் டாமினிக்காவைத் தங்களது ஆட்சியினுள் கொண்டு வந்து, 1924ஆம் ஆண்டு வரை நிலையாக அங்கிருந்தனர். வில்சனது பதவிக் காலத்தில் அமெரிக்கா, கியூபாவின் ஆட்சியிலும் தலையிட்டது. கியூபா, அமெரிக்காவின் கட்டுப்பாட்டின் கீழ் 1917ஆம் ஆண்டு முதல், 1922 வரை இருந்து வந்தது. இவ்வகையில், முதல் உலகப் போரின் இறுதியில் அமெரிக்கப் படையினர் நிக்கராகுவா, ஹைதி, டாமினிக்கா, கியூபா - ஆகிய நான்கு உரிமை பெற்ற குடியரசுகளில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர்.

## மெக்ஸிகோ புரட்சி
## (The Mexican Revolution)

மெக்ஸிகோ பற்றிய சிக்கல், கரீபியன் கடற்பகுதி நாடுகளிலும், தென் அமெரிக்க நாடுகளிலும் இருந்துவந்த சிக்கல்களைப் போலல்லாது வேறுவிதமாக இருந்து வந்தது. நிலப்பரப்பிலும், மக்கள்தொகையிலும் மெக்ஸிகோ ஒரு பெரிய நாடாகும் மெக்ஸிகோவுக்கும் அமெரிக்க ஐக்கிய நாட்டுக்குமிடையே 2000 மைல் நீளத்திற்குப் பொதுவான எல்லை இருந்தது. மதிப்புமிக்க இயற்கைவளங்களை மெக்ஸிகோ ஏராளமாகப் பெற்றிருந்தமையால், அது ஒரு கவர்ச்சி மிக்க நாடாக அமெரிக்க மக்களது கண்ணில் பட்டது. மெக்ஸிகோவில் வலிமைமிகுந்த 'காடில்லோஸ்' (Caudillos) என்றழைக்கப்படும் போர்வீரர்கள் நிறைய இருந்த

தோடு, அந்நாட்டு மக்களும் மிகுந்த தேசியப்பற்றுடையவர்களாக இருந்தனர். இத்தகைய வலிமைபொருந்திய நாட்டினை ஒரு சிறு அமெரிக்கக் கப்பற்படையினர் கைப்பற்றுவது என்பது முடியாத காரியமாகும். ஆகவே, வேறுவழிகளில் மெக்ஸிகோவின் சிக்கல்களைத் தீர்க்க வேண்டிய நிலையில் அமெரிக்கா இருந்தது.

மெக்ஸிகோவில் குடியரசுத் தலைவர் பதவியைத் தொடர்ந்து 1876ஆம் ஆண்டு முதல், 1911 ஆம் ஆண்டு வரை பொர்பீரீயோ டயஸ் (Porfirio Diaz) என்பவர் வகித்து வந்தார். மெக்ஸிகோவில் வெளிநாட்டவர்கள் ஏராளமாக முதலீடு செய்வதைப் பெரிதும் ஊக்குவித்துவந்தார். நாட்டின் கனிவளத்தை வெளிநாட்டு வாணிக மன்றங்களின் கூட்டவைகளுக்குப் பகிர்ந்தளிப்பதன்மூலம் நாடு செழிப்புற்றுத் தன்னிறைவு பெறும் என டயஸ் கருதினார். நடைமுறையில், மெக்ஸிகோவில் பாதிக்கும் மேலான செல்வத்தை, வெளிநாட்டு வாணிகர்கள் கட்டுப்படுத்தி வந்தனர். ஆனால், மெக்ஸிகோவின் பொருளாதாரவளர்ச்சியினைக் கண்ட மக்கள் டயஸை அக்கண்டத்தினுள் சிறப்புற ஆட்சி செய்த அரசியல்வாதிகளுள் ஒப்பற்ற தனிப்பெருந்தலைவராகக் கருதினர்.

மெக்ஸிகோவின் வளர்ச்சியும், செல்வப்பெருக்கமும் மேற்போக்கானதாகவே இருந்தது. நாட்டின் ஆதாயம் எல்லாம் நாட்டைவிட்டு வெளியே எடுத்துச் செல்லப்பட்டது. தொழில்நுட்பமான வேலைகளையெல்லாம் வெளிநாட்டவர்களே செய்தனர். அவர்கள் ஒரு குறிப்பிட்ட சில ஆண்டுகளுக்கு மெக்ஸிகோவில் தங்கினர். குறைந்த செலவில் பொருளீட்டிக்கொண்டு உல்லாசமான வாழ்க்கையை அவர்கள் நடத்தியதோடு, தங்களது ஆதாயத்தையும் தங்கள் நாட்டுக்கு எடுத்துச் சென்று வளமாக வாழ்ந்தனர். ஒரு சில மெக்ஸிகோ குடிமக்களுக்கு மட்டுமே தொழில்நுட்பக்கல்வி அளிக்கப்பட்டது ; பெரும்பாலானோர் பயிற்சித் திறமையற்றத் தொழிலாளர்களாகவே இருந்தனர். அவர்கள் நெடுநேரம் வேலை செய்து குறைவான கூலி பெற்றனர். சிற்றூர்களிலும் குடியானவர்கள் தங்களது நிலங்களை இழந்து கடனில் மூழ்கியிருந்தனர். ஏறத்தாழ அடிமைகள் போன்று ஏழைக்குடியானவர்கள் வாழ்ந்து வந்தனர்.

மக்களின் மனக்குமுறல்கள் இறுதியாக ஒரு புரட்சி வடிவில் வெடித்துப் பொங்கின. அதனால், மெக்ஸிகோவின் சமுதாயத்தில் பல வியத்தகு மாற்றங்கள் ஏற்பட்டன. 1911ஆம் ஆண்டு, எண்பது வயது நிரம்பிய குடியரசுத் தலைவர் டயஸ் பதவியினின்று விரட்டியடிக்கப்பட்டார். முற்போக்கான கருத்துகளைக் குறிக்கோளாக மட்டும் கொண்ட பிரான்ஸிஸ்கோ மாடெரோ (Francisco Madero)

என்பவர் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் குறிப்பிடத்தக்கவகையில் சீர்திருத்தங்களைச் செய்யாவிட்டாலும் தங்களது குறைகளை எடுத்துச் சொல்ல குடியானவர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் உரிமையளித்தார். வெளிநாட்டவர்கள் மெக்ஸிகோவில் முதலீடு செய்வதை ஊக்குவிக்கவில்லை. தங்களது நலன் பாதிக்கப்பட்டமையால் அமெரிக்கவாணிகர்கள் ஓர் எதிர் புரட்சியை வரவேற்றனர். அமெரிக்காவின் அரசியல் செயலாட்சி நயத்திற்கு இழுக்கு ஏற்படும் வகையில், மெக்ஸிகோவில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தூதுவராகப் பணியாற்றிய ஹென்றி லேன் வில்சன் (Henry Lane Wilson)ஓர் இராணுவப் புரட்சிக்கு உள்ளுடந்தை யாயிருந்தார். 1913ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள் தளபதி ஹீவெர்ட்டா (Huerta)வின் தலைமையில் திடீரென அரசியல் புரட்சியாளர்கள் கிளர்ந்தெழுந்து (மாடெரோவைப் பதவியினின்று நீக்கினர். சிலநாள் கழித்து) மாடெரோ கொல்லப்பட்டார். இந்த இராணுவப் புரட்சிக்கு உடந்தையாக இருந்த அமெரிக்கத் தூதுவர், ஹீவெர்ட்டாவின் ஆட்சியை ஆதரிக்குமாறு வெளிநாடுகளை வேண்டினார். ஆனால், மாடெரோவின் உயிரைக் காப்பாற்றவேண்டிய போது அது மெக்ஸிகோவின் உள்நாட்டுவேலை என அமெரிக்கத் தூதுவர் கூறிவிட்டு வாளாயிருந்தார்.

ஹீவெர்ட்டா நாட்டின் பெரும்பாலான பகுதிகளில் தமது ஆதிக்கத்தினை நிலைநாட்டினார். ஆனால் ஹீவெர்ட்டாவுக்கு எதிராகத் தொலை வடக்கிலும், தெற்கிலும் கிளர்ச்சிகள் நடைபெற்றன. மாடெரோவின் இறப்புக்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ளவும், வரம்பிற் குட்பட்ட ஆட்சியை நிறுவவும், நிலச் சீர்திருத்தம் கொண்டுவரவும், தொழிலாளர் நலனைப் பாதுகாக்கவும் கிளர்ச்சியாளர்கள் திட்ட மிட்டனர். அக்கிளர்ச்சியாளர்களின் தலைவர்களாக விளங்கியவர்கள் வீனஸ்டியானோ கரான்ஸா (Venustiano Carranza), பாஞ்சோ வில்லா (Pancho Villa), மற்றும் இந்தியப் பழங் குடியினரது தலைவரான எமிலியானோ சாபட்டா (Emiliano Zapata) ஆகியோர் ஆவர். இவ்வகையில் உட்ரோ வில்சன் குடியரசுத்தலைவராகப் பதவியேற்றபோது மெக்ஸிகோ பெரும் உள்நாட்டுப்போர் ஒன்றில் மூழ்கிக் கிடந்தது.

இரண்டாவது முறையாக மெக்ஸிகோவுடன் ஒரு போர் நிகழு மெனப் பெரும்பாலான அமெரிக்கர் கருதினர். வில்சன் கடைப் பிடித்த கொள்கையினால் போர் மூளவில்லை. மெக்ஸிகோவின் நிலப் பகுதிகளைக் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணம் வில்சனுக்குக் கிடையாது. இருப்பினும் அங்குள்ள மக்கள் நன்முறையில் வாழ வழி செய்ய வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு இருந்தது. அவர்

மெக்ஸிகோ நாட்டின் அரசையும், மெக்ஸிகோ மக்களையும் வேறு படுத்திக் கண்டார்; அதுபோலப் பின்னர் ஜெர்மனிநாட்டு அரசையும், ஜெர்மானிய மக்களையும் பிரித்துணர்ந்தார். மெக்ஸிகோவில் நிலைமை நாளுக்குநாள் மோசமாகி வரும் சமயம், அதன் நிலைமையைச் சீர்படுத்த அர்ஜென்டினா, பிரேசில், சில்லி ஆகிய மூன்று தென்அமெரிக்க நாடுகளும் கூடி இடைநின்று செயலாற்ற முடிவு செய்தன. இம்முயற்சியை வில்சன் வரவேற்றார். இம் மூன்று தென்அமெரிக்க நாடுகளோடு, அமெரிக்க ஐக்கிய நாடும் ஒத்துழைக்க இசைந்தது. நயாகரா நீர்வீழ்ச்சியருகே மேத் திங்கள் (1913) ஒரு மாநாடு நடைபெற்றது. அம் மாநாட்டின் பயனாகப் போர் தவிர்க்கப்பட்ட அரசியலமைப்பின் அடிப்படையிலான ஆட்சியை மெக்ஸிகோவில் ஏற்படுத்த கருத்துகள் பரிந்துரைக்கப் பட்டன. இக் கருத்துகளை ஹுவெர்ட்டா ஏளனம் செய்து ஏற்க மறுத்தார். இதனைக்கண்ட உட்ரோவில்சன், ஹுவெர்ட்டாவுக்கு எதிராக அரசியலமைப்புவாதிகளுக்குப் படைக்கலன்களும், வெடி மருந்துகளும் தந்துதவ இசைந்தார். ஹுவெர்ட்டாவுக்கு அனுப்ப விருந்த படைக்கருவிகள்மீது தடைவிதிக்கப்பட்டது. இந்த முறையில் மெக்ஸிகோ குழப்பத்தில், அமெரிக்க ஐக்கிய நாடு ஒரு சாராருக்கு உதவவேண்டிய நிலையேற்பட்டது.

வில்சன், மெக்ஸிகோவின் உள்நாட்டு நிகழ்ச்சிகளை மிக உன்னிப் பாகக் கவனித்துக் கொண்டே காத்திருந்தார். அச் சமயம் (1914 ஏப்ரல்) ஜெர்மானியக் கப்பலொன்று ஹுவெர்ட்டாவுக்காகப் படைக்கலன்களை ஏற்றிக் கொண்டு மெக்ஸிகோவின் துறைமுகப் பட்டினமான வீராகுருஸை நோக்கி வருவதாக வில்சனுக்குச் செய்தி கிடைத்தது. உள்நாட்டுச் சிக்கலில் மெக்ஸிகோவின் (ஜெர்மனியைத் தலையிடவிட்டால் போர் பல நாள்களுக்குக் கட்டாயம் நீடிக்கும் என்பதனை வில்சன் உணர்ந்தார். எனவே காலந் தாழ்த்தாது,) ஜெர்மானியப் படைக்கலங்கள், வீராகுருஸில் இறக்கப் படுவதற்கு முன்பு, அத் துறைமுகப்பட்டினத்தைக் கைப்பற்றச் சொல்லி அமெரிக்கக் கப்பற்படையினருக்கு வில்சன் உத்தரவிட்டார். அவ்வண்ணமே அமெரிக்கப் படையினரும் வீராகுரூஸ் பட்டினத்தைக் கைப்பற்றினர். இச் செயலை ஹுவெர்ட்டா கடுமையாகக் கண்டித்தார். இருந்தபோதிலும் வில்சன் தென்அமெரிக்க நாடுகளுடைய நட்பை இழக்காமலிருக்க விரும்பினர். எனவே மெக்ஸிகோ சிக்கலுக்குத் தீர்வு காண்பதற்காக, ஒரு மாநாட்டைக் கூட்டிப் பேசினர். அம் மாநாட்டுக்கு முதன்மையான தென்அமெரிக்க நாடுகள் பிரதிநிதிகளை அனுப்பியிருந்தன. இவ்வாறு அமெரிக்கக் கண்டங்களில் எழும் வினாக்களுக்கு விடைகாண, பிற அமெரிக்க நாடுகளோடு அமெரிக்க ஐக்கிய நாடு இணைந்து செயலாற்ற முன்

வந்தது. அண்மையிலுள்ள நாடுகளோடு நட்புறவு கொள்ள வேண்டும் என்ற கொள்கையில் முதல்நிலையாக இம் முயற்சி அமைந்தது.

1914 ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் ஹூவெர்ட்டா தலை மறைவாக அஞ்சி ஓடிவிட்டார். அமெரிக்கக் கப்பற்படையினரும் நவம்பரில் விராகுரூஸிலிருந்து விலகினர். ஆனால், அரசியலமைப்பு வாதிகளுக்குள்ளேயே பிளவு ஏற்பட்டு ஒருவரையொருவர் தாக்க லாயினர். இவ்வகையிலான உள்நாட்டுப்போர் ஒன்று இரண் டாண்டுகளுக்குமேல் நீடித்தது. எனவே, மெக்ஸிகோவில் மீண்டும் அமெரிக்க ஐக்கிய நாடு தலையிட நேரிட்டது. அமெரிக்கா, மெக்ஸிகோவின் தலைவர்களுள் நேர்மையாக நடந்து கொண்ட கரான்ஸாவுக்குப் படைக்கருவிகள் தந்துதவ முடிவு செய்தது. வில்லாவுக்கும், சாபட்டவுக்கும் போர்க்கருவிகள் அனுப்பப் படுவதை அமெரிக்கா தடை செய்தது. இதனல், வில்லா, பழி தீர்த்துக் கொள்வதற்காக மெக்ஸிகோவில் வாழ்ந்துவந்த அமெரிக்கக் குடிமக்களைத் தாக்கினர். அவர் மெக்ஸிகோவின் வடபகுதியில் பதினறு அமெரிக்கக் குடிமக்களைச் சுட்டுக்கொன்ருர். 1916 ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள் வில்லா, எல்லையைமீறி நியூமெக்ஸிகோவி லுள்ள கொலம்பஸ் பட்டனத்தில் மேலும் பதினறு பேரைச் சுட்டு வீழ்த்தினர். இவற்றையெல்லாம் கண்ட அமெரிக்க அரசு பொறுக்க மாட்டாது தனது படைகளைத் தளபதி ஜான் பெர்ஷிங்(John J. Pershing) என்பவரின் தலைமையில் வில்லாவைக் கைது செய்ய மெக்ஸிகோவின் வடபகுதிக்கு அனுப்பிற்று. மெக்ஸிகோவினுள் அமெரிக்கப் படையினர் நுழைவதைக் கரான்ஸா கண்டித்தார். மெக்ஸிகோவுக்கும், அமெரிக்க 'ஐக்கிய நாட்டுக்குமிடையே போர் துவங்கும் நிலை நெருங்கியது. ஆனல், மெக்ஸிகோவின் நற்பயனல், அமெரிக்க ஐக்கிய நாடு, ஐரோப்பியப் போரில் தீவிரமாக ஈடுபட் டிருந்தமையால், போர் தொடுக்கும் எண்ணத்தை அமெரிக்கா கைவிட்டது. பெர்ஷிங்கும் வில்லாவைக் கைது செய்யும் முயற்சியில் தோற்றுப்போகவே, 1917 ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள் பின்வாங்கினர்.

இதற்கிடையே மெக்ஸிகோவில் ஓரளவு அமைதியும் ஒழுங்கும் நிலைநாட்டப்பட்டது. தீவிரமான விவசாய சீர்திருத்தங்களையும் தொழிலாளர் சீர்திருத்தங்களையும் கொண்ட ஓர் அரசியலமைப்பு வரையப்பட்டு மேற்கொள்ளப்பட்டது. 1917 ஆம் ஆண்டு அரசிய லமைப்பின் 27-ஆவது உட்பிரிவின்படி, பெருநிலக்கிழார்களிடமிருந்து நிலம் பறிக்கப்பட்டு, பூர்வீக இந்தியப் பழங்குடி சமுதாயத்தினருக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டது. பூமிக்கடியிலுள்ள தாதுப்பொருள்கள்,

எண்ணெய் வயல்கள் ஆகியவையனைத்தையும், மெக்ஸிகோ நாட்டின் உடைமைகளென அறிவிக்கப்பட்டது. 123 - ஆவது உட்பிரிவின்படி, தொழிலாளர்களுக்குத் தொழிலாளர் சங்கங்களை நிறுவ உரிமை தரப் பட்டது. இத்தகைய உட்பிரிவுகளை நடைமுறைக்குக் கொண்டு வந்தால் அமெரிக்கா உரிமையாளர்களது நிலங்களும், எண்ணெய் வயல்களும் பறிக்கப்படும். மேலும் அமெரிக்கத் தொழிலதிபர்கள் மெக்ஸிகோ தொழிலார்களுக்கும் கூடுதலான கூலியும் தரவேண்டிய நிலை ஏற்படும். டயஸ் காலத்தில் அமெரிக்கர் பெற்ற உரிமைகள் 1920ஆம் ஆண்டு வரை பறிக்கப்படாமலே இருந்து வந்தன. அதற்குப் பிறகு மெக்ஸிகோ அரசு படிப்படியாக அமெரிக்க முதலீட்டாளர்களது உரிமைகளைக் கைப்பற்றலாயிற்று.

## அமெரிக்க ஐக்கிய நாடும் ஜப்பானும்

தொலைக் கிழக்கு நாடுகளைப் பொறுத்தமட்டிலும் ஜான் ஹே வகுத்திருந்த நுழைவுச் சலுகைக்கொள்கையினையே ரூஸ்வெல்ட்டும், டாப்டும், வில்சனும் பின்பற்றினர். ஆனால், அக் கொள்கையினைச் செவ்வையாகச் செயலாக்க முடியாத நிலையினை அனைவரும் உணர்ந்தனர். ஜப்பானின் வியத்தகு வளர்ச்சியே அதற்குச் சிறப்பான காரணமாகும். ஜப்பானின் பேரரசுக் கொள்கையினைப் பின்பற்றி, சீனநாட்டில் தனது ஆதிக்கத்தினை நிலைநாட்டத் தீவிரமாகச் செயலாற்றி வந்தது.

சீனாவின் ஒரு மாநிலமான மஞ்சூரியாவையும், கொரியாவையும் கைப்பற்றுவதற்காக ஜப்பானும், ருஷ்யாவும் போட்டியிட்டு, 1904ஆம் ஆண்டுப் போரிலிறங்கின. இரு நாடுகளுள் ருஷ்யாவினை அஞ்சத் தகுந்த நாடாகக் கருதிய அமெரிக்க ஐக்கிய நாடு, ஜப்பானுக்குத் தனது ஆதரவினை நல்க முடிவு செய்தது. ஜப்பான் பல வெற்றி களைத் தொடர்ச்சியாகப் பெற்ற பின்பு, தனது வலிமை முழுவதும் குன்றும் நிலையை எய்தவே அமைதியை நிலைகாட்ட விரும்பிற்று ருஷ்யாவில் உள்நாட்டுச் சிக்கல்கள் பல தோன்றியமையால் ருஷ்யாவும் போரை முடித்துக் கொள்ள ஆசைப்பட்டது. ருஷ்யாவோடு நட்பு கொண்டிருந்த பிரான்சு, ஆப்பிரிக்காவின் வடபகுதியில் ஜெர்மனி யோடு போரில் ஈடுபட்டிருந்தது. ஜப்பான், ருஷ்யா - ஆகிய இரு நாடுகளின் வேண்டுகோளுக்கிணங்க ரூஸ்வெல்ட் இடையீட்டாளராகப் பணிபுரிய ஒப்புக் கொண்டார். அதன்பேரில் 1905ஆம் ஆண்டு நியூஹாம்ப்ஷயரிலுள்ள போர்ட்ஸ்மவுத் (Portsmouth) என்னு மிடத்தில் ஜப்பானுக்கும் ருஷ்யாவுக்குமிடையே ஓர் உடன்படிக்கையை ஏற்பாடு செய்தார். அதற்கு போர்ட்ஸ்மவுத் உடன்படிக்கை என்று பெயர். இப்படி அமைதியாகப் பாடுபட்டமையால் ரூஸ்வெல்ட்

அந்த ஆண்டு நோபல்பரிசு பெற்ருர். போர்ட்ஸ்மவுத் உடன்படிக்கையின்படி ஜப்பான் தனது ஆதிக்கத்தைக் கொரியாமீதும், மஞ்சூரியாவின் தென்பகுதிமீதும் நிறுவ உரிமைபெற்றது. ஆனுல், ஜப்பான், ருஷ்யாவிடமிருந்து கோரிய இழப்பீட்டுத் தொகையைப் பெறமுடியாமல் போய்விட்டது.

ருஷ்ய-ஜப்பானியப் போருக்குப் பிறகு அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கும், ஜப்பானுக்கும் இடையேயான உறவுநிலை படிப்படியாகக் குன்றத் துவங்கியது. நுழைவுச்சலுகைக் கொள்கையினை மதியாது ஜப்பான் தனது தனிஆதிக்கத்தை மஞ்சூரியாவின் பொருளாதார வளர்ச்சியில் நிறுவியது. போருக்குப் பிறகு இழப்பீட்டுத் தொகையினை ருஷ்யாவிடமிருந்து வாங்கித் தரவில்லையென ஜப்பான் அமெரிக்காமீது குற்றஞ்சாட்டியது. அமெரிக்காவில் இருந்துவந்த இனவேறுபாட்டு உணர்ச்சியால் மேலும் இருநாடுகளுக்கிடையேயான உறவில் கசப்புணர்வுதோன்றிற்று. ஓர் இலட்சம் ஜப்பானியர்கள் கலிபோர்னியாவில் குடியேறியிருந்தனர். அங்கு வாழ்ந்த வெள்ளையர்கள் அவர்களுக்குச் சம உரிமைகள் அளிக்க மறுத்தனர். மேலும் அப் பகுதியில், மஞ்சள் இனத்தவர் ஆதிக்க அச்சம் ஒன்று (Yellow Peril) அமெரிக்கரிடையே உருவாகியிருந்தது. 1906 ஆம் ஆண்டு சான்பிரான்ஸிஸ்கோ கல்விக்கழகம், கீழைநாடுகளிலிருந்து வந்து மாணவர்களுக்குத் தனியாகப் பள்ளிக்கூடங்களை நிறுவி, இன ஒதுக்கல் முறையினைப் புகுத்திற்று. தொன்மைமிகுந்த நாகரிகத்தினைப் பெற்றிருந்தமையாலும், 'அண்மையில் ஒரு வல்லரசாக உயர்ந்தமையாலும், ஜப்பானிய மக்களை இழிந்தவர்களாக்கும் இனஒதுக்கல் முறைபினைக் கண்ட ஜப்பான் கொடுஞ்சினமுற்றது. இரு நாடுகளுக்குமிடையே போர் எழும்நிலை உருவாயிற்று.

கலிபோர்னியாவின் இன ஒதுக்கல் கொள்கையினைக் கண்டிக்க ரூஸ்வெல்ட்டுக்கு அரசியலமைப்பு அடிப்படையில் அதிகாரம் கிடையாது. ஆனுல், அதே சமயம் கலிபோர்னியா தனது கொள்கையினுல் அமெரிக்க ஐக்கிய நாட்டையே ஜப்பானுடன் போரில் ஆழ்த்த உரிமை கிடையாது. எனவே, ரூஸ்வெல்ட், சான்பிரான்ஸிஸ்கோவின் உயர்அலுவலர்களைத் தலைநகருக்கு வரச்சொல்லி இன ஒதுக்கல் கொள்கையினைக் கடைப்பிடித்ததற்காக அவர்களை கடுஞ்சொற்களால் அதட்டி, இன ஒதுக்கல் சட்டத்தினை நீக்கச் சொன்னுர். ஜப்பானிய அரசுக்கும், அமெரிக்க ஐக்கிய நாட்டுக்குமிடையே 1907 - 1908ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட 'மேதகுவாய்ச்சொல் உடன்படிக்கையின்' படி (Gentleman's Agreement) ஜப்பான் தனதுநாட்டில் கூலிகளுக்கு அமெரிக்கா சென்று குடியேறப் பயண இசைவுச்சீட்டினை

அளிப்பதில்லை என முடிவு செய்தது. அமெரிக்காவின் வலிமையை விளம்பரப்படுத்த விரும்பிய ரூஸ்வெல்ட் அமெரிக்கக் கப்பற்படையை உலகத்தைச் சுற்றிவர அனுப்பிவைத்தார். அக் கப்பற்படையில் பதினாறு போர்க்கப்பல்களும் இருந்தன. அவை ஜப்பானியத் துறைமுகமான யோக்கஹாமாவிற்கும்(Yokohama) சென்று வந்தன.

1908ஆம் ஆண்டு அமெரிக்காவுக்கும் ஜப்பானுக்குமிடையே மற்றோர் ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. அதற்கு ரூட்-டாக்கஹீரா (Root-Takahira) உடன்பாடு என்று பெயர். இவ்வொப்பந்தத்தின்படி இரு நாடுகளும் தத்தம் உடைமைகளைப் (ஆதிக்கம் நிறுவிய நாடுகளை) போற்றிப் பாதுகாக்கவும், பசிபிக் பெருங்கடலில் அன்றுள்ள நிலையினை (Status quo) ஏற்றுக் கொள்ளவும், சீனாவில் நுழைவுச் சலுகையைப் பெறவும், சீனாவின் உரிமையினையும் ஒருமைப்பாட்டினையும் காப்பதெனவும் இருந்தன. இதனால், மஞ்சூரியாவின் தென்பகுதியில் ஜப்பானின் பொருளாதாரக் கட்டுப்பாட்டினை அமெரிக்கா ஏற்றுக்கொண்டது. அதற்குக் கைம்மாறாக ஜப்பான் பசிபிக் பெருங்கடலில் அமெரிக்காவின் ஆதிக்கத்திற்கு உறுதுணையாகப் பாதுகாப்பளித்தது.

ரூஸ்வெல்ட்டுக்குப் பிறகு குடியரசுத் தலைவர் பதவியை ஏற்ற டாப்டும், அவரது வெளிநாட்டுறவுச் செயலாளர் நாக்ஸும் "டாலர் அரசியல் செயலாட்சி நயத்"தைத் தொலைக்கிழக்கு நாடுகளுடனான வெளிநாட்டுக் கொள்கையிலும் செயற்படுத்தலாயினர். சீனாவில் தொடர்ந்து நுழைவுச்சலுகைக் கொள்கையினைப் பின்பற்றினர். இரயில் பாதைகளைச் சீனாவில் அமைக்க அமெரிக்கா அதிக அளவில் முதலீடு செய்தது. அதற்குத் தூண்டுகோலாயிருந்தவர் வெளிநாட்டுறவுத் துறையைச் சார்ந்த அலுவலரான வில்லர்டு ஸ்டிரெய்ட் (Willard Straight) என்பவராவார். ஆனால், அமெரிக்க முதலீட்டாளர்களும், பாங்கு உரிமையாளர்களும் சீனாவில் முதலீடு செய்ய ஆர்வங் காட்டவில்லை. அமெரிக்காவின் சீனக்கொள்கையைக் கண்ட ஜப்பானும், ருஷ்யாவும் தங்கள் பகைமையை மறந்து ஒன்று சேர்ந்தன. இதனைக் கண்ட அமெரிக்க அரசு, சீனாவில் முதலீடு செய்வதை உடனே நிறுத்திக்கொண்டது. பொருளாதார அடிப்படையிலான பேரரசுக் கொள்கையை அமெரிக்கா கைவிட்டமைகண்டு அமெரிக்கநிதியாளர்கள் மகிழ்ந்தனர்.

முதலாவது உலகப்போர் மூண்டதும், ஜப்பான் தனது ஆதிக்கத்தினைப் பெருக்கிக் கொள்ள கிடைத்த வாய்ப்புகளை நழுவ விடாது காத்துக்கொண்டது. பிரிட்டனுடைய நட்பு நாடாகப் போரில் ஈடுபட்ட ஜப்பான், சீனாவில் முதலாவதாக, ஜெர்மானியர்

ஆதிக்கம் செலுத்தி வந்த ஷான்டுங் (Shantung) மாநிலத்தைக் கைப்பற்றித் தன்னுடையதாக்கிக் கொண்டது. அடுத்து, பசிபிக் பெருங்கடலின் வடபகுதியிலிருந்த ஜெர்மானியத் தீவுகளையும் ஜப்பான் கைப்பற்றியது. 1915ஆம் ஆண்டு ஜப்பான், மஞ்சூரியா முழுவதையும் தனக்கு அளிக்கும்படியும், ஷான்டுங் மாநிலத்தையும் தன்னிடத்து ஒப்படைக்கும்படியும் மேலும் பல உரிமைகளைத் தரும் படியும் கேட்டு, சீனாவிடத்து "இருபத்தோரு கோரிக்கைகளை" (Twenty one Demands) விடுத்தது. ஜப்பானின் பேராசையைக் கண்ட அமெரிக்க ஐக்கிய நாடு, இருபத்தோரு கோரிக்கைகளை விடுத்தமைக்குக் கண்டனம் தெரிவித்தது. அதற்குமேல் அமெரிக்காவால் ஒன்றும் செய்ய இயலவில்லை. இறுதியில் சீனா, ஜப்பானின் பல கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டது; சிலவற்றைப்பற்றிப் பேச ஒத்திவைத்தது.

அமெரிக்க ஐக்கிய நாடும் முதல் உலகப்போரில் 1917ஆம் ஆண்டு ஈடுபட்டது. அப்பொழுது ஜப்பானியத் தூதுவராக இஸ்ஷி (Ishi) என்பவர் வாஷிங்டனுக்கு அனுப்பப்பட்டார். அவர் வெளி நாட்டுறவுச் செயலாளரான லான்சிங் (Lansing) என்பவருடன் கூடிப் பேசினார். இறுதியில் இருவரும் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர். அதற்கு லான்சிங்-இஸ்ஷி ஒப்பந்தம் என்று பெயர். சீனாவைப் பொறுத்தமட்டில் இரு நாடுகளும் நுழைவுச்சலுகைக் கொள்கையைப் பின்பற்றவும், சீனாவின் ஒருமைப்பாட்டில் உறுதி காட்டவும் ஒப்புக்கொண்டன. இவ்வொப்பந்தமும், சீனாவில் ஜப்பான் வன்முறையைப் பயன்படுத்தி ஆதிக்கத்தை நிலைநாட்டியதைக் கண்டிக்காமல் மறைமுகமாக ஆதரித்தது. போகப்போக ஜப்பானின் பேராசைத் திட்டங்களைக் கண்ட வில்சன், தமது கொள்கையினை மாற்றிக்கொள்ளலானார். டாப்டும், நாக்ஸும் பின்பற்றிய கொள்கையே சிறந்ததென வில்சன் முடிவு செய்தார். இறுதியில் ஜெர்மனி தோற்கடிக்கப்படும் வரை தொலைக்கிழக்கு நாடுகளோடான உறவுநிலைபற்றி அமெரிக்கா உறுதியாக எத்தகைய முடிவையும் ஏற்கவில்லை.

அமெரிக்க ஐக்கிய நாடு பெயரளவில் நுழைவுச்சலுகைக் கொள்கையினை வெளியிட்டதேயொழிய அதனைச் செவ்வையாகச் செயற்படுத்த முடியவில்லை. துவக்கத்தில் அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சிக்கு, சீனாவின் சந்தைகளைப் பயன்படுத்த அமெரிக்கா திட்டமிட்டது. ஆனால் இறுதியில் ஜப்பானுடன் நெருங்கிய பொருளாதார உறவினை அமெரிக்கா வளர்த்தது. பிறகு ஜப்பானின் ஆதிக்கமனப்பான்மையினைக் கண்டதும் சீனாவுக்குப் பாதுகாப்பளித்து, தொலைக் கிழக்குப் பகுதியில் சக்திச் சமநிலையைக் காக்க அமெரிக்கா ஆர்வங்கொண்டது.

# (24) தியோடர் ரூஸ்வெல்ட்டும் நேர்மையான ஒப்பந்தமும்

## (Theodore Roosevelt and the Square Deal)

### அமெரிக்கா மேம்பாடடைதல் (Progressive Era)

தியோடர் ரூஸ்வெல்ட் பதவியேற்ற ஆண்டுமுதல், அமெரிக்க ஐக்கிய நாடு உலகப்போரில் கலந்துகொண்ட ஆண்டு வரை (1901-1916)யிலான, இருபதாம் நூற்றூண்டின் முதல் பதினறு ஆண்டுகளே, "மேம்பாடுற்ற காலம்" என வரலாற்றுசிரியர்கள் அழைக்கின்றனர். இவ்வாண்டுகளில், ஒருமுகமாக எல்லோரும் சமுதாய முன்னேற்றத்திற்காகவும், அரசியல் சீர்திருத்தத்திற்காகவும் வாணிகத்தைக் கட்டுப்படுத்தவும், ஒழுக்க நெறியை உயர்த்தவும் போரார்வங் கொண்டிருந்தனர். இருபதாம் நூற்றூண்டின் துவக்கத்திற்கு முந்திய தலைமுறையினர், நாடு முழுவதிலும் குடியேறுவதிலும், தொழிற்சாலைகளை நிறுவுவதிலும் பெரும் பொருளீட்டுவதிலும் தங்கள் கவனத்தைச் செலுத்தினர். இத் துறைகளில் மக்கள் வியத்தகு முறையில் மாபெரும் முன்னேற்றத்தைக்



**தியோடர் ரூஸ்வெல்ட்**
*26-வது குடியரசுத் தலைவர்*
*1901—1909 (குடியரசுக் கட்சி)*

கண்டனர். அதே நேரத்தில், சமூகத்தில் அருவருக்கத்தக்கக் குறைபாடுகளும் தோன்றின. மேம்பாடு அடையப் பாடுபட்ட காலத்தில் அக் குறைபாடுகளைத் துணிவுடன் வெளியிட்டும், பயனற்ற பழைய மரபுகளை ஒழித்தும், பயனுள்ள ஆராய்ச்சிகளை மேற்கொண்டும், அமெரிக்கர் தங்களுடைய சமுதாயத்திலிருந்த குறைகளை நீக்கி, ஒரு புதிய வாழ்க்கை முறையினை உருவாக்கினர். இத்தகைய சீர்திருத்த மனப்பான்மையின் அடிப்படையில்தான் தியோடர் ரூஸ்வெல்ட்டினது "நேர்மையான ஒப்பந்த"மும் (Square Deal), உட்ரோவில்சனது "புதிய பயனுரிமை"யும் (New Freedom) உருவாயிற்று. இருவரது ஆட்சிக்காலத்திலும் எண்ணற்ற சீர்திருத்தச் சட்டங்கள் இயற்றப்பட்டன. அவற்றைப் பொதுமக்கள் வரவேற்றதோடு, இரு கட்சியினரும் கருத்து வேறுபாடின்றி ஒருமுகமாக ஏற்றுக்கொண்டனர். நேரடியாக அரசியலில் ஈடுபட உரிமையில்லாவிட்டாலும், பெண்களும் இச் சீர்திருத்தங்களைக் கொண்டுவருவதில் மிகுந்த அக்கறை காட்டினர். பொதுவாக, நடுத்தரவகுப்பைச் சார்ந்த மக்கள் இச் சீர்திருத்தங்களால் பயன்பெற்றனர்.

### தியோடர் ரூஸ்வெல்ட்

நியூயார்க்கில் வாழ்ந்து வந்த ஓர் உயர் டச்சுக் குடும்பத்தில் தியோடர் ரூஸ்வெல்ட் பிறந்தார்; ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் படித்து முடித்த பிறகு அரசியலில் நுழைந்தார்; நியூயார்க் மாநகரின் காவல்துறை ஆணையாளராகப் பணியாற்றிப் பெரும்புகழ் பெற்றார்; காவல்துறையினரது இடர்களையெல்லாம் களைந்து, தகுதியினடிப்படையிலேமட்டும் பணியாளர்களையெல்லாம் தேர்ந்தெடுத்து அனைவரின் பாராட்டுதலையும் பெற்றார்; பிறகு சில காலம் அரசு ஊழியர்களது ஆணையாளராகப் பணியாற்றினார்; அடுத்தாற்போல், கடற்படைத்துறையில் துணைச்செயலாளராகப் பணியாற்றிய போது, ஸ்பானியப்போர் தொடங்கியதும் கியூபாவில் பொறுப்பேற்றார்; பின்னர், நியூயார்க் மாநிலத்தின் ஆளுநர் பதவியை வகித்தார்; 1900-ல் நடைபெற்ற தேர்தலில் குடியரசுக் கட்சியின் வேட்பாளராகத் துணைத்தலைவர் பதவிக்குத் (போட்டியிட்டு வெற்றி பெற்றார். அத் தேர்தலில் மெக்கின்லி குடியரசுத் தலைவர் பதவிக்குத்) தேர்ந்தெடுக்கப்பட்டார். மெக்கின்லி பதவியேற்ற ஆறுமாத கால முடிவில் சுட்டுக் கொல்லப்பட்டார். எனவே, மெக்கின்லி இறந்ததும், தியோடர் ரூஸ்வெல்ட் குடியரசுத்தலைவரானார். 1904-ஆம் ஆண்டு நடைபெற்ற தேர்தலில், குடியரசுக் கட்சி மீண்டும் ரூஸ்வெல்ட்டைக் குடியரசுத் தலைவர் பதவிக்கு வேட்பாளராக நியமித்தது. அம்முறை அவர் பெரும்பான்மையான வாக்குகள் பெற்று வெற்றிபெற்றார்.

தியோடர் ரூஸ்வெல்ட்டினது பதவிக்காலம் (1901-1909) மறக்க முடியாத ஒன்றாகும். அமெரிக்க அரசியலின் தோற்றம் அடியோடு மாற்றியமைக்கப்பட்டது. அரசாங்கத்தின் அமைப்பினை மாற்றி யமைத்துத் திறமையுடன் வேலைசெய்ய ரூஸ்வெல்ட் பாடுபட்டார்; அரசாங்கத்தை மக்களாட்சிக் கொள்கைக்கு உகந்ததாக்கினர். சமூக நீதி வழங்கும் நடுநிலையாளராகவும் ரூஸ்வெல்ட் விளங்கினர். வெளி நாட்டுறவிலும் அமெரிக்காவினை உலக அரங்கில் உன்னதமிக்க ஒரு நாடாக மாற்றி சிறந்த கொள்கைகளைப் பின்பற்றினர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடியரசு தலைவராகப் பணியாற்றிய எட்டு ஆண்டுக் காலத்தில் அப் பதவிக்கு ஒரு புதிய தோற்றத்தை ரூஸ்வெல்ட் வழங்கினர். அவரது தனித்தன்மையே அதற்குச் சிறப்புக் காரணமாகும். ரூஸ்வெல்ட் அரசியலில் ஒரு நடைமுறைவாதி யாகவே திகழ்ந்தார். அவரிடத்துத் தேசியப் பற்றுணர்வு வேரூன்றி யிருந்தது. குடியரசுக் கட்சிக்கும் உண்மையானவராக ரூஸ்வெல்ட் நடந்து கொண்டார். பொதுமக்களைக் கடமை உணர்ச்சி மிக்கவர் களாகத் தட்டியெழுப்புவதற்கான சிறந்த ஆற்றலை அவர் பெற் றிருந்தார்.

ஜெபர்சனுக்குப் பிறகு, பலதிறப்புலமை வாய்ந்த குடியரசுத் தலைவராக விளங்கிய பெருமை ரூஸ்வெல்ட்டையே சாரும். ஆனல் ஜெபர்சனைப் போல ஆழ்ந்த அனுபவமோ, நுண்ணயமோ ரூஸ்வெல்ட் பெற்றிருக்கவில்லை. ஜெபர்சன் கொண்டிருந்த தத்துவ அடிப்படையி லான கருத்தியற்கோட்பாடும், அரசியல் மதி நுட்பமும் ரூஸ்வெல்ட் டிடம் காணப்படவில்லை. ரூஸ்வெல்ட் ஏராளமாக நூல்களைப் படித்திருந்தார் அனைவரது நலனிலும் அக்கறை கொண்டிருந்த அவர், எல்லாவற்றைப் பற்றியும் கருத்து வெளியிடுவதில் ஆர்வங் கொண்டிருந்தார். நினைவிலிருந்து நீங்காத வகையில் சொற்றொடர் களைப் புனைவதில் தன்னிகரற்று விளங்கினர். மக்களுக்குப் பொது உரிமைகளை வழங்குவதில் பெரிதும் ஈடுபாடுடையவராகவும் ரூஸ் வெல்ட் திகழ்ந்தார். ஆன்ட்ரூ ஜாக்சனைப் போல எளிய மக்களின் உள்ளங்களைக் கவரும் திறனை ரூஸ்வெல்ட் பெற்றிருந்தார். தன்னுடைய திட்டங்களையெல்லாம் நிறைவேற்றுவதற்காக, மக்கள் மனத்தில் பதியும் முறையில் போராட்டங்களை நடத்தும் ஆற்றலையும் அவர் கொண்டிருந்தார். ஆன்ட்ரூ ஜாக்சன் நினைத்ததுபோல ஆட்சியமைப்பில் காங்கிரஸைவிடக் குடியரசுத் தலைவரே மக்களுக்கு நெருங்கிய நிலையில் உள்ளார் என்றும் ரூஸ்வெல்ட் கருதினர். ஏனெனில், சட்டங்களைச் செயலாக்க ஆட்சித்துறையின் தலைமைதான் இன்றியமையாதது என அவர் நம்பினர். ஆட்சித்துறை பணியாளர் கள் மீது ஜாக்சன் ஐயப்பாடு கொண்டிருந்தார். ஆனல், ரூஸ்வெல்ட் பணியாளர்கள்மீது முழுநம்பிக்கை கொண்டிருந்தார்.

ரூஸ்வெல்ட் பதவியேற்ற ஓராண்டுக் காலத்திற்குள்ளாக, நாட்டில் ஏற்பட்டுவரும் பெரிய மாற்றங்களை நன்குணர்ந்தார். அரசியல் மேதகைமைசான்ற முறையில அம்மாற்றங்களைச் செயலாக்க அவர் துணிந்தார். ரூஸ்வெல்ட் ஒரு தீவிரவாதியல்லர்; ஆனால் மூட நம்பிக்கையற்ற பழமைவாதியாகவே திகழ்ந்தார். அப்பொழுது அமெரிக்க ஐக்கிய நாட்டில் இருந்து வந்த பொருளாதார நிலைமையினை அடியோடு மாற்றியமைக்க வேண்டுமென அவர் கருதவில்லை. அப்பொழுதிருந்த பொருளாதார நிலையில் குறைபாடுகள் இருந்தமை உண்மைதான்; அக் குறைகளை அகற்றி, செம்மைப்படுத்தவே ரூஸ்வெல்ட் பாடுபட்டார். வாணிகத்தைக் கட்டுப்படுத்தும் தலைமை அதிகாரம் அரசுக்கு உண்டு என்பதனைச் செயலாக்கவே அவர் உறுதிகொண்டார். எளிய மக்களது துயரைத் துடைத்து நேர்மை யான பொருளாதார நிலையை உருவாக்குவதே தனது தலையாய கடமையாக ரூஸ்வெல்ட் கருதினர்.

### ரூஸ்வெல்ட்டினது திட்டங்கள்

பெருஞ்செல்வந்தர்களால் உண்டாக்கப்பட்ட குழப்பநிலையை உடனே சரிப்படுத்த வேண்டுமென மக்கள் வேண்டினர். குடியரசுக் கட்சியினரும், மக்களாட்சிக் கட்சியினரும், குடிப்பொதுமைக் கட்சி யினரும் (Populists) சீர்திருத்தங்களை உடனடியாக வேண்டினர். அனைவரது வேண்டுகோளினையும் ஏற்ற ரூஸ்வெல்ட் தம்மைச் சீர் திருத்தவாதிகளின் தலைவராகக் கருதிக் கொண்டார். பெருஞ் செல்வந்தர்களுடைய பிடியிலிருந்து பாதுகாப்புப் பெற விரும்பியவர் கள் மூன்று வகுப்பினர். அவர்கள் முறையே-(1) எளிய சிறிய அளவிலான (பங்குதாரர்கள். பங்குமாற்றுக் களத்தில் சிறிய அளவிலான) பங்குதாரர்கள். பெருமளவிலான பங்குதாரர்களது கையாட்களால் பெரிதும் வஞ்சிக்கப்பட்டனர். பங்கு மாற்றுக் களத்தில் இருந்த சிக்கலானவிதிமுறைகளால் எளிய பங்குதாரர்கள் ஏழைக ளாயினர்;(2) அடுத்து, தொழிலாளர்கள். தொழிலாளர் சங்கங்கள் பெரும் வாணிகக்கூட்டுநிறுவனங்களுக்கு எதிராக இயங்க முடியவில்லை. அதனல், தொழிலாளர்கள் தங்களுடைய குறைகளை நீக்கிக்கொள்ள வழியின்றித் தவித்தனர்; (3) அடுத்து பொது மக்கள். பெரும் வாணிக நிறுவனங்கள் தனியுரிமை கொண்டாடிக் கொண்டு விருப்பப்படி விலைகளை உயர்த்திக் கொண்டே சென்றன. எனவே, பொது மக்கள் அன்றடத் தேவைக்கான பொருள்களைக்கூட அதிக விலை கொடுத்து வாங்க வேண்டிய நிலையில் அல்லலுற்றனர். இவற்றையெல்லாம் கண்ணுற்ற ரூஸ்வெல்ட், வாணிகமுறையினை அரசு எவ்வாறு மாற்றியமைக்கும் என்பதனை விளக்கினர். முதலாளி, தொழிலாளி, பொதுமக்கள் - ஆகிய மூவருக்கும் மனநிறைவு அளிக்கும் வகையில் ஒரு நேர்மையான ஒப்பந்தத்தைக் காண பெரு

முயற்சியிலிறங்கினர். இக் கொள்கையினடிப்படையில் சமுதாயச் சிக்கல்களைத் தீர்க்கவும், இரயில்பாதைகளைக் கட்டுப்படுத்தவும் வாணிகக் கூட்டுநிறுவனங்களை முறைப்படுத்தவும், இயற்கை வளத்தினைப் பாதுகாக்கவும் ரூஸ்வெல்ட் செயலாற்றினர்.

## இரயில் பாதை நிறுவனங்களை ஒழுங்குபடுத்தல்

தியோடர் ரூஸ்வெல்ட் முதலாவதாகத் தனியுரிமையினால், விளைந்த கேடுகளை அகற்ற முனைந்தார். அவர் தாக்குதலுக்கு இரையான முதல் நிறுவனம் "நார்தர்ன் செக்கியூரிட்டீஸ் நிறுவன" (Northern Securities Company) மாகும். அந் நிறுவனம் சார்பு நிலையங்களின் பங்குகளை வைத்திருக்கும் நிறுவனமாகும். (Holding Company) அதன் கட்டுப்பாட்டில் பின்வரும் மூன்று இரயில்பாதைகள் இருந்தன: (1) நார்தர்ன் பசிபிக்(The Northern Pacific)- (2) கிரேட் நார்தர்ன் (The Great Northern), (3) சிக்காகோ-பர்லிங்டன்-குவின்சி (The Chicago, Burlington and Quincy) வடமேற்குப் பகுதியில் இரயில்போக்குவரத்தினை இந் நிறுவனம் கட்டுப்படுத்தியது. ஷெர்மன் கூட்டு நிறுவன எதிர்ப்புச் சட்டத்திற்கு முரணாக இந் நிறுவனம் இயங்கியமைக்காக, அதன்மேல் அரசு வழக்கு தொடுத்தது. அதன் விளைவாக அந்நிறுவனம் கொண்டாடிவந்த தனியுரிமையானது தகர்த்தெறியப்பட்டது.

இரயில்பாதை நிறுவனங்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் வகையில், 1903ஆம் ஆண்டு ஒரு சட்டம் இயற்றப்பட்டது. அதற்கு எல்கின்ஸ் சட்டம் (Elkins Act) என்று பெயர். இரயில் பாதை நிறுவனங்கள் மறைவாக, வேண்டியவர்களுக்குக் கட்டணக் குறைப்பு தருவதை முன்னமேயே, மாநில அரசுகளுக்கிடையேயான வாணிகச் சட்டம் தடை செய்திருந்தது. ஆனால், அதையும் மீறி, சில நிறுவனங்கள் கட்டணக் குறைப்பு தந்து வந்தன. இதனை எல்கின்ஸ் சட்டம் கடுமையாகக் கண்டித்தது. அச் சட்டத்தில் நிருணயிக்கப்பட்ட கட்டணவிகிதமே செல்லுபடியாகும் என்றும், கட்டணத்தைக் குறைத்தால் இரயில்பாதை நிறுவனத்துக்கும், சரக்கு அனுப்புவோருக்கும் தண்டனை வழங்கப்படும் என்றும், அதற்கு உடந்தையாக உள்ள முகவர்களும், இரயில்பாதை நிறுவன ஊழியர்களும் தண்டிக்கப்படுவர் என்றும் கூறப்பட்டது.

இரயில்பாதைக் கட்டணங்களைத் திரட்டுவதில் நிலவிவந்த வேறுபாட்டினை அகற்றுவதற்காக, 1906ஆம் ஆண்டு ஒரு சட்டம் இயற்றப்பட்டது. அதற்கு ஹீப்பர்ன் சட்டம் (The Hepburn Act) என்று பெயர். இச் சட்டம் மாநில அரசுகளுக்கிடையேயான வாணிகக் குழுவின் உறுப்பினர் தொகையை ஐந்திலிருந்து ஏழாக உயர்த்திற்று.

தனிநோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்ட நிறுவனங்களையும், எண்ணெய்க் குழாய்களையும், படகுப்போக்குவரத்தினையும், இரயில் பாதை சென்று முடியும் இடங்களையும் கட்டுப்படுத்த வாணிகக் குழுவினுக்கு உரிமை தரப்பட்டது. இரயில்பாதை நிறுவனங்களின் மீது தொடுக்கப்பட்ட வழக்குகளுக்கு வேண்டிய சாட்சிகளை, அந் நிறுவனங்களே சமர்ப்பிக்க வேண்டுமென்றும் அச் சட்டம் கூறியது. இரயில்பாதை நிறுவனங்கள் தாங்கள் விரும்பிய சரக்குகளை மட்டும் ஏற்றிச் செல்வது தடை செய்யப்பட்டது. எல்லா இரயில் பாதை நிறுவனங்களும் ஒரே முறையிலான கணக்கு வைப்பு முறையைப் பின்பற்ற வேண்டுமென்றும் கூறப்பட்டது. 1887 ஆம் ஆண்டிலேயே மாநிலங்களுக்கிடையேயான வாணிகக்குழு தோற்று விக்கப்பட்டபோதிலும், ஹீப்பர்ன் சட்டம் இயற்றிய பிறகுதான் வலிமையோடு செயலாற்ற முடிந்தது.

## வாணிகக் கூட்டு நிறுவனங்களைக் கட்டுப்படுத்தல்

வாணிகக் கூட்டு நிறுவனங்களை அழிப்பதைவிட, அவற்றிலுள்ள களைகளைப் பிடுங்கவே ரூஸ்வெல்ட் விரும்பினர். ஷெர்மன் கூட்டு நிறுவன எதிர்ப்புச் சட்டம் தீவிரமாகச் செயலாக்கப்பட்டது. பெரு வாணிகத்துக்குப் பேரிடியாக, 1904 ஆம் ஆண்டு, ஒரு வழக்கில் ரூஸ்வெல்ட் வெற்றி பெற்றுர். ஷெர்மன் கூட்டு நிறுவன எதிர்ப்புச் சட்டத்தினின்று தப்பும் வகையில் இயங்கி வந்த நார்தர்ன் செக்கியூரிட்டீஸ் நிறுவனத்தின்மீது வழக்குத் தொடுக்கப்பட்டது. அது ஒரு, பங்குகளை வைத்திருக்கும் நிறுவனமாக இருந்தபோதிலும், நாட்டின் வாணிகத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றலுடையதாக உள்ள தாகையால் கலைக்கப்பட வேண்டுமெனத் தலைமை நீதிமன்றம் தீர்ப்பு கூறியது. மாட்டிறைச்சி வாணிகத்தைக் கட்டுப்படுத்திய கூட்டு நிறுவனம் ஒன்றும் 1905 ஆம் ஆண்டு உடைத்தெறியப்பட்டது. மிகப் பெரிய வர்த்தக நிறுவனமாயினும், எளிய குடிமகனைப்போல சட்டத்திற்குக் கீழ்ப்படிந்தே நடக்க வேண்டுமென ரூஸ்வெல்ட் கூறினர். அவரது ஏழரை ஆண்டுப் பதவிக்காலத்தில், இருபத்தைந்து வாணிகக் கூட்டு நிறுவனங்களுக்கு எதிராகத் தீர்ப்புகள் வழங்கப் பட்டிருந்தன. ரூஸ்வெல்ட்டுக்கு முன்பு பணியாற்றியவர்களது காலத்தில் மூன்றே தீர்ப்புகள்தான் வழங்கப்பட்டிருந்தன. காங்கிரஸ் கூட்டு நிறுவனங்களுக்கு எதிராக நடவடிக்கைகளை மேற்கொள்ள மேலும் பல சட்டங்களை இயற்றியது. (1) கூட்டாட்சி நீதிமன்றங்களில் உள்ள வழக்குகள் பட்டியலில், ஷெர்மன் சட்டத்தின் மேலும் மாநில அரசுகளுக்கிடையேயான வாணிகச் சட்டத்தின் மேலும் எழுந்த வழக்குகளை உடனடியாக விசாரிக்க, முதலிடம் தரச் சொல்லி விரைவுச் சட்டம் (Expedition Act) ஒன்று இயற்றப்பட்டது. (2) தொழில் நுட்ப ஆய்வுகளை மேற்கொள்ள

வாணிகம்-தொழில் துறையினுள் கூட்டுநிறுவனப் புள்ளிவிவரச் சேகரப்பணியினை ஒன்று அமைக்கப்பட்டது. (3) வாணிக நிறுவனங்களுக்கெதிராக வழக்குத் தொடர்வதற்கான செலவுக்காக, ஐந்து இலட்சம் டாலர் நிதியொன்று ஏற்படுத்தப்பட்டது.

மேற்கூறிய சட்டங்களைக் கண்ட ரூஸ்வெல்ட்டின் பகைவர்கள் அவரை ஒரு சமதருமக் கொள்கையாளர் (Socialist) எனக் குறை கூறினர். சட்டங்களை முறையாக மதிக்க வேண்டும், செயலாக்க வேண்டும் என்ற அவாவினால்தான் ரூஸ்வெல்ட் தனியுரிமை கொண்டாடிய நிறுவனங்களைத் தடை செய்தார். அவருக்கு வாணிகக் கூட்டு நிறுவனங்களின்மீது வெறுப்பே கிடையாது. ஆனால், அவை நீதிக்கு முரணாக நடப்பதைத்தான் அவர் வெறுத்தார். இவற்றை உணர்ந்த பொது மக்களும், குடியரசுக் கட்சியின் உறுப்பினர்கள் அனைவரும், பிறரும் ரூஸ்வெல்ட்டை மனமார வாழ்த்தி, அவர்மீது அளவிலா நட்புக் கொண்டனர். அவருடைய நேர்மையான ஒப்பந்தத்தை எல்லோரும் ஒருமுகமாக வரவேற்றனர். தியோடர் ரூஸ்வெல்ட்டை அமெரிக்கர் செல்லமாக 'டெடி' (Teddy) என்றழைத்தனர். குழந்தைகள்கூட தங்களது விளையாட்டில் 'டெடி' கரடிப் பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடி மகிழ்ந்தன.

## உணவு, மருந்து, இறைச்சி மேற்பார்வை (Inspection of Food, Drugs and Meats)

பொதுமக்களின் வாழ்க்கை நலனைப் பேணுவதிலும் ரூஸ்வெல்ட் ஆர்வங்காட்டினார். பல ஆண்டுகளாக இறைச்சியைப் பக்குவப் படுத்தித் தகரக்குவளைகளில் அடைப்பவர்களும், பிற உணவுப் பொருள்களும், மருந்து வகைகள் தயாரிப்பவர்களும் நாணயமற்ற முறையில் கலப்படம் செய்து பொருளீட்டி வந்தனர். இதனால் மக்களிடையே பல நோய்கள் பரவின. இவற்றைக் கண்டிக்கும் வகையில் 1906ஆம் ஆண்டு இறைச்சி மேற்பார்வைச் சட்டம் (Meat Inspection Act) ஒன்று இயற்றப்பட்டது. அச் சட்டப்படி விற்பனைக்கு அனுப்பப்பட்ட இறைச்சி, திடமான மிருகங்களினின்று வெட்டியெடுக்கப்படுகிறதா என்றும், அவை சுகாதார முறையில் அடைக்கப்படுகின்றனவா என்றும் மேற்பார்வையிட, கூட்டாட்சி அரசு அலுவலர்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. அடுத்து தூய்மையான உணவு மற்றும் மருந்துச் சட்டம் (Pure Food and Drugs Act) ஒன்று இயற்றப்பட்டது. அச் சட்டப்படி, உணவுப் பொருள்களிலும், மருந்துகளிலும் கலப்படம் செய்வதும், தர அடையாளத்தை மாற்றிக் குறிப்பிடுவதும் தடை செய்யப்பட்டது. ஒப்பனைப்பொருள்களில் ஊறுவிளைவிக்கக் கூடிய கலவைப்

பொருள்களைப் பயன்படுத்துவதும், பின்பு ஒரு சட்டத்தால் தடை செய்யப்பட்டது.

## இயற்கை வளங்களைப் பாதுகாத்தல் (Conservation of Natural Resources)

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், மேற்கு எல்லை பசிபிக் பெருங்கடற்கரையோரத்தோடு முற்றுப்பெறவே, தங்களுடைய நாட்டின் இயற்கைவளங்களுக்கும் ஓர் அளவு உண்டு என்பதனை அமெரிக்க மக்கள் உணரலாயினர். கட்டுப்பாடின்றிக் காடுகளை அழிப்பதையும், சுரங்கங்களை வெட்டுவதையும், எண்ணெய்க்கிணறுகளை அகழ்வதையும் கண்ட மக்கள் கவலை கொண்டனர். வயல்களும் மீண்டும் மீண்டும் விவசாயத்திற்காகப் பயன்படுத்தப்பட்டு வளமிழந்தன. அமெரிக்க ஐக்கிய நாட்டின் இளமைக்காலத்திலேயே, எதிர்நோக்குடைய ஒரு சிலர், இயற்கை வளங்களைப் பாதுகாக்கச் சொல்லி அறிவுரை கூறி வந்தனர். ஆனால் அவ்வறிவுரைகளை எவரும் ஏற்றுக் கொள்ளவில்லை. உள்நாட்டுப் போர் முடிவுற்ற பின்னர்தான், ஒரு சிலர் இயற்கைவளப் பாதுகாப்புப்பற்றி எண்ணலாயினர். 1872ஆம் ஆண்டு கூட்டாட்சி அரசால் மக்களின் நன்மைக்காகவும் மகிழ்வுக்காகவும் "எல்லோஸ்டோன் தேசியப் பூங்கா" (Yellowstone National Park) என்ற ஒன்று அமைக்கப்பட்டது. அரசுக்குரிய நிலப்பகுதியிலுள்ள காடுகளைத் தேசியக் காடுகள் (National Forests) எனத் தனியே ஒதுக்கக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் ஒரு சட்டத்தினைக் காங்கிரஸ் இயற்றிற்று. 1879ஆம் ஆண்டு அமெரிக்க ஐக்கிய நாட்டு மண்ணியல் ஆய்வுத்துறை (U.S. Geological Survey) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. தாதுப்பொருள்களைக் கண்டுபிடிக்கவும், அவைபற்றி ஆராய்ச்சி செய்யவும் அத் துறை இயங்கிற்று. உள்நாட்டுத் துறையின் ஒரு பிரிவாக, நிலச்சீர்திருத்த அலுவலகம் (Bureau of Reclamation) ஒன்று அமைக்கப்பட்டது. வறண்ட நிலப்பகுதிகளையும், குறைந்த மழையுடைய நிலப்பகுதிகளையும் சீர்திருத்தியமைக்கும் பொறுப்பு அந்த அலுவலகத்திடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வகையில் நிலவளத்தைப் பாதுகாப்பது இன்றியமையாததென்பதை மக்கள் ஓரளவு உணர்ந்திருந்தனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு முடிவுற்றபோது, அமெரிக்க ஐக்கிய நாட்டில் காடுகளில் முக்கால் பங்கு அழிக்கப்பட்டிருந்தது; கனி வளத்தில் பெரும்பகுதி பயன்படுத்தப்பட்டிருந்தது; நீர் விசை தனிப்பட்டவர் ஊதியத்திற்காகப் பயன்படுத்தப்பட்டது; மழையிலும், தூசிப்புயலிலும் மண்வளம் வீணாகி வந்தது. இவற்றையெல்லாம் மேற்குப் பகுதியில் வாழ்ந்தபோது ரூஸ்வெல்ட் கவனித்து

வந்தார். எனவே, இயற்கைவளங்களைக் காப்பாற்றுவதில் அவருக்கு அதிக ஆர்வம் ஏற்பட்டது. காங்கிரஸிற்கு அவர் அளித்த முதல் உரையில் "அமெரிக்காவின் உள்நாட்டுச் சிக்கல்களில் மிக முக்கிய மானவை காட்டையும், தண்ணீரையும் பற்றியவை எனலாம்," என்றுரைத்துப் பரந்த நோக்கமுள்ள திட்டங்களைப் பரிந்துரைத்தார். அம் முயற்சியில் ரூஸ்வெல்ட்டுக்குப் பெரிதும் உதவியவர்கள் கிப்பார்டு பிஞ்சாட் (Gifford Pinchot) என்பவரும், ஜேம்ஸ் கார்ப்பீல்டு (James R. Garfield) என்பவருமாவர்.

புதிய நிலங்கள் சீர்திருத்தச் சட்டம் (The Newlands Reclamation Act) ஒன்று 1902ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. அச் சட்டப்படி மேற்கிலும், வடமேற்கிலும் அரசின் பொதுநிலங்களை விற்றமை யால் பெற்ற பணத்தின் பெரும்பகுதியை நீர்ப்பாசனத் திட்டங்களைக் கட்டுவதற்காகப் பயன்படுத்த இசைவு தரப்பட்டது. 1907ஆம் ஆண்டளவில் பதினைன்கு மாநிலங்களில் இருபத்தெட்டுத் திட்டங்கள் உருவாகிக் கொண்டிருந்தன. பின்வரும் சந்ததியினருக்குப் பயன் படுவதற்காகக் காடுகளையும் பாதுகாக்க ரூஸ்வெல்ட் திட்டங்கள் வகுத்தார். விவசாயத்துறையில் ஒரு பகுதியாக விளங்கிய காட்டிலாக்காவின் தலைவராகக் கிப்பார்டு பிஞ்சாட் பணிபுரிந்தார். அவர், விற்பனைக்காக ஒதுக்கப்பட்டிருந்த பொதுநிலங்களிலிருந்து நூற்றைம்பது மில்லியன் (150,000,000) ஏக்கர் நிலத்தை விற்கக் கூடாது எனத் தடைவிதித்தார். மரம்வெட்டும் தொழிலிலும், மேய்ப்புத் தொழிலிலும் ஈடுபாடுடையவர்கள் இதனைக் கண்டித்தனர்.

நாட்டின் ஆறுகளைப் போக்குவரத்துக்குப் பயன்படுத்தவும், நீரைத் தேக்கி விவசாயத்திற்குப் பயன்படுத்தவும், நீரின் விசையைப் பயன்படுத்தி மின்சாரம் உற்பத்தி செய்யவும் ரூஸ்வெல்ட் திட்டங்களை வகுத்தார். அதற்காக அவர் உள்நாட்டு நீர்நிலைக் குழு (Internal Waterways Commission) ஒன்றினை அமைத்தார். குடியரசுத் தலைவர் மாநிலங்களின் ஆளுநர்களையெல்லாம் அழைத்து, இயற்கை வளப் பாதுகாப்பு பற்றிய அடிப்படைச் சிக்கல்களை ஆராய வேண்டு மென அக் குழு பரிந்துரைத்தது. அப் பரிந்துரையை ஏற்றுக்கொண்ட ரூஸ்வெல்ட், 1908ஆம் ஆண்டு மாநில ஆளுநர்களையெல்லாம் தமது மாளிகைக்கு அழைத்துக் கூடிப் பேசினர் அதன் பயனாகத் தேசிய இயற்கைவளப் பாதுகாப்புக் குழு ஒன்று (National Conservation Commission) அமைக்கப்பட்டது. அதன் தலைவராகக் கிப்பார்டு பிஞ்சாட் நியமிக்கப்பட்டார். அவரது தளரா முயற்சியில் முப்பத் தாறு மாநிலக் குழுக்கள் அமைக்கப்பட்டன. 1910ஆம் ஆண்டளவில், நாற்பத்தோரு மாநிலங்களில், இயற்கைவளப் பாது காப்பு முறைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன.

## தொழிலாளர் நலன்

தியோடர் ரூஸ்வெல்ட் தொழிலாளர்களது நலனில் அதிக அக்கறை காட்டினார். 1902ஆம் ஆண்டு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் (United Mine Workers) வேலை நேரத்தைக் குறைக்கச் சொல்லியும், கூடுதல் கூலி கேட்டும், தங்களுடைய சங்கத்திற்கு ஒப்புதல்கேட்டும் கிளர்ச்சி செய்து வந்தனர். சுரங்க உரிமையாளர்கள், தொழிலாளர்களுடன் கூடிப் பேசி ஒப்பந்தம் செய்து கொள்ள மறுத்தனர்; நடுவர் தீர்ப்புக்கும் அச் சிக்கலை விட மறுத்தனர். தாம் இடையீட்டாளராக இருந்து அச் சிக்கலைத் தீர்த்துவைக்க ரூஸ்வெல்ட் முன்வந்தார். ஆனால், சுரங்க உரிமை யாளர்கள் அவரது முயற்சியை ஏற்க மறுத்தனர். நாட்டில் நிலக்கரிப் பஞ்சம் ஏற்பட்டது. நாடு பனிக்காலம் முழுவதும் கரியின்றித் தவிக்கும் என்ற நிலை தோன்றிற்று. அச் சமயம் ரூஸ் வெல்ட் தலையிட்டு நிலக்கரிச் சுரங்க உரிமையாளர் வழிக்கு வராவிட்டால் சுரங்கங்களை அரசே ஏற்று, படைவிரர்களின் மூலம் வேலை நடத்தும் என்று அச்சுறுத்தினார். உடனே, உரிமையாளர் இணங்கினர். நடுவர்குழு ஒன்று அமைக்கப்பட்டது. அதில் தொழிலாளர்கள் பிரதிநிதி ஒருவரும் இருந்தார். அக்குழுவின் முடிவினை உரிமையாளர்கள் ஏற்றுக்கொண்டனர். அதன்படி சுரங்கத் தொழிலாளர்களது கூலி பத்துச் சதவீதம் கூடிற்று; வேலை நேரம் நாளொன்றுக்கு ஒன்பது மணி நேரம் என முடிவு செய்யப் பட்டது. ஆனால், தொழிலாளர் சங்கம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. அடுத்த பதினைந்து ஆண்டுகளுக்கு, இக் குழு அளித்த முடிவின் அடிப்படையிலேயே எல்லா நிலக்கரிச் சுரங்கச் சிக்கல்களும் தீர்த்து வைக்கப்பட்டன.

## மதிப்பீடு

இரண்டாவது பதவிக்காலம் முடிவுற்றதும், தியோடர் ரூஸ்வெல்ட் குடியரசுத் தலைவர் பதவியினின்று ஓய்வு பெற்றார். போற்றக்கூடிய அளவிற்கு, ரூஸ்வெல்ட் ஒன்றினையும் சாதித்து விடவில்லை எனச் சில ஆசிரியர்கள் கூறியுள்ளனர். அது சரியான முடிவு அன்று. அமெரிக்க ஐக்கிய நாட்டில் சீர்திருத்தயுகத்தைத் தொடங்கி வைத்த பெருமை ரூஸ்வெல்ட்டையே சாரும். அவர் வகுத்துவிட்டிருந்த சீர்திருத்தப் பாதையில்தான் அடுத்து வந்த டாப்டும், வில்சனும், பிராங்கிளின் ரூஸ்வெல்ட்டும் சென்றனர். வரலாற்றுத்திருப்புமையக் காலத்தில் பதவியிலிருந்தமையால், வாஷிங்டனும், லிங்கனும் பெரும்புகழை அடைந்தனர். ஆனால் ரூஸ்வெல்ட் தம்முடைய தளரா முயற்சியினால் உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் மங்காப் புகழினைப் பெற்றார். ரூஸ்வெல்ட், லிங்கனைப்போலச் சிறந்த சிந்தனையாளராகத் திகழாவிட்டாலும்

செயல் திறம் மிக்கவராகத் திகழ்ந்தார்; உலக அரங்கில் உன்னத மான இடத்தை அமெரிக்க ஐக்கிய நாடு பெற்ற நேரத்தில் பதவிக்கு வந்தார்; மேலும், வலிமைமிக்க நாடாகத் திகழ அமெரிக்காவை உள் நாட்டு வளர்ச்சியாலும், சீர்திருத்தத்தாலும் மேம்படச் செய்தார்; வெளிநாட்டுறவிலும் "இனிமையாகப் பேசி, வல்லரசுக்கோலைக் கையிலேந்திச் சென்று" அமெரிக்க ஐக்கிய நாட்டின் பெருமையைச் சிறப்பான முறையில் நிலைநாட்டினர்.

## (25.) உட்ரோ வில்சனும் புதிய பயனுரிமையும்

## (Woodrow Wilson and the New Freedom)

உட்ரோ வில்சன், வர்ஜீனியா மாநிலத்தில் 1856ஆம் ஆண்டு பிறந்தார்; பல ஆண்டுகள் தென்பகுதியிலேயே வாழ்ந்தார். பிரின்ஸ்டன் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்ற பின், வர்ஜீனியா பல்கலைக்கழகத்தில் சட்டம் பயின்றார். அவர் வழக்குரைஞராக சிலகாலம் ஜார்ஜியாவில் வாழ்ந்தார். அவ்வேலை அவருக்குப் பிடிக்கவில்லை. எனவே மீண்டும் கல்வி பயில விரும்பி, ஜான் ஹாப்கின்ஸ் பல்கலைக்கழகத்தில் சேர்ந்தார். அமெரிக்கக் கூட்டாட்சி அரசு பற்றி ஓர் ஆய்வுக் கட்டுரையினை வெளியிட்டுப் பேரறிஞர் (டாக்டர்) பட்டம் பெற்றார். பன்னிரண்டு ஆண்டுகள் பேராசிரியராக பிரின்ஸ்டன் பல்கலைக்கழகத்தில் பணிபுரிநத பின்னர் அப் பல்கலைக்கழகத்தன் தலைவரானார்; எட்டு ஆண்டுகள் (1902—1910) அப்பதவியிலிருந்தார்; பின்னர் திடீரென அரசியலில்



**உட்ரோ வில்சன்**
28-வது குடியரசுத் தலைவர்
(1913- 1921)
மக்களாட்சிக் கட்சி

நுழைந்தார். மக்களாட்சிக் கட்சியின் சார்பில், தேர்தலில் போட்டியிட்டு 1911ஆம் ஆண்டு நியூஜெர்ஸியின் ஆளுநரானுர்; அடுத்த ஆண்டு அமெரிக்கக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

உட்ரோ வில்சன் ஒரு புதிரான அரசியல்வாதியாக விளங்கினுர்; வெளிப்புறப்பார்வைக்கு உணர்ச்சியற்றவராய், கவர்ச்சியற்றவராய்க் காட்சியளித்தார்; ஆனுல் செயலில் உணர்ச்சி மிக்கவராய்த் திகழ்ந்தார். கடந்த காலத்தில் மதிப்பும், பழமையான மரபுகளில் பற்றும் கொண்ட அவர் உள்நாட்டு அரசியலில் சிறந்த சீர்திருத்தவாதியாகத் திகழ்ந்து, மக்களின் மதிப்பைப் பெற்ருர். ஆக்க நல அரசு (Welfare State) ஒன்றினைக் காண விரும்பிய வில்சன் புதிய வழிமுறைகளை வகுப்பதில் வல்லவராகத் திகழ்ந்தார். அஞ்சா நெஞ்சம் கொண்டிருந்த அவர், சிறந்த பேச்சாளராகவும் விளங்கினுர் அமெரிக்க ஐக்கிய நாடு மேம்பாடுற்று வந்தநேரத்தில் வில்சன் குடியரசுத் தலைவரானது அவர் செய்த நற்பயனுகும். வில்சன் போன்ற சிறந்த தலைவர் ஒருவரை மக்கள் எதிர்பார்த்தனர்.

வில்சனிடம் சில குறைபாடுகளும் இருந்தன. அவரிடத்து விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை இல்லை. கோட்பாடுகளையும், கொள்கைகளையுமே அவர் உயர்வாகக் கருதினுர்; அவற்றைச் செயல் முறைக்குக் கொண்டு வரும்போது சமரச விட்டுக்கொடுப்பு நிலையை ஏற்க மறுத்தார். செயல்முறை அரசியலுக்கு அப் போக்கு இடர்ப்பாட்டினையே வளர்த்தது. ஆகவே, நாட்டில் ஏதாவது ஒரு பிரிவினர் அவரை எதிர்த்தவண்ணமிருந்தனர். வில்சனது பாங்கு சீர்திருத்தச் சட்டத்தினைக் குடியரசுக் கட்சியினர் கடுமையாக எதிர்த்தனர். மக்களாட்சிக் கட்சியினர் நெடுநாளைக்குப் பிறகு குடியரசுத் தலைவர் பதவியைப் பெற்றிருந்தனர். எனவே, தங்களுக்கு ஆதாயப் பங்கு முறைப்படி பதவிகளை வில்சன் வழங்குவார் என எதிர்பார்த்தனர். ஆனுல், வில்சன் தமது கட்சியினருக்குப் பதவிகளை வழங்க மறுத்து விட்டார். பிறர்மீது காரணமில்லாமல் தப்பெண்ணம் கொள்ளும் வழக்கம் வில்சனிடத்து இருந்தது. அவர் பிறரை அதிகமாகவும் நம்ப மாட்டார். அதனுல்தான் தம்முடன் செனட்சபை உறுப்பினர் ஒருவரையும் பாரிஸ் அமைதி மாநாட்டிற்கு அழைத்துச் செல்லவில்லை. இவ்வகையில் பல எதிர்ப்பாளர்களை உருவாக்கிக் கொண்ட வில்சன் மக்களின் ஆதரவைப் பெறத் தவறவில்லை. பொதுமக்கள் அவரைத் தெய்வம்போலக் கருதினர்.

### புதிய பயனுரிமை

தியோடர் ரூஸ்வெல்ட்டைப் போல, உள்நாட்டுக் கொள்கையில் நடுநிலைத்தன்மையையே வில்சன் பின்பற்றினுர்; தன்னலமிக்க

செல்வந்தர்களையும் வெறுத்தார்; தீவிரக் கருத்துகளைக் கொண்ட புரட்சியாளர்களையும் வெறுத்தார். நடுத்தரமக்கள்மீதும், சிறிய உற்பத்தியாளர்கள்மீதும் வில்சன் பற்றுக்கொண்டார். வாணிகக் கூட்டுநிறுவனங்களைக் கட்டுப்படுத்துவதிலும், காப்புவரிகளை விதிப்பதிலும், பாங்குகளைச் சீர்திருத்தியமைப்பதிலும், விவசாயத்தை ஊக்குவிப்பதிலும், தொழிலாளர்நலனைப் பாதுகாப்பதிலும் வில்சன் ஆர்வங் கொண்டார்.

**வாணிகக்கூட்டு நிறுவனங்களைக் கட்டுப்படுத்தல்**

உட்ரோ வில்சன் பதவியேற்கும்முன், பிரதிநிதிகள் மன்றம், வாணிகக் கூட்டுநிறுவனங்கள் இயங்கும் முறையைக் கண்டறிவதற்காக ஒரு குழுவை (Pujo Committee) அமைத்திருந்தது. நாட்டின் பொருளாதாரத்தை உறுதியாக ஒரு சில நிதியாளர்கள் கட்டுப்படுத்தி வருகின்றனர் என அக் குழு முடிவு தெரிவித்தது. ஷெர்மன் கூட்டு நிறுவன எதிர்ப்புச் சட்டத்தை மேலும் எவ்வகையில் விரிவாக்கலாம் எனக் காங்கிரஸை ஆராயச் சொன்னார். அதன்பேரில் கிளேட்டன் கூட்டுநிறுவனஎதிர்ப்புச்சட்டம் (Clayton Anti - Trust Act) 1914ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. இச் சட்டம் பெரிய தனியுரிமை பெற்ற வாணிக நிறுவனங்களைத் தடை செய்து, வணிக நிறுவனங்களுக்கிடையே போட்டியை வளர்த்தது. தனியுரிமை பெற்ற வாணிக நிறுவனங்கள் (Corporations) மேன்மேலும் பிற நிறுவனங்களின் பங்குகளைப் பெறக்கூடாதென்றும் இச் சட்டம் விதிவகுத்தது. ஒரு வாணிகக்கூட்டுநிறுவனத்தின் செயலாட்சிக் குழு உறுப்பினர், மற்றொரு நிறுவனத்தின் செயலாட்சிக் குழு உறுப்பினராக இருக்கக் கூடாது என்றும் தடைவிதிக்கப்பட்டது. வில்சனது எட்டாண்டுப் பதவிக்காலத்தில், வாணிகக்கூட்டுநிறுவனங்களுக்கெதிராகத் தொண்ணூற்றிரண்டு வழக்குகள் தொடரப்பட்டன.

கிளேட்டன் கூட்டுநிறுவன எதிர்ப்புச்சட்டத்தில், தொழிலாளர் சங்கங்களுக்கு ஆதரவுதரும் வகையில் ஓர் உட்பிரிவு சேர்க்கப் பட்டிருந்தது. தொழிலாளர்களது உழைப்பு ஒரு விலைபொருள் அன்று என்றும், அது வாணிகப்பொருள் அன்று என்றும் கூறப் பட்டது. எனவே தொழிற்சங்கங்களுக்குக் கூட்டுநிறுவன எதிர்ப்புச் சட்டத்தினின்று விலக்கு அளிக்கப்பட்டது. இச் சட்டத்தினைத் தொழிலாளர்கள் தங்களுக்குக் கிடைத்த பெரும்வெற்றியாகக் கருதினர். ஆனால், செயல்முறையில் தொழிலாளர் சங்கங்களை அமைக்கவும் வேலைநிறுத்தம் செய்ய உரிமையைப் பெறவும் தொழிலாளர்கள் இன்னும் சில ஆண்டுகள் காத்திருக்க வேண்டியதாயிற்று.

மாநிலங்களுக்கிடையேயான வாணிகத்தில் இருந்து வந்த நேர்மையற்ற பழக்கங்களை ஆய்வதற்காகக் கூட்டாட்சி வாணிகக் குழு

(Federal Trade Commission) ஒன்று 1914ஆம் ஆண்டு அமைக்கப் பட்டது. இக் குழு நன்முறையில் செயலாற்றிற்று. தவறான விளம்பரங்களைச் செய்து வந்த நிறுவனங்களும், உணவுப்பொருளில் கலப்படஞ் செய்துவந்த நிறுவனங்களும், சட்டப்படி கடுமையாகத் தண்டிக்கப்பட்டன. தவறுசெய்த நிறுவனங்களைச் சோதனை யிடவும், அவைமீது வழக்குத் தொடர்ந்து விசாரணை நடத்தவும், உத்திரவுகளைப் பிறப்பிக்கவும் இக் குழு உரிமை பெற்றிருந்தது.

**காப்புவரிச் சீர்திருத்தம்**

காப்புவரித் தொகையினைத் தமது விருப்பப்படி மாற்றியமைக்க வில்சன் நெடுநாளாகத் திட்டமிட்டு வந்தார். காங்கிரஸ் உறுப்பி னர்கள் காப்புவரிகளைக் குறைப்பதில் தமக்கு ஆதரவு அளிக்க மாட்டார்கள் என்பதனை அறிந்த வில்சன், நேரடியாகப் பொது மக்களின் ஆதரவை நாடினார். பிரதிநிதிகள் மன்றத்தில் மக்களாட்சிக் கட்சியினர் பெரும்பான்மையினராக இருந்தமையால் எளிதில் அங்கு காப்புவரிக் குறைப்புச் சட்டத்திற்கு இசைவுபெற முடிந்தது. ஆனால், செனட் மன்றத்தில் பழமையை விரும்பிய குடியரசுக் கட்சியினர் பெரும்பான்மையினராக இருந்தமையால் அவர்களது ஒப்புதலைப் பெறுவது கடினமாக இருந்தது. கடுமையான விவாதத்திற்குப் பிறகு செனட் மன்றத்தை வில்சன் தமது திட்டத்திற்கு இணங்க வைத்தார். 1913ஆம் ஆண்டு இயற்றப்பட்ட அச் சட்டத்திற்கு அண்டர்வுட்-சைமன்ஸ் காப்புவரி (Underwood Simmons Tariff) என்று பெயரிடப்பட்டது. இதன்படி காப்புவரி, பொதுவாக 37 சதவீதத் திலிருந்து 27 சதவீதமாகக் குறைக்கப்பட்டது. கம்பளம், இரும்புத்தாது, சர்க்கரை போன்ற இன்றியமையாத பொருள்கள் மீதான காப்புவரி முற்றிலும் நீக்கப்பட்டது. மொத்தத்தில் 958 பொருள்கள்மீதான காப்புவரி குறைக்கப்பட்டது; 86 பொருள்கள் மீது கூட்டப்பட்டது ; 307 பொருள்கள்மீது அப்படியே விடப்பட்டது.

காப்புவரிகளைக் குறைத்தமையால் அரசின் வருவாய் குறைந்தது. அதனை ஈடுகட்ட வருமான வரி ஒன்றினை விதிப்பதென காப்புவரிச் சட்டத்திலேயே கூறப்பட்டிருந்தது. ஒருவரது வருமானம் பெருகப் பெருக வரியும் அதிகமாகும் வகையில் வருமான வரி நிருணயிக்கப்பட்டிருந்தது. "எடுத்துக்காட்டாக, தனிமனிதர் ஒருவருக்கு 3000 டாலருக்கு மேலும், திருமணமானவருக்கு 4000 டாலருக்கு மேலும் வருமானம் இருந்தால் ஒரு சதவீதம் வருமான வரியாகத் திரட்டப்பட்டது. 20,000 டாலர் வரை ஒரு சதவீதமும், 20,000 முதல் 50,000 டாலர் வரை இரண்டு சதவீதம் எனவும் வரி கூட்டப்பட்டுக் கணக்கிடப்பட்டது. காப்புவரிக் குறைப்பால், உள்நாட்டில் மக்கள் பயன்பெறுவதும், வெளிநாட்டு வாணிகம் வளர்வதும் முதல்உலகப்போரினால் தடைப்பட்டது.

**பாங்குகளைச் சீர்திருத்தியமைத்தல்**

நாட்டு வாணிகத்தின் தேவைகளுக்கேற்ப, தாள்பணப் புழக்கத்தினைப் பாங்குகள் கட்டுப்படுத்த வேண்டுமென வில்சன் வாதிட்டு வந்தார். ஆன்ட்ரு ஜாக்சனின் பதவிக் காலத்திற்குப் பிறகு, பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த மையமான கட்டுப்பாட்டு நிறுவனம் ஏதும் இல்லை. உள்நாட்டுப்போரின்போது, சீர்மிக்க பணத்தாள் முறையினைப் பின்பற்ற தேசிய பாங்குச் சட்டம் (National Bank Act) ஒன்று இயற்றப்பட்டது. ஆனால் அச் சட்டம் செயல்முறைக்கு உதவாததாக இருந்தது. பல காரணங்களால் ஒரு பாங்குச் சட்டம் இயற்றப்பட வேண்டியது இன்றியமையாததாயிற்று.

கிழக்குப் பகுதியிலிருந்தபாங்குநிறுவன உரிமையாளர்களிடத்துப் பணம் மையமாகக் குவிந்து கிடந்தது. அவர்கள் விரும்பியபடியெல்லாம் வட்டித் தொகையினைக் குறைத்தும் கூட்டியும் வந்தனர். எனவே, பாங்குத் தொழிலைப் பன்முகப்படுத்திச் சீர்திருத்தம் செய்ய வேண்டியதாயிற்று. அடுத்து, நாட்டின் பணத்தாள் புழக்க முறையில் நெகிழ்வுத்தன்மை இல்லாமலிருந்தது. நெருக்கடியான காலங்களில் பணத்தேவையைப் பூர்த்தி செய்யக்கூடிய அளவுக்குப் பணத்தாள் வலிமையற்றதாயிருந்தது. பணத்தாள் புழக்கம் கூட்டாட்சி அரசின் சட்டத்தால் கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. அச் சட்டப்படி, பணத்தாளை அச்சிட்டுப் வெளியிடும் பாங்குகள் அவை பெற்றுள்ள அரசின் கடன் பத்திரங்களின் மதிப்பில் 90சதவீத மதிப்பளவுக்குத்தான் பணத்தாளை அச்சிட்டுப் புழங்க வேண்டுமெனக் கோரப்பட்டது. அதனால், அவ்வப்போது நாட்டில் பணத்தாள் புழக்கத்தில் சுருக்கம் ஏற்பட்டது. அதன்விளைவாக, நாட்டில் வாணிக நடவடிக்கைகளும் பெரிதும் தடைபட்டன. அதேநேரத்தில், நாட்டைவிட்டு உயர் உலோக நாணயங்களும் கணிசமான அளவில் வெளியேறிக் கொண்டிருந்தன. அதற்குமுன் கண்டிராத அளவுக்கு, நாடு மேற்கு நோக்கி விரிவுற்றமையால், அப் பகுதிகளைத் திருத்தியமைக்க வெளிநாட்டிலிருந்து மூலதனத்தைப் பெற வேண்டியதாயிற்று. வெளிநாட்டு முதலீட்டாளர்கள் அதிகமான வட்டித்தொகையை விதித்தனர். மற்றும் அமெரிக்க மக்கள் ஏராளமான சரக்குக்களை ஐரோப்பாவினின்றும் இறக்குமதி செய்தனர். வெளிநாட்டுக் கடன்களை ஈடுசெய்ய, நாணயத்தை அளிக்க நேரிட்டமையால், உள்நாட்டில் நாணயப் புழக்கம் குறைந்தது. பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்த போதிய அளவுக்குக் கூட்டாட்சி அரசிடம் அதிகாரம் இல்லாதிருந்தது. நியூயார்க்கிலிருந்த மாபெரும் பாங்கு நிறுவனத்தினர்தான் நாட்டின் பணப்புழக்கத்தைக் கட்டுப்படுத்தி வந்தனர். பாங்கு நிறுவனங்களெல்லாம் நியூயார்க்கிலிருந்த வால்தெருவில் (Wall Street)

இருந்தமையால் வால்தெருதான் நாட்டை ஆட்டிப்படைக்கின்றது என மக்கள் கூறலாயினர். வால்தெருவில் கலக்கம் ஏற்பட்டால், உடனே நாடு முழுவதும் பணப்புழக்கத்தில் தடுமாற்றம் ஏற்பட்டது. இப்படி ஒரு சிலர் நாட்டின் பணப்புழக்கத்தைக் கட்டுப்படுத்துவதை வில்சன் தடுக்க நடவடிக்கைகள் மேற்கொண்டார்.

**கூட்டாட்சி ஒதுக்கீடு சட்டம்** *(Federal Reserve Act)*

நாட்டின் பாங்கு அமைப்பு முறையில் இருந்து வந்த குறைகளைக் களைய, காங்கிரஸ், 1913ஆம் ஆண்டு கூட்டாட்சி ஒதுக்கீடு சட்டத்தை இயற்றியது. அச் சட்டம் மக்களது தேவைக்கேற்ப புழக்கத்தில், விடவும், புழக்கத்திலிருந்து அகற்றவும் கூடிய நெகிழ் தன்மை பொருந்திய பணத்தாள் முறையைச் செயலாக்க வழி வகுத்தது. மேலும் நெருக்கடியான காலங்களில் பயன்படுத்துவதற்காகச் சேம நிதி ஒதுக்கீடு முறையும் அச் சட்டத்தால் கட்டாயப் படுத்தப்பட்டது. கிழக்குப் பகுதியிலுள்ள பாங்கு உரிமையாளர்கள் கையினின்றும் பணப்புழக்கக் கட்டுப்பாட்டினை மாற்றவும் அச் சட்டம் வகை செய்தது.

இச் சட்டத்தால் உருவாக்கப்பட்ட கூட்டாட்சி ஒதுக்கீடுமுறை அமெரிக்க ஐக்கிய நாட்டைப் பன்னிரண்டு மாவட்டங்களாகப் பிரித்தது. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்கு நிறுவப்பட்டது. இவை பாங்குகளுக்குப் பாங்குகளாகச் செயலாற்றின. இதில் தனியார் எவரும் சேமிக்கவோ, தொடர்பு கொள்ளவோ முடியாது. நாட்டிலுள்ள தேசிய பாங்குகள் அனைத்தும் கட்டாயமாக அந்தந்த மாவட்டத்திலுள்ள கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்கின் உறுப்பினர்களாக வேண்டும். மாநிலங்களிலுள்ள சிறு சிறு பாங்குகளும் விருப்பப்பட்டால் உறுப்பினராகலாம். அமெரிக்க ஐக்கிய நாட்டின் எல்லைக்கு அப்பாலுள்ள அலாஸ்கா மாநிலத்தில், ஆன்காரேஜ் *(Anchorage)* என்னுமிடத்தில் பன்னிரண்டாவது கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்கு நிறுவப்பட்டது. இப்பன்னிரண்டு கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்குகளையும் மேற்பார்வையிட, தலைநகரான வாஷிங்டனில் கூட்டாட்சி ஒதுக்கீடு குழு ஒன்று அமைக்கப்பட்டது. அக் குழுவில் நிதித்துறையின் செயலாளரும், பணத்தாள் கணக்குத் தணிக்கையாளரும், ஐந்து உறுப்பினர்களும் உட்பட மொத்தம் எழுவர் இருந்தனர். உறுப்பினர்களைக் குடியரசுத்தலைவர் செனட் சபையின் இசைவோடு நியமித்தார்.

வாணிகத் தேவைகளுக்கேற்ப, கூட்டாட்சி ஒதுக்கீடு முறை பணப் புழக்கத்தைக் கட்டுப்படுத்தியது. அதனால், நாட்டின் பொருளாதார வளர்ச்சி ஒரு சீராக அமைந்தது. உரிமைப்போருக்குப் பிறகு,

கூட்டாட்சி அரசின நிதிநிலைமையை ஹாமில்டன் அரும்பாடுபட்டுச் சீர்திருத்தியது போலவும், உள்நாட்டுப்போருக்குப்பிறகு, தேசிய பாங்குமுறை பணப்புழக்கத்திலிருந்த குறைகளைக் களைந்தது போலவும், கூட்டாட்சி ஒதுக்கீடு முறை சரியான நேரத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் நிதி நிலைமையை உறுதிப்படுத்தி, முதல் உலகப் போருக்கு ஆயத்தமாக நாட்டை வலுப்படுத்திற்று. தனியார் பாங்கு முறையில் ஈடுபாடு கொண்டவர்கள் கூட்டாட்சி ஒதுக்கீடு முறையினைக் குறை கூறினர். ஆனால், இன்று அனைவராலும் தவிர்க்க முடியாத ஓர் அமைப்பாக எல்லோரும் ஏற்றுக் கொண்டுள்ளனர்,

**வேளாண்மைக்கு உதவியளித்தல்**

வேளாண்மை சம்பந்தப்பட்ட சட்டங்கள் பல வில்சனின் பதவிக் காலத்தில் இயற்றப்பட்டன. குறுகியதவணை முறையிலான கடனளிப்புமுறைபற்றிக் கூட்டாட்சி ஒதுக்கீடு சட்டத்திலேயே கூறப்பட்டிருந்தது. பண்ணைச் சொத்துகளை அடைமானமாக ஏற்றுக் கொண்டு விவசாயிகளுக்குப் பண உதவி அளிக்கவும், விவசாய முதலீடு பத்திரங்களை ஏற்றுக் கொண்டு நிதி உதவி அளிக்கவும் வழி முறைகள் வகுக்கப்பட்டிருந்தன. ஆனால், இச்சலுகைகள் குடியான வர்களுக்கு மனநிறைவை அளிக்கவில்லை. அவர்கள் நீண்ட காலத் தவணைக் கடன்களையே கேட்டனர். 1914 ஆம் ஆண்டு இயற்றப் பட்ட ஸ்மித் லிவர் சட்டப்படி (Smith Lever Act) விவசாயச் செய்தி களையும், புதிய கண்டுபிடிப்புக்களையும் குடியானவர்களுக்கு அறிவிக்க ஒரு இயக்கம் தொடங்கப்பெற்றது. அவ்வியக்கத்திற்கான நிதியுதவியைக் கூட்டாட்சி அரசு அளித்தது. அவ்வியக்கத்தை விவசாயத்துறையும், மாநிலங்களிலிருந்த விவசாயக் கல்லூரிகளும் இணைந்து நடத்தின. 1916ஆம் ஆண்டு கூட்டாட்சிப்பண்ணைக் கடன்சட்டம் (Federal Farm Loan Act) ஒன்று இயற்றப்பட்டது. அச் சட்டம் பன்னிரண்டு கூட்டாட்சி நிலப்பாங்குகளைத் தோற்று வித்தது. கூட்டுறவுப்பண்ணைக் கடன்கழகங்களுக்குக் குறைந்த வட்டிக்குக் கடன் தந்துதவ அப் பன்னிரண்டு பாங்குகளுக்கும் உரிமை தரப்பட்டது. சிறுசிறு குடியானவர்கள் பண்ணைச்சொத்துகளை அடைமானமாக வைத்து நீண்டகாலத்தவணைக் கடன்களைப் பெறுவதற் காகவே கூட்டுறவுப்பண்ணைக் கடன்கழகங்களை அமைத்திருந்தனர்.

**தொழிலாளர் நலனைப் பாதுகாத்தல்**

முன்பு குறிப்பிட்டபடி, கிளேட்டன் சட்டம் தொழிலாளர் சங்கங்களை ஆதரித்தது. அடுத்து 1915ஆம் ஆண்டு இயற்றப் பட்ட லாபாலெட் கப்பல்தொழிலாளர் சட்டம் (The La Follette Seamen's Act) பல ஆண்டுகளாகத் துன்பத்தில் ஆழ்ந்திருந்த மாலுமிகளின் தொழில்நிலையினை மாற்றியமைத்தது. மாலுமி

களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய குறைந்த அளவிலான ஊதியம், உணவு, இருப்பிடம் ஆகியவையெல்லாம் அச்சட்டத்தில் குறிப் பிடப்பட்டிருந்தன. மேலும் கப்பல்களின் காப்புமுறைக்கான விதிகளும் கடுமையாக்கப்பட்டன. 1916ஆம் ஆண்டு இயற்றப் பட்ட ஆடம்சன் சட்டம் (Adamson Act) மாநிலங்களுக்கிடையேயான இரயில்பாதைகளில் வேலை நேரத்தை, எட்டுமணியாக நிருணயித்தது. தொழிற்சாலைகளில் சிறுவர்களை வேலைக்கு அமர்த்தும் வழக்கத்தை யும் தடுக்க இரண்டு சட்டங்கள் இயற்றப்பட்டன.

வில்சன் பதவிக்கு வந்த மூன்று ஆண்டுகளில், லிங்கனுக்குப் பிறகு வேறு எந்தக் குடியரசுத் தலைவரும் இயற்றாத அளவுக்கு எண்ணிறந்த முக்கியமான சட்டங்களை இயற்றியிருந்தார். கட்சிக்குக் குடியரசுத் தலைவர் எவ்வகையில் தலைமையேற்க முடியுமென் பதனையும், காங்கிரஸிற்கு, ஆட்சித்துறை எவ்வகையில் தலைமை யேற்று வழிகாட்ட முடியுமென்பதனையும் வில்சன் ஐயந்திரிபறச் செயற்படுத்திக் காட்டினார். மேம்பாட்டு இயக்கத்தின் சிகரமாகப் புதிய பயனுரிமை இயக்கம் அமைந்தது. தாம் கொடுத்த வாக்கு றுதிகளை நிறைவேற்றிவிட்டதாக வில்சன் எண்ணி மகிழ்ந்தார். பெரு வாணிகத்தைக் கட்டுப்படுத்தி வகைப்படுத்தியமுறை போதுமான தாகத் தோன்றிற்று. எனவே, மேம்பாட்டு இயக்கம் ஊக்கம் இழக்க லாயிற்று. சீர்திருத்த இயக்கத்தின் தூண்டுதிறனும் குன்றலாயிற்று. 1916ஆம் ஆண்டுத் தேர்தலில் வெற்றிபெற்று இரண்டாவது பதவிக்காலத்தைத் தொடங்கியபோது வில்சன் பெருமைப்படக்கூடிய அளவிற்குப் பல சட்டங்களை இயற்றுவதில் வெற்றிகண்டிருந்தார். பல அடிப்படைச் சிக்கல்களைத் தீர்த்துவைத்து, மக்களுக்கு நன்மை புரியவே அரசு உள்ளது என்ற கருத்தினை மெய்ப்பித்து, வில்சனும் மேம்பாட்டு இயக்கத்திலிருந்த அவரது உற்ற நண்பர்களும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்குப் பயன்மிக்க மரபுரிமைகளை நிலைநாட்டிச் சென்றி ருந்தனர். முதல் உலகப்போர் தொடங்கியதால் மேம்பாட்டு இயக்கத்திற்கு ஒரு முற்றுப்புள்ளிவைக்கப்பட்டது.

### அரசியலமைப்புத் திருத்தங்கள்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்பானது 1913ஆம் ஆண்டு, இரண்டு முறை திருத்தப்பட்டது. பதினாறாவது அரசிய லமைப்புத் திருத்தப்படி, காங்கிரஸ் வரையறையில்லாமல் அனைவரின் வருமானத்தின் மீதும் வரி ஒன்றினை விதித்தது. பெருகிக் கொண்டேயிருக்கும் அரசின் செலவினைச் சமாளிக்க இவ்வரி விதிக்கப் பட்டது. பதினேழாவது திருத்தத்தின்படி, செனட்சபைக்கு உறுப்பினர்களை அந்தந்த மாநில மக்களே தேர்ந்தெடுக்க வேண்டு மென்று கூறப்பட்டது. அதுவரை மாநிலச் சட்டமன்றங்கள் தத்தம்

உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தனுப்பின. 1920ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட பதினெட்டாவது திருத்தத்தின்படி, நாடு முழுவதும் மதுவிலக்கு செயலாக்கப்பட்டது. மதுவிலக்கு வெற்றி கரமாக இயங்காததால் இத்திருத்தம் 1923ஆம் ஆண்டு, இருபத் தோராவது திருத்தத்தின் மூலம் தள்ளுபடி செய்யப்பட்டது. 1920 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பத்தொன்பதாவது திருத்தத்தின்படி பெண்களுக்கு வாக்குரிமை வழங்கப்பட்டது. 1933ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட இருபதாவது திருத்தத்தின்படி குடியரசுத் தலைவர் பதவியேற்கும் நாள் ஜனவரித் திங்கள் 20ஆம் நாளாக நிருணயிக்கப்பட்டது.

# 26. அமெரிக்க ஐக்கிய நாடும் முதல் உலகப்போரும்

முதல் உலகப்போர் தொடங்குவதற்கு முன்பே பல ஆண்டுகளாக, அமெரிக்க ஐக்கிய நாடு, பன்னாட்டு அரசியலில் ஈடுபட்டு, ஆழ்ந்த ஆர்வங்கொண்டிருந்தது. அப்படியிருந்தும் ஐரோப்பிய ஒப்பந்தங்களினின்றும், போராட்டங்களினின்றும் தங்கள் நாடு தொடர்ந்து தனித்தியங்க முடியுமென அமெரிக்க மக்கள் கருதி வந்தனர். ஆனால், முதல் உலகப்போர் தொடங்கியதும், அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கும் அரசியல், பொருளாதாரம், பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையிலான உறவு நிலை நாளுக்குநாள் வலுப்பெற்று வருவதை அமெரிக்க மக்கள் உணரலாயினர். தொடர்ந்து, தனித்திருத்தல் கொள்கையினைப் பின்பற்றினால் பேரிடர்களும், பேரிழப்புகளும் ஏற்படுவது உறுதி என்பதும் தெளிவாயிற்று. உறுதியற்ற நிலையில் நடுநிலைமை வகித்துவந்த அமெரிக்க ஐக்கிய நாடு, போர் தொடங்கி மூன்றாண்டுகள் கழித்து நேரிடையாகப் போரிலிறங்கிற்று. இவ்வகையில் அமெரிக்காவின் வெளிநாட்டுறவுக் கொள்கையில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. அமெரிக்கா தனித்திருத்தல் கொள்கையினைக் கைவிட்டது. மீண்டும் 1920 - 1930ஆம் ஆண்டுகளுக்கிடையே தனித்திருந்து பார்த்த அமெரிக்கா, மீண்டும் இரண்டாவது உலகப்போரில் ஈடுபட்டு, அதன்பிறகு மேலைநாட்டு நாகரிகத்தின் தலைமைப் பொறுப்பையேற்றுத் திகழலாயிற்று.

### அமெரிக்கா போரிலிறங்கல்

முதல் உலகப்போருக்கான அடிப்படைக் காரணம், உலகம் இறைமை சார்ந்த நாடுகளாகப் பிளவுண்டமையேயாகும். ஒவ்வொரு நாட்டிலும் தேசியப்பற்றுணர்வோடு, பேரரசுக் கொள்கையினடிப்படையில் ஆதிக்கப்போட்டிமனப்பான்மையும் வளர்ந்தது. எந்த ஒரு நாடும் போருக்காகத் திட்டமிடவில்லை. இருப்பினும் சில

நாடுகள் ஒன்றுகக் கூடி, தொகுதிதொகுதியாகப் பிரிந்து, தத்தம் கருத்துகளை நிறைவேற்றப் போரிட ஆயத்தமாயிருந்தன. முதல் உலகப்போருக்கு உடனடியான காரணம், ஆஸ்திரிய - ஹங்கேரிப் பேரரசில் நிலவிய கொந்தளிப்பான நிலையேயாகும். டான்யூப் (Danube) நதிப் பகுதியில் வாழ்ந்து வந்த ஸ்லாவிய (Slav) இனஞ் சார்ந்த மக்களை ஆஸ்திரிய - ஹங்கேரி பேரரசு கட்டுப்படுத்தி வந்தது. ஸ்லாவிய மக்கள் உரிமைவேட்கை கொண்டிருந்தனர். இந் நிலையில், 1914ஆம் ஆண்டு, ஜூன் திங்கள் 28ஆம் நாள் ஆஸ்திரிய இளவரசரான பிரான்சிஸ் பெர்டினண்டு (Francis Ferdinand) என்பவர் ஸ்லாவிய இனஞ்சார்ந்த ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். அக் கொலைக்குத் தூண்டுதலாக இருந்தவர்கள் செர்பியநாட்டு அலுவலர்களே என ஆஸ்திரியா, செர்பியாமீது குற்றஞ்சாட்டிற்று. இத் தருணத்தைப் பயன்படுத்த விரும்பிய ஆஸ்திரியா, தனது ஆதிக்கத்தினைச் செர்பியாமீது நிலைநாட்டப் பல உரிமைகளைக் கோரியது. செர்பியா அக் கோரிக்கைகளை ஏற்க மறுக்கவே ஆஸ்திரியா, செர்பியாமீது போர் தொடுத்தது. பால்கன் (Balkan) பகுதியில் ஆஸ்திரியா ஆதிக்கத்தைச் செலுத்த முனைந்தமையால், ஐரோப்பாவில் சக்திச்சமநிலை பாதிக்கப்படும் எனப் பிற நாடுகள் அஞ்சின. ஒப்பந்தங்களால் தொகுதிதொகுதி யாகப் பிரிந்திருந்த நாடுகள், தத்தம் நட்பு நாடுகள் போர் தொடுத்ததும் தாமும் அவற்றை ஆதரித்துப் போரிலிறங்கின.

ஆஸ்திரியா, செர்பியாமீது படையெடுத்ததும், ஜெர்மனி, ஆஸ்திரியாவுக்கு ஆதரவாக உதவ முன்வந்தது. செர்பியாவுக்கு ஆதரவாக ருஷ்யா தனது படைகளைச் செர்பியா நோக்கிச் செல்ல உத்திரவிட்டது. ருஷ்யாவோடு பிரான்சு நட்பு கொண்டிருந்தமையால் பிரான்சும் செர்பியாவை ஆதரிக்கலாயிற்று. இப்படி இரு தொகுதி களாக ஐரோப்பிய நாடுகள் பிரிந்தன. ஜெர்மனி, பிரான்சைத் தாக்கத் திட்டமிட்டு, நடுநிலைவகித்த பெல்ஜிய நாட்டின் (Belgium) வழியாகத் தனது படைகளை அனுப்பியது. பெல்ஜிய நாட்டின் நடு நிலைமையைக் காக்கும் பொறுப்பு பிரிட்டனிடம் ஒப்படைக்கப்பட் டிருந்தது. பெல்ஜியத்தை ஜெர்மனி தாக்கவே, பிரிட்டனும் ஜெர்மனிக்கு எதிராகப் பிரான்சின் பக்கம் போரிலிறங்கியது.

போரில் ஜெர்மனியும், ஆஸ்திரியாவும், இணைந்திருந்த தொகுதியினை மைய நாடுகளென்றும் (Central Powers), செர்பியா, ருஷ்யா, பிரான்சு, இங்கிலாந்து ஆகிய நாடுகள் இணைந்திருந்த தொகுதியினை நேச நாடுகளென்றும் (Allies) குறிப்பிடுவது வழக்கம். பல்கேரியாவும், துருக்கியும் மைய நரடுகளுடன் சேர்ந்து கொண்டன. ஜப்பான், இத்தாலி; ருமேனியா ஆகிய நாடுகள் நேச நாடுகளுடன் சேர்ந்துகொண்டன.

போர் தொடங்கிய முதல் ஆறு கிழமைகளில் ஜெர்மனி வெற்றி மேல் வெற்றி பெற்றது. செப்டம்பர் (1914) திங்களில் நடைபெற்ற மார்ன் (Marne) போரில்தான் ஜெர்மனி முதலாவதாகத் தடுத்து நிறுத்தப்பட்டது. இதனையடுத்து ஏறத்தாழ நான்கு ஆண்டுகளுக்கு, இருதரப்பார்க்கும் வெற்றி தோல்வியின்றிப் போர் நடந்துகொண்டேயிருந்தது. முதன்முறையாக அகழிச் சண்டைமுறை, போரில் பின்பற்றப்பட்டது. வரலாற்றில் அதுவரை கண்டிராத அளவுக்கு மக்கள் உயிரிழந்தனர். அதைப்பற்றி இருதரப்பு நாடுகளின் தலைவர்களும் கவலைகொள்ளவில்லை. ருஷ்யப் பகுதியிலும், இத்தாலியப் பகுதியிலும் முட்டுக்கட்டை நிலைமை நிலவிற்று. பிரிட்டன் தனது கப்பற்டையின் வலிமை கொண்டு ஜெர்மனியை இணங்க வைக்கலாமெனத் திட்டமிட்டது. பிரிட்டன் கப்பற்படை கொண்டு ஜெர்மனியை முற்றுகையிட்டது. ஜெர்மனி பழிக்குப்பழி வாங்கும் நோக்கத்தோடு, நீர்மூழ்கிக் கப்பல்களைக் கொண்டு நேச நாடுகளின் வாணிகக் கப்பல்களைத் தாக்க முற்பட்டது.

முதல் உலகப்போரினை இருவேறுபட்ட கொள்கைகளுக்கிடையேயான மோதல் எனக் கொள்ளலாம். ஐரோப்பாவின் கிழக்குப் பகுதியில் ஆதிக்கத்தை நிறுவ ஸ்லாவிய மக்களுக்கும், டியூட்டானிக் (Teutonic) இனஞ்சார்ந்த மக்களுக்குமிடையேயான போட்டியே உலகப்போராக மாறியது எனலாம். அதுபோன்றே ஐரோப்பாவின் மேற்குப் பகுதியில் ஆதிக்கத்தை நிறுவவும், கடல் கடந்த வாணிகத்திலும், குடியேற்றங்களை நிறுவுவதிலும், உயரிய இடத்தைப் பெறவும், ஜெர்மனிக்கு பிரெஞ்சு - பிரிட்டிஷ் கூட்டுக்கும் இடையே ஏற்பட்ட போட்டியே பெரும் போராக வடிவெடுத்தது என்றும் கூறலாம். இப் போரில் அமெரிக்க ஐக்கிய நாடு ஒருபோதும் ஈடுபடாது என மக்கள் நினைத்து வந்தனர். எனினும், குறிப்பிடத் தக்க ஒரு சிலர், பிரிட்டன் - பிரான்சு பக்கம் ஈடுபாடு கொண்டனர். குடியேற்ற நாடுகளைப் பெற, ஜெர்மனி வன்முறையினைப் பயன் படுத்தியமையைக் கண்ட அமெரிக்க மக்கள், ஜெர்மனிமீது வெறுப்பு கொண்டனர். ஜெர்மனியில் பெயரளவில்தான் மக்களாட்சி நடைபெற்றது. இராணுவ மரபில் வந்த அந் நாட்டு அரசர்களின் போக்கு மக்களாட்சி அடிப்படையிலான அமெரிக்க அரசியல் கோட்பாடுகளுக்கு முற்றிலும் முரணானவையாக இருந்தன. ஒரு வேளை, இப் போரில் ஜெர்மனி வெற்றி பெற்றால் தங்களது நிறுவனங்களும், கோட்பாடுகளும், நலனும் அழிவுறும் என அமெரிக்க மக்கள் கருதியமையால்தான், இறுதியாக அமெரிக்க ஐக்கிய நாடு போரிலிறங்கிற்று.

முதல் உலகப்போர் தொடங்கியதும், குடியரசுத் தலைவர் வில்சன், தாமே நேரடியாக வெளிநாட்டுறவினைப் பார்வையிடலானர்

எனவே, அவருடைய சொந்தக் கருத்துகள் முக்கியத்துவம் பெறலாயின. அவருடைய மனம் இரு வேறுபட்ட நோக்கங்களுக் கிடையே சில நாள் ஊசலாடிக் கொண்டிருந்தது. ஐரோப்பாவில் நடந்துவந்த போரில், இருதரப்பாரிடையேயும் குறையும், நிறையும் இருந்ததென வில்சன் கூறினர். இருதரப்பாருக்கும் வெற்றி தோல்வி இல்லாத வகையில் அமைதி நிலையாக நிறுவப்பட வேண்டு மென விரும்பினர். அமெரிக்க ஐக்கிய நாடு சார்பற்ற நிலையிலிருந்து இடையீட்டாளராகப் பணிபுரிய வேண்டுமென்றும் வில்சன் கருதினர். ஆனல், சில சமயம் வில்சன் நேசநாடுகள்மீது இரக்கங் கொண்டார். இப்போருக்கு ஜெர்மனியே பொறுப்பு என்று வில்சன் நம்பினர். பன்னாட்டுச் சட்ட திட்டங்களுக்கோ, பிற நாடுகளின் உரிமை களுக்கோ ஜெர்மனி மதிப்புத்தர மறுப்பதைக் கண்டார். ஜெர்மனி வெற்றி பெற்றால், அது அமெரிக்க ஐக்கிய நாட்டுக்குக் கேடான முடிவாகும் என வில்சன் கருதினர்.

ஜெர்மனி தோற்கடிக்கப்பட வேண்டும் என்ற வில்சனின் கருத்துக்கு ஒருமுகமாக அமெரிக்க மக்களில் பெரும்பாலோர் ஆதரவு தெரிவித்த போதிலும், ஒரு சிறுபான்மையினர் கடைசி வரை அமெரிக்க நாடு நடு நிலைமையை வகிக்க வேண்டுமென வற்புறுத்தி வந்தனர். அவர்களில் ஒரு சிலர் அமைதியை நாடுபவர்களா யிருந்தனர்; ஒரு சிலர் தனித்திருத்தல் கொள்கைவாதியினராய் இருந்தனர்; ஒரு சிலர் ஜெர்மனியை ஆதரிப்பவர்களாக இருந்தனர். அமெரிக்க மக்களிடையே இக் கருத்துக்கள் நிலவியமைக்கு அவரவரது வழிமரபும் ஓரளவு காரணமாக இருந்தது. அமெரிக்க மக்களில் பெரும்பாலோர் பிரிட்டிஷ் மரபினராயிருந்தமையால் நேச நாடுகளை அவர்கள் ஆதரித்தனர். ஜெர்மனி, அயர்லாந்து, ஸ்காண்டிநேவியா ஆகிய நாடுகளிலிருந்து வந்து குடியேறிய மக்கள் சந்ததியினர் தனித்திருக்க அல்லது ஜெர்மனியை ஆதரிக்க முனைந்தனர். மேற்கு மையப் பகுதியில் நேச நாடுகளுக்காக இரக்கப்படுபவர் அறவே இல்லை எனலாம். ஜெர்மனியை ஆதரிக்க வேண்டுமென எவரும் கோரவில்லை. எனவே நேச நாடுகளை ஆதரிப்பதா அல்லது நடு நிலைமை வகிப்பதா என்பதுபற்றிதான் மக்கள் விவாதித்து வந்தனர்.

### பிரிட்டனுடன் கருத்து மாறுபாடு

ஜெர்மனியைப் பிரிட்டன் முற்றுகையிட்டமையால் பன்னாட்டு விதிமுறைகள் பல மீறப்பட்டன. அதனல், அமெரிக்காவுக்குத் தொல்லைகள் பல ஏற்பட்டன. பன்னாட்டுச் சட்டப்படி, படைக் கலங்களை ஏற்றிச் செல்லும் எதிரியின் கப்பல்களைமட்டும் கைப்பற்ற ஒரு நாட்டுக்கு உரிமை தரப்பட்டிருந்தது. ஆனல், பிரிட்டனே வெளியுலகோடு ஜெர்மனி கொண்டிருந்த வாணிக உறவு

அனைத்தையும் துண்டித்தது. சட்டத்திற்கு முரணாகப் பிரிட்டன் தனது முற்றுகையை ஹாலந்து, ஸ்காண்டிநேவியா ஆகிய நாடுகள் மீதும் நீட்டித்தது. இத்தகைய முற்றுகையினால் பல அமெரிக்க வாணிகக் கப்பல்கள் நிறுத்தப்பட்டு, அவற்றிலிருந்த சரக்குகள் கைப்பற்றப்பட்டன.

அமெரிக்க ஐக்கிய நாடு, கடலுரிமைக்கோட்பாட்டின் அடிப் படையில் பிரிட்டனின் செயலைக் கண்டித்தது. ஆனால், கண்டனக் குறிப்புகளெல்லாம் மென்மையமுள்ளவைகளாகவே இருந்தன. அவை சீற்றங்கொண்ட அமெரிக்க வாணிகர்களின் மனநிறைவுக்காகவே வெளியிடப்பட்டனவே ஒழிய, பிரிட்டனிடமிருந்து சலுகைகள் பெறுவதற்காக அல்ல. வில்சன் பிரிட்டன்மீது எத்தகைய வற்புறுத்தலையும் திணிக்கவில்லை. பிரிட்டனும் போர்க்காலம் முழுவதும் எத்தகைய சலுகையையும் அமெரிக்காவுக்குத் தரவில்லை. பிரிட்டனுக்கெதிராக வில்சன் தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள வில்லை எனப் பலர் குறை கூறினர். வரையறைக்குட்பட்ட போர் முறை என்ற பதினெட்டாம் நூற்றாண்டுக் கருத்து இப்போது பொருளற்றதாக இருந்ததை வில்சன் மக்களுக்கு எடுத்துரைத்தார். அப்பொழுதிருந்த சூழ்நிலைக்குத் தேவைப்பட்ட வகையில், பிரிட்டன் ஜெர்மனிக்குச் சென்று கொண்டிருந்த சரக்குகளை போருக்கானவை, போருக்கல்லாதவை எனப் பாகுபடுத்தாமல் அனைத்தையும் கைப் பற்றியமை சரியே என்றும் வில்சன் கருதினர்.

### ஜெர்மனியுடன் கருத்து மாறுபாடு

1915ஆம் ஆண்டு ஜெர்மனி நீர்மூழ்கிக் கப்பல் போரினைத் தொடங்கிற்று. அமெரிக்கக் கப்பல் தாக்கப்பட்டாலோ அல்லது அமெரிக்க மக்கள் உயிரிழக்க நேரிட்டாலோ அதற்கு முழுப் பொறுப்பையும் ஜெர்மனி ஏற்க வேண்மென வில்சன் எச்சரிக்கை விடுத்தார். உடனே ஜெர்மனியும் அதற்கிணங்கி, நடு நிலைமை வகிக்கும் நாடுகளின் கப்பல்களைத் தாக்க வேண்டாமென நீர் மூழ்கிக் கப்பல் படைக்கு ஆணை பிறப்பித்தது. எதிர்பாராத வகையில் இரண்டு அமெரிக்கக் கப்பல்கள் தாக்கப்பட்டபோது உடனே ஜெர்மனி இழப்பீடு அளித்தது. ஆனால், இறந்து போனவர்கள் உயிரினை திருப்பிப் பெற முடியுமா? மார்ச்சு திங்கள் 28 ஆம் நாள் பலபா (Falaba) என்ற அமெரிக்கக் கப்பல் தாக்கப் பட்டதில் அமெரிக்கர் ஒருவர் உயிரிழந்தார். அடுத்து மேதிங்கள் 7ஆம் நாள் லூசிடானியா (Lusitania) என்ற கப்பல் தாக்கப்பட்டதில் 1,198 பேர் உயிரிழந்தனர். அதில் 128 பேர் அமெரிக்கராவர். இச் செய்தியினைக் கேட்ட அமெரிக்க மக்கள் கொதித்தெழுந்தனர். ஒரு சிலர் ஜெர்மனிமீது உடனே போர்தொடுக்க வேண்டினர்.

இருப்பினும் நடுநிலைமைக் கொள்கையினைக் கைவிட வில்சன் முன் வரவில்லை. பிரிட்டிஷ் கப்பல்களில் சென்றால் அமெரிக்கருக்கு முழு பாதுகாப்பு உண்டென்று வில்சன் கூறினர்.

நீர்மூழ்கிக் கப்பல்கள் பற்றிய சிக்கல் ஓராண்டுக் காலம் நீடித்தது. பயணிகள் கப்பல்களைத் தாக்க வேண்டாமென நீர்மூழ்கிக் கப்பல் படைக்கு ஜெர்மானிய அரசு ஆணை பிறப்பித்தது. அப்படியே பயணிகள் கப்பல் தாக்கப்பட்டால் அது சட்டத்திற்கு முரணாகாது என்றும் ஜெர்மனி கூறிற்று. ஆனல் தவருக ஆணையை மீறி ஜெர்மானியத் தளபதி ஒருவர் 1916ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் "சஸெக்ஸ்" (Sussex) என்ற பிரெஞ்சுக் கப்பலைத் தாக்கி மூழ்கடித்தார். இனியும் முன்னறிவிப்பின்றி கப்பல்களைத் தாக்காது என ஜெர்மனி உறுதி மொழியளிக்காவிட்டால், அந்நாட்டுடனான உறவு முறையை அமெரிக்கா முறித்துக் கொள்ளும் என வில்சன் எச்சரிக்கை விடுத்தார். உடனே ஜெர்மனி அதற்கிணங்கி, அமெரிக்க விரும்பியபடியே உறுதிமொழியளித்தது. ஜெர்மனி அதே சமயத்தில் பிரிட்டனின் முற்றுகையைத் தளர்த்த வேண்டுமென வில்சனிடம் கோரியது. ஆனல் பிரிட்டன் ஜெர்மனியின் கோரிக்கைகளை ஏற்க மறுத்தது.

நேச நாடுகளுக்கு உதவ வேண்டுமென்ற மனப்பான்மை அமெரிக்காவில் வலுப்பெற்றது. ஈவிரக்கமின்றி மக்கள் கொல்லப் படுவதை உடனே தடுத்து நிறுத்த வேண்டுமென்றும், அப்படிச் செய்வது அமெரிக்காவின் அறநெறிக் கடமையாகுமென்றும் மக்கள் கூறலாயினர், போரினை முடிக்க ஒரேவழி நேச நாடுகளுக்கு உதவி செய்வதன் மூலம் என்றும் மக்கள் கருதினர். இத்தகைய மனப் பான்மையினை வளர்ப்பதற்கு பிரிட்டன் எவ்வளவு தூரம் கருத்துப் பரப்பு செய்திருந்தது என்று சொல்வதற்கில்லை. ஏனெனில், போர் தொடங்கிய நாளிலிருந்தே, அமெரிக்க மக்கள் நேசநாடுகளை ஆதரிக்க வேண்டுமென உணர்ச்சி வேகம் கொண்டிருந்தனர். ஜெர்மனியும் முப்பத்தைந்து மில்லியன் டாலர் செலவு செய்து தனது கருத்தினை அமெரிக்காவில் பரப்பியிருந்தது. நேசநாடுகளுக்கு அமெரிக்கா உதவி செய்ய முடியாத வகையில் ஜெர்மானிய ஒற்றர்கள் தொழிற் சாலைகளில் வேலை நிறுத்தங்களையும், நாச வேலைகளையும் ஊக்குவித்து வந்தனர். ஆனல், அவர்கள் எளிதில் அகப்பட்டுத் தண்டனை பெற்றனர்.

### நேச நாடுகளுடன் வாணிகம்

நெருங்கிய பொருளாதார உறவுகளால் நேச நாடுகளை ஆதரிக்க வேண்டுமென்ற கருத்து வலுப்பெற்றது. பிரிட்டிஷ் முற்றுகையினல்

மைய அரசுகளுடனன அமெரிக்க வாணிகம் சிறிதுதான் தடைபட்டது. அதற்குமாறுக, பிரிட்டனுக்கும், பிரான்சுக்கும் ஏராளமான சரக்கு களை அமெரிக்கா ஏற்றுமதி செய்தது. 1914 ஆம் ஆண்டில் பொருளாதார நிலைமையில் சிறிது மந்தம் நிலவியபோதும், 1916 ஆம் ஆண்டளவில் அமெரிக்காவின் பொருளாதாரத் துறைகள் அனைத்திலும் சிறப்பான முன்னேற்றம் காணப்பட்டது. அதற்குமுன் கண்டிராத அளவுக்கு இலாபமும் அதிகம் கிடைத்தது ; ஊதியமும் உயர்வாக அளிக்கப்பட்டது. நேச நாடுகள் அமெரிக்காவில் கடன் பெற முனைந்தன. 1917ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள் வரை அமெரிக்கர் இரண்டாயிரம் மில்லியன் டாலரைக் கடனுக அளித்திருந்தனர்.

அமெரிக்க ஐக்கிய நாடு, நேசநாடுகளின் போர்த்தளவாடக் கிடங்காக மாறிற்று. அமெரிக்காவின் பொருளாதார உதவியின்றி அவர்கள் வெற்றி பெற்றிருக்க முடியாது என்பது உறுதி. நடு நிலைமைக் கொள்கைக்கு மாறுக அமெரிக்கா செயலாற்றுகிறது என ஜெர்மனி கண்டனக்குரல் எழுப்பிற்று; போர்க்கருவிகள் ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடைசெய்ய வேண்டுமென்றும் கோரிற்று. ஆனுல், அமெரிக்கா, பன்னுட்டுச் சட்டவிதிமுறைகளின்படி, நேச நாடுகளுக்குப் போர்க்கருவிகளை விற்பது தவருகாது என எடுத்துக் கூறிற்று. பொருளாதார வளம் மிகுந்த நாடாக அமெரிக்கா விளங்கியமையால், எத்தரப்பிற்கும் உதவி செய்தாலும் செய்யா விட்டாலும் அது நன்மையாகவோ தீமையாகவோ முறையே அமையும். எனவே, சீரிய முறையில் நடுநிலைமை வகிப்பதென்பது இயலாத காரியமாகும். பொருளாதார அடிப்படையில் நேசநாடு களின் வெற்றியில் அமெரிக்கா ஆர்வங்கொண்டது.

**வில்சன் மீண்டும் தேர்ந்தெடுக்கப்படல்**

1916ஆம் ஆண்டு குடியரசுத் தலைவர் பதவிக்கான தேர்தல் நடைபெற்றது. அத் தேர்தலில் மக்களாட்சிக் கட்சியினருக்கும் குடியரசுக் கட்சியினருக்குமிடையே வேறுபாடு இல்லாமலிருந்தது இரு கட்சியினரும் போர் பற்றி ஒரேவிதக் கருத்துகளைக் கொண் டிருந்தனர். மக்களாட்சிக் கட்சியினர் வில்சனையே தமது வேட்பாளராக மீண்டும் நியமித்தனர். குடியரசுக் கட்சியினர் முந்தைய நியூயார்க் ஆளுநரான சார்லஸ் ஹியூஜஸ் (Charlies E. Hughes) என்பவரைத் தங்களது வேட்பாளராக நியமித்தனர். மேம்பாட்டுக் கொள்கையினர் பலர் குடியரசுக் கட்சியில் சேர்ந்து விட்ட போதிலும், வில்சன் பெரும்பான்மையான வாக்குகள் பெற்று வெற்றி பெற்றுர்

தேர்தலில் வெற்றி பெற்றதும் வில்சன் போரினை நிறுத்தி அமைதியை நிலைநாட்டுவதற்காக வழிமுறைகளை ஆராயலானுர்.

இரு தரப்பாரும் என்னென்ன குறிக்கோளுக்காகப் போரிடுகின்றனர் என்பதனைக் கேட்டறிய முயற்சித்தார். முழுவெற்றிக்குப் பின்னர் தான் ஒப்பந்தம் செய்து கொள்ள முடியும் என இரு தரப்பாளரும் தங்களது விடையில் குறிப்பிட்டிருந்தனர். எத்தரப்பாளருக்கும் “வெற்றியின்றி அமைதி” (Peace without victory) காண்பதே வில்சனின் குறிக்கோளாக இருந்தது. இதனை மனவலிமையற்ற கொள்கையெனப் பல அமெரிக்கர் இடித்துரைத்தனர். உலகனைத்துக்குமான ஒரு மன்ரோ கொள்கையை வகுத்தளிக்க வில்சன் விரும்பினர்.

பிரிட்டனையும், பிரான்சையும் சுற்றிக் கட்டுப்பாடற்ற நீர் மூழ்கிக் கப்பற்போரில், தான் ஈடுபடப்போவதாக ஜெர்மனி 1917ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள் 31ஆம் நாள் அறிவித்தது. அமெரிக்க ஐக்கிய நாடு, கிழமைக்கு ஒரு பயணிகள் கப்பலை மட்டும் பிரிட்டனுக்கு அனுப்பலாமென்றும், அதில் போர்க்கருவிகள் அனுப்பப்படக்கூடாதென்றும், அக் கப்பல்களின் புறத்தில் வெள்ளை, சிவப்பு வர்ணங்களால் பட்டைக்கோடுகள் வரையப்பட்டிருக்க வேண்டுமென்றும் ஜெர்மனி அறிவித்தது. இம் முடிவை ஜெர்மானிய தரைப்படைத் தலைவர்களும், கப்பற்படைத் தலைவர்களும் இணைந்து உருவாக்கியிருந்தனர். ஜெர்மானிய அரசு அவர்களின் கட்டுப்பாட்டில் இருந்தது. அவர்கள் எப்படியாவது பிரிட்டனைக் கடுந் துன்பத்திற்கு இலக்காக்கி இணங்க வைக்கவேண்டுமெனத் திட்டமிட்டனர். உடனே, அமெரிக்கா, ஜெர்மனியுடன் கொண்டிருந்த அரசியல் உறவை முறித்துக் கொண்டது. அமெரிக்கா தனது கப்பல்களில் போர்க்கருவிகளைப் பொருத்தி, நீர்மூழ்கிக் கப்பல்களின் தாக்குதலைத் தாங்கும் வகையில் கப்பல்களை மாற்றியமைக்க முற்பட்டது.

ஜெர்மனியினது அறிவிப்பைக் கேட்ட அமெரிக்க வணிகர், தங்களது கப்பல்களை அமெரிக்கத் துறைமுகங்களில் கிடத்தி விட்டனர். இதனால் நேச நாடுகளுக்கு ஏற்றியனுப்பப்பட வேண்டிய போர்க்கருவிகளும், பிற சரக்குகளும் அமெரிக்கக் கிடங்குகளில் தேங்கலாயின. அமெரிக்காவின் பொருளாதார நிலை பெரிதும் பாதிக்கப்பட்டது. நேசநாடுகளும் அமெரிக்காவின் உதவியின்றி தவிக்கலாயின. அந் நேரத்தில் ஜெர்மனியின் வெளிநாட்டுறவுச் செயலாளரான ஸிம்மர்மேன் (Zimmerman) மெக்ஸிகோ அரசுக்கு ஒரு செய்தி அனுப்பியிருந்தார். அதில் மெக்ஸிகோவை அமெரிக்க ஐக்கியநாடுமீது படையெடுக்கச் சொல்லியும், அரிசோனா, நியூ மெக்ஸிகோ, டெக்ஸாஸ் ஆகிய மாநிலங்களைக் கைப்பற்றச் சொல்லியும் குறிப்பிடப்பட்டிருந்தது. இதற்கும் மேலாக ஜெர்மனி

அமெரிக்க வணிகக் கப்பல் ஒன்றினை, மார்ச்சுத் திங்கள் முன்னறிவிப்பின்றி மூழ்கடித்தது. அதையொட்டி, மேலும் மூன்று கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன. இதற்கு மேலும் பொறுத்திருக்க மாட்டாத வில்சன் 1917ஆம் ஆண்டு, ஏப்ரல் 2ஆம் நாள் காங்கிரஸின் சிறப்புக் கூட்டம் ஒன்றினைக் கூட்டி, ஜெர்மனிமீது போர்தொடுப்பதற்கான தமது முடிவினை அறிவித்தார். காங்கிரஸ் அதற்கு உடனே ஒப்புதல் தெரிவித்தது. ஏப்ரல் 6ஆம் நாள் ஜெர்மனிமீது போர் தொடுக்கப்பட்டது. ஜெர்மானிய மக்களையும், ஜெர்மானிய அரசையும் வில்சன் வேறுபடுத்திக் காட்டி, தாம் ஜெர்மானிய அரசின்மீதுதான் போர்தொடுப்பதாகவும், ஜெர்மானிய மக்களுக்குத் தமது அனுதாபத்தையும் நட்பையும் நல்குவதாகவும் அறிவித்தார்.

அமெரிக்க மக்கள் உடனே போருக்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். போரில் வெற்றி பெற்று ஜெர்மனியைத் தோற்கடிப்பதோடல்லாமல் ஒரு புதிய உலகை உருவாக்க வேண்டுமென்றும், அவ்வுலகில் மீண்டும் போர் என்ற பேச்சே இருக்கக்கூடாதென்றும் விரும்பினர். குடியாட்சியைப் பின்பற்றும் தாங்கள் வல்லாட்சி நாடுகளைக் காட்டிலும் கட்டுப்பாட்டுடன், சீரிய முறையில் வலிமையோடு செயலாற்ற முடியும் என்பதனை இப் போரில் நிரூபிக்க அமெரிக்கர் பெருமை கொண்டனர். அமெரிக்கா போரிலிறங்கிய போது நேசநாடுகள் நம்பிக்கையிழந்த நிலையிலிருந்தன. நேசநாடுகளுக்குத் தொல்லைகள் பெருகிக்கொண்டே இருந்தன. இருந்த நிதிகளையெல்லாம் செலவழித்து விட்டிருந்தனர். அவர்களது வாணிகத்தை ஜெர்மானியர் அழித்துக் கொண்டிருந்தனர். பிரான்சு, இத்தாலி, ருஷ்யா ஆகிய நாடுகள் தளர்ச்சியுற்றுத் தோல்வி மனப்பான்மையைப் பெறலாயின. நேசநாடுகளிலிருந்து, அமெரிக்காவுக்குத் தொடர்ந்து பல தூதுக் குழுவினர் வந்து உதவிகள் கேட்டவண்ணமிருந்தனர்; சிறப்பாகப் படை வீரர்களை அனுப்பியுதவுமாறு அமெரிக்காவை வேண்டினர்.

அமெரிக்காவில் போருக்கான ஆயத்தங்கள் மெதுவாகவே நடைபெற்றன. 1916ஆம் ஆண்டு கோடைகாலத்திலேயே தரைப் படையையும், கப்பற்படையையும் பெருக்குவதற்காகக் காங்கிரஸ் நிதியொதுக்கியிருந்தது. ஆனால், அமெரிக்கா போர்தொடுக்கும் வரை, படைகளின் நிலைமை அப்படியேதான் இருந்தது. எனவே நேசநாடுகளுக்குப் படை தந்து உதவுமளவுக்கு அமெரிக்கப் படையினர் ஆயத்தம் செய்ய ஓராண்டுக் காலம் பிடித்தது. அமெரிக்கா பெருமளவில் எல்லாத் துறைகளிலும் ஆயத்தம் செய்து முடிந்த போது போர் முடிவுற்றது. 191ஆம் ஆண்டின் இறுதியில்தான்

போர் முடியுமென அமெரிக்கர் நினைத்துத் திட்டங்கள் வகுத்தனர். ஆனால், நவம்பர் 1918-ல் ஜெர்மனி சரணடைந்த போது, அப்போது தான் அமெரிக்கா போர் முயற்சியிலீடுபட்டது. நடைமுறையில் எவ்வளவு வீரர்கள் தேவைப்பட்டனரோ அதுபோல நான்கு மடங்குக் கூடுதலான வீரர்களைத் திரட்டிப் பயிற்சியளிக்க அமெரிக்க அரசு திட்டமிட்டிருந்தது. போர்க்கருவிகளுக்காகவும் கப்பல்களுக் காகவும் ஏராளமான தொகை செலவிடப்பட்டது. இவையெல்லாம் இறுதியில் பயன்படுத்தப்படவேயில்லை.

முதல் உலகப்போரில், அமெரிக்கா அதிக அளவில் வீரர்களைப் போரில் ஈடுபடுத்தவில்லை. இருந்தாலும் கட்டாய இராணுவ சேவையைச் செயலாக்கிற்று, ஏனெனில், இருந்த இளைஞர்களுள் சிறந்தவர்களைத் தேர்ந்தெடுக்க அம்முறை சிறந்த வாய்ப்பினை யளித்தது. நேச நாடுகளின் வெற்றிக்கு அடிப்படைக் காரணம் அமெரிக்கா அளித்த பொருளாதார உதவியேயாகும், பொருளா தாரத்தின் சிறப்புப் பிரிவுகளை மேற்பார்வையிட ஆறு குழுக்கள் நியமிக்கப்பட்டன. அவற்றுள் முக்கியமானது போர்த் தொழில் சார்ந்த குழுவாகும் (War Industries Board). ஆனால் இக்குழு சிறப்புற இயங்கவில்லை. ஏனெனில் அரசின் அதிகாரம் பலரிடையே பகிர்ந்தளிக்கப்பட்டிருந்தது. அரசும் தனது வலிமையைப் பயன் படுத்தி, சிறப்புறச் செயலாற்ற அஞ்சினமையால், போருக்கான பொருள் உற்பத்தி பின்தங்கிய நிலையிலேயே இருந்தது. 1918ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள், போர்த்தொழில் சார்ந்த குழுவின் தலைவராகப் பெர்னர்டு பாருச் (Beenard M. Baranch) பொறுப்பேற்றார். சிறந்த ஆட்சித்திறன் பெற்றிருந்த அவர் வணிகர்களோடு நட்பு கொள்ளாது, குடியரசுத் தலைவருடன் இணைந்து ஒத்துழைத்தார்.

ஓவர்மேன் சட்டம் (Overman Act) இயற்றப்பட்ட பிறகு தொழிற்சாலைகளைக் கட்டுப்படுத்த கூட்டாட்சி அரசு எல்லையற்ற அளவுக்கு அதிகாரங்களைப் பெற்றது. உற்பத்தியைப் பெருக்குவதில் மட்டுமே நாட்டங் கொண்டிருந்தமையால், கூட்டாட்சி அரசு அமைதிக் காலச் சட்டதிட்டங்களை ஒதுக்கி வைத்துவிட்டுச் செயலாற்றியது. போட்டியை வளர்க்கவும், தனியுரிமை நிறுவனங்களைக் கட்டுப்படுத் தவும் முயற்சிக்காமல், கூட்டாட்சி அரசு பெருவாணிகத்தை வளர்ப்பதில் கூட்டு சேர்ந்தது. முன்பு உள்நாட்டுப்போரில் நிகழ்ந்ததைப் போன்று இப்பொழுதும் பெருவாணிகம், பெருமளவில் அரசின் ஆதரவோடு வளரலாயிற்று. வாணிகக் கூட்டு நிறுவனங் களுக்கு உற்பத்தித் தொகையோடு நேர்மையான அளவுக்கு ஆதாயமும் சேர்த்து வழங்கப்பட்டது. இம் முறையினால் பல அரசியல்வாதிகள் பெரும்பொருளீட்டினர். இருப்பினும் அமெரிக்க

வரலாற்றில் முன்பு போர் நடந்த காலத்தில் இருந்த அளவுக்கு ஊழல் இருந்ததுபோல இப் போர் நடந்தபோது இல்லாமலிருந்தது.

பெரும்பான்மையான உற்பத்தித் திட்டங்கள் தனியார் துறையிலிருந்த போதிலும் சில துறைகளில் கூட்டாட்சி அரசு நேரடியான கட்டுப்பாட்டை விதித்தது. இரயில்பாதை நிறுவனங்கள் போர் சரக்குகளைவிரைவாக ஏற்றியனுப்பியபோதும், அச் சரக்குகளை ஏற்றி இறக்குவதில் தவிர்க்க முடியாத கால தாமதம் ஏற்பட்டது. அதனால் சரக்குப் பெட்டிகள் பயனற்று நெடுநாள்களுக்கு நின்றுகொண்டிருந்தன. எனவே, வில்சன் படை ஒதுக்குச் சட்டப்படி (Army Appropriation Act) இரயில் பாதைகளையும், நீர்வழிகளையும் கட்டுப்படுத்த முடிவு செய்து, வில்லியம் மெக்கடு (William G. Mcadoo) என்பவரை மேற்பார்வையாளராக நியமித்தார். வில்லியம் மெக்கடு ஒருதரப்படுத்தும் பணியைச் சிறப்புற ஆற்றினர். அதனால், சரக்கு வண்டிகள் காலதாமதமின்றித் தேங்காமல் பொருள்களை ஏற்றிச் சென்றன.

நேசநாடுகள், பல கப்பல்களைப் போரில் இழந்து விட்டமையால், அமெரிக்க ஐக்கிய நாட்டைக் கப்பல்கள் தந்து உதவுமாறு வேண்டின. இவ்வேண்டுதலை நிறைவேற்றக் கூட்டாட்சி அரசு நெருக்கடிக் கப்பற்படை நிறுவனம் (Emergency Fleet Corporation) ஒன்றை அமைத்தது.. 1914ஆம் ஆண்டில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் கப்பற் சரக்கனுப்பீடு ஒரு மில்லியன் டன்னாக இருந்தது. 1918 ஆம் ஆண்டுச் செப்டம்பர்த் திங்களில் அஃது எட்டரை மில்லியன் டன்னாக நெருக்கடிக் கப்பற்படை நிறுவனத்தால் உயர்த்தப்பட்டிருந்தது. அமெரிக்கா பிற நடுநிலைமை நாடுகளினின்றும் கப்பல்களை விலைக்கு வாங்கியதோடு, கைப்பற்றிய ஜெர்மானியக் கப்பல்களையும் நேசநாடுகளுக்கு உதவியாக அனுப்பிவைத்தது.

உணவுப்பொருள் உற்பத்தியைப் பெருக்குவதற்காக 1917 ஆம் ஆண்டு, லீவர் சட்டம் (Lever Act)இயற்றப்பட்டது.உணவுப் பொருள் உற்பத்தியை மேற்பார்வையிட ஹெர்பர்ட் ஹூவர் (Herbert Hoover) என்பவர் நியமிக்கப்பட்டார். அவர் போர் தொடக்க காலத்தில் பெல்ஜியத்தில் இடர்க்காப்புதவிப் பணியில் ஈடுபட்டுச் சிறந்த அனுபவம் பெற்றிருந்தார். கூட்டாட்சி அரசு ஒரு தானிய நிறுவனத்தை (Government Grain Corporation) அமைத்தது. அந் நிறுவனம் நாட்டில் விளைவிக்கப்பட்ட கோதுமை முழுவதையும் ஒரு குறிப்பிட்ட விலைக்கு வாங்கிச் சேமித்து வைத்தது. இதனால், பெரும் ஊதியம் பெற்ற குடியானவர்கள், கோதுமைப் பயிரை மேன்மேலும் அதிக நிலங்களில் பயிரிடலா

யினர். கோதுமைப் பயிர் விளையும் நிலப்பரப்பு 1917-ல் 45 மில்லியன் ஏக்கராக இருந்தது: 1919-ல் 75 மில்லியன் ஏக்கராக உயர்ந்தது. போரின்போது விவசாய உற்பத்திப் பெருக்கமும்' ஏற்றுமதியும் கூடின. குடியானவர்கள் மேன்மேலும் கடன் வாங்கி நிலங்களை வளப்படுத்திப் பயிர்த்தொழில் செய்தனர். போர் முடிவுற்றதும், ஐரோப்பாவில் உணவு உற்பத்தி வழக்கமான நிலைக்கு வரவே, அமெரிக்க உணவுப் பொருள்கள் தேவையற்றவை யாயின. எனவே திடீர் விவசாயப் பெருக்கம் வீழ்ச்சியுற்றது. குடியானவர்கள் பெருங்கடனாளிகளாயினர்.

போரின்போது பொருள்களின் விலையை அரசு ஒழுங்காகக் கட்டுப்படுத்தவில்லை. 1918ஆம் ஆண்டளவில் சரக்குகளின் விலை இரண்டு மடங்காக உயர்ந்திருந்தது. இதனால் நடுத்தரமக்களும் நிலையான வருமானம் பெறுபவர்களும்பெருந் தொல்லைக்குள்ளாயினர். ஆனால், தொழிலாளர்களுக்குக் கூடுதலான ஊதியம் கிடைத்தது. கூட்டாட்சி அரசே தன்னுடைய நிறுவனங்களில் தொழிலாளர் களுக்குப் பல சலுகைகளைத் தந்து ஊக்குவித்தமையால், பிற தொழிலதிபர்களும் தொழிலாளர்நலனைக் காப்பதில் ஆர்வங் கொண்டனர். தொழிலாளர் சங்கத்தலைவர்களும் வேலை நிறுத்தம் செய்யாது உற்பத்தியைப் பெருக்குவதில் கண்ணுங் கருத்துமாயிருந் தனர். அதற்கு நன்றிக்கடன் செலுத்தும் வகையில் அரசு நாளொன் றுக்கு எட்டுமணி வேலை நேரத்தையும், தொழில் முதல்வருடன் தொழிலாளர் கூட்டாகப் பேசிக் குறைகளைத் தீர்த்துக் கொள்ளும் முறையினையும் ஆதரித்தது. போர்முடிவுற்றபோது பாதிக்கும் மேலான தொழிலாளர்கள் கிழமை ஒன்றுக்கு நாற்பத்தெட்டு மணி நேரம் வேலை செய்தனர் : கூடுதலாக வேலை செய்தால் கூடுதலாக ஊதியம் பெற்றனர் ; தொழிற்சங்கங்களின் உறுப்பினர் தொகையும் இருபத்தைந்து சதவீதம் உயர்ந்தது. சில தொழில் நிறுவனங்களில் தொழிலாளர் ஊதியம் குறைவாகவே இருந்தது. ஆனால், மொத் தத்தில் தொழிலாளர் நிலைமை சிறப்புற்றிருந்தது.

முதல் உலகப்போரினால் அமெரிக்கச் சமுதாயத்தில் ஒரு சில குறைபாடுகளும் தோன்றின. மக்கள் சகிப்புத்தன்மையற்றவர் களாய்த் திகழ்ந்தனர். போர்ப்பீதியை மக்களிடத்து உண்டாக்கு வதில் கூட்டாட்சி அரசும் ஓரளவு பங்கேற்றிருந்தது. ஜார்ஜ் கிரீல் (George Creel).என்பவரது தலைமையில் செய்தி வெளியீட்டுக் குழு (Committee on Public Information) ஒன்று அமைக்கப்பட்டது. இயக்காற்றல் மிக்க கிரீல் பல நிகழ்சிகளைத் தயாரித்து, அமெரிக்க ஐக்கிய நாட்டு, நேசநாடுகளின் வெற்றிக்காகப் பாடுபட வேண்டியதின் சிறப்பை மக்களிடத்து விளக்கினர். போரின் முடிவுபற்றி வில்சன்

கொண்டிருந்த உயர்ந்த கோட்பாடுகளைக் கிரீல் ஏற்றுக்கொண்டார். கலைஞர்கள் எழுத்தாளர்கள், பேராசிரியர்கள், நடிகர்கள், திரைப்படத் தயாரிப்பாளர்கள் ஆகியோரின் உதவியோடு வில்சனின் கருத்துகளை மக்களிடையே பரப்புவதில் கிரீல் பெரும் வெற்றி கண்டார். அவருடைய பிரசாரம் மிகவும் தீவிரமாக இருந்ததால் மக்களிடையே வெறுப்பும் தோன்றலாயிற்று. அமெரிக்காவில் வாழ்ந்த ஜெர்மானியரை மக்கள் ஐயக்கண் கொண்டு நோக்கி அவர்களை ஒதுக்கி வைத்தனர் ; சில சமயம் ஜெர்மானியரைத் துன்புறுத்தினர். ஜெர்மானிய மொழியில் வெளியான செய்தித்தாள்கள்மீது நெருங்கிய மேற்பார்வையிருந்தது ; சில சமயம் அவைமீது வழக்கும் தொடரப்பட்டது.

போர் முயற்சிக்கு இடையூறு விளைவிப்பவர்களையெல்லாம் கைது செய்ய, வேவுபார்த்தல் சட்டப்படி (Aspionage Act) அரசின் வழக்குரைஞர்க்கு அதிகாரம் தரப்பட்டது. நாட்டுக்குவரும் அஞ்சல் கடிதங்களைத் தணிக்கை செய்ய அஞ்சல்துறைத் தலைவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. அழிவுப்பணிச்சட்டத்தின்படி (Sabotage Act) பொதுச்சொத்துகளையும், தனியாரது உடைமைகளையும் தாக்கி நாசம் விளைவிப்போர் கடுந்தண்டனைக்குள்ளாயினர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசியலமைப்பு, கூட்டாட்சி அரசு, தேசியக்கொடி ஆகியவற்றைப் பற்றி இழிவாகப் பேசுவோரெல்லாரும் ஆட்சி எதிர்ப்புச் சட்டப்படி (Sedition Act) தண்டிக்கப்பட்டனர்.

அமெரிக்கா, போரில் கலந்து கொண்டபிறகும் ஓராண்டு காலத்திற்கு ஜெர்மனி தொடர்ந்து வெற்றிகளைப் பெற்றே வந்தது. ஜெர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல்கள் மேலும் பல வணிகக்கப்பல்களை மூழ்கடித்தன. 1918ஆம் ஆண்டு கோடைக்காலத்திற்குப் பிறகு தான் அமெரிக்கக் கப்பற்படையும், பிரிட்டிஷ் கப்பற்படையும் ஒன்றாக இணைந்து ஜெர்மானியப் படையினரைத் தோற்கடிக்க முடிந்தது. ஆனால் ஜெர்மனி எளிதில் பால்கன் நாடுகளைக் கைப்பற்றிற்று. 1917ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள் ருஷ்யாவில் முடியாட்சி ஒழிக்கப்பட்டுக் குடியாட்சி நிறுவப்பட்டது. ருஷ்யா, புரட்சியினால் நலிவுற்றிருந்தமையால் புதியதாகப் பதவிக்கு வந்த குடியாட்சி அரசு ஜெர்மானியரோடு ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டது (Treaty of Brest - Litovsk). அதன்படி, ருஷ்யா ஜெர்மனிக்குப் போலண்டு, பால்கன் நாடுகள், உக்கிரெய்ன் (Ukraine) ஆகியவற்றை விட்டுக்கொடுத்தது. எனவே ஜெர்மனி தனது முழு கவனத்தையும் மேற்குப் பகுதிக்குத் திருப்பி, பிரான்சையும் பிரிட்டனையும் தோற்கடிக்க முனைந்தது. உடனே, அமெரிக்காவும் தனது படைகளை ஜான் ஜோஸப் பெர்ஷிங் (John Joseph Pershing) என்பவரது தலைமையில் பிரான்சுக்கு அனுப்பியது. 1918ஆம்

ஆண்டுத் தொடக்கத்தில் மூன்று இலட்சம் அமெரிக்க வீரர்கள் பிரான்சில் இருந்தனர். ஜெர்மனி, பிரான்சைத் தாக்கத்தொடங்கியதும், அமெரிக்காவிலிருந்து ஒவ்வொரு திங்களும் மூன்று இலட்சம் படையினர் ஐரோப்பாவில் வந்திறங்கினர். அவர்களது வருகையால் நேச நாடுகளது படையில் ஒழுங்குணர்வு ஏற்பட்டது. ஜூலைத் திங்களில், ஜெர்மனியின் தாக்குதலுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. நேசநாடுகளின் படைகள் அதற்குமேல் ஜெர்மனியைத் தாக்க முற்பட்டன. நான்கு திங்கள் ஊக்கம் குன்றாது நேச நாடுகளின் படைகள் ஜெர்மனியைப் பல முனைகளிலிருந்தும் தாக்கி ஜெர்மனியைப் பின்வாங்கச் செய்தன. அதேநேரத்தில் நேச நாடுகளின் படையினர் துருக்கியிலும், பால்கன் பகுதியிலும் இத்தாலியிலும் பல மகத்தான வெற்றிகளைப் பெற்றனர். ஜெர்மானிய மக்களது ஒழுங்குணர்வு சீர்குலைந்தது. அதற்கு ஓரளவு பிரிட்டிஷ் கப்பற் படையின் முற்றுகையும் காரணமாகும்.

போர் நீடித்துக்கொண்டே செல்வதைக் கண்ட வில்சன், வெற்றி விரைவில் நிறுவப்படுவது எளிதன்று என்பதனையுணர்ந்து, மிதமான கொள்கைகள் அடங்கிய அமைதி உடன்படிக்கை ஒன்றினை உருவாக்கினர். வில்சன் தமது சொற்பொழிவுகளிலெல்லாம் அமெரிக்க அரசு, ஜெர்மானிய அரசுக்கெதிராகமட்டுமே போரிடுவதாகவும் ஜெர்மானிய மக்கள்மீது அன்பும் நட்பும் கொண்டுள்ளதாகவும் கூறிவந்தார். எனவே ஜெர்மானிய மக்கள்மீது பழி வாங்கும் நோக்கம் தமக்கில்லையென்றும், உலகினைக் குடியாட்சிக்கு உகந்த இடமாக மாற்றியமைப்பதே தமது நோக்கம் என்றும் வில்சன் வலியுறுத்தி வந்தார். வில்சனது கருத்துகளை ஜார்ஜ் கீல் உலகம் முழுவதிலும் நன்முறையில் பரப்பினர்.

உலக அமைதிக்காக வில்சன் தமது குறிக்கோளினை வரையறை செய்து, 1918ஆம் ஆண்டு, ஜனவரித் திங்கள் 8ஆம் நாள், காங்கிரஸில் நிகழ்த்திய சிறப்புமிக்க சொற்பொழிவில் வெளியிட்டார். அதில் பின்வரும் பதினான்கு கருத்துகள் அடங்கியிருந்தன:

1. நாடுகளிடையேயான ஒப்பந்தங்கள் வெளிப்படையாகச் செய்து கொள்ளப்படவேண்டும். ஏனெனில் மறைமுக உடன்படிக்கைகளைச் செய்து கொண்டமையால்தான் ஐரோப்பாவே இரு தொகுதிகளாகப் பிரிந்து, ஒன்றையொன்று ஐயுறவோடு நோக்கின.

2. அமைதிக்காலத்திலும், போர்க்காலத்திலும் கடலில் கப்பல்களைச் செலுத்த எல்லா நாடுகளுக்கும் முழு உரிமை அளிக்கப்பட வேண்டும்.

3. அமைதிக்கு இணங்கும் நாடுகளின்மீது விதிக்கப்பட்டிருந்த பொருளாதாரத் தடைகள் அனைத்தும், இயன்றவரை நீக்கப்படவேண்டும்.

4. உள்நாட்டுப் பாதுகாப்புக்காக மட்டுமே, குறைந்த அளவுக்குப் போர்க்கலங்களை உற்பத்தி செய்யவேண்டும். அது குறித்து எல்லா நாடுகளுக்கும் உறுதி ஒன்றினையும் அளிக்க வேண்டும்.

5. ஆதிக்கம் செலுத்த விரும்பும் நாடுகளுக்குக் குடியேற்ற நாடுகளை, அங்கு வாழும் மக்களது விருப்பத்திற்கிணங்க சார்பற்ற வகையில் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.

6. ருஷ்யாவிடமிருந்து கைப்பற்றிய பகுதிகளை ஜெர்மனி திருப்பித் தரவேண்டும்.

7. ஜெர்மனி போலந்தினின்றும் வெளியேறவேண்டும்.

8. பிரான்சிடமிருந்து கைப்பற்றியப் பகுதிகளையும் ஜெர்மனி திருப்பித் தரவேண்டும். 1871-ல் ஜெர்மனி பெற்ற அல்ஸேஸ்லொரெய்ன் (Alsace-Lorraine) பகுதியும் பிரான்சுக்கு அளிக்கப்பட வேண்டும்.

9. தேசிய உணர்வின் அடிப்படையில் இத்தாலியின் எல்லைகள் வரையறுக்கப்படவேண்டும்.

10. ஆஸ்திரியா - ஹங்கேரி மக்களுக்குத் தன்னுரிமை வழங்கப் பட வேண்டும்.

11. ருமேனியா, செர்பியா, மாண்டிநீக்கிரோ (Montenegro) ஆகிய நாடுகளிலிருந்து பிற நாடுகள் வெளியேறவேண்டும். கடல் பகுதியினையுடைய செர்பியாவுக்கு இலவசமான வழி ஒன்று அமைத்துத் தரப்படல் வேண்டும். வரலாற்று அடிப்படையில் உருவான தேசிய உணர்வின் துணை கொண்டு, பால்கன் நாடுகளின் எல்லைகள் வரையறுக்கப் பட வேண்டும்.

12. துருக்கியைச் சார்ந்த துருக்கிப் பேரரசின் பகுதிகளில், இறைமைத்தன்மை அப்பேரரசுக்கு அளிக்கப்பட வேண்டும். பிற பகுதிகளில், மக்கள் தன்னுரிமை பெற வழி செய்யப் பட வேண்டும். டார்டனல்ஸ் (Dardanelles) நீர்ச்சந்திப்பை உலகநாடுகளின் வாணிகத்துக்குத் திறந்துவிடவேண்டும்.

13. தன்னுரிமைபெற்ற போலந்து நாட்டை உருவாக்கி, கடல் பகுதியினையுடைய போலந்துக்கு இலவசமான வழி ஒன்று நிறுவப்பட வேண்டும்.

14. பெரியநாடு, சிறியநாடு என்ற பாகுபாடில்லாமல் எல்லா உலக நாடுகளும் பிற நாட்டினரது தன்னுரிமையையும் தேசிய ஒருமைப்பாட்டினையும் மதித்து நடந்திட சர்வதேசச் சங்கம் (League of Nations) ஒன்று நிறுவப்படவேண்டும்.

வில்சனது மேற்கூறிய பதினான்கு கருத்துகளைக் கண்ட ஜெர்மானிய மக்கள், அவை நேசநாடுகளுக்கே சாதகமாக அமைந்திருப்பதைக் கண்டு வெறுப்புற்றனர். வில்சனது கருத்துகளைக் கூர்ந்து நோக்கினால் சில தெளிவில்லாமல் இருந்தன; சில நுட்பமான தன்மை வாய்ந்தனவாய் இருந்தன; சில முரண்பாடுடையனவாகவும் இருந்தன. இக் கருத்துகளை வெளியிட்ட பின்னர் வில்சன் பின்பு ஆற்றிய சொற்பொழிவுகளிலெல்லாம் அவற்றிற்கான விளக்கங்களைத் தந்தார். அவற்றினடிப்படையில் பல ஐயங்களும், வினாக்களும் அரசியல்வாதிகளிடையே தோன்றின.

நேசநாடுகளின் தாக்குதலால் நலிவுற்ற ஜெர்மனி, வில்சனின் பதினான்கு கருத்துகளின் அடிப்படையில் அமைதி ஒப்பந்தம் செய்து கொள்ள விரும்பிற்று. ஆனால், பிரிட்டனும், பிரான்சும் வில்சனின் கருத்துகளில் இரண்டு மாற்றங்களைச் செய்ய விரும்பின. கடலில் கப்பல் செலுத்துவதற்கான உரிமையை எல்லா நாடுகளுக்கும் வழங்க பிரிட்டனும், பிரான்சும் மறுத்தன; மேலும் அவ்விரு நாடுகளும் ஜெர்மனியிடமிருந்து இழப்பீடு பெற வேண்டுமென்று தீர்மானித்தன. பிரான்சின் முயற்சியால் எழுதப்பட்ட போர்நிறுத்த உடன்பாட்டினை 1918ஆம் ஆண்டு, நவம்பர்த் திங்கள், பதினோராம் நாள் ஜெர்மனி ஏற்றது. அத்துடன் முதல் உலகப்போர் முடிவுற்றது. ஜெர்மனியில் இதற்கிடையே கலகம் தோன்றியது. ஜெர்மானியப் பேரரசர் முடிதுறந்து ஹாலந்துக்கு அஞ்சியோடி விட்டார். பின்னர் பதவிக்கு வந்த சமூகக்குடியாட்சியினர், நேச நாடுகளுடன் கூடிப் பேசி உடன்படிக்கைகளில் கையெழுத்திட்டனர்.

முதல் உலகப்போரில் பத்து மில்லியன் மக்கள் மடிந்தனர். அமெரிக்கா குறைவான அளவில் வீரர்களை இழந்திருந்தது. ஆனால், போருக்கான செலவில் ஆறில் ஒரு பங்கினை அமெரிக்கா ஏற்றிருந்தது. போரின்போது பிற நாடுகளில் ஏற்பட்ட பொருளாதார இழப்புகளை ஈடுசெய்யவும் அமெரிக்கா உதவிற்று. ஆனால், இப் போர் மேலைநாட்டு மக்களது உள்ளத்தில் பல ஐயப்பாடுகளை

எழுப்பிற்று. தனிமனிதனது உரிமை, பகுத்தறிவு, முன்னேற்றம் ஆகியவற்றின்மீது அவர்கள் கொண்டிருந்த குறிக்கோள்களெல்லாம் நிலையற்றவை என்பதனை உலகப்போர் சுட்டிக்காட்டியது. போர் முடிவதற்குள்ளாக ருஷ்யாவில் பொதுவுடமையாளர்கள் வல்லாட்சியை நிறுவினர். போர் முடிந்த பிறகு சில ஆண்டுகளில் சர்வாதிபத்திய அரசுகள் ஐரோப்பாவில் நிறுவப்பட்டன. இவ்வகையில் முதல் உலகப்போர் குடியாட்சியை உறுதியாக நிலை நாட்டாது, ஐரோப்பாவின் பல பகுதிகளில் வல்லாட்சியேற்பட வழி வகுத்தது.

**வெர்ஸேல்ஸ் உடன்படிக்கையும் சர்வதேசச் சங்கமும்**

அமைதி உடன்படிக்கையைத் தீட்டுவதற்கான மாநாடு பாரிசில் 1919ஆம் ஆண்டு, ஜனவரி முதல் ஜூன் வரை நடைபெற்றது. அம் மாநாட்டில் இருபத்தேழு வெற்றி பெற்ற நாடுகள் கலந்து கொண்டன. பெரும்பாலான முடிவுகளை அமெரிக்க ஐக்கிய நாடு கிரேட் பிரிட்டன், பிரான்சு, இத்தாலி, ஜப்பான்-ஆகிய ஐந்து நாடுகளே உறுதிப்படுத்தின. போரில் தோல்வியுற்ற மையஅரசுகளும், ருஷ்யாவும் இம் மாநாட்டில் இடம் பெறவில்லை. மாநாட்டில் விவாதிக்கப்பட்டப் பல சிக்கல்களை ஆராய, தனித்தனிக் குழுக்கள், நியமிக்கப்பட்டன. அமெரிக்க ஐக்கிய நாட்டின் பிரதிநிதியாகச் சென்றிருந்த குடியரசுத் தலைவரான வில்சனுக்கும், பிரான்சின் பிரதிநிதியான கிளெமென்கோ (Clemenceau) வுக்கும் இடையேதான் அடிப்படைக் கருத்துகள்மீது நீண்ட வாதங்கள் நிகழ்ந்தன. கிளெமென்கோ மனித சமுதாயத்தின் உரிமையில் தளராத பற்றுக் கொண்டிருந்தபோதிலும், அமைதி உடன்படிக்கையைப் பொறுத்தமட்டிலும் சில தீவிர கருத்துகளைக் கொண்டிருந்தார். நேர்மையான, அறநெறி அடிப்படையிலான கொள்கையில் பற்று கொண்டிருந்த வில்சன், வென்றவர், தோற்றவர் என்ற பாகுபாடின்றி இருதரப்பாருடைய கோரிக்கைகளையும் நிறைவேற்றும் வகையில் அமைதி உடன்படிக்கை அமைந்தால், உலக மக்கள் அனைவரும் அதனை வரவேற்பர் என்றார். ஐரோப்பா முழுவதிலும் ஆதிக்கம் செலுத்த வேண்டுமென நினைக்கும் ஜெர்மனி எத்தகைய நேர்மையான உடன்பாட்டினையும் ஏற்காது என கிளெமென்கோ கூறினர். எனவே வலிமையைப் பயன்படுத்திதான் அமைதியைக் காக்க முடியும் என்றும், ஜெர்மனியின் வலிமையைக் குறைத்து பிரான்சின் வலிமையைக் கூட்டவேண்டுமென்றும் அவர் வாதிட்டார். உலகிலிருந்த தாராளக்கொள்கைவாதிகளெல்லாம் வில்சனை ஆதரித்தனர். ஆனால், கணக்கற்ற இளைஞர்களைப் போரில் பலிகொடுத்திருந்த பிரிட்டிஷ், பிரெஞ்சு மக்கள், பழிதீர்த்துக் கொள்ளும் வகையிலான ஓர் உடன்பாட்டினை வேண்டிய கிளெமென்கோவையே ஆதரித்தனர்.

சர்வதேசச் சங்கம ஒன்றினை நிறுவுவதில் வில்சன் மகத்தான வெற்றிபெற்றார். போர் தொடங்கிய நாளிலிருந்து நேசநாடுகளின் தலைவர்கள் பலர், உலக அமைப்பு ஒன்றின் இன்றியமையாமையை அவ்வப்போது எடுத்துக் கூறினர். சர்வதேசச் சங்கத்தின் அமைப்புப் பத்திரத்தை முன்னின்று தீட்டியவர் வில்சனவார். உலக நாடுகள் அனைத்தும் தங்களுக்குள் எழும் சிக்கல்களை அமைதியான முறையில் தீர்த்துக் கொண்டு, நாடுகள் ஒன்றுக் கொன்று பாதுகாவலாக இருக்க வேண்டும் என்பதே அப் பத்திரத்தின் அடிப்படைக் கருத்தாகும். சர்வதேசச் சங்கத்தின் உறுப்பினரா யிருந்த நாடுகள், ஒன்றையொன்று வன்முறையில் தாக்கிக் கொள்வதில்லை எனப்பத்தாவது உட்பிரிவின்படி வாக்குறுதியளித்தன. பன்னிரண்டாவது உட்பிரிவு நாடுகளிடையே எழும் சிக்கல்களைத் தீர்த்து வைக்கும் முறையினை விரித்துக் கூறியது. சர்வதேசச் சங்க அமைப்புக்கு முரணாக ஒரு நாடு போரிலிறங்கினால், அந் நாட்டின் மீது பொருளாதாரத் தடைகளை விதிக்கவும், தேவைப்பட்டால் படையனுப்பவும் பதினாறாவது உட்பிரிவு வழிவகை செய்திருந்தது. அனைத்து நாடுகளின் உறுப்பினர்கள் கொண்ட மன்றமும் (Assembly) குழுவும் (Council) சர்வதேசச் சங்கத்தின் அதிகாரங்களைப் பகிர்ந்து கொண்டன. இக் கூட்டமைப்பு ஒரு சங்கமாகவே இருந்ததே ஒழிய ஓர் உலகஅரசாகத் (World Government) திகழவில்லை. இச் சங்கத்திற்கெனத் தனியான படை அமைப்பு இல்லை. எனவே பெரும்பாலும் உறுப்பு நாடுகளிடையே நிலவிய நல்லெண்ணத்தின் அடிப் படையிலேதான் இச் சங்கம் இயங்கிற்று.

பாரிசில் மாநாடு முடிவுற்றதும், ஜூன் (1919) திங்களில் வில்சன் தாயகம் திரும்பினார். தாம் தீட்டி வந்த வெர்ஸேல்ஸ் உடன் படிக்கையினை ஒப்புதலுக்காகச் செனட்சபைமுன் படைத்தார். செனட்சபையில் குடியரசுக் கட்சியினர் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றிருந்தனர். வில்சன் பாரிசுக்குச் சென்றிருந்த போது, அவருக்கெதிராகக் குடியரசுக் கட்சியினர் அமெரிக்க ஐக்கிய நாடு சர்வதேசச்சங்கத்தின் உறுப்பினராகக் கூடாதென நாடு முழுவதும் எடுத்துக்கூறி ஆதரவு பெற்றிந்தனர். எனவே வில்சனது உடன்படிக்கை செனட் சபையால் தள்ளுபடி செய்யப் பட்டது. அவருக்கு அது பெரும் இழுக்காக இருந்த போதிலும் வில்சன் மக்களிடையே நேரடியாகப் பேசிச் சர்வதேசச் சங்கத்தில் சேருவதற்காக ஆதரவு தேடலானார். ஒரே திங்களில் நாடு முழுவதிலும் சுற்றுப் பயணம் மேற்கொண்டு, நாற்பதுக்கும் மேலான உரைகளை நிகழ்த்தியிருந்தார். போர்க்காலம் முழுவதும் அயராது உழைத்திருந்த அவர் உடல் தளர்ச்சியுற்றது. முடக்கு வாதப் பிணி அவரைப் பற்றிக் கொண்டது. 1920ஆம் ஆண்டில்

நடைபெற்ற தேர்தலில் குடியரசுக் கட்சியினர் வெற்றி பெற்றனர். இவ்வெற்றி வில்சனது சர்வதேசச் சங்கக் கொள்கைக்குக் கிடைத்த தோல்வியாகக் கருதப்பட்டது. வில்சன் 1954ஆம் ஆண்டு விண்ணுலகெய்தினர்.

**சர்வதேசச் சங்கத்தில் அமெரிக்கர் சேராமைக்குக் காரணங்கள்**

*1.* தனித்திருத்தல் கொள்கை மனப்பான்மை மீண்டும் அமெரிக்க மக்களிடையே வளர்ச்சியடைந்தது. போரினல் ஏற்பட்ட பெரும் செலவினையும், உயிரிழப்பினையும் கண்ட மக்கள் ஆர்வம் குறைந்து சோர்வடைந்தனர். இனியும் அத்தகைய போரில் அமெரிக்கா தலையிடக்கூடாதென அவர்கள் விரும்பினர். (2) போரின் முடிவினைக் கண்ட அமெரிக்க மக்கள் அறிவுத் தெளிவு பெற்றனர். போருக்குப் பின் பேரின்ப உலகம் ஒன்றினைக் காண விழைந்தனர். ஆனல், நடைமுறையில் ருஷ்யாவில் வல்லாட்சி நிறுவப்பட்டதையும், ஆதிக்கவெறி பிடித்த ஜப்பான், சீனவைத் தாக்குவதையும், பொருளாதாரத் தடைகளையும், காப்புவரிகளையும் கண்டு மருட்சியடைந்தனர். (3) அமெரிக்க மக்களிடையே ஒரு வகையான வெறுப்பும் போரின்போது ஏற்பட்டது. பல செய்தித்தாள் ஆசிரியர்களும், அறிஞர்களும் அமெரிக்க ஐக்கிய நாட்டை ஏமாற்றிப் பிரிட்டன் போரில் ஈடுபடுத்தியதாகக் கருதினர். பாங்கு உரிமையாளர்களும், பெருவணிக உற்பத்தியாளர்களும் தங்களது நன்மைக்காக அமெரிக்காவைப் போரில் கலந்து கொள்ளச் செய்தனர் என்றும் கருதப்பட்டது. (4) நடைமுறைக்கொவ்வாத குறிக்கோள்களைக் கொண்டிருந்த கல்லூரிப் பேராசிரியரான உட்ரோ வில்சன், தவறிப்போய் அமெரிக்காவை உலகப் போரில் ஆழ்த்தினர் என்ற தப்பெண்ணமும் மக்களிடையே இருந்து வந்தது. மக்களது ஏமாற்றங்களுக்கும், எண்ணக் குலைவுகளுக்கும் இரக்கத்திற்குரிய வில்சன் பலியானர். (5) சர்வதேசச் சங்கம் அமைப்பது பற்றி வெர்ஸேல்ஸ் உடன்படிக்கையிலேயே வில்சன் குறிப்பிட்டிருந்தமை ஒரு பெருந்தவறாகும். உடன்படிக்கையைத் தனியாகவும், சர்வதேசச் சங்க அமைப்பைத் தனியாகவும் வில்சன் வரைந்திருந்தால் ஒரு வேளை ஒரு சில காரணங்களுக்காக உடன்படிக்கையின் உட்பிரிவுகளை விரும்பாத சிலரும் சர்வதேசச்சங்க அமைப்பை ஆதரித்திருக்கக் கூடும். இரண்டும் இணைந்திருந்தமையால் உடன்படிக்கையை எதிர்த்தோர் சர்வதேசச் சங்கத்தையும் எதிர்த்தோராயினர். சர்வதேசச் சங்கத்தில் அமெரிக்கா சேராமலிருந்தமையால், அச் சங்கம் வலிமை குன்றியதாக விளங்கியது. பிற வல்லரசுகள் அச் சங்கத்தினை மதித்து நடக்காமற்போனதால், அடுத்த இருபது ஆண்டுகளில் மற்றோர் உலகப்போர் எழுந்தது. அப் போரின்

போதும் வில்சன் எண்ணியதுபோலவே அப்போதிருந்த உலகத் தலைவர்கள் ஓர் உலக நாடுகளின் அமைப்பை இன்றியமையாததாகக் கருதினர். அதன் விளைவாக, இரண்டாவது உலகப் போர் முடியும் முன்னரே ஐக்கிய நாடுகள் சபை உருவாயிற்று. அதில் அமெரிக்க ஐக்கிய நாடு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளதைப் பார்க்கும் போது வில்சனின் கனவு நனவாயிற்று எனலாம்.

# 27. பெரு மந்தமும் புதிய சீரமைப்புத் திட்டமும்

முதல் உலகப்போர் முடிவுற்றதும், அமெரிக்க மக்கள் போரின் போது மேற்கொள்ளப்பட்ட பொறுப்புகளினின்று தங்களை விடுவித்துக்கொள்ள விரும்பினர். அமைதிக் காலத்து நிலவிய இயல் பான நிலைக்குத் திரும்ப ஆர்வங்கொண்டனர். ஆனால் அமெரிக்க சமூகத்திலும், பொருளாதாரத்திலும் பல பெரிய சிக்கல்கள் தீர்த்து வைக்கப்படாமலிருந்து வந்தன. தொழில் துறை சார்ந்த உற்பத்தியையும் விவசாய உற்பத்தியையும் எப்படிச் சரிக்கட்டுவது என்பது ஒரு பெரும் சிக்கலாகும். பிறநாடுகளிலிருந்து ஏராளமாக மக்கள் குடிபெயர்ந்து அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு வந்த வண்ண மிருந்தனர். அப்படிக் குடியேறுபவர்களைப் பராமரித்து அவர்களுக்கு வேலை வாய்ப்புகளைத் தருவது மற்றொரு சிக்கலாக இருந்தது தீவிரக் கருத்துக்கள் நாட்டில் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டே வந்தன. பொது உரிமைகளை அழிக்காமல் அத் தீவிரக் கருத்துகளைச் செயலாக்குவதும் கடினமான செயலாக இருந்தது. நாட்டில் மதுவிலக்கினை நடைமுறைக்குக் கொண்டு வருவதில் பல இடர்ப்பாடுகள் தோன்றின. 1920ஆம் ஆண்டளவில் நாட்டில் நிலவி வந்த செல்வச் செழிப்பானது உறுதியற்றதாகவே காட்சியளித்தது. இவையெல்லாம் அமெரிக்க ஐக்கிய நாட்டு வரலாறு காணாத வகையில் வரவிருக்கும் கொடுமையான பொருளாதாரச் சீர்குலைவுக்கு அறிகுறிகளாக விளங்கின.

## பொருளாதார மாவளம் (Economy of Abundance)

முதல் உலகப் போரினால் ஏற்பட்ட நெருக்கடி நிலைமையினால், அமெரிக்க ஐக்கிய நாட்டில் பொருளாதாரத்தில் திடீர்ப் பெருக்கமும், மிக்க கவர்ச்சி வாய்ந்த செல்வச்செழிப்பும் காணப்பட்டன. போரிலீடுபட்டிருந்த நாடுகளுக்கு உணவு தானியங்களும், உடையும்,

போர்க் கருவிகளும் அமெரிக்காவினின்று மேன்மேலும் தேவைப் பட்டன. இத் தேவையைப் பூர்த்திசெய்ய அமெரிக்கத் தொழில திபர்களும், குடியானவர்களும் உற்பத்தியை மேன்மேலும் பன் மடங்காகப் பெருக்கினர். பொருள்களின் விலை உயர்ந்தமையாலும், உற்பத்தி பெருகியமையாலும் வணிகர்கள் பெரும்பொருளீட்டினர். போர்முடிவுற்ற பிறகும் ஐரோப்பிய நாடுகளுக்கு, போரினால் சீர்குலைந்த பொருளாதாரத்தைச் சீர்திருத்தியமைக்க, தொடர்ந்து அமெரிக்கப் பொருள்கள் தேவைப்பட்டன.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், பல புதிய கண்டு பிடிப்புகள் நிகழ்ந்தன. தொழிற் புரட்சியின்போது நிகழ்ந்த கண்டு பிடிப்புகள் இயந்திரம் சம்பந்தப்பட்டவைகளாக இருந்தன. ஆனால் இருபதாம் நூற்றாண்டின் கண்டுபிடிப்புகள், எளிய மனிதனுக்கு நேரடியாகப் பயன்படக்கூடியனவாக இருந்தன. அவற்றால் மக்களது வாழ்க்கைநிலையில் மகிழ்ச்சி பொங்கிற்று. இக் கண்டுபிடிப்புகளால் அமெரிக்காவின் சமுதாய வாழ்க்கை நிலையே மாற்றியமைந்ததை நோக்குமிடத்து, இதனை இரண்டாவது தொழிற் புரட்சியாகக் கொள்ளலாம். நிலக்கரியாலும், நீராவியாலும் இயங்கி வந்த இயந்திரங்கள், எண்ணெயாலும், மின்சாரத்தாலும் இயங்கலாயின. புதுவகையான போக்குவரத்துச்சாதனங்களால் மக்கள் தொழிற்பட்டணங்களில் நெருக்கமாக வாழ வேண்டாத நிலை ஏற்பட்டது. பட்டணங்களிலுள்ள தொழிற்சாலைகளிலிருந்து புகை கக்கும் புகைப்போக்கிகள் மறைந்து, பட்டண வாழ்வு தூய்மையான தாகவும், உடலுக்கு ஊட்டமளிப்பதாயும் மாறிற்று. பரந்து கிடந்த பண்ணைகளில் வாழ்ந்த குடியானவன் தனிமையில் வருந்தவில்லை. பட்டணங்களுக்கும் சிற்றூர்களுக்குமிடையே இருந்த தடை நீக்கப் பட்டது.

ஹெர்பர்ட் ஹூவர் (Herbert C. Hoover) அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடியரசுத்தலைவராக, 1929ஆம் ஆண்டு பதவியேற்றார். ஹூவர், ஸ்டான்போர்டு (Stanford) பல்கலைக்கழகத்தில் பயின்று பொறியியல் பட்டம் பெற்றார். முதல் உலகப்போரின்போது இலண்டனில் அமெரிக்க இடர்க்காப்புதவிக் குழுவின் தலைவராகப் பணியாற்றினார். குடியரசுத் தலைவர்களான ஹார்டிங் (Harding 1921-1923), கூலிட்ஜ் (Coolidge 1923—1929) ஆகியோரிடத்து வாணிகத்துறைச் செயலாளராகப் பணி புரிந்தார். ஹூவர் ஒரு சிறந்த அருட்பண்பாளர். நல்ல பல சிறப்பியல்புகளைப் பெற்றிருந் தார். குடியரசுக் கட்சியைச் சார்ந்த அவர் பதவியேற்றபோது, நாடு செல்வச் செழிப்பின் உச்சியில் இருந்தது. அமெரிக்க மக்கள் சீரும் சிறப்புமாக வாழ வேண்டுமென ஹூவர் விரும்பினார். அவரே ஒரு

பொறியியல் வல்லுநராகவும், சிறந்த வணிகராகவும் அனுபவம் பெற்றிருந்தமையால் நாட்டின் செல்வ வளத்தை நிலையாகக் கட்டிக் காப்பார் என மக்கள் எதிர்பார்த்தனர். "நாம் எந்த நாட்டிலும் கண்டிராத வகையில் அமெரிக்காவில் வறுமை என்பதனை அடியோடு ஒழிக்கும் முயற்சியின் இறுதிக்கட்டத்தில் உள்ளோம்" என்று பெருமிதத்தோடு ஹூவர் கூறினர். ஆனல், விதி இரக்கமற்றதாக இருந்தது.

அமெரிக்காவில் வியத்தகு முறையில் 1919ஆம் ஆண்டு முதல், 1929ஆம் ஆண்டு வரை வாணிகம் பன்மடங்காகப் பெருகி வலுப் படுத்தப்பட்டது. நாட்டின் தொழில் வளத்தைக் கண்ட பொருளா தார நிபுணர்கள் அதனூடே மறைந்துகிடந்த வாணிகச் சூதாட் டத்தின் தன்மையை உணரவில்லை. தொழிற்சாலைகள் சிறப்புற இயங்கி மக்களிடத்தும் நிறைய பணம் இருந்து வளமாக வாழும் போது பங்குகளின் விலை உயர்ந்துகொண்டே போனல் அது நல்ல அறிகுறியாகும். அப்படிப்பட்ட நேரத்தில் உடனடியாகப் பெரும் செல்வத்தையீட்ட மக்களது மனத்தில் ஓர் ஆசை தோன்றுவது இயற்கைதான். அத்தகைய மனப்பான்மையினல் பங்குமாற்றுக் களத்தில் பரபரப்பான விற்பனை ஏற்படும். அதிகவிலை கொடுத்து மக்கள் பங்குகளை வாங்குவதற்குப் போட்டியிடலாயினர். தங்களுக்கு ஆதாயப் பங்கு கிட்டும் என்ற நோக்கத்தோடு அவர்கள் பங்குகளை வாங்கவில்லை. வாங்கிய பங்குகளை விலைகூட்டித் திரும்பவும் விற்று ஊதியம் பெறவே அவ்வாறு செய்தனர். பங்குகளை வாங்குவோரின் எண்ணிக்கை அதிகமாக அதிகமாக பங்குகளின் விலையும் அதிகரித்துக் கொண்டே சென்றது. இப்படி ஊகவாணிகஞ் செய்வதில் மக்கள் அதிக ஈடுபாடு கொண்டனர். சிறிது பணங்கொண்ட ஆயிரக் கணக்கான பேர் ஊகவணிகர்களாயினர். ஊக வெறி பிடித்த மக்கள் தங்களுடைய போர்க்காலப் பத்திரங்களை விற்றும், வீடுகளை அடைமானம் வைத்தும், பங்குகளை வாங்கி ஊதியத்தோடு விற்றும் பொருளீட்டலாயினர். பங்குகள் விற்கும் சந்தையினை எவ்வகை யிலும் கூட்டாட்சி அரசு கட்டுப்படுத்தவில்லை. கட்டுப்படுத்து வதற்கான சட்டங்களும் இயற்றப்படவில்லை.

முற்றிலும் புதிய, பேரச்சந்தருகிற செயல் ஒன்று 1929ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 29ஆம் நாள் நடைபெற்றது. 24ஆம் நாள் வெறிபிடித்த நிலையில் பன்னிரண்டு மில்லியன் பங்குகள் விற்கப்பட்டு, வாங்கப்பட்டன. 29ஆம் நாள் திடீரென்று பெயர் பெற்ற நிறுவனங்களின் பங்குகளின் விலை குறைய லாயிற்று. இதனைக் கண்ட மக்கள் பீதியுற்றனர். உடனே அனைவரும் பங்குகளை விற்கலாயினர். இரண்டு நாள்களில் பெரும் இழப்போடு

பதினாறு மில்லியன் பங்குகள் விற்கப்பட்டன. பங்கு உரிமை யாளர்கள் பதினைந்து பில்லியன் (Billion) (15,000,000,000) டாலர் கணக்களவில் இழந்தனர். அவ்வாண்டின் இறுதியில் எல்லா வகையான கடனீட்டுப் பத்திரங்களின் தொகை நாற்பது மில்லியன் டாலராக உயர்ந்தது. பல ஆயிரக்கணக்கான முதலீட்டாளர்கள் தங்களுடைய வாழ்நாள் சேமிப்பு அனைத்தையும் இழந்தனர். வாணிகப் பெருமந்தம் இவ்வளவில் முற்றுப்பெறவில்லை. வாணிக நிலையங்கள் மூடப்பட்டன; தொழிற்சாலைகள் கதவடைத்தன; பாங்குகள் முறிந்தன; பல்லாயிரக்கணக்கான மக்கள் வேலையிழந்து தெருக்களில் வேலைக்காக அலைந்தனர். நூற்றுக்கணக்கான குடும்பங்கள் தங்களது வீடுகளை இழந்தன. திரட்டப்படும் வரித்தொகையும் குறையலாயிற்று. அதனால். தலஆட்சி நிறுவ னங்கள் தமது ஊழியர்களுக்கு ஊதியம் அளிக்க முடியாது தவித்தன. எல்லா திட்ட வேலைகளும் நிறுத்தப்பட்டன. ஏற்கனவே தாழ்வுற் றிருந்த வெளிநாட்டு வாணிகம் மிகமிகத் தாழ்வான நிலையை அடைந்தது.

**பெருமந்தத்திற்குக் காரணங்கள்**

அமெரிக்க ஐக்கிய நாட்டில் உற்பத்தித் திறன் மக்கள் வாங்கும் திறனைக் காட்டிலும் பன்மடங்கு கூடுதலாக இருந்தது, பெரு மந்தத்திற்கான முதல் காரணமாகும். நாட்டு வருமானத்தின் பெரும்பகுதி ஒரு குறிப்பிட்ட சிலருடைய கைக்குத்தான் சென்றது. ஆதாயப் பணத்தில் (Dividends) 78 சதவீதம் 3 சதவீத மக்களுக்குச் சென்றது. அச் சிறுபான்மையினர் தாங்கள்பெற்ற ஆதாயத்தைச் சேமித்து வைத்தனர்; அல்லது மீண்டும் புதிய தொழில் உற்பத்தியில் முதலீடு செய்தனர். எனவே தேசிய வருமானத்தின் பெரும் பங்கினைத் தொழிலாளர்களும், குடியானவர்களும், அலுவலகப் பணியாளர்களும் பெறமுடியாத நிலை இருந்து வந்தது. எனவே அவர்களெல்லாம் தாராளமாகப் பணம் செலவழித்துப் பெருமளவில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களை வாங்கமுடியாத நிலையில் இருந்தனர். அவர்களது வாங்கும் சக்தியின் அடிப்படையில்தான் நாட்டின் பொருளாதாரமே இயங்கிவந்தது. இப்படி, வாங்கும் சக்தியைத் தடைசெய்து சேமிப்புச் சக்தியை வளர்த்தால், பொருளா தாரத்தில் இடர்ப்பாடு தோன்றுவது உறுதியாகும். உயர்வருமானம் பெறும் மக்கள் பணத்தைச் சேமித்து வைத்ததுபோல, மாபெரும் வாணிகக் கூட்டு நிறுவனங்களும் தாம் பெற்ற ஊதியத்தைப் பங்கு தாரர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் பங்கிட்டுத் தராமல் முடக்கி வைத்தன.

அமெரிக்கக் கூட்டாட்சி அரசின் போர்க்காலக் கடன்கொள்கை யாலும், காப்புவரிகளாலும் வெளிநாட்டு வாணிகம் பெரிதும் தடைப்

பட்டது. போருக்குப் பிறகு வெளிநாடுகளில் நிலவிய பொருளாதார மந்தத்தினால், அமெரிக்கப் பொருள்களுக்குத் தேவையில்லாது போகவே வெளிநாட்டு வாணிகம் முற்றிலும் வீழ்ச்சியுற்றது. முதல் உலகப்போருக்கு முன்பு அமெரிக்க ஐக்கிய நாடு வெளிநாட்டு வாணிக நிலையில், ஒரு கடன்பட்ட நாடாகவே இருந்து வந்தது. அமெரிக்க மக்கள் வெளிநாடுகளில் முதலீடு செய்திருந்ததைவிட, வெளிநாட்டவர் அமெரிக்காவில் அதிக அளவில் முதலீடு செய்திருந்தனர். உலகப்போரின்போது வெளிநாட்டவர்கள் முதலீடு செய்திருந்த தொகையினையெல்லாம், அந் நாடுகள் பெற்ற கடனுக்காகச் செலுத்தித் தீர்த்துவிட்டனர். எனவே, போர் முடிவுற்றபோது அமெரிக்க ஐக்கிய நாடு, உலகின் கடன் கொடுத்த நாடுகளின் வரிசையில் முதலிடத்தைப் பெற்றிருந்தது. அமெரிக்கா, கடன்பட்ட நாடாக இருந்தபோது, கடன் கொடுத்த வெளிநாடுகள், ஏராளமாக அமெரிக்கச் செய்பொருள்களை வாங்கிக்கொண்டன. அதனால், பெற்ற பணத்தைக் கொண்டே அமெரிக்கா வெளிநாட்டுக் கடன்களை அடைத்தும் வந்தது. இவ்வகையில் அமெரிக்கா தேவைக்கு மேற்பட்ட சரக்குகளையும், தேவைக்கு மேற்பட்ட பணத்தையும் தள்ளிக் கழித்து வந்தது. இம் முறையினை அமெரிக்கா நிலையாகப் பின்பற்ற முடியவில்லை. அமெரிக்கா, கடன்கொடுத்த நாடாக மாறியமையால் கடன்பட்ட நாடுகள் அமெரிக்கச் சரக்குகளை வாங்குவதைத் தவிர்த்து, சிக்கனமாக இருந்து, கடனுக்கான வட்டியைச் செலுத்துவதில் நாட்டங்கொண்டன. 1929ஆம் ஆண்டளவில், பழைய கடன்களின்மீது வெளிநாட்டவர்கள் செலுத்த வேண்டிய வட்டித் தொகையானது புதியதாக வழங்கப்பட்ட கடன்களின் முதல் தொகையைவிடக் கூடுதலாயிருந்தது. இதனால், அமெரிக்காவின் ஏற்றுமதி வாணிகம் தடைப்பட்டு, பொருளாதார மந்தத்திற்கு ஒரு காரணமாக இருந்தது.

அமெரிக்காவில் கடன் அளிக்கும் கொள்கையில் மாற்றங்கள் ஏற்பட்டமையால், மக்கள் சக்திக்குமீறி பெருமளவில் கடன் வாங்கலாயினர். இதனால், தவணை முறையிலான விற்பனையும், கட்டுப்பாடற்ற ஊகவாணிகமும் பெருகின. நடுத்தர அமெரிக்கக் குடும்பத்தினர், ஒரு சிறுதொகையை முதலில் செலுத்திவிட்டு மோட்டார்கார், குளிர்சாதனப்பெட்டி முதலிய விலையுயர்ந்த பொருள்களை வாங்கிவிட்டு, அவற்றுக்கான தொகையைப் பல ஆண்டுகள் தவணை முறையில் செலுத்த சலுகை பெற்றிருந்தனர். வேறு வகையிலும் கடன் கொடுக்கும் முறை பெருகியிருந்தது. 1930ஆம் ஆண்டளவில் அனைவரும் ஒருவரிடமாவது கடன்பெற்றிருந்த நிலை உருவாகியிருந்தது. இக் கடன்முறை பொருளாதாரத்தில் மந்தநிலையினை எந்த நொடியிலும் ஏற்படுத்த வலிமை

பெற்றிருந்தது. ஏனெனில் எங்காவது ஒருவர், வாங்கிய கடனைத் திருப்பித்தர தவறினால், பொருளாதாரநிலை அட்டைவீட்டைப் போல் சரிந்து விழும். நாட்டில் அரசின் பொதுக்கடனும் குறிப்பிடத் தக்கவகையில் கூடியிருந்தது. கூட்டாட்சிஅரசு பொதுக்கடனைக் குறைக்க பல வகையிலும் முயற்சி செய்திருந்தது. ஆயினும் மாநில அரசுகளும், தல ஆட்சி மன்றங்களும் சாலைகள் அமைக்க,பாலங்கள் கட்ட, மருத்துவமனைகள் நிறுவ நிதி பெறுவதற்காகக் கடன்பத்திரங் களை ஏராளமாக வழங்கியிருந்தன. பெருமந்தம் தொடங்கியபோது அரசின் கடன்தொகையும், தனியார் கடன்தொகையும் சேர்ந்து நூற்றைம்பது பில்லியன் டாலராகக் கணக்கிடப்பட்டுள்ளது.

முதல் உலகப்போருக்குப் பின்னர் ஏற்பட்ட செல்வ வளத்தினால் குடியானவர்களுக்குப் பங்கு இல்லாமலேயே இருந்தது. போரின் போது ஏற்பட்ட விவசாய உற்பத்திப் பெருக்கம், திடீரென 1921 ஆம் ஆண்டு வீழ்ச்சியுற்றது. உணவுப்பொருள்களின் விலை 44 சதவீதம் சரிந்தது. குடியானவர்கள் இவ்வீழ்ச்சியினின்றும் எழுச்சி பெறவேயில்லை. வெளிநாட்டு வாணிகமும் குறைந்தமையால், தேவைக்கு மேற்பட்ட உற்பத்திநிலையே விவசாயத்தில் நீடித்தது. அதனால், தானியங்களின் விலை மிகத்தாழ்வான நிலைக்குச் சென்றது. போரின்போது ஏற்பட்ட திடீர் வளர்ச்சிக் காலத்தில் வாங்கிய கடனை அடைக்க முடியாமல் குடியானவர்கள் திண்டாடினர். தங்களுடைய உடைமைகளையெல்லாம் அடைமானமாக வைத்தனர். பலர், விவசாயக் கூலிகளாக மாறினர். தென்பகுதியில் பல்லாயிரக்கணக்கான குடும்பங்கள் பட்டினியால் வாடின.

விடாக்கண்டிப்பான விலைமுறையும் ஓரளவு பொருளாதார மந்தத்திற்குக் காரணமாகும். கண்டிப்பான விலைமுறைக்கொள்கை யினால் குறுகிய நேரத்தில் நெகிழ்திறத்தோடு மாற்றியமைத்துக் கொள்ளக் கூடிய வகையில் பொருளாதார நிலைமை இயங்க முடியாமல் போயிற்று. சரக்குகளின் விலையைக் குறைத்துக் கொண்டு உற்பத்தியினை அப்படியே வைத்துக் கொள்ளாமல், தொழிலதிபர்கள் விலையினை அப்படியே வைத்துக்கொண்டு உற்பத்தி யினைக் குறைத்தனர். ஆகையால், வேலையில்லாத் திண்டாட்டம் நாளுக்குநாள் பெருகியது.

ஒரு நாட்டின் செல்வ வளம் "உறுதியான நம்பிக்கை" என்ற மறைவடக்கமான ஓர் உணர்வின் அடிப்படையில் இருந்து வரும் தொழிலதிபர்கள், தாங்கள் செய்யும் பொருள்களை மக்கள் வாங்கிப் பயனடைவார்கள் என்ற ஓர் உறுதியான நம்பிக்கையினடிப்படையில் கடன்வாங்கித் தொழிலைப் பெருக்குகின்றனர். வாங்கிய கடனைத்

திருப்பித் தர முடியும் என்ற நம்பிக்கையும் அவர்களிடத்து இருக்கும். மக்களின் மனப்பாங்கினை நிலையானதாக, மெய்யானதாகக் கருதிய வணிகர்கள் எல்லையற்ற அளவுக்கு நம்பிக்கை கொண்டு தங்களது தொழிலைப் பெருக்கியிருந்தனர். 1920ஆம் ஆண்டுக்குப் பிறகு நாட்டில் முன்னர் கண்டிராத அளவுக்கு உற்பத்தி பெருக்கம் ஏற்பட்டது ; ஊகவாணிகம் பெருகியது ; கடன்தொகை குவிந்து கொண்டே சென்றது. "உறுதியான நம்பிக்கை" என்ற உணர்வு மறைந்து, வீழ்ச்சி ஏற்பட்டதும், வணிகர்கள் பெரும் இழப்பிற்கு ஆளாயினர். இதனால், அமெரிக்க மக்களிடத்துப் புறத்தே காணப் பட்ட உலோகாயாத (Material) இழப்பைவிட, மனத்தில் ஏற்பட்ட ஆன்ம இயலான (Spiritual) இழப்பே கூடுதலாகக் காணப்பட்டது. திடீரென செல்வச் செழிப்பிலிருந்து ஏழ்மை நிலைக்கு வந்துற்றமை யால் மக்கள் தன்னம்பிக்கை இழந்தனர்.

### பெருமந்தத்தின் விளைவுகள்

தொழிற்சாலைகள் சரக்குகளின் விலையைக் குறைப்பதற்குப் பதிலாக உற்பத்தியைக் குறைத்தன. மொத்தத்தில் தொழில் உற்பத்தி 48 சதவீதம் குறைக்கப்பட்டது. உற்பத்தி குறைக்கப் பட்டமையால் தொழிலாளர்கள் வேலையினின்றும் நீக்கப்பட்டனர். பதினாறு மில்லியன் தொழிலாளர்கள் வேலையிழந்தனர். இத் தொகை நாட்டின் தொழிலாளர் தொகையில் கால் பகுதியாகும். பல தனி யுரிமைக் கூட்டுநிறுவனங்கள் மறைந்தன. 4500 பாங்குகள் முறிவுற்றன. விவசாய உற்பத்தி ஆறுசதவீதம் மட்டுமே குறைந்தது. ஆனால், விவசாயப்பொருள்களின் விலையோ 63 சதவீதம் குறைந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டில், ஐந்து முறை பெரும் பொருளா தார மந்தம் ஏற்பட்டிருந்தது. ஆனால், ஒவ்வொரு முறையும் வாணிகம் தானாக மீட்பு பெறும். 1929ஆம் ஆண்டு ஏற்பட்ட பொருளாதார மந்தம், ஏறத்தாழப் பத்தாண்டு காலம் நீடித்தது. முன்னர் கண்டிராத அளவிற்கு இம் மந்தம் நீடித்தது போலவே, ஏழ்மையும், அவல நிலையும் பேரச்சம் தரக்கூடிய அளவிற்கு நாட்டில் நிலவியது. இதற்குமுன் ஏற்பட்ட மந்த நிலைக்கெல்லாம் நாட்டின் தேவை, காரண மாக இருந்தது. ஆனால், 1929ஆம் ஆண்டு ஏற்பட்ட மந்தம் செல்வச் செழிப்பின் காரணமாக அமைந்திருந்தது. செய்பொருள்களையும், செல்வத்தினையும் நாட்டில் எவ்வளவு தவறான முறையில் பகிர்ந் தளிக்கப்பட்டிருந்தது என்பதனை இப் பெருமந்தம் சிறப்புற எடுத்துக் காட்டிற்று.

இத்தகைய குறைபாடுகள் நாட்டில் இருந்தும் மக்கள் பொறுமை யோடு அமைதியாகவே இருந்து வந்தனர். இச் சோதனையான

ஆண்டுகளில் அமெரிக்க மக்கள் சட்டத்திற்கும், ஒழுங்கு முறைக்கும், சொத்துரிமைக்கும் கட்டுப்பட்டு வாழ்ந்தமுறை அனைவராலும் போற்றற்குரியதாகும். ஒரு சில குடியானவர்கள் கலகம் விளைவித்தனர். மொத்தத்தில் வியக்கத்தகும் வகையில் நாடே அமைதி யாகச் செயலாற்றிற்று. ஒரு குறிப்பிடத்தக்க மாற்றம் அரசியலில் நிகழ்ந்தது. அமெரிக்க மக்கள் குடியரசுக் கட்சியின் மீது நம்பிக்கை இழந்தனர். பலர் மக்களாட்சிக் கட்சியில் சேர்ந்தனர். பெரு மந்தத்தினல் உருவாகியிருந்த பொருளாதார நிலையினை முறையாகத் திட்டமிட்டு செயலாற்றினல்தான் சீர்திருத்த முடியுமெனச் செய்தித் தாள் ஆசிரியர்களும், பேராசிரியர்களும், பொருளாதார மாணவர் களும் கருத்துத் தெரிவித்தனர். ஒரு சிலர் சமதருமக் கொள்கை யினையும், வேறு சிலர் பொதுவுடமைக் கொள்கையினையும் பின் பற்ற வேண்டுமெனக் கூறினர். பொதுவுடமைக் கொள்கையினரது சங்கங்கள் தொழிற்சங்க உரிமைகளுக்காகப் போராடலாயின. அவர்கள் சோவியத்து நாட்டின் வெளிநாட்டுக் கொள்கையினையும் ஆதரிக்கலாயினர். நாட்டில் தெளிவற்ற நிலைமை நிலவியதால் பொதுவுடைமைக் கொள்கைக்குச் சிறிது ஆதரவு கிட்டியது. இப் பெருமந்தத்தினல் ஐரோப்பாவில் பல அரசியல் கோட்பாடுகள் வீழ்ச்சியுற்றன. தாராளக் கோட்பாடும், மக்களாட்சிக் கோட்பாடும் முதலாளித்துவக் கோட்பாடும் ஐரோப்பாவினின்று மறைந்தன. இத்தாலி பாஸிஸப் (Fazism) பாதையிலும், ஜெர்மனி நாஸிஸப் (Nazism) பாதையிலும் செல்லலாயின.

## ஹூவரது சீர்திருத்தப்பணி

பெருமந்தத்தின் இடர்ப்பாடு மிகுந்த நேரத்தில், ஹூவர் குடியரசுத் தலைவராகப் பணிபுரிந்தார். அது அவர் செய்த தீய பயனகும். 1929ஆம் ஆண்டு பொருளாதாரச் சீர்குலைவு ஏற்பட்ட போது, வழக்கமாக முன்பெல்லாம் நிகழ்ந்தது போல, தனியார் முயற்சியால் நிலைமை திருந்தும் என ஹூவர் எதிர்பார்த்தார். மக்கள் தமக்குத்தாமே உதவி புரிந்து கொள்ள வேண்டுமென்றும், தாமாக இயங்கும் அறநிலையங்கள் இடர்க்காப்பு றுதி வேலையில் ஈடுபட வேண்டுமென்றும், ஹூவர் எண்ணினர்: பொருளாதாரச் சீர்குலைவு தற்காலிகமானது என்று மக்களுக்கு ஆறுதல் கூறினர். அமெரிக்க வாணிக முறையில் தவறுகள் எதும் இல்லையென்றும், விரைவில் வாணிகம் பழைய நிலைக்குத் திரும்பும் என்றும் ஹூவர் கூறினர். ஆனல், அவர் நினைத்தபடி பொருளாதார மந்தத்தில் மாற்றம் ஏதும் காணப்படவில்லை.

வேலையற்றோர்க்கு வேலையளிக்கும் திட்டத்தை, வெளிநாடு களுக்கு ஆப்பிள் ஏற்றுமதி செய்யும் கழகம் 1930ஆம் ஆண்டு

உருவாக்கியது. ஏற்றுமதி செய்ததுபோக மிகுதியாக இருந்த ஆப்பிளை வேலையற்றோர்க்கு அளித்து, அவற்றை விற்று, அதனால் வரும் ஊதியத்தை அவர்களுக்கே அளிக்க அத் திட்டம் வழி வகுத்தது. நியூயார்க், சிக்காகோ போன்ற பெரிய நகரங்களில் நடைபாதைகளில் ஆயிரக்கணக்கான பேர் ஆப்பிள் விற்கலாயினர். இத் திட்டத்தால் ஒரு சிலரே நன்மை பெற்றனர். எனினும், வேலைவாய்ப்புக்காக அரசாங்கத்தையே நாடாமல், அமெரிக்கர் இயன்றவரை தாங்களே பொறுப்புடன் செயலாற்றியமை குறிப்பிடத் தக்கதாகும்.

வீடுகளை இழந்தோர், நியூயார்க் போன்ற நகரங்களில் சுரங்க இரயில்பாதை நிலையங்களில் உறங்கினர் பிற இடங்களில் மூடப் பட்ட தொழிற்சாலைகளிலும், வேலையற்றிருந்த சரக்குரயில்பெட்டி களிலும், தகரம் அட்டை இவற்றாலான குடிசைகளிலும் ஏழைகள் வாழலாயினர். ஒரு சிலர் உண்ண உணவின்றி உயிர் நீத்தனர். தன்னியலான அறநிலையங்கள் ஒவ்வொரு ஊரிலும் பசிப்பிணியால் வாடினோர்க்கும், கைவிடப்பட்டவர்களுக்கும் உதவியளித்திட முன் வந்தன. கிறித்துவ ஆலயங்களும், சமூக உறவு மைய நிலையங்களும், ஆக்கநல வேலையிலீடுபட்ட கழகங்களும், செஞ்சிலுவைச் சங்கமும் இடர்காப்பு மீட்புப்படையினரும் மக்களுக்குப் பலவகையிலும் உதவி புரிந்தனர். கஞ்சித் தொட்டிகளில் ரொட்டியும் இலவசமாக வழங்கப்பட்டது.

1932ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் போர்த்துறைப் பணியிலிருந்து விலகி வேலையற்று இருந்த வீரர்கள் ஒன்று சேர்ந்து வாஷிங்டன் நோக்கிச் சென்றனர். முன்னர் 1924ஆம் ஆண்டு இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி முதல் உலகப் போரில் பங்கு பெற்ற போர் வீரர்களுக்கெல்லாம் நல்லூதியம் (Bonus) வழங்கு வதென முடிவு செய்யப்பட்டது. ஆனால், அந் நல்லூதியம் வழங்கப் படாமலே இருந்தமையால் ஒய்வுபெற்ற போர்வீரர்கள் தலைநகருக்குச் சென்று நல்லூதியத்தைப் பெறத்திட்டமிட்டனர். எனவே அவர்களுக்கு "நல்லூதியப் படையினர்" (Bonus Army) என்று பெயர் வழங்கப்பட்டது. ஆனால், குடியரசுத் தலைவர் ஹூவர் கூட்டாட்சிப் படையினரைக் கொண்டு நல்லூதியப் படையினரை தலைநகரினின்று விரட்டியடித்தார்.

ஹூவரின் ஆட்சிக்காலத்தில் கூட்டாட்சி அரசு பொருளாதார நிலையைச் சீர்திருத்த, நடவடிக்கை ஏதும் மேற்கொள்ளாமலில்லை. கூட்டாட்சி அரசு குடியானவர்களுக்கும், வணிகர்களுக்கும் தொழி லாளர்களுக்கும் ஊக்கம் தரக்கூடிய வகையில் சில சீர்திருத்தத் திட்டங்களை வகுத்தது. ஆனால், நாளுக்கு நாள் வாணிக நெருக்கடி

மோசமாகிக் கொண்டே சென்றது. "கடுமையான 'தன்முயற்சிக்" (Rugged individualism) கோட்பாட்டில் ஈடுபாடு கொண்டிருந்த ஹூவர், படிப்படியாகத் தமது கருத்தினை மாற்றிக் கொள்ளலாயினர். ஆனால், அச்சத்தால் பீடிக்கப்பட்டிருந்த பொதுமக்கள், ஹூவரது ஆட்சியின் மீது நம்பிக்கையிழந்தனர். பெருமந்தத்தினைச் சமாளிக்கத் துணிவு மிக்க பெரிய திட்டங்களைக் குடியரசுத் தலைவரிடமிருந்து எதிர்பார்த்தனர். ஆனால், குடியரசுத்தலைவரோ திருத்தத் தன்மையான திட்டங்களையே மக்களுக்கு அளித்தார். ஹூவரது தனித்தன்மை கவர்ச்சியற்றதாக இருந்தமையால் அவரது திட்டங்கள் மக்களுக்கு மனநிறைவை அளிக்கவில்லை. விளம்பரம் விரும்பாத ஹூவர் ஒரு வணிகராக அனுபவம் பெற்றிருந்தாரே ஒழிய, ஓர் அரசியல் வாதியாகத் திகழப் போதிய அனுபவம் அற்றவராய் இருந்தார். மேலும் 1930ஆம் ஆண்டு நடைபெற்றத் தேர்தலில் பிரதிநிதிகள் சபைக்கு மக்களாட்சிக் கட்சியினர் அதிக அளவில் தேர்ந்தெடுக்கப்பெற்று பெரும்பான்மைக் கட்சியினராயினர். செனட் சபையிலும் கிட்டத்தட்ட இரு கட்சிகளுக்குமிடையே சமநிலை ஏற்பட்டது. மக்களாட்சிக் கட்சியினர் குடியரசுக் கட்சியினரது ஆட்சியைப் பல வகையிலும் இக்கட்டான நிலைக்கு உட்படுத்தினர். ஹூவரது திட்டங்களையும் தடைப்படுத்தலாயினர். இருப்பினும் ஹூவர் சில சிறப்பான திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றி யிருந்தார்.

குடியானவர்களைக் காப்பாற்றுவதற்காக 1929ஆம் ஆண்டு வேளாண்மைப் பொருள் விற்பனைச் சட்டம் (Agricultural Marketing Act) ஒன்று இயற்றப்பட்டது. வேளாண்மைப்பொருளின் விலை மேலும் குறைந்த நிலையை அடையாமலிருக்க இச் சட்டம் வழி வகுத்தது. மிகுதியாக விளைபொருள்களை விளைவிக்காமலிருக்க இச் சட்டம் தடை செய்தது. கூட்டுறவுச் சங்கங்களின் வாயிலாக வேளாண்மைப்பொருள்களை விற்பதில் ஊக்குவிப்பதற்காகக் கூட்டாட்சிப் பண்ணைக் குழு (Federal Farm Board) ஒன்று அமைக்கப் பட்டது. மிகுதியாக விளைந்த பொருள்களை வாங்கி விற்கக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு இக் குழு குறைந்த வட்டியில் கடன் வழங்கியது. இத் திட்டத்திற்காக முந்நூறு மில்லியன் டாலர் ஒதுக்கப்பட்டது. குடியானவர்களின் பெருமந்த நிலை மிகவும் மோசமானதாக இருந்தமையால், கூட்டாட்சி அரசு கடனளித்தும் அவர்கள் நிலை மாறாமல் அப்படியே இருந்தது. வேளாண்மைப் பொருள்களின் விலை குறைந்துகொண்டே இருந்தது.

நாட்டின் நிதி நிலையைச் சீர்படுத்தித் தொழிலை உயிர்ப்பிப் பதற்காக ஹூவர் "புனரமைப்பு நிதி நிறுவனம்" (Reconstruction

Finance Corporation) ஒன்றை நிறுவினர். பொதுமக்களுக்குப் பயனளிக்கும் திட்டங்கள் மீதான செலவை இரண்டு மடங்காக ஹூவர் உயர்த்தினர்; கடனுதவியளிப்பதையும் விரிவாக்கினர். வாணிகத்தின்மீது நம்பிக்கையை மறுபடியும் நிலைநாட்ட வேண்டும் என ஹூவர் வலியுறுத்தினர். புனரமைப்பு நிதி நிறுவனம் கூட்டாட்சி அரசின் நிதித்தொகையைத் தனியார் வாணிக முயற்சி களுக்கு அளிக்கலாயிற்று. பாங்குகளுக்கும், காப்பீட்டுக் கழகங் களுக்கும், வீடுகட்டும் சங்கங்களுக்கும், கடன்வழங்கும் நிறுவனங்களுக்கும் இரயில்பாதை நிறுவனங்களுக்கும் கடன் தந்துதவ இரண்டு பில்லியன் டாலர் தொகையைக் காங்கிரஸ் அளித்தது. இம் முயற்சியால் பல நிறுவனங்கள் நொடித்துப்போவது தடுக்கப் பெற்றது. கடன்பெற்ற நிறுவனங்கள் வேலை செய்யத் துவங்கி யமையால் மக்களுக்கு வேலைவாய்ப்புகள் பெருகின. அதனல் வேலையில்லாத் திண்டாட்டமும் ஓரளவு குறைந்தது.

## 1932 ஆம் ஆண்டுத் தேர்தல்

ஹெர்பர்ட் ஹூவர் 1928ஆம் ஆண்டு நடைபெற்றத் தேர்தலில் எளிதாக மக்களாட்சிக் கட்சியின் வேட்பாளரைத் தோற்கடித்தார் அப்படி எளிதில் வெற்றி பெறக் காரணம் ஹூவருக்கு முன்பிருந்த குடியரசுக் கட்சியைச் சார்ந்த கூலிட்ஜ் காலத்தில் ஏற்பட்ட செல்வப் பெருக்கேயாகும். ஆனல் 1932ல் ஹூவர் மீண்டும் போட்டியிட்ட போது, நாட்டில் நிலவிய பெரு மந்தத்தினல் தோற்கடிக்கப்பட்டார். அவருக்கு எதிராகப் போட்டியிட்டவர் மக்களாட்சிக் கட்சியைச் சார்ந்த, நியூயார்க் ஆளுநரான பீராங்கிளின் டெலனே ரூஸ்வெல்ட்- (Franklin Delano Roosevelt) என்பவராவார். தேர்தல் குழுவின் வாக்குகளில் ரூஸ்வெல்ட்டுக்கு 472 வாக்குகளும், ஹூவருக்கு 59 வாக்குகளும் கிடைத்தன. மக்களது வாக்கில், ரூஸ்வெல்ட், ஹூவரைக் காட்டிலும் கூடுதலாக ஏழு மில்லியன் வாக்குகள் பெற்றார். மக்களாட்சிக் கட்சியினர், குடியரசுத் தலைவர் பதவியைக் கைப்பற்றியதோடு காங்கிரஸின் இரு சபைகளையும் கைப்பற்றினர். தேர்தலின்போது நாட்டுக்குச் சமநிலையிலான வரவு — செலவுத் திட்டத்தை அளிப்பதாகவும், கூட்டாட்சி அரசின் செலவினைக் குறைப்பதாகவும், சீர்மிக்கப் பணத்தாள் முறையினைப் புழக்கத்தில் கொண்டு வரவும், தனியாரது நிறுவனங்களில் தலையிடுவதில்லை யென்றும், அதே சமயத்தில் வாணிக முறைலியிருந்த குற்றங் குறைகளை அகற்றுவதென்றும் பொதுத் திட்டங்களுக்கும் இடர்க் காப்புறுதி வேலைக்கும் செலவிடப்படும் கூட்டாட்சிக் அரசின் நிதியைக் கட்டுப்படுத்துவதென்றும் மக்களாட்சிக் கட்சியினர் வாக்குறுதி அளித்திருந்தனர். ரூஸ்வெல்ட் தமது கட்சியின் கோட்பாடுகளை ஏற்றுக் கொண்டு விளக்கிப் பேசியதோடு, நாட்டின்

வரவு செலவுத் திட்டத்தைச் சரிவர ஹூவர் அமைக்கவில்லை என்று குற்றஞ்சாட்டினர்; மேலும் தமது தேர்தல் சொற்பொழிவுகளில் அடிப்படைகளை ஆங்காங்கே எடுத்துக்கூறினர். சமுதாயத்தில் "மறக்கப்பட்ட மனிதனுக்கு" ஒரு "புது வாழ்வை" அளிக்கவேண்டுமென்றும், அஃது அரசின் கடமையென்றும் ரூஸ்வெல்ட் கருதினர்



பிராங்கினின் ரூஸ்வெல்ட்
*32-வதுகுடியரசுத் தலைவர் 1913—1921*
*மக்களாட்சிக் கட்சி*

## பிராங்கிளின்ரூஸ்வெல்ட்டின் தனித்தன்மை

பிராங்கிளின் ரூஸ்வெல்ட் நியூயார்க்கில் வாழ்ந்துவந்த ஓர் உயர்குடும்பத்தில், 1882ஆம் ஆண்டு பிறந்தார். அவரது இளமை, செல்வச் செழிப்பில் தோய்ந்திருந்தது. ரூஸ்வெல்ட், ஹார்வர்டு பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்ற, பின்பு கொலம்பியா சட்டப்பள்ளிக் கூடத்தில் சட்டக்கல்வி பயின்றூர். வழக்குரைஞராக நியூயார்க்கில் தமது வாழ்க்கையைத் தொடங்கினர். அவரது இருபத்தெட்டாவது வயதில் நியூயார்க்கின் பிரதிநிதியாக செனட் சபைக்குத் தேர்தெடுக்கப்பெற்றூர். கிழக்குப் பகுதியில் செல்வம் மிக்க குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவராதலால், ரூஸ்வெல்ட் ஒரு பழமைவாதியாகவே இருப்பார் எனப் பலரும் நினைத்தனர். ஆனல், ரூஸ்வெல்ட் மேம்பாடுற்ற காலத்தில் ஏற்பட்ட பல சீர்திருத்த இயக்கங்களில் ஆர்வங்காட்டினர்.

உட்ரோவில்சன் குடியரசுத் தலைவராக 1913ஆம் ஆண்டு பதவியேற்றபோது, வில்சன், ரூஸ்வெல்ட்டைக் கப்பற்படைத் துறையின் துணைச்செயலாளராக நியமித்தார். முதல் உலகப் போர் நடைபெற்ற காலம் முழுவதிலும் அப் பதவியை அவர் வகித்தார். 1920ஆம் ஆண்டு மக்களாட்சிக் கட்சியின் சார்பில் குடியரசின் துணைத்தலைவர் பதவிக்குப் போட்டியிட்டுத் தோற்றுப்போனர். அம் முறை ஹார்டிங் குடியரசுத் தலைவரானர். 1921ஆம் ஆண்டு ரூஸ்வெல்ட்டின் வாழ்க்கையில் ஒரு பெரும் துன்ப நிகழ்ச்சி நடை

பெற்றது அவ்வாண்டு அவரை இளம்பிள்ளைவாதப் பிணி பற்றிக் கொண்டது. அதனால், ஊனமுற்றபோதிலும், உள்ள உரம் வாய்ந்த ரூஸ்வெல்ட் அப் பிணியை விரட்டியடிப்பேன் எனக் கூறி மீண்டும் அரசியலில் நுழைந்தார். பிறகு நியூயார்க்கின் ஆளுநராக 1928, 1930 ஆகிய ஆண்டுகளில் தொடர்ந்து தேர்ந்தெடுக்கப்பட்டார். 1932-ல் ரூஸ்வெல்ட் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். மீண்டும்மீண்டும் 1936, 1940, 1944 ஆகிய ஆண்டு களில் தேர்ந்தெடுக்கப்படும் நற்பேற்றினையும் அவர் பெற்றிருந்தார். குடியரசுத் தலைவர் பதவியிலிருக்கும்போது 1945ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள், 12ஆம் நாள் மறைந்தார்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றிலே இக்கட்டான ஒரு நேரத்தில், ரூஸ்வெல்ட் குடியரசுத் தலைவர் பொறுப்பை ஏற்றிருந் தார். அத் தலைமைப் பொறுப்பை ஏற்க அவருக்கு அறிவும், அனுபவமும் இருந்ததோடு, பிற பல நல்ல குணநலன்களும் அவரிடத்து இருந்தன. ரூஸ்வெல்ட் எளிய மக்கள்மீது மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார்; மக்களாட்சி முறைமீதும் மிகுந்த பற்றுக் கொண்டிருந்தார். அவர் அரசியலில் கூர்மதியுடையவராகத் திகழ்ந்தார். தலைமையேற்று நடத்தும் ஆற்றலும் அவரிடத்து இருந்தது. பேரறிஞராகத் திகழாவிட்டாலும், நாட்டின் பெருஞ் சிக்கலைத் தெளிவுற ஆய்ந்து பார்க்கும் திறனை ரூஸ்வெல்ட் பெற்றிருந்தார். சீர்திருத்தத் திட்டங்களை நிறைவேற்றுவதற்கான வழிமுறைகளைப் பின்பற்றுவதில் அவர் ஒரு சந்தர்ப்பவாதியாகத் திகழ்ந்தபோதிலும், குறிக்கோள்களில், கொள்கைமாறாதவராகவே திகழ்ந்தார்; சில எளிய காரியங்களை விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையைப் பயன்படுத்தி சமரச இணக்கத்தோடு செய்து முடித்தார். நாட்டின் ஆட்சி இயலானது ஒரு கலைமட்டுமன்று, ஒரு வகையான அறிவியலுமாகுமென ரூஸ்வெல்ட் கூறினார். முன்கூட்டித் திட்டப்பட்ட ஒரு திட்ட அமைப்புப்படி சமுதாயத்தை மாற்றியமைக்க முடியுமென்றும், அறிவியல் முறையில் அரசாட்சியை நடத்த முடியுமென்றும் நிலவிவந்த கொள்கையினை ரூஸ்வெல்ட் ஏற்க மறுத்தார். அவருக்கு அமெரிக்காவின் கடந்த காலம் பற்றி நன்கு தெரியும். அவர் வாழ்ந்து வந்த அன்றைய நிலைமை பற்றியும் அறிவார். எதிர்காலத்தை எப்படி அமைக்க வேண்டும் என்பது பற்றியும் அவர் சிந்தித்து வந்தார். அரசியல்வாதிகள் மீது ரூஸ்வெல்ட் நம்பிக்கை கொண்டிருந்தபோதிலும், ஒரு துறையில் தனித்திறமை பெற்றவர்மீது அவநம்பிக்கை கொண்டிருந்தார். பொதுமக்களுடைய கருத்துகளுக்கு அவர் மிகுந்த மதிப்பு தந்தார். அதே நேரத்தில் அக் கருத்துகளை உருவாக்குவதிலும், எதிர்ப்பதிலும் அஞ்சாநெஞ்சினராயிருந்தார். ரூஸ்வெல்ட் சில

சமயம் திட்டமிடப்படாத வகையில் பெரிய முடிவுகளைத் தீட்டினர். எனினும் பரந்தநோக்குடன் சோர்வுறாத வகையில் அவர் செயலாற்றினர். அவரிடத்து இருந்த மன எழுச்சி அவரைச் சுற்றியிருந்தோரையும், இறுதியில் அமெரிக்க மக்களையும் பற்றிக்கொண்டது. ரூஸ்வெல்ட்டிடம் சில குறைபாடுகளும் இருந்தன. சில பெரிய சிக்கல்களைக்கூட மேற்போக்காக அவர் பார்வையிட்டார்; மேலும் அவற்றை ஆர்வமில்லாது நிறைவேற்றினர். சீர்திருத்தத் திட்டங்களுக்காகச் செலவான தொகைபற்றி அவர் கவலைப்படவில்லை. தம்மை எதிர்ப்போரைப் பழி வாங்கும் மனப்பான்மை ரூஸ்வெல்ட்டிடம் இருந்தது.

ரூஸ்வெல்ட் தமது பதவியேற்புவிழாவின் போது சிறந்த சொற்பொழிவு ஒன்றினை நிகழ்த்தினர்; நாடு பொருளாதார அடிப்படையில் நல்ல நிலையில் இருக்கிறதென நம்பிக்கையோடு கூறினர். “நம்மைச்சுற்றிலும் மிகுந்த அளவுக்கு இயற்கை வளங்கள் உள்ளன. ஆனல் நாம் அவற்றைத் தாராளமாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை,” என்று அவர் குறிப்பிட்டார்; “நாம் அச்சத்தைக் கண்டுதான் அஞ்ச வேண்டியுள்ளது,” என்றும் கூறினர். நிதியாளர்களும், தன்னலக்காரர்களுமே பொருளாதாரப் பெரு மந்தத்திற்குக் காரணமாவர் என்று கூறி, புதிய சீரமைப்புத் திட்டத்தின் முக்கிய கூறுகளை வெளியிட்டார். நாட்டில் வேளாண்மை உற்பத்தியையும் தொழில் உற்பத்தியையும் சமநிலைக்குக் கொண்டு வர வேண்டுமென்றும், பாங்குகளின் நடைமுறையினை மேற்பார்வையிடல் வேண்டுமென்றும், வெளிநாடுகளுடனை பொருளாதார உறவினை மாற்றிச் சரிப்படுத்த வேண்டுமென்றும், அண்மையிலுள்ள நாடுகளோடு நட்புறவு கொள்ள வேண்டுமென்றும், உலக வல்லரசாகத் திகழும் அமெரிக்க ஐக்கிய நாடு உலகப்பொறுப்புகளை மேற்கொள்ள வேண்டுமென்றும் ரூஸ்வெல்ட் குறிப்பிட்டார். இவ்வகையில் அவரது தொடக்க உரையிலேயே ஒரு வகையான புதிய சீரமைப்புத் திட்டம் தீட்டப்பட்டு வருவதை மக்கள் உணர்ந்தனர். அத்தகைய சீரமைப்புத் திட்டம் நெடுநாள்களுக்கு முன்பே செயலாக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனல், ஏறத்தாழப் பத்தாண்டு காலமாக அரசியல்வாதிகள் வேண்டுமென்றே ஒழுங்கற்ற முறையில் ஆட்சியை நடத்தியமையால் வணிகர்கள் தமது விருப்பப்படி சூழ்நிலையைப் பயன்படுத்திக் கொண்டனர். மக்களாட்சி விதிமுறைப்படி இனி அரசு ஆட்சிபுரியுமென ரூஸ்வெல்ட் உறுதியளித்தார்.

**புதிய சீரமைப்புத் திட்டம் புரட்சிகரமானதா அல்லது படிமுறையானதா ?**

ரூஸ்வெல்ட்டின் பதவிக் காலத்தில் வாழ்ந்த மக்கள் பலருக்குப் புதிய சீரமைப்புத் திட்டம் புரட்சிகரமானதாகக் காட்சியளித்தது. ஆனால், நடைமுறையில் பழமையான தன்மையுடையதாகவே அமைந்திருந்தது. ஜெபர்சனது குடியாட்சியும், வில்சனது குடியாட்சியும் எத்தகைய அளவு பழமை சார்ந்திருந்ததோ அத்தகைய அளவிற்கு ரூஸ்வெல்ட்டின் திட்டமும் பழமையானதாகவே இருந்தது. அரசியலமைப்பின் அடிப்படையில் எல்லாருடைய நலனையும் பேணுதல் மக்களது உயிரினையும், உடைமையினையும் பாதுகாத்தல் மக்களது உரிமைகளை நிலைநாட்டல் போன்ற அமெரிக்கக் குடியாட்சியின் அடிப்படைக் கோட்பாடுகளை இடது சாரி, வலது சாரி தாக்குதல்களினின்றும் காப்பதற்காகவே இத் திட்டம் பாடுபட்டது.

புதிய சீரமைப்புத் திட்டம், மேம்பாடு அடைவதற்கான இயக்கத்தின் தொடர்ச்சியாகவே இருந்தது. தத்துவ அடிப்படையில் புதிய சீரமைப்புத் திட்டம், மக்களின் நலனுக்காகத் தீட்டப்பட்டது. ஆனால், அத் திட்டம் செயல் முறைக்கு வந்தபோது படிமுறையானதாகவே அமைந்திருந்தது. ஏறத்தாழப் பதினைந்து ஆண்டுகளாகச் சீர்திருத்தச்சட்டங்கள் இயற்றப்படாமலே இருந்தன. எனவே ரூஸ்வெல்ட் பதவியேற்றதும், வேகமாகப் பல சட்டங்கள் இயற்றப்படுவதைக் கண்ட சிலர் நாட்டில் ஏதோ ஒரு புரட்சி நடப்பதைப் போல உணர்ந்தனர். ஆனால், இறுதியில் ஆய்ந்து நோக்கியபோது அச் சட்டங்களில் புதியதாக ஒன்றும் சொல்லப்படவில்லை என்பதனையும் மக்கள் உணர்ந்தனர். நாட்டு வளப்பாதுகாப்புக்கான கொள்கையினை முன்னரே தியோடர் ரூஸ்வெல்ட் வகுத்துவிட்டுச் சென்றிருந்தார். இரயில் பாதை நிறுவனங்களையும், வாணிகக்கூட்டு நிறுவனங்களையும் வரையறைப்படுத்துவதற்கான முயற்சிகள் 1880 ஆம் ஆண்டளவிலேயே மேற்கொள்ளப்பட்டிருந்தன. பாங்குகளையும், பணத்தாள் புழக்கத்தினையும் கட்டுப்படுத்துவதில் ஏற்கனவே வில்சன் ஓரளவு வெற்றி கண்டிருந்தார். விவசாயச் சீர்திருத்தத் திட்டங்களை முன்பே குடிப்பொதுமைக் கட்சியினர் (Populists) வகுத்து வழி காட்டியிருந்தனர். தொழிலாளர் நலன் சட்டங்களை இயற்ற விஸ்கான்சின், ஆரிகான் போன்ற மாநிலங்கள் வழிகாட்டின. பெருங்கலவரத்தை நாட்டில் ஏற்படுத்திய நீதித் துறை சீர்திருத்தங்களையும் லிங்கன், தியோடர் ரூஸ்வெல்ட் ஆகியோர் முன்பே கருதி வந்தனர். வெளிநாட்டுறவிலும், நாட்டின் பாதுகாப்பினை வலுப்படுத்தல், கடல்களில் உரிமைநாட்டல், சட்டத்திற்கும் அமைதிக்கும் ஆதரவு அளித்தல், மேலைநாடுகளில் மக்களாட்சியைக் காத்தல் போன்ற பழைய மரபுக் கொள்கைகளின்

தொடர்ச்சியாகவே, புதிய சீரமைப்புத்திட்டத்தின் வெளிநாட்டுக் கொள்கையும் அமைந்திருந்தது.

## அறிவாற்றல்மிக்கோர் குழு(The "BrainTrust")

ரூஸ்வெல்ட் பதவியேற்றதும் அப்பொழுது நிலவிய மந்த நிலையினைச் சீர்படுத்த எத்தகைய திட்டங்களை வகுக்கவேண்டும் என்பது பற்றி கருத்துரை வழங்கவும், தமக்குச் சொற்பொழிவு நிகழ்த்த உரைகளைத் தயாரித்து அளிக்கவும் கல்லூரிப் பேராசிரியர்கள் அடங்கிய ஒரு குழுவினை நியமித்தார். பல, பல்கலைக்கழகப் பேராசிரியர்களையும், வழக்கறிஞர்களையும், சமூகநல ஊழியர்களையும் அழைத்துப்பேசி, அவர்களிடமிருந்து அறிவுரைகளைப் பெற்றார். அனுபவம் மட்டுமல்லாது அந்தந்தத் துறையில் நுண்ணறிவு பெற்ற நிபுணர்களின் உதவியும் ரூஸ்வெல்ட்டுக்குத் தேவைப்பட்டது. எனவே, அவரைச் சுற்றி அறிவாற்றல் மிக்கோர் குழு ஒன்றியங்கிற்று. அதில், கல்லூரிப் பேராசிரியர்களான ரேமாண்டு மோலி (Raymond Moley), அடால்ப் பெர்லி (Adolf Berle), ரெக்ஸ்போர்டு டக்வெல் (Rexford Tugwell) ஆகியோரும், தொழிலாளர் சங்கத் தலைவர்களான சிட்னி ஹில்மன் (Sidney Hillman), வில்லியம் கிரீன் (William Green) ஆகியோரும், சிறந்த நிதியாளரான பெர்னார்டு பாருச் (Bernard M. Baruchh) ஆகியோரும் இடம் பெற்றனர். இத்தகைய அறிவாற்றல் மிக்கோர் குழுவில் இருந்த அறிவுரையாளர்கள் அவ்வப் போது மாறிக் கொண்டேயிருந்தனர்.

## அமைச்சவை

ரூஸ்வெல்ட் தமது அமைச்சவையை அமைத்தபோது, அதில் அதிகமாகக் கட்சிக்கு அப்பாற்பட்டவர்களையே சேர்த்துக் கொண்டார். அவருடைய அமைச்சவையில் பல தென்மாநிலத்தவர் இருந்தனர். தென்னசி மாநிலத்தைச் சார்ந்த கார்டல் ஹல் (Cordel Hull) என்பவர் வெளிநாட்டுறவுச் செயலாளராகப் பதவியேற்றார். தமக்குத் தேர்தலில் உறுதுணையாய் உதவி புரிந்த ஜேம்ஸ் பார்லி (James A. Farley), என்பவரை அஞ்சல்துறைத் தலைவராக நியமித்தார். உள்நாட்டுத் துறைச்செயலாளரான ஹெரால்டு இக்ஸ் (Harold Ickes), வேளாண்மைத் துறைச்செயலாளரான ஹென்றி வாலஸ் (Henry A.Wallace), ஆகிய மூவரும் புதிய சீரமைப்புத் திட்டத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். முதல்முறை யாக ஒரு பெண்மணியும் அமைச்சவையில் இடம் பெற்றார். சமூக நல ஊழியரான பிரான்ஸிஸ் பெர்க்கின்ஸ் (Frances Perkins) என்ற அப்பெண்மணி தொழிலாளர் நலன் செயலாளாக நியமிக்கப்பட்டார்.

### நூறு நாள்கள் (The "Hundred Days")

1933ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள், 4ஆம் நாள் ரூஸ்வெல்ட் பதவியேற்றபோது, அமெரிக்க ஐக்கிய நாட்டின் பொருளாதாரம் படிப் படியாகச் சீர்குலைந்து வீழ்ச்சியுற்றிருந்தது. பணம் சேமித்து வைத் திருந்தோர் பீதியுற்றுத் தங்களுடைய பணத்தையெல்லாம் பாங்கு களினின்று திரும்பப் பெறலாயினர். இந் நிலையைக் கண்ட மாநில அரசுகள், பாங்குகளைக் காப்பாற்றுவதற்காகக் கட்டாயமாகத் தலையிட நேரிட்டது. மிச்சிகன் மாநிலம் பிப்ரவரி 14ஆம் நாள் பாங்கு விடுமுறையை அறிவித்தது. மார்ச்சு 4ஆம் நாள் ரூஸ்வெல்ட் பதவி யேற்பதற்குள் அனேகமாக எல்லா மாநிலங்களும் பாங்கு விடுமுறையினை அறிவித்திருந்தன. மார்ச்சு 9ஆம் நாள் காங்கிரஸின் சிறப்புக் கூட்டம் ஒன்று கூட்டப்பட்டது. அடுத்த நூறு நாள்களில் (ஜூன் 16 வரை) காங்கிரஸ் குடியரசுத் தலைவர் இன்றியமையாத தென நினைத்து வேண்டிய திட்டங்களையெல்லாம் உடனுக்குடன் தீட்டித் தந்தது. அச் சிறப்பு மிக்க நூறுநாள்களில் என்றும் கண்டிராத அளவிற்குக் காங்கிரஸுக்கும் ஆட்சித்துறைக்குமிடையே பரிபூரண ஒத்துழைப்பும் காணப்பட்டது.

### நெருக்கடி கால பாங்குச் சட்டம் (Emergency Banking Act)

மக்கள், தொடர்ந்து பாங்குகளிலிருந்து பணத்தைத் திருப்பிப் பெறத்தொடங்கியதால், பல பாங்குகள் வேலைசெய்வதை நிறுத்தின. பாங்குமுறை நாட்டினில் வீழ்ச்சியுறக்கூடும் என அஞ்சிய ரூஸ் வெல்ட், மார்ச்சு 5 முதல் 9 வரை பாங்குவிடுமுறை அறிவித்தார். நாடு முழுவதிலுமிருந்த பன்னிரண்டு தேசிய பாங்குகளும், அவற்றோடு இணைக்கப்பட்டிருந்த எல்லா பாங்குகளும், மூடப்பட்டன. காங்கிரஸ் விரைந்து நெருக்கடி கால பாங்குச் சட்டமொன்றை இயற்றிற்று. அச் சட்டப்படி நொடித்துப்போன பாங்குகளைச் சீர்த்திருத்தியமைக்கும் பொறுப்புக் குடியரசுத் தலைவரிடம் விடப்பட்டது. இவ்வகையில் கூட்டாட்சி அரசு நாடு முழுவதிலும் இயங்கிவந்த பாங்குகளின்மீது உடனடியாகக் கட்டுப்பாட்டை விதித்தது.

பன்னிரண்டு கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்குகளும், அப் பாங்குகள் இருந்த நகரங்களிலுள்ள பிற சீர்மிக்க பாங்குகளும் விடுமுறைக்குப் பிறகு திறக்கப்பட்டன. மற்றப் பாங்குகள் சிறிது காலத்திற்குள்ளாக திறப்பதற்கான உரிமைச்சீட்டுகள் வழங்கப்பட்டன. தேவைக்கு வேண்டிய பணத்தாளினைப் பிற பாங்குகள் கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்குகளினின்று கடனாகப் பெறலாம் என அறிவிக்கப்பட்டது. அக் கடன், நிலையான சொத்தின் கூறுமீதுதான் வழங்கப்பட்டது. குடியரசுத் தலைவரின் ஆணைப்படி மூடப்பட்டு, பின்னர்த் திறக்கப்பட்டு

இயங்கிய பாங்குகளின்மீது, பல குறிப்பிடத்தக்கக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன. கருவூலச் செயலாளரது ஒப்புதல் இல்லாது, பாங்குகள் தங்கம், தங்கக்கட்டிகள், தங்கப் பத்திரங்கள், ஆகிய வற்றை விற்கக்கூடாதெனத் தடை விதிக்கப்பட்டது. தங்கத்தை எவரும் கள்ளத்தனமாக மறைத்து வைக்கவோ, ஏற்றுமதி செய்யவோ கூடாது என்றும் தடைவிதிக்கப்பட்டது.

கிளாஸ்-ஸ்டீகல் பாங்கு முறைச்சட்டம் (The Class- Steagall Banking Act-1933) ஒன்று இயற்றப்பட்டது. அச் சட்டம் கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்குகளுக்குக் கடனளிப்பதைக் கட்டுப்படுத்த, கூடுத லான அதிகாரத்தைத் தந்தது. கூட்டாட்சி பாங்குகளின் உறுப்பினர் பாங்குகள் தாம் விரும்பியபடியெல்லாம் ஊகம் செய்து கடனளிப்பது தடை செய்யப்பட்டது. இச் சட்டத்தின்படி, கூட்டாட்சிவைப்புநிதி காப்பீட்டுக்கழகம் (Federal Deposit Insurance Corporation) ஒன்று அமைக்கப்பட்டது. இக் கழகத்தை எல்லா பாங்குகளும் சேர்ந்து முதலீடு செய்து உருவாக்கின. பத்தாயிரம் டாலர் வரை சேமித்து வைத்திருந்தவர்களின் சேமிப்பெல்லாம் காப்பீடு செய்யப் பட்டது.

தங்க ஒதுக்கீடு சட்டமொன்று (Gold Reserve Act) 1934ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. அச் சட்டப்படி கூட்டாட்சி ஒதுக்கீடு பாங்குகளின் கட்டுப்பாட்டிலிருந்த தங்கமெல்லாம் கருவூலத்திற்கு மாற்றப்பட்டது. அதற்கு ஈடாக டாலர் பத்திரங்கள் வழங்கப் பட்டன. மேலும் தங்க நாணய ஏற்பளவை (Gold Standard) முறை கைவிடப்பட்டது. புழக்கத்திலிருந்த தங்க நாணயங்களெல்லாம் திரும்பிப் பெறப்பட்டன. ஒரு டாலரின் தங்க மதிப்பும் குறைக்கப் பட்டு, 59.06 சென்ட்டாக நிருணயிக்கப்பட்டது. நாட்டில் நிலவிய பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த டாலரின் மதிப்பும் குறைக்கப் பட்டது. இதனால் பொருள்களின் விலை உயர வாய்ப்பு ஏற்பட்டது.

1934ஆம் ஆண்டு, கடனீட்டுப்பத்திரம் மற்றும் நாணய மாற்றுச்சட்டம் ஒன்று (The Securities and Exchange Act) இயற்றப்பட்டது. அதன்படி, கடனீட்டுப் பத்திரம், மற்றும் நாணய மாற்றுக்குழு ஒன்றும் (Securities and Exchange Commission) ஏற்படுத்தப்பட்டது. இக் குழு ஊக வாணிகத்தைக் கட்டுப் படுத்திற்று. பங்குகளை 55 சதவீத விலைக்கும் குறைவாக விற்கவோ வாங்கவோ கூடாதெனத் தடைவிதிக்கப்பட்டது. கடனீட்டுப் பத்திரங் களின் விற்பனையும், மாற்று முறையும் வரையறைப்படுத்தப் பட்டதால், முதலீட்டார்க்குப் பாதுகாப்புக் கிடைத்தது. வீலர்-ரேபர்ன் சட்டப்படி, (Wheeler Rayburn Act-1935) இக் குழு பொது

மக்களின் நலனுக்காக இயங்கிய நிறுவனங்களின் பங்குகளை வைத்திருந்த நிலையங்களையும் கட்டுப்படுத்த அதிகாரம் பெற்றது.

பாங்குகளின் நடவடிக்கைகளை வரையறை செய்யும் வகையில் இயற்றப்பட்ட இச் சட்டங்களால், நாட்டின் பணத்தாள் புழக்கம் சீர் பெற்றது ; மக்கள் பாங்குகள் மீது மீண்டும் நம்பிக்கை கொண்டனர். உள்நாட்டுச் சரக்குகளின் விலை உயரத் தொடங்கியது ; ஏற்றுமதியும் ஊக்கம் பெற்றது. டாலரின் மதிப்பு குறைக்கப்பட்டமையால், பிற நாடுகளின் நாணயங்களோடு அமெரிக்க டாலர் போட்டியிட முடிந்தது ; பிற நாடுகளும், அமெரிக்கச் செய்பொருள்களை எளிய விலைக்கு வாங்கமுடிந்தது.

## குடியானவர்களுக்கு நல்வாழ்வு

மிகுதியாக உற்பத்தி செய்யப்பட்ட கோதுமை, இறைச்சி, சோளம், பருத்தி முதலியவற்றை வெளி நாடுகளில் விற்றுவிட முடியும் என்ற கருத்தினைக் காங்கிரஸ் கைவிட்டது. விவசாயப் பொருள்களின் விலையை உயர்த்த, காங்கிரஸ் ஒரு புதிய திட்டத்தை வகுத்தது. 1933ஆம் ஆண்டு வேளாண்மைப்பொருள் சீரமைவுச் சட்டம் (Agricultural Adjustment Act) ஒன்று இயற்றப்பட்டது. அதன்படி, விவசாய உற்பத்தியைக் குறைக்கவும், விவசாயப் பொருள்களின் விலையை உயர்த்தவும் காங்கிரஸ் வழிமுறைகளை வகுத்தது. தங்களது விளைச்சலைக் குறைத்துக் கொள்ளச் சொல்லி குடியானவர்கள் வேண்டப்பட்டனர். அப்படிக் குறைவாக விளைவித்தமைக்கு அவர்களுக்கு இழப்பீடு வழங்கப்பட்டது. எவ்வளவு ஏக்கர் நிலத்தைப் பயிர்செய்யாது தரிசாக விட்டனரோ அவ்வளவில் இழப்பீடு நிருணயிக்கப்பட்டது. இதன் பயனாக, பத்து மில்லியன் ஏக்கர் பயிர் செய்யாமல் விடப்பட்டது. இந்நடவடிக்கைகளைகளை மேற்பார்வையிட, பொருள் கடனளிப்பு நிறுவனம் (Commodity Credit Corporation) ஒன்று நிறுவப்பட்டது. வேளாண்மைச் சட்டத்தை மூன்றாண்டுகள் கழித்து உயர்நீதிமன்றம் தள்ளுபடி செய்தது. அதன்பேரில் காங்கிரஸ் இரண்டாவது வேளாண்மைச் சட்டத்தை இயற்றியது.

குடியானவர்களுக்கு இடர்க் காப்புதவி வேறு பல வழிகளிலும் கிட்டியது. ஹூவரால் தோற்றுவிக்கப்பட்ட புனரமைப்பு நிதி நிறுவனத்திற்குக் கூட்டாட்சி அரசு பில்லியன் பில்லியனாக டாலர் அளித்து உதவி செய்தது. அந் நிறுவனம் குடியானவர்களுக்குக் குறைந்த வட்டிக்குக் கடன் தந்துதவியது. அதனால் குடியானவர்கள் தங்களது அடைமானம் வைத்த நிலங்களையும், வீடுகளையும் இழக்காமலிருந்தனர். நகர்ப்புறங்களில் வாழ்ந்த மக்களுக்கும் கடனாக

நிதியுதவி அளிக்கப்பட்டமையால், நகரமக்கள் வேளாண்மைப் பொருள்களை வாங்குவதற்குப் பணம் பெற்றிருந்தனர். வெளிநாடுகளோடு வாணிகத்துறையில் உரிமைப் பரிமாற்ற ஒப்பந்தங்களைச் செய்துகொள்ள குடியரசுத்தலைவருக்கும், வெளிநாட்டுறவுச் செயலாளருக்கும் அதிகாரங்களைக் காங்கிரஸ், 1934ஆம் ஆண்டு இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி, வழங்கிற்று. வெளிநாட்டுறவுச் செயலாளரான ஹல், அத்தகைய உரிமைப் பரிமாற்ற ஒப்பந்தங்களைப் பல நாடுகளோடு செய்து கொண்டார். அமெரிக்க ஐக்கிய நாட்டினுள் இறக்குமதி செய்யப்படும் சரக்குகளின்மீதான காப்பு வரிகளை ஹல் குறைத்தார். அதேபோல, அதற்கு ஈடாக ஒப்பந்தம் செய்துகொண்ட நாடுகளும், அமெரிக்கச் சரக்குகளின் மீதான காப்புவரிகளைத் தத்தம் நாட்டில் குறைத்தன. அதன் விளைவாக அமெரிக்க வேளாண்மைப்பொருள்கள் குறைவு விலைக்கு வெளிநாடுகளில் விற்கலாயின. எனவே, அவற்றிற்கான தேவை அதிகரித்தது. இச் சட்டங்களால் மட்டுமல்லாது சில இயற்கைக் காரணங்களாலும் குடியானவர்கள் முன்னுக்கு வந்தனர். அமெரிக்காவில் 1934ஆம் ஆண்டிலும், 1936ஆம் ஆண்டிலும், மழையின்மையால் ஏற்பட்ட வறட்சியால் வேளாண்மைப்பொருள்களின் தேவை அதிகரிக்க அவற்றின் விலையும் உயர்ந்தது.

## தொழில் துறை புத்தெழுச்சி பெறல்

புதிய சீரமைப்புத் திட்டத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்ட பாங்குகளின் வரையறைச் சட்டங்களால், கடன்மதிப்பு முறையும் சீர்படுத்தப்பட்டது. குடியானவர்களது நலனுக்காகப் பாங்குகள் மேற்கொண்ட நடவடிக்கையினால் குடியானவர்கள் நலன் சிறந்தது. ஆனால், தொழில் துறை உற்பத்தியாளர்களும் தங்களது சரக்குகளை விற்கமுடியாது தேக்கி வைத்துத் துன்பப்பட்டு வந்தனர். பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையிழந்து நகரங்களில் திரிந்து வந்தனர். அதனால் தொழில்துறை உற்பத்திப் பொருள்களும், வேளாண்மைப் பொருள்களும் வாங்குவாரற்றுக் கிடந்தன.

விலையினைக் கட்டுப்படுத்தி, போட்டியினைக் குறைத்து வாணிகத்தை மீட்டுயிர்ப்பிக்கவும், அதற்குக் கைம்மாறாகத் தொழிலதிபர்கள், தொழிலாளர்களுக்குச் சலுகைகளை அளிக்கச் சொல்லியும், ரூஸ்வெல்ட் திட்டங்களை வகுத்தார். இதற்காகத் தேசியத் தொழில்துறை மீட்புச்சட்டம் ஒன்று (National Industrial Recovery Act) இயற்றப்பட்டது. இச் சட்டம், தொழில் துறை உற்பத்திப்பொருள்களின் விலையை நிலைப்படுத்தவும், தொழிலாளர் ஊதியத்தை உயர்த்தவும், தொழிலாளர்கள் கூட்டாகப் பேச்சுவார்த்தை நடத்தவும் வழிவகை செய்தது. பாலங்கள் கட்டுதல்,

சாலைகளைப் பாதுகாத்தல், மின்சார உற்பத்தித் தொழிற்சாலைகள் நிறுவுதல், அணைகள் கட்டுதல் போன்ற பொதுப்பணிகளுக்குச் செலவிட இச் சட்டம் ஏராளமான நிதியை ஒதுக்கிற்று இத்திட்டத்தின் கீழ் மாநில அரசுகளும், தலஆட்சி நிறுவனங்களும், பள்ளிக் கூடங்கள், மருத்துவ மனைகள், பொதுக் கட்டடங்கள், நீர்ப்பாசனத் திட்டங்கள் ஆகியவற்றைக் கட்டுவதற்காகக் கடன் பெறும்படி ஊக்குவிக்கப்பட்டன. இத்தகைய பொதுப்பணிகளை மேற்கொள்ள பல அமைப்புகள் உருவாயின. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை, வேலைவாய்ப்பு முன்னேற்ற நிருவாகமும் (Work Progress Administration), பொதுப்பணி நிருவாகமுமாம் (Public Works Administration). வேலைவாய்ப்பு முன்னேற்ற நிருவாகத்தின் தலைவராக ஹேரி ஹாப்கின்ஸும் (Harry L. Hopkins), பொதுப் பணி நிருவாகத்தின் தலைவராக ஹெரால்டு இக்ஸும் பொறுப்பேற்றிருந்தனர். இத் திட்டங்களுக்காகத் தொடக்கத்தில் ஏழு பில்லியன் டாலர் ஒதுக்கப்பட்டது.

பொதுப்பணி ஆட்சியமைப்பு, தன்னுடைய நிதித் தொகையில் ஒரு பகுதியினை மின்சார உற்பத்திப் பெருக்கத்திற்காகச் செலவிட்டது. கிராமங்களுக்கான மின்சார வசதியளிக்கும் நிருவாகம் (Rural Electrification Administration) ஒன்று அமைக்கப்பட்டது. அந் நிருவாகம் மின்சார உற்பத்தித் தொழிற்சாலைகளைக் கிராமப் புறங்களில் நிறுவி, மின்சாரத்தைக்கம்பிகள்மூலம் நாடு முழுவதிலும் அனுப்பி வைத்தது. புதிய சீரமைப்புத் திட்டத்திலேயே முன்னேற்றவாதிகளிடையே அதிகமான ஊக்கத்தை விளைவித்தது தென்னசி பள்ளத்தாக்குத் திட்டமாகும். தென்னசி ஆற்றுநீர் பயன்படுத்தப் படாமல் வீணாக ஓடுவதைக் கண்ட காங்கிரஸ், 1933ஆம் ஆண்டு, மேத் திங்கள் தென்னசி பள்ளத்தாக்கு அதிகாரக் குழு (Tennessee Valley Authority) ஒன்றினை நியமித்தது. தென்னசி ஆற்றின் குறுக்கே அணைகளைக் கட்டவும், மின்சார உற்பத்தித் தொழிற்சாலைகளை இயக்கவும், மினசாரத்தை விற்கவும் அக் குழுவுக்கு உரிமை தரப்பட்டது. இதனுல், தனியார் மின்சார உற்பத்தி நிறுவனங்களில் மின்சார விற்பனை விலையையும் கட்டுப்படுத்த முடிந்தது. வேளாண்மைக்கு வேண்டிய உரங்களைத் தயாரிக்கவும், வெள்ளக்கட்டுப்பாட்டுத் திட்டங்களை மேற்கொள்ளவும், தென்னசிப் பள்ளத்தாக்கில் வாழும் மக்களின் பொருளாதாரச் சமூக நலனைப் பாதுகாக்கவும், தென்னசிப் பள்ளத்தாக்கு அதிகாரக் குழுவுக்கு எல்லா வகையான உரிமைகளும் அளிக்கப்பட்டன. அமெரிக்க ஐக்கிய நாட்டில் வறுமையால் வாடிய, அப் பகுதியைச் சார்ந்த ஏழு மாநிலங்களின் இரண்டு மில்லியன் மக்கள், இத் திட்டத்தால் பயனடைந்தனர். 1940ஆம் ஆண்டளவில், தென்னசி பள்ளத் தாக்கு அதிகாரக்குழு ஏழு அணைகளைக் கட்டி முடித்திருந்தது.

தென்னசிப் பள்ளத்தாக்கு மக்களின் வாழ்க்கைத்தரம் சிறப்பான முறையில் உயர்ந்திருந்தது.

புதிய சீரமைப்புத் திட்டத்தில், இயற்கைவளப்பாதுகாப்புக் காகவும், நிறைய நிதி செலவிடப்பட்டது. மண்வளப்பாதுகாப்புப்



தென்னசி பள்ளத்தாக்கு அதிகாரக் குழுவினால்
தென்னசி ஆற்றின் குறுக்கே அலபாமாவில் கட்டப்பட்ட
கண்ட்டர்ஸ்வில் அணை

பணித்துறையில் (Soil Conservation Service) ஒன்று, 1934ஆம் ஆண்டு அமைக்கப்பட்டது. சரிவிடையே தட்டையான தளம் அமைத்துப் பயிரிடவும், வேறுபல வளப்பாதுகாப்பு முறைகளை மேற் கொள்ளச் சொல்லியும், குடியானவர்கள் வேண்டப்பட்டனர்.

தேசியத்தொழில்துறை மீட்புச்சட்டம், பலவகைப்பட்ட தொழிற்சாலைகளிலும் சீரான விதிமுறைகளை ஏற்படுத்த வகை செய்தது. அச் சட்டப்படி தேசியமீட்புநிருவாகம் (National Recovery Administration) ஒன்று அமைக்கப்பட்டது. அதன் தலைவராக ஹியூ ஜான்ஸன் (Hugh S. Johnson) என்பவர் நியமிக்கப் பட்டார். ஊக்கம் மிகுந்த அவரது நன்முயற்சியால், பல தொழிற்

சாலைகளில் நேர்மையான விதிமுறைகள் வகுக்கப்பட்டன. மேலும் தொழிற்சாலைகள் வேலைவாய்ப்புகளை அதிகரித்ததோடு, உற்பத்தியையும் பெருக்கின. இப்படிக் கண்ணியமான முறையில் தொழிலாளர்களிடையேயான உறவுநிலையைத் தொழிலதிபர்கள் தாங்களாகவே திருத்திக் கொள்ள ஒரு சிறந்த வாய்ப்பு அளிக்கப்பட்டது.

## தொழிலாளர் நலனைப் பாதுகாத்தல்

ரூஸ்வெல்ட் பதவியேற்றபோது, ஆயிக்கணக்கான இளைஞர்கள் வேலையின்றி தவித்துக் கொண்டிருந்தனர் நாடு முழுவதிலும் வேலை தேடி அவர்கள் திரிந்து கொண்டிருந்தனர். அப்படிப்பட்ட இளைஞர்களுக்கு வாழ்வளிப்பதற்காக, 1933ஆம் ஆண்டு, காங்கிரஸ் பொதுத்துறை வளப்பாதுகாப்புப் படை (Civilian conservation Corps) ஒன்றினை உருவாக்கிற்று. பதினெட்டுக்கும், இருபத்தைந்துக்கும் இடைப்பட்ட வயதுடைய திருமணமாகாத ஆண்களுக்கு, வெள்ளக் கட்டுப்பாடு திட்டங்களிலும், வனவளர்ப்புத் திட்டங்களிலும், பயிரை அழிக்கும் பூச்சிகளை ஒழிக்கும் திட்டங்களிலும், பிற கூட்டாட்சி அரசின் திட்டங்களிலும், வேலை வாய்ப்புக்கள் தரப்பட்டன. 1940 ஆம் ஆண்டளவில் இப் பதவியில் இரண்டு மில்லியன் இளைஞர்கள் இருந்தனர். இளம்வயதிலிருந்த பெண்களையும் ஆண்களையும் தொடர்ந்து பள்ளிக்கூட படிப்பில் வைத்திருப்பதற்காகக் கூட்டாட்சி அரசு தேசிய இளைஞர் நிருவாகம் (N tional Youth Administration) ஒன்றினை ஏற்படுத்தியது. பள்ளிக்கூடங்களை நடத்துவதற்குப் போதிய நிதி வசதியில்லாத மாநிலங்களுக்கு இந்நிருவாகம் நிதியுதவியளித்தது. பள்ளிக்கூடநேரம் போக மீதிநேரத்தில், வேலை தந்து தேவைப்பட்ட மாணவர்களுக்குச் சிறுதொகையையும் உதவியாக அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. பொதுத் துறை வளப்பாதுகாப்புப் படையாலும், தேசிய இளைஞர் நிருவாகத்தாலும், வேலையில்லாது இருந்தோரில் ஒரு சிறிய பங்கினருக்கே வேலையளிக்கப்பட்டது.

காங்கிரஸால் நிறுவப்பட்ட வேலை வாய்ப்பு முன்னேற்ற நிருவாகமும், பொதுப்பணி நிருவாகமும், மேலும் பல்லாயிரக் கணக்கானவர்களுக்கு வேலையளித்தன. பொதுப்பணி நிருவாகம் இரண்டாவது உலகப்போர் வரை இயங்கிற்று. இந் நிருவாகத்தின் பணி இடர்ப்பாடு மிகுந்ததாகவே இருந்தது. இந் நிருவாகத்தால் மேற்கொள்ளப்படும் பணிகள் தனியார் துறையினரால் மேற்கொள்ளப்பட்ட பணிகளோடு தலையிடாதவகையில் அமைக்கப்பட வேண்டியிருந்தது. மேலும் இந் நிருவாகத்தின்கீழ் பணியாற்றியவர்கள் பயிற்சி பெறுதவர்களாய், ஒழுங்குமுறை குறைந்தவர்

களாய், வாழ்க்கையில் ஊக்கமிழந்தவர்களாய் இருந்தனர். அப்படியிருந்தும் பொதுப்பணி நிருவாகம் நன்முறையில் செயலாற்றியது. 1943ஆம் ஆண்டு இந் நிருவாகம் முற்றுப்பெற்றபோது இதற்காக ஏறத்தாழ பதினேரு பில்லியன் டாலர் செலவிடப்பட்டிருந்தது: எட்டரை மில்லியன் மக்களுக்குத் தற்காலிகமாக வேலை வாய்ப்பளித்திருந்தது. இந் நிருவாகம் பண்பாட்டு நிகழ்ச்சிகளையும் மேற்கொண்டு, கலைஞர்களையும் ஆதரித்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

புதிய சீரமைப்புத் திட்டத்தில் தொழிலாளர் நலனுக்காக, பல சிறப்பு வாய்ந்த சட்டங்கள் இயற்றப்பட்டன. தேசிய தொழில் துறைமீட்புச் சட்டம் தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்புக்களைப் பெருக்கியதோடு, வேலைநேரத்தைக் குறைத்தது; மேலும் ஊதியத்தை உயர்த்தியது; குழந்தைகள் வேலைக்கு அமர்த்தப்படுவதைத் தடுத்தது; தொழிலாளர்கள் தொழிலதிபர்களுடன் கூட்டாகப் பேசி, குறைகளைத் தீர்த்துக் கொள்ளவும் வழிவகுத்தது. 1935ஆம் ஆண்டு இச் சட்டத்தை உயர்நீதிமன்றம் தள்ளுபடி செய்தது. எனவே, தொழிலாளர்நலனைப் பாதுகாக்க, இரண்டு அடிப்படையான சட்டங்கள் இயற்றப்பட்டன, அவை (1) 1935ஆம் ஆண்டு இயற்றப்பட்ட வாக்னர் சட்டம் (Wagner Act) (2) தொழிலாளர் நலமிக்க வரையளவான சட்டம் (Fair Labour standards Act 1938) என்பவாம். வாக்னர் சட்டப்படி, தொழிலாளர்கள் தொழிற்சங்கங்களில் சேருவதற்கும், கூட்டாகப்பேசி, குறைகளைத் தீர்த்துக் கொள்ளவும் உரிமை பெற்றனர். இவ்வுரிமைகள் சரிவர தொழிலாளர்களுக்கு அளிக்கப்படுகின்றனவா என்பதனை மேற்பார்வையிட, தேசியத் தொழிலாளர் உறவுக் குழு (National Labour Relations Board) ஒன்று அமைக்கப்பட்டது. தொழிலாளர் நலமிக்க, வரையளவான சட்டம் குறைந்த அளவு ஊதியத்தையும், உச்ச அளவு வேலைநேரத்தையும் நிருணயித்தது. மாநிலங்களுக்கிடையேயான வாணிகத்தில் ஈடுபட்டிருக்கும் தொழிற்சாலைகள் குழந்தைகளை வேலைக்கு அமர்த்தக்கூடாது என்றும் தடைவிதித்தது.

வாக்னர் சட்டம், தொழிலாளர்நலனைப் பற்றி மட்டுமே கூறியது. அதில் தொழிலதிபர்களுடைய உரிமைகளைப் பற்றி ஒன்றுமே குறிப்பிடப்படவில்லை. வாக்னர் சட்டத்தின்மீது கடும் விவாதங்கள் நிகழ்ந்த போதிலும், தொழிலாளர்கள் பல நேர்மையான உரிமைகளைப் பெற அச் சட்டம் வகைசெய்தது. பெருமளவில் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளில், தொழிற்சங்கங்களை அமைப்பதற்கான முயற்சிகள் நடைபெற்றன. 1934ஆம் ஆண்டு, சான்பிரான்சிஸ்கோவில் நடைபெற்ற சிறப்புக்கூட்டமொன்றில்

அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைவு (American Federation of Labour) ஒன்று நிறுவப்பட்டது. இக்கூட்டமைவின் இணை உறுப்பினர்களாக இருந்த ஐந்து தொழிற்சங்கங்கள் ஒன்றுகூடி தொழில் நிறுவன அமைப்புக் குழு (Committee for Industrial Organisation) ஒன்றை அமைத்தன. பெருமளவில் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளிலுள்ள தொழிலாளர்களிடையே தொழிற் சங்கங்களை ஏற்படுத்தும் பொறுப்பு அக் குழுவினரிடம் ஒப்படைக்கப்பட்டது. 1936ஆம் ஆண்டு, அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைவு தொழில் நிறுவன அமைப்புக் குழுவைக் கலைந்து போகச் சொல்லிற்று. ஆனால் தொழில் நிறுவன அமைப்புக் குழு கலைந்து செல்ல மறுத்தது.

தொழில் நிறுவன அமைப்புக் குழு தனக்கு ஆதரவு தேட முற்பட்டு, 'யுனைடெட்டெக்ஸ்டைல் வொர்க்கர்ஸ்' (United Textile Workers) 'யுனைட்டெட் ஆட்டோமொபைல் வொர்க்கர்ஸ்' (United Automobile Workers) 'யுனைடெட் ஸ்டீல் வொர்க்கர்ஸ்' (United Steel Workers) போன்ற நிறுவனங்களின் தொழிலாளர் சங்கங்களைத் தன்பக்கம் சேர்த்துக் கொண்டது. தொழில் நிறுவன அமைப்புக் குழு 1938ஆம் ஆண்டு அதிகார பூர்வமாக தேசிய தொழிலாளர் சங்கங்களின் கூட்டமைவாகத் தனது வாழ்க்கையை ஆரம்பித்தது. அக் குழு தனது பெயரைத் 'தொழில் நிறுவனங்களின் பேரவை.' "(Congress of Industrial Organisations) என மாற்றிக் கொண்டது. இவ்வகையில் தொழிலாளர் சங்கங்களை இணைக்கும் முயற்சியில் பிளவு ஏற்பட்ட பிறகும், தேசிய தொழிலாளர் உறவுக் குழுவின் ஆதரவோடு அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைவும் 'தொழில் நிறுவனங்களின் பேரவையும்' சிறப்புற இயங்கின. அமெரிக்கத் தொழிலாளர்களில் எட்டு சதவீதத்தினரே தொழிற்சங்கங்களின் உறுப்பினராக, 1933ஆம் ஆண்டில் இருந்தனர். அத் தொகை 1938-ல் இருபத்திரண்டு சதவீதமாக உயர்ந்தது. தொழிலாளர் நலத்துறையின் கணக்குப்படி, 1953-ல், பதினாறு மில்லியன் தொழிலாளர்கள் தொழிற் சங்கங்களின் உறுப்பினராக இருந்தனர். ஆனால் அத் தொகை, மொத்தத் தொழிலாளர்களில் 26 சதவீதத்தையே குறிப்பிடுகிறது. தொழிலாளர் சங்கங்களை இணைக்கும் முயற்சியில் ஏற்பட்டிருந்த பிளவு, 1955ஆம் ஆண்டின் இறுதியில் மறைந்தது. அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைவும், 'தொழில் நிறுவனங்களின் பேரவையும்' ஒன்றாக இணைந்தன.

### சமுக நலன் பாதுகாப்பு(Social Security)

வேலையற்றோருக்கும் வயதானவருக்கும் ஆற்றல் இழந்தவருக்கும் பாதுகாப்பு அளிக்கும் வகையில் சில முக்கியமான

சட்டங்கள் புதிய சீரமைப்புத் திட்டத்தின்கீழ் இயற்றப் பட்டன. இவை புதிய நடவடிக்கைகளை அதுவரை மாநில அரசு களே மேற்கொண்டிருந்தன. வயது முதிர்ந்தோருக்கு ஓய்வு கால ஊதியத் திட்டம், வேலையற்றோர்க்குக் காப்புறுதித்திட்டம் போன்ற திட்டங்களைச் சில மாநிலங்கள் உருவாக்கியிருந்தன. ஆனால் தேசியத்தன்மை வாய்ந்த இத் திட்டங்களை மாநில அரசுகள் ஏற்று நடத்துவது சற்று இடர்ப்பாடு மிகுந்த பணியாகவே இருந்தது. இந் நிலையை மாற்ற குடியரசுத்தலைவர் கேட்டுக் கொண்டபடி, 1935 ஆம் ஆண்டு காங்கிரஸ் பல சமூகநலன்பாதுகாப்புச்சட்டங்களை (Social Security Acts) இயற்றியது. அவற்றின் பயனாய் வயது முதிந்தோர் ஓய்வுகாலஊதியம் பெற்றனர்; வேலையற்றோர் காப்புறுதி செய்யப்பட்டனர்; கண்பார்வை இழந்தோரும், ஆதரவை எதிர்பார்த்து வாழ்கிற தாய்மார்களும், நொண்டிக் குழந்தைகளும் உதவித் தொகை பெற்றனர்.பொது மக்களுடைய உடல்நலன் திட்டங் களுக்காக நிதி ஒதுக்கப்பட்டது. இத் திட்டங்களுக்கான செலவுத் தொகையின் ஒரு பகுதியைத் தொழிலுரிமையாளர்களும் ஏற்றுக் கொண்டனர். கூட்டாட்சி அரசின் மேற்பார்வையின்கீழ் மாநில அரசுகள் இத் திட்டங்களைச் செயலாக்கின. தொடக்கத்தில் சமூக நலப் பாதுகாப்புத் திட்டங்களுக்குக் கடுமையான எதிர்ப்பு இருந்தது. ஆனால், அவற்றின் பயனை உணர்ந்த பிறகு, அத்திட்டங்களைப் பொது மக்கள் வரவேற்றனர். அடுத்த சில ஆண்டுகளில் மேலும் அத் திட்டங்கள் தாராளமாக விரிவாக்கப்பட்டன. சமூக நலன் பாது காப்புத் திட்டங்களைச் செயலாக்க, ஒரு சமூகநலன்பாதுகாப்பு நிருவாகம் உருவாக்கப்பட்டது. அந் நிருவாகம் இன்றைக்குக் கல்வி-உடல் நலம்-ஆக்க நலத்துறையின் ஒரு பகுதியாக இயங்கி வருகிறது.

## தலைமைநீதிமன்றத்துடன்போராட்டம்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஆட்சியமைப்பில் காங்கிரஸும், ஆட்சித்துறையும் கருத்தொற்றுமையோடு, புதிய சீரமைப்புத் திட்டத்திற்கு வேண்டிய சட்டங்களை இயற்றுவதிலும், அவற்றைச் செயலாக்குவதிலும், பணியாற்றின. அப்படி இயற்றப்பட்ட சட்டங்கள், அரசியலமைப்புக்கு உகந்தனவாக உள்ளனவா என்று ஆராயும் பொறுப்பு தலைமைநீதிமன்றத்தைச் சார்ந்திருந்தது. ஐம்பதாண்டுக் காலத்திற்கும் மேலாக, நீதிபதிகள் வழங்கிவந்த தீர்ப்புகளையெல்லாம் கூர்ந்து நோக்கினால், பொதுவாக நாட்டின் பொருளாதார நிலைமையில் அரசு மேன்மேலும் தலையிடுவதையும், தனிப்பட்டவர்களது செயல் ஊக்கத்தையும் செயலையும் தடைப் படுத்தும் வகையில் சமூக சீர்திருத்தங்களை அரசு கொண்டு வருவதையும் தலைமைநீதிமன்றம் கண்டித்துள்ளமையைக் காணலாம்.

அதுபோலவே தலைமை நீதிமன்றம் புதிய சீரமைப்புத் திட்டங்களின் கீழ் இயற்றப்பட்ட சட்டங்களையும் தள்ளுபடி செய்யலாயிற்று.

தேசியத் தொழில் துறை மீட்புச் சட்டத்தையும், வேளாண்மைப் பொருள் சீரமைவுச் சட்டத்தையும் தலைமை நீதிமன்றம் தள்ளுபடி செய்தபோது ரூஸ்வெல்ட் கடுஞ்சினங்கொண்டார். தலைமை நீதி மன்றத்தில் இருந்த ஒன்பது நீதிபதிகளும் வயதானவர்களாயும், பழமைவாதிகளாயும் இருந்தமையால் ரூஸ்வெல்ட்டின் ஆதரவாளர்கள் அவர்களை "ஒன்பதுகிழவர்கள்" எனக் கேலியாகக் குறிப்பிட்டனர். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அடங்கிய காங்கிரஸால் ஒருமனதாக இயற்றப்பட்டு, பின்னர் குடியரசுத்தலைவரின் ஒப்புதலையும் பெற்ற சட்டங்களை எதன் அடிப்படையில் தலைமை நீதி மன்றம் தள்ளுபடி செய்கிறது என்ற வினா அனைவரது மனத்திலும் எழுந்தது. 1936ஆம் ஆண்டில் நடைபெற்றத் தேர்தலில் ரூஸ் வெல்ட் மீண்டும் போட்டியிட்டார். அத் தேர்தலின் முடிவுக்காகப் பொறுமையோடு காத்திருந்தார். தேர்தலின் போது ரூஸ்வெல்ட்டின் புதிய சீரமைப்புத் திட்டத்தினைப் பலர் பலவிதமாகத் தாக்கினர். இறுதியில் ரூஸ்வெல்ட் பத்து மில்லியன்வாக்குகள் கூடுதலாகப் பெற்று மாபெரும் வெற்றியடைந்தார். உடனே தலைமை நீதி மன்றத்தின் எதிர்ப்பைத் தவிர்த்து அதனை இணங்கச் செய்வதற்கான வழிமுறைகளை வகுக்கலானார்.

தலைமை நீதிமன்றத்தில இருந்த ஒன்பது நீதிபதிகளில், நான்கு பேர் தீவிரமான பழைமைவாதிகள் ; மூவர் தாராளக் கொள்கையினர். ஒருவர் நடுநிலைமையானவர் ; தலைமை நீதிபதியான ஹியூஜஸ் (Hughes) தாராளக் கொள்கையினர். இவர்களில் ஆறு நீதிபதிகளது வயது எழுபதுக்கும் மேலாக இருந்தது. அவர்கள் நீதிபதிகளாகப் பணியாற்ற வயது காரணமாக ஆற்றல் அற்றவர்களென ரூஸ்வெல்ட் கூறினர். மேலும் தலைமை நீதிமன்றமானது அரசியலமைப்புக்கு முரணாகக் கொள்கைகளை வகுக்கும் ஓர் அங்கமாக மாறிவிட்டது என ரூஸ்வெல்ட் குற்றஞ்சாட்டினர். 1937ஆம் ஆண்டு, பிப்ரவரி, 5ஆம் நாள், ரூஸ்வெல்ட் காங்கிரஸிற்கு ஒரு திட்டத்தைப் பரிந்துரை செய்தார். அத் திட்டத்தில் ஓய்வு பெறுவதற்கான வயதை அடைந்த பிறகும் பதவியிலிருந்து விலகாது தொடர்ந்து பதவியிலிருக்கும் வயதான நீதிபதிகளின் எண்ணிக்கைக்கு ஈடாக மேலும் புதிய நீதிபதிகள் கூட்டாட்சி நீதிமன்றங்களில் நியமிக்கப்படவேண்டும் என்றும் சொல்லப்பட்டது. அப்பொழுது தலைமை நீதிமன்றத்தி லிருந்த நீதிபதிகளின் ஓய்வுபெறும் வயது எழுபதாக வரையறுக்கப்பட்டது. எழுபது வயதுக்கும் மேற்பட்ட ஆறு நீதிபதிகள் பதவியிலிருந்து விலகாது தொடர்ந்து இருந்தமையால்,

அவர்களுக்கு இணையாக ரூஸ்வெல்ட் ஆறு நீதிபதிகளை நியமனம் செய்ய உரிமை பெற்றார். இதற்கு "நீதிமன்ற இட நிரப்புத் திட்டம்" (Court Packing Plan) என்ற பெயர் தரப்பட்டது. நீதிமன்ற இட நிரப்புச் சட்டவரைவுசெனட்சபையில்கடுமையாக விவாதிக்கப்பட்டது. ரூஸ்வெல்ட், செனட் சபையிலிருந்த பழைமைசார்ந்த மக்களாட்சிக் கட்சியினரைத் தன்வயப்படுத்த முடியாது போனார். அதனால் இச் சட்ட வரைவு, செனட் சபையில் தோற்கடிக்கப்பட்டது (70-22).

நீதி மன்ற இடநிரப்புச் சட்டவரைவு தோற்கடிக்கப்பட்ட போதிலும், இறுதியில் ரூஸ்வெல்ட் வெற்றி பெற்றார் எனலாம். அவரது இரண்டாவது பதவிக் காலத்தில் தலைமை நீதிமன்றம் தனது போக்கை மாற்றிக் கொண்டது. புதிய சீரமைப்புத் திட்டத்தின் கீழ் இயற்றப்பட்டச் சட்டங்களை ஏற்றுக் கொள்ளலாயினர். 1941ஆம் ஆண்டளவில் ரூஸ்வெல்ட் தமக்கு ஆதரவு தரக் கூடிய வகையில் தலைமை நீதிமன்றத்திலிருந்த ஒன்பது நீதிபதிகளில் ஏழு நீதிபதிகளை நியமித்திருந்தார். அதே ஆண்டில் தலைமை நீதிபதி சார்லஸ் இவான்ஸ் ஹியூஜஸ் (Charles Evans Hughes) ஓய்வு பெற்றபோது, ஹர்லான் ஸ்டோன் (Harlan Stone) என்பவரை அப் பதவிக்கு ரூஸ்வெல்ட் நியமித்தார். "நீதிமன்ற இட நிரப்புத் திட்டம்" நாட்டில் அதிகக் குழப்பத்தையும், மனக்காழ்ப்பினையும் உண்டு பண்ணிய போதிலும், இறுதியில் சில நன்மைகளையும் புரிந்திருந்தது. அமெரிக்கக் குடியாட்சியின் தத்துவங்களைத் தலைமை நீதிமன்றம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற நியதி உருவாயிற்று. அமெரிக்க அரசிய லமைப்பின் இயங்குமுறையையும் சரிவர மக்கள் புரிந்து கொள்ள ஒரு வாய்ப்பு ஏற்பட்டது. இவற்றின் விளைவாக இன்றைக்கு அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைமைநீதிமன்ற முற்போக்குச் கொள்கையினரின் கோட்டையாகத் திகழ்கிறது.

**புதிய சீரமைப்புத் திட்டத்தின் சாதனைகள்**

பிராங்க்ளின் ரூஸ்வெல்ட் குடியரசுத்தலைவராகப் பணிபுரிந்த காலம், அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றிலேயே கருத்து வேறு பாடு மிகுந்த காலமாகும். நாட்டின் தலைவராக மக்களின் அன்பால் போற்றப்பட்டது போலவே கடுமையாகத் தூற்றப்பட்டார். தங்களது தலைவர் தவறுகளைச் செய்ய மாட்டார் என்று ரூஸ் வெல்ட்டின் ஆதரவாளர்கள் நம்பியது போல, அவரது பகைவர்கள் அமெரிக்காவின் வாழ்க்கை மரபுகளையெல்லாம் ரூஸ்வெல்ட் தகர்த் தெறிகின்றார் எனக் குற்றஞ் சாட்டினர். ரூஸ்வெல்ட்டின் திட்டங் களைப் பாராட்டுவது ஓரளவு சரியே. அவர் மீதான சில குற்றச் சாட்டுகளும் ஓரளவு சரியே. இரு தரப்பினரும் ஆர்வ மிகுதியால் தீவிர கருத்துக்களைக் கொண்டிருந்தனர்.

தொடக்கக் காலத்தில், பொருளாதாரத்தில் நிலவிய பெருமந்த நிலையினை மாற்றியமைக்கப் பல திட்டங்கள் தீட்டப்பட்டன. பாங்குகளின் அமைப்பு, வேளாண்மை, தொழில் துறை ஆகியவற்றில் இடர்க் காப்புதவியாகவும், மீட்புநிலை வழிமுறைகளாகவும் புதிய சீரமைப்புத் திட்டத்தில் உருவாக்கப்பட்ட திட்டங்கள் போற்றுதற் குரியனவாம். வேலையற்றோர்க்குக் காப்பீடு செய்தல், வயது முதிர்ந் தோர்க்கு ஓய்வுக்கால ஊதியம் அளித்தல் போன்ற சமூக நலன் பாதுகாப்புச் சட்டங்கள் குறிப்பிடத் தக்கவை என்பதை அனைவரும் ஏற்றுக்கொண்டனர்.

பல்லாயிரக்கணக்கான மக்களால் தொடர்ந்து நான்கு முறை குடியரசுத்தலைவர் பதவிக்கு ரூஸ்வெல்ட் தேர்ந்தெடுக்கப்பட்டா ரென்றால், அமெரிக்க வரலாற்றில் அதற்கு முன்பிருந்த நிருவாகத் தினர் செய்யாத வகையில் பொதுமக்களுக்குப் புதிய சீரமைப்புத் திட்டத்தின் வழியாக ஆற்றியிருந்த பணியே அதற்கு அடிப்படைக் காரணமாகும் என்பதனை எவரும் மறுக்க முடியாது. பொதுமக்கள் சமூக நலன் பாதுகாப்புத்திட்டத்தையும், இயற்கை வளப் பாதுகாப்புத் திட்டத்தையும், வேளாண்மையில் பெற்ற பலன்களையும், தொழிற் சங்கங்கள் அமைக்க உரிமை பெற்றதையும், கூட்டுப்பேச்சு முறை யினையும், கூடுதலான ஊதியத்தையும், குறிப்பிட்ட அளவான வேலை நேரத்தையும், பொதுநலப் பணித் திட்டங்களையும் மகிழ்வோடு சுட்டிக் காட்டினர். அரசியலமைப்பின் முகப்புரையில் குறிப்பிட்டுள்ளபடி மக்களின் ஆக்க நலனுக்காகவே அத் திட்டங்கள் உருவா யின. இல்லாவிடில் நாட்டில் தீவிரவாத உணர்ச்சி பெருக் கெடுத்தோடியிருக்கும். சுருங்கச் சொன்னால் அமெரிக்க முதலாளித்துவ முறையானது, தற்கொலை செய்து கொள்ளாதபடி புதிய சீரமைப்புத் திட்டம் தடுத்து நிறுத்திற்று. இச்சீரமைப்புத் திட்டத்தைச் செயலாக்கக் கூட்டாட்சி அரசு பலவகையான செயல் துணை அமைப்புகளை உருவாக்கிற்று. கணக்கற்ற வகையில் கழகங்களும், குழுக்களும், நிருவாகங்களும் நாடு முழுவதிலும் இயங்கின. ஆனால், அவை என்றுமே கூட்டாட்சி அரசின் கட்டுப் பாட்டை மீறியதில்லை. கூட்டாட்சி அரசின் ஆட்சித்துறையும் செவ்வையாகக் காங்கிரஸால் மேற்பார்வையிடப்பட்டு வருகிறது. காங்கிரஸ் ஆட்சித் துறையின் குறை குற்றங்களை எடுத்துரைத்துக் கண்டிக்க உரிமை பெற்றுள்ளது.

## மதிப்பீடு

புதிய சீரமைப்புத் திட்டமானது தனது உற்பத்தியைப் பெருக்கி எல்லோருக்கும் வேலை வாய்ப்பை அளிக்க வேண்டும் என்ற தனது அடிப்படை நோக்கத்தில் வெற்றி பெறவில்லை என்று சொல்லலாம். 1940ஆம் ஆண்டளவில், அமெரிக்காவில் எட்டு மில்லியன் மக்கள்

வேலையில்லாதிருந்தனர். ஆறு ஆண்டுகளாகக் கணக்கற்ற முறையில் நிதி செலவழிக்கப்பட்டும் இந் நிலை நீடித்தது. எனவே, புதிய சீரமைப்புத் திட்டம் என்ற மருந்து, நோயாளியை முற்றிலும் குணப்படுத்தத் தவறியது எனலாம். மக்களது தேவைக்கான பொருள்களை உற்பத்தி செய்வதில் பெரும் முன்னேற்றம் காணப்பட்ட போதிலும், புதிய தொழில்களைத் தொடங்க முதலீடு செய்ய மக்கள் முன் வரவில்லை. மக்களது சேமிப்பை மீண்டும் தொழில் துறையில் முதலீடு செய்வதை முன்பு தனிப்பட்ட முதலீட்டாளர்கள் செய்து வந்தனர். அப் பணியை இப்போது அரசு மேற்கொண்டிருந்தது. 1937ஆம் ஆண்டு அரசு தனது செலவுத் தொகையினைக் குறைத்தபோது, நாட்டில் உடனே விலைமந்தம் (Recession) ஏற்பட்டது. அமெரிக்க மக்களது முன்னேற்றத்திற்குக் காரணமாயிருந்த தனிப்பட்டவர்களது தனி முயற்சியினைப் புதிய சீரமைப்புத் திட்டம் ஊக்கமிழக்கச் செய்தது.

புதிய சீரமைப்புத் திட்டம், செல்வவளத்தினைப் பழைய நிலைக்கு மீட்காவிட்டாலும், மக்களுடைய நலனில் ஒரு புதிய உணர்ச்சியை ஊட்டிற்று. முன்னேற்ற நோக்குடனும், துணிச்சலுடனும் சீரமைப்புத் திட்டங்கள் தீட்டப்பட்டுச் செயலாக்கப்பட்டமையால் மக்களது ஒழுங்குணர்வு மீட்கப்பட்டது. பட்டினியால் வாடிய மக்களுக்கு அரசு வேலை தரும் என்று உறுதியாகக் கூறியமையால் மக்கள் இழந்த நம்பிக்கையை மீண்டும் பெற்றனர். பல பொதுப்பணித் திட்டங்களால் அமெரிக்க நாட்டின் மரபு காக்கப்பட்டதோடு உயர்த்தப்பட்டது. 1932—1948 ஆகிய ஆண்டுகளுக்கிடையே நடைபெற்ற தேர்தல்களின் முடிவுகளை நோக்கினால், அமெரிக்க மக்கள் தனியரசர் முயற்சிக்கும் சமதருமக் கொள்கைக்கும் இடைப்பட்ட இரு இயல்புகள் இணைந்த பொருளாதாரத்தையே விரும்பினர் என்பதை அறியலாம். குடியரசுக் கட்சியினரும் தொடர்ந்து நடைபெற்ற தேர்தல்களில் புதிய சீரமைப்புத் திட்டத்தினை ஏற்றுக் கொண்டமையால் அஃது அமெரிக்க முறையில் ஒரு நிலையான இணைப்பாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. புதிய சீரமைப்புத் திட்டம், கூட்டாட்சி அரசினை ஒரு புதிய உருவத்தில் மக்கள் முன் நிறுத்திக் காட்டிற்று. அடக்குமுறையினைப் பின்பற்றித் தடைகளை மக்கள்மீது விதிப்பதற்காகவே அரசு உள்ளது என்ற எண்ணம் மாறலாயிற்று. குடியாட்சி முறையில் எழும் சிக்கல்களை விரைந்து தீர்க்கவும், மக்களது நன்மைக்காக ஆக்க நல வேலைகளில் ஈடுபடவும் முடியும் என்பதனைப் புதிய சீரமைப்புத் திட்டம் நிரூபித்தது.

# 28. அமெரிக்க ஐக்கிய நாடும் இரண்டாவது உலகப் போரும்

பிராங்கிளின் ரூஸ்வெல்ட் உள்நாட்டுத் திட்டங்களில் ஆழ்ந்திருந்தபோது, வெளி நாடுகளில் ஏற்பட்ட சில சூழ்நிலைகளின் காரணமாக, அவரது கவனம் திடீரென வெளிநாட்டு நிகழ்ச்சிகள் மீது திருப்பப்பட்டது. அவரது இரண்டாவது பதவிக் காலம் முடிவதற்குள்ளாக உலக நாடுகளின் உறவில் ஏற்பட்ட சிக்கல்களால் வெளிநாட்டுறவில் உடனடியாக அதிகக் கவனம் செலுத்த நேரிட்டது இரண்டு உலகப்போர்களுக்கிடையே ஐரோப்பாவில் ஜெர்மனியிலும், இத்தாலியிலும் சர்வாதிபத்திய அரசுகள் உருவெடுத்தன, உள்நாட்டில் நிலவிய குழப்பங்களினின்று மக்கள் கவனத்தை மாற்றுவதற்காக ஹிட்லரும், முஸோலினியும் இனம் மற்றும் சமய அடிப்படையில் பிற மக்களை அச்சுறுத்தலாயினர். மேலும் அவர்கள் வெளிநாட்டவர்கள்மீது வெறுப்புணர்ச்சி கொள்ளச் சொல்லி தமது மக்களைத் தூண்டிவிட்டனர். இருவரும் வலிய சண்டைக்குப் போகும் தன்மை வாய்ந்த வெளிநாட்டுக் கொள்கையை மேற்கொண்டனர். சக்திச்சமநிலையைக் காப்பதற்காக மட்டும் அமெரிக்கா இரண்டாவது உலகப் போரில் நுழையவில்லை. மேலைநாட்டு நாகரிகத்தில் தோன்றியிருந்துவந்த தொன்மையான மரபுகளைக் கெடுக்கும் நோக்குடைய நாஸிச, பாஸிசக் கொள்கைகளினின்றும் காத்திடவே அமெரிக்கா போரிலிறங்கிற்று.

1930ஆம் ஆண்டுக்குப் பிறகு ஐரோப்பா, திகைக்க வைக்கும் வேகத்தில் அழிவுப்பாதையை நோக்கிச் சென்றது. அதன் தொடக்கமாக ஜப்பான், மஞ்சூரியாவைக் கைப்பற்றியபோது சர்வதேச சங்கம் அதனைத் தடை செய்யத் தவறிற்று. 1935ஆம் ஆண்டு முஸோலினி எதியோப்பியாவைத் தாக்கினர். வெர்ஸேல்ஸ் உடன்படிக்கை ஜெர்மானியரது இராணுவத்தின்மீது விதித்திருந்த

தடைகளைத் தகர்த்தெறியப் போவதாக ஹிட்லர் அறிவித்தார். 1936ஆம் ஆண்டு ஜெர்மனியும், ஜப்பானும் நட்புக் கொண்டு பெர்லின்—டோக்கியோ அச்சினை (Berlin-Tokyo Axis) உருவாக்கினர். அடுத்த ஆண்டு அந் நாடுகளோடு இத்தாலியும் நட்புரிமை கொண்டது. அதன்பயனாக ரோம் - பெர்லின் - டோக்கியோ அச்சு (Rome-Berlin-Tokyo Axis) உருவாயிற்று. 1938ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் ஹிட்லர் ஆஸ்த்திரியாவையும், 1939ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் போலண்டையும் கைப்பற்றினர். போலந்து நாட்டின் உரிமையைக் காக்கும் பொறுப்பு பிரிட்டனையும், பிரான்சையும் சார்ந்திருந்தமையால், இவ்விரு நாடுகளும் ஹிட்லரை எதிர்த்துப் போரிடலாயின.

### நடுநிலைமைச் சட்டங்கள்

அடால்ப் ஹிட்லர் ஜெர்மனியில் 1933-ல், பதவிக்கு வந்தது முதல் அமெரிக்க ஐக்கிய நாடு, ஐரோப்பிய நிகழ்ச்சிகளில், மீண்டும் பங்கு கொள்ளக் கூடாது என்பதற்காகக் காங்கிரஸ் தொடர்ந்து வழி முறைகளை ஆராய்ந்து வந்தது. 1935—1937 ஆகிய ஆண்டுகளுக்கிடையே காங்கிரஸ் மூன்று நடுநிலைமைச் சட்டங்களை இயற்றியது. உலகின் எப்பகுதியில் போர் நிகழ்ந்தாலும் அமெரிக்கா ஈடுபடாமல் நடுநிலைமை வகிக்க வேண்டுமென வற்புறுத்தப்பட்டது. 1937-ல் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி, போர்க்கருவிகளின் விற்பனை தடை செய்யப்பட்டது. மேலும் அமெரிக்கா போரில் ஈடுபட்டுள்ள எந்நாட்டுக்கும் கடன் வழங்கக் கூடாது என்றும், போர்புரியும் நாடுகளின் கப்பல்களில் அமெரிக்க மக்கள் பயணஞ் செய்வது சட்டத்துக்கு முரணானது என்றும், போர்க்கருவிகளல்லாத பிற சரக்குகளைப் பணம் பெற்றக் கொண்ட பின்னரே விற்பனை செய்ய வேண்டுமென்றும், அச் சரக்குகளை வாங்கும் நாடுகள் தத்தம் கப்பல்களிலேயே அவற்றை ஏற்றிச்செல்ல வேண்டுமென்றும் அச் சட்டத்தில் குறிப்பிட்டிருந்தது. பிரிட்டனே, பிரான்சோ போரில் ஈடுபட்டால் அந்நாடுகளுக்கு அமெரிக்காவின் உதவி கிட்டாதென்பதை இச் சட்டம் உணர்த்திற்று. ஆனல், இதன் விளைவாக ஹிட்லர் ஊக்கம் பெற்று, இரண்டாவது உலகப்போரை விரைவில் தொடங்கினர்.

இரண்டாவது உலகப்போர் தொடங்குவதற்கு இரண்டு ஆண்டுகள் முன்பிலிருந்தே ரூஸ்வெல்ட்டும், வெளியுறவுத் துறை செயலாளரான ஹல்லும் போரைத் தவிர்ப்பதற்கான வழி முறைகளை ஆராய்ந்து வந்தனர். நடுநிலைமைச் சட்டங்கள் அவர்களது கரங்களைக் கட்டிப் போட்டமையால் போர்வெறியைத் தணிக்க முடியாத நிலையிலிருந்தனர். மக்களிடத்துத் தனித்திருத்தல் எண்ணமும் வேரூன்றி

இருந்தது. பிரிட்டனுக்கு ஆதரவு தந்து, அதன் வலிமையைப் பெருக்க வேண்டும் என்று ரூஸ்வெல்ட் நினைத்தார். ஆனால் நடுநிலைமைச்சட்டங்கள் அவரது எண்ணத்தைத் தடைசெய்தன ஆனால் போர் தொடங்கியதும் அமெரிக்க மக்களது எண்ணம் மாறலாயிற்று. தொடக்கத்திலிருந்தே அமெரிக்க மக்கள் நேசநாடுகளை ஆதரிக்கலாயினர். இம் முறை முதல்உலகப்போரைக் காட்டிலும் மேம்பட்ட நிலையில் அமெரிக்க மக்கள் நேசநாடுகளின் மீது இரக்கங்கொண்டனர். ஏனெனில், ஹிட்லரது நாஸிஸக் கொள்கைகள் அமெரிக்க மக்கள் அசைக்க முடியாத அளவுக்கு நம்பிக்கை கொண்டிருந்த கொள்கைகளுக்கு முற்றிலும் எதிர்மறையாக இருந்தமையேயாகும். 1939ஆம் ஆண்டு, நவம்பர் திங்கள் காங்கிரஸ் ஒரு புதிய நடுநிலைமைச் சட்டத்தை இயற்றியது. அச் சட்டம் போரில் ஈடுபட்டுள்ள நாடுகளுக்குப் பணம் கொடுத்துப் போர்க் கருவிகளை வாங்கிச்செல்ல இசைவு தந்தது. ஆனால், அமெரிக்க வாணிகக் கப்பல்கள் போர் நடக்கும் பகுதிகளுக்குச் செல்லக் கூடாது எனத் தடை விதிக்கப்பட்டது. இவ்வகையில் பிரிட்டனும், பிரான்சும் போதிய அளவு பணமும், கப்பலும் உள்ளவரை அமெரிக்க ஐக்கிய நாட்டிடமிருந்து போர்க்கருவிகளை வாங்கி எடுத்துச் செல்ல முடிந்தது.

ஊழிப் பெரு வெள்ளம் போன்று திடீரெனப் பல நிகழ்ச்சிகள் ஐரோப்பாவில் 1940ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் நிகழ்ந்தன. அவற்றைக் கண்ட அமெரிக்கர் பெரும் அதிர்ச்சிக்குள்ளாயினர். அது போன்ற நிகழ்ச்சிகளை அவர்கள் அதற்குமுன் வரலாற்றில் கண்டதில்லை. ஹிட்லர் மின்னல் வேகத்தில் டென்மார்க்கு, நார்வே ஆகிய நாடுகளைக் கைப்பற்றினர். பின்னர் ஹாலண்டு, பெல்ஜியம் ஆகிய நாடுகளில் தமது ஆதிக்கத்தை அவர் நிலைநாட்டினர். இறுதியில் ஹிட்லர், பிரெஞ்சு மக்களையும் தோற்கடித்து அடிபணிய வைத்தார். பிரிட்டன் மட்டும் தனித்து நின்றது. இவ்வகையில் ஹிட்லர் மேற்கு ஐரோப்பா முழுவதையும் தமதாக்கிக் கொண்டார். நாஸி வீரர்கள் நேச நாடுகளைக் கைப்பற்றியதோடல்லாமல், அங்கு வாழ்ந்த ஒன்றுமறியா ஆண்களையும், பெண்களையும், குழந்தைகளையும் ஆயிரக்கணக்கில் விமானங்களினின்றும், சிறைப்படுத்தப்பட்டோரைச் சிறைச் சாலைகளிலும், முன்னறிவிப்பில்லாத போர்க்களங்களிலும், மிருகத் தனமான முறையில் கொன்று குவித்தனர். இவற்றிற்கும் மேலாக ஹிட்லரும் முஸோலினியும் அடிக்கடி, உலகிலுள்ள குடியாட்சி சார்ந்த நாடுகளனைத்தும் அவ்வகையில்தான் கைப்பற்றப்படுமெனக் கூறி வந்தனர். அமெரிக்க மக்களது மனம் முற்றிலும் மாறிற்று. போருக்குமுன், அமெரிக்க மக்கள் விருப்பு வெறுப்பற்று இருந்தனர்; ஹிட்லரது கொடுஞ்செயல்களைக் கண்டபின் ஹிட்லரின் எதிரிகளாயினர்.

"அமெரிக்கா இப்போரினின்று தப்பித்துவிடும் என்று எண்ண வேண்டாம்; பகைவர்கள் அமெரிக்கக் கண்டத்தைத் தாக்காதிருக்க இறைவனை வழிபடுவோம்" என்று ரூஸ்வெல்ட் மென்மையாக மக்களிடையே எதிர்ப்பு உணர்ச்சியைத் தூண்டிவிடாமல் சொன்னார். 1940ஆம் ஆண்டளவில் மக்கள் கிரேட் பிரிட்டன்மீது இரக்கம் கொண்டனர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் தரைப்படை, கப்பற்படை, விமானப்படை ஆகியவற்றை வலுப்படுத்த காங்கிரஸ் ஏராளமான நிதியினை ஒதுக்கியது. முதல் முறையாக அமைதிக் காலத்தில் அமெரிக்காவில் இராணுவ சேவை கட்டாயமாக்கப்பட்டது. இதனை யொட்டி, நடுநிலைமைச் சட்டங்கள் சிறிதுசிறிதாகத் தளர்த்தப் பட்டன. போர்க்கருவிகளின் விற்பனைமீதான தடை நீக்கப்பட்டது, பிரான்ஸின் வீழ்ச்சிக்குப் பிறகு போர்த் துறை (War Department) கூடுதலாக இருந்த துப்பாக்கிகளையும், விமானங்களையும் பிரிட்டனுக்கு விற்க முடிவு செய்தது. மேலும் மற்றொரு ஏற்பாட்டின்படி அமெரிக்கா, பிரிட்டனுக்கு ஐம்பது நாசகாரிக் கப்பல்களைத் தந்து தவியது. இதற்கு மாறாக, பிரிட்டன் அட்லாண்டிக் பெருங்கடலிலுள்ள தனது குடியேற்றங்களில் விமானத் தளங்களை அமைக்க அமெரிக்காவுக்கு இசைவு தந்தது. நியூபவுண்டுலாந்திலிருந்து பிரிட்டிஷ் கியானா வரையிலும் வெவ்வேறு இடங்களில் அமெரிக்கா விமானத் தளங்களையும், கப்பல் தளங்களையும் அமைத்தது. மேலும் அமெரிக்கக் கண்டங்களைப் பாதுகாப்பதற்காக அண்மையிலுள்ள பிற அமெரிக்க நாடுகளோடு ரூஸ்வெல்ட் நட்புறவு கொள்ளலானார்.

மக்களாட்சிக் கட்சியினர் அரசியல் மரபுக்கு முரணாக, மூன்றாவது முறை ரூஸ்வெல்ட்டை, 1940 ஆம் ஆண்டுத் தேர்தலில், குடியரசுத் தலைவர் பதவிக்கு வேட்பாளராக நியமித்தனர். குடியரசுக் கட்சியின் சார்பாக வெண்டல் வில்க்கீ (Wendell L. Willkie) என்பவர் ரூஸ்வெல்ட்டை எதிர்த்துப் போட்டியிட்டார். வெண்டல் வில்க்கீ அரசியலுக்குப் புதிதானவர். அப்பொழுதுதான் மக்களாட்சிக் கட்சியினின்று குடியரசுக்கட்சிக்குக் கட்சிமாறியிருந்தார். குடியரசுக் கட்சியினர், புதிய சீரமைப்புத் திட்டத்தை ஊதாரித்தன மானதென்றும் வல்லாட்சி தன்மையது என்றும், அதிகார இன ஆட்சித்தொடர்பானதென்றும் குறை கூறினர். இருந்தபோதிலும் குடியரசுக்கட்சியினர் சீர்திருத்தத் திட்டங்களைப் பாராட்டினர். மக்களாட்சிக் கட்சியினர் புதிய சீரமைப்புத் திட்டத்தின் சாதனைகளை எடுத்துக் கூறி, தேர்தலில் மக்களின் ஆதரவைக் கோரினர். வெளி நாட்டுறவைப் பொறுத்தமட்டிலும் இரு கட்சியினரும் அமெரிக் காவைப் போரில் ஈடுபடுத்தாது காப்பதையே முக்கிய குறிக் கோளாகக் கொண்டிருந்தனர். இறுதியில், ரூஸ்வெல்ட் வெற்றி பெற்றார். போரின் போது அனுபவம் மிகுந்த ஒருவரை நாட்டின் தலை

வராகக் கொள்வதே சிறந்தது என அமெரிக்க மக்கள் கருதியமை யால் ரூஸ்வெல்ட் வெற்றி பெற்ருர். மேலும் ரூஸ்வெல்ட் தோற்ருல் புதிய சீரமைப்புத்திட்டங்களும் கைவிடப்படும் என்று மக்களும் அஞ்சினர்.

ரூஸ்வெல்ட் தமது வெற்றியை, பிரிட்டனுக்கு எல்லா வகையான உதவிகளையும் அளிக்க வேண்டும் என்ற கருத்தினுக்கு மக்கள் அளித்த கட்டளை உரிமையாகக் கொண்டார். 1940ஆம் ஆண்டு, டிசம்பர் 29ஆம் நாள் ரூஸ்வெல்ட் ஒரு சொற்பொழிவாற்றும்போது, "அச்சு நாடுகள் இப் போரில் வெற்றி பெற முடியாது" என்றும், "மக்களாட்சி யில் நம்பிக்கையுடைய நாடுகளுக்கெல்லாம் அமெரிக்க ஐக்கிய நாடு ஒரு வெடிமருந்துக் கிடங்காக உதவி புரிய வேண்டும்", என்றும் சொன்ஞர். அத் திட்டத்தைச் செயலாக்கப் பணம் தந்து பொருள் வாங்கும் முறை நடுநிலைமைச் சட்டங்களினின்று நீக்கப்பட வேண்டும். ஏனெனில் பிரிட்டனிடத்துப் போதிய பணமும், கப்பல்களும் இல்லை. ஆனல், போரினைச் சமாளிக்க ஏராளமான போர்க்கருவிகள் தேவைப் பட்டன. பிரிட்டனின் பணமுடையைத் தீர்ப்பதற்காக ரூஸ்வெல்ட் ஈட்டுக்கடன்முறைத்திட்டத்தை (Lend-Lease) உருவாக்கினர். அதன்படி பிரிட்டனுக்குப் பணமாகத் தந்துதவுவதைவிட பொரு ளாகத் தந்துதவலாம் என்றும், போருக்குப் பிறகு பிரிட்டன் பொருளாகவே திருப்பித் தரலாம் என்றும் ரூஸ்வெல்ட் கூறினர். காங்கிரஸ், உடனே ஈட்டுக்கடன்சட்டம் (Lend-Lease Act) ஒன்றை இயற்றியது. அதன்படி போர்க்கருவிகள் செய்வதற்காக ஏழு மில்லியன் டாலர் ஒதுக்கப்பட்டது. அச்சுநாடுகளுக்கு எதிராகப் போரிடும் நாடுகள் அனைத்திற்கும் இலவசமாகப் போர்க்கருவிகள் வழங்கப்பட்டன. இதனல் முப்பத்தைந்து நாடுகள் பயன்பெற்றன. நாஸிஸ்டுகளையும், பாஸிஸ்டுகளையும் எதிர்த்துப்போராடும் நாடுக ளெல்லாம் அமெரிக்கக் குடியாட்சியையும், தத்தம் நாட்டையும் பாது காக்கப் போராடுகின்றன என அமெரிக்க அரசு கருதியது. சில ஆண்டுகளுக்கு முன்பு இயற்றப்பட்ட நடுநிலைமைச் சட்டங்களுக்கு முற்றிலும் மாருக ஈட்டுக் கடன் சட்டம் அமைந்திருந்தது.

### அட்லாண்டிக் சாசனம்

போரின் குறிக்கோளை, அமெரிக்க ஐக்கிய நாடும் பிரிட்டனுடன் சேர்ந்து, கூட்டறிக்கையில் தெளிவுபட வரையறுத்தன. இதனைக் கண்ட நேசநாடுகள் பிரிட்டனேடு அமெரிக்கா கூட்டுச் சேர்ந்துவிட்டது எனக் குறை கூறின. 1941ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் அமெரிக்கக் குடியரசுத்தலைவர் ரூஸ்வெல்ட்டும், பிரிட்டிஷ் தலைமை அமைச்சர் சர்ச்சிலும் பசிபிக் பெருங்கடலில் ஓர் அமெரிக்கப் போர்க்

கப்பலில் கூடிப் பேசினர். அப் பேச்சின் இறுதியில் ஒரு சிறப்பு மிக்க சாசனத்தைத் தீட்டினர். அச் சாசனம் அட்லாண்டிக் சாசனம் என்று பெயர் பெற்றது. கிரேட் பிரிட்டனும், அமெரிக்க ஐக்கிய நாடும் தமக்கென நாடுகளைக் கைப்பற்ற எண்ணங்கிடையாது என்றும், அந்தந்தப் பகுதியில் வாழும் மக்களின் விருப்பத்திற்கு மாருகப் பிற நாடுகளின் ஆட்சி நிறுவப்படாது என்றும், மக்கள் அவரவர் விருப்பப்படி தங்களுக்கேற்ற அரசுகளை அமைத்துக் கொள்ளலா மென்றும் அச் சானத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. மேலும் வாணிகத்திற்காகவும், சச்சாப்பொருள்களைப் பெறுவதற்காகவும் எல்லா நாடுகளும் திறந்துவிடப்படுமென்றும், பொருளாதார முன்னேற்றத்திற்காகவும் சமூகநலப் பாதுகாப்பிற்காகவும் உலக நாடுகளின் ஒத்துழைப்புக் கிட்டுமென்றும் அட்லாண்டிக் சாசனத்தில் உறுதியாகக் கூறப்பட்டது. உலகத்தில் அமைதியை நிலைநாட்டவும் மக்கள் பாதுகாப்போடு வாழவும், அச்சம், வறுமை ஆகியவற்றி லிருந்து விடுதலை பெறவும், பகை 'நாடுகளின் படைக்கலன்களைக் குறைக்கவும் இச் சாசனம் வேண்டிற்று.

### பேர்ல் ஹார்பர் தாக்குதல்

ஜப்பானிய அரசு, 1940ஆம் ஆண்டின் இறுதியில் அச்சு நாடு களான ஜெர்மனி, இத்தாலி ஆகியவற்றுடன் பத்தாண்டுக் கால ஒப்பந்தம் ஒன்றைச் செய்துகொண்டது. இதனுல் ஆசிய நாடான ஜப்பானின் கை, கிழக்கு ஆசியப்பகுதியில் ஓங்கிற்று. பசிபிக் பெருங்கடலில் போர் புரிய ஜப்பான் போதிய வலிமையற்று விருப்ப மில்லாது இருந்தது. ஐரோப்பாவில் போர் எங்நிலையில் முடியுமென சொல்லமுடியாதபடி நிகழ்ந்துவந்தது. போரினை விரைவில் நிறுத்தி விடலாம் என அமெரிக்க ஐக்கிய நாடு 1941ஆம் ஆண்டுக் கோடைக் காலம்வரை நினைத்துவந்தது. அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கும் தமக்கும் இடையேயுள்ள சிக்கல்களை அமைதியான முறையில் தீர்த்துக் கொள்ளலாம் என நினைப்பது போல ஜப்பான் பாசாங்கு செய்து வந்தது. ஆனுல், ஜப்பான், அமெரிக்காவுக்குச் சொந்தமான பிலிப்பைன்ஸ் உள்பட்டக் கிழக்கிந்தியத் தீவுகளைக் கைப்பற்ற முனைந்து, எளிதில் தென்கிழக்கு ஆசியா முழுவதிலும் தனது வெற்றிக்கொடியை நாட்டியது. டிசம்பர்த் திங்கள், 7ஆம் நாளன்று ஜப்பானிய விமானங்கள் முன்னறிவிப்பின்றித் திடீரெனப் பேர்ல் ஹார்பரைத் தாக்கின. அத் தாக்குதலால் பசிபிக்பெருங்கடல் கப்பற்படையைச் சார்ந்த எட்டுப் போர்க்கப்பல்கள் நாசமாயின.

அமெரிக்காவின் வரலாற்றில் முன்னங் கண்டிராதவகையில், பேர்ல்ஹார்பர் நிகழ்ச்சி, அமெரிக்க மக்களை ஒன்ருக்கியது. ரூஸ் வெல்டின் வெளிநாட்டுக் கொள்கையினை, எதிர்த்தவர்களெல்லாம்

தங்களது கருத்தினை மாற்றிக் கொண்டனர். காங்கிரஸ் உடனே ஜப்பான்மீது போர் தொடுத்தது. சிலநாள் கழித்து ஜெர்மனியும், இத்தாலியும் அமெரிக்காவின்மீது போர் தொடுத்தன. அமெரிக்கா டிசம்பர் 12ஆம் நாள் அச்சுநாடுகள்மீது போர் தொடுத்தது. போர் தொடுப்பதற்கானத் தீர்மானங்களெல்லாம் காங்கிரஸில் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன. ஐரோப்பிய நாடுகளிலும், ஆசிய நாடுகளிலும் நடைபெற்றுவந்த போரானது இப்பொழுது உலகப்போராக மாறிற்று.

**போர் முயற்சிகள்**

அமெரிக்க மக்கள் தமது அமைதிக்காலத் தொழில் துறை அமைப்புகளைப் போர்க்கருவிகளைச் செய்யும் மாபெரும் கிடங்கு களாக உடனே மாற்றி அமைத்தனர். போர்க்கருவிகளின் உற்பத்தியை மேற்பார்வையிட போர்உற்பத்திக் குழு (War Production Board) ஒன்று 1942 ஜனவரித் திங்களில் அமைக்கப்பட்டது. அதன் தலைவராக டொனல்டு நெல்சன் (Donald Nelson) என்பவர் பணியேற்றார். இக் குழு தேவைகளைக் கேட்டறிந்து அதற்கேற்றபடி உற்பத்தி பெருக்கத் திட்டங்களை வகுத்தது. இதற்காக வாணிகக் கூட்டு நிறுவன எதிர்ப்புச் சட்டங்களை நிறுத்தி வைத்தது. பல நிறுவனங்களில் உற்பத்தியை ஊக்குவிக்கவும், தொழிலாளர் வேலை நிறுத்தங்களைத் தடுக்கவும், தொழிலாளர் - தொழில் உரிமையாளர் குழுக்கள் அமைக்கப்பட்டன.

தொழிலாளர்களுக்கிடையேயான தகராறுகளைத் தீர்த்துவைக்க, குடியரசுத்தலைவரின் நேரடி மேற்பார்வையில், தேசிய போர் தொழிலாளர் நலக் குழு (National War Labour Board) ஒன்று அமைக்கப்பட்டது. இக் குழுவின் முயற்சியால், வேலைநிறுத்தங்கள் தவிர்க்கப்பட்டன ; பல சிக்கல்கள் எளியமுறையில் தீர்த்து வைக்கப்பட்டன. இதனால் போரின்போது வேலை நிறுத்தங்களால் இழக்கப்பட்ட நாள்கள் மொத்த வேலைசெய்த நாள்களில் ஒரு சதவீதத்திற்கும் குறைவாகவே இருந்தது.

குடியானவர்களும் மிகச் சிறப்பான முறையில் உற்பத்தியைப் பெருக்கியிருந்தனர்; போரினால் அவர்களுக்குப் போதிய இயந்திரங் களும் வேலை செய்ய ஆட்களும் தேவைப்பட்ட அளவிற்குக் கிடைக்க வில்லை. இருப்பினும் வேளாண்மை வரலாற்றில் முன்னர் கண்டறியாத அளவுக்குத் தானியங்கள் அறுவடை செய்யப்பட்டன ; இறைச்சி பதப்படுத்தப்பட்டது. செய்பொருள்களின் விலை உயர்ந்த தாலும் அமெரிக்கக் குடியானவர்கள் இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு, முதல் உலகப் போரின் பின் இருந்த நிலையை விட

நல்ல நிலையில் வாழ்ந்தனர். குடியானவர்களது அடைமானக் கடன் தொகை, 1920-ல் எட்டரை பில்லியனாக இருந்தது. 1945-ல் ஐந்தே கால் பில்லியனாகக் குறைந்தது.

போரின்போது உற்பத்தியைப் பெருக்குவதற்காகத் தொழில் நிறுவனங்கள் மேன்மேலும் பலருக்கு வேலை வாய்ப்பை அளித்தன. ஏராளமான பணம் ஊதியமாக அவர்களுக்கு வழங்கப்பட்டது. அப் பணத்தைக் கொண்டு செய்பொருள்களை வாங்க விரைந்தனர். ஆனால், செய்பொருள்களின் உற்பத்தி, போரினால் குறைவாக இருந்தது. செய்பொருள்களின் தேவைஅதிகமாகவே அவற்றின் விலையும் உயர்ந்தது. இதனால் நிலையான வருமானமுள்ள மக்கள் தொல்லைக்குள்ளாயினர். விலையுயர்வைக் கட்டுப்படுத்த விலை நிருவாக அலுவலகம் (Office of Price Administration) ஒன்றினைக் கூட்டாட்சி அரசு நிறுவியது. இந்த அலுவலகம் பொருள் பங்கீட்டு முறையைக் கட்டுப்படுத்தியது. உணவுப் பொருள்களின் பங்கீட்டு முறையைக் குடியரசுத்தலைவரே நேரடியாக உணவு நிருவாகத்தாரின் (Food Administration) உதவி கொண்டு மேற்பார்வையிட்டார்.

**படை திரட்டல்**

1940ஆம் ஆண்டுச் செப்டம்பரில் இயற்றப்பட்ட பயிற்சி, மற்றும் பணி சட்டப்படி (Selective Training and Service Act) 21 வயதுக்கு மேல் 35 வயதுக்குள்ளாக உள்ள ஆண்கள் அனைவரும் கட்டாயமாக இராணுவத்தில் பணியாற்ற ஆணை பிறப்பிக்கப்பட்டது. 1942-பிப்ரவரியில் இயற்றப்பட்ட கட்டாய இராணுவப் பணிச் சட்டம் வயது வரம்பினை 20 முதல் 44 என மாற்றியமைத்தது. சில திங்கள் கழித்து 45 வயதுக்கு மேல் 63 வயதுக்குள்ளாக உள்ள ஆண்கள், முக்கியமான தொழில் நிறுவனங்களில் தேவைப்பட்டால் பணி புரிய, தங்களது பெயரைப் பதிவுசெய்து கொள்ளச் சொல்லி ஒரு ஆணை பிறப்பிக்கப்பட்டது. 1942ஆம் ஆண்டு, ஜுன் திங்கள், கட்டாய இராணுவ சேவைக்கான வயது வரம்பு 18 ஆகக் குறைக்கப் பட்டது.

இரண்டாவது உலகப்போரின்போது பெண்களும் படையில் பணிபுரிய முன்வந்தமை குறிப்பிடத் தக்கதாகும். பெண்கள் படைப் பிரிவு (Women's Army Corps) இராணுவத்தின் ஒரு முறையான பிரிவாக இயங்கிற்று. கடற்படையில் பணியாற்ற நெருக்கடி காலப் பெண்கள் தொண்டர்படை ஒன்றும் (Women Accepted for Voluntary Emergency Service) உருவாயிற்று. கரையோரக் காவல் படையிலும் விமானப்படையிலும் பெண்கள் பிரிவு ஏற்படுத்தப்

பட்டது. மொத்தத்தில் 86,000 பெண்கள் பணிபுரிய முன்வந்தனர். அவர்களில் 55 சதவீதத்தினர் வெளிநாடுகளிலும் பணியாற்றினர்.

## பொது உரிமைகள்

முதல் உலகப்போரின்போது, அமெரிக்க மக்கள் சகிப்புத் தன்மையற்றவர்களாய்த் திகழ்ந்தனர். ஆனால், இரண்டாவது உலகப் போரின்போது அத் தீய குணம் அவர்களிடத்துக் காணப்படவில்லை மக்களது பொதுஉரிமைகளும் முன்பு தடைசெய்யப்பட்டது போல இப்பொழுது தடைசெய்யப்படவில்லை. இதற்குக் காரணம் தீவிரவாதிகள், புரட்சியாளர்கள் அனைவரும் அச்சு நாடுகளைத் தோற்கடிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் போரிட்டனர். போரின் குறிக்கோளையும், போரின் முன்னேற்றங்களையும் அவ்வப் போது மக்களுக்கு அறிவிக்கப் போர்ச் செய்தி அலுவலகம் (Office of War Information) ஒன்று இயங்கிற்று. செய்தித்தாள்கள் வானொலி, திரைப்படம், கல்விக்கூடங்கள் அனைத்தும் இப் பணியில் ஈடுபட்டன. ஜப்பானிய இனஞ்சார்ந்த அமெரிக்கக் குடிமக்களது உரிமைகள்மட்டும் தடைசெய்யப்பட்டன. அவர்கள் அமெரிக்கக் குடிமக்களாக இருந்தபோதிலும், கூட்டாட்சி அரசு அவர்களைத் தனியாக ஓர் இடத்தில் குடியேற்றிக் கண்காணிப்பில் வைத்திருந்தது. போர் முடிவுற்றதும் அவர்கள் அவரவர் வீடுகளுக்குத் திருப்பி அனுப்பப்பட்டனர்.

இரண்டாவது உலகப்போர முழுவதும், அமெரிக்க மக்கள் பிராங்கிளின் ரூஸ்வெல்ட்டின் தலைமைப்பதவியில் அசைக்க முடியாதநம்பிக்கை கொண்டிருந்தனர். 1944ஆம் ஆண்டில் குடியரசுத் தலைவர் பதவிக்கான தேர்தல் வந்துற்றபோது மக்களாட்சிக் கட்சியினர் நான்காவது முறையாக ரூஸ்வெல்ட்டைத் தங்களது வேட்பாளராகத் தேர்ந்தெடுத்தனர். துணைத்தலைவர் பதவிக்கு, மிஸௌரி மாநிலத்தைச் சார்ந்த ஹேரி ட்ரூமன் (Harry S. Truman) என்பவரை வேட்பாளராக நியமித்தனர். ரூஸ்வெல்ட்டினது புகழினைக் கண்ட குடியரசுக்கட்சியினர் போட்டியிட மனமில்லாது போட்டியிட்டனர். தங்களுக்கு வெற்றி கிட்டாது எனக் குடியரசுக் கட்சியினர் உறுதியாக உணர்ந்தனர். எனினும் நியூயார்க் ஆளுநராகப் பணியாற்றிய தாமஸ் டுவி (Thomas E. Dewey) என்பவரைக் குடியரசுத்தலைவர் பதவிக்கு வேட்பாளராக நியமித்தனர். போரின்போது நாட்டின் தலைவரை மாற்றக் கூடாது என மக்கள் நினைத்து, ரூஸ்வெல்ட்டையே நான்காவது முறையாகக் குடியரசுத்தலைவர் பதவிக்குத் தேர்ந்தெடுத்தனர். தேர்தல் குழுவில் ரூஸ்வெல்ட்டுக்கு 432 வாக்குகளும், டுவிக்கு 99 வாக்கு

களும் மட்டுமே கிடைத்தன. ஆனால், ரூஸ்வெல்ட் 1945ஆம் ஆண்டு, எப்ரல் திங்கள், 12ஆம் நாள் காலமானார். துணைத்தலைவரான ஹேரி ட்ரூமன் குடியரசுத்தலைவர் பொறுப்பையேற்றார்.

1942ஆம் ஆண்டில், போரின் நிலைமை நேச நாடுகளுக்குப் பெருங்கவலையை அளித்தது. 1939 முதல், 1941 வரை இங்கிலாந்து தனித்து வீரமுடன் நாஸித் தாக்குதல்களைத் சமாளித்தது. தொடர்ந்து விமானத் தாக்குதல்களால் பிரிட்டன் வலிமை இழக்கலா யிற்று. ருஷ்யாமீது படையெடுத்துச் சென்ற நாஸிகள் மாஸ்கோ வரை முன்னேறியிருந்தனர் ; ஸ்டாலின்கிராடிலுள்ள எண்ணெய்க் கிணறுகளைக் கைப்பற்ற முயற்சித்தனர். ஆப்ரிக்காவில். இத்தாலியர்களுடைய உதவியோடு ஜெர்மானிய வீரர்கள் தளபதி ரோமெல் (Rommel) தலைமையில் அலெக்ஸாண்டிரியாவையும், சூயெஸ் கால்வாயையும் கைப்பற்ற முயற்சித்தனர். எல்லா முனை களிலும் ஜெர்மானியருக்கே வெற்றிகிட்டும் நிலை காணப்பட்டது. அமெரிக்காவினின்று எல்லா நேசநாடுகளுக்கும் போர்க்கருவிகளும். பொருள்களும் வந்து குவிந்த வண்ணமிருந்தும் இந் நிலை நிலவியது.

வியத்தகு முறையில் போரின்போக்கில் மாற்றங்கள் நிகழ லாயின. ஜெர்மானியப் படைகளை ருஷ்யர்கள் ஸ்டாலின்கிரரடில் தோற்கடித்துச் சின்னபின்னமாக்கினர். பிரிட்டிஷ் தளபதி, மாண்ட்கோமெரி (Montgomery) ஜெர்மானிய இத்தாலியப் படை களை எல் அலாமின் (El Alamein) என்னுமிடத்தில் தோற்கடித்தார். இதற்கிடையே ஒரு பெரும் கப்பற்படை அமெரிக்கத் தளபதி டிவைட் ஐஸன்ஹோவர் (Dwight D. Eisenhower) தலைமையில் ஆப்பிரிக் காவின் மேற்குப் பகுதியில் சென்றிறங்கியது. கிழக்குப் பகுதியி லிருந்து வந்த மாண்டகோமெரியும் ஐஸன்ஹோவரும் இணைந்து அச்சு நாடுகளின் இருபத்தைந்து இலட்சம் வீரர்களைச் சிறைப்படுத் தினர். பசிபிக் பெருங்கடலிலும் கடற்படைத் தளபதி நிமிட்ஸ் (Nimitz) மிட்வே தீவுகளில் (Midway Islands) ஜப்பானியரை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றார்.

போர்நடைபெற்ற ஆண்டுகளில் நேச நாடுகளின் தலைவர்களும், படைத்தலைவர்களும் அடிக்கடி கூடிப் பேசினர். அக் கூட்டங்களில் போரின் குறிக்கோளினையும், இராணுவத் தாக்குதல் திட்டங்களையும் அவ்வப்போது வகுத்தனர். 1943ஆம் ஆண்டு டெஹ்ரானில் (Teheran) ஒரு சிறப்புமிக்கக் கூட்டம் நடைபெற்றது. அதில் ரூஸ்வெல்ட், சர்ச்சில், ஸ்டாலின் ஆகிய மூன்று பெருந்தலைவர்கள் கலந்துகொண்டனர். அக் கூட்டத்தில் நேசநாடுகளெல்லாம் எவ்வகையில் இணைந்து ஹிட்லரைத் தாக்குவதெனத் திட்டமிடப்

பட்டது. முப்பெருந்தலைவர்களும் மீண்டும் ருஷ்யாவில் யால்ட்டா (Yalta) என்னுமிடத்தில் 1935 பிப்ரவரியில் கூடிப் பேசினர். அக் கூட்டத்தில் ஜெர்மனியைக் கைப்பற்றிய பிறகு, இராணுவக் கூட்டாட்சி ஒன்றினை அங்கு நிறுவவேண்டுமென்றும், ஜப்பானுக் கெதிராக ருஷ்யா போர்தொடுக்க வேண்டுமென்றும், ஐக்கிய நாடுகள் சபை ஒன்றினை உருவாக்கப் பிரதிநிதிகளை சான்பிரான்ஸிஸ் கோவுக்கு அனுப்ப வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

**ஐரோப்பாவில் போர் முடிவடைதல்**

ஹிட்லரின் கொடுமையினின்று ஐரோப்பாவை விடுவிப்பதே அமெரிக்க ஐக்கிய நாட்டின் குறிக்கோளாக இருந்தது. ஜெர்மனி யின் உற்பத்தித்தலங்களும், போக்குவரத்து நிலையங்களும் தொடர்ந்து நேசநாடுகளின் விமானங்களால் தாக்கப்பட்டன. அதனால், ஜெர்மனியின் படை வலிமை நலிவுறலாயிற்று. தரைப் படையை நடத்திச் செல்லத் தக்க தருணத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்த அமெரிக்கத் தளபதி ஐஸன்ஹோவர், ஜூன் 6ஆம் நாள் (1934) பிரிட்டிஷ்-அமெரிக்கப் படைகளை நார்மண்டி கடற்கரையில் இறக்கினர். வானத்தின் மேலே நேச நாடு களின் விமானப்படைகள் பாதுகாப்பளிக்க ஐஸன்ஹோவர் படிப்படியாக முன்னேறினர். முதலில் பிரான்சையும், பெல்ஜி யத்தையும் விடுவித்தார்.

நேசநாடுகளின் படைகள் ஒன்றாக இணைந்து பெர்லினை நோக்கி முன்னேறலாயின. 1945 ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் அமெரிக்கத் துருப்புகள் ரைன் ஆற்றைக் கடந்தன. அதே நேரத்தில் ருஷ்யப் படைகள் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி முன்னேறி நாஸிக்களைத் தாக்கி வந்தன. ருஷ்யப் படைகளும், அமெரிக்கப் படைகளும் ஏப்ரல் 26 ஆம் நாள் ஒன்றாகச் சந்தித்தன. விமானத் தாக்குதல்களால் தகர்த்தெறியப்பட்ட பெர்லின், மே 2ஆம் நாள் சரணடைந்தது. ஹிட்லர் தற்கொலை செய்து கொண்டு இறந்து போகவே அவரது தளபதி டோனிட்ஸ் (Doenitz) சரணகதிப் பத்திரங்களில் கையெழுத் திட்டார். ஐரோப்பிய வெற்றி விழா (V-E Day-Viotory in Europe) மே 8ஆம் நாள் உலகெங்கிலும் கொண்டாடப்பட்டது.

**ஜப்பான் மீது அணுக்குண்டு**

ஐரோப்பாவில் போரை முடித்த பிறகு அமெரிக்கா, கிழக்கு ஆசியப் பகுதியில் தனது முழு கவனத்தையும் செலுத்தலாயிற்று. ஜப்பான் வன்முறையாகக் கைப்பற்றிய நாடுகளை மீட்பதில் அமெரிக்கா முனைந்தது. தளபதி மெக்கார்தர் (Mac Arthur) பிலிப்பைன்ஸ் தீவு களை 1945 பிப்ரவரியில் விடுவித்தார். டோக்கியோ வளைகுடாவில் ஜப்பானியக் கப்பற்படையினை அமெரிக்கக் கப்பற்படைத் தலைவர்

ஹேல்சி (Halsey) கடுமையாகத் தாக்கினர். அமெரிக்க விமானங்கள் ஜப்பானியநகரங்கள்மீது குண்டுமாரி பொழிந்தன. ஜப்பானிடமிருந்து ஐவோ ஜிம்மா (Iwo Jima), ஒக்கினவா (Okinawa) ஆகிய பசிபிக்பெருங்கடல் தீவுகள் கைப்பற்றப்பட்டன. பெர்லின் அருகிலுள்ள போட்ஸ்டாம் (potsdam) என்னுமிடத்திலிருந்து அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ட்ருமன், ருஷ்யத் தலைவர் ஸ்டாலின், பிரிட்டிஷ் தலைமையமைச்சர் கிளெமெண்ட் ஆட்லி ஆகிய மூவரும் ஜப்பானைச் சரணடையச் சொல்லி ஓர் அறிக்கை விடுத்தனர். போர் வெறி கொண்டிருந்த ஜப்பானிய அரசியல்வாதிகள் சரணடைய மறுத்தனர். அதன்பேரில் அமெரிக்கா ஜப்பானிலுள்ள ஹிரோஷிமா (Hiroshima) நகரத்தின்மீது, வரலாற்றிலேயே முதன்முறையாக 1945 ஆகஸ்டு, 6ஆம் நாள் அணுக்குண்டு ஒன்றை வீசிற்று. மூன்று நாள்கள் கழித்து இரண்டாவது அணுக்குண்டு நாகசாகி (Nagasaki) நகரத்தின்மீது வீசப்பட்டது. இக் குண்டு வீச்சுகளால் இரு நகரங்களும் அழிக்கப்பட்டு, பல்லாயிரக்கணக்கான மக்கள் உயிரிழந்தனர். நாட்டின் அழிவுநிலையைக் கண்ட ஜப்பான் சரணடைந்தது. ''மிஸௌரி'' என்ற அமெரிக்கப் போர்க்கப்பலில் ஜப்பானின் பிரதிநிதிகள் செப்டம்பர் 2ஆம் நாள் சரணகதிப் பத்திரங்களில் கையெழுத்திட்டனர். அன்று நேசநாடுகள் ஜப்பானின் மீதான வெற்றியைக் கொண்டாடினர் (V-J Day-Victory in Japan).

உலக வரலாற்றிலேயே முன்னர் கண்டிராத அளவுக்கு நிகழ்ந்த இப் பெரும் போரில் போருக்குக் காரணமாயிருந்த இரு நாடுகளும்—ஜெர்மனி, இத்தாலி - அழிவுற்றன. இப் போருக்காகச் செலவிடப்பட்ட ஒரு நூறுயிரங்கோடி (Trillion) டாலரில் அமெரிக்க ஐக்கிய நாடு மட்டும் மூன்றில் ஒரு பங்கு செலவை ஏற்றிருந்தது. இப் போரில் மொத்தத்தில் பங்கு பெற்ற எண்பது மில்லியன் பேரில், பதினன்கு மில்லியன் பேர் இறந்தனர். அதில் 3,75,000 பேர் அமெரிக்க வீரர்கள். இப் போரில் படை வீரர்களல்லாது பல்லாயிரக் கணக்கான பொதுமக்களும் உயிரிழந்தனர்: உறுப்பிழந்தனர்; உடைமைகளை இழந்தனர். மக்கள் சேமித்து வைத்திருந்த வளப் பொருள்களெல்லாம் செலவாயிருந்தன; பல இயற்கைவளங்களும் குண்டுவீச்சுகளால் அழிக்கப்பட்டிருந்தன. மனிதகுலம் இனியும் போரிடுவதால் தனது சிக்கல்களைத் தீர்க்கலாம் என்று நினைத்தால், உலகின் அழிவு வெகு அண்மையிலுள்ளது என்ற கருத்தை இப் போர் தெளிவுற உணர்த்திற்று. அணுக்குண்டுகளின் அழிவுச் சக்தி இவ்வுணர்வை உறுதிப்படுத்திற்று. ஒன்றுமறியா ஆண்கள் மீதும், பெண்கள்மீதும், குழந்தைகள்மீதும் அணுக்குண்டு வீசப்பட்டமை உலக அறநெறிக்குப் பெரும் இழுக்காகும். இருப்பினும் அதனல் ஏற்பட்ட ஒரே பயன் உலகில் மக்கள் உரிமையுடன் வாழ உரிமை பெற்றதாகும்.

# 29. இரண்டாவது உலகப் போருக்குப்பின்

## ட்ரூமன் நிர்வாகம் 1945-53

அமெரிக்க ஐக்கிய நாடு மக்களாட்சி முறையைக் காப்பாற்றுவதற்காக, இரண்டாவது உலகப்போரில் ஈடுபட்டது. போரின் இறுதியில், மக்களாட்சிமுறைக்கு எதிராக உருவாகியிருந்த தீய சக்திகளை அழிப்பதில் அமெரிக்காவும், நேசநாடுகளும் வெற்றி பெற்றன. இப் போரின் விளைவாக, அமெரிக்க அரசின்மீதும், அமெரிக்க மக்கள்மீதும் எண்ணற்ற பொறுப்புகள் சுமத்தப்பட்டன. போரால் சிதைவுற்ற உலகத்தை மீண்டும் பழைய நிலைக்குக் கொண்டு வருவதற்கான புனரமைப்பு வேலைகளில் ஈடுபடுவதிலும் மேலைநாடுகளின் நாகரிகத்தை மறுபடியும் நன்முறையில் நிலைநாட்டுவதிலும், மக்களாட்சிமுறையை வலுப்படுத்துவதிலும், உலகின் பல பகுதிகளில் உரிமையோடு வாழும் மக்களை நிலைகுலையாது தாங்குவதிலும், உலகில் உறுதியாக அமைதியை நிலைநாட்ட அனைத்து நாடுகளின் அமைப்பு ஒன்றினை நிறுவுவதிலும், அமெரிக்க மக்கள் பெரும் பொறுப்புகளை ஏற்க நேரிட்டது. அமெரிக்க ஐக்கிய நாடு மேலைநாடுகளின் புனரமைப்புக்குத் தாராளமாக நிதியுதவியும், பொருளுதவியும் அளித்தது ; குடியாட்சி முறையை மேற்கொண்ட உலக நாடுகளுக்குத் தனது ஆதரவை நல்கியது ; ஐக்கிய நாடுகள் சங்கத்தினைத் தோற்றுவித்து, வலுப்படுத்துவதிலும் மும்மரமாக ஈடுபட்டது.

இரண்டாவது உலகப்போர் நிகழ்ந்து கொண்டிருக்கும் போது நேசநாடுகளின் தலைவர்கள் ஒன்று கூடி, அச்சுநாடுகளின் தோல்விக்குப் பிறகு எவ்வகையில் உலக அமைதியைப் பாதுகாப்பதெனப் பேசினர். அமெரிக்க ஐக்கிய நாட்டின் குடியரசுத்தலைவர் ரூஸ்வெல்ட்டும், பிரிட்டனின் தலைமை அமைச்சர் சர்ச்சிலும் தினமும்

கடிதம் வழியாகவும், தொலைபேசி வழியாகவும் போர்நிலைமை குறித்துக் கருத்துப் பரிமாறிக் கொண்டனர். பல சிறப்புக் கூட்டங்களில் ஒன்றாகக் கலந்து உரையாடினர். அச் சிறப்புக் கூட்டங்களில் குறிப்பிடத் தக்கக் கூட்டம், யால்ட்டாவில் 1945ஆம் ஆண்டு, பிப்ரவரியில் நிகழ்ந்த ஒன்றாகும். உலக அமைதியை விரும்பும் நாடுகளையெல்லாம் அழைத்து உலகப்பேரவை ஒன்றினை அமைப்பதற்கான பட்டயத்தை வரைவது என யால்ட்டா மாநாட்டில் முடிவு செய்யப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடு, சோவியது ஒன்றியம், கிரேட் பிரிட்டன் பிரான்சு, சீனா ஆகிய ஐம்பெரும் நாடுகளும் ஒற்றுமையாக இருந்து முயற்சித்தால், வருங்காலத்தில் மீண்டும் ஓர் உலகப்போர் நிகழாமல் தடுக்க முடியும் எனப் பெரும்பாலான நாடுகள் கருதின. அதற்காக உலகப் பேரவை ஒன்றினை அமைப்பதற்கான நடவடிக்கைகளை ரூஸ்வெல்ட் மேற்கொண்டார். அந் நடவடிக்கைகளை அமெரிக்கக் காங்கிரஸ் முழுமனத்துடன் ஆதரித்தது. ரூஸ்வெல்ட்டின் மறைவுக்குப் பிறகும், ஐக்கிய நாடுகளின் சபையை நிறுவுவதற்கான முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்றன. 1945ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களில், அச்சுநாடுகளுக்கு எதிராகப் போர்புரிந்த நாற்பத்தாறு நாடுகள் சான்பிரான்ஸிஸ்கோவில் ஐக்கிய நாடுகள் சபையின் சாசனத்தைத் தீட்டின. அவ்வாண்டின் இறுதிக்குள்ளாக ஐம்பத்தோரு நாடுகள் அச் சாசனத்தை ஏற்றுக் கொண்டன. செனட் மன்றமும் அச் சாசனத்தை உடனடியாக ஏற்றுக் கொண்டது. இஃது அமெரிக்க மக்களின் மனநிலையினை நன்கு உணர்த்திற்று. ஐக்கிய நாடுகளின் சபை தனது நிரந்தரமான அலுவலகத்தை நியூயார்க் நகரில் கூட்டத் தீர்மானித்ததும் அமெரிக்கரின் ஈடுபாடும், ஒப்புதலும் முன்னிலும் அதிகமாயிற்று; ஐக்கிய நாடுகள் சபையைப் பல அமெரிக்கர் உலக நிறுவனம் என்று கருதாது அமெரிக்க நிறுவனம் என்றே கருதுகிறார்கள் என்ற குறைபாடு கிளம்பும் காலமும் வந்தது.

### நல்வாழ்வுத் திட்டம் (The "Fair Deal")

ஏப்ரல் 1945-ல் ட்ரூமன் பதவியேற்றபோது, இரண்டாவது உலகப்போர் ஐரோப்பாவில் அநேகமாக ஓய்ந்துவிட்டது எனலாம். போருக்குப்பின் அமெரிக்க ஐக்கிய நாட்டில் எண்ணற்ற சிக்கல்கள் நிலவின. அவற்றின் பக்கம் ட்ரூமன் தமது கவனத்தைச் செலுத்தலானார். அவர், நாட்டை முன்னேற்றப் பாதையில் செலுத்துவதெனத் தீர்மானித்தார். போரினால் நாட்டுக்கடன் மிக அதிகமாக உயர்ந்திருந்தது. ஆனால், அதே நேரத்தில் செய்பொருள் உற்பத்தி பன்மடங்காகப் பெருகியிருந்தது. ரூஸ்வெல்டின் அடிச்சுவட்டில் வந்த ட்ரூமன், புதிய சீரமைப்புத் திட்டத்தைத் தொடர்ந்து செயலாக்க விரும்பினார். கூட்டாட்சி அரசு ஓர் ஆக்கநல அரசாகத் திகழ வேண்டுமென்று கருதிய ட்ரூமன் ஒரு புதிய நல்வாழ்வுத்

திட்டத்தை உருவாக்குவதில் முனைந்தார். வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க அரசு நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்றும், ஊதிய விகிதங்களின் கீழ் வரம்பை உயர்த்த வேண்டுமென்றும், சமுதாயநலத் திட்டங்களை விரிவுபடுத்தல் வேண்டுமென்றும், சேரிகளை அகற்றி நல்ல வீடுகள் கட்டுவதற்குக் கூட்டாட்சி அரசு முன்வர வேண்டுமென்றும், விவசாயப் பொருள்களின் கீழ்விலை வரம்பை உயர்த்த வேண்டுமென்றும், தென்னசி நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களைப் போல மிஸௌரி, கொலம்பியா போன்ற நதிகளுக்கான திட்டங்களை வகுக்க வேண்டுமென்றும் ட்ரூமன் கருதினார். நீக்கிரோக்களின் நல்வாழ்வுக்காக, தென் மாநிலங்களிலிருந்த "தான் தோன்றித்தனமான தீர்ப்பளிப்பு முறை"யினை (Lynching) ஒழிப்பதற்காகவும், பொது உரிமைகளிலும் வேலை வாய்ப்புகளிலும் சமத்துவம் ஏற்படுத்தவும், ட்ரூமன் பாடுபட்டார்.



**ஹேரி ட்ரூமன்**
*33-வது குடியரசுத் தலைவர்*
*(1945 -1953)*
*மக்களாட்சிக் கட்சி*

காங்கிரஸில் பிற்போக்குக் கொள்கையினராகத் திகழ்ந்த குடியரசுக் கட்சியினரும், தென்பகுதி மக்களாட்சிக் கட்சியினரும் ஒன்றுகூடி, ட்ரூமனின் பல ஆக்கநலச் சட்டங்களைப் பற்றிப் பேசியே காலந்தாழ்த்தி (Filibuster) நிறைவேற்றவொட்டாது தடுத்தனர். நல்வாழ்வுத் திட்டத்தின் சிறப்பான பகுதிகளைக் காங்கிரஸ் புறக்கணித்த போதிலும், பிற பல பயனுள்ளத் திட்டங்களை நிறைவேற்றியது. தொழிலாளர்கள் பெற வேண்டிய கீழ்வரம்பு ஊதியத்தை ஒரு சட்டம் வரையறுத்தது. அதன்படி ஒரு மணிக்கு நாற்பது சென்ட்டாக இருந்த ஊதியம், எழுபத்தைந்து சென்ட்டாக உயர்த்தப்பட்டது. சேரிகளை அகற்றி குறைந்த வாடகைக் குடியிருப்புகளைக் கட்டுவதற்காக 2,700 பில்லியன் டாலர் ஒதுக்கப்பட்டது. சமூக நலப் பாதுகாப்புச் சட்டம் 1950-ல் திருத்தியமைக்கப்பட்டது. அச்சட்டத்தால் பயன்பெறுவோரின் பட்டியலில் பல ஊதிய நிலையிலுள்ள ஊழியர்களும் சேர்க்கப்பட்டனர். மேலும் தாமாகத்

தொழிலில் ஈடுபட்ட வயது முதிர்ந்தவர்களுக்கும் ஓய்வுகால ஊதியம் அளிப்பதெனவும் முடிவு செய்யப்பட்டது.

நல்வாழ்வுத் திட்டத்தால் ஏற்பட்ட உடனடியான நன்மை என்ன வென்றால், புதிய சீரமைவுத் திட்டத்தால் அதுவரை ஏற்பட்ட பலன்கள் பாழாகிவிடாமல் காப்பாற்றப்பட்டதே எனலாம். முற் போக்காளர்களுக்கு அஃது ஒரு வழிகாட்டியாக உதவியதோடு, கூட்டாட்சி அரசு முன்னேற்றத் திட்டங்களிலிருந்து பின் செல்லாமல் இருக்கவும் வழிவகுத்தது. நாளாவட்டத்தில் ட்ரூமனின் கருத்துகள் பெரும்பாலானவை சட்டமாயின.

## இராணுவத் துறையைத் திருத்தியமைத்தல்

அமெரிக்க ஐக்கிய நாட்டின் தற்காப்புத் திட்டத்தையும், நிருவாகத்தையும் திறன்வாய்ந்ததாக மாற்றியமைக்க வேண்டும் என்று ட்ரூமன் கருதினர். படைகளையும், உயர் அலுவலர்களையும் ஒரு நிர்வாகத்தின்கீழ் கொண்டுவர வேண்டிய பெருந்தேவையை இரண்டாவது உலகப்போர் தெளிவாக்கிவிட்டது. ட்ரூமனின் பரிந்துரையை ஏற்றுக்கொண்ட காங்கிரஸ், ஒரு புதிய பாதுகாப்புத் துறையைத் தோற்றுவித்தது. தரைப்படைத்துறையும், கடற்படைத் துறையும் ஒன்றாக இணைக்கப்பட்டன. ஜேம்ஸ் பாரெஸ்டால் (James V. Forrestal) என்பவர் பாதுகாப்புத்துறையின் முதல் தலைவராக நியமிக்கப்பட்டார். அத் துறையினுள் தனித்தனியே தரைப்படை கப்பற்படை, இராணுவப்படை ஆகியவற்றிற்குச் செயலாளர்கள் நியமிக்கப்பட்டனர். கட்டாய இராணுவப் பணி முறை தற்காலிகமாக ஓராண்டு நிறுத்தி வைக்கப்பட்ட பிறகு, மீண்டும் 1948-ல் கட்டாயமாக்கப்பட்டது. போதிய வலிமைமிக்கப் பாது காப்பு முறையினை மேற்கொள்ள வீரர்கள் தேவைப்பட்டமையால் இராணுவப் பணி மீண்டும் கட்டாயமாக்கப்பட்டது.

## தொழிலாளர் நலன் பாதுகாப்பு

இரண்டாவது உலகப்போர் முடிவுற்றதும், நாட்டில் ஏற்படக் கூடிய பணவீக்க நிலைமையினைக் கட்டுப்படுத்தும் நோக்கத் தோடு, போரின்போது பொருள்களின் விலைமீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளை அகற்றக்கூடாதென ட்ரூமன் கருதினர். ஆனல் காங்கிரஸ் குடியரசுத் தலைவரின் கருத்துக்கு முரணுக விலை மீதிருந்த கட்டுப்பாடுகளை நீக்கிற்று. அதன் விளைவாகப் பொருள்களின் விலை வேகமாக உயர்ந்தது. ஆனல், நற்பயனக நாட்டில் உற்பத்திப் பெருக்கம் ஏற்பட்டிருந்தாலும், போரின்போது மக்கள் ஏராள மாகச் சேமித்து வைத்திருந்தமையாலும் அஞ்சத்தக்க அளவிற்குப் பணவீக்கம் நாட்டில் ஏற்படவில்லை. இருப்பினும் பொருள்களின்

விலை உயர்வினல் இன்னலுற்ற தொழிலாளர்கள் அதிகமான ஊதியம் கோரி கிளர்ச்சி செய்தனர். 1946ஆம் ஆண்டில், ஏறத்தாழ ஒன்றரை மில்லியன் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்தனர். யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஸ்டீல் நிறுவனமும், ஜெனரல் மோட்டார்ஸ் நிறுவனமும் பல திங்களுக்கு மூடப்பட்டுக் கிடந்தன. நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்கள் தங்களது நிறுவனங்களை மூடியதும், குடியரசுத்தலைவர் உடனே அவற்றை மேற்கொண்டார். நீதி மன்றத்தில் நடைபெற்ற வழக்கிலும் அரசு சார்பாகவே தீர்ப்புகள் வழங்கப்பட்டன. இறுதியில் நிலக்கரிச்சுரங்க உரிமையாளர்கள் தொழிலாளர்களுடன் ஓர் இணக்க ஒப்பந்தம் செய்து கொண்டனர்.

தொழில் நிறுவனங்களில், தொழிலாளர்களுக்கும் உரிமையாளர் களுக்கும் இடையே நிலவிவந்த போராட்டநிலையினை மாற்றி யமைக்கவும், தொழிலாளர்நலனுக்கு ஊறுவிளைவிக்கக்கூடிய வகையில் இருந்துவந்த வழக்கமான செயல்களைத் தடுக்கவும், காங்கிரஸ் 1947-ல், டாப்ட்ஹார்ட்லி சட்டம் (Taft-Hartley Act) ஒன்றை இயற்றியது. இச் சட்டத்திற்கு ட்ரூமன் ஒப்புதல் தராது போனமையால் குடியரசுத்தலைவரின் தள்ளுரிமையின்மீது மீண்டும் காங்கிரஸ் இச் சட்டத்தை இயற்றிச் செயலாக்கிற்று. தொழிலாளர் சங்கங்களின் நிதிக்கணக்கு முறையினையும், தொழிலாளர் சங்கங் களில் சேராத தொழிலாளர்களுடன் அச்சங்கங்கள் கொண்டிருந்த உறவு முறையினையும் மேற்பார்வையிட அரசு உரிமை பெற்றது. தொழிலாளர் சங்கங்களின் அலுவலர்கள், பொதுவுடைமைக் கட்சியின் உறுப்பினர் அல்லர் என்று உறுதிமொழித்தாள் ஒன்றில் கையெழுத்திட வேண்டியதாயிற்று. தொழிற்சங்கங்களும், தொழில் நிறுவன உரிமையாளர்களும், வேலை நிறுத்தம் செய்யவும் வேலையி னின்று நீக்கவும் முறையே ஆறு திங்களுக்கு முன்னர் அறிவிக்க வேண்டுமென்றும் இச் சட்டம் கூறியது. பொதுமக்கள் உடல் நலனையும், பாதுகாப்பையும் பாதிக்கும் வகையில் வேலை நிறுத்தமும், கதவடைப்பும் நிகழ்ந்தால் அவற்றினை எண்பது நாள்களுக்கு நிகழ வொட்டாது தடுக்க இச் சட்டப்படி கூட்டாட்சி அரசு அதிகாரம் பெற்றது. தொழிற்சங்கங்கள் பின்பற்றி வந்த ஒழுக்கக் கேடான செயல்களையும் இச் சட்டம் தடுத்து நிறுத்தியது.

### அணுச்சக்திச் சட்டம்

அணுச்சக்தி உற்பத்தியைக் கட்டுப்படுத்தவும், அணுச்சக்தி பற்றி ஆராய்ச்சி மேற்கொள்ளவும் கூட்டாட்சி அரசு அணுச்சக்திக் குழு ஒன்றினை நியமித்தது. அணுச்சக்தி கொண்டு, நீர்மூழ்கிக் கப்பல்களை இயக்கவும், அணுச்சக்தியை மருத்துவம், விவசாயம் முதலியவற்றிற்குப் பயன்படுத்தவும் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்

பட்டன. 1946ஆம் ஆண்டுக் கோடையில் அமெரிக்க ஐக்கிய நாடு தனது நான்காம் அணுக்குண்டைப் பசிபிக் பெருங்கடலில் உள்ள ஒரு தீவிலும் ஐந்தாவது அணுக்குண்டை நீருக்கடியிலும் வெடிக்கவைத்து, முன்சோதிக்கப்பட்ட குண்டுகளைக் காட்டிலும் அவ்விரண்டும் அதிக மான அழிவுச் சக்தி வாய்ந்தவை என்பதைக் கண்டுகொண்டது.

## வெளிநாட்டு உறவு

அமெரிக்க ஐக்கிய நாடு, பிரான்சு, கிரேட் பிரிட்டன் ஆகிய நாடுகளுக்கும், சோவியத்து ஒன்றியத்துக்குமிடையே இருந்துவந்த உறவு நிலையில் முறிவு ஏற்பட்டது. வின்ஸ்டன் சர்ச்சில் கூறியபடி ருஷ்யா, ஓர் "இரும்புத் திரை"யை (Iron Curtain) எழுப்பிக் கொண்டு பிற நாடுகளுக்குப் புதிராகத் தனித்து வாழத் தொடங்கிற்று. போரின் போது தோற்கடிக்கப்பட்ட ஜெர்மனியையும், ஜப்பானையும் ஆட்சி புரிவது குறித்து, நேசநாடுகளிடையே தொடர்ந்து கருத்து வேறுபாடு இருந்து வந்தது.

ஜெர்மனி நான்கு மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாடு, சோவியத்து ஒன்றியம், கிரேட் பிரிட்டன், பிரான்சு ஆகிய நான்கு நாடுகளின் துருப்புகளும் ஒவ்வொரு மண்டலத்திலும் முறையே ஆதிக்கம் செலுத்தலாயின. அமெரிக்கா தனது பகுதியில் நீண்ட நாள்களுக்குப் படைகளை வைத்திருக்க முடிவுசெய்தது. இருப்பினும் ஜெர்மானிய மக்கள் உலகஅரங்கில் அமைதியை விரும்பும் நாடுகளின் வரிசையில் உன்னதமானதோர் இடத்தைப் பெற, அமெரிக்க உறுதியளித்தது. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு ஆகிய மூன்று நாடுகளும் கட்டுப்படுத்தி வந்த மூன்று மண்டலங்களும் ஒன்றாக இணைக்கப்பட்டு, ஜெர்மனியக் கூட்டாட்சிக் குடியரசு (Federal Republic of Germany) 1948ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. சோவியத்து ஒன்றியத்தின் இசைவுக்குக் காத்திராமல் இம் மூன்று நாடுகளும், 1952ஆம் ஆண்டு, ஜெர்மனியக் கூட்டாட்சிக் குடியரசுடன் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு, அப் பகுதியில் வாழும் மக்களுக்கு முழு உரிமையையும் அளித்தன. இப் பகுதியை மேற்கு ஜெர்மனி என அழைக்கலாயினர். 1955ஆம் ஆண்டளவில் மேற்கு ஜெர்மனிக்கு ஆட்சித் தலைமையுரிமை அளிக்கப் பட்டது. இதற்கிடையே சோவியத்து ஒன்றியத்தின் கட்டுப்பாட்டி லிருந்த கிழக்கு ஜெர்மனியை, ருஷ்யா தனிமைப்படுத்தி ஜெர்மானிய மக்களாட்சிக் குடியரசு (German Democratic Republic) என அறிவித்தது. கிழக்கு ஜெர்மனி பொதுவுடைமைக் கொள்கையின் அடிப்படையில் இயங்கத் தொடங்கிற்று. பெர்லின் மாநகரமும் கிழக்குப் பகுதி, மேற்குப் பகுதி என இரண்டாகப் பிரிக்கப்பட்டது.

ஜப்பானை ஆளும் முழுப்பொறுப்பினையும் அமெரிக்க ஐக்கிய நாடு மேற்கொண்டது. அமெரிக்கத் தளபதி டக்லாஸ் மெக்கார்தர் ஆட்சிப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்டார். மெக்கார்தர், ஜப்பானிய மக்களை மக்களாட்சி முறையில் நடத்திச் செல்வதில் பெரும் வெற்றி கண்டார். ஜப்பானியப் பேரரசரின் அதிகாரங்கள் குறைக்கப்பட்டன. பாராளுமன்றத்திற்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டன. ஜப்பானுடைய படை வலிமை குறைக்கப்பட்டது. 1947-ல், ஓர் அரசியலமைப்பு இயற்றப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டது. மக்களாட்சி முறையிலான தேர்தல்கள் நடைபெற்றன. அமெரிக்காவின் தலைமையில் நாற்பத்தொன்பது நாடுகள், 1951ஆம் ஆண்டு ஜப்பானுடன் அமைதி உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டன. இதில் சோவியத்து ஒன்றியம் கையெழுத்திட மறுத்தது. இவ்வுடன்படிக்கையின்படி ஜப்பானுக்கு ஆட்சித் தலைமையுரிமை அளிக்கப்பட்டது. அதேசமயத்தில் ஜப்பானும், அமெரிக்காவும் நேரிணைத் தொடர்பான பாதுகாப்பு உடன்படிக்கை ஒன்றினைச் செய்து கொண்டன.

போரின் போது ஜப்பானிடமிருந்து கைப்பற்றப்பட்ட கொரியாவிலும் நேச நாடுகளின் ஆட்சி நிறுவப்பட்டது. வடபகுதி கொரியாவில் அமெரிக்கா ஆட்சிப் பொறுப்பை ஏற்று, விரைவில் ஒரு குடியரசை நிறுவிற்று. சிங்மேன்ரீ (Syngman Rhee) என்பவர் அக் குடியரசின் முதல் தலைவரானர். தென்பகுதி கொரியாவிலிருந்த அமெரிக்கப் படைகள் 1949ஆம் ஆண்டளவில் வெளியேறின.

## வல்லாண்மை மலைவு (Cold War)

அமெரிக்க ஐக்கிய நாடும், பிற மேற்கு வல்லரசுகளும் பெருமளவில் படை வலிமையைக் குறைத்துக் கொண்டிருக்கையில், சோவியத்து ஒன்றியம் தனது படை வலிமையினை அதிகப்படுத்தி கொண்டிருந்தது. ருஷ்யா பிற நாடுகளோடு ஒத்துழைக்க மறுத்தது. போரின்போது ருஷ்யர்கள் கண்ட வெற்றி உலகப் பொதுவுடைமைப் புரட்சி ஏற்படுத்துவதற்கு வேண்டிய முயற்சியை மேற்கொள்ளத் தூண்டியது. போர்க்காலத்தில் ருஷ்யர்கள் கைப்பற்றிய இடங்களில் பொதுவுடைமை ஆட்சியை அமைத்தார்கள். போலந்து, செக்கோஸ்லேவோக்கியா, ஹங்கேரி, ருமேனியா, பல்கேரியா, யூகோஸ்லாவியா, அல்பேனியா, ஆகிய நாடுகளில் பொதுவுடமை அரசுகள் அமைக்கப்பட்டன. லாட்வியா, லிதுவேனியா, எஸ்தோனியா ஆகியவை ருஷ்யாவுடன் இணைக்கப்பட்டன. கிழக்கு ஜெர்மனியில் பொதுவுடைமை அரசு ஏற்படுத்தப்பட்டது. வடகொரியாவிலும் பொது

வுடைமை ஆட்சி அமைக்கப்பட்டது. ருஷ்யா அந் நாடுகளுக்கு வேண்டிய உதவியை அளித்து வந்தது. ருஷ்யாவின் நடவடிக்கைகள் மக்களாட்சி நடைபெற்று வந்த நாடுகளுக்குப் பேரச்சத்தை விளைவித்தன. ஆகவே, மக்களாட்சி முறையை மேற்கொண்ட நாடுகள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள, அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைமையின்கீழ் ஒன்று சேர்ந்தன.

## ட்ரூமன் கொள்கை (Truman Doctrine)

வெளிநாட்டுறவில் ருஷ்யாவின் நடவடிக்கைகளில் ஏற்பட்ட சிக்கல்களைத் தீர்ப்பதில் அமெரிக்க ஐக்கிய நாடு உடனே கவனம் செலுத்தலாயிற்று. பொதுவுடைமைக் கொள்கை பரவுவதைத் தடுப்பதே அமெரிக்காவின் முக்கிய நோக்கமாக அமைந்தது. எனவே ருஷ்யாவின் நடவடிக்கைகளுக்கு எதிராகத் தடுப்பு நடவடிக்கைகள்



ட்ருமன் கொள்கைப்படி, பொருளாதார வளர்ச்சிக்காகப் பிறநாடுகளுக்கு உதவியளிக்கும் திட்டத்தின்கீழ், சென்னை அருகே மணலியில் அமெரிக்கர் உதவியோடு நிறுவப்பட்டிருக்கும் இரசாயன எரு தொழிற்சாலை.

மேற்கொள்ளத் தொடங்கியது. பொருளாதாரத் துறையில் காணப்படும் சீர்கேடுகளே பல இடங்களில் பொதுவுடைமைக் கொள்கை செல்வாக்குப் பெற காரணமென்பதை அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ட்ருமன் உணர்ந்தார். எனவே, மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கும், பொதுவுடைமை ஆட்சி ஏற்பட்டிராத பின்தங்கிய பிற நாடுகளுக்கும் பெருமளவில் உதவி செய்வதற்கான திட்டமொன்றை

ட்ரூமன் வரைந்து, அதற்குக் காங்கிரஸ் இசைவை வேண்டினார். இப்படிப் பொருளாதார வளர்ச்சிக்காகப் பிற நாடுகளுக்கு உதவி யளிக்கும் திட்டத்திற்கு "ட்ரூமன் கொள்கை" என்ற பெயர் தரப் பட்டது.

ரஷ்யர்கள் ஐரோப்பாவின் மத்தியக் கிழக்கு நாடுகளில் தமது ஆதிக்கத்தை நிலைநாட்டத் திட்டமிட்டனர். ரஷ்யா தொடர்ந்து துருக்கியையும், கிரீஸையும் அச்சுறுத்தி வந்தது. அதனால், அப் பகுதியில் பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளின் நலன் பாதிக்கக் கூடுமென அஞ்சப்பட்டது. எனவே, காங்கிரஸ், ட்ரூமன் வேண்டுகோளுக்கு இணங்க உடனே கிரீஸுக்கு 300 மில்லியன் டாலரையும், துருக்கிக்கு 100 மில்லியன் டாலரையும் உதவித்தொகையாக அளித்தது. மேலும் இராணுவ உயர் அலுவலர் களையும், பொருளாதார நிபுணர்களையும், குடியரசுத் தலைவர் அப்பகுதிக்கு அனுப்பினார். பிற்போக்கும், சுயநலமுமுள்ள கிரேக்க நாட்டு ஆளுங்கட்சியை மிக இன்றியமையாத சீர்திருத்தங்கள் செய்யும்படி அமெரிக்கா கட்டாயப்படுத்திற்று. துருக்கி அரசு கிரீஸைக் காட்டிலும் அதிக விழிப்புடனும், நன்றியறிதலுடனும் ஒத்துழைத்தது.

### மார்ஷல் திட்டம் (The Marshall Plan)

அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெளிநாட்டுறவுத் துறைச் செயலாளர் மார்ஷல், ஐரோப்பாவின் புனரமைப்புக்காக ஒரு திட்டத்தை வகுத்தார். ஐரோப்பிய நாடுகள், புனரமைப்பு முயற்சி யில் ஒருவருக்கொருவர் பரிமாற்றமான முறையில் உதவிக் கொள்ள, பொருளாதாரத் திட்டங்களை வகுத்தால் அத் திட்டங்களுக்கு உதவியளித்து ஒத்துழைக்க அமெரிக்கா ஆர்வங் கொண்டுள்ளது என்று மார்ஷல் அறிவித்தார். பதினாறு ஐரோப்பிய நாடுகள் மார்ஷல் கருத்தை ஏற்றுக்கொண்டு, நிபுணர்களைப் பாரிஸுக்கு அனுப்பித் திட்டங்களை வகுக்கலாயின. சோவியத் நாடும் அதனைச் சார்ந்த நாடுகளும் இத் திட்டத்தில் கலந்து கொள்ள மறுத்தன. 1947ஆம் ஆண்டு, அக்டோபரில், ஐரோப்பிய நாடுகளின் புனரமைப்புத் திட்டங்கள் சிறப்புற வரையறுக்கப்பட்டன. அத் திட் டங்களுக்கு வேண்டிய நிதியுதவியினை அளித்திட காங்கிரஸ், பொருளாதார ஒத்துழைப்புச் சட்டம் (Economic Co-operation Act) ஒன்றினை இயற்றியது. அதன்படி, 1948-1950ஆம் ஆண்டுகளில் மட்டும் ஏறத்தாழ பத்து மில்லியன் டாலர் செலவிடப்பட்டது. மார்ஷல் திட்டத்தால் ஐரோப்பாவில் புனரமைப்புத் திட்டங்கள் சிறப்புற நிறைவேற்றப்பட்டன. ஐரோப்பா தனக்குத்தானே உதவி செய்து கொள்ளும் நிலையை விரைவில் அடைந்தது. அமெரிக்க ஐரோப் பிய உறவுகளில் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டது.

## வடஅட்லாண்டிக் உடன்படிக்கை நாடுகளின் கூட்டு அமைப்பு
## (N. A. T. O.-North Atlantic Treaty Organisation)

நாளடைவில் ரஷ்யாவுக்கும், அமெரிக்க ஐக்கிய நாட்டுக்கு மிடையே கருத்து வேறுபாடு பெருகிற்று. ஜெர்மனியில் தனது வலி மையைப் பெருக்கிக் கொள்ள விழைந்த ரஷ்யா 1948 ஆம் ஆண்டுக் கோடை காலத்தில் திடீரென மேற்கு பெர்லினை முற்றுகையிட்டு மேலை நாட்டவர்கள் தொடர்பினைத் துண்டித்தது. உடனே அமெரிக் காவின் விமானப்படையினர் மேலை நாடுகளோடு ஒத்துழைத்து, மேற்கு பெர்லினில் வாழும் மக்களுக்கு எல்லாவிதமான உதவியையும் அளித்துக் காப்பாற்றினர். மேலை நாடுகளின் படை வலிமையைக் கண்ட ரஷ்யா ஓராண்டு கழித்து பெர்லின் நகரை விடுவித்தது. ரஷ்யாவின் போக்கினைக் கண்ட மேலைநாட்டு அரசியல்வாதிகள், ரஷ்யாவின் தாக்குதலிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளத் திட்டமிட்டனர். அந் நாடுகளின் வெளிநாட்டுறவு அமைச்சர்கள் ஒன்று கூடிப் பேசி 1949 ஆம் ஆண்டு, ஏப்ரலில், வட அட்லாண்டிக் பாதுகாப்பு ஒப்பந்தம் ஒன்றை வரைந்தனர். கிரேட் பிரிட்டன், பிரான்சு, பெல்ஜியம், நெதர்லாந்து, நார்வே, கனடா, அமெரிக்க ஐக்கிய நாடு ஆகிய நாடுகள் உட்பட மொத்தம் பன்னிரண்டு நாடுகள், அவ்வொப்பந்தத்தில் கையெழுத்திட்டன. அவ்வொப்பந்தத் தின்படி ஒரு நாட்டின்மீது எதிரி தாக்கினாலும், அத் தாக்குதல் அனைவரின்மீதும் தொடுக்கப்பட்ட ஒன்றாகக் கருதப்படும் எனக் கூறப்பட்டது. இந்தப் பாதுகாப்பு ஒப்பந்தத்தை அடிப்படையாக வைத்தே அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ட்ரூமன், 1950 டிசம்பரில் வட அட்லாண்டிக் உடன்படிக்கை நாடுகளின் கூட்டு அமைப்பு ஒன்றினை உருவாக்கினார். மேலை நாட்டுப் படைகளின் தளபதியாக ஐஸன்ஹோவர் நியமிக்கப்பட்டார். ஐஸன்ஹோவர் மிகவும் திறமை யாகச் செயலாற்றி இராணுவத்தைச் சிறப்புற அமைத்ததோடு, மேலை நாடுகளிடையே அரசியல், மேலும் பொருளாதாரம் ஆகிய வற்றின் அடிப்படையில் ஓர் ஒருமைப்பாட்டினையும் உருவாக்கினார். இக் கூட்டமைவு நாடுகளின் தலைவர்கள் முதன்முறையாக 1957 டிசம்பரில், பாரிஸில் கூடிப் பேசினர். அத் தலைவர்கள் அணு ஆற்றலால் இயங்கும் ஏவுகணைகளை உற்பத்தி செய்து தயாராக வைத்திருக்க வேண்டுமெனவும், கூட்டமைவு நாடுகளிடையே அரசியல் பொருளாதார ஒத்துழைப்பு நெருக்கமாக இருக்க வேண்டு மெனவும், முடிவு செய்தனர்.

### ஆசியாவில் பொதுவுடைமைக் கோட்பாட்டினர்

இரண்டாவது உலகப் போருக்குப் பின் பல ஆசிய நாடுகளில் பொதுவுடைமைக் கோட்பாட்டினர் தங்களது செல்வாக்கை நிலை

நாட்ட முயற்சித்தனர். சீனாவில் தேசியவாதிகளுக்கும், பொது வுடையமையினருக்கும் இடையே இருந்த சிக்கல்களைத் தீர்த்து வைக்க ட்ருமன், தளபதி ஜார்ஜ் மார்ஷலைச் சீனாவுக்கு அனுப்பினார். இருதரப்பினருக்குமிடையே ஒற்றுமையுண்டாக்க மார்ஷல் பாடு பட்டார்; இறுதியில் ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்தினார். ஆனால் மார்ஷல், அமெரிக்காவுக்குத் திரும்பியதும் அவ்வொப்பந்தம் மீறப் பட்டது. தேசியவாதிகளின் தலைவராக விளங்கிய சியாங் கே ஷேக் (Chiang kai shek) தொடர்ந்து பதவியிலிருக்கச் செய்ய ஏராளமான படையும், பொருளும் தேவைப்படும் என்பதை உணர்ந்த அமெரிக்கா, படிப்படியாகச் சீனாவுக்கு அளித்து வந்த இராணுவ உதவியைப் நிறுத்திக் கொண்டது. ஆனால், தொடர்ந்து சியாங் கே ஷேக்கிற்குப்




பொருளாதார உதவியளித்தது. 1939 ஆம் ஆண்டளவில், பொது வுடைமையினர் மா-சே-துங்கின் (Mao-Tse-Tung) தலைமையில் தேசியவாதிகளைத் தோற்கடித்து சீனா முழுவதையும் கைப்பற்றினர்.

அவ்வாண்டு அக்டோபர் முதல் நாளன்று சீன மக்களின் குடியரசு (People's Republic of China) ஏற்படுத்தப்பட்டது. சியாங் கே ஷேக் சீனாவினின்றும் தப்பியோடி பார்மோசாத்தீவில் (Formosa) தேசிய சீன அரசை நிறுவினர். பார்மோசாவிலுள்ள சீன அரசே முறையான சீன அரசு என்று அமெரிக்கா அறிவித்தது; சியாங் கே ஷேக்கின் ஆட்சிக்குத் தனது ஆதரவை நல்கியது. சீனப் பொது வுடைமையினரது தாக்குதலினின்று பார்மோசாவைக் காப்பாற்ற அமெரிக்கா உறுதி பூண்டுள்ளது.

**கொரியா**

நெடுநாளாக ஜப்பானால் கட்டுப்படுத்தப்பட்டு வந்த கொரியா, இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு இரண்டு பகுதிகளாக 38° இணைக்கோட்டில் பிரிக்கப்பட்டது. தென்கொரியாவில், ஐக்கிய நாடுகள் சபையின் மேற்பார்வையில் தேர்தல்கள் நடைபெற்றன. சிங்மேன்ரீ என்பவரது தலைமையில் கொரியா ஒரு குடியரசாக விளங்கலாயிற்று. பொதுவுடைமையினரது கட்டுப்பாட்டிலிருந்த வடகொரியாவை என்றாவது ஒருநாள் விடுவித்துக் குடியரசு நாட்டுடன் இணைத்துவிட வேண்டுமென்று சிங்மேன்ரீ பேரவா கொண்டிருந்தார். 1950ஆம் ஆண்டு, ஜூன் திங்களில், வட கொரியா துருப்புகள் ரஷ்யர்களுடைய உதவியோடு தென் கொரியாவைத் தாக்கின. ஐக்கிய நாடுகள் சபையின் பாதுகாப்புக் குழு வடகொரியாவின் தாக்குதலை வன்மையாகக் கண்டித்தது. தென் கொரியாவைக் காப்பாற்ற உடனடியாக ஐக்கிய நாடுகள் படை அனுப்பப்பட்டது. அப் படையின் பெரும் பகுதியை அமெரிக்கா அனுப்பியிருந்தது. தளபதி மெக்கார்தர் தலைமையின்கீழ், ஐக்கிய நாடுகள் படை வட கொரியா வீரர்களை, 38° இணைக்கோட்டிற்கு வடக்கே வெற்றிகரமாக விரட்டியடித்தது. இதற்குள்ளாக வட கொரியாவிற்குச் சீனா ஏராளமான வீரர்களை அனுப்பி வைத்தது. கொரியப் படையினரும், சீனப்படையினரும் இணைந்து ஐக்கிய நாடுகள் படையினைத் தாக்கின. சீனப் பொதுவுடைமையினரை வேரோடு களைந்தெறிய வேண்டுமென மெக்கார்தர் திட்டமிட்டார். அது குறித்து மெக்கார்தருக்கும், ட்ரூமனுக்குமிடையே கருத்து வேறுபாடு தோன்றலாயிற்று. இறுதியில் ட்ரூமன், மெக்கார்தரைப் பதவியினின்று விலக்கினர். தளபதி மாத்யூ ரிட்குவே (Mathew B. Ridgway) என்பவர் ஐக்கிய நாட்டுப் படைகளின் தளபதியாக நியமிக்கப்பட்டார்.

ஐக்கிய நாடுகளின் படைகள் 1951ஆம் ஆண்டு ஜூன் திங்களில், பொதுவுடைமைப் படையினரைத் தடுத்து நிறுத்துவதில் வெற்றி பெற்றனர். போர் நிறுத்த ஒப்பந்தம் பற்றிப் பேச ஆரம்பிக்

கப்பட்டது. ஆனால் தொடர்ந்து பல திங்களுக்கு முட்டுக்கட்டை நிலைமையே நீடித்தது.

## ஐஸன்ஹோவர் நிர்வாகம் 1953—1961

குடியரசுக் கட்சியைச் சார்ந்த ஐஸன்ஹோவர் 1952ஆம் ஆண்டு தேர்தலில், அமெரிக்கக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். குடியரசின் துணைத் தலைவராக, ரிச்சர்டு நிக்ஸன் (Richard N. Nixon) தேர்ந்தெடுக்கப்பட்டார். ஐஸன்ஹோவர் தேர்தலின் போது தாமே நேரிடையாகக் கொரியா சென்று போரினை முடித்து வைப்பதாக, வாக்காளர்களுக்கு வாக்குறுதியளித்திருந்தார். அவ் வாக்குறுதிப்படி அவர் கொரியா சென்று ஐக்கிய நாடுகளின் படையினைப் பார்வையிட்டு வந்தார். அவரது பயணத்தின் விளைவாக, 1953ஆம் ஆண்டு, ஜூலையில் போர் நிறுத்த ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. வட கொரியா பொதுவுடைமை ஆட்சியை மேற்கொண்டது தென் கொரியா தொடர்ந்து குடியரசாகத் திகழலாயிற்று.



**டிவைட் ஐஸன்ஹோவர்**
*34-வது குடியரசுத் தலைவர்*
*1953—1961*

## தென்கிழக்கு ஆசிய உடன்படிக்கை நாடுகளின் கூட்டு அமைப்பு
## (South East Asia Treaty Organisation)

ரஷ்யாவின் ஆதரவைப் பெற்றச் சீன நாட்டுப் பொதுவுடைமையினர் ஆசியாவிலும், பசிபிக் பெருங்கடலிலும் தங்களது ஆதிக்கத்தை நிறுவ விரும்பினர். இதனைக் கண்ட அமெரிக்கா, பொதுவுடைமைக் கொள்கை பரவுவதைத் தடுக்கவும், சீனாவின் அச்சுறுத்தலினின்று ஆசிய நாடுகளைப் பாதுகாக்கவும் ஆசிய நாடுகளோடு உடன்படிக்கைகள் செய்துகொள்ள முற்பட்டது. 1952ஆம் ஆண்டு, அமெரிக்க ஐக்கிய நாடு, நியூஸிலாந்து, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் இராணுவப் பாதுகாப்புத் திட்டங்களில் ஒத்துழைப்பதென

ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டன (ANZUS - Australia, New Zealand United States). 1955ஆம் ஆண்டு, அமெரிக்க ஐக்கிய நாட்டின் முயற்சியின்பேரில் தென் கிழக்கு ஆசிய உடன்படிக்கை நாடுகளின் கூட்டு அமைப்பு ஒன்று உருவாயிற்று. அவ்வமைப்பில் அமெரிக்க ஐக்கிய நாடு, கிரேட் பிரிட்டன், பிரான்சு, நியூஸிலாந்து, பாகிஸ்தான், பிலிப்பைன்ஸ், தாய்லாந்து ஆகிய நாடுகள் இடம் பெற்றிருந்தன. இந் நாடுகள் புறத்தாக்குதல்களினின்று தங்களைக் காத்துக் கொள்ள ஒத்துழைக்க இசைந்தன. பார்மோசாவிலிருந்த தேசிய சீனவுடனும் அமெரிக்கா இராணுவப் பாதுகாப்பு அளிக்க ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டது.

## ஐஸன்ஹோவர் கொள்கை (The Eisenhower Doctrine)

இரண்டாவது உலகப் போரினல் பிரிட்டனும், பிரான்சும் நலிவுற்றமையால், மத்திய கிழக்கு நாடுகளில் அவ்விரு நாடுகளின் செல்வாக்கும் குறையலாயிற்று. இதனைக் கண்ட ரஷ்யா தனது செல்வாக்கினை அங்கு நிலைநாட்ட முயற்சித்தது. எனவே பொது வுடைமைக் கொள்கையினரது ஆதிக்க வெறிக்கு மத்திய கிழக்கு நாடுகள் இரையாகாமல் தடுத்துக் காப்பாற்றும் பொறுப்பை அமெரிக்கா மேற்கொள்ள நேரிட்டது. ஐரோப்பிய ஆதிக்கத்திலிருந்து அண்மையில் விடுதலை பெற்ற அராபிய நாடுகள் தீவிரமான தேசிய உணர்வைப் பெற்றிருந்தன. எகிப்தின் வல்லாட்சியாளராக இருந்த தளபதி நாசர் (Colonel Nasser) சோவியத் நாட்டுக்கும், அமெரிக்க ஐக்கிய நாட்டுக்குமிடையே பகைமையை வளர்த்துவிட்டு இரு நாடுகளிலிருந்தும் உதவிகளைப் பெற திட்டங்கள் வகுத்தார்.

எகிப்தில் சோவியத் நாடு தனது செல்வாக்கினைச் செலுத் தாமல் தடுக்க, அமெரிக்க வெளிநாட்டுறவுச் செயலாளர் டல்லஸ் (Dulles) எகிப்துக்கு அஸ்வான் அணை கட்டுவதற்காக நிதியுதவி அளிப்பதாக வாக்குறுதியளித்தார். 1956ஆம் ஆண்டு, நாசர் அஸ்வான் அணை கட்டுவதற்காகப் பெருந்தொகைக் கடன் ஒன்றினைத் தந்துதவுமாறு அமெரிக்காவையும், கிரேட் பிரிட்டனையும் வேண்டினர். ஆனல், இவ்விருநாடுகளும் கடன் தந்துதவ மறுத்தன. உடனே நாஸர், பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் சொந்தமான சூயெஸ் கால்வாயைத் தேசிய உடைமையாக்கினர். இஸ்ரேல், பிரிட்டன், பிரான்சு ஆகிய மூன்று நாடுகளும் தங்களது திட்டங்களை அமெரிக்காவுக்குத் தெரிவிக்காமல் சூயெஸ் கால்வாய்ப் பகுதியைக் கைப்பற்றின. அமெரிக்க ஐக்கிய நாடும், சோவியத் நாடும் ஐக்கிய நாடுகள் சபையில் பிரிட்டனையும், பிரான்சையும் சூயெஸ் கால்வாய்ப் பகுதியிலிருந்து துருப்புகளை மீட்கச் சொல்லி வலியுறுத்தின. அதன்பேரில் பிரிட்டனும், பிரான்சும் தங்களது

படைகளை விலக்கிக் கொண்டன. சூயெஸ் கால்வாய்ப் பகுதியைக் காத்திட ஐக்கிய நாடுகளின் படை அனுப்பப்பட்டது.

சூயெஸ் கால்வாய் நெருக்கடிக்குப் பிறகு ஐஸன்ஹோவர் விரைந்து செயலாற்றினர். மத்திய கிழக்கு நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கும், இராணுவ உதவிக்கும் நிதியொதுக்குமாறு அவர் காங்கிரஸை வேண்டினர். மேலும், அப் பகுதியில் பொதுவுடைமைக் கட்சியினரது ஊடுருவலைத் தடுக்க, அமெரிக்க ஐக்கிய நாட்டின் படையினைப் பயன்படுத்தவும் இசைவளிக்குமாறு காங்கிரஸை வேண்டினர். இவ்விரண்டு கோரிக்கைகளையும் காங்கிரஸ் 1957ஆம் ஆண்டு, மார்ச்சுத் திங்கள் ஏற்றுக் கொண்டது. இதுவே ஐஸன்ஹோவர் கொள்கை எனப்படும்.

### ஐஸன்ஹோவரது உள்நாட்டு நிருவாகம்

குடியரசுக் கட்சியிலிருந்த பழமைவாதிகள் கருத்திற்கு மாறாக ஐஸன்ஹோவர் தொடர்ந்து சமூக நலன் சட்டங்களை இயற்றலானர். மக்களது நலனுக்காகவே கூட்டாட்சி அரசு பாடுபட வேண்டுமென இரு கட்சிகளிலும் இருந்த மிதவாதிகள் கருதினர். 1954 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டங்களின்படி, மேலும் பத்து மில்லியன் மக்கள் சமூக நலன் பாதுகாப்புச் சலுகைகளைப் பெற்றனர். மற்றொரு சட்டம், தொழிலாளர்களுக்கான குறைந்த ஊதியத்தை, ஒரு மணிக்கு ஒரு டாலர் என நிர்ணயித்தது. மகப்பேறு மருத்துவத்திற்கும், குழந்தைகள் உடல்நலனுக்காகவும் கூட்டாட்சி அரசு மாநிலங்களுக்காகக் கூடுதல் நிதியுதவி அளித்தது.

தொழிலாளர் நலன் முன்னேற்றத்துக்காகவும் ஐஸன்ஹோவர் மிகவும் பாடுபட்டார். அமெரிக்கத் தொழிலாளர் சங்கங்களின் இரு பெரும் கூட்டு அமைப்புக்களான "அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைவும்," "தொழில் நிறுவனங்களின் பேரவையும்," 1955ஆம் ஆண்டு ஒன்ருக இணைந்தன. தொழிலாளர் சங்கங்களில் இருந்த குறைபாடுகளைக் கண்ட பத்தொன்பது மாநிலங்கள், தொழிலாளர்களைத் தொழிலாளர் நலன் சங்கங்களின் உறுப்பினர்களாகச் சேராவிட்டாலும் வேலையில் அமர்த்திக்கொள்ளலாமெனச் சட்டங்களை இயற்றின.

### உள்நாட்டுப் பாதுகாப்பு

இரண்டாவது உலகப் போருக்குப்பின், அமெரிக்க மக்களை அனைத்துலகப் பொதுவுடைமைக் கொள்கை அச்சுறுத்தி வந்தது. அரசுக்கெதிராகச் சதிசெய்யும் தனிப்பட்டவர்களையும், கூட்டத்

தினரையும் அடக்கி, ஒடுக்க தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன. 1940ஆம் ஆண்டு இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி அமெரிக்கரல்லாதார் அனைவரும் தங்களது பெயரைப் பதிவு செய்ய வேண்டுமென விதிக்கப்பட்டனர். நாட்டுக்கெதிராகச் சதி செய்வோரைத் தண்டிக்கவும் அச் சட்டம் கூட்டாட்சி அரசுக்கு உரிமை தந்தது. இச் சட்டப்படி 1946ஆம் ஆண்டு பதினொரு பொதுவுடைமைக் கட்சியின் தலைவர்கள் தண்டிக்கப்பட்டனர். ட்ருமனது பதவிக் காலத்தில் இயற்றப்பட்ட மெக்கரான் சட்டம் (McCarran Act)பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்த குடியேறிகளை நாடு கடத்தவும், சர்வாதிபத்திய ஆட்சி நிறுவனங்களின் உறுப்பினர் களை அமெரிக்க ஐக்கிய நாட்டில் குடிபுக மறுக்கவும், கூட்டாட்சி அரசுக்கு அதிகாரத்தை அளித்தது. ஐஸன்ஹோவர் பதவிக்காலத் தில் இச் சட்டம் (McCarran Walter Act) விரிவுபடுத்தப்பட்டது. அதன்படி பொதுவுடைமைக் கட்சியைச் சார்ந்தவர்களுக்கும், பொதுவுடைமைக் கட்சியினர்பால் இரக்கங் காட்டியவர்களுக்கும், அமெரிக்கக் குடியுரிமை வழங்குவதிலும், அமெரிக்காவில் குடிபுக இசைவளிப்பதிலும் மேலும் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன.

பொதுவுடைமைக் கட்சியின் முந்தைய உறுப்பினர்களும், பொது வுடைமைக் கட்சியினரோடு தொடர்பு கொண்டிருந்தவர்களும் மக்களால் ஐயக் கண்ணோடு நோக்கப் பெற்றனர். அரசுமீது பற்றுறுதி கொள்ளாதவர்களைக் கண்டு பிடித்து வேலையினின்று நீக்கி, அரசுக்கெதிரான சதித் திட்டங்களை முறியடிக்கக் கூட்டாட்சி அரசு மும்மரமாகச் செயலாற்றிற்று. செனட் சபை உறுப்பினரான ஜோசப் மெக்கார்த்தி (Joseph R. McCarthy) என்பவரின் தலைமையில், அமெரிக்காவுக்கு எதிரான நடவடிக்கைகளைக் கண்டு பிடித்திட ஒரு குழு அமைக்கப்பட்டது. ஆனால் மெக்கார்த்தி, காரணமின்றிப் பலர் மீது பழிகளைச் சுமத்தினார். அதனால், காங்கிரஸ் மெக்கார்த்தியைக் கண்டித்து ஒரு தீர்மானத்தை இயற்றியது. போதுமான சான்றுகள் இல்லாது ஒருவர்மீது ஐயப்பாட்டோடு பழி சுமத்தக்கூடாதெனத் தலைமை நீதிமன்றமும் தனது தீர்ப்புகளில் கூறிற்று.

## நீக்கிரோக்களின் நலன் பாதுகாக்கப்படல்

பொது உரிமைகளை நீக்கிரோ மக்களுக்கும் வேறுபாடின்றி வழங்க வேண்டுமென ஐஸன்ஹோவர் பெரிதும் விரும்பினார். அவ் விருப்பத்தை நிறைவேற்ற அவருக்கு வட மாநில மக்களாட்சிக் கட்சியினரது ஆதரவும் கிட்டியது. நீக்கிரோக்களுக்குப் பொது உரிமைகளைச் சீரிய முறையில் வழங்கிட, நீதிமன்றங்களின் உதவியை நாட கூட்டாட்சி அரசுக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் ஒரு

சட்டம் இயற்றப்பட்டது. பொது உரிமைகள் சரிவர நீக்கிரோக் களுக்கு வழங்கப்படாமல் இருக்கும் நிலையினை ஆராய இரு கட்சியினரும் அடங்கிய ஒரு குழு குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்டது.

தலைமை நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியான எர்ல் வாரன் (Earl Warren) 1954ஆம் ஆண்டு வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த தீர்ப்பு ஒன்றினை வழங்கினர். பொதுக் கல்விக் கூடங்களில் இன ஒதுக்கல் முறை பின்பற்றலாகாது என அத் தீர்ப்பு கூறியது. இன ஒதுக்கல் முறையினைப் பெயரளவில் கண்டிக்கும் வகையில் பல ஆண்டுகளுக்கு முன்னர், 1896-ல், தலைமை நீதி மன்றம் ஒரு தீர்ப்பை வழங்கி யிருந்தது. அத் தீர்ப்பில் சம உரிமைகளைத் தனியான வகையில் நீக்கிரோக்களுக்கென அளிப்பதில் ("Separate but equal") தவறில்லை என்று சொல்லப்பட்டது. ஏர்ல் வாரன் அத் தீர்ப்பு தவருனதாகுமென்றும், சம உரிமைகளைத் தனியாக வழங்குவது இன ஒதுக்கல் முறையின் மறு வடிவமாகும் என்றும் கண்டித்து. பழைய தீர்ப்பைத் தள்ளுபடி செய்தார். ஏறத்தாழ பதினேழு மாநிலங் களில், பதினன்காவது அரசியலமைப்புத் திருத்தத்திற்கு மாருக நீக்கிரோக்கள் பொது உரிமைகளைப் பெற முடியாது என இன ஒதுக்கல் முறையின் கீழ் இழிவுபடுத்தப்படனர்.

அர்க்கான்சாஸ் மாநிலத்திலுள்ள லிட்டில் ராக் (Little Rock) என்னும் ஊரிலுள்ள பள்ளி ஒன்றில், நீக்கிரோ மாணவர்கள் சேரக் கூடாது என அம் மாநிலத்தின் ஆளுநர் தடை விதித்தார். நீக்கிரோ மாணவர்கள் அப் பள்ளியில் சேர்த்துக் கொள்ளப்பட்டால் கலகம் ஏற்படும் என ஆளுநர் கருத்து வெளியிட்டார். இதனைக் கண்ட ஐஸன்ஹோவர் உடனே கூட்டாட்சி அரசின் படைகளை அவ்வூருக்கு அனுப்பி, ஆளுநருடைய உத்திரவுக்கு மாருக நீக்கிரோ மாணவர்களைச் சேர்ப்பித்து, 1957-1958ஆம் ஆண்டு முழுவதும் அவர்களுக்குப் பாதுகாப்பு அளித்தார். அம் மாநில ஆளுநரின் செயலைக் குடியரசுத் தலைவர் கடுமையாக் கண்டித்தார். ஐஸன்ஹோவரது துணிகரமான இச் செயலினல் பல பள்ளிக்கூடங்களில் இன ஒதுக்கல் முறை ஒழிக்கப்பட்டது.

## கென்னடியின் நிர்வாகம் 1961 — 1963

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், அமெரிக்கக் குடியரசுத் தலைவர்களுள் உலகப் புகழ் மிக்கவராகத் திகழ்ந்தவர் ஜான் கென்னடியாவார். குடியரசுத் தலைவர் பதவியை வகித்தவர் களுள் இளமையானவர் அவர். கென்னடி பதவியேற்றதும் ஆற்றிய சொற்பொழிவில் உள்நாட்டுக் கொள்கையிலும், வெளிநாட்டுறவிலும்

புத்தறிவுக் களம் காண (New Frontier) அமெரிக்க மக்களை அழைத்தார்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் வளத்தைப் பேண விரும்பிய கென்னடி பல நல்ல திட்டங்களை வகுத்தபோதிலும் காங்கிரஸ் அத் திட்டங்களை ஏற்று, செயலாக்க மறுத்தது. வயது முதிர்ந்தவர்களுக்கு இலவச மருத்துவ உதவி அளிப்பதற்கான திட்டத்தையும், கல்விக் கூடங்களுக்குக் கூட்டாட்சி அரசின் நிதியுதவித் திட்டத்தையும் நகர்ப்புற ஆட்சித் துறை ஒன்றினை உருவாக்குவதற்கான திட்டத்தையும், வேளாண்மைப் பொருள்களின் உற்பத்தியின், மீதான கட்டுப்பாட்டினை விதிக்கும் திட்டத்தையும் காங்கிரஸ் ஏற்க மறுத்தது. குடியரசுத் தலைவருடைய பரிந்துரைகளைக் காங்கிரஸ் ஏற்க மறுத்தமைக்கும் பல காரணங்கள் இருந்தன. முதலாவதாக, அப்படிப்பட்ட சட்டங்கள் தேவையற்றவை யெனப் பெரும்பாலான மக்களாட்சிக் கட்சியினர் கருதினர். இரண்டாவதாக, தமது திட்டங்களுக்குக் கென்னடி பொது மக்களின் ஆதரவை நாடவில்லை மூன்றாவதாக, செனட் சபையிலிருந்த பல குழுக்களின் தலைவர்கள் கென்னடி போன்றவர்களது இளம் உள்ளங்களில் எழுந்த புத்தறிவுக் களங் காணும் வேட்கையைச் சரிவரப் புரிந்து கொள்ளாதவர்களாயிருந்தனர். நான்காவதாக, கென்னடி தமது கட்சியிலேயே சட்டமியற்றும் நிபுணர்களோடு நெருங்கிய தொடர்பு கொள்ளாதிருந்தார். இறுதியாக நாட்டு மக்களும் பழமைவாதிகளாகவே இருக்கும் தன்மையை விரும்பினர்.



ஜான் கென்னடி
35-வது குடியரசுத் தலைவர்
1961—1963
மக்களாட்சி கட்சி

**தொழிலாளர்—தொழிலதிபர் உறவு**

நாட்டின் செய்பொருள் உற்பத்தியைப் பெருக்கவும், வேலை வாய்ப்புகளை அதிகப்படுத்தவும் கென்னடி தமது பதவிக் காலத்தில்

அரும்பாடுபட்டார். அதனுல் நாட்டில் நிலவிவந்த பணவீக்கத்தையும் கட்டுப்படுத்த முடியுமென நம்பினர். யுனைடெட் ஸ்டேட்ஸ் ஸ்டீல் நிறுவனம் (United Steel Corporation) எஃகின் விலையை 1962-ல் உயர்த்தியபோது, கென்னடி 'அரசுக்கு வேண்டிய எஃகுத் தேவை ஒப்பந்தங்களை வேறு நிறுவனங்களுக்கு மாற்றி விட்டார். இதனுல் அந் நிறுவனம் எஃகின் விலையை உயர்த்து திட்டத்தை உடனே கைவிட்டது. இதனுல் பெரு வாணிகத்தின் மீது எத்தகைய காழ்ப்புணர்ச்சியும் கிடையாதென்றும், பணவீக்கத்தைக் கட்டுப்படுத்தவே இவ்வாறு நடவடிக்கை மேற்கொண்டதாகவும் கென்னடி அறிவித்தார்.

கென்னடியின் பதவிக் காலத்தில் தொழிலாளர் நல சங்கத் தலைவர்களிடையே கருத்து வேறுபாடுகளும், பிளவுகளும் அதிக மாயிருந்தன. தொழில்திறன்பெருத தொழிலாளர்களிடையே வேலையில்லாத் திண்டாட்டம் நாளுக்குநாள் பெருகி வந்தது. அதிக அளவில் தொழில் நிறுவனங்களில் இயந்திரங்கள் பயன்படுத்தப் பட்டமையால், வேலையிழந்த தொழிலாளர்களைத் தொடர்ந்து வேலையில் அமர்த்திக் கொள்வது பற்றிக் கருத்து வேறுபாடு நிலவிற்று. தொழிலாளர்களுக்கும், தொழிலதிபர்களுக்குமிடையே வேலை நேரம் குறித்தும், ஊதியம் பற்றியும் தொடர்ந்து சிக்கல்கள் பல நிலவின. அதனுல், பல தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்

## பொது உரிமைப் போராட்டம்

கல்விக் கூடங்களில் இன ஒதுக்கல் முறையை அகற்றுவதிலும், நீக்கிரோக்களுக்கு வாக்குரிமையைச் சரிவர அளிப்பதிலும் குறிப்பிடத் தக்க வகையில் முன்னேற்றம் காணப்பட்டது. இருப்பினும் நீக்கிரோ மக்கள் தலைவர்கள், நீக்கிரோக்களை இரண்டாந்தர குடிமக் களாகக் கருதப்படும் நிலை தொடர்ந்து நீடிப்பதைக் கண்டு மனம் புழுங்கினர். பல தென் மாநில நகரங்களில் தொடர்ந்து கல்விக் கூடங்களிலும், உணவு விடுதிகள், கடைகள், நூலகங்கள், பேருந்து நிலையங்கள் போன்ற பொது இடங்களிலெல்லாம் இன ஒதுக்கல் முறை இருந்து வந்தது. நீக்ரோ தலைவர் மார்ட்டின் லூதர் கிங்கின் தலைமையில் நீக்கிரோக்கள் இன ஒதுக்கல் முறையினை அகற்றுவதற்காக இன்முறைப் போராட்டங்களில் ஈடுபடலாயினர். 'உள் இருப்பு' ("Sit-ins") இயக்கங்களும், கண்டன ஊர்வலங்களும் ஆங்காங்கே நடைபெற்றன. நியூயார்க் போன்ற மாபெரும் நகரங்களிலும் சிறிய ஊர்களிலும் நீக்கிரோக்கள் எழுச்சியுற்றனர். "வெள்ளையர்களோடு சமவுரிமை," "இப்பொழுதே சமவுரிமை" குரலெழுப்பிக் கொண்டு அவர்கள் இன்முறைப் போராட்டங்களில்

ஈடுபட்டனர். நீக்கிரோக்களின் விழிப்பினைக் கண்ட கென்னடியும் பொது உரிமைப் போராட்டங்கள் இன்முறையில் நடைபெறுவதை வரவேற்றார்.

அமெரிக்காவின் தலைநகரான வாஷிங்டனில் 1963ஆம் ஆண்டு, ஆகஸ்டு திங்களில் நீக்கிரோக்களும், அவர்கள்மீது பரிவு கொண்ட வெள்ளையர்களும் மாபெரும் ஊர்வலம் நடத்தி, தங்கள் பொது உரிமைக் கோரிக்கைகளை வற்புறுத்தினார்கள். ஊர்வலத்தின் பிறகு நடைபெற்ற பொதுக் கூட்டத்தில், மார்ட்டின் லூதர் கிங் பேருரை நிகழ்த்தினார்.

"இன்பக் கனவொன்று காணுகிறேன்; அமெரிக்க
மக்கள் அனைவரும் ஒரு நாள் ஏற்றத் தாழ்வு
ஏதுமின்றி இன்பமாய் வாழ்வதாய்;
இன்பக் கனவொன்று காணுகிறேன்; எனது
பிள்ளைகள் நால்வரும் நிறத்தால் தாழ்ந்து
போகாமல், திறத்தால் உயர்ந்து விளங்குவதாய்
இன்பக் கனவொன்று காணுகிறேன்; உயர்வும்
தாழ்வும் ஒன்றாகி, வெறுப்பும் சினமும் இல்லாமல்
கறுப்பு நிறத்தவர் கண்ணியமாய்க் கவலை இன்றி
வாழ்வதாய்;
இன்பக் கனவொன்று காணுகிறேன்"

இவ்வாறு, உணர்ச்சியோடு உள்ளத்தை உருக்கும் வகையில் கிங் பேசினார். அதற்குப் பின் அவரும், மற்ற நீக்கிரோத் தலைவர்களும், குடியரசுத் தலைவர் கென்னடியைக் கண்டு நீக்கிரோக்களுக்குப் பொது உரிமை கிடைப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறு வேண்டினர். ஜான் கென்னடி நீக்கிரோக்களின் நிலைமையைக் கண்டு இரக்கப்பட்டார். அவருடைய பதவிக் காலத்தில் நீக்கிரோக்களின் இன்னல்கள் எல்லாம் மறைந்துவிடுமெனப் பலரும் கருதினர். எல்லாருக்கும் பொது உரிமை அளிக்கும் சட்டம் ஒன்றைத் தயாரித்து 1963ஆம் ஆண்டில், அவர் காங்கிரஸிற்கு அனுப்பினார். ஆனால், கென்னடி அவ்வாண்டின் இறுதியில் (நவம்பர் 22) வெள்ளையன் ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். கென்னடியின் மறைவு நீக்கிரோக்களுக்கு ஏற்பட்ட பெரிய இழப்பாகும்.

## லிண்டன் ஜான்சன் நிர்வாகம் 1963—1966

ஜான் கென்னடியின் மறைவுக்குப் பிறகு அப்பொழுது துணைத் தலைவராயிருந்த லிண்டன் ஜான்சன் அமெரிக்கக் குடியரசின் தலைவரானார். கென்னடி வகுத்துவிட்டுச் சென்றிருந்த திட்டங்களில்

சிறப்பானவற்றை ஜான்சன் உடனடியாகச் செயல்படுத்த முனைந்தார். ஜான்சனது தலைமையில், அமெரிக்க ஐக்கிய நாடு பல துறைகளிலும், மக்களனைவரின் வாழ்க்கை நிலையினை உயர்த்துவதற்காகப் பாடுபட முற்பட்டது. 1946ஆம் ஆண்டு, நடைபெற்ற தேர்தலில், ஜான்சன் குடியாசுக்காட்சியின் வேட்பாளரான பேரி கோல்டு வாட்டரை (Barry M. Goldwater) எளிதில் தோற்கடித்தார். இதனால் ஊக்கம் பெற்ற ஜான்சன் வறுமை ஒழிப்புப் போர் ஒன்றினை மேற்கொண்டு, அமெரிக்க ஐக்கிய நாட்டில் "சீர்மிகு சமுதாயம்" (Great Society) ஒன்றினை உருவாக்கத் திட்டமிட்டார்.



லிண்டன் ஜான்சன்
36 - வது குடியரசுத் தலைவர்
1963—1966
மக்களாட்சிக் கட்சி

### சீர்மிகு சமுதாயம்

நாட்டில் நிலவிய ஏழ்மை, பிணி, அறியாமை, இன ஒதுக்கல் முறை ஆகியவற்றை அகற்றி, சீர்மிகு சமுதாயம் ஒன்றினை நிறுவ மாபெரும் சமூகத் திட்டங்களை ஜான்சன் வகுத்தார். காங்கிரஸில் குடியரசுக் கட்சியினர் பெரும்பான்மையான இடங்களைப் பெற்றிருந்தமையால், ஜான்சனது திட்டங்களைக் காங்கிரஸ் முழு மனதுடன் ஏற்று, அவற்றைச் செயலாக்குவதற்கான சட்டங்களை உடனுக்குடன் இயற்றியது. இளைஞர்களிடையே நிலவி வந்த வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்க ஒரு வேலைவாய்ப்பு அமைப்புக் குழு (Job Corps) ஏற்படுத்தப்பட்டது. அறுபத்தைந்து வயதுக்கு மேற்பட்டோர் இலவச மருத்துவ உதவி பெற ஒரு திட்டம் வகுக்கப்பட்டது. நகர்ப்புறங்களிலுள்ள சேரிகளை மாற்றியமைக்கவும் நீருக்கும் காற்றுக்கும் விளைவிக்கப்படும் தூய்மைக் கேடுகளை, தடுக்கவும், காங்கிரஸ் திட்டங்களைத் தீட்டியது. 1965ஆம் ஆண்டு வீட்டுவசதி மற்றும் நகர்ப்புற முன்னேற்றத் துறை ஒன்றும் 1966-ல், போக்குவரத்துத் துறை ஒன்றும் கூட்டாட்சி அரசில் ஏற்படுத்தப்பட்டது.

**பொது உரிமைச் சட்டம்**

நீக்கிரோக்களுக்குப் பொது உரிமைகளை அளிப்பதிலும், கல்வி-வேலைவாய்ப்பு ஆகியவற்றில் சமத்துவம் அளிப்பதிலும் மிக மெதுவான முன்னேற்றமே நாட்டில் காணப்பட்டது. நீக்கிரோக்களை முன்னேறவொட்டாதபடி இன வெறிபிடித்த வெள்ளையர்கள் லாஸ் ஏஞ்சல்ஸ், கிளீவ்லண்டு, டெட்ராய்ட், நெவார்க்கு போன்ற நகரங்களில் நீக்கிரோக்கள் வாழ் பகுதிகளைத் தாக்கி ஏராளமான நீக்கிரோக்களைக் கொன்றனர். அவர்களது உடமைகளும் பாழாக்கப்பட்டன. நீக்கிரோ மக்களது துயரத்தினைத் போக்க, கென்னடி திட்டமிட்ட வழியில், ஜான்சன் 1964ஆம் ஆண்டு, பொது உரிமைச் சட்டம்



குடியரசுத் தலைவர் லிண்டன் ஜான்சன் பொது உரிமைச் சட்டத்தில் கையெழுத்திட்டபின், நினைவுப் பரிசாகக் கையெழுத்திடப் பயன்படுத்திய ஒரு பேனாவை மார்ட்டின் லூதர் கிங்குக்கு வழங்கி, கைகுலுக்குதல்

(Civil Rights Act) ஒன்றினை இயற்றினார். இச் சட்டம் பொது இடங்களிலிருந்த விடுதிகள், மற்றும் குடியிருப்புகள், கல்விச் சாலைகள் ஆகியவற்றில் இருந்து வந்த இன ஒதுக்கல் முறையினை ஒழித்தது. மேலும் கூட்டாட்சி அரசின் நீதியினை இனவேறுபாடின்றி பயன்படுத்துதல், சமமான வேலை வாய்ப்புகள் அளித்தல், பொது உரிமை வழக்கு மன்ற நடைமுறைகள், மைய இன உறவு நிலையம், முறைகாண் ஆயம் கொண்டு வழக்கு விசாரணை ஆகியவை பற்றியும் பொது உரிமைச் சட்டம் சில அடிப்படை-

கருத்துகள் குறித்து முடிவுகள் செய்திருந்தது. அடுத்த ஆண்டு வாக்குரிமைச் சட்டம் (Voting Rights Act) ஒன்று இயற்றப்பட்டது. நிறம் அல்லது முன்பு அடிமை நிலையில் இருந்தவர் என்ற காரணத்துக்காக எவருக்கும் வாக்குரிமை மறுக்கப்படக் கூடாது என்ற பதினைந்தாவது அரசியலமைப்புத் திருத்தத்திற்கு மாறாக, வாக்குரிமை அளிக்கப்படாத நீக்ரோகளின் பெயரை வாக்காளர் பட்டியலில் பதிவு செய்ய, கூட்டாட்சி ஆணையர்களை மாநிலங்களுக்கு அனுப்ப அரசின் வழக்குரைஞருக்கு, வாக்குரிமைச் சட்டம் அதிகாரம் அளித்தது. இச் சட்டங்கள் நீக்கிரோக்களுக்கு மன நிறைவை அளிக்கவில்லை.

நீக்கிரோ இனத்தவரிடையே தீவிர கருத்துகளைக் கொண்ட இளந்தலைவர்கள் சிலர், வெள்ளையர்களின் வன்முறைகளை வன்முறையால்தான் வெல்ல வேண்டும் எனக் கருதினர். "கறுப்பர் வலிமை"யில் (Black power) பெருமிதங் கொண்ட அவர்கள், தங்களது உரிமைகளை நிறுவ நேரடியான எதிர்ப்பைத் தெரிவிக்கத் துடித்தனர். அவர்கள் பல பொது உரிமைக் கழகங்களை தங்கள் கைக்குள் வைத்திருந்தனர். ஒரு சில வெள்ளையர்களின் இன வெறியே நாட்டின் அமைதியைக் குலைக்கின்றதென ஜான்சனின் சிறப்பு ஆலோசனைக் குழு கருத்து தெரிவித்தது. நீக்ரோக்களின் உரிமைகளை அமைதியான முறையில் போராடிப் பெறப் பாடுபட்ட நீக்கிரோ தலைவரான மார்ட்டின் லூதர் கிங் (Martin Luther King) 1968 ஏப்ரல் 4ஆம் நாள், இனவெறி பிடித்த வெள்ளையன் ஒருவனால் சுட்டுக் கொல்லப்பட்டார். அவரது மறைவும் நீக்கிரோ இனத்தவருக்கு ஒரு பெரும் இழப்பாகும்.

நாட்டில் பொதுவாக முன்னேற்றம் காணப்பட்ட போதிலும், மக்கள் ஆங்காங்கே பல தொல்லைகளுக்கு ஆளாயினர்கள். நிதி நிலைமையில் பணவீக்கம் நிலவியதாலும், அரசின் செலவுத் தொகை அளவிட முடியாத வண்ணம் உயர்ந்து கொண்டே போனமையாலும் கொலைக்குற்றங்கள் மிகுந்தமையாலும், நகர்ப்புறங்கள் சிதைவுற்றமையாலும் மக்கள் அரசு நிறுவனங்களைக் குறை கூறலாயினர். இளைஞர்கள் பலர் அமெரிக்க சமுதாயத்தின் மீது வெறுப்பு கொண்டனர். அவர்களது வெறுப்பினை விஸ்கான்சின், கொலம்பியா போன்ற பல்கலைக்கழகங்களில் நிகழ்ந்த கிளர்ச்சிகளின் வாயிலாக, வெளியிட்டனர். செனட் உறுப்பினர் ராபர்ட் கென்னடியும் நீக்ரோத் தலைவர் கிங்கும் சுட்டுக் கொல்லப்பட்டமையிலிருந்து நாட்டில் வன்முறை, வாழ்க்கையின் ஒரு பகுதியாக மாறி விட்டமையைக் காண முடிந்தது.

## வெளிநாட்டு உறவு

பொதுவுடைமைக் கட்சி நாடுகளுக்கும், பொதுவுடைமைக் கட்சி யல்லாத நாடுகளுக்குமிடையே தொடர்ந்து முரண்பாடு இருந்து வந்தது. குடியரசுத் தலைவர் ஐஸன்ஹோவர் முரண்பாடுகளைக் களைந்து நட்புறவினை உருவாக்குவதற்காக ரஷ்யாவின் தலைமை அமைச்சரான குருஷ்சேவை நேரிடையாகச் சந்தித்துப் பேச முயற்சித்தார். நேரிடைப் பேச்சுக்குச் சில கிழமைகள் முன்பு ஓர் அமெரிக்க வேவு பார்க்கும் விமானம் (U 2) சோவியத் நாட்டில், சுட்டு வீழ்த்தப்பட்டது. ரஷ்யாவின் இராணுவ தளங்களைக் கண்டறிய வேவு விமானத்தை ஓட்டியதாக அதனை செலுத்திய பிரான்ஸிஸ் பவர்ஸ் என்பவர் சொன்னார். ஐஸன்ஹோவரை இழிவுப் படுத்த நினைத்த குருஷ்சேவ் அந் நிகழ்ச்சிக்கு ஐஸன்ஹோவர் மன்னிப்பு கேட்க வேண்டுமென கோரினார். ஐஸன்ஹோவர் மன்னிப்பு கேட்க மறுக்கவே, மீண்டும் தொடர்ந்து அமெரிக்காவுக்கும் ரஷ்யா வுக்குமிடையே முரண்பாடு அதிகரித்தது.

ஜான் கென்னடி பதவியேற்றதும், மீண்டும் குருஷ்சேவ் அமெரிக்காவுக்குத் தொல்லை தர ஆரம்பித்தார். ஜெர்மனியிலுள்ள பெர்லின் நகர் முழுவதையும் கைப்பற்ற ரஷ்யா திட்டமிட்டது. ரஷ்யாவின் ஆட்சிக்குட்பட்டிருந்த கிழக்கு பெர்லினிலிருந்து, ஏராளமான மக்கள் மேற்கு பெர்லினுக்குக் குடிபெயர்ந்தனர். இதைக் கண்டு ரஷ்யா அச்சமுற்றது. ரஷ்யாவின் திட்டத்தை அறிந்த கென்னடி உடனே அமெரிக்கப்படைகளை மேற்கு பெர்லினுக்கு அனுப்பி, அப்பகுதி வாழ் மக்களின் உரிமையைக் காத்தார். ரஷ்யா வெட்கிப்போய், கிழக்கு பெர்லினுக்கும் மேற்கு பெர்லினுக்கு மிடையே உள்ள எல்லையில் மக்கள் தப்பிப் போகாவண்ணம் சுவரெழுப்பிற்று.

## கியூபா

பொதுவுடைமைக் கொள்கையினரது சூழ்ச்சி முறைகளும், ஊடுருவல்களும், நாச வேலைகளும் அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு வெகு அருகிலுள்ள கியூபாவில் நிகழலாயின. கியூபாவின் தலைமை அமைச்சரான பீடல் காஸ்ட்ரோ (Fide Castro) ஒரு புரட்சி செய்து குடியரசுத் தலைவரை வெளியேற்றிவிட்டு, தானே, கியூபாவின் வல்லாட்சியாளரானார். காஸ்ட்ரோ, அமெரிக்க ஐக்கிய நாட்டை வெறுத்தார். கியூபாவின் பொருளாதார முன்னேற்றத்திற்கும், இராணுவ வலிமைக்கும், பொதுவுடைமை நாடுகளின் ஆதரவைத் தேடினார். இவற்றையெல்லாம் கண்ட ஐஸன்ஹோவர் மிகவும் பொறுமையாக இருந்தார். கியூபாவிலுள்ள அமெரிக்கத் தூதுவராகப்

பணியாளர்களின் எண்ணிக்கை குறைக்கப்படவேண்டும் என்று காஸ்ட்ரோ கோரியதும், ஐஸன்ஹோவர் தூதுவரகத்தை மூடிவிட்டுக் கியூபாவுடனுன உறவுமுறையைத் துண்டித்துக்கொண்டார்.

ஜான் கென்னடி குடியரசுத்தலைவராக இருந்தபோது, காஸ்ட்ரோவின் எதிரிகள் அமெரிக்க ஐக்கிய நாட்டின் இசைவோடு, காஸ்ட்ரோவின் ஆட்சியைக் கவிழ்க்கப் புரட்சியிலீடுபட்டனர். ஆனல், கென்னடி புரட்சியாளர்களுக்கு வேண்டிய கப்பற்படை, விமானப் படை முதலிய உதவிகளையளிக்க மறுத்தார். அதனல், புரட்சியாளர்கள் தோற்றுப் போயினர். 1962ஆம் ஆண்டு, காஸ்ட்ரோ இரஷ்யாவிடமிருந்து ஏராளமாகத் தற்பாதுகாப்புக்கெனப் படைக் கருவிகளை வாங்கியிருந்தார். கியூபாவில், ஏவுகணை தளங்கள் இரஷ்யாவால் அமைக்கப்படுவதை அமெரிக்க வேவுபார்க்கும் விமானங்கள் புகைப் படத்தால் கண்டுபிடித்தன. இரஷ்யா ஏவுகணைத் தளங்களை உடனே கியூபாவிலிருந்து அகற்ற வேண்டுமெனக் கென்னடி எச்சரிக்கை ஒன்றை விடுத்தார். அதே நேரத்தில், கியூபாவை அமெரிக்கக் கப்பற் படை தடுப்புப்பாதுகாப்புச் செய்ய அனுப்பப்பட்டது. இதைக் கண்ட குருஷ்சேவ் ஏவுகணை விமான தளங்களை உடனே அகற்றினர். கரீபியன் கடற்பகுதியில் காஸ்ட்ரோவின் நடவடிக்கைகளை அமெரிக்கா உன்னிப்பாக மேற்பார்வையிட்டு வந்தது.

**வியட்நாம்**

தென் கிழக்கு ஆசியாவின் தென் கிழக்குப் பகுதியிலுள்ள வியட்நாம், முன்னர் இந்தோ - சீன என்றழைக்கப்பட்டது. அன்னம், கொச்சின் சீன, கம்போடியா ஆகிய சிறு நாடுகள் இந்தோ - சீனவில் உள்ளடங்கியிருந்தன. இரண்டாவது உலகப் போர் வரை இந்தோ—சீன, பிரான்ஸின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தது. நாளாவட்டத்தில் இந்தோ - சீன மக்களிடையே தேசிய உணர்ச்சி வளரலாயிற்று. அத்துடன் பொதுவுடைமைக் கட்சியின் கோட்பாடுகளும் அவர்களிடையே வேரூன்றத் தொடங்கின. அதன் விளைவாக, வியட்நாம் உரிமைக் கழகம் ஒன்று பொதுவுடைமைக் கட்சியின் தலைவரான ஹோ சி மின் (Ho Chi Minh) என்பவரின் தலைமையின் கீழ் அமைக்கப்பட்டது. இரண்டாவது உலகப் போரின் போது ஐப்பானியர்கள் இந்தோ - சீனவிலிருந்த பிரெஞ்சுப் படைகளை முறியடித்து விரட்டினர்கள். இறுதியில் ஜப்பான் தோல்வியுற்றபோது, ஹோ சி மின் இந்தோ - சீனவை, வியட்நாம் என்ற பெயருடன் ஒரு குடியரசாக அமைத்தார். அக் குடியரசு இந்தோ - சீனவின் வட பகுதியில் செல்வாக்குப் பெற்றிருந்தது. தென்பகுதியில் பிரெஞ்சுக்காரர்கள் மீண்டும் தங்களுடைய ஆதிக்கத்தை நிறுவினர்கள். ஆனல், அங்கு வாழ்ந்த மக்களின் தேசிய உணர்வின் அடிப்படையில் எழுந்த உரிமைப்

போராட்டத்தின் விளைவாக, பிரான்சு 1949 ஆம் ஆண்டு அவர்களுக்கு உரிமையளித்தது. அதன் விளைவாகத் தென் பகுதியில், பாதாய் (Baodai) தலைமையில் வியட்நாம் அரசு ஏற்படுத்தப்பட்டது. கம்போடியா, லாவோஸ் ஆகிய பகுதிகளுக்கும் பிரான்சு, தன்னாட்சி உரிமை வழங்கியது.



வியட்நாம்

1950 ஆம் ஆண்டளவில், இந்தோ-சீனா மூன்று பிரிவுகளாக இருந்தது. லாவோஸும் கம்போடியாவும் சேர்ந்த அரசு, பாதாயின் கீழ் அமைக்கப்பட்ட வியட்நாம், ஹோ சி மின் கீழ் அமைக்கப்பட்ட மக்களாட்சிக் குடியரசு, ஹோ சி மின் படைகள், கொரில்லாப் போர் முறையைக் கையாண்டு தம்முடைய செல்வாக்கைப் பரப்ப

முயன்றன. அவைகளுக்குச் சீனப் பொதுவுடைமையினரது ஆதரவு இருந்தது. எனவே 1954-ல், இந்தோ-சீனுவின் சிக்கலுக்கு முடிவு காண ஜெனிவாவில் மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. அதில் அமெரிக்க ஐக்கிய நாடு உள்பட, பத்தொன்பது நாடுகள் கலந்து கொண்டன. இம் மாநாட்டில் பொதுவுடைமைக் கட்சியினரது வடக்கு வியட்நாமிற்கும், தென்வியட்நாமிற்கும், இடையே 17° இணைக்கோடு, எல்லையாக வரையறுக்கப்பட்டது. தெற்கு வியட்நாமிலும், பொது வுடைமைவாதிகளின் ஆதிக்கத்தை ஏற்படுத்த, வியட்நாம் பொது வுடைமைக் கொள்கையினர் தீவிரமாக முனைந்திருக்கிருர்கள். அவர்களுக்கு வியட்காங் (Viet Cong)என்று பெயர். அவர்கள் கொரில்லா முறைப் போரைக் கையாண்டு, ஆட்சியை ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். அவர்களுக்கு வடக்கு வியட்நாம் அரசும், பொதுவுடைமை நாடுகளும் உதவி செய்கின்றன. தெற்கு வியட்நாமில் அமெரிக்க ஐக்கிய நாட்டுப் படைகள் பொதுவுடைமை வாதிகளுக்கு எதிராக அந் நாட்டின் அரசுக்கு உதவி செய்ய முனைந்தது.

அமெரிக்கா, தொடக்கத்தில் தென் வியட்நாமிற்குப் பொருள் தந்தும், படைக் கருவிகள் அளித்தும், ஆட்சி முறைக்கும் இராணுவ அமைப்பிற்கும் அறிவுரை வழங்க நிபுணர்களை அனுப்பியும் உதவி வந்தது. ஆனல், நாளாவட்டத்தில் வடக்கு வியட்நாம், சீனு, இரஷ்யா ஆகிய நாடுகள் ஒருமுகமாக வியட்காங்கினருக்கு உதவி செய்வதைக் கண்ட அமெரிக்கா, தென் வியட்நாம் மக்களைப் பொதுவுடைமையினரது பிடியிலிருந்து காப்பாற்றத் தீவிரமாக உதவி செய்யலாயிற்று. தென் வியட்நாம் விமானப் படைக்கு ஆதரவாக, வடக்கு வியட்நாமின் போர்த்திறம் வாய்ந்த தளங்களைத் தாக்க, அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஜான்சன் அமெரிக்க விமானப் படையினரை அனுப்பினர். இரண்டு குறிக்கோள்களுக்காக அமெரிக்கா, தென் வியட்நாமினருக்கு உதவ முன்வந்தது. தென் வியட்நாம் மக்களது ஆதரவுடன் நிலை யான அரசாட்சியை நிறுவவேண்டுமென்பதும், தென் வியட்நாமிலும் லாவோஸிலும் உள்ள வியட்காங்கினரை அடக்கி ஒடுக்குவதும் அமெரிக்காவின் குறிக்கோள்களாகும்.

வியட்காங் படையினர் தென் வியட்நாமில் நாச வேலைகளில் ஈடுபட்டதோடல்லாமல் கம்போடியா, லாவோஸ் ஆகிய நாடுகளையும் தாக்கலாயினர். பொதுவுடைமைக் கொள்கை ஆசியாவில் பரவுவதைத் தடுக்க விரும்பிய அமெரிக்கா, மேன்மேலும் தனது படைகளைத் தென் வியட்நாமிற்கு அனுப்பியது. வியட்காங் ஆதர வாளர்களான வடக்கு வியட்நாமினருக்கும், தென் வியட்நாம் ஆதரவாளர்களான அமெரிக்கருக்குமிடையே, தென்வியட்நாமில் கடும் போர் நிகழலாயிற்று. உலக நாடுகள் அனைத்தும் இதனைக் கண்டு

அஞ்சின. 1968ஆம் ஆண்டளவில், வியட்நாமில் ஐந்து இலட்சம் அமெரிக்க வீரர்கள் போரில் ஈடுபட்டிருந்தனர். அவ்வாண்டின் இறுதியில் கணக்கெடுத்தபோது, அதுவரை வியட்நாம் போரில் 29,000 அமெரிக்க வீரர்கள் கொல்லப்பட்டனர்; 1,85,000 வீரர்கள் காயமுற்றனர்; 950 வீரர்கள் காணுமற் போயினர்; 350 பேர் எதிரிப் படையினரால் கடத்திச் செல்லப்பட்டிருந்தனர். இவற்றைக் கண்ட அமெரிக்க மக்கள் வியட்நாம் போரில் அமெரிக்கா ஈடுபட்டிருப்பதைக் கடுமையாக எதிர்க்கலாயினர். அமெரிக்காவின் பல பகுதிகளிலும் கண்டனக் கூட்டங்களும் ஊர்வலங்களும் நடைபெற்றன. அமெரிக்க ஐக்கிய நாட்டிற்கு எவ்வகையிலும் தொடர்பு இல்லாத வியட்நாம் போரில், நூற்றுக் கணக்கான இளம் அமெரிக்க வீரர்கள் கொல்லப்படுவது அறநெறிக்கு முரணுனது என்றும் சிலர் கருதினர். இவற்றைக் கண்ட குடியரசுத் தலைவர் ஜான்சன், வட வியட்நாம் அரசுடன் அமைதிக்கான பேச்சினைத் தொடங்க முயற்சித்தார்.

வடக்கு வியட்நாம் அரசு, அமெரிக்கா தனது விமானத் தாக்குதல்களை வரையறையின்றி உடனடியாக நிறுத்திக் கொண்டால்தான் அமைதிக்கான பேச்சில் கலந்து கொள்ளும் என அறிவித்தது. ஜான்சனும் விமானத் தாக்குதல்களை நிறுத்த ஒப்புக் கொண்டார். ஆனால், விமானத் தாக்குதலை நிறுத்திய பின்னர், வடக்கு வியட்நாம் தாக்குதல் செய்யக் கூடாது என்று ஒரு நிபந்தனை விதித்தார். இந் நிபந்தனையை ஏற்க மறுத்த வடக்கு வியட்நாம், அமெரிக்கப் படைகள் அனைத்தும் தென் வியட்நாமிலிருந்து வெளியேற்றப்பட்டால்தான் அமைதிக்கான பேச்சினைத் தொடங்கும் என அறிவித்தது. இதற்கிடையே வியட்காங் படையினர் தென் வியட்நாம் முழுவதிலும் நாச வேலைகளில் ஈடுபடவே மீண்டும் போர் தீவிரமாகியது.

இராணுவ வலிமை கொண்டு வியட்நாமில் நடைபெற்றுவந்த போரினுக்கு முடிவு காண்பது இயலாத செயல் என்பதை அமெரிக்க இராணுவ நிபுணர்கள் ஜான்சனுக்குத் தெரிவித்தனர். எனவே, ஜான்சன் அமைதியான முறையில் வியட்நாம் போரை நிறுத்தத் திட்டமிட்டு, வடக்கு வியட்நாம் கோரியதுபோல விமானத் தாக்குதல்களை நிறுத்த ஒப்புக்கொண்டார். 1969ஆம் ஆண்டு, ஜனவரித் திங்களில் பாரிஸில் அமைதிக்கான பேச்சு தொடங்கிற்று. அதில் அமெரிக்க ஐக்கிய நாடு, தென் வியட்நாம், வட வியட்நாம், வியட்காங் பொதுவுடைமையினர் கொண்ட தேசிய உரிமைப் போராட்ட குழு (National Liberation Front) ஆகியவற்றின் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். அமைதிப் பேச்சுக்கான அடிப்படைக் கருத்துகளிலேயே இருதரப்பாரிடையேயும் வேறுபாடுகள் நிலவி

யமையால், நல்லதோர் முடிவினை நோக்கி முன்னேற்றம் ஏதும் காணப்படவில்லை.

## ரிச்சர்டு நிக்ஸன் நிர்வாகம்

வியட்நாம் போரின் விளைவாக லிண்டன் ஜான்சனும், அவர் சார்ந்திருந்த மக்களாட்சிக் கட்சியும் அமெரிக்க மக்களின் ஆதரவை இழந்தனர். 1968ஆம் ஆண்டில் நடைபெற்ற குடியரசுத்தலைவர் தேர்தலில் மக்களாட்சிக் கட்சி வேட்பாளரான ஹூபர்ட் ஹம்ப்ரியைச் (Hupert Humphrey) குடியரசுக் கட்சி வேட்பாளரான ரிச்சர்டு நிக்ஸன் (Richard M. Nixon) தோற்கடித்தார். அமெரிக்க ஐக்கிய நாட்டின் முப்பத்தேழாவது குடியரசுத் தலைவரான ரிச்சர்டு நிக்ஸன் 1969, ஜனவரி, 20 ஆம் நாள் பதவியேற்றார். நிக்ஸன் பதவியேற்றதும் முதல் வேலையாக வியட்நாம் சிக்கலைத் தீர்ப்பதில் முனைந்தார்.



ரிச்சர்டு நிக்ஸன்
37-வது குடியரசுத் தலைவர் (1969)
குடியரசுக் கட்சி

பாரிஸில் தொடர்ந்து அமைதியை நிலைநாட்டுவதற்கான முயற்சிகள் நடைபெற்று வந்தன. இரு தரப்பினருக்குமிடையே உடன்பாடு ஏற்பட்டதும் தென் வியட்நாமிலிருந்து வெளிநாட்டுப் படைகள் அனைத்தும் வெளியேற்றப்படும் என்றும், அப்படி வெளிநாட்டுப்படைகள் வெளியேறுவதை மேற்பார்வையிட இரு தரப்பாரும் ஒத்துக்கொள்ளக் கூடிய வகையில் அனைத்துலக மேற்பார்வைக் குழு ஒன்று அமைக்கப்பட வேண்டும் என்றும், அம் மேற்பார்வைக் குழுவின் கவனிப்பில் தேர்தல்கள் நடைபெற வேண்டும் என்றும், இரு தரப்பினரும் கைது செய்த போர் வீரர்களை விடுவிக்க வேண்டும் என்றும், வியட்நாம் நிலைமைபற்றி, 1954ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டஜெனிவா ஒப்பந்தத்தை மேற்கொள்ள வேண்டும் என்றும், கம்போடியா, லாவோஸ் நிலைமைபற்றி, 1962ஆம் ஆண்டு ஏற்றுக்கொண்ட ஒப்பந்தத்தைப் பின்பற்ற வேண்டும் என்றும்

நிக்ஸன் அறிவித்தார். இதற்கு "நிக்ஸன் திட்டம்" (The Nixon Plan) என்று பெயர்.

வியட்நாம் போரினால் வெறுப்புற்ற அமெரிக்க மக்களின் எதிர்ப்பினைக் கண்ட நிக்ஸன், முதல்முறையாக, 1969ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள் தென் வியட்நாமிலிருந்து பெரும் எண்ணிக்கையிலான படைப்பிரிவு ஒன்றினைத் தாயகம் திரும்பச் சொல்லி உத்தரவிட்டார். அதே ஆண்டு, டிசம்பர்த் திங்களுக்குள்ளாக, 35,000 அமெரிக்க வீரர்கள் தாயகம் திரும்புவர் என்று நிக்ஸன் செப்டம்பரில் அறிவித்தார். 1970ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்களுக்குள்ளாக 50,000 வீரர்கள் வியட்நாமிலிருந்து வீடு திரும்புவர் என்று மீண்டும் டிசம்பரில் அறிவித்தார். ஆனால், நிக்ஸன் இவ்வாறு அறிவித்தபடி அமெரிக்க வீரர்களை வியட்நாம் போரிலிருந்து விடுவிக்கவில்லை. அதற்கு மாறாக, வியட்நாமில் அமெரிக்கப் படையினர் போரிலீடுபட்டுள்ளது போதாதென, கம்போடியாவில் இராணுவப் புரட்சி ஏற்பட்டது. நிக்ஸன் பொதுவுடைமைக் கட்சியினருக்கு எதிராக 1970ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் இறுதியில், கம்போடியாவுக்கும் அமெரிக்கப்படைகளை அனுப்பினர். இச் செய்கையை செனட் சபையில் வெளிநாட்டுறவுக் குழு கடுமையாகக் கண்டித்தது. இருப்பினும், தென் வியட்நாமிலிருந்து தொடர்ந்து அமெரிக்க வீரர்களைத் தாயகம் மீட்பதற்கும், அங்குள்ள அமெரிக்க மக்களின் உயிரினைக் காப்பாற்றுவதற்கும், கம்போடியாவில் ஊடுருவல் செய்துள்ள பொதுவுடைமைக் கட்சியினரையும் வியட்காங் படையினரையும் அடக்கி ஒடுக்கவும், அமெரிக்கப் படைகள் கம்போடியாவுக்கு அனுப்பப்படுவது சரியே என்று நிக்ஸன் வாதிட்டார். பொதுவுடைமைவாதிகளையும், வியட்காங் படையினரையும் தோற்கடிப்பதில் தென் வியட்நாமும், கம்போடியாவும் இணைந்து ஒத்துழைப்பதை அமெரிக்கா ஆதரிக்கும் என்று நிக்ஸன் அறிவித்தார். 1971ஆம் ஆண்டு முழுவதும் வடக்கு வியட்நாமிலுள்ள அமெரிக்கப் போர்க்கைதிகளை விடுவிப்பதில், வடக்கு வியட்நாம் அரசோடு அமெரிக்கா பெரு முயற்சி செய்தது. ஆனால், பலன் ஏதும் ஏற்படவில்லை.

## அமெரிக்க - சீன உறவில் புதிய திருப்பம் (Ping Pong Diplomacy)

சீனாவில் மா சே துங்கின் தலைமையில், பொதுவுடைமையினர் ஆட்சியைக் கைப்பற்றிய நாளிலிருந்து, அமெரிக்கா, சீனாவைத் தனது முதல் எதிரியாகக் கருதி வந்தது. சீனர்களும் அமெரிக்காவுக்கு எதிராகக் கொரியாவிலும், வியட்நாமிலும் தொடர்ந்து

பொதுவுடைமைக் கட்சியினரை ஆதரித்து வந்தனர். அமெரிக்க ஆதரவில் பார்மோஸா தீவில் இயங்கி வரும், சியாங் கே ஷேக்கின் தேசிய சீனுவைச் சீன தனது நாட்டின் ஒரு பகுதியாகவே கூறி வருகிறது. சீனு, ஐக்கிய நாடுகள் சபையில் உறுப்பினராவதை அமெரிக்கா தொடர்ந்து எதிர்த்துவந்தது. இந் நிலையில் அமெரிக்க சீன உறவில் திடீரென ஒரு திருப்பம் ஏற்பட்டது.

சீனு, அமெரிக்க மேசை வரிப் பந்தாட்ட (Ping Pong) குழு ஒன்றினை பீக்கிங்கில், 1971 ஏப்ரலில், விளையாட அழைத்தது. அவ்வழைப்பை ஏற்ற அமெரிக்க மேசை வரிப் பந்தாட்ட விளையாட்டுக் குழு பீக்கிங்கில் நன்முறையில் விளையாடிற்று. அங்கு அவர்களுக்கு மாபெரும் வரவேற்பு தரப்பட்டது. சீனத் தலைமை அமைச்சர் சூயென்லாய் அமெரிக்க விளையாட்டு வீரர்களை வரவேற்றுப் பேசுகையில் சீனுவுக்கும், அமெரிக்காவுக்கும் இடையேயுள்ள நட்புறவு வரலாற்றில், ஒரு புதிய இயல் தொடங்குகிறது என்று குறிப்பிட்டார். சீனு தனித்திருத்தல் கொள்கையினின்று விலகி வருவதைக் கண்ட அமெரிக்காவும் மகிழ்ந்தது. இருபதாண்டுகளாக சீனுவுடனை வர்த்தகத்தில் விதிக்கப்பட்டிருந்த தடைகளை நிக்ஸன் உடனடியாக நீக்கினர். சீனுவுக்கு அமெரிக்கர் செல்லவும் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன.

அமெரிக்கக் குடியரசுத்தலைவர் நிக்ஸன் 1972ஆம் ஆண்டு, மேத் திங்களுக்குள்ளாக, சீனுவுக்குச் செல்லப் போவதாக அறிவித்துள்ளார். அதற்கான ஏற்பாடுகளைச் செய்ய நிக்ஸனுடைய பாதுகாப்பு அதிகாரியான ஹென்றி கிஸ்ஸிங்கர் (Henry Kissinger) பீக்கிங்கிற்கு இரண்டு முறை சென்று வந்துள்ளார். அமெரிக்க ஐக்கிய நாட்டின் வெளிநாட்டுறவு வரலாற்றில், நிக்ஸன் ஒரு மாபெரும் மாற்றத்தைப் புகுத்தியுள்ளார். ஐக்கிய நாடுகள் சபையில் சீனு சேர்த்துக் கொள்ளப்படுவதையும் எதிர்ப்பதில்லை என அமெரிக்கா முடிவு செய்துள்ளது. இவ்வகையில் சீனுவுடன் நட்புறவைக் கொள்வதன்மூலம் அமெரிக்கா, இந்தோ - சீனுவில் நிலவி வரும் சிக்கலுக்கு நல்லதோர் முடிவினைக் காணக்கூடும் என எதிர்பார்க்கப்படுகிறது. உலக அரசியல் அரங்கில் ஏற்பட்டுள்ள இத் திருப்பத்தைக் கண்ட இரஷ்யா மிகவும் கவலை கொண்டுள்ளது. அமெரிக்காவும் சீனுவும் நட்புறவு கொள்வதன்மூலம், சீனு மிக மேன்மையான அரசாக ஏற்றுக் கொள்ளப்படுவதை இரஷ்யா விரும்பவில்லை. அமெரிக்காவும் சீனுவும் இணைந்து இரஷ்யாவுக்கு எதிராகக் கூட்டுச் சதி செய்வதாகப் பிராவ்தா (Pravda) செய்தித்தாள் கருத்து வெளியிட்டுள்ளது.

**நிதிநிலையில் குழப்பம்(The Dollar crisis)**

அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி வாணிகத்தில் நிலவிவந்த வேறுபாட்டு மிகையால், அமெரிக்க நிதி நிலையில். 1971ஆம் ஆண்டு தொடக்கத்திலிருந்தே குழப்பம் நிலவி வந்தது. கடந்த பத்து ஆண்டுகளில், ஏழாண்டுகள் அமெரிக்கா இறக்குமதி செய்த பொருள்களின் மதிப்பு, ஏற்றுமதி செய்த பொருளின் மதிப்பை விஞ்சியிருந்தது. மேற்கு ஜெர்மனியில் செய்த பொருள் களும், ஜப்பானில் செய்த பொருள்களும் அமெரிக்க மக்களால் விரும்பிப் பெருமளவில் வாங்கப்பட்டன. எனவே அவ்விரு நாடு களிலும் அமெரிக்க டாலர் சென்று குவிந்தது. மேலும் அமெரிக்கா உலகில் பின்தங்கியுள்ள பல நாடுகளுக்கும் வியட்நாமிற்கும் ஏராளமான உதவியை அளித்தமையால் அமெரிக்க டாலர் நாட்டி னின்றும் வெளியேறியது. இதனல் ஏற்பட்ட நிதி நெருக்கடியைச் சாமாளிக்க, 1971ஆம் ஆண்டில் நிக்ஸன் சில விதிமுறைகளை அறிவித்தார். தற்காலிகமாக அமெரிக்க டாலருக்கு ஈடாகத் தங்கம் கேட்கக் கூடாதென்றும், மூன்று திங்களுக்கு விலை, ஊதியம், வாடகை, ஆதாயப் பங்கு—ஆகியவற்றை உயர்த்தக் கூடாது என்றும், கூட்டாட்சி அரசின் செலவுத் தொகையினை 15 சதவீதம் குறைக்க வேண்டுமென்றும், இறக்குமதி செய்யப்படும் பொருள்கள்மீது பத்துச் சதவீதம் கூடுதல் வரி விதிக்க வேண்டு மென்றும், அமெரிக்காவினுள் செய்யப்படும் மோட்டார்கார்கள் மீதான தீர்வை வரி அகற்றப்படும் என்றும், புதியதாகத் துவக்கப் படும் தொழிற்சாலைகளுக்கு வரிவிலக்கு அளிக்கப்படும் என்றும் நிக்ஸன் அறிவித்தார். ஆனல், இவ்விதிமுறைகளைப் பிற நாடுகள் வரவேற்கவில்லை. டாலர் மதிப்புக்கு ஏற்றவாறு செல்வச் செழிப்பின் உச்சநிலையிலுள்ள மேற்கு ஜெர்மனியும் ஜப்பானும் தத்தம் நிதி நிலையினை மாற்றியமைக்க மறுத்துவிட்டன. இருப்பினும் நிக்ஸன் தொடர்ந்து நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டு வருகிறார்.

**விண்வெளிப் பயணங்கள்**

உலகச் சிந்தனை எல்லாம் விண்வெளியை நோக்கி இருக்கும் வான் வெளிக் காலத்தில் நாம் வாழ்கின்றோம். வான வெளியில் பல வகையான ஆராய்ச்சிகள் தற்பொழுது நடைபெற்று வருகின்றன. வானத்திலிருந்து செய்திகளை அஞ்சல் செய்யும் கருவிகளும் வானிலையை அறிவிக்கும் கருவிகளும், நிலாவினைப் படம்பிடித்துப் பூமிக்கு அனுப்பும் கருவிகளும், நிலவில் மெதுவாக இறங்கும் கலங்களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. விண்வெளி ஆராய்ச்சி யிலும், விண்வெளிப் பயணங்களிலும் அமெரிக்க ஐக்கிய நாடு முதன்மையான இடத்தைப் பெற்றுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

விண்வெளி ஆராய்ச்சிக் கழகம் (NASA-National Aeronautics and Space Administration) 1958ஆம் ஆண்டு அமெரிக்காவில்



அப்போலோ-15-இல் சென்று நிலவில் இறங்கிய பின்னர், ஜேம்ஸ் இர்வின் மோட்டார் கார் போன்றதோர் ஊர்தியை இயக்குகிறார். பால்கன் (Falcon) இறங்கு ஊர்தி அருகில் உள்ளது.

திறக்கப்பட்டது. மெர்க்குரி திட்டத்தின்கீழ், ஆறு அமெரிக்க விண்வெளி விமானிகள் விண்வெளியினுள்ளே பறந்து சென்றனர். அவர்களில் நால்வர் உலகை வலம் வந்தனர். முதன்முதலாக விண்வெளியில் பயணம் செய்த அமெரிக்கரான ஜான் கிளென் (John Glenn) 1962ஆம் ஆண்டு, பிப்ரவரி 20ஆம் நாள், உலகை மும்முறை வலம் வந்தார். 1970ஆம் ஆண்டிற்குள், நிலவில் மனிதன் இறங்க வேண்டும் என்று குடியரசுத் தலைவர் கென்னடி திட்டமிட்டார். அதன்படி அப்போலோ சோதனைகள் ஒன்றன்பின் ஒன்றாக நடைபெற்றுவந்தன.

விண்வெளி எல்லையற்றது. வானவெளியில் பயணம் செய்வதற்கும், செவ்வாய், வெள்ளி முதலிய கிரகங்களுக்குச் செல்லவும் நிலவு ஆராய்ச்சி முதற்படியாக அமையும். 1968ஆம் ஆண்டு, டிசம்பர்த் திங்களில், அப்போலா—8, விமானிகள், நிலவை எழுபது மைல் தொலைவிலிருந்து சுற்றிப் பார்த்து வந்தனர். அப்போலோ—10, விமானிகள், நிலவைப் பத்து மைல் தொலைவிலிருந்து சுற்றிப் பார்த்துத் திரும்பினர். 1969ஆம் ஆண்டு, ஜுலைத் திங்கள்,

20ஆம் நாள் மனிதனது நெடுநாளைய கனவு நனவாயிற்று. அன்று அப்போலோ-11 விமானிகளான ஆர்ம்ஸ்டிராங்கும் (Armstrong), ஆல்டிரினும் (Aldrin) நிலாவில் இறங்கி நடமாடி அரிய பல ஆராய்ச்



அப்போலோ-11 விமானியான ஆர்ம்ஸ்டிராங் கினால் நிலவில் எடுக்கப்பட்ட படம். ஆல்டிரின் நிலவில் நடமாடுகிறார், லூனர் இறங்கு ஊர்தியையும் பிற ஆய்வுக் கருவிகளையும் காணலாம்.

சிகளைச் செய்து பின்னர் நன்முறையில் பூமிக்குத் திரும்பினர். அண்மையில் (ஜூலை 26, ஆகஸ்டு 8, 1971) அப்போலோ - 15, விமானிகளான டேவிட் ஸ்காட்டும் (David R. scott), ஜேம்ஸ் இர்வினும் (James B. Irwin) நிலவில் இறங்கி, மோட்டார்கார் போன்ற தோர் ஊர்தியில் நிலவின் பகுதிகளைச் சுற்றிப்பார்த்துவிட்டு நன்முறையில் பூமிக்குத் திரும்பினர். இவ்வகையில் விண்வெளி ஆராய்ச்சிகளில் அமெரிக்கர் தொடர்ந்து ஈடுபட்டு வருகின்றனர். இறைவனது படைப்பின் அருமைகளை அறிந்து கொள்வதற்கு இத்தகைய ஆராய்ச்சிகள் துணை புரிகின்றன. இயற்கையை வெல்லும் இந்த அறிவு, உலகம் நிலைக்க, நீடுவாழ அமைதிக்கே பயன்படுவ தாகுக !

# பிற்சேர்க்கை - 1

## அமெரிக்கக் குடியரசுத் தலைவர்களின் பட்டியல்

| வரிசை எண் | பதவிக்காலம் | பெயர் | கட்சி |
|---|---|---|---|
| 1. | 1789 - 1797 | ஜார்ஜ் வாஷிங்டன் | ——— |
| 2. | 1797 - 1801 | ஜான் ஆடம்ஸ் | கூட்டாட்சிவாதி |
| 3. | 1801 - 1809 | தாமஸ் ஜெபர்சன் | மக்களாட்சிக் குடியரசு |
| 4. | 1809 - 1817 | ஜேம்ஸ் மாடிசன் | மக்களாட்சிக் குடியரசு |
| 5. | 1817 - 1825 | ஜேம்ஸ் மன்ரோ | மக்களாட்சிக் குடியரசு |
| 6. | 1825 - 1829 | ஜான் குவின்சி ஆடம்ஸ் | மக்களாட்சிக் குடியரசு |
| 7. | 1829 - 1837 | ஆன்ட்ரூ ஜாக்ஸன் | 0 மக்களாட்சி |
| 8. | 1837 - 1841 | மார்ட்டின் வான் பியூரன் | மக்களாட்சி |
| 9. | 1841 | வில்லியம் ஹென்றி ஹாரிசன் | விக்கு |
| 10. | 1841 - 1845 | ஜான் டைலர் | விக்கு |
| 11. | 1845 - 1849 | ஜேம்ஸ் போக் | மக்களாட்சி |
| 12. | 1849 - 1850 | சாக்கரி டெய்லர் | விக்கு |

0 தொடக்கத்தில் குடியரசுக் கட்சி என்றழைக்கப்பட்ட கட்சி, தனது பெயரை மக்களாட்சிக் கட்சி என்று ஜாக்ஸன் ஆட்சியின்போது மாற்றிக்கொண்டது.

| | | | |
|---|---|---|---|
| 13. | 1850 - 1853 | மில்லார்டு பில்மோர் | விக்கு |
| 14. | 1853 - 1857 | பிராங்கிளின் பியர்ஸ் | மக்களாட்சி |
| 15. | 1857 - 1861 | ஜேம்ஸ் புக்கன்னன் | மக்களாட்சி |
| 16. | 1861 - 1865 | ஆபிரகாம் லிங்கன் | 00 குடியரசு |
| 17. | 1865 - 1869 | ஆன்ட்ரூ ஜான்சன் | குடியரசு |
| 18. | 1869 - 1877 | யுலிஸஸ் கிரான்ட் | குடியரசு |
| 19. | 1877 - 1881 | ரூதர்போர்டு ஹேய்ஸ் | குடியரசு |
| 20. | 1881 | ஜேம்ஸ் கார்பீல்டு | குடியரசு |
| 21. | 1881 - 1885 | செஸ்டர் ஆர்தர் | குடியரசு |
| 22. | 1885 - 1889 | கிரோவர் கிளீவ்லண்டு | மக்களாட்சி |
| 23. | 1889 - 1893 | பெஞ்சமின் ஹாரிசன் | குடியரசு |
| 24. | 1893 - 1897 | குரோவர் கிளீவ்லண்டு | மக்களாட்சி |
| 25. | 1897 - 1901 | வில்லியம் மெக்கின்லீ | குடியரசு |
| 26. | 1901 - 1909 | தியோடர் ரூஸ்வெல்ட் | குடியரசு |
| 27. | 1909 - 1913 | வில்லியம் டாப்ட் | குடியரசு |
| 28. | 1913 - 1921 | உட்ரோ வில்சன் | மக்களாட்சி |
| 29. | 1921 - 1923 | வாரன் ஹார்டிங் | குடியரசு |

---

00 இன்றுள்ள குடியரசுக் கட்சி 1854 - ல் தோற்றுவிக்கப்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| 30. | 1923 - 1929 | கால்வின் லிட்ஜ் | குடியரசு |
| 31. | 1929 - 1933 | ஹெர்பர்ட் ஹூவர் | குடியரசு |
| 32. | 1933 - 1945 | பிராங்கிளின் ரூஸ்வெல்ட் | மக்களாட்சி |
| 33. | 1945 - 1953 | ஹேரி ட்ரூமன் | மக்களாட்சி |
| 34. | 1953 - 1961 | டிவைட் ஐஸன் ஹோவர் | குடியரசு |
| 35. | 1961 - 1963 | ஜான் கென்னடி | மக்களாட்சி |
| 36. | 1963 - 1969 | லிண்டன் ஜான்ஸன் | மக்களாட்சி |
| 37. | 1969 - 1974 | ரிச்சர்டு நிக்ஸன் ஜான்ஸன் | மக்களாட்சி மக்களாட்சி |
| 37. | 1969 - 1974 | ரிச்சர்டு நிக்ஸன் | குடியரசு |
| 38. | 1974- | | |

# பிற்சேர்க்கை - 2

## மாநிலங்களின் பட்டியல்

| வரிசை எண் | மாநிலத்தின் பெயர் | கூட்டாட்சியினுள் சேர்க்கப்பட்ட ஆண்டு |
|---|---|---|
| 1. | டெலவர் | 1787 |
| 2. | பென்சில்வேனியா | 1787 |
| 3. | நியூஜெர்ஸி | 1787 |
| 4. | ஜார்ஜியா | 1788 |
| 5. | கனெக்டிக்கட் | 1788 |
| 6. | மசாசூசெட்ஸ் | 1788 |
| 7. | மேரிலண்டு | 1788 |
| 8. | தென் கரோலினு | 1788 |
| 9. | நியூ ஹாம்ஷயர் | 1788 |
| 10. | வர்ஜீனியா | 1788 |
| 11. | நியூயார்க் | 1788 |
| 12. | வட கரோலினு | 1789 |
| 13. | ரோடு ஐலண்டு | 1790 |
| 14. | வெர்மாண்ட் | 1791 |
| 15. | கென்டக்கி | 1792 |
| 16. | தென்னசி | 1796 |
| 17. | ஒகியோ | 1803 |
| 18. | லூசியானு | 1812 |

| | | |
|---|---|---|
| 19. | இந்தியானு | 1816 |
| 20. | மிசிசிபி | 1817 |
| 21. | இல்லினுய் | 1818 |
| 22. | அலபாமா | 1819 |
| 23. | மெயின் | 1820 |
| 24. | மிஸௌரி | 1821 |
| 25. | அர்க்கன்சாஸ் | 1836 |
| 26. | மிச்சிகன் | 1837 |
| 27. | புளோரிடா | 1845 |
| 28. | டெக்ஸாஸ் | 1845 |
| 29. | ஐயோவா | 1846 |
| 30. | விஸ்கான்சின் | 1848 |
| 31. | கலிபோர்னியா | 1850 |
| 32. | மினசோட்டா | 1858 |
| 33. | ஆரிகான் | 1859 |
| 34. | கான்சாஸ் | 1861 |
| 35. | மேற்கு வர்ஜீனியா | 1863 |
| 36. | நெவதா | 1864 |
| 37. | நெப்பிராஸ்கா | 1867 |
| 38. | கொலராடோ | 1876 |
| 39. | வட டக்கோட்டா | 1889 |
| 40. | தென் டக்கோடா | 1889 |
| 41. | மோன்ட்டனு | 1889 |
| 42. | வாஷிங்டன் | 1889 |
| 43. | இடாஹோ | 1890 |
| 44. | வையோமிங் | 1890 |
| 45. | உட்டா | 1896 |
| 46. | ஒக்லஹோமா | 1907 |
| 47. | நியூ மெக்ஸிகோ | 1912 |
| 48. | அரிசோனு | 1912 |
| 49. | அலாஸ்கா | 1959 |
| 50. | ஹவாய் | 1959 |

# பிற்சேர்க்கை – 3

## அமெரிக்க ஐக்கிய நாட்டின் வரலாற்றில் முக்கிய ஆண்டுகள்

1492 புதிய உலகைக் கொலம்பஸ் கண்டுபிடித்தல்.

1539 டி சோடா (De Soto), வட அமெரிக்காவில் ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டார்.

1556 செயின்ட் அகஸ்டின் ( St. Augustine ) குடியேற்றம் நிறுவப்படல்.

1607 ஜேம்ஸ்டவுன் குடியிருப்பு அமைக்கப்பட்டது.

1619 மக்கள் பிரதிநிதிகள் சபை வர்ஜீனியாவில் கூடிற்று.

1620 பிளைமவுத் குடியேற்றம் நிறுவப்படல்.

1634 மேரிலண்டு குடியேற்றம் உருவாயிற்று.

1647 மசாசூசெட்ஸில் கல்விக்கூடம் நிறுவ, சட்டம் இயற்றப் படல்.

1649 மேரிலண்டில் சமயப் பொறை சட்டம் செய்யப்பட்டது.

1763 பாரிஸ் உடன்படிக்கை அமெரிக்காவில் பிரெஞ்சு ஆதிக்கத்தை அகற்றியது.

1770 பாஸ்டன் படுகொலை.

1774 குடியேற்றங்களின் முதல் மாநாடு.

1775 உரிமைப்போர் தொடங்குதல்.

1776 டாம் பெயினின் ''பொது அறிவு'' ("Common Sense") நூல் வெளியிடப்படல்.

1781 யார்க்டவுனில் கார்ன்வாலிஸ் சரணுகதி.

1783 பாரிஸ் உடன்படிக்கை, பதின்மூன்று குடியேற்றங்களுக்கும் சுதந்திரம் அளித்தல்.

1789 அரசியலமைப்பின்கீழ் அரசு நிறுவப்படல்.

1791 உரிமைகள் பட்டியல் அரசியலமைப்பில் இணைக்கப்படல்.

1793 எலிவிட்னி பஞ்சு இயந்திரம் கண்டுபிடித்தல்.

1803 லூசியானுப் பகுதி விலைக்கு வாங்கப்படுதல்.

1804 லூவிஸும், கிளார்க்கும் ஆய்வுப் பயணங்களை மேற்கொள்ளல்.

1812 1812ஆம் ஆண்டுப் போர் தொடக்கம்.

1814 கெண்ட் உடன்படிக்கை போரை முடித்தல்.

1819 புளோரிடா விலைக்கு வாங்கப்படல்.

1820 மிஸெளரி சமரச இணக்கம்.

1823 மன்ரோ கோட்பாடு வெளியிடப்படல்.

1831 மெக்கார்மிக் (McCormick) அறுவடை இயந்திரம் அமைத்தார்.

1844 மார்ஸ் தந்தி முறை கண்டுபிடித்தல்.

1846—1848 மெக்ஸிகோ போர்.

1848 கலிபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிப்பு.

1861—1865 உள்நாட்டுப் போர்.

1862 பொதுக் குடியிருப்புச் சட்டம்.

1863 விடுதலைப் பேரறிக்கை வெளியிடப்படல்.

1865 பதின்மூன்றுவது அரசியல் திருத்தத்தின்படி அடிமை முறை ஒழிக்கப்படல்.

1866 அட்லாண்டிக் பெருங்கடலில் தந்திக் கம்பி வடம் போடப்படல்.

1867 அலாஸ்கா விலைக்கு வாங்கப்படுதல்.

1869 நாட்டின் குறுக்கே முதல் இரயில்பாதை முற்றுப் பெறல்.

1870 வாக்குரிமை எல்லா இனத்தவருக்கும் அளிக்கப்படல்.

1876 தொலைபேசியை பெல் கண்டுபிடித்தல்.

1898 ஸ்பானிய—அமெரிக்கப் போர்.

1914 பனமா கால்வாய் திறக்கப்படல்.

1917 அமெரிக்கா முதல் உலகப் போரில் கலத்தல்.

1920 பெண்களுக்கு வாக்குரிமை அளிக்கப்படல்.

1929 பெருமந்தம் தொடங்குதல்.

1934 கியூபா முழு உரிமை பெறல்.

1941 பேர்ல் ஹார்பர் தாக்குதல். அமெரிக்கா போரில் இறங்குதல்.

1945 ஜப்பான்மீது அணுக்குண்டு வீசப்படுதல். அமெரிக்கா ஐ. நா. சாசனத்தை ஏற்றல். இரண்டாவது உலகப் போர் முடிவடைதல்.

1947 மார்ஷல் திட்டம்.

1949 வட அட்லாண்டிக் உடன்படிக்கை நாடுகளின் கூட்டமைவு உருவாக்கப்படல்.

1950 கொரியப்போரில் ஐ. நா. உடன் அமெரிக்கா சேருதல்.

1953 கொரியாவில் அமைதி உடன்படிக்கை கையெழுத்திடப் படல்.

1954 கல்விக் கூடங்களில் இன ஒதுக்கல் முறை பின்பற்றப்படல் அரசியலமைப்புக்கு முரணானதென, தலைமை நீதிமன்றம் தீர்ப்பு வழங்குதல்.

1955 தென்கிழக்கு ஆசிய உடன்படிக்கை நாடுகளின் கூட்டு அமைப்பு உருவாதல்.

1956 சூயெஸ் கால்வாய் நெருக்கடியை அடுத்து ஐஸன்ஹோவர் கொள்கை வெளியிடப்படல்.

1963 கென்னடி சுட்டுக் கொல்லப்படல்.

1968 வியட்நாமில் விமானத் தாக்குதலை நிறுத்த ஜான்சன் ஒப்புக்கொள்ளுதல்.

1969 நிலவில் மனிதனை நடமாடச் செய்வதில் அமெரிக்கா பெரும் வெற்றி காணல்.

1971 அமெரிக்க—சீன உறவில் புதிய திருப்பம்.

## மேலும் படிக்க வேண்டிய நூல்கள்


| | | | |
|---|---|---|---|
| 1. | Henry Bamford Parkes | — | The United States of America: A History |
| 2. | Leland D. Baldwin | — | Recent American History |
| 3. | Michael Kraus | — | The United States to 1865 |
| 4. | Foster Rhea Dulles | — | The United States since 1865 |
| 5. | C. P. Hill | — | A History of the United States |
| 6. | H. W. Elson | — | History of the United States |
| 7. | D. C. Somervell | — | A History of the United States to 1941 |
| 8. | William Miller | — | A New History of the United States |
| 9. | Charles A. Beard<br>Mary R. Beard | — | New Basic History of the United States |
| 10. | Allan Nevins,<br>Henry Steele Commager | — | A Short History of United States |
| 11. | Nathaniel Platt,<br>Muriel Jean Drummond | — | Our Nation from its creation |
| 12. | Allan Nevins,<br>Henry Steele Commager | — | A pocket history of the United States |
| 13. | Charles A. Beard,<br>Mary R. Beard | — | The making of American Civilisation |

14. Leland D. Baldwin, Robert Kelley — The Stream of American History

15. Samuel Eliot Morison, Henry Steele Commagrer — The Growth of the American Republic (in two volumes)

16. Richard Hofstadter, William Miller, Caniel Aaron — The American Republic : Volume one to 1865 Volume two since 1865

17. Oscar Handlin — The History of the United States (in two volumes)

18. Osoar Handlin — America : A History

19. Merle Curti Richard H. Shryock Thomas C. Cochran, Fred Harvey Harrington — An American History (in two volumes)

20. Dexter Perkins, Glyndon G. Van Deusen — The United States of America: A Histoiy

21. Wesley M. Gewehr, Donald C. Gordon, David S. Sparks, Roland N. Stromberg — The United States : A History of Democracy

22. Wesley M. Geweher (Ed. by) — American Civilisation : A History of United States

23. Richard B. Morris (Ed. by.) — Encyclopedia of American History

24. Richard Hofstadte — The American Political Tradition and the Men who made it

25. Saul K. Padover — The Genius of America

26. John M. Blum, Bruce Catton, Emund S. Morgan, Arthur M. Schlesin - ger, Jr. Kenneth M. Stampp, C. Vann Woodward — The National Experience : A History of the United States

# கலைச் சொற்கள்

| | |
|---|---|
| Adamson Act (1916) | —ஆடம்சன் சட்டம் |
| Agricultural Adjustment Act (1933) | வேளாண்மைப் பொருள் —சீரமைவுச் சட்டம் |
| Agricultural Marketing Act (1929) | வேளாண்மைப் பொருள் —விற்பனைச் சட்டம் |
| Air brake | —காற்றுத்தடை |
| Alien and Sedition Acts (1798) | —அயலவர்சட்டமும் அரசுத் துரோகச் சட்டமும் |
| Allies | —நேச நாடுகள் |
| American Federation of Labour | அமெரிக்கத் தொழிலாளர் — கூட்டமைவு |
| American Party | —அமெரிக்கக் கட்சி |
| American system | —அமெரிக்க அமைப்பு முறை |
| Anthracite coal | —நிலக்கீல் சத்தற்ற நிலக்கரி |
| Anti - Federalists | —கூட்டாட்சி எதிர்ப்பாளர்கள் |
| Aristocracy | —உயர்குடி ஆட்சி |
| Artificer | —பொறிவலர் |
| Army Appropriation Act | —இராணுவ நிதியொதுக்கீடு சட்டம் |
| Army Appropriation Bill | —இராணுவ நிதியொதுக்கீடு சட்ட வரைவு |
| Atlantic Charter | —அட்லாண்டிக் சாசனம் |
| Atomic Energy Act (1946) | —அணுச்சக்திச் சட்டம் |
| Attorney-General | —நியாயத் துறைத் தலைவர் |
| Axis Powers | —அச்சு நாடுகள் |
| Benzene | —சாம்பிராணி எண்ணெய் |
| Bessemer process | —பெஸ்ஸமர் இரும்பு உருக்கு முறை |
| Big Business | —பெரும் வாணிகம் |
| Big stick | —வல்லரசுக் கோல் |
| Bituminous coal | —நிலக்கீல் அடங்கிய நிலக்கரி |

Black Codes —கறுப்பர் விதிகள்
Black Power —கறுப்பர் வலிமை
Bonus Bill —மிகையூதிய சட்ட வரைவு
Boston massacre —பாஸ்டன் படுகொலை
Boston Tea Party —பாஸ்டன் தேநீர் விருந்து
Boxer Protocol —பாக்ஸர் ஒப்பந்தம்
Brain Trust —அறிவாற்றல் மிக்கோர் குழு
Buffer Colony —இடைத்தடுக்குக் குடியேற்றம்
Buffer State —இடைத்தடுக்கு மாநிலம்
Bureau of Reclamation —நிலச்சீர்திருத்த அலுவலகம்

Cable —கடல் வழித் தந்திக் கம்பி வடம்
Carpet beggers —தென் மாநிலங்களுக்கு வந்த தன்னல அரசியல்வாதிகள்
Charter Colony —தனியுரிமைப் பட்டயம் பெற்ற குடியேற்றம்
Checks and balances —தடைகளும் கட்டுப்பாடுகளும்
Chemists —வேதியியல் வல்லுநர்கள்
Civilian Conservation Corps —பொதுத் துறை வளப் பாது காப்புப் படை
Civil Rights Act (1964) —பொது உரிமைச் சட்டம்
Clayton Anti-Trust Act (1914) —கிளேட்டன் கூட்டு நிறுவன எதிர்ப்புச் சட்டம்
Clayton Bulwer Treaty (1850) —கிளேட்டன் பல்வர் உடன்படிக்கை
Coast Guard —கரையோரக் காவல் படை
Cold War —வல்லாண்மை மலைவு
Committee for Industrial Organisation —தொழில் நிறுவன அமைப்புக் குழு
Committee on Public Information —பொதுச் செய்தி வெளியீட்டுக் குழு
Commodity Credit Corporation —பொருள் கடனளிப்பு நிறுவனம்
"Commonsense" —"பொது அறிவு"
Concentration Camps —ஐயப்பாடனவர்களை ஒதுக்கி வைக்கும் குடியேற்றப் பகுதிகள்
Confederacy —கூட்டரசு
Confederation —நேசக் கூட்டாட்சி
Congress —சட்ட மாமன்றம்
Congress of Industrial Organisations —தொழில் நிறுவனங்களின் பேரவை

Conscience Whigs —நெஞ்சங்கோடா (அடிமை முறையை எதிர்த்த) விக்குகள்

Conscription —கட்டாய இராணுவப் பணி

Conservation of Natural Resources. —இயற்கை வளங்களைப் பாது காத்தல்

Constitutional Convention —அரசியலமைப்பாண்மைச் சிறப்புக் குழு

Consul —நாட்டுப் பேராளர்

Continental system —நெப்போலியனது ஐரோப்பிய வணிகத் திட்டம்

Convention —ஆய்வுக் கூட்டம்

Corporation —வணிக உரிமைக் குழு

Cotton Gin —பஞ்சு இயந்திரம்

Cotton Whigs —அடிமை முறையை ஆதரித்த விக்குகள்

Court Packing Plan —நீதிமன்ற இடநிரப்புத் திட்டம்

Criminality —குற்றப் பழியுடைமை

Crude Oil —தூய்மையற்ற எண்ணெய்

Crusades —சிலுவைப் போர்

Cullom Committee —கல்லாம் குழு

Decentralise —ஆட்சி உரிமையைப் பன்முகப் படுத்து

Declaratory Act (1766) —அறிவிப்புச் சட்டம்

Democratic Party —மக்களாட்சிக் கட்சி

Democratic Republican Party —மக்களாட்சிக் குடியரசுக்கட்சி

Dictatorship —வல்லாட்சி

Diplomatic History —அயல்நாட்டு அரசியல் தொடர்பு வரலாறு

Disabled —ஆற்றலிழந்தோர்

Dividend —ஆதாயப் பணம்

Doctrine of Implied Powers —உள்ளடங்கிய அதிகாரக் கோட்பாடு

Dollar Crisis —டாலர் மதிப்பின் வீழ்ச்சி

Dollar Diplomacy —டாலர் அரசியல் செயலாட்சி நயம்

Doctrine of nullification —செல்லுபடியற்றதாகும் கோட்பாடு

| | |
|---|---|
| Economic Co-operation Act (1947) | —பொருளாதார ஒத்துழைப்புச் சட்டம் |
| Economy of Abundance | —பொருளாதார மாவளம் |
| Eisenhower Doctrine | —ஐஸன்ஹோவர் கொள்கை |
| Elkins Act (1903) | —எல்கின்ஸ் சட்டம் |
| Electoral College | —தேர்தல் குழு |
| Emancipation Proclamation | —விடுதலைப் பேரறிக்கை |
| Embargo Act (1807) | —வணிகத் தடை நடவடிக்கைச் சட்டம் |
| Emergency Banking Act | —நெருக்கடி கால பாங்குச் சட்டம் |
| Emergency Fleet Corporation | —நெருக்கடி கப்பற்படை நிறுவனம் |
| Emigrant | —குடிபெயர்ந்து செல்பவர் |
| Emigrate | —நாடுவிட்டுப் பிறநாடு சென்று குடிபுகு |
| Era of good feeling | —நல்லுறவு காலம் |
| Era of hard feelings | —இடர்ப்பாடான காலம் |
| Espionage Act | —வேவுபார்த்தல் சட்டம் ; |
| Evolutionary | —படிமுறையான |
| Excise | —தீர்வை |
| Executive | —ஆட்சித் துறை |
| Expedition Act | —விரைவுச் சட்டம் |
| Exploration | —ஆய்வுப் பயணம் |
| Explore | —ஆய்ந்தறி |
| Fair Deal | —நல்வாழ்வுத் திட்டம் |
| Fair Labour Standards Act (1938) | —தொழிலாளர் நலமிக்க வரையளவான சட்டம் |
| Far East | —தொலை கிழக்கு |
| Feather bedding | —(தொழிலாளர்க்கு) மிகுந்த சலுகையளித்துக் கெடுத்தல் |
| Federalists | —கூட்டாட்சிவாதிகள் |
| Federal Republic of Germany | —ஜெர்மானியக் கூட்டாட்சிக் குடியரசு |
| Federal Deposit Insurance Corporation | —கூட்டாட்சி வைப்புநிதிக் காப்பீட்டுக் கழகம் |
| Federal Government | —கூட்டாட்சி அரசு |
| Federal Farm Board | —கூட்டாட்சிப் பண்ணைக் குழு |

Federal Farm Loan Act (1916) —கூட்டாட்சிப் பண்ணைக் கடன் சட்டம்
Federal Reserve Act (1913) —கூட்டாட்சி ஒதுக்கீடு சட்டம்
Federal Trade Commission —கூட்டாட்சி வாணிகக் குழு
Filibuster —பேசிக் காலந்தாழ்த்திச் சட்டம் நிறைவேருது தடுத்தல்
Flour-mill —மாவு ஆலே
Food Administrator —உணவு நிர்வாகத்தார்
Force Act —அடக்கியாளும் சட்டம்
Free soilers —நில உரிமையினர்
Freedman's Bureau —விடுவிக்கப்பட்டோரின் பணிமனே
Free States —அடிமை முறை ஏற்காத மாநிலங்கள் ;
Frontiersman —எல்லேப்புறத்தில் வாழ்பவர்
Fugitive Slave Law —தப்பியோடிய அடிமை சட்டம்
Futile Administration —பயனற்ற ஆட்சி

Gasoline —கல்லெண்ணெய்
Gentleman's Agreement (1907 - 1908) —மேதகு வாய்ச்சொல் உடன்படிக்கை
Geological Survey —மண்ணியல் ஆய்வுத் துறை
German Democratic Republic —ஜெர்மானிய மக்களாட்சிக் குடியரசு
Glass Steagall Banking Act (1933) —கிளாஸ் ஸ்டீகல் பாங்குமுறைச் சட்டம்
Glorious Revolution (1688) —புகழ்மிக்க புரட்சி
Gold Reserve Act (1934) —தங்க ஒதுக்கீடு சட்டம்
Gold Standard —தங்க நாணய ஏற்பளவை
Government Grain Corporation —அரசு தானிய நிறுவனம்
Great Depression —பெருமந்தம்
Great Society —சீர்மிகு சமுதாயம்

Hay Herran Treaty (1903) —ஹே - ஹெரன் உடன்படிக்கை
Hay-pauncefote Treaty (1901) —ஹே - பான்ஸ்போர்ட் உடன்படிக்கை
Hepburn Act (1906) —ஹீப்பர்ன் சட்டம்
Holding Company —சார்பு நிலேயங்களின் பங்குகளே வைத்திருப்பதற்கான நிலேயம்

| | |
|---|---|
| Homstead Law | —குடியிருப்புச் சட்டம் |
| House of Representatives | —பிரதிநிதிகள் மன்றம் |
| Humanitarian | —மனித இன நலப்பற்று |
| Immigrant | —குடிபுகுபவர் |
| Immigrate | —குடிபுகு |
| Independent Treasury Act (1840) | —கருவூலச் சட்டம் |
| Inflation | —பணவீக்கம் |
| Interloper | —உரிமையற்ற வணிகர் |
| Internal Waterways Commission | —உள்நாட்டு நீர்நிலைக் குழு |
| Interstate Commerce Act (1887) | —மாநிலங்களுக்கிடையேயான வாணிகச் சட்டம் |
| Intrigue | —உட்கிளர்ச்சி |
| Invention | —புத்தாக்கப் புனைவு |
| Jim Crow Laws | —இன ஒதுக்கல் சட்டங்கள் |
| Job Corps | —வேலைவாய்ப்பு அமைப்புக் குழு |
| Jones Act (1917) | —ஜோன்ஸ் சட்டம் |
| Judicial Review | —நீதிமறுஆய்வு |
| Judiciary | —நீதித் துறை |
| Jury | —முறைகாண் ஆயம் |
| La Follette Seaman's Act | —லாபாலெட் கப்பற்தொழிலாளர் சட்டம் |
| Legislature | —சட்டமன்றம் |
| Lend Lease | —ஈட்டுக்கடன்முறை |
| Lend Lease Act | —ஈட்டுக்கடன் சட்டம் |
| Lever Act (1917) | —லீவர் சட்டம் |
| Lynching | —தான்தோன்றித்தனமாக தீர்ப்பளிப்பு முறை |
| Manifest Destiny | —மெய்ம்மைகாட்டு அமைவு நோக்கம் |
| Maritime Provinces | —கடல்சார்ந்த மாநிலங்கள் |
| Marshall Plan | —மார்ஷல் திட்டம் |
| Mass Production | —பெருமளவிலான பொருள் உற்பத்தி |
| McCarran Act (1949) | —மெக்கரான் சட்டம் |
| McCarran Walter Act (1952) | —மெக்கரான் - வால்ட்டர் சட்டம் |

Meat Inspection Act (1906) —இறைச்சி மேற்பார்வைச் சட்டம்
Mediator —இடையீட்டாளர்
Missile Base —ஏவுகணைத்தளம்
Monroe Doctrine —மன்ரோ கோட்பாடு
Mulattoes —நீக்கிரோவுக்கும் வெள்ளையருக்கும் பிறந்தவர்கள்
Naptha —இரசகற்பூரத் தைலம்
National Aeronautics and Space Administration —விண்வெளி ஆராய்ச்சிக் கழகம்
National Liberation Front —தேசிய உரிமைப் போராட்டக் குழு
National Bank Act —தேசிய பாங்குச் சட்டம்
National Conservation Commission —தேசிய இயற்கை வளப் பாதுகாப்புக் குழு
National Debt —நாட்டுக் கடன்
National Forests —தேசிய காடுகள்
National Industrial Recovery Act —தேசியத் தொழில் துறை மீட்புச் சட்டம்
National Labour Relations Board —தேசியத் தொழிலாளர் நலன் உறவுக் குழு
National Recovery Administration —தேசிய மீட்பு நிர்வாகம்
National Youth Administration —தேசிய இளைஞர் நிர்வாகம்
National War Labour Board —தேசிய போர்த் தொழிலாளர் நலன்குழு
Naturalisation Act —அயலவர்க்குக் குடியுரிமை வழங்கும் சட்டம்
Nationalism —தேசிய உணர்வு
Nationalist China —தேசிய சீன அரசு
Navigation —கப்பல்வழிநிலை தெரிமுறை
Neutrality Acts —நடுநிலைமைச் சட்டங்கள்
New Deal —புதிய சீரமைப்புத் திட்டம்
New Democracy —புதிய மக்களாட்சி
New Freedom —புதிய பயனுரிமை
New Froniter —புத்தறிவுக் களம்
Newlands Reclamation Act (1902) —புதிய நிலங்கள் சீர்திருத்தச் சட்டம்
Non-importation Act (1806) —இறக்குமதியின்மைச் சட்டம்

Non-intercourse Act (1808) —வணிக உறவின்மைச் சட்டம்
Non-violent struggle —இன்முறைப் போராட்டம்
North Atlantic Treaty Organisation —வட அட்லாண்டிக் உடன்படிக்கை நாடுகளின் கூட்டு அமைப்பு
Office of Price Administration —விலைக்கட்டுப்பாடு நிர்வாக அலுவலகம்
Office of War Information —போர்ச்செய்தி அலுவலகம்
Olive Branch Petition —ஆலிவ் கிளை விண்ணப்பம்
Open Door —நுழைவுச் சலுகை
Open Door Notes —நுழைவுச் சலுகை குறிப்பு
Ordinance —மேலாணை
Original Jurisdiction —தலைமை நீதிமன்றத்தின் மூல நீதி செயலாட்சி
Overman Act —ஓவர்மேன் சட்டம்

Panama Congress —பனமா மாநாடு
Pan Americanism —அனைத்து அமெரிக்க உணர்வு
Pan American Union —அனைத்து அமெரிக்கக் கூட்டமைவு
Paraffin —கன்மெழுகு
Partnership —பங்காண்மைக் கூட்டு வாணிகம்
Patent Office —காப்புரிமைச்சீட்டு வழங்கும் அலுவலகம்
Peace without Victory —வெற்றியின்றி அமைதி
Pension —ஓய்வுகால ஊதியம்
People's Republic of China —சீன மக்களின் குடியரசு
Personal Liberty Laws —சொந்த விடுதலையுரிமைச் சட்டங்கள்
Philadelphia Congress —பிலடெல்பியா மாநாடு
Pig-iron —தேனிரும்பு
Ping Pong Diplomacy —புதிய அமெரிக்கச் சீன உறவு
Plantation Provinces —பண்ணை மாநிலங்கள்
Platt Amendment —பிளாட் திருத்தம்
Police Power —காவல் பணி அதிகாரம்
Popular Sovereignty —பொதுமக்கள் சார்ந்த இறைமைத் தன்மை
Populists —குடிப்பொதுமைக்கட்சியினர்
Pre-emption —முற்படு விலைக்கோள் உரிமை

Pre-emption Act (1841) —முற்படுவிலைக்கோள் உரிமைச் சட்டம்

Proclamation Line of 1763 —1763ஆம் ஆண்டு எல்லைக் கோடு அறிவிப்பு

Proclamation of Amnesty —பொது மன்னிப்பு

Progressive Era —மேம்பாடுற்ற காலம்

Proprietorship —உரிமையாளர் வாணிகம்

Propiietory —உடைமை உரிமை சார்ந்த

Protocol —உடன்படிக்கை முதற்குறிப்பு

Provision Provinces —பொருள் வழங்கு மாநிலங்கள்

Public Works Administration —பொதுப்பணி நிர்வாகம்

Pure Food and Drugs Act (1906) —தூய்மையான உணவு மற்றும் மருந்துச் சட்டம்

Ratification —உறுதி செய்தல்

Ransom —மீட்புப் பணம்

Reactionary —பிற்போக்காளர்

Reconstruction —புனரமைப்பு

Reconstruction Act (1867) —புனரமைப்புச் சட்டம்

Reconstruction Finance Corporation —புனரமைப்பு நிதி நிறுவனம்

Republican Party —குடியரசுக் கட்சி.

Revolutionary —புரட்சிகரமான, புரட்சியாளர் தீவிரவாதி.

Roosevelt Corollary —ரூஸ்வெல்ட் துணை முடிவு

Rugged individualism —கடுமையான தன்முயற்சி

Rural Electrification Administration —கிராம மின்சார வசதி நிர்வாகம்

Sabotage —அழிவுப் பணி சட்டம்

Scalawags —தென்மாநிலங்களில் கொடுமை இழைத்த வெள்ளையர்கள்

Secession —தென் மாநிலங்கள் பிரிந்து செல்லுதல்

Secretary of State —வெளிநாட்டுறவுச் செயலாளர்

Secretary of the Treasury —கருவூலச் செயலாளர்

Secretary of War —போர்த்துறைச் செயலாளர்

Sectionalism —வகுப்புணர்ச்சி

Securities and Exchange Act (1934) —கடனீட்டுப் பத்திரம், மற்றும் நாணயமாற்றுச் சட்டம்

Securities and Exchange Commission —கடனீட்டுப் பத்திரம், மற்றும் நாணய மாற்றுக் குழு

Sedition Act —ஆட்சி எதிர்ப்புச் சட்டம்
Segregation —இன ஒதுக்கல் முறை
Selective Training and Service Act (1940) —தேர்வுப் பயிற்சி, மற்றும் பணி சட்டம்
Senate —செனட் சபை
Sentiment —மெய்ப்பாட்டுணர்வு
Separation of Powers —அதிகாரப் பிரிவினை
Sherman Anti-Trust Act (1890) —ஷெர்மன் கூட்டுநிறுவன எதிர்ப்புச் சட்டம்
Shirt Sleeve Diplomacy —மிரட்டல் வழி அரச தந்திரம்
Sit-ins —உள் இருப்பு இயக்கம்
Slave States —அடிமை முறை ஏற்ற மாநிலங்கள்
Slavery —அடிமை முறை
Smith Lever Act (1914) —ஸ்மித் லீவர் சட்டம்
Socialists —சமதருமக் கொள்கையினர்
Social Security —சமூகநலன் பாதுகாப்பு
Social Security Acts (1935) —சமூகநலன் பாதுகாப்புச் சட்டங்கள்
Soil Conservation Service —மண்வளப் பாதுகாப்புப்பணித் துறை
Sound Currency —சீர்மிக்க பணத்தாள் முறை
South East Asia Treaty Organisation —தென்கிழக்கு ஆசிய உடன் படிக்கை நாடுகளில் கூட்டு அமைப்பு
Space travel —விண்வெளிப்பயணம்
Specie circular (1836) —நாணயச் சுற்றறிக்கை
Speculation —ஊக வாணிகம்
Spoils system —வெற்றி பெற்ற கட்சி ஆதாயப் பங்கு பெறும் முறை
Square Deal —நேர்மையான ஒப்பந்தம்
Squatters —உரிமையின்றி பாதுநிலத்தில் வாழ்பவர்
Status quo antebellum —போருக்கு முந்திய நிலை
Statesmanship —அரசியல் நயத்திறம்
Stamp Act (1765) —பத்திர முத்திரைச் சட்டம்
Strategic —போர்த்திற முக்கியத்துவம் வாய்ந்த
Strong Arm methods —படைவலிமை காட்டி மருட்டல்

Taft-Hartley Act (1947) —டாப்ட் - ஹார்ட்லி சட்டம்
Tariff —காப்புவரி
Technique —தொழில்துறை நுட்பம்
Technology —தொழில்துறை விஞ்ஞானம்
Tennessee Valley Authority —தென்னசி பள்ளத்தாக்கு அதிகாரக் குழு
Tenure of Office Act (1867) —அலுவல் பதவிக் காலச் சட்டம்
Treaty of Portsmouth (1905) —போர்ட்ஸ்மவுத்உடன்படிக்கை
Tribute —கப்பம்
Truman Doctrine —ட்ரூமன் கொள்கை
Trust —வாணிகக் கூட்டு நிறுவனம்
Twenty-one Demands —சீனாவிடம் ஜப்பான் விடுத்த இருபத்தோரு கோரிக்கைகள்
Underwood Simmons Tariff (1913) —அண்டர்வுட் - சைமன்ஸ் காப்புவரி
Voting Rights Act —வாக்குரிமைச் சட்டம்
Wabash Rate Case (1886) —வாபாஷ் கட்டண வழக்கு
Wagner Act (1935) —வாக்னர் சட்டம்
War Department —போர்த் துறை
War Hawks —போர் வெறியர்கள்
War Industries Board —போர்த் தொழில் சார்ந்த குழு
War Production Board —போர் உற்பத்திக்குழு
Welfare State —ஆக்க நல அரசு
Westward Expansion —மேற்கு நோக்கி விரிவடைதல்
Wheeler Rayburn Act (1935) —வீலர் ரேபர்ன் சட்டம்
Whigs —விக்குகள்
Whisky Rebellion —சாராயக் கலகம்
White Collar workers —உடலுழைப்பற்றத் தொழிலாளர்கள்,
White Man's Burden —வெள்ளையரின் பொறுப்பு
Windom Committee —விண்டாம் குழு
Women accepted for Voluntary emergency service —நெருக்கடிகாலப் பெண்கள் தொண்டர் படை
Women's Army Corps —பெண்கள் படைப் பிரிவு
Works Progress Administration —வேலைவாய்ப்பு முன்னேற்ற நிர்வாகம்
World Government —உலக அரசு
Writ of mandamus —மேல்மன்ற ஆணை
Yellow Peril —ஜப்பானிய ஆதிக்க அச்சம்

